228

# அயோத்தியா காண்டம்

(முதற் பகுதி)






அண்ணுமலைப் பல்கலைக் கழகம்

உ

கவிச்சக்கரவர்த்தி

# கம்பர்

இயற்றிய

# இராமாயணம்

## அயோத்தியா காண்டம்

(முதற் பகுதி)







அண்ணாமலைப் பல்கலைக் கழகம்

1959

# உள்ளுறை

# கம்பராமாயணப் பதிப்பாசிரியர் குழு

---

தலைவர் :

பேராசிரியர் டாக்டர் திரு. ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள் B.A., B.L.

உறுப்பினர்கள் :

,, திரு. தெ. பொ. மீனாட்சிசுந்தரம்பிள்ளை அவர்கள் M.A., B.L.

,, திரு. G. சுப்பிரமணியபிள்ளை அவர்கள் M.A., B.L.

,, திரு. லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார் அவர்கள்

திருவாளர் பி. ஸ்ரீ. ஆச்சாரியார் அவர்கள்

,, நீ. கந்தசாமிப்பிள்ளை அவர்கள்

,, A. C. பால்நாடார் அவர்கள் B. A., B. L.

செயலாளர் :

,, T. K. இராமாநுஜ ஐயங்கார் அவர்கள்

# முகவுரை

திருவாளர் **T. M.** நாராயணசாமி பிள்ளை அவர்கள் M.A., B.L.
(துணைவேந்தர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம்)

நவில்தொறும் சுவைபயக்கும் செந்தமிழ்க் காப்பியங்களுள் கம்பர் இயற்றிய இராமாயணம் தலைசிறந்தது. இது கற்றோரும் மற்றோரும் படித்து மகிழும் இயல்புடையது. இந்நூலை ஓலைச் சுவடிகளோடு ஒப்பு நோக்கி ஆராய்ந்து, சிறந்த பாடங்கண்டு பொருளும் வரைந்து, கிடைத்த பாடவேறுபாடுகளையெல்லாம் பிற்சேர்க்கையாக்கி அண்ணாமலைப் பல்கலைக் கழகம் வெளியிடுவதை அன்பர் பலரும் அறிவர். இந்நூலுள் சுந்தரகாண்டமும் பாலகாண்டமும் இரண்டிரண்டு பகுதிகளாக இதுவரை வெளியிடப்பட்டுள்ளன. இப்பொழுது அயோத்தியா காண்டம் வெளிவருகிறது.

தந்தை தாயர் பணியினைத் தலைமேற்கொண்டு வனம் புகுந்த இராமபிரான் சித்திரகூட மலையிலே தங்குகிறார். அவர் தம்பி பரதன் அங்கே வந்து, அயோத்திநகர்க்கு மீண்டு அரசுபுரியும்படி இராமரை வேண்டுகிறான். இராமர் பரதனைத் தேற்றி அவனுக்குத் தம் அடிநிலையும் அரசும் தந்து அயோத்திக்கு மீளும்படி அனுப்புகிறார். இவ்வளவில் அயோத்தியா காண்டம் முற்றுப்பெறுகிறது. இக்காண்டம், இராம சரிதத்தில் பின் விளைவுகட்கெல்லாம் வித்தாக அமைந்த நிகழ்ச்சிகளைக் கொண்டு விளங்குவது; பரதன் மாண்பினை விரித்துரைப்பது. இது, இரண்டு பகுதிகளாக வெளியிடப் பெறுகிறது. முற்பகுதி இது. இதன்கண் மந்திரப் படலம் முதல் தைலமாட்டு படலம் முடிய ஐந்து படலங்கள் அமைந்துள்ளன. பிற்பகுதி அடுத்து வெளிவரும்.

இப்பதிப்பு நன்கு அமையும்படி உதவிய பதிப்பாசிரியர் குழுவினர்க்கும் அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழாராய்ச்சித்துறை ஆசிரியர்களுக்கும் என் மனமுவந்த பாராட்டு உரியது.

இந்நூலாராய்ச்சிக்குப் பயன்படும்படி மதுரைத் தமிழ்ச் சங்கத்தாரும் தஞ்சை சரசுவதிமகால் நூல் நிலயத்தாரும் பிற அன்பர்களும் இராமாவதார ஏட்டுச் சுவடிகளை உதவிவருகிறார்கள். அவர்களுக்கும் எனது நன்றி உரியதாகும்.

இந்நூலின் வெளியீடுகளுக்குப் பொருளுதவிபுரிந்துவரும் இந்தியப் பேரரசுக்குப் பல்கலைக் கழகத்தின் நன்றி உரியதாகும். இந்நூலின் மற்றைக் காண்டங்களையும் திருந்திய முறையில் நன்கு வெளியிடும்படி சென்னை மாநில அரசும் இந்தியப் பல்கலைக் கழக மானியக்குழுவும் அவ்வப்போது பொருளுதவிபுரிந்து ஆதரித்துவரும் என்று நம்புகிறேன்.

தி. மூ. நாராயணசாமி பிள்ளை.

# முன்னுரை

தொத்தலர்பூஞ் சுரிகுழற் கைகேசி சொல்லால்
தொன்னகரம் துறந்து துறைக் கங்கைதன்னைப்
பத்தியுடைக் குகன் கடத்த வனம்போய்ப் புக்குப்
பரதனுக்குப் பாதுகமும் அரசும் ஈந்து
சித்திரகூடத் திருந்தான்றன்னை யின்று
தில்லைநகர்த் திருச்சித்ர கூடந்தன்னுள்
எத்தனையும் கண்குளிரக் காணப் பெற்ற
இருநிலத்தார்க் கிமையவர் நேரொவ்வார்தாமே.

[பெருமாள் திருமொழி 10-4.]

## இராமாயணத்தின் பெருமை

உயிர்கள் கட்டறுத்து வீடுபெறும் நெறியை உணர்த்துவனவே உண்மைநூல்களாகும். அத்தகைய நூல்களுள் இராமாயணம் தலை சிறந்தது. உலகம் பரவிய பெருமையுடையது. வேதங்களால் போற்றப் படும் திருமால் உலகை உய்விக்க இராமனாகத் தோன்றிய நிலையில், திருமகள் சீதாபிராட்டியாகத் தோன்றினள்; வேதங்கள் இராமாயண மாகத் தோன்றின என்று பெரியோர் பணிப்பர். மக்கள் பேசும் மொழி கள் பலவற்றுள், ஒரொரு மொழியிலும் புலவர் பலர் இராமசரித நூல் களை இயற்றியுள்ளார்கள். அந்நூல்களுள், வடமொழியில் வான்மீகி முனிவர் இயற்றிய இராமாயணமும் தமிழில் கம்பர் இயற்றிய இராமாவ தாரமும் ஒப்புயர்வற்றனவாய் விளங்குவன.

## இராமாவதார நூலமைதி

கல்வியிற் பெரியன் கவிச்சக்கரவர்த்தி என்னும் சிறப்புப் பெயர் களுக்கு ஏற்ற தகுதிகள் பலவும் ஒருங்கு வாய்க்கப்பெற்ற கம்பர் இயற்றிய இராமாவதாரம் என்னும் காவியம், இலக்கிய நயம் அனைத்தும் நிறைந்து நிலவுவது. வான்மீகி ராமாயண அடிப்படையில், போஜன் காளிதாசன் முதலிய மகாகவிகள் வடமொழியில் இயற்றிய காவியங்களில் காணப்படும் நயங்களும், மனுதருமம் திருக்குறள் முதலிய நீதி நூல்களில் காணப்படும் சிறந்த ஒழுகலாறுகளும், சங்கநூற் கருத்துக்களும், ஆழ்வார்களும் நாயன்மார்களும் அருளிய பிரபந்தங்கள், தேவாரம் திருவாசகம் திருக்கோவையார் முதலிய பத்திநூல்களிலும், சிலப்பதிகாரம் மணிமேகலை சிந்தாமணி சூளாமணி பெருங்கதை முதலிய காப்பியங்களிலும் காணப்படும் சொல்லும் பொருளும் தொடரும்

கருத்தும் சுவைமிக்க பகுதிகளும் ஆங்காங்கு அமையக்கொண்டு விளங்கும் சரக்கறை என்று இந்நூலைக் கூறின் அது மிகையாகாது.

இந்நூல், இயலமைதியுடன் இசை நாடகங்களின் அமைதியும் பெற்று முத்தமிழ்க் காப்பியமாய்த் திகழ்கிறது. இதனுள், ஆங்காங்குச் சந்தருப்பத்துக்கு ஏற்ற சந்தம் தழுவியனவாகப் பயின்ற பாடல்களால் இதன் இசையமைதியினையும், கதாபாத்திரங்கள் ஒருவரோடொருவர் நிகழ்த்தும் உரையாடல்கள் முதலியவற்றால் இதன் நாடக அமைதியினை யும் நன்கு உணரலாம்.

## இராமாவதார நூல் நுவல்பொருள்

உயிர்களுக்கு உய்தியளிக்கும் நிலையில் உயர்வற உயர்நலமுடைய இறைவனும், இறைவன்பால் உயிர்களை உய்விக்குமாறு தூண்டும் பிராட்டியும் தனிச்சிறப்புடையர். இறைவனைக் காட்டிலும் அவன் அடியிணைகள் சிறப்புடையன என்பதும் நூன்முடிபு. 'நின்னிற் சிறந்த நின்றாளிணையவை' (4-62) என்பது பரிபாடல். 'வாலறிவன் நற்றாள்' என்பது வள்ளுவர் வாய்மொழி. இவற்றுக்கு உரைகண்ட பரிமேலழகர், "வீடளிக்குங்கால் நின்னினும் சிறந்த நின் தாளிணையை யுடையை'' எனவும், "பிறவிப்பிணிக்கு மருந்தாகலின் 'நற்றாள்' என்றார்'' எனவும் விளக்கம் தந்தனர். "பிராட்டியும் அவனும் விடிலும் திருவடிகள் விடாது, திண்கழலாயிருக்கும்'' (முமுக்ஷுப்படி த்வயப்ர கரணம்-31) என்று பிள்ளை லோகாசாரியர் இறைவன் அடியிணைகளின் சிறப்பை விளக்கியருளுவர்.

இறைவனிலும் இறைவன் அடியிணைகள் சிறந்தமைபோல, இறைவ னடியிணையினும் அவற்றைத் தாங்கும் அடிநிலைகள் (பாதுகைகள்) சிறப் புடையவாதலும் அமையும்.

இம்முறை கொண்டு நோக்குங்கால் இராமாயணம் நுவலும் பொருள் சீதாபிராட்டியின் பெருமையாகவும் இராமபிரானின் பெருமை யாகவும் அமையும்.

இராமபிரானொடு வலியக் கான் புகுந்து அரக்கர் சிறையிருந்து தேவர் சிறைத்துயர் தீர்த்தமையால் சீதாபிராட்டியின் பெருமை புலனாகும். "நாட்டிற் பிறந்து படாதனபட்டு மனிசர்க்காய் - நாட்டை நலியும் அரக்கரை நாடித் தடிந்திட்டு - நாட்டையளித் துய்யச்செய்து நடந்தமை''யால் இராமபிரான் பெருமை வெளிப்படும்.

இராமபிரானுடைய பெருமை அவன் தோளாற்றலும் தாளாற்றலும் அடிநிலைகளின் ஆற்றலுமாய் விரியும். அவன் தோளுக்கு ஆற்றல் எதிர்ந்தாரை வென்று வாகை சூடுதல். தாளுக்கும் அடிநிலைக்கும் ஆற்றல் அவற்றை அடைந்தாரை அகலவிடாது காத்தருளுதல்.

விசுவாமித்திர முனிவன் செய்த வேள்வியைக் காத்தது முதல் இராவணனை வென்றதுவரையுள்ள செயல்கள் இராமன் தோளாற்றலால் நிகழ்ந்தவை. அகலிகைக்கு அருளியது முதல் வீடணனுக்கு முடி சூட்டியது வரையுள்ள செயல்கள் அவன் தாளாற்றலால் நிகழ்ந்தவை. தோள்வலியும் தாள்வலியும் மதிவலியும் ஒழுக்கநலமும் அரசுரிமையும் உடைய இராமன் நாடாளுதல் தவிர்ந்து பிராட்டியோடும் இளவலோடும் கானேறக் கடக்க, அது கேட்ட சக்கரவர்த்தி வானேற நடக்க, அரசு பெற்ற பரதன் அதனை உதறிக்கிடக்க, அந்நிலையில் வனம்புக்க இராமன் மீண்டு வரும்வரை நாடாண்டு முறை செய்தமை இராமன் திருவடி நிலைகளின் ஆற்றலால் நிகழ்ந்ததேயன்றோ !

இந்நூலுள், இராமன் அரக்கரையழித்து அறந்தலைநிறுவுதற்குக் காரணமான அவன் அரசு துறந்து கான் புகுந்த செய்தி பேசும் அயோத்தியா காண்டமும், தேவர் சிறைத்துயர்தீரச் சீதாபிராட்டி இராவணன் சிறையுள் இருந்த செய்தி பேசும் சுந்தரகாண்டமும் தனிச் சிறப்புடையன.

## அயோத்தியாகாண்டத்தின் அமைதி

இந்நூலாற் பேசப்படும் கதையுள் பெரும்பாலும் கோசலநாட்டின் தலைநகரான அயோத்திமாநகரில் நிகழ்ந்தவைகளைப் பேசுதலின் இப் பகுதி அயோத்தியா காண்டம் என்று பெயர் பெற்றது. [காண்டம் - நூலின் பெரும் பிரிவு.]

இராமாவதாரமாகிய ஏழுதளம் அமைந்த கலைக்கோயிலுள், பால காண்டம் அடித்தளமாகும். அயோத்தியா காண்டம் இரண்டாவது தளமாகும். மற்றைத் தளங்களும் இம்முறையே காணலாம். ஒரு மாடத்தின் மேல்தளங்களையெல்லாம் தாங்கும் உறுப்புக்களின் அமைதி பிறர்க்குப் புலனாகாதவாறு மறைந்து நிறைந்து நிற்பது முதல் தள மாகும். அவ்வுறுப்புக்களின் அமைதி பிறர்க்கு நன்கு புலனாகுமாறு நிறைந்து நிற்பது இரண்டாவது தளமாகும். அங்ஙனமே மேல்வரும் கதைப் பகுதிகளுக்கு உரிய உறுப்புக்கள் (தேவர்கள் தம் துயர்தீர்த் தருளும்படி வேண்டத் திருமால் இராமனாக அவதரித்தமையும் பிறவும்), நன்கு புலப்படாது அமையக்கொண்டு விளங்குவது பாலகாண்டம். இராமன் முதலியோர் தோன்றுதற்குரிய காரணத்தை (திருப்பாற்கடல் நிகழ்ச்சியை), வசிட்டமுனிவன் தயரதனிடம் வெளிப்படக் கூறாமல், 'மனத்தின் எண்ணினான்' (184) எனவும், 'ஈது முன் நிகழ்ந்த வண்ணம் என முனி இதயத்தெண்ணி' (209) எனவும் ஆசிரியர் உரைத்துச் சென்றமை இங்கு நோக்கத்தகும். கதைப் பகுதிகளுக்குரிய உறுப்புக்கள் படிப்படியாகப் புலப்பட அமைந்து விளங்குவன அயோத்தியா காண்டம் முதலியவை. இங்கே 'தீயமந்தரை இவ்வுரை செப்பலும் தேவி தூய சிந்தையும் திரிந்தது சூழ்ச்சியின் இமையோர்-மாயையும் அவர் பெற்ற

நல்வர முண்மையாலும் ஆயவந்தணர் இயற்றிய அருந்தவத்தாலும்' (1572) எனவும், 'அரக்கர் பாவமும் அல்லவர் இயற்றிய அறமும் துரக்க நல்லருள் துறந்தனள் தூமொழி மடமான்' (1573) எனவும் ஆசிரியர் உரைத்தமையும் காணலாம்.

அயோத்தியா காண்டத்தை நாடகக் காப்பிய அமைதிகொண்டு நோக்கின், நாடக நூல்களுக்கு விதிக்கப்பட்ட சந்தி ஐந்தனுள் இக் காண்டத்தின் நுவல்பொருளாகிய இராமன் முடிதவிர்ந்து வனம் புகுதல், முகம் என்னும் சந்தியின்பாற்படும். அரக்கர் பாவமும் அல்லவர் இயற்றிய நல்லறமும் ஆகிய வித்துக்கள் இக்காண்டத்து முகஞ் செய்து முளைத்தமை பேசப்படுதலின் இச்சந்தி முகம் என்று பெயர் பெற்றது.

அயோத்தியா காண்டம் மந்திரப்படலம் முதல் கிளைகண்டு நீங்கு படலம் இறுதியாகப் பன்னிரண்டு படலங்களில் முற்றுப்பெறுகிறது.

## அயோத்தியாகாண்டத்தின் கதைச்சுருக்கம்

தயரதன், வசிட்டரையும் அமைச்சரையும் அரசரையும் அழைத்துத் தான் இராமனுக்கு முடிசூட்டக் கருதியிருப்பதைத் தெரிவித்து அவர் இசைவு பெறுகிறான். மந்தரை சூழ்ச்சியால் மனம் திரிந்த கைகேயி, தன் மகன் பரதன் அரசு பெறுமாறும் இராமன். 14 ஆண்டுகள் கான கத்துத் தங்கிப் புண்ணியப் புனலாடி வருமாறும் இரண்டு வரம் தயரதன்பால் வேண்டிப்பெற்று இராமனைக் கான்புகச் செய்கிறாள். இராமன் பிரிவால் தயரதன் இறந்துபடுகிறான். கேகயநாட்டிலிருந்து பரத சத்துருக்கர் வரும்வரை தசரதனுடலை எண்ணெய்க் கடாரத்தில் இட்டு வைக்கின்றனர். அயோத்தி நீங்கிய இராமன், கங்கைக்கரையை யடைந்து குகனொடு தோழமைகொண்டு, அவனுதவியால் கங்கை கடந்து வனத்துள்புகுந்து, வரத்தினால் உயர்ந்த பரத்துவாச முனிவர் உறையும் பள்ளியை அடைந்து அம்முனிவரை வணங்கி அவர் ஆசியும் அருளும் பெற்று அங்கே சில பகல் தங்கி, அங்கு நின்றும் புறப்பட்டுச் சித்திரகூட மலையையடைந்து, அங்கே இலக்குவன் அமைத்த சாலையுள் சீதாபிராட்டியுடன் தங்கினான். இப்பால் வசிட்டர் கட்டளைப்படி அயோத்தி வந்தடைந்த பரதன், தந்தை வான்புக்கமையும் தம்முன் வனம்புக்கமையும் அறிந்து மிக வருந்தி ஒருவாறு தேறிச் சக்கரவர்த் திக்குச் செய்யவேண்டிய இறுதிக் கடன்களைக் கழித்து முடித்துவிட்டுப் பின் இராமனை அழைத்துவந்து முடிசூட்டுவிக்க எண்ணிப் புரோகித ரோடும் அமைச்சரோடும் நகர மாந்தரோடும் வனம் நோக்கிச் சென்று கங்கைக்கரையை அடைகிறான். அவன் வரவு கண்ட குகன், இராமன் பால் பகையுணர்ச்சியுடன் அவன் வருகின்றானென்று ஐயுற்று அவனை நெருங்கி நோக்கி, அவன் உண்மைநிலை கண்டு, அவன்பால் பெரிதும் அன்புகொண்டு, அவனும் உடன்வந்தோரும் கங்கை கடந்து செல்லு

தற்கு உதவுகிருன். குகன் உதவியால் கங்கை கடந்த பரதன் பரத்து வாச முனிவர் உறையுளை அடைந்து, அவரருள் பெற்றுச் சித்திரகூட மலையை யடைகிருன். பரதன் வரவு அறிந்த இலக்குவனும் குகனைப் போல அவனை ஐயுற்றுச் சினங்கொள்கிருன். இராமன் மொழியாலும் நெருங்கி வந்த பரதனுடைய சொற்செயல்களாலும் இலக்குவன் சினம் தணிகிறது. பரதன் உணர்த்த இராமன் தந்தை துறக்கம்புக்கமை அறிந்து வருந்தித் தந்தைக்கு இறுக்கவேண்டிய நீர்க்கடன்களை இறுக் கின்ருன். அதன்பின் பரதன் அயோத்திக்கு மீண்டு அரசு மேற் கொள்ளும்படி இராமனைப் பணிந்து பல்லாற்ருனும் வேண்ட, இராமன் 'நான் தந்தையின் கட்டளைப்படி பதினுலாண்டும் வனத்துறைந்து வருவேன் ; அதுவரை நீயே அரசு புரிக' என, பரதன் 'அப்படியாயின், நின் அடித்தலம் இரண்டையும் அருளுக' என வேண்டிப் பெற்றுத் தலைமிசை தாங்கி மீண்டு, நந்திக் கிராமத்தை அடைந்து, இராமன் பாதுகையை அரசாக்கி, அது முறை செய்யத் தான் விரதவொழுக்க முடையவனுயினன். சித்திரகூடம் அண்மையிலிருத்தலால் அயோத்தியி லுள்ளார் அடிக்கடி வந்து தன்னை அயோத்திக்கு மீளும்படி வற் புறுத்தல் கூடும் என்று நினைந்த இராமன், தேவியும் இளவலும் தொடரத் தென்றிசை நோக்கிச் செல்வானுயினன் : என்பது அயோத் தியா காண்டத்தின் கதைச் சுருக்கமாகும்.

## அயோத்தியாகாண்டத்தின் நுவல்பொருள்

இக்காண்டத்துள், அரசரும் அமைச்சரும் மேற்கொள்ளவேண்டிய நெறிமுறைகளும், பல்வேறு நிலையினரான மக்கள் குறிக்கொண் டொழுகத்தக்க ஒழுக்கங்களும் ஆங்காங்குப் பேசப்பட்டுள்ளன. அவற் றைப் படல முன்னுரைகளில் காணலாம். அவற்றுள், தயரத சக்கரவர்த் தியின் நடைமுறையால், பொய்யாமையும், இராமன் நடைமுறையால் தந்தை தாயர் சொற்படி ஒழுகுதலும் பொதுவான அறங்களாகும். பரதன் நடைமுறையால், தனக்கென ஒரு விருப்பு வெறுப்பு இன்றித் தலைவன் கட்டளைப்படி உழையர் ஒழுகவேண்டுமென்பதும், இலக்குவன் நடைமுறையால், தலைவனுக்கு அடியான் எல்லாப் பணியும் எவ்விடத் தும் எப்பொழுதும் மகிழ்ந்து செய்தல்வேண்டும் என்பதும், பரதனைப் பிரியாது அவன் பணி செய்தொழுகிய சத்துருக்கன் நடைமுறையால், அடியார்திறத்துச் செய்யும் பணி மற்றைப் பணிகளினும் சிறந்தது என்பதும் புலனுகும். இவை சிறப்பறங்களாகும். ஆற்றலெல்லாம் ஒருங்கு அமையப்பெற்ற இராமன் கான்புக்க நிலையில், ஆள்வார் இலாது கலங்கிய நாட்டை அவனினும் சிறப்புற ஆண்ட அவன் அடி நிலைகளின் பெருமை இக்காண்டத்தின் தனிச்சிறப்புடைய நுவல் பொருளாகும்.

---

உ

# இரண்டாவது:

# அயோத்தியா காண்டம்

---

## கடவுள் வாழ்த்து

1399. வானின் றிழிந்து வரம்பிகந்த
★ மாபூ தத்தின் வைப்பெங்கும்
ஊனு முயிரு முணர்வும்போ
லுள்ளும் புறனு முளனென்ப
கூனுஞ் சிறிய கோத்தாயுங்
கொடுமை யிழைப்பக் கோற்றுறந்து
கானுங் கடலுங் கடந்திமையோ
ரிடுக்கண் டீர்த்த கழல்வேந்தை.

வான் நின்று இழிந்து வரம்பு இகந்த
மாபூதத்தின் வைப்பு எங்கும்,
ஊனும் உயிரும் உணர்வும் போல்
உள்ளும் புறனும் உளன் என்ப ;
கூனும் சிறிய கோத்தாயும்
கொடுமை இழைப்பக் கோல் துறந்து,
கானும் கடலும் கடந்து, இமையோர்
இடுக்கண் தீர்த்த கழல் வேந்தை.

பொழிப்பு :—கூனியாகிய மந்தரையும் சிற்றன்னையாகிய கைகேசியும் கொடுமை செய்தமையால், செங்கோல் தாங்கி அரசுசெய்தலைத் துறந்து, காட்டையும் கடலையும் கடந்துசென்று, இராவணாதியரைக் கொன்று, தேவர்களின் துன்பத்தைத் தீர்த்தருளிய வீரக்கழலணிந்த வேந்தனாகிய இராமபிரானை, வான் ஆகிய பூதத்தில் இருந்து முறையே தோன்றி, அளவு கடந்த பெருமையவாய் விளங்கும் பூதங்களின் கலப்பினாலாகிய உலகத்துப் பொருள்கள் எல்லாவற்றினும், உடம்பினுள் உயிர் போலவும் உயிரில் உணர்வு போலவும் உள்ளீடாக மறைந்தும் புறத்தே தோன்றியும் எங்கும் நிறைந்துள்ளோன் ஆகிய பரம்பொருளே என்பர் மேலோர்.

குறிப்பு:—ஐம்பெரும் பூதங்களும் தோன்றுங்கால் வான் முதலில் தோன்ற அவ்வானிலிருந்து காற்றும், காற்றிலிருந்து நெருப்பும், நெருப்பிலிருந்து நீரும், நீரிலிருந்து மண்ணும் தோன்று முறைமை பற்றி, 'வானின்றிழிந்து' என்றும், அப்பூதங்கள், மக்களால் வரையறுக்கப்படாத பெருமையவாகலின், 'வரம்பிகந்த மாபூதம்' என்றும், இவ்வுலகப் பொருள்கள் யாவும் ஐம்பூதங்களின் கலப்பினுல் ஆனவை ஆதலின் 'மாபூதத்தின் வைப்பெங்கும்' என்றும் கூறினுர். வைப்பு, ஆகுபெயராய் உலகப் பொருள்களை யுணர்த்திற்று. மாபூதத்தின் வைப்பு–ஐம்பெரும் பூதங்களானியன்ற உலகம்; "நிலந்தீ நீர்வளி விசும் போடைந்தும் கலந்த மயக்கம் உலகம்" (மரபியல்–89) எனத் தொல்காப்பியரும் கூறுதல் காண்க. ஊன் – உடம்பு. உலகமெங்கும் நிறைந்து நிற்கின்ற பரம்பொருளே இராமபிரானுகப் பிறந்து கானுங் கடலுங்கடந்து இமையோர் இடுக்கண் தீர்த்தான் என்பது கருத்து. இக் கடவுள் வாழ்த்து, பொருளியல்பு உரைத்தது ஆகும்.

எல்லாப் பொருளையும் பற்றி நின்றே பற்றற்றவனுகிய பரம்பொருளே அடியவர்களின் துயர் துடைக்க மானிடச் சட்டை தாங்கிக் கூனும் சிறிய கோத்தாயும் இழைத்த கொடுமையால் கடத்தற்கரிய கானும் கடலும் கடந்து சென்று அருள் புரிந்தான் என அப் பரம்பொருளின் எளிவருதன் மையும் பேரருளும் விளக்கியவாறு. 'அப் பரம்பொருளின் திருவடிகளே அவன் வரலாறு கூறத் துணையாவன' என்பது எச்சம்.

கூன், ஆகுபெயராய் மந்தரையை உணர்த்தியது. கோத்தாய் – அரசியாகிய தாய். அறுபதினுயிரத்து மூவர் தாயராயினும் மூவரே அரசியராந்தன்மையர் என்பது நினைக்க. சிறிய கோத்தாய் என்றது இங்குக் கைகேசியை. கூன் கொடுமை செய்தது, இராமன் இளமைக்காலத்து உண்டை வில்லால் தன்னை அடித்தமைக்கு ஈடாக அரசு துறக்குமாறு கைகேசிபால் செய்த கலகம். கைகேசியின் கொடுமையாவது, பரதனுக்குப் பாரளித்து இராமன் படர்வனம் படரச் செய்தது.

இவ்வயோத்தியா காண்டத்துக் கடவுள் வாழ்த்தில் ஏனைய காண்டங்களையும் குறிப்பால் உணர்த்தியுள்ளார் கம்பர். கோல் துறந்து என்றதால் அயோத்தியா காண்டத்தையும் கானுங் கடந்து என்பதால் ஆரணிய காண்டத்தையும் குறிப்பிட்டார் என்பது தெளிவு. இராமபிரான் சுக்கிரீவன் முதலியோர்பால் நட்புக் கொண்டதும் அநுமான் இலங்கை சென்று சீதா பிராட்டியைக் கண்டு மீண்டதும் கானகத்திருந்த காலத்தேயாதலின், கிட்கிந்தா காண்டமும் சுந்தர காண்டமும், குறிப்பால் 'கானுங் கடந்து' என்றமையால் குறிப்பிடப்பட்டன. "கடலுங் கடந்து இமையோர் இடுக்கண் தீர்த்த" என்றமையால் திருவணை கட்டி இலங்கையில் புகுந்து இராவணுதியரை வென்ற யுத்த காண்ட நிகழ்ச்சியும், வேந்தை என்றமையால் உத்தர காண்ட நிகழ்ச்சியும் குறிப்பிடப்பட்டன.

———

# 1. மந்திரப் படலம்

தயரதன், தன் தவப்புதல்வனுகிய இராமபிரானுக்கு முடி சூட்டுவதுபற்றி வசிட்ட முனிவரோடும் சுமந்திரன் முதலிய அமைச்சர்களோடும் ஆலோசனை செய்ததைத் தெரிவிக்கும் பகுதி ஆதலின் இது, ' மந்திரப் படலம் ' எனப்பட்டது. மந்திரம்-ஆலோசனை. மந்திரிப் படலம் எனச் சில ஏடுகளில் இப்படலப் பெயர் காணப்படுகின்றது.

ஆலோசனை மண்டபத்தை அடைந்த தயரதன் தனித்திருந்து சிந்தித்தபின் அமைச்சர்களையும் வசிட்டரையும் வரவழைக்கிருன். அவர்கள் வந்தவுடன் இராமனுக்கு முடிசூட்டிவிட்டுத் தான் துறவு பூண்டு காட்டுக்குச் சென்று தவம்புரியக் கருதியிருப்பதைத் தெரிவித்து, அவர்கள் கருத்தை அறிய விரும்புகிருன். வசிட்ட முனிவன், மன்னன் கருத்து நன்றென உடன்பட்டு, இராமபிரானுடைய பெருங்குணங்களைப் பாராட்டி, மன்னனுதற்குத் தக்கவன் என்பதைத் தெரிவிக்கின்ருன். வசிட்டமுனிவன் வாக்கால் இராமன் புகழப்பட்டதைக் கேட்டுத் தயரதன் இராமனைப் பெற்ற மகிழ்ச்சியினும் அவனைப் பெரு வீரனென்று அறிந்தஞான்றடைந்த மகிழ்ச்சியினும் பெரிய மகிழ்ச்சியடைகின்ருன். சுமந்திரன் எழுந்து மந்திரிமார்கள் எல்லோர்க்கும் மன்னன் கருத்து ஏற்றதாகத் தோன்றுவதைத் தெரிவிக்கின்ருன். தயரதன் சுமந்திரனை அனுப்பி இராமபிரானை அழைத்துவரச் செய்கின்ருன். சுமந்திரனேடு வந்த இராமனை மார்புறத்தழுவி அருகிருத்தித் தன் தளர்ந்த நிலையையும் தான் தவநெறி மேற்கொள்ள வேண்டிய இன்றியமையாமையையும் தெரிவித்து, இராமன் முடிசூடி உலகைக் காத்தல் வேண்டும் என வேண்டுகின்ருன். தந்தை பணி என்ற கருத்தால் இராமன் முடிபுனைய இசைகின்ருன். அதை யறிந்து மகிழ்ந்த தயரதன், இராமனை மாளிகைக்கு அனுப்பிவிட்டு மன்னர்களுக்கு ஓலை போக்குகின்ருன். வசிட்ட முனிவரிடம் முடிபுனை விழாவிற்கு வேண்டியவற்றைச் செய்யுமாறு பணித்துவிட்டு, வந்த மன்னர்களிடம் இராமனுக்கு முடிபுனையக் கருதியுள்ளதைக் கூறுகின்ருன். மன்னர் யாவரும் நன்றென மகிழ்ந்து, இராமன் பண்புகளைப் பாராட்டுகின்றனர். அவர்கள் உடன்பாடு பெற்ற தயரதன், சோதிடம் வல்லாரை அழைத்து முடிபுனை நாள் பார்க்கத் தனித்ததோர் இடத்தில் போய் அவர்களுடன் ஆராய்கின்ருன். இராமனுக்கு முடிபுனைவது உறுதியாயிற்று என்பதை அறிந்த மகளிர் நால்வர், விரைந்தோடிச் சென்று கோசலைக்கு அறிவிக்கின்ருர்கள். மகன் முடிபுனைவான் என்பது கேட்டு மகிழ்ந்த கோசலை, மன்னன் அரசு துறப்பதற்கு வருந்தினளாயினும், மகிழ்ச்சி கூறிய மங்கையர்க்குப் பரிசு கொடுத்து மகிழ்வித்துச் சுமித்திரையோடு திருமால் கோயிலை யடைந்து வணங்கி

இராமனுக்கு அருள்புரிய வேண்டிக்கொண்டு, அந்தணர்க்கு அன்ன தான முதலியவற்றைச் செய்துவிட்டு, நோன்பு மேற்கொண்டிருந்தாள்: என்பது இப்படலத்துள் கூறப்படுகின்றது.

## வான்மீகத்தில் காணப்படும் வேறுபாடு

இராமபிரானுக்கு இளவரசுப் பட்டம் கட்ட எண்ணியதாக வான் மீகம் கூறும். கம்பர் அங்ஙனம் கூருமல் மன்னனுக மணிமுடி சூட்ட எண்ணியதாகவே கூறுகின்ருர்.

இராமனைத் தயரதன் சபா மண்டபத்திலும் தன் வீட்டிலுமாக இரண்டு முறை வரவழைத்து முடிபுனை விழாவைப் பற்றியும் அதை விரைந்து முடிக்கக் கருதியதற்குரிய காரணத்தையும் கூறியதாக வான் மீகம் கூறும். மேலும், தயரதன், இராமனைத் தன் வீட்டிற் கழைத்துப் பேசியபோது, பரதன் கேகயநாட்டிற்குச் சென்றிருக்கும் நிலையில் முடி புனை விழா நடத்த விரைவதற்குக் காரணம் தான் கண்ட தீயகனுக்களும் உற்பாதங்களும், தன் சாதகத்தைப் பார்த்த சோதிடர் கூறிய சொற் களுமே ஆம் என்பதை விளக்கமாகக் கூறித் தன் உயிர் பிரிதற்குள் இராமன் முடிபுனைதலைப் பார்க்க விரும்புவதையும் தெரிவிக்கின்ருன். இவை கம்பர் காவியத்தில் காணப்படவில்லை. ஆலோசனை மண்ட பத்தில் ஒரு முறை கண்டு கூறியதை மட்டுமே கூறியுள்ளார் கம்பர்.

## படலப் பொருட் சிறப்பு

இம்மந்திரப் படலத்தில் அமைச்சர்களின் இலக்கணம் கூறும் பகுதி மிக்க நயனும் பயனுமுள்ளதாகக் காணப்படுகின்றது. முக்காலத் திற்கும் ஏற்ப மொழிந்த வள்ளுவரின் வாய்மொழியும் கருத்தும் இங்குப் பொன்னே போல் போற்றிக் கூறப்பட்டுள்ளன.

தயரதன், தவம் பூண விரும்புவதற்குரிய காரணங்களையும் துறவின் பெருமையையும் விளக்கும் சொற்கள், ஆழ்ந்த கருத்துடையவை; வசிட்ட முனிவர் இராமனைப் பாராட்டிக் கூறும் பகுதி மிக்க சுவை யுடையது; தவச் சான்ருேராகிய வசிட்ட முனிவர்வாக்கால் இராமன் நல்லன் என்று கூறக் கேட்டபொழுது தயரதன் அடைந்த மகிழ்ச்சிப் பெருக்கைக் கம்பர் கூறுவது, நினைதொறும் இன்பந்தரும் ஏற்றமுடை யதாகக் காணப்படுகின்றது.

'ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்ருே னெனக்கேட்ட தாய்' (69)

என்ற குறளை உளங்கொண்டு தயரதனின் பேருவகையைப் படிப்படியாக உயர்த்திக் காட்டும் பண்பு படிப்போர் உள்ளத்தைக் கவரும் பான் மையதாகும். பலப்பல ஆண்டுகள் பிள்ளைப்பேறில்லாத தயரதன் பிள்ளையைப்பெற் றுவகை வாய்த்ததும், அப்பிள்ளை எல்லாப் பண்புகளும்

நிறைந்தவனாய் வில்லிறுத்துப் பரசுராமனைப் போர் தொலைக்கும் மாவீரனாய் வாய்த்ததும், அவ்விராமனது இளமைக் காலந்தொட்டுப் பழகிய சான்றோனாகிய வசிட்ட முனிவன் இராமன் நல்லன் என்று பாராட்ட வாய்த்ததும் எத்துணைப் பொருத்தமுடையவை. அக்குறளுக்கு விளக்கந்தர இவ்விடம் எவ்வளவு பொருத்தமாகக் கம்பர்க்குக் கிடைத்தது காண்மின் ! பல ஆண்டுகள் ஆண்ட தயரத மன்னனும் தன் மகனைச் சான்றோன் என்று வசிட்ட முனிவன் கூறக் கேட்ட பொழுது தான், 'பெரியதோர் உவகையன் ஆனான்' எனக் கேட்டு மகிழ்தல் ஆடவர்க்கும் இயல்பாதலை எவ்வளவு நன்றாக விளக்கியுள்ளார் கம்பர் என்று எண்ணுமின் !

இராமன், தேர்மேல் செல்லும்போது, மகளிர் கண்டு மையல் கொள்ளுவதாகக் கூறும் கவிகளைப் படிக்கும்பொழுது உலா நூலைப் படிப்பதாகவே தோன்றும்.

இராமனுக்கு முடிபுனைதல் கேட்டு மகிழ்ச்சியும் தயரதன் துறவு பூண்பது கேட்டு மன நெகிழ்ச்சியும் கொண்ட அமைச்சர் நிலையை விளக்கக் கம்பர்,

"இரண்டு கன்றினுக் கிரங்குமோ ராவென இருந்தார்"

என்று உவமை கூறி விளக்கியுள்ளார். இவ்வுவமை, இன்பமும் துன்பமுமாகிய மாறுபட்ட இரண்டு உணர்ச்சிகள் ஒருகாலத்து ஓரிடத்து நிகழ்வதை விளக்குதற்கு எவ்வளவு பொருத்தமுடையது என்பதை நினைமின்!

மூப்பு அடைந்த மன்னனுக்கு, மூத்துப் பால் மறந்த முது கன்றினையும், இளையனாய்ப் புனைமுடி சூடும் இராமனுக்குப் புதுவதாய்த் தோன்றிய இளங்கன்றினையும் உவமித்து, முன்னைக்கன்று பிரிவதால் துன்பமும் பின்னைப் புதுக்கன்று தோன்றியதால் இன்பமும் கொண்ட பசுவை மந்திரிமார்க்கு உவமையாக்கி, மந்திரிகளின் இன்பத் துன்ப உணர்ச்சிகளையும் நன்றியறிதல் தன்மையையும் மன்னர்பால் அவர்க்குள்ள பேரன்பையும் எவ்வளவு சிறப்பாக விளக்கியிருக்கிறார் காண்மின்.

இங்ஙனமே தயரதன், தன் முதுமையால் தளர்ச்சி ஒருபுறம் வருத்த, பூமிகாத்தல் ஆகிய பாரத்தின் வளர்ச்சி ஒருபுறம் வருத்த, ஆற்றாது அல்லல்படுதற்கு உவமையாக, "ஒருத்தலைப் பரத் தொருத் தலைப் பங்குவினூர்தி எருத்தின்" என ஒரு பக்கம் சுமையாலும் ஒரு பக்கம் முடத்தன்மையாலும் வருந்துகின்ற (வண்டியில் பூட்டிய) எருதினை உவமை கூறியிருத்தல் நயமிக்கதாக உள்ளது. இன்னும் தற்குறிப்பேற்றமாகவும் இல்பொருளுவமையாகவும் உருவகமாகவும் கூறிய கருத்துக்களின் சிறப்பையெல்லாம் நூலில் நுழைந்து கண்டு இன்புறுதல் நல்லது.

---

# 1. மந்திரப் படலம்

## தயரதன் மந்திராலோசனை மண்டபத்தை அடைதல்

1400. மண்ணுறு முரசின மழையி னார்ப்புறப்
★ பண்ணுறு படர்சினப் பரும யானையான்
கண்ணுறு கவரியின் கற்றை சுற்றுற
எண்ணுறு சூழ்ச்சியி னிருக்கை யெய்தினன்.

மண் உறும் முரசினம் மழையின் ஆர்ப்புறப்
பண் உறு படர் சினப் பரும யானையான்,
கண் உறு கவரியின் கற்றை சுற்றுற,
எண் உறு சூழ்ச்சியின் இருக்கை எய்தினன்.

பொ :—அலங்கரிக்கப்பட்ட, மிக்க கோபத்தன்மையையும் எருத்தத்தில் தவிசையும் தாங்கிய யானையையுடைய தயரதன், மார்ச்சனை அமைந்த முரசங்களின் தொகுதி, மேகம் இடிப்பது போல் முழங்கா நிற்கவும், அழகு மிகுதியால் எல்லாருடைய கண்களும் பொருந்துதற்குக் காரணமான கவரியின் வால் மயிர்க்கற்றையாலியன்ற சாமரை இருபுறமும் இரட்டாநிற்கவும் (அரண்மனையிலிருந்து புறப்பட்டுச் சென்று) அரிய முடிவுகளை ஆராய்தற்காகப் பொருந்தியுள்ள மந்திராலோசனை மண்டபத்தை அடைந்தான்.

கு :—தயரதன் பத்துத் திசையினும் சென்று போர் புரிந்து வென்ற மாற்றரும் சீற்றமுடையனாயினும், அமைச்சர் கூறும் அறிவுரைகளால் சினமடங்கி அவர் சொல்வழி நின்று அரசு செய்யும் இயல்பினன் என்பதை அவன் யானைமேல் வைத்து விளக்கியுள்ளார். யானை படர்சினமுடையதாயினும், யாழினின்று எழுப்புகின்ற பண்ணோசை கேட்டு அப்படர்சினம் அடங்கிப் பாகர் சொல்வழி நிற்கும் இயல்பினது என்பதை, "காழ்வரை நில்லாக் கடுங்களிற்றொருத்தல் யாழ்வரைத் தங்கியாங்கு" (பாலைக்கலி–1) என்றதால் அறியலாம். தன் விருப்பின்படி இராமபிரானுக்கு முடிசூட்டற்குரிய ஆற்றலும் ஆணையும் உடையனாயினும் அமைச்சர்களோடு ஆராய்ந்து அவர்கள் கூறுவதை யேற்றுச்செய்ய விரும்பி மந்திராலோசனைமண்டபத்தை அடைந்த தயரதனை, "யானையான்" எனக் கருத்துடைய அடைமொழிகளால் சிறப்பித்தது பொருத்தமாதல் காண்க. பருமம்—யானைமேல் தவிசு. யானையான் என்பதற்கு யானை போன்றவன் எனப் பொருள் கொள்ளலும் ஆம்.

'இருகை வேழத் திராகவன்' (பால. பாயிரம்–1) என முன்னர்க் கூறியுள்ளதும் காண்க. "கண்ணுறு கவரி" என்பதற்கு 'மங்கலப் பொருள் என்று கருதுதற்குரிய கவரி' என்று பொருள் கூறலும் ஆம். மந்திராலோசனை மண்டபத்தையே சூழ்ச்சியினிருக்கை யெனக் குறிப்பிட்டார். எண்ணுதல் – ஆராய்தல்; 'எண்ணித் துணிக கருமம்' (குறள்–497) என்புழியும் எண்ணுதல் இப்பொருட்டாதல் காண்க. யானை யான், ஆர்ப்புற, சுற்றுற, எய்தினன் என முடிக்க. (1)

1400 (a) மன்னனே யவனியை மகனுக் கீந்துநீ
பன்னருந் தவம்புரி பருவ மீதெனக்
கன்னமூ லத்தினிற் கழற வந்தென
மின்னெனக் கருமைபோய் வெளுத்த தோர்மயிர்.

(b) தீங்கிழை யிராவணன் செய்த தீமைதான்
ஆங்கொரு நரையதா வணுகிற் றுமெனப்
பாங்கில்வந் திடுநரை படிமக் கண்ணடி
ஆங்கதிற் கண்டன னவனி காவலன்.

குறிப்பு:—கடவுள்வாழ்த்திற்குப் பின் இந்த இரண்டு பாடல்களும் சில ஏட்டுச் சுவடிகளிலும் சில அச்சுப் புத்தகங்களிலும் காணப்படுகின்றன பெரும்பான்மையான சுவடிகளிலும், திரு. வேங்கடாசல முதலியார் 1840-ஆம் ஆண்டு வெளியிட்ட முதற் பதிப்பிலும் இவையின்மையானும் இவையில்லாமல் மயிலை சண்முகம்பிள்ளை அவர்களும் உரையெழுதி வெளியிட்டுள்ளமை யாலும் தயரதன் முதுமையை யுணர்த்துகின்ற பாடல்கள் பின்னர்க் காணப்படுதலாலும், இப்பாடல்கள் இரகுவமிச சுலோகத்தின் கருத்தை யுளங் கொண்டு யாரோ பாடிச் சேர்த்த இடைச் செருகலாக இருக்கலாம் என இவை நூலில் சேர்க்கப்பட வில்லை முதல் நூலும், இராமனுக்கு முடி சூட்டத் தயரதன் விரைதற்குக் காரணம், அவன் கண்ட தீக்கனுக்களும் உற்பாதங் களுமே ஆம் என்று கூறுகின்ற தன்றி நரைமயிர் கண்டமை எனக் கூறா மையும் காண்க.

## தயரதன் தனித்திருத்தல்

1401. புக்கபின் னிருபரும் பொருவில் சுற்றமும்
பக்கமும் பெயர்கெனப் பரிவி னீக்கினன்
ஒக்கநின் றுலகளித் தியோகி னெய்திய
சக்கரத் தவனெனத் தமிய னாயினன்.

புக்கபின் 'நிருபரும் பொரு இல் சுற்றமும்
பக்கமும் பெயர்க' எனப் பரிவின் நீக்கினன்;
ஒக்கநின்று, உலகு அளித்து, யோகின் எய்திய
சக்கரத்தவன் எனத் தமியன் ஆயினன்.

பொ :—தயரதன், ஆலோசனைமண்டபத்துள் புகுந்த பின்னர், 'மன்னர்களும், ஒப்பற்ற சுற்றத்தவரும், பக்கத்திருக்கும் பணியாளரும் பெயர்ந்து செல்க' என்று அன்பு மொழியால் போகச் செய்துவிட்டு எல்லாவுயிர்களிடத்தும் ஒத்த அன்புடையனாய்நின்று உலகத்தைக் காப்பாற்றி இறுதியில் அறிதுயிலில் அமர்ந்த சக்கரப் படையுடைய நாராயணன் போலத் தனியன் ஆனான்.

கு :—பக்கம், ஆகுபெயராய்ப் பக்கத்திருக்கும் பணியாளரை யுணர்த்திற்று. ஆலோசனைக்கு இயைபு இல்லாத எவரும் ஆலோசனை மண்டபத்து இருத்தல் கூடாது ஆகலின் அவர்களை நீக்க வேண்டியதாயிற்று. ஆணையால் கடிந்து நீக்காது அன்பினால் நெகிழ்ந்து நீக்கியது, அவன், தாயொக்கும் அன்புடைமை ஆகும். எல்லோரையும் அனுப்பிவிட்டு மண்டபத்தில் தனியனாய் இருந்த தயரதனுக்கு உலகத்தைக் காப்பாற்றிவிட்டு இறுதியில் தனியே யோகத்திருக்கும் திருமாலை உவமை கூறியது பொருத்தமாதல் காண்க. ''உலகளித் தியோகி னெய்திய சக்கரத்தவன்'' என்பதனோடு, 'ஆழியாலுலகளித்து' என்ற ஏரெழுபது பாடற் பகுதியும் ஒப்பு நோக்கத்தகும். ''உலகொழித்து'' என்று பாடங் கொண்டு ஊழியிறுதியில் உலகங்களை அழித்து என்று பொருள் கூறலுமாம். ''பிறிவரு தம்பியும் பிரியப் பேருல கிறுதியிற் றனெனெ விருந்த வேந்தல்'' (கிட்கிந்தை–126) என இராமன் தனித்திருத்தற்கும் இவ்வாறே உவமை கூறியிருத்தல் காண்க. திருவுடை மன்னரைக்காணின் திருமாலைக் கண்டதாகவே கருதுவது சான்றோர் மரபு. அரசாளுந் திருவை விட்டு நீங்க நினைக்கின்ற தனிநிலையிலும் தயரதனுக்குத் திருமால் உவமையாதல் காண்க. தனித்திருத்தலும், சிந்தித்திருத்தலும் இருவர்க்கும் பொதுத் தன்மை. நீக்கினன் என்ற முற்றெச்சம், ஆயினன் என்ற வினைமுற்றினைக்கொண்டு முடிந்தது. (2)

## வசிட்டன் முதலிய அமைச்சர்களை வரவழைத்தல்

1402. சந்திரற் குவமைசெய் தரள வெண்குடை
அந்தரத் தளவுநின் றளிக்கு மாணையான்
இந்திரற் கிமையவர் குருவை யேய்ந்ததன்
மந்திரக் கிழவரை வருகென் றேவினன்.

சந்திரற்கு உவமைசெய் தரள வெண்குடை
அந்தரத்து அளவும் நின்று அளிக்கும் ஆணையான்,
இந்திரற்கு இமையவர் குருவை ஏய்ந்த தன்
மந்திரக் கிழவரை 'வருக'! என்று ஏவினன்.

போ :—சந்திரனுக்கு உவமையாகத் தக்க முத்த வெண்குடை, விண்ணுலகளவும் நின்று காத்தற்குக் காரணமான ஆணையிற் சிறந்த தயரதன், இந்திரனுக்கு வாய்த்த தேவகுருவாகிய வியாழபகவானைப் போன்ற (அறிவும் ஒழுக்கமும் உடைய) தன் மந்திரிமார்களை 'வருக' என்று கட்டளையிட்டான்.

கு :—முத்த வெண்குடையின் வட்டமும் ஒளியும் அழகும் தண்மையும் சந்திரனுக்கு இருப்பதைக் காட்டிலும் மிக்கிருத்தலின், "சந்திரற் குவமைசெய் தரள வெண்குடை" என்றார். "உயர்ந்ததன் மேற்றே யுள்ளுங்காலை" (உவமவியல்–3) என்ற விதி, உவமையாகும் பொருள் உயர்ந்து வரல்வேண்டும் என்பதை அறிவித்தல் காண்க. சந்திரனைப் போன்ற குடை என்னுது மாறிக் கூறினமையால் இதனை விபரீத உவமை என்பர். அந்தரம் – விண்ணுலகம். தயரதன் குடை விண்ணுலகத்தளவும் நின்றளிக்கும் என்றது, சம்பரனைக் கொன்று இந்திரற் கரசளித்த அவன் ஏற்றங் கருதி. "குன்றளிக்குங் குலமணித்தோள் சம்பரனைக் குலத் தோடும் தொலைத்து நீ கொண், டன்றளித்த அரசன்றோ புரந்தரனின் றுள்கின்ற தரச" (பால–325) என்று கோசிகன் கூறியதும் காண்க. தயரதனுக்கு இந்திரனும் மந்திரிமார்க்கு வியாழனும் உவமை. "சாரணர், நாயக னிவன்கொலென் றயிர்த்து நாட்டமோர் ஆயிர மில்லையென் றையம் நீங்கினர்" (பால–319) என இந்திரனுக்கும் தயரதனுக்கும் உள்ள ஒப்புமையைப் புலப்படுத்தினமை காண்க. வியாழன் நீதிநூல் செய்த நெறியுடையனுதலின் நீதிநூல் வல்ல—ஒழுக்கத்தில் உயர்ந்த— அமைச்சர்க்கு உவமையாயினன். வான்மீகத்தில் வசிட்டனுக்கு உவமை யாகக் கூறப்பட்ட வியாழனைக் கம்பர் அமைச்சர் அனைவர்க்கும் உவமை யாக்கினர். 'மந்திரக்கிழவனை' என்று பாடங்கொண்டு முதனூலுக்கு ஏற்ப உரைத்தலும் ஆம். (3)

## வசிட்டன் வருகை

1403. பூவரு பொலன்கழற் பொருவில் மன்னவன்
காவலி னாணைசெய் கடவு ளாமெனத்
தேவரு முனிவரு முணருந் தேவர்கள்
மூவரி னல்வரா முனிவந் தெய்தினன்.

பூ வரு பொலன் கழல் பொரு இல் மன்னவன்
காவலின் ஆணை செய் கடவுள் ஆம் எனத்
தேவரும் முனிவரும் உணரும் தேவர்கள்
மூவரின் நால்வர் ஆம் முனி வந்து எய்தினன்.

பொ :—தேவரும் முனிவரும் (ஞானத்தால்) உணர்தற்குரிய அயன், அரி, அரன் என்ற தேவர்கள் மூவரோடு சேர்த்து நாலாமவராக எண்ணத்தக்க பெருமையுடைய வசிட்ட முனிவன், பூமி முழுதும் தன் கீழ் வந்து பொருந்தப்பெற்ற, பொன்னாலியன்ற கழலணிந்த ஒப்பற்ற தயரத மன்னனது ஆட்சியில் அவனுக்குக் கட்டளையிடுதற்குரிய கடவுள் இவனே ஆம் என்று பிறர் எண்ண (மந்திராலோசனை மண்டபத்தை) அடைந்தான்.

கு :—தயரதன், தரை முழுதும் வென்று தன்னடிப்படுத்திய தகைமையனாதலின் அவன் பிறர்க்கு ஆணையிடுதலன்றி அவனுக்கு ஆணையிடுவோர் அவனாட்சியில் பிறர் இலர் ; வசிட்ட முனிவன் ஒருவனே, அத் தயரதனுக்குக் கட்டளையிடுதற்குரிய பெருமகன் என்பது தோன்ற, "ஆணை செய் கடவுளாமென" என்றார். 'மன்னவனது காவலின்கண் என ஆறாவதும் ஏழாவதும் விரிக்க. கடவுளாமென முனி வந்தெய்தினன் என இயைக்க. கடவுளாமெனத் தேவரும் முனிவரும் உணரும் முனி என இயைத்தலும் ஆம். 'பூவரு பொலன் கழல்' என்பதற்கு, "அழகு பொருந்திய பொன்னாலியன்ற வீரக் கழல்" எனவும் பொருள் கொள்ளலாம். மூவரொடு சேர்த்து நாலாமவராக எண்ணத்தக்கவர் என்க. "இறைவர்கள் மூவரென்ப தெண்ணிலா ரெண்ணமேதான், அறைகழலனுமனோடு நால்வரே முதல்வரம்மா" (உயுத்தகா-மாயா சீதைப்-5) என அனுமனும் இவ்வாறு கூறப்படுதல் காண்க. (4)

இதன்பின், ஒருசுவடியிற் கீழ்வரும் பாடல் காணப்படுவதாக 45-ல் காட்டப்பட்டுள்ளது.

1403 (a) எய்திய முனிவரன் இணைகொள் தாமரைச்
செய்யபூங் கழலவன் சென்னி சேர்த்தபின்
வையகத் தரசரும் மதிவல் லாளரும்
வெய்தினில் வருகென மேயி னனரோ.

## அமைச்சர்களின் பெருமை 1404-1408

**1404.** குலமுதற் றொன்மையுங் கலையின் குப்பையும்
பலமுதற் கேள்வியும் பயனு மெய்தினர்
நலமுத னலிவினு நடுவு நோக்குவார்
சலமுத லறுத்தருந் தருமந் தாங்கினர்.

குலம் முதல் தொன்மையும், கலையின் குப்பையும்,
பல முதல் கேள்வியும், பயனும், எய்தினர்,
நலம் முதல் நலியினும் நடுவு நோக்குவார்,
சலம் முதல் அறுத்து, அருந்தருமம் தாங்கினர்.

பொ :—முதன்மையும் பழமையும் வாய்ந்த குடிப் பிறப்பும், கலைகளின் குவியல்களைக் கற்ற கல்வியும், பல முதன்மையான கேள்வியால் பெற்ற அறிவும், அவற்றால் ஆய பயனும் பெற்றவர்கள்; நடுநிலையில் நிற்பதால் தம் நலம் அடியோடு அழிவதாயினும் தம் நலத்தை நோக்காது நடுவுநிலையொன்றையே நோக்குபவர்கள், கோபமுதலிய குற்றங்கள் தம்மிடத்துத் தோன்றுவண்ணம் வேருடன் களைந்து அருமையான தருமத்தைத் தாங்கினவர்கள்.

கு :—தயரதனுடைய அமைச்சர்கள் அறுபதினுயிரவரும் ஆலோசனை மண்டபத்தை அடைந்தமை கூறத்தொடங்கிய ஆசிரியர், அவ்வமைச்சர்களின் பெருமையை ஐந்து கவிகளால் கூறுகின்றார். நற்பண்புகள் யாவும் இற்பிறந்தார்க்கே இயல்பாக அமையும் சிறப்பு நோக்கிப் பழங்குடிப் பிறப்பை முதற்கண் கூறியுள்ளார்.

"இற்பிறந்தார் கண்ணல்ல தில்லை யியல்பாகச்
செப்பமும் நாணு மொருங்கு" (குறள்-951)

"வழங்குவ துள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி
பண்பிற் றலைப்பிரித லின்று" (குறள்-955)

என வள்ளுவரும் பழங்குடியில் பிறந்தார்க்கே பண்புகள் இயல்பாக அமைதலை விளக்கியிருத்தல் காண்க. கருத்தும் சொல்லும் செயலும் தம்முள் மாறுகாத செப்பமும், பழிபாவங்களின் மடங்குதலாகிய நாணமும் இற்பிறந்தார்க்காயின் ஒருவர் கற்பிக்க வேண்டாமல் தாமே யுளவாம்; பிறர்க்காயிற் கற்பித்த வழியும் நெடிது நில்லா என்ற கருத்தைப் பரிமேலழகரும் (குறள்-951) விளக்கியிருத்தல் காண்க. குப்பை-குவியல். அவர்கள் கற்ற கலைகள் அளவில என்பது விளக்கக் "கலையின் குப்பை" என்றார். பழங்குடிப் பிறப்பால் இயற்கையறிவு வாய்ந்தோர்க்கும் கலையறிவு இன்றியமையாது வேண்டப்படுதலின் 'கலையின் குப்பை' எனக் கலையறிவைக் கூறினர். செல்வத்துட் செல்வம் செவிச் செல்வமே யாகலின், 'பல முதற்கேள்வி' கூறினர். குடிப்பிறப்பிற்கும் கலையறிவிற்கும் கேள்வியறிவிற்கும் ஏற்ற பண்பும் ஒழுக்கமும் கைவரப் பெற்றவர் என்பார், 'பயனும் எய்தினர்' என்றார். நலம் - தமக்கு வரும் நன்மைகள். நலியினும்-கெடுவதாயினும்.

"அடுக்கிய கோடி பெறினும் குடிப்பிறந்தார்
குன்றுவ செய்தல் இலர்" (குறள்-954)

என்ற கருத்தை விளக்கியவாறு. நடுவுநிலை பிறழ்ந்தால் தமக்குப் பல கோடி பொருள்கள் வருவதாயினும், அப் பெரும்பொருளை நோக்காது நடுவுநிலையையே நோக்குவார் என்றவாறு. சலம்—வஞ்சகமும் ஆம். முதல் அறுத்தல்—அடியோடு களைதல். வேந்தன் வெகுண்ட போதும் பொறுமையுடனிருந்து அறிவுரைகூறி அறத்தை நிலைநிறுத்த வேண்டிய வர்கள் ஆதலின் சலமுதலறுத்தலைக் கூறினர். (5)

1405. உற்றது கொண்டு மேல்வந்
★ துறுபொரு ளுணருங் கோளார்
மற்றது வினையின் வந்த
தாயினு மாற்ற லாற்றும்
பெற்றியர் பிறப்பின் மேன்மைப்
பெரியவ ரரிய நூலும்
கற்றவர் மான நோக்கிற்
கவரிமா வனைய நீரார்.

உற்றது கொண்டு மேல் வந்து
உறு பொருள் உணரும் கோளார்;
மற்று அது வினையின் வந்தது
ஆயினும், மாற்றல் ஆற்றும்
பெற்றியர்; பிறப்பின் மேன்மைப்
பெரியவர்; அரிய நூலும்
கற்றவர்; மானம் நோக்கின்
கவரிமா அனைய நீரார்.

பொ :—மன்னனுக்கு வந்து நேர்ந்த இடையூற்றினைக் கொண்டு இனி யெதிர்காலத்தில் வரும் பொருள் இதுவென உணர்ந்து கொள் கின்ற அறிவு வன்மையுடையவர்கள்; அவ்விடையூறு பழவினை வயத்தால் வந்ததாயினும், அதையும் மாற்றுகின்ற தன்மையையுடையவர்கள்; தம் குடிப்பிறப்பினுக்கு ஏற்ற மேன்மைக் குணங்களை இயல்பாகவே பெற்ற பெரியவர்கள்; பிறரால் பொருள் காண்டற்கரிய நுண்ணிய கருத்துக் களையுடைய ஞான நூல்களையும் தெளியக் கற்றவர்கள்; மானத்தின் பால் அவர்கள் வைத்த பற்றினை நோக்கின், மயிர் நீப்பின் வாழாத கவரி மாவைப் போன்று மானக்கேடு நேர்வதாயின் தம் உயிர் நீக்கும் தன்மை யையுடையவர்கள்.

கு :—உற்றது - நேர்ந்ததாகிய இடையூறு. 'உற்றுழியுதவியும் (புறநா-183) என்புழியும், "தன்னாசிரியர்க்கு ஓர் ஊறுபாடு உற்ற

இடத்து'' என இப்பொருளே படுதல் காண்க. கோளார்-அறிவு வலிமையுடையவர்கள். மந்திரிக்கழகு வரும்பொருள் உரைத்தல் ஆதலின் அதையுணரும் வன்மை கூறினர். மற்று அசை. ஊழையும் உப்பக்கம் காணும் உறுதியுடையவர் என்பார், 'வினையின் வந்ததாயினும் மாற்றல் ஆற்றும் பெற்றியர்' என்றார். ''உற்ற நோய் நீக்கி யுறுஅமை முற் காக்கும் பெற்றியார்ப் பேணிக் கொளல்'' (குறள்-442) என்பது ஈண்டைக்கு நினைக்க. மாற்றல்-நீக்குதல். ஆற்றும்-செய்யும். 'குலமுதற் றொன்மையும்' எனக் குடிப்பிறப்பு மேலே கூறப்பட்டதாகலின், 'பிறப்பின் மேன்மை' என்பதற்கு, 'குடிப்பிறப்பினுக்கேற்ற மேன்மைக் குணம்' எனப் பொருள் கூறலாயிற்று. கற்றோர்க்குத் தாம் வரம்பாகிய தலைமையர் என்பது தோன்ற, 'அரிய நூலுங் கற்றவர்' என்றார். அரிய நூல்-ஞான நூல். நூலும் என்ற இறந்தது தழீஇய எச்சவும்மையால் முற்கூறிய 'கலையின் குப்பை' தழுவப்படும். ''மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்னார், உயிர்நீப்பர் மானம் வரின்'' (969) என்ற குறளின் கருத்தை, ''மானம் நோக்கிற் கவரிமாவனைய நீரார்'' எனச் சுருக்கிக் கூறினர் 'மானமாவது, எஞ்ஞான்றும் தந்நிலையில் தாழாமையும், தெய்வத்தால் தாழ்வு வந்துழி உயிர் வாழாமையுமாம். "வான் மயிர் துடக்கிற் றனுயிர் வாழாப் பெருந்தகைக்கவரி'' (பெருங்கதை-க 85·233-4) என்றதும் காண்க. (6)

**1406.** காலமு மிடனு மேற்ற
கருவியுந் தெரிந்து கற்ற
நூலுற நோக்கித் தெய்வ
நுனித்தறங் குறித்து மேலோர்
சீலமும் புகழ்க்கு வேண்டுஞ்
செய்கையுந் தெரிந்து கொண்டு
பால்வரு முறுதி யாவுந்
தலைவற்குப் பயக்கு நீரார்.

காலமும் இடனும் ஏற்ற கருவியும் தெரிந்து கற்ற நூல் உற நோக்கித் தெய்வம் நுனித்து,அறம்குறித்து, மேலோர் சீலமும் புகழ்க்கு வேண்டும் செய்கையும் தெரிந்துகொண்டு, பால் வரும் உறுதி யாவும் தலைவற்குப் பயக்கும் நீரார்.

பொ :—(மன்னன் ஒரு செயல் செய்ய முற்பட்ட விடத்து) அச்செயல் செய்தற்கேற்ற காலமும் இடமும் கருவியும் இவை எனத் தாம் தெளிந்து கற்ற அரசியல் நூலின்படி பொருந்த ஆராய்ந்தறிந்து, அச்செயல் தெய்வ சம்மதமானதே என்பதைக் கூர்மையாக நோக்கி அறிந்து,

அறநூல்களை மனதிற்கொண்டு மேலோரின் ஒழுக்கம் இன்னதென் பதையும் புகழ்க்குக் காரணமான செய்கை இன்னதென்பதையும் ஆராய்ந்துகொண்டு, அச்செயலைச் செய்து முடித்து அச்செயலின் பயனாய்த் தம்மிடத்துவரும் உறுதிகள் எல்லாவற்றையும் தலைவனாகிய தயரதனுக்கே கொடுக்கும் இயல்புடையவர்கள்.

கு :—"கருவியும் காலமும் செய்கையும் செய்யும் அருவினையு மாண்ட தமைச்சு" (குறள்-631) என்புழி வள்ளுவர் அமைச்சர்க்கு உரிய வாகக் கூறியவற்றுள் காலமும் கருவியும் செய்கையும் இங்கு விவரிக்கப் பெற்றுள்ளன. 'இடனறிதல்' என்ற அதிகாரத்தால் இடனும் சேர்த்துக் கொள்ளப்பட்டது. தெய்வ நுனித்தலாவது, இச்செயல் தெய்வ சம்மத முடையதே என்பதைப் புள்ளும் பல்லியும் உன்னமும் முதலிய சொகினத்தானும் நற்சொல் கேட்டலாகிய விரிச்சியானும் கூர்ந்து அறிதல். நுனித்தல்-கூர்ந்தறிதல். அறம்-அறநூல். இதைத் தெரிந்து கொள்வதால் பயன், அவ்வொழுக்கத்தில் வழுவாது செயலாற்றுதலாம். தமக்குப் பயன் அளிக்கும் செயலாயினும் புகழ்க்கு வேண்டும் செயலாக இல்லாதவழிப் பழிபடுதலின் புகழ்க்கு வேண்டுஞ் செய்கையே தெரிந்து கொள்ள வேண்டும் என்றார். பால்-தம்பால். உழைப்பைத் தமதாக்கி உறுதியை அரசனுக்கு ஆக்குகின்றவர் என்க. உறுதி-உறுதிப் பொருள்கள். காலமாவது வினை தொடங்குதற்குரிய காலம்; வெம்மையும் குளிர்ச்சியும் தம்முள் ஒத்து நோய் செய்யாது தண்ணீரும் உணவும் முதலிய உடைத்தாய்த் தானை வருந்தாது செல்லும் இயல்பினது எனலும் ஆம். இடமாவது, தாம் வெல்லுதற்கேற்ற இடம். கருவி - சேனையும் பொருளும். (7)

1407. தம்முயிர்க் குறுதி யெண்ணார்
தலைமகன் வெகுண்ட போதும்
வெம்மையைத் தாங்கி நீதி
விடாதுநின் றுரைக்கும் வீரர்
செம்மையிற் றிறம்பல் செல்லாத்
தேற்றத்தார் தெரியுங் காலம்
மும்மையு முணர வல்லா
ரொருமையே மொழியு நீரார்.

தம் உயிர்க்கு உறுதி எண்ணார்,
தலைமகன் வெகுண்ட போதும்
வெம்மையைத் தாங்கி நீதி
விடாது நின்று உரைக்கும் வீரர்;

செம்மையில் திறம்பல் செல்லாத்
தேற்றத்தார், தெரியும் காலம்
மும்மையும் உணர வல்லார்,
ஒருமையே மொழியும் நீரார்.

பொ :—தம்முடைய உயிர்க்கு உறுதி தேடவேண்டும் என்று எண்ணுதவர்களாய்த் தலைமகனாகிய தயரதன் சினங் கொண்ட பொழுதும் அச்சினத் தீயால் உளதாய வெப்பத்தைத் தாங்கிக் கொண்டு, அவன் நீதியை விடாவண்ணம் கொள்கையில் நிலையாக நின்று கூறும் வீரத்தன்மையுடையவர்கள் ; செம்மை நெறியில் மாறுபடாத தெளிவுடையவர்கள் ; தாம் தெரிந்துகோடற்குரிய இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்ற முக்கால நிகழ்ச்சிகளையும் உணரவல்லவர்கள்; வாய்மை ஒன்றையே பேசும் இயல்புடையவர்கள்.

கு :—'எண்ணுராய் உரைக்கும் வீரர்' என்று முற்றெச்சமாக்கி முடிக்க. தம்முயிர்க்கு உறுதி எண்ணுவாராயின் வெம்மையைத் தாங்கி நீதி கூறல் இயலாது. 'விடாது' என்பதற்கு நீங்காமல் என்றும் அடுத்து அடுத்து என்றும் பொருள் கொள்ளலாம். 'சினமென்னும் சேர்ந்தாரைக் கொல்லி' (குறள். 306) என்பதற்கேற்ப, 'வெம்மை' கூறினர். வேந்தன் வெகுளிக்கும் அஞ்சாது நின்று இடித்து அறங் கூறுவோராதலின், வீரர் என்றார். செம்மை-நேர்மை. திறம்பலாவது, நேர்மையற்ற நெறியிற் சென்று மன்னனையும் கொடுங்கோலனாக்குதல். செம்மையின் உயர்வும் கொடுமையின் தாழ்வும் தெரிந்து செம்மையைப் பின்பற்றுதல் தெளிவால் அன்றி இயலாமையின், 'தேற்றத்தார்' என்றார். காலம் மும்மை யென்றது முக்காலத்தும் நிகழும் நிகழ்ச்சிகளை. வல்லார் என்றது காலம் மும்மையும் உணர்தலின் அருமை தோன்ற நின்றது. ஒருமை-மெய்ம்மை. அமைச்சர் பலராயினும், மன்னனுக்கு உறுதியும் நீதியும் உரைக்குங்கால் வேறுபடல் இன்றி ஒரு தன்மை யாகவே உரைப்பவர் என்றும் ஆம். இனி, முன்னும் பின்னும் முரணுதல் இன்றி ஒரு தன்மையாகவே மொழிபவர் எனினும் ஆம். "ஒருதலையாச் சொல்லலும் வல்ல தமைச்சு" (குறள். 434) என்புழி ஒன்று சொல்லுங் கால் துணிவு பிறக்கும் வண்ணம் ஒருதலையாகச் சொல்வோனே அமைச்சன் என வள்ளுவர் கூறுதலும் காண்க. ஏகாரம் பிரிநிலை. "இறுதி பயப்பினும் எஞ்சா திறைவற் குறுதி பயப்பதாந் தூது" (குறள்–690) என வள்ளுவர் தூதுவர்க்குச் சொன்ன இலக்கணத்தை அமைச்சர்க்குரியதாக்கினர், அமைச்சராதற்குரியாரே தூதுவராம் முறைமை பற்றி. "இன்னுயிரழியும்போதும் இறைவனுக் குறுதியல்லால், முன்னிய முகமன் மாட்டா முற்றிய அறிவினர்." (சூளா–துறவு. 21) "மூரித்தேந் தாரினய் நீ முனியினு முறுதி நோக்கிப் பாரித்தேன் தரும நுண்ணூல் வழக்கது வாதல் கண்டே" (சீவக–214) என்பது காண்க. (8)

**1408.** நல்லவுந் தீயவு
★ நாடி நாயகற்
கெல்லையின் மருத்துவ
னியல்பி னெண்ணுவார்
ஒல்லைவந் துறுவன
வுற்ற பெற்றியிற்
றொல்லைநல் வினையென
வுதவுஞ் சூழ்ச்சியார்.

நல்லவும் தீயவும் நாடி, நாயகற்கு
எல்லையில் மருத்துவன் இயல்பின் எண்ணுவார்;
ஒல்லை வந்து உறுவன உற்ற பெற்றியில்
தொல்லை நல்வினை என உதவும் சூழ்ச்சியார்.

பொ :—தம் தலைவனாகிய தயரதனுக்கு நன்மை தருவனவற்றையும் தீமை தருவனவற்றையும் ஆராய்ந்து பார்த்து, முடிவில், (நோயாளியின் விருப்பத்தை நோக்காது அவன் நலத்தையே நோக்கி அறுத்தும் சுட்டும் வருத்தியும் மருத்துவம் செய்யும்) வைத்தியன் தன்மைபோல் மன்னவன் விருப்பு வெறுப்புக்களை நோக்காது, அவன் நலத்தையே என்றும் எண்ணுகின்றவர்கள்; மன்னனுக்கு வரக்கடவனவாகிய இடையூறுகள் வந்துற்ற நிலையில் முன்பிறப்பில் செய்த அவன் நல்வினை வந்து உதவுமாறு போல விரைந்து வந்து உதவும் ஆராய்ச்சியுடையவர்கள்.

கு :—'நாயகற்கு நல்லவும் தீயவும்' என்றும், 'ஒல்லை உதவும்' என்றும் இயைக்க. வந்துறுவன - வந்து பொருந்துதற்குரிய இடையூறுகள். 'உறுவன' என்னும் வினையாலணையும் பெயர் உற்ற என்ற வினைக்கு எழுவாயாய் நின்றது. நல்வினையுடையார்க்கு இடையூறு நேர்ந்தாலும் அவர் நல்வினைப் பயனால் அவ்விடையூறு நீங்கும் என்பது அறநூல் முடிபு; 'தருமம் தலைகாக்கும்' என்னும் பழமொழியும் காண்க. நல்வினை தானே சென்று தன்னையுடையானது இடுக்கண் தீர்த்தல் போல, அமைச்சரும் அரசன் கட்டளையை யெதிர்நோக்காது தாமே சென்று அரசனுற்ற இடையூற்றை விரைவில் நீக்குவர் என்பது கருத்து. தொல்லை–பழமை. "நன்மையுந் தீமையு நாடி நலம்புரிந்த, தன்மையா னாளப்படும்" (குறள்–511) என்பது ஒப்பு நோக்கத்தகும். (9)

## அமைச்சர்களின் வருகை 1409-1410

1409. அறுபதி னுயிர
 ரெனினு மாண்டகைக்
குறுதியி லொன்றிவர்க்
 குணர்வென் றுன்னலாம்
பெறலருஞ் சூழ்ச்சியர்
 திருவின் பெட்பினர்
மறிதிரைக் கடலென
 வந்து சுற்றினர்.

அறுபதினுயிரர் எனினும், ஆண் தகைக்கு
உறுதியில், ஒன்று இவர்க்கு உணர்வு என்று உன்னலாம்
பெறலரும் சூழ்ச்சியர்; திருவின் பெட்பினர்;
மறி திரைக் கடல் என வந்து சுற்றினர்.

பொ :—(இவ்வியல்பெலாம் அமைந்த அமைச்சர்) அறுபதினுயிரவர் ஆனாலும், ஆண்டகையாகிய தயரதனுக்கு உறுதி பயப்பதில் இவ்வறுபதினுயிரவர்க்கும் உணர்வு ஒன்று என்று எண்ணத் தகுந்த பெறுதற்கரிய ஆராய்ச்சியுடையவர்கள்; செல்வநிறைவுடையவர்கள்; அலைகள் மறிந்து வருகின்ற கடல்போல வந்து சூழ்ச்சிமண்டபத்தில் நிறைந்தார்கள்.

கு :—உடம்பால் அறுபதினுயிரவர் ஆயினும், உணர்வால் ஒருவர் என்று எண்ணத்தக்கவர்கள் என அவர்கள் ஒற்றுமையை விளக்கியவாறு. மடிமையின்றி நடுவு நின்ற நன்னெஞ்சினோர் என்பார், 'திருவின் பெட்பினர்' என்றார். திரு-செல்வம். பெட்பு-விருப்பம். அவர்கள் தகுதியறிந்து செல்வம் விரும்பி அவரை யடையும் என்க. அறுபதினுயிரவரும் நிரைநிரையாய் வந்து நிறைந்து நின்ற நிலைமையை விளக்க, மறி திரைக் கடலை உவமை கூறினர். சூழ்ச்சி—ஆராய்ச்சி.

கம்பர், பெருந்தொகைக்கு அறுபதினுயிரம் என்ற எண்ணைக் கூறுங் கருத்தினர். அமைச்சர் அறுபதினுயிரர் என்றது போலவே, தயரதனுக்கு ஆயுட்காலமும் அறுபதினுயிரம் (திருவவதாரம்–3), மனைவியரும் அறுபதினுயிரர் (நகர்நீங்கு–179), மிதிலையில் வில்லைத் தூக்கியவரும் அறுபதினுயிரவர் (கார்முகப்–3) என்பர். பெருங்கதையிலும் இவ்வாறே பிரச்சோதனனுக்குப் பதினாறுயிரம் அமைச்சர் (494-பக்.), பதினாறுயிரர் தாயர் (219–பக்), 16,000 பசு (431–பக்.), 16,000 நாடு (484–பக்.), 16,000 பட்டத்துத் தேவியர் (493–பக்.), 16000–நகர் (492–

பக்.), 16,000--சுவணம் (431–பக்.) என எல்லாம் பதினறுயிரமாகக் கொங்குவேளும் கூறுகின்றமை காண்க. சக்கரவர்த்திகட்கு இவ்வாறு கூறவேண்டும் என்பது சமணர் கொள்கை என்ப. (10)

**1410.** முறைமையி னெய்தினர் முந்தி யந்தமில்
அறிவனை வணங்கித்தம் மரசைக் கைதொழு
திறையிடை வரன்முறை யேறி யேற்றசொல்
துறையறி பெருமையா னருளுஞ் சூடினர்.

முறைமையின் எய்தினர், முந்தி அந்தம் இல்
அறிவனை வணங்கித் தம் அரசைக் கைதொழுது,
இறையிடை வரன்முறை ஏறி, ஏற்ற சொல்
துறை அறி பெருமையான் அருளும் சூடினர்.

பொ :—(மண்டபத்தை அடைந்த அமைச்சர்கள்), முறைப்படி அணுகினவராய் முன்னர் முடிவிலாத அறிவுடைய வசிட்ட முனிவனை வணங்கிப் பின், தம்முடைய அரசனாகிய தயரதனைத் தொழுது, ஆசனங்களில் வரிசைக்கேற்ற முறையில் ஏறியிருந்து காலத்திற்கும் இடத்திற்கும் கேட்போர்க்கும் ஏற்ற சொல்லைச் சொல்லும் நெறியறிந்த பெருமையானாகிய அத்தயரதன் கூறிய அருள் நிறைந்த சொன்மாலையையும் சூடினர்கள்.

கு :—முறைமையாவது வரிசையால் செல்லுதல். எய்தினர் முற்றெச்சம். எய்தினராய் வணங்கிக் கைதொழுது ஏறிச் சூடினர் என்க. மும்மூர்த்தியரோடு நால்வராக எண்ணத்தக்கவன் வசிட்டன் ஆதலின், அவனை 'அந்தமில் அறிவன்' என்றார். அந்தம்–முடிவு. முடிவில்லாத அறிவினன் என்றது, பேரறிவினை யுடையவன் என்றவாறு. தயரதனே தமக்குத் தலைவன் ஆயினும், அத்தயரதனால் வணங்கத்தக்க குரு வசிட்டனாதலின், அத்தகுதி நோக்கி முந்தி அம்முனிவனை வணங்கினார்கள். வணங்குதல்–நிலத்தில் விழ்ந்து பணிதல். கைதொழுதல்–நின்றாங்கே தலைசாய்த்துக் கை கூப்புதல். இறை–தவிசு ; தங்குதற்குரியது என்னும் பொருளது. அவரவர் தகுதிக் கேற்ற ஆசனங்களில் வரிசையின் ஏறி என்பார், 'வரன்முறை ஏறி' என்றார். 'சொல் துறையறி பெருமையான் அருளும் சூடினர்' என்றமையால், அவர்கள் சூடியது, அவர்களை வரவேற்கு முறையில் மன்னவன் கூறிய அருள்மொழி மாலையையே என்பது பெறும். அருளுள்ளத்தில் எழுந்த சொற்களை அருள் என ஆகு பெயரால் கூறினர். சூடினர் என்ற குறிப்புருவகத்தால் அருண்மொழி மாலை என்று உருவகத்தை விரிக்கலாயிற்று. வந்த அமைச்சர்களை வர

வேற்று இன்மொழி இயம்பினன் மன்னவன் என்க. 'அருள்' அருட் பார்வை என்பர்; பின் "அவர் முகம் மரபினேக்கி" என வருதலின் பொருந் தாமை யறிக. சொல்–நூல் எனலும் ஆம். (11)

## தயரதன் தன் கருத்தைக் கூறுதல் 1411-1429

**1411.** அன்னவ னருளமைந் திருந்த வாண்டையின்
மன்னவ னவர்முக மரபி னேக்கினன்
உன்னிய தரும்பெற லுறுதி யொன்றுள
தென்னுணர் வனையநீ ரினிது கேட்கென.

அன்னவன் அருள் அமைந்து இருந்த ஆண்டையின்,
மன்னவன் அவர் முகம் மரபின் நோக்கினன் ;
'உன்னியது அரும்பெறல் உறுதி ஒன்று உளது;
என் உணர்வு அனைய நீர் இனிது கேட்க' என.

பொ :—அம்மன்னவன் அருள் மொழியால் அமைச்சர்கள் அமைதி யுற்று இருந்த பொழுது, அத்தயரதன் அவ்வமைச்சர்தம் முகங்களை முறைப்படி நோக்கி, "யான் நினைத்ததாகிய பெறுதற்கரிய உறுதிப் பொருள் ஒன்று உளது; என் உணர்வை ஒத்த ஒற்றுமையுடைய நீங்கள் அதை இனிதாகக் கேட்பீர்களாக" என்று (தொடங்கி).

கு :—'என' என்ற எச்சம் 1429–ஆம் பாடலில் 'இனைய கூறினன்' என்பதோடு முடியும். என–என்று. அமைச்சர்கள் அகக் குறிப்பை அவர் முகக்குறிப்பான் உணர்ந்து தன் கருத்தைக் கூறுதல் முறையாகலின், 'அவர் முகம் மரபினேக்கினன்' என்றார். 'நோக்கினன்' முற்றெச்சம். மகனுக்கு அரசளித்துத் தான் துறவு மேற்கொள்ள நினைத்ததைக் குறிக் கின்றான் ஆகலின் அதனை, "அரும் பெறல் உறுதி ஒன்றுளது" என்றான். உறுதிப் பொருள்களுள் நான்காவதாகிய வீடுபயக்கும் 'துறவை' உறுதி என்றது பொருத்த மாதல் காண்க. மன்னவன் தன் அமைச்சரை, 'என்னுணர்வனைய நீர்' என்றது, அவர்களே தனக்கு இனமாக அமைந்து ஒழுகுதல் பற்றி என்க. 'மனத்துளது போலக் காட்டி யொருவற்கு இனத்துள தாகு மறிவு' (குறள்–454) என் புழிப் பரிமேலழகர், "விசேட வுணர்வு ஒருவற்கு மனத்தின்கண் உளதாவது போலத் தன்னைப் புலப்படுத்தி, அவன் சேர்ந்த இனத்தின் கண் உளதாம்" என்றும், 'விசேட வுணர்விற்கு மூலம் இனம் என்பது இதனாற் கூறப்பட்டது' என்றும் கூறியிருத்தல் காண்க. இதனால் மன் னனுக்கு அமைச்சர் உணர்வனையவர் என்றது பொருத்தமாதல் காண்க.

மன்னவன் மனமும் மந்திரிகள் மனமும் ஒற்றுமையுடையன என்பதை விளக்கியவாறு. 'கேட்கெனு' என்புழி அகரம் தொக்கது. இப்பாட்டு எச்சமாய் நின்று மேல்வரும் செய்யுட்களை நோக்கலின் "குளகம் ஆகும்; குளகம் பலபாட் டொருவினை கொள்ளும்" (தண்டியலங்காரம்–4.) என்பது விதி. (12)

1412. வெய்யவன் குலமுதல் வேந்தர் மேலவர்
செய்கையி னொருமுறை திறம்ப லின்றியே
வையமென் புயத்திடை நுங்கண் மாட்சியால்
ஐயிரண் டாயிரத் தாறு தாங்கினேன்.

'வெய்யவன் குலம் முதல் வேந்தர் மேலவர்
செய்கையின் ஒருமுறை திறம்பல் இன்றியே
வையம் என் புயத்திடை, நுங்கள் மாட்சியால்,
ஐயிரண்டாயிரத்தாறு தாங்கினேன்.'

பொ :—'சூரிய குலத்தில் தோன்றி, எனக்கு முன்னர் வேந்தராய் இருந்த மேலோர்களின் செய்கையில் ஒரு முறையும் மாறுபடல் இன்றி உங்கள் மாட்சிமையால் யான் இவ்வுலகத்தை என் புயத்தில் வைத்து அறுபதினாயிரம் ஆண்டுகள் தாங்கினேன்.'

கு :—வெய்யவன்–சூரியன். முதல் வேந்தர் - தனக்கு முன்னிருந்த வேந்தர்; முதன்மையான வேந்தர் எனலுமாம். ஒரு முறையும் என்ற இழிவு சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. சூழ்வார் கண்ணாக வேந்தன் ஆட்சி செய்ய வேண்டியிருத்தலின், 'நுங்கள் மாட்சியால்' என்று அமைச்சர்களைப் பாராட்டினான். (13)

1413. கன்னியர்க் கமைவருங்
கற்பின் மாநிலம்
தன்னையித் தகைதரத்
தருமங் கைதர
மன்னுயிர்க் குறுவதே
செய்து வைகினேன்
என்னுயிர்க் குறுவதுஞ்
செய்ய வெண்ணினேன்.

'கன்னியர்க்கு அமைவரும் கற்பின், மாநிலம்
தன்னை இத்தகைதரத் தருமம் கைதர,
மன் உயிர்க்கு உறுவதே செய்து வைகினேன்,
என் உயிர்க்கு உறுவதும் செய்ய எண்ணினேன்.'

பொ :—'பெண்டிர்க்குப் பொருந்தும் கற்பினை அப்பெண்டிர் காப்பது போலப் பெரிய உலகத்தை இந்தச் சிறப்புண்டாகுமாறு, அறக் கடவுள் கைகொடுத்து உதவினமையால் நிலைபெற்ற உயிர்கட்குப் பொருந்தும் நன்மைகளைச் செய்து காத்தே காலம் கழித்த யான், இனி, என் னுயிர்க்குப் பொருந்தும் நன்மையும் செய்ய நினைந்தேன்'.

கு:—கன்னியர், பெண்டிர் என்னும் பொருளதாய் நின்றது. அவர்கள் கற்பைக் காத்தலாவது, கொண்டானுக்குரியராய் மற்றோரை விழை யாமை. நிலமும் மன்னன் தன் காவல் திறத்தால் மற்றோர்க்கும் பொது வாகாது தனக்கே உரிமையாகச் செய்தல். இனி, 'காப்பின்' என்ற பாடத்தைத் தழுவிக் கன்னியர் என்பதற்கு மணம் பெறு மகளிர் என்று பொருள் கூறலுமாம். மணம் ஆகும் வரை அக்கன்னியரைப் பெற்றோர் அரிதிற் காவல் புரிந்து வளர்ப்பது மரபு. "யாயே கண்ணினுங் கடுங் காதலளே, எந்தையும் நிலனுறப் பெறுஅன் சீறடி சிவப்ப, எவனில குறு மகள் இயங்குதி என்னும்" (அகநா–12) எனத் தலைவி வரைவிற்கு முன் இற்செறிக்கப்பெற்றுக் காவல் பூண்டமையைத் தோழி விளக்குமாற்றான் அறியலாம். தயரதன் காவற் சிறப்பால் நாடு பெற்ற நலங்களை நன் குணர்ந்தவர் அமைச்சர் ஆகலின் அவர் நெஞ்சறிசுட்டாக, 'இத்தகை தர' என்றான். மன்னுயிர்–உலகில் நிலைபெற்ற உயிர்கள். 'என்னுயிர்' என்றது, இராகுத்தலை என்பது போல ஒற்றுமைப் பொருளையுணர்த்தும் ஆறும்வேற்றுமைத் தொகை. வைகுதல்–கழித்தல்; தங்கலுமாம். வைகினேன், வினையாலணையும் பெயர். 'என்னுயிர்க்குறுவது' என்றது தவத்தை. (14)

**1414.** விரும்பிய மூப்பெனும்
வீடு கண்டயான்
இரும்பிய லனந்தனு
மிசைந்த யானையும்
பெரும்பெயர்க் கிரிகளும்
பெயரத் தாங்கிய
அரும்பொறை யினிச்சிறி
தாற்ற வாற்றலேன்.

'விரும்பிய மூப்பு எனும் வீடு கண்ட யான்,
இரும் பியல் அனந்தனும், இசைந்த யானையும்,
பெரும் பெயர்க் கிரிகளும், பெயரத் தாங்கிய
அரும் பொறை இனிச் சிறிது ஆற்ற ஆற்றலேன்.'

பொ :—'நெடுங்காலமாக விரும்பியிருந்த மூப்புப் பருவம் என்கின்ற (அரசியலிலிருந்து) விடுதலை பெறுதற்குரிய காலத்தைக் கண்ட யான், பெரிய பிடரினையுடைய ஆதிசேடனும் (அவனோடு பூமியைத் தாங்குவதில்) இசைந்த ஐராவதம் முதலிய எட்டுத்திசையானைகளும் பெரிய புகழையுடைய ஏமகூடம் முதலிய எட்டு மலைகளும் பூமியைத் தாங்குஞ் செயலிலிருந்து நீங்கி ஓய்வுபெறுமாறு தாங்கியிருந்த அரிய அரசுச் சுமையை இனிச் சிறிது காலம் கூடத் தாங்க ஆற்றுதவனாக ஆனேன்."

கு:—விரும்பிய வீடு என்று இயைக்க. அறுபதினாயிரம் ஆண்டுகளாக அரசுசெய்துவந்த அனுபவத்தால் தயரதன், "மழைவளங் கரப்பின் வான்பே ரச்சம், பிழையுயிர் எய்திற் பெரும்பே ரச்சம், குடிபுரவுண்டுங் கொடுங்கோ லஞ்சி, மன்பதை காக்கும் நன்குடிப் பிறத்தல், துன்ப மல்லது தொழுதகவில்" (சிலப்–காட்சி–100–104) என்பதைக் கண்டவனுதலின் அரசியலிலிருந்து விடுதலை பெறுதற்குரிய மூப்புப் பருவத்தை விரும்பி எதிர்நோக்கியிருந்தமை விளங்க, "விரும்பிய மூப்பெனும் வீடு கண்ட யான்" என்றான். மூப்பு ஆகிய காரணத்தால் அரசியல் விடுதலையாகிய காரியம் நிகழ்தல் பற்றிக் காரணத்தைக் காரியமாக்கி 'மூப்பெனும் வீடு' என்றான். வீடு, முதனிலை நீண்ட தொழிற்பெயர்: விடுதலை என்னும் பொருளது. ஆதிசேடனும் திசையானைகளும் எட்டு மலைகளும் பூமியைத் தாங்குவதாகக் கூறுவது புராண மரபு. அவற்றால் தாங்கப்பட்ட பூமியைத் தயரதன் தன் தோளில் தாங்கிக் காத்தான் என்னும் உபகாரம் பற்றி, 'அனந்தனும் யானையும் கிரிகளும் பெயரத் தாங்கிய அரும் பொறை' என்றான். இவைகள் யாவும் சேர்ந்து தாங்கிய பூமிபாரத்தைத் தயரதன் ஒருவனே மூப்புப் பருவத்திலும் தாங்கலின் 'அரும் பொறை' என்றான். பொறை–பாரம். சிறிதும் என்புழி "இழிவு சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. ஆற்ற – தாங்குதலைச் செய்ய. ஆற்றலேன் – இயலாதவனானேன். "மைஞ்ஞாகமெட்டும் மதநாக மோரெட்டும், பைஞ்ஞாக மெட்டும் பரந்தீர" (குலோத்துங்–உலா–34) என்பது ஒப்பு நோக்கத்தக்கது. 'விரும்பிய மூப்பு என்பதற்கு என்னை விரும்பி வந்தடைந்த மூப்பு எனப் பொருள் கூறலுமாம். (15)

1415. நங்குலக் குரவர்க
ணவையி னீங்கினர்
தங்குலப் புதல்வரே
தரணி தாங்கப்போய்
வெங்குலப் புலன்கெட
வீடு நண்ணினர்
எங்குலப் புறுவரென்
றெண்ணி நோக்குகேன்.

'நம் குலக் குரவர்கள் நவையின் நீங்கினர்,
தம் குலப் புதல்வரே தரணி தாங்கப் போய்,
வெம் குலப் புலன் கெட வீடு நண்ணினர்,
எங்கு உலப்பு உறுவர்? என்று எண்ணி நோக்குகேன்.'

பொ :—'நமது குலத்துத் தோன்றிய மூதாதையர்கள் குற்றத்தினின்றும் நீங்கினவர்களாய்த் தம்முடைய குலத்துப் பிறந்த சிறந்த புதல்வர்களே உலகை ஆளச்செய்து வனத்துச் சென்று கொடிய கூட்டமாகிய ஐம்புல ஆசை அடியோடு கெட்டொழியத் தவஞ்செய்து வீடு பெற்றவர்கள் மிகப் பலராதலின் எங்கு எண்ணி லடங்கி முடிவுறுவார்கள் என்று எண்ணிப்பார்க்க வேண்டியவனுகின்றேன்.'

கு :—நீங்கினர், முற்றெச்சம். நீங்கினராய்ப் போய் வீடு நண்ணினர் என்க. நோக்குகேன் என்றது நோக்கல் நோக்கம்; ஆவது, மனத்தால் நோக்குதல். நவை—குற்றம்; காம வெகுளி மயக்கங்கள். ஏகாரம் பிரிநிலை. அரசு ஆளுதலைத் தரணி தாங்குவதாகக் கூறுவது உபசாரம். 'போய்' என்பதால் வனத்து என்பது பெற்றும். வெங்குலப்புலன்—கொடிய ஐம்புலக்கூட்டம். புலன் என்றது சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்ற ஐம்புலன் காரணமாக வரும் ஆசைகளை. வீடு நண்ணினர் என்றமையால் புலன் கெடத் தவம் செய்தமை பெற்றும். உலப்புறுதல்—முடிவுறுதல். தன் புதல்வன் தரணி தாங்கப் போய் வீடு நண்ண எண்ணுகின்ற தயரதன், தன் முன்னோர் மேற்கொண்ட முறையும் அதுவே என்பதை விளக்கினன். வீடு நண்ணினராகிய நங்குலக்குரவர் என இருபெயரொட்டாக்குக. திருவடிசூட்டு—43 ஒப்பு நோக்குக. (16)

1416. வெள்ளநீ ருலகினில்
விண்ணி ணுகரில்
தள்ளரும் பகையெலாந்
தவிர்த்து நின்றயான்

கள்ளரிற் கரந்துறை
காம மாதியாம்
உள்ளுறை பகைஞருக்
கொதுங்கி வாழ்வெனே.

'வெள்ள நீர் உலகினில், விண்ணில், நாகரில்,
தள் அரும் பகை எலாம் தவிர்த்து நின்ற யான்,
கள்ளரில் கரந்து உறை காமம் ஆதியாம்
உள் உறை பகைஞருக்கு ஒதுங்கி வாழ்வெனே?'

பொ :—'மிக்க நீரையுடைய கடலால் சூழப்பட்ட மண்ணுலகிலும் விண்ணுலகிலும் பாதலத்திலும் பிறரால் வெல்லற்கரிய பகையெல்லாவற்றையும் வென்று நின்ற யான், கள்ளரைப்போல மறைந்து இருக்கின்ற காம வெகுளி மயக்கங்களாகிய அகத்தே பொருந்திய பகைவருக்கு அஞ்சி ஒதுங்கியிருந்து வாழ்வேனே ? (வாழேன்.)'

கு :—'வெள்ள நீர்' என்றது கடலினை. நாகர், ஆகுபெயராய் நாகர் உலகமாகிய பாதலத்தினை யுணர்த்திற்று. தவிர்த்தல் - வென்று அடிப்படுத்தல். வினைவானன்றி வடிவுகாண வியலாத காமமாதியாம் குற்றங்களைக் 'கள்ளரிற் கரந்துறை பகைஞர்' என்றார். உள் - அகம். மூவுலகத்திலும் புறப்பகையெலாம் அறக்களைந்த யான் அகப்பகைக்கு அஞ்சி ஒதுங்கி வாழேன் எனத் தனக்குத் தவஞ் செய்யும் ஆற்றலுண்மையைத் தயரதன் விளக்கியவாறு. காமமாதி - காமவெகுளி மயக்கங்கள். காம மாதியாம் பகைஞர், உள்ளுறை பகைஞர் என்க. காமமாதியாம் பகைஞர் என இழித்தற்கண் அஃறிணை உயர்திணையாயிற்று. முன்னிரண்டு அடிகளில் தசரதன் என்ற தன் பெயர்க் காரணத்தை விளக்கியுள்ளமை காண்க. 'வெள்ளநீருலகு' என்றமையால் எட்டுத் திசையும், 'விண்' என்றமையால் மேலும், 'நாகரில்' என்றமையால் கீழும் ஆகிய பத்துத் திசையினும் ரதத்தைச் செலுத்தி வென்றவன் என்பது பெறப்படும். (17)

**1417.** பஞ்சிமென் றளிரடிப்
பாவை கோல்கொள
வெஞ்சினத் தவுணர்தேர்
பத்தும் வென்றுளேற்
கெஞ்சலின் மனமெனு
மிழுதை யேறிய
அஞ்சுதேர் வெல்லுமீ
தருமை யாவதே.

'பஞ்சி மென் தளிர் அடிப் பாவை கோல் கொள,
வெம் சினத்து அவுணர் தேர் பத்தும் வென்று உளேற்கு,
எஞ்சல் இல் மனம் எனும் இழுதை ஏறிய
அஞ்சு தேர் வெல்லும் ஈது அருமை ஆவதே?'

பொ :—'பஞ்சினையும் மெல்லிய தளிரினையும் ஒத்த பாதங்களை யுடைய பாவை போன்ற கைகேசி, வன்மை மிக்க பாகன் தாங்குதற்கு உரிய குதிரையோட்டுங் கோலைத்தாங்கித் தேரைச் செலுத்தக் கொடிய கோபத்தையுடைய அவுணர்களுடைய தேர் பத்தையும் வென்றுள்ள எனக்கு, ஆசை குறையாத மனம் என்கின்ற பேய் ஏறிக்கொண்டுள்ள (ஐம்புல ஆசையாகிய) அஞ்சுதேரை வெல்லும் இச்செயல் அருமையான தாகுமோ ? (ஆகாதுகாண்).

கு :—மேற்பாடலின் கருத்தைப் பிறிதோராற்ருன் விளக்கியவாறு. பாவை, உவமையாகு பெயராய்க் கைகேசியை யுணர்த்திற்று. 'கோல் கொள' என்றது, தேரைச் செலுத்தியதை யுணர்த்திற்று. பெண்டிர் தேர் செலுத்தல் உண்டு; "மடந்தை கோல் கொள்ள வையம்... ஏறினளே" (சீவக—2054). சம்பரன் பத்து வடிவம் கொண்டு பத்துத் தேர்களில் வந்தான் என்பாரும் உளர். பத்துத் தேர் வென்றவனுக்கு ஐந்து தேர் வெல்லல் அருமையன்று என்ற நயம் காண்க. மெல்லடிப் பாவை வல்லிதிற் செலுத்திய ஒரு தேர் கொண்டு, வெஞ்சினத் தவுணர் தம் விஞ்சுதேர் பத்தையும் வென்ருன் என்றது, 'பொருட்குறை விசேடம்' எனப்படும். முன் பாட்டில் பத்துத் திசையினும் சென்று வென்றமை யால், 'தசரதன்' எனப்பட்டான் என்பதும், இப்பாட்டில், பத்துத் தேர்களை வென்றமையால் அப்பெயர் பெற்ருன் என்பதும் விளக்கமாதல் காண்க. எத்துணை யுண்டாலும் நிறைவு பெருத பேய்போல எத்துணைக்காலம் துய்ப்பினும் ஐம்புல ஆசை குறையாத இயல்புபற்றி 'மனமெனும் இழுதை' என உருவகித்தார். இழுதை - பேய். 'அஞ்சு தேர்' என்றது, மெய் வாய் கண் மூக்குச் செவியெனப் பேர்பெற்ற ஐவாய வேட்கை அவாவினை. வள்ளுவர் இவ்வைந்தினையும், 'உரனென்னுந் தோட்டியான் ஓரைந்துங்காப்பான்' (குறள்-24) என யானையாக உரு வகம் செய்யுமாறு அமைத்திருத்தலையும் ஓர்க. (18)

**1418.** ஒட்டிய பகைஞர்வந் துருத்த போரிடைப்
பட்டவ ரல்லரேற் பரம ஞானம்போய்த்
தெட்டவ ரல்லரேற் செல்வ மீண்டெனு
விட்டவ ரல்லரேல் யாவர் வீடுளார்.

'ஒட்டிய பகைஞர் வந்து உருத்த போரிடைப்
பட்டவர் அல்லரேல், பரம ஞானம் போய்த்
தெட்டவர் அல்லரேல், செல்வம் ஈண்டென
விட்டவர் அல்லரேல், யாவர் வீடு உளார் ?'

பொ :—'வஞ்சினம் கூறிய பகைவர் வந்து, வெகுண்டு செய்யும் போரில் இறந்தவர்கள் அன்றி, பரஞானம் கைவரப் பெற்றுத் தெளிந்தோ ரன்றி, செல்வம் பயன்படுவது இவ்வுலகத்தளவே என்ற உண்மை யுணர்ந்து துறந்தவர்கள் அன்றி, வேறு யாவர் வீட்டுலகத்தில் இருக்கின் ஞர்கள் ? (வேறு யாருமிலர்)'

கு :—ஒட்டி - வஞ்சினங் கூறி (சிந்தா—690). பலர் கூடி ஒருவனெடு பொருதால் வெற்றி பெறுவது எளிதென எண்ணிப் பல மன்னர் கூடி வருதல் இயல்பு என்பது தோன்ற, 'ஒட்டிய பகைஞர்' என்ஞர் எனினு மாம்; 'தாக்கிய பகைஞர்' எனலுமாம் (குறள்—499). உருத்தல்-கோபித் தல். 'ஒள்வாட்டானை உருத்தெழுந்தன்று' (புறப். வெ. 3-2.) என் புழியும் இப்பொருட்டாதல் காண்க. மன்னர்க்குப் போரில் விழுப்புண் பட்டு இறந்து புகும் வீரசுவர்க்கம், வீட்டுலகம் போன்ற பெருமையுடை மையின் அதனையும் ஞானத்தால் பெறும் வீட்டுலகத்தோடு சேர்த்துக் கூறினர். 'மறங்கந்தாக நல்லமர் வீழ்ந்த நீள்கழன் மறவர் செல் வுழிச் செல்கென' (புறநா—93) என்புழிப் போரிடைப்பட்டவர் செல்லும் இன்பவுலகம் உண்டு என்பது பெறப்படுதல் காண்க. பரமஞானம் - எல் லாம் இறைவனகக் காணும் மேலான ஞானம். முயன்று மூன்றையும் விடாதவழியும் அப் பரமஞானம் முற்செய் தவத்தால் வருதலுமுண்டு. ஆதலின் அப் பரஞானம் பெற்றவர்க்கு வேருக, செல்வம் விட்டவரைக் கூறினர். 'செல்வம்' எனவே, பொன்னுசையும் மண்ணுசையும் பெண் ணுசையும் ஆகிய மூன்றும் அடங்கும். வீட்டுலகத்து இருத்தற்குரிய வர்கள் இம் மூன்று திறத்தினரன்றிப் பிறரில்லை என்பதை விளக்கியவாறு. எய்யென எழுபகை யெங்கும் இன்மையால் மொய்பொரு தினவுடை முழவுத் தோளினனுகிய தயரதனுக்குப் போரிடைப்படுதல் வாய்த்திலது. ஆதலானும் பரமஞானமும் கைவந்திலது ஆதலானும் செல்வத்தின் நிலை யாமை யுணர்ந்து முயன்று துறத்தலாகிய ஒன்ருல்தான் வீடுபெற இயலும் என்பதை உணர்த்தியவாறு. (19)

**1419.** இறப்பெனு மெய்ம்மையை
யிம்மை யாவர்க்கும்
மறப்பெனு மதனின்மேற்
கேடு மற்றுண்டோ

துறப்பெனுந் தெப்பமே
துணைசெ யாவிடிற்
பிறப்பெனும் பெருங்கடல்
பிழைக்க லாகுமோ.

'இறப்பு எனும் மெய்மையை இம்மை யாவர்க்கும்
மறப்பு எனும் அதனின் மேல் கேடு மற்று உண்டோ?
துறப்பு எனும் தெப்பமே துணை செயாவிடின்
பிறப்பு எனும் பெருங்கடல் பிழைக்கல் ஆகுமோ?'

பொ :—'இப்பிறப்பில் தோன்றிய எல்லோர்க்கும், மரணம் என்கின்ற மெய்மை நிகழ்ச்சியை மறந்து விடுவதைக் காட்டிலும் கேடு பயக்கும் வினை பிறிதொன்று உண்டோ? (இல்லை); (மரணம் வருவது உறுதி என்பதை நினைந்து மேற்கொள்ளும்) துறவு என்கின்ற தெப்பமே உயிர்க்குத் துணைசெய்யாவிட்டால் பிறவி என்கின்ற பெரிய கடலினின்றும் பிழைத்துக் கரையேற இயலுமா? (இயலாதுகாண்)'

கு :—"வீயாது உடம்பொடு நின்ற உயிருமில்லை" (புறநா—363) ஆதலின், "இறப்பெனும் மெய்மை" என்றார். யாவரும் சுடலை சேர்வது காட்சியளவையாலே பெறப்படும் உண்மையாம் என்பதை ஆளுடை அரசும், "சுடலை சேர்வது சொற்பிரமாணமே" (5-204-4) என வினவி விளக்கியிருத்தல் காண்க. மரணமுண்டு என்பது காட்சியால் நாள் தொறும் கண்டுகொண்டிருந்தும் அதனை மறப்போரே மிகப் பலர் என்பதும், அம்மறப்பே துறவுக்கு முயலாது நரகத்திற் கேதுவாய எல்லாத் தீவினைகளையும் செய்துகொண்டு செருக்கித் திரியச் செய்கின்றது என்பதும் தோன்ற "மறப்பெனு மதனின்மேல் கேடு மற்றுண்டோ" என்றார். முற்பிறவி பிற்பிறவிக்குக் காரணமாகியும் முற்பிறவியின் காரியமாகிய அப்பிற்பிறவியே மேல்வரும் பிறவிக்குக் காரணமாகியும் இவ்வாறே காரண காரியத் தொடர்ச்சியாய்க் கரையின்றி வருதலின் பிறவியைப் பெருங்கடல் என்றல் மரபு. முன்தோன்றிக் கரைசாரும் அலை, பின் தோன்றும் அலைக்குக் காரணமாதலும் காரியமாகிய அவ் அலை அதற்குப் பின் தோன்றும் அலைக்குக் காரணமாதலும் இவ்வாறே காரண காரியத் தொடர்ச்சியாய் எல்லையின்றித் தோன்றியழியும் தன்மை கடலின்கண் காணப்படுதலின் பிறவிக்கும் கடலுக்கும் ஒப்புமையுண்டு. "பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார் இறைவனடி சேராதார்" (குறள்—10) என்ற குறளை யீண்டு நினைக்க. 'துறவு' என்பது, இவ்வுலகை நினையாது துறந்து, இறைவனடியையே நினைக்கும் இயல்பு ஆகலின் வள்ளுவர் கூறிய அடிசேர் ஞானமும் இங்கே கூறப்பட்ட துறவும் ஒன்றே என்று கொள்ளல் தகும். ஓகாரங்கள் இரண்டும் எதிர்மறை. (20)

1420. அருஞ்சிறப் பமைவருந் துறவு மவ்வழித்
தெரிஞ்சுற வெனமிகுந் தெளிவு மாய்வரும்
பெருஞ்சிற குளவெனிற் பிறவி யென்னுமிவ்
விருஞ்சிறை கடத்தலி னினிய தியாவதே.

'அருஞ்சிறப்பு அமைவரும் துறவும், அவ்வழித்
தெரிஞ்சு உறவு என மிகும் தெளிவும், ஆய் வரும்
பெரும் சிறகு உள எனில், பிறவி என்னும் இவ்
இரும் சிறை கடத்தலின் இனியது யாவதே?'

பொ :—'ஞானத்தாலன்றி அடைதற்கரிய சிறந்த வீட்டுலகை உயிர் பொருந்துதற்குக் காரணமான துறவும், அத்துறவுநெறியின்கண் நின்று ஆராய்தலால் அத்துறவுக்கு உறவாக அறிவின்கண் மிக்குத் தோன்றும் தெளிவும் ஆகிப் பொருந்திய பெரிய சிறகுகள் இரண்டு உளவென்றால், அவற்றைக் கொண்டு பிறவி என்கின்ற இப்பெரிய சிறைச்சாலையைக் கடத்தலைக் காட்டிலும் உயிர்க்கு இனிய செயல் யாதுளது? (யாதுமில்லை)'.

கு :—எல்லாப் பேற்றினும் சிறந்தமையின், 'வீடு' சிறப்பெனப் பட்டது( குறள்–31). 'அமைவரும்' ஒரு சொல்; 'பொருந்தும்' என்னும் பொருளது. பொருந்துதற்குக் காரணமாய துறவு எனப் பெயரெச்சம் காரணப் பெயர் கொண்டு முடிந்தது. தெரிஞ்சு, 'தெரிந்து' என்பதன் மரூஉ; காரணப்பொருளது. தெளிதல்-ஆராய்தல். திருவள்ளுவர், துறவை அடுத்து மெய்யுணர்தலை வைத்த முறைமையை உளங்கொண்டு கம்பரும் துறவை முன்னும் மெய்யுணர்தலாகிய தெளிவைப் பின்னும் வைத்த சிறப்பை ஓர்க. துறந்தார்க்கே மெய்யுணர்வு தோன்றல் எளிது என்பதும் ஓர்க.

"ஐயத்தி னீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வான நணிய துடைத்து" (குறள்-353)

என்புழிப் பரிமேலழகர் 'தெளிந்தார்க்கு' என்பதற்கு 'மெய்யுணர்ந் தார்க்கு' எனப் பொருள் வரைந்திருத்தலால் 'தெளிவு' என்பது, 'மெய் யுணர்தலே' என்பது பெறப்படும். உயிராகிய பறவை, உடம்பாகிய சிறையினின்றும் பறந்து சென்று உய்ய வேண்டுமாயின், துறவும் மெய் யுணர்வும் ஆகிய சிறகுகள் வேண்டும். அச்சிறகுகள் உளவாயபோது அவற்றைக் கொண்டு பறந்து சிறைகடந்து செல்வதைக் காட்டிலும் உயிர்க்கு இனிய செயல் பிறிதில்லை என்பதை விளக்கியவாறு. பிறவி என்னும் இவ்விருஞ்சிறை என்றது எடுத்த உடம்பை. 'பிறவி' என்பது ஆகுபெயராய்ப் பிறந்த உடம்பை யுணர்த்திற்று. துறவும் மெய்யுணர்வும் கைவரப்பெற்ற உயிர் இறைவனை அடையாது தடைசெய்திருக்கும்

இயல்பு கருதி, உடம்பை இருஞ்சிறை என்றார். "உடலிது களைந்திட் டொல்லை யும்பர் தந்தருளு போற்றி" (திருவாசகம்-64) என மணிவாசகப்பெருமான் இறைவனை யடைதற்குத் தடையாய் நின்ற உடம்பைக் களைந்திட வேண்டுவதும் காண்க. மேற்பாடலில் காரண காரியத் தொடர்ச்சியாய்க் கரையின்றிவரும் எல்லாப் பிறவிகளையும் நினைந்து "பிறப்பென்னும் பெருங்கடல்" என்றார். இங்கு எடுத்த பிறவியை மட்டும் கூறினர். (21)

1421. இனியது போலுமிவ் வரசை யெண்ணுமோ
துனிவரு நலனெனத் தொடர்ந்து தோற்கலா
நனிவரு பெரும்பகை நவையி னீங்கியத்
தனியர சாட்சியிற் றாழு முள்ளமே.

'இனியது போலும் இவ் அரசை எண்ணுமோ
துனி வரும் நலன் எனத் தொடர்ந்து ? தோற்கலா
நனி வரு பெரும் பகை நவையின் நீங்கி, அத்
தனி அரசாட்சியில் தாழும் உள்ளமே ?'

பொ :—'யார்க்கும் தோற்காமல் மிகுதிப்பட்டு வருகின்ற ஐம்புலப் பெரும்பகையாகிய குற்றத்தினின்றும் நீங்கி அந்த ஒப்பற்ற வீட்டுலக அரசாட்சியில் படிந்த உள்ளம், இனியதுபோலக் காணப்படும் இவ்வுலக அரசாட்சியை நெருங்கி வருகின்ற இன்பமுடையது எனத் தொடர்ந்து எண்ணிக் கொண்டிருக்குமோ ? (எண்ணாதுகாண்.)'

கு :—புலப்பகைக்குத் தோற்றோரே பலராதலின் அப்பகையின் வீறு தோன்ற, 'தோற்கலா நனிவரு பெரும்பகை' எனச் சிறப்பித்தார். உள்ளம் அரசைத் தொடர்ந்து எண்ணுமோ என இயைக்க. பெரும் பகை யென்றது, ஐம்புல ஆசையாகிய பகையை. துனி, துன்னி என்பதன் இடைக்குறை. அரசாட்சியின் உண்மையியல்பு அறியாத இளமைக் காலத்து ஆயின் அது நீங்காத இன்பமுடையது என மயக்க உணர்ச்சியால் எண்ணியிருக்கலாம்; அறுபதினாயிரமாண்டு, ஆண்டு அந்தமில் இன்பத் தரசாளத்துணிந்த இத் தெளிந்த நிலையிலும் உள்ளம் அவ்வாறே தொடர்ந்து எண்ணுமோ ? எண்ணாது என்றான். அரசு இனியது போலத் தோன்றி இன்னாமை பயத்தலின் "இனியதுபோலு மிவ்வரசை" என்றான். (22)

**1422.** உம்மையா னுடைமையி னுலகம் யாவையும்
செம்மையி னோம்பிநல் லறமுஞ் செய்தனென்
இம்மையி னுதவிநல் லிசைந டாயநீர்
அம்மையு முதவுதற் கமைய வேண்டுமால்.

'உம்மை யான் உடைமையின் உலகம் யாவையும்
செம்மையின் ஓம்பி நல் அறமும் செய்தனென்;
இம்மையின் உதவி நல் இசை நடாய நீர்,
அம்மையும் உதவுதற்கு அமைய வேண்டுமால்.'

பொ :—'யான் உங்களை அமைச்சராகப் பெற்றிருத்தலால், உலகம் முழுமையையும் செம்மையாகப் பாதுகாத்து, நல்ல தருமத்தையும் செய்தேன்; இவ்வாறு இப்பிறவியில் உதவிசெய்து என் நல்லபுகழை உலகெலாம் பரப்பிய நீர், மறுமையின்பத்தையும் யான்பெற உதவிபுரிதற்கு மனம் பொருந்தல் வேண்டும்.'

கு :—செம்மை-நேர்மை, ஓம்பி-காத்து. நல்லறம்: தானமும் ஈகையும் வேள்வியும் ஆம். "தானக் கையார் புனலால் நனையாதன கையுமில்லை", "ஈந்தே கடந்தான் இரப்போர்கடல்" "யாரும் செய்யாத யாகம் இவன் செய்து மறந்த" என இவன் செய்த நல்லறங்களைப்பற்றி அரசியற் படலத்து விரித்துள்ளமை காண்க. இம்மை-இப்பிறவி. அம்மை-மறுமையின்பம். சூழ்வார் கண்ணாக மன்னன் ஆட்சி செய்ய வேண்டியிருத்தலின் உலகை யோம்புதற்கும் அறம் செய்தற்கும் அமைச்சரே தக்க துணையாயினர் என அவரைச் சிறப்பித்தவாறு. (23)

**1423.** இழைத்ததீ வினையையுங்
கடக்க வெண்ணுதல்
தழைத்தபே ரருளுடைத்
தவத்தி னாகுமேல்
குழைத்ததோ ரமுதுடைக்
கோர நீக்கிவே
றழைத்ததீ விடத்தினை
யருந்த லாகுமோ.

'இழைத்த தீவினையையும் கடக்க எண்ணுதல்,
தழைத்த பேர் அருளுடைத் தவத்தின் ஆகுமேல்,
குழைத்தது ஓர் அமுது உடைக் கோரம் நீக்கி, வேறு
அழைத்த தீ விடத்தினை அருந்தல் ஆகுமோ?'

பொ :—‘ பல பிறவியினும் செய்துகொண்ட தீவினையையும் (நுகர்ச்சி யின்றிக்) கடத்தற்கு எண்ணுதல் மிக்க பேரருளையே சிறப்பாகக் கொண்ட தவத்தினல் ஆகும் என்றல், அத்தவத்தினைச் செய்யாது, இனியவற்றைச் சேர்த்துக் குழைத்த அமுதத்தையுடைய வட்டிலை வேண்டாம் என்று நீக்கிவிட்டு அதற்கு மாறுபட்டதாய்ச் சொல்லப்படுகின்ற கொடிய நஞ்சினை அருந்துதல்போல அரசினைத் தாங்கி யிருத்தல் பொருந்துமோ? (பொருந்தாது.)

கு :—தீவினை தன்பயனை ஊட்டாது கழியாது எனினும், “ தவத்தின் முன் நில்லாதாம் பாவம் ” (நாலடி-51) என்றலின் அதைக் கடக்கலாம் என்ற உறுதியுள்ளபோது அத்தவத்தையன்றே செய்தல் வேண்டும்! அதைச் செய்யாது, மேலும் பலபிறவியெடுத்தற்குரிய வினைகளைச் செய்துகொண்டு, அரசியலை மேற்கொண்டிருத்தல், அமுதத்தை விடுத்து நஞ்சு அயில்வதுபோலும் என்பது கருத்து. ‘ தவத்தினைச் செய்யாது அரசியலை மேற்கொண்டிருத்தல்’ என்ற உவமேயத்தைக் கூருது உவமானத்தினை மட்டும் கூறியது, ஒட்டணியின்பாற்படும். தீவினைகளை அழித்து முத்தியையும் கொடுக்கின்ற தவத்திற்குப் பிணி மூப்புக்களை ஒழித்து மரணமிலாப் பெருவாழ்வையும் கொடுக்கின்ற ‘ அமுதம் ’ உவமை. உயிர் உயர்ந்த பயனை யெய்தாவாறு தடுக்கின்ற அரசியலுக்கு, அங்ஙனம் செய்கின்ற நஞ்சு உவமை. உண்டார் உயிரை உடம்பிலிருந்து பிரித்து, மேல் நல்லற முதலியன செய்யாது தடுப்பது நஞ்சு. இல்லறத்திற்கு அன்பு உரித்தாதல் போலத் தவத்திற்கு அருள் உரிமைச் சிறப்புடையது. ஆதலின், ‘தழைத்த பேரருளுடைத்தவம்’ என்ருர். கோரம்-வட்டில். வேறு அழைத்தல், அமுதத்திற்கு மாறுபட்டதெனச் சொல்லுதல். அழைத்த - ‘கொணரச் செய்த’ எனினும் ஆம். ‘ தீவினையையும்’ என்புழி உம்மை உயர்வு சிறப்பு. கடத்தற்கருமை யுணர்த்திநின்றது. இப் பாடல் தவத்தின் உயர்வை உணர்த்திற்று. (24)

**1424.** கச்சையங் கடகரிக் கழுத்தின் கண்ணுறப்
பிச்சமுங் கவிகையும் பெய்யு மின்னிழல்
நிச்சய மன்றெனி னெடிது நாளுண்ட
எச்சிலை நுகருவ தின்ப மாகுமோ.

‘கச்சை அம் கட கரிக் கழுத்தின்கண் உறப்
பிச்சமும் கவிகையும் பெய்யும் இன் நிழல்
நிச்சயம் அன்று எனின், நெடிது நாள் உண்ட
எச்சிலை நுகருவது இன்பம் ஆகுமோ ?’

பொ :—‘கச்சையையுடைய அழகிய மதயானையின் கழுத்தின்கண் பொருந்த, பீலிக்குஞ்சமும் கொற்றக்குடையும் பெய்கின்ற இனிய நிழலில் உலாவி வருகின்ற அரசச் செல்வம் என்றும் நிலைத்திருக்கும் என்பது நிச்சயம் அன்று என்றால், பன்னெடு நாட்களாக நுகர்ந்து கழித்த, அவ் வெச்சிலை மீண்டும் நுகர்வது இன்பம் ஆகுமா ? (ஆகாது.)’

கு :—கச்சை - யானைக் கழுத்திடுகயிறு. பிச்சம் - மயிற்பீலியாலாய குஞ்சம். கவிகை-குடை. இன்னிழலிலிருந்து உலாவருதற்குக் காரணமான அரசச் செல்வத்தை ஆகுபெயரான் ‘இன்னிழல்’ என்றான். ‘குடைநிழலிருந்து குஞ்சர மூர்ந்தோர், நடைமெலிந் தோரூர் நண்ணினும் நண்ணுவர்’ என்பவாகலின், “இன்னிழல் நிச்சயமன்றெனின்” என்றான். எச்சில் போன்ற அரசச் செல்வத்தை எச்சில் என்றது மாட்டேறு இல்லாத உருவகம். அறுபதினாயிரம் ஆண்டுகள் ஆண்டனுபவித்த செல்வமே ஆதலின், “நெடிது நாளுண்ட எச்சில்” என்றான். இனிமை மிக்கனவும் நெடிது துய்த்தால் வெறுப்பைத் தோற்றுவிக்கும் என்பதை,

“நீர் நீடாடிற் கண்ணுஞ் சிவக்கும்
ஆர்ந்தோர் வாயிற் றேனும் புளிக்கும்” (குறுந்-354)

என்பதால் அறியலாம். இதனால் செல்வம் நிலையாமை கூறியவாறு. (25)

**1425.** மைந்தரை யின்மையின்
வரம்பில் காலமும்
நொந்தனெ னிராமனென்
னோவை நீக்குவான்
வந்தன னினியவன்
வருந்த யான்பிழைத்
துய்ந்தனென் போவதோ
ருறுதி யெண்ணினேன்.

‘மைந்தரை இன்மையின் வரம்பு இல் காலமும்
நொந்தனென், இராமன் என் நோவை நீக்குவான்
வந்தனன்; இனி அவன் வருந்த, யான் பிழைத்து
உய்ந்தனென் போவது ஓர் உறுதி எண்ணினேன்.’

பொ :—‘மக்கள் இல்லாமையால் அளவுகடந்த என் வாழ்நாளெல்லாம் துன்புற்றேன்; இராமன், என் துன்பத்தை நீக்கும்பொருட்டு என் மகனாக வந்து பிறந்துள்ளான்; இனிமேல் அவன் அரசுச்சுமையை யேற்று வருந்த, யான் அச்சுமை தாங்குவதினின்றும் தப்பி உய்ந்து போவதாகிய ஓர் உறுதியை எண்ணினேன்’

கு :—''மக்களை யில்லோர்க்குப், பயக்குறையில்லைத்தாம் வாழுநாளே' (புறநா—188) என்பதால் தயரதனுக்கு இருந்த பொதுத்துன்பத்தினும், தனக்குப்பின் இவ்வுலகையாள மகனில்லையே என்ற சிறப்புத் துன்பமே மிக்கிருந்தது என்பதை: ''பிறிதொரு குறையிலை யெற்பின் வையகம் மறுகுறு மென்பதோர் மறுக்க முண்டரோ" (பால-182) என்ற அவன் கூற்றுனே அறியலாம். அறுபதினுயிரம் ஆண்டுகளையே, 'வரம்பில் காலம்' என்முன். இராமன் மகவிலாத் துன்பத்தை நீக்குவதோடு அரச பாரந் தாங்கியிருக்கின்ற என் துன்பத்தையும் நீக்குவதற்காக வந்து பிறந்துளான் என்றுன். மகிழ்விப்பவன் என்ற பொருளையுடைய 'இராமன்' என்ற பெயரைத் தாங்கியதற்கேற்ப "நோவை நீக்குவான் வந்தனன்" என்றுன். அவன் வருந்தலாவது அரச பாரத்தைத் தாங்கித் துன்புறல். உய்ந்தனென் போதலாவது, துறவு மேற்கொண்டு தவம்புரிதல். "உய்ந்தனென்" முற்றெச்சம். இதனல் தனக்குப்பின் அரசாள இராமன் உளன் என்பதை உணர்த்தியவாறு.

இப்பாடலில் குறிப்பால் பின்னிகழ்ச்சியும் ஒருவாறு அறிவிக்கப்படுகின்றது. "இனியவன் வருந்த" என்பதற்கு "இனி இராமன் கூனுஞ் சிறிய கோத்தாயும் கொடுமையிழைப்பக் கோல் துறந்து கானும் கடலும் கடந்து வருந்த" என்றும், "யான் பிழைத்துய்ந்தனென் போவதோருறுதி" என்பதற்கு இராமன் வனம்புகுந்ததும் யான் இவ்வாழ்க்கையினின்றும் தப்பி மறுமையுலகிற்குப் போகின்றதாகிய ஓருறுதியை எண்ணினேன் என்றும் பொருள் கொள்ளுமாறு அமைந்திருத்தல் காண்க. (26)

**1426.** இறந்திலன் செருக்களத்
திராமன் றாதைதான்
அறந்தலை நிரம்பமூப்
படைந்த பின்னரும்
துறந்தில னென்பதோர்
சொல்லுண் டானபின்
பிறந்தில னென்பதிற்
பிறிதுண் டாகுமோ?

'இறந்திலன் செருக் களத்து இராமன்தாதை தான்
அறம் தலை நிரம்ப மூப்பு அடைந்த பின்னரும்
துறந்திலன் என்பது ஓர் சொல் உண்டான பின்
பிறந்திலன் என்பதில் பிறிது உண்டாகுமோ?'

பொ :—'இராமன் தந்தையாகிய தயரதன் போர்க்களத்தில் இறந்துபடவுமில்லை, மூப்பு அடைந்த பிறகும் அறம் தலை நிரம்புமாறு துறவு

அடையவுமில்லை, என்ற ஒரு சொல் உண்டாகுமாயின் அதன் பின் யான், (பிறவியின் பயனை யெய்தாமையின்) பிறக்கவில்லை என்பதைக் காட்டிலும் பிறிது ஒரு சிறப்பு உண்டாகுமோ? (உண்டாகாது.)'

கு :—செருக்களத்து இறத்தலாவது, பகைவர்தம் படைக்கலங்களால் விழுப்புண் பட்டு இறத்தல். மன்னனுகப் பிறந்தமைக் கேற்பப் போர்க் களத்து இறத்தலே சிறப்புடைமையின் அதனை முதற்கண் கூறினுர். போர்க்களத்து இறத்தலின் சிறப்பை : "நோற்ருேர் மன்ற தாமே கூற்றம், கோளுற விளியாது பிறர்கொள விளிந்தோர்" (அகநா-61) எனத் தெளிவித்தல் காண்க. இராமன் தந்தை தசரதன் என்பதே பொருத்தமாகும். என்னை? இராமன் தொடர்பால் தயரதன் உலகத் தவரால் நன்குணரப்படுகின்ருன் ஆதலின். எல்லாவாற்ருனும் சிறந்த இராமன் தாதை இவ்வாறு வாழ்வின் பயனை யெய்தாமற்போனுன் என்பதில் வரும் இழிவே பெரிதாகலின் 'இராமன் ருதைதான்' என்ருன். காலமுண்டாகத் துறக்கவேண்டியிருக்க, மூப்படைந்த பின்னரும் துறந்திலன் என்பதனுல் இழிவு பெரிதாயிற்று. 'பின்னரும்' என்ற உம்மை இழிவு சிறப்பும்மை. 'அறந்தலை நிரம்பத் துறந்திலன்' என்க. அறம், இல்லறம் துறவறம் என இருவகை நிலைகளையுடையது. இரண்டையும் புரிந்தோரே நிரம்பிய அறத்தினர் ஆவர். தயரதன் அறுபதினுயிரம் ஆண்டுகளாகப் புரிந்தது இல்லறமே ஆதலின் நிரம்பா அறத்தினனே ஆவான். அறந்தலை நிரம்பவேண்டுமாயின் துறந்திடுதல் வேண்டும். இதை விளக்கவே 'அறந்தலை நிரம்பத் துறந்திலன்' என்ருர். துறவறவியல் முன்னுரையில் பரிமேலழகர், "இல்லறத்தின் வழுவா தொழுகி அறிவுடையராய்ப் பிறப்பினை அஞ்சி வீடுபேற்றின்பொருட்டுத் துறந்தார்க்குரித்தாய அறம்" என விளக்கியிருத்தல் இங்கு நினைத்தற்குரியது.

"ஒட்டிய பகைஞர்" என்னும் பாடலில் பொதுவகையாற்கூறிய கருத்தைச் சிறப்புவகையால் தன்னெடு சேர்த்துத் தயரதன் கூறுகின்ருன். இதனுல் பிறவியின் பயன் துறவடைதலே என்பதை விளக்கினுன். "துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார்கொல், மற்றையவர்க டவம்" (குறள்-263) என்புழி எல்லோரும் துறவு பூண்டு தவமேற்கொள்ள வேண்டியவர்களே என்பதை வற்புறுத்தி யிருத்தல் காண்க. பிறவியின் பயனுகக்கருதுவதொன்றைச் செய்யாதார் பிறவாதவராகவே கருதல் உண்டு என்பதை, "பேசாத நாளெல்லாம் பிறவா நாளே" (அப்பர் தே-6-1-1) என்றதால் அறியலாம். "பிறந்திலன் பரதன் நீ பெற்றதாலென்ருன்" (மந்தரைசூழ்ச்சி-56) என்பதும் காண்க. (27)

1427. பெருமக னென்வயிற் பிறக்கச் சீதையாம்
திருமகண் மணவினை தெரியக் கண்டயான்
அருமக னிறைகுணத் தவனி மாதெனும்
ஒருமகண் மணமுங்கண் டுவப்ப வுன்னினேன்.

'பெருமகன் என்வயின் பிறக்கச் சீதையாம்
திருமகள் மணவினை தெரியக் கண்ட யான் ,
அருமகன், நிறை குணத்து அவனிமாது எனும்
ஒருமகள் மணமும் கண்டு உவப்ப உன்னினேன்.'

பொ :—'இராமனாகிய பெருமகன் என்னிடத்தில் பிறத்தலால் சீதையாகிய திருமகளின் திருமணவினையைக் கண்களாரத் தெரியக் கண்டயான், அரிய அம்மகன், நிறைந்த குணத்தையுடைய பூமிதேவி என்கின்ற ஒரு மகளை மணக்கும் மணமாகிய முடிசூட்டு விழாவையும் கண்டு மகிழ எண்ணினேன்'.

கு :—திருமால் என்னும் கருத்தால், 'பெருமகன்' என்றார். பூமியைப் பெண்ணாகக் கூறும் மரபுபற்றி, 'அவனிமாதெனும் ஒரு மகள்' என்றார். அவள்மணமாவது பூமிக்குத்தலைவனாய் முடிசூடுதல். சிந்தாமணியிலும் சீவகன் முடிசூடிய நிகழ்ச்சியைக் கூறும் வழி "களிக்கயன் மழைக்கட், பொருவில் பூமகட் புணர்ந்தனன்" (2368) எனக் குறிப்பிடுதல் காண்க. திருமாலுக்குச் சீதேவியும் பூதேவியும் மனைவியர் ஆதலின் அவ்வியைபும் விளக்கியவாறு. (28)

1428. நிவப்புறு நிலனெனு நிரம்பு நங்கையும்
சிவப்புறு மலர்மிசைச் சிறந்த செல்வியும்
உவப்புறு கணவனை யுயிரி னெய்திய
தவப்பயன் றாழ்ப்பது தரும மன்றரோ.

'நிவப்பு உறு நிலன் எனும் நிரம்பும் நங்கையும்,
சிவப்பு உறு மலர்மிசைச் சிறந்த செல்வியும்,
உவப்பு உறு கணவனை உயிரின் எய்திய
தவப் பயன் தாழ்ப்பது தருமம் அன்று அரோ.'

பொ :—உயர்வு பொருந்திய நிலம் என்கின்ற பொறுமைக் குணம் நிரம்பப் பெற்ற நங்கையும் செந்தாமரை மலரில் சிறப்புற வீற்றிருக்கும் செல்வத்திற்குரிய திருமகளும் மகிழ்ச்சியோடு மணந்துற்ற கணவனாகிய திருமாலை என் உயிர் போன்ற மகனாக அடைந்த தவப்பயனை நிறைவேற்றாது தாமதிப்பது அறம் அன்று.

கு :—தன்கண் வித்தியது ஆயிரமாக விளைவித்துச் செல்வத்தைக் கொடுத்துப் பசிப்பிணி போக்குகின்ற உயர்ச்சி பற்றி, 'நிவப்புறு நிலன்' என்றார். இட்டார் பெரியராதல் இயல்பன்றோ? நிரம்புதல், பொறுமை முதலிய குணங்களால் நிரம்புதல். பூதேவியும் சீதேவியும் மகிழ்தற்குரிய கணவனாகிய திருமாலை மகனாகப் பெற்றதன் பயன், தன் அரசை அவனுக்குக் கொடுத்துத் தான் துறவு பூணுதலே ஆதலின் அப் பயன் விரைந்தெய்தாமல் தாழ்ப்பது அறன் அன்று என்றான். தயரதன் இராமபிரானுக்கு முடிசூட்ட விரைதற்குக் காரணம், தன் முதுமைப் பருவ மட்டுமன்றித் தான் கண்ட தீக்கனாக்களும் தீய உற்பாதங்களும் தனக்கு மரணம் வருதலையோ முடிசூட்டுவிழாவிற்குத் தடைவருதலையோ காட்டுவ தாகக் கருதியமையே யாகும் என வான்மீகம் கூறும்.

நில நங்கையும் செந்தாமரைச் செல்வியும் தம் கணவனாகிய இராம பிரானை உயிர்போல எய்துதற்குக் காரணமான அவர் தவப்பயனை விரைந்து நிறைவேற்றாது தாமதிப்பது தருமமன்று என்றும் பொருள் கொள்ளலாம். மேல் இராமனுக்கு முடிசூடக் கருதியதைத் தெரிவித்த தயரதன் இப்பாடலில் அதை விரைந்து செய்தல் வேண்டும் என்பதை வற்புறுத்தினான். (29)

1429. ஆதலா லிராமனுக்
கரசை நல்கியிப்
பேதைமைத் தாய்வரும்
பிறப்பை நீக்குவான்
மாதவந் தொடங்கிய
வனத்தை நண்ணுவேன்
யாதுநுங் கருத்தென
வினைய கூறினான்.

'ஆதலால் இராமனுக்கு அரசை நல்கி, இப்
பேதைமைத்து ஆய் வரும் பிறப்பை நீக்குவான்,
மா தவம் தொடங்கிய வனத்தை நண்ணுவேன்;
யாது நும் கருத்து?' என இனைய கூறினான்.

பொ :—'ஆதலால் இராமனுக்கு இவ்வரசைக் கொடுத்துவிட்டுப் பேதைமையாகிய காரணத்தை உடையதாய்வரும் இப்பிறப்பை நீக்குவதற்காகப் பெரிய தவத்தை மேற்கொள்ள வனத்தை அடைவேனாக உள்ளேன்; அதுபற்றி நும் கருத்து யாது?' என இத்தன்மையானவற்றைக் கூறினான்.

கு :—'என்னுணர்வனையநீர் இனிது கேட்கெண' (1411) என்றஎச்சம், இப்பாடலில் 'கூறினன்' என்ற வினையோடு முடிந்தது. 'நல்கி மாதவம் தொடங்கிய வனத்தை நண்ணுவேன்' என்று இயைக்க. பேதைமைத் தாய் வரும் பிறப்பு - பேதைமையாகிய காரணத்தையுடையதாய் வரும் பிறப்பு. "பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னுஞ், செம் பொருள் காண்ப தறிவு" (குறள்-358) என்ற குறளை உளங்கொண்டு கூறியது; 'பேதைமையென்னும் வித்திற் பிறந்து' (சீவகசிந்தா-1389.) என்பதும் காண்க. 'தொடங்கிய' என்பது, 'செய்யிய' என்னும் வாய் பாட்டு வினையெச்சம். பிறப்பு நீங்கச் செம்பொருள் காண்பதற்கு வழி மாதவமே ஆதலின் 'மாதவம் தொடங்கிய' என்றார். இராமனுக்கு இள வரசுப் பட்டம் கட்ட எண்ணியதாகவே முதல்நூல் கூறும். (30)

## மன்னன் மாற்றம் கேட்ட அமைச்சர் நிலை

1430. திரண்ட தோளின னிப்படிச்
★ செப்பலுஞ் சிந்தை
புரண்டு மீதிடப் பொங்கிய
வுவகைய ராங்கே
வெருண்டு மன்னவன் பிரிவெனும்
விம்முறு நிலையால்
இரண்டு கன்றினுக் கிரங்குமோ
ராவென விருந்தார்.

திரண்ட தோளினன் இப்படிச் செப்பலும், சிந்தை
புரண்டு மீது இடப் பொங்கிய உவகையர், ஆங்கே
வெருண்டு, மன்னவன் பிரிவு எனும் விம்முறும் நிலையால்,
இரண்டு கன்றினுக்கு இரங்கும் ஓர் ஆ என இருந்தார்.

பொ :—திரண்ட தோள்களையுடைய தயரதன் இவ்வாறு சொல்லியவுடன் உள்ளத்தினின்றும் எழுந்து மேல் புரண்டு வழியுமாறு பொங்கிய மகிழ்ச்சியுடையராய அமைச்சர், அப்பொழுதே மன்னவன் பிரிவு என்கின்ற வருந்துதற்குரிய நிலைமையால், மனம் நடுங்கி, இரண்டு கன்றினுக்கும் இரங்குகின்ற ஒரு பசுப்போல இருவகையான உணர்ச்சியுடையராய் இருந்தார்.

கு :—அரசுச்சுமை தாங்குவதற்குரிய உரனுடைமை தோன்ற, 'திரண்ட தோளினன்' என்றார். 'இராமனுக் கரசைநல்கி' என்றவுடன் மகிழ்ச்சிமிக்க அமைச்சர்கள், 'மாதவந் தொடங்கிய வனத்தை நண்ணு

வேன்' என்றதை நினைந்து துன்புற்று அஞ்சினர் என்க. உவகைச் சுவையும் அவலச்சுவையும் கணத்திற்குள் அடுத்து அடுத்துத் தோன்றி னமையுணர்த்த 'ஆங்கே' என்றார். விம்முறல்-துன்பம் உறுதல். வெருண்டு-அஞ்சி. இரண்டாவது கன்றினை யீன்ற பசு, புதிதாகத் தன்பால் தோன்றிய கன்றினுக்குப் பால் கொடுப்பதில் இரக்கமிக்கதாயி னும், மூத்த கன்று பிரிய நேர்ந்தமை நினைந்து அதற்காகவும் மனமிரங் கும் தன்மையது. முன்னையது இன்ப இரக்கம்; பின்னையது துன்ப இரக் கம். இராமன் முடிசூடுவான் என்பதில் உவகையும் தயரதன் பிரிவானே என்பதில் துன்பமும் ஒருகாலத்தில் அமைச்சர்கள் உள்ளத்தில் இடம் பெற்றமைக்கு இரண்டு கன்றினுக்கு இரங்கும் ஆ உவமையாயிற்று. அப்பசு அவ்வாறிரங்கினும் மூத்தகன்றினை விடுத்தலும் இளங்கன்றினைத் தழுவுதலும் இயல்பாதல்போல அமைச்சரும் இராமனை அரசனாக ஏற்றுத் தயரதனைப் பிரிய வேண்டியவர்களே என்பது வரும் பாடலால் விளங்கும். ஒருகாலத்து இரண்டு உணர்ச்சி பெறுதல், 'இன்னலு முவகையு மிரண்டு மெய்தினன்' (ஆரணிய-அயோமுகிப்-86.) "இரண்டு கன்றரீஇ வெரு வரு மாவெனத் தாயும் விம்மினள்" (நகர்நீங்கு-150) என்பவற்றாலும் அறியலாம். (31)

### மன்னன் கருத்திற்கு அமைச்சர் இசைதல்

1431. அன்ன ராயினு மரசனுக்
கதுவல துறுதி
பின்ன ரில்லெனக் கருதியும்
பெருநில வரைப்பில்
மன்னு மன்னுயிர்க் கிராமனின்
மன்னவ ரில்லை
என்ன வுன்னியும் விதியது
வலியினு மிசைந்தார்.

அன்னர் ஆயினும், அரசனுக்கு அது அலது உறுதி
பின்னர் இல் எனக் கருதியும், பெருநில வரைப்பில்
மன்னும் மன் உயிர்க்கு இராமனின் மன்னவர் இல்லை
என்ன உன்னியும், விதியது வலியினும், இசைந்தார்.

பொ :—(அமைச்சர்) அத்தன்மையர் ஆயினும், மன்னனுக்கு அத் துறவல்லது பின் ஒருறுதி இல்லை எனக் கருதியும், பெரிய நிலவுலகத் தில் நிலைபெற்ற நிலைபேறுடைய உயிர்கட்கு இராமனைக் காட்டிலும் சிறந்த மன்னவர் இல்லை என்று கருதியும், விதியின் வலியாலும், தயரதன் சொல்லுக்கு உடன்பட்டார்கள்.

கு:—தயரதன் பிரிவிற்கு வருந்திய அமைச்சர், மீண்டும் உடன் பட்டமைக்கு மூன்று காரணம் காட்டியவாறு. தயரதனுக்குத் துறவல்லது வேறு உறுதியின்மையால் அவன் துறவடைய ஒத்துக்கொண்டாலும் தயரதனுக்குப் பின் வேறொருவர்க்கு முடிசூட்டுமாறு அமைச்சர்கள் கூறியிருக்கலாம். அவ்வாறு அவர் கூறாமைக்குக் காரணம், "மன்னுயிர்க் கிராமனின் மன்னவரில்லை" என்பதே ஆம். ஊழின்பெருவலி தோன்ற அதனை இறுதிக் காரணமாகக் கூறினர். (32)

## வசிட்டன் மொழியத் தொடங்கல்

1432. இருந்த மந்திரக் கிழவர
தெண்ணமுந் தன்பால்
பரிந்த சிந்தையம் மன்னவன்
கருதிய பயனும்
பொருந்து மன்னுயிர்க் குறுதியும்
பொதுவுற நோக்கித்
தெரிந்து நான்மறைத் திசைமுகன்
றிருமகன் செப்பும்.

இருந்த மந்திரக் கிழவரது எண்ணமும், தன்பால்
பரிந்த சிந்தை அம் மன்னவன் கருதிய பயனும்,
பொருந்தும் மன்உயிர்க்கு உறுதியும், பொது உற நோக்கித்
தெரிந்து, நான்மறைத் திசைமுகன் திருமகன் செப்பும்.

பொ:—(தயரதன் சொல்லுக்கு உடன்பட்டமை தோன்ற) பேசாதிருந்த மந்திரிமார்களின் எண்ணமும், தன்னுயிரின்பால் இரக்கம் கொண்ட சிந்தையையுடைய அத் தயரதன் கருதிய பயனும் இந் நிலவுலகில் பொருந்திய நிலைபேறுடைய உயிர்கட்கு உறுதியாவதும் நடுவு நிலையாக நின்று ஆராய்ந்து தெளிந்து, நான்கு வேதங்களைக் கூறிய நான்முகன் திருமகனாகிய வசிட்டன் சொல்லுவான்.

கு:—பேசாதிருந்தமை தோன்ற, 'இருந்த மந்திரக் கிழவர்' என்றார். மந்திரக்கிழவர் அறுபதினாயிரரேனும் அவர்தம் எண்ணம் ஒன்றே ஆதலின், 'கிழவரது எண்ணமும்' என ஆறனுருமையுருபு கொடுத்துக் கூறினர். "அறுபதினாயிரரெனினு மாண்டகைக்கு உறுதியில் ஒன்றிவர்க் குணர்வென் றுன்னலாம்." (மந்திரப்—10) என முன்னர்க் கூறியதும் காண்க. "மன்னுயிர்க் குறுவதே செய்து வைகினேன், என்னுயிர்க் குறுவதுஞ் செய்ய வெண்ணினேன்" (மந்திரம்-14) எனத் தயரதன்

முன்னர்க் கூறியதை எண்ணி "தன்பால் பரிந்த சிந்தை யம்மன்னவன்" என்ருர். தன்பால் பரிதலாவது தன்னுயிர்க் குறுவதாகிய தவஞ்செய்ய எண்ணுதல். "தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார்" (குறள்—266) என்பது நோக்குக. பயனுவது, வீடுபேறு. 'தனியரசாட்சி' எனவும் 'அம்மை' எனவும் இதனையே முன்னர்க் குறித்தார். நோக்குதல்-மனத்தான் ஆராய்தல்; 'நோக்கல் நோக்கம்' என்பர் தொல்காப்பியர். தெரிந்து - தெளிந்து, வசிட்டன் வார்த்தைகளை வேதவாக்கியமாகவே எண்ணலாம் என்பது தோன்ற, 'நான்மறைத் திசைமுகன் திருமகன்' என்ருர். இது கருத்துடையடை கொளியணி. (33)

## வசிட்டன் வாய்மொழி 1433-1439

**1433.** நிருப நின்குல மன்னவர்
நேமிபண் டுருட்டிப்
பெருமை யெய்தினர் யாவரே
யிராமனைப் பெற்ருர்
கரும மேயிது கற்றுணர்ந்
தோய்க்கினிக் கடவ
தரும மும்மிது தக்கதே
நினைத்தனை தகவோய்.

'நிருப ! நின் குல மன்னவர் நேமி பண்டு உருட்டிப்
பெருமை எய்தினர் யாவரே இராமனைப் பெற்ருர் ?
கருமமே இது ; கற்று உணர்ந்தோய்க்கு இனிக் கடவ
தருமமும் இது ; தக்கதே நினைத்தனை, தகவோய் !'

பொ :—'அரசே ! நடுவுநிலைமையுடையவனே ! நின் குலத்துத் தோன்றினவராய் ஆணைச்சக்கரத்தைப் பண்டெல்லாம் உருட்டிப் பெருமை அடைந்தோருள் யார் இராமனைப் பெற்ருர்கள் ? (யாரும் பெருத பேறு நினக்குக்கிடைத்துள்ளபோது) அவ்விராமனுக்கு முடிசூட்டலாகிய இது செய்யவேண்டிய கருமமேயாகும் ; உயர்ந்த ஞான நூல்களை யெல்லாம் கற்று ஐயமறத் தெளிந்துள்ள உனக்கு இனிச் செய்யத் தக்கதாகிய தருமமும் இத் துறவுதான் ; தக்கதே நினைத்தாய்.'

கு :—இராமனைப் போன்ற குண நலமுடைய மக்களைப் பெருதிருந்தும் நின் குலத்து மன்னர், 'தம் குலப் புதல்வரே தரணி தாங்கப் போய் வெங் குலப் புலன் கெட வீடு நண்ணினர்' என்ருல், அவ்விராமனை மகனுகப் பெற்ற நீ இது செய்தல் தக்க கருமமே என்பதில் ஐயமில்லை என்றவாறு. தன் புதல்வற்கு முடி சூட்டலைக் 'கருமம்' எனவும், தான் துறவு பூண

லேத் 'தருமம்' எனவும் கூறிய சொல்லமைதியை ஓர்க. கற்றதனுலாய பயன் இறைவன் நற்ருள் தொழுதலே ஆதலின், அத் தாள் தொழும் தவத்தை மேற்கொள்ளும் தயரதன் செயலே, "கற்றுணர்ந்தோய்க் கினிக் கடவ தருமமுமிது" என்று புகழ்ந்தான். தகவு - நடுவுநிலேமை. (குறள்—114). (34)

1434. புண்ணி யந்தொடர் வேள்விகள்
யாவையும் புரிந்த
அண்ண லேயினி யருந்தவ
மியற்றவு மடுக்கும்
வண்ண மேகலே நிலமகண்
மற்றுனேப் பிரிந்து
கண்ணி ழந்தில ளெனச்செயு
நீதந்த கழலோன்.

'புண்ணியம் தொடர் வேள்விகள் யாவையும் புரிந்த
அண்ணலே! இனி அருந்தவம் இயற்றவும் அடுக்கும்'
வண்ண மேகலே நிலமகள் மற்று உனேப் பிரிந்து
கண் இழந்திலள் எனச் செயும், நீ தந்த கழலோன்.'

பொ :—'புண்ணியம் தொடர்தற்குக் காரணமான வேள்விகள் எல்லாவற்றையும் குறைவறப் புரிந்த பெருமையுடையோனே! இனி அப்புண்ணியஞ் செய்த பயிற்சி மிகுதியானே அரிதாய தவத்தைச் செய்தலும் பொருந்தும்; நீ பெற்ற வீரக் கழலணிந்த இராமபிரான் அழகிய (கடலாகிய) மேகலேயணிந்த நிலமாகிய பெண், நின்னேப் பிரிந்தமையால் கண்ணே இழந்துவிடவில்லே என்று உலகம் புகழுமாறு அரசு செய்வான்,

கு :—ஒரு பிறவியில் செய்த அறம், வரும் பிறவிகள்தோறும் தொடர்ந்து பயன் அளிக்கும் இயல்பு தோன்ற, 'புண்ணியம் தொடர் வேள்விகள்' என்ருன். "யாரும் செய்யாத யாகம் இவன் செய்து மறந்த" (பால—170) என்றதற்கேற்ப இங்கும் "வேள்விகள் யாவையும் புரிந்த" என்ருர். புண்ணியப் பயன் உடைமை தோன்ற 'அண்ணலே' என்ருர். பெரும்புண்ணிய முடையார்க்கன்றிப் பாவம் தேய்தலும் அறியாமை நீங்குதலும் நிலேயாமை யுணர்தலும் வீட்டின்கண் விருப்புற்றுத் துறத்தலும் கூடாமைபற்றி, "வேள்விகள் யாவையும் புரிந்த அண்ணலே இனி அருந் தவம் இயற்றவும் அடுக்கும்" என்ருன். "யான் துறந்தால் எனக்குப் பின் அரசாட்சி என்னுமோ என நீ கவலே கொள்ளாவாறு நின்மகன் இராம பிரான் அரசாள்வான் என்பான், "நிலமகள் மற்றுனேப் பிரிந்து கண்ணிழந்

திலள் எனச் செயும்' என்ருன். நிலமகளின் கண்போன்று சிறந்த நீ துறந்துவிடினும் நின்மகன் நின்னைப்போன்றே அவள் கண்ணெனச் சிறந்து நின்று ஆட்சி செய்வான் என்பது தோன்றற்கு "நீ தந்த கழலோன்" என்ருன். "மகனறிவு தந்தையறிவு" (பழமொழி—145) என்பதை நினைப்பித்தவாறு. "கழலோன்" என்றது, குலப்பகையாயிருந்த பரசுராமனை வணங்குவித்த வீரத்தை நினைப்பிக்க. நிலத்தை மகள் என்பதற்கேற்ப நிலஞ்சூழ்ந்த கடலை வண்ணமேகலை ஆக்கினர். இது குறிப்புருவகம். மற்று - அசைநிலை.

'கண்ணெனப்படுவ மூன்று காவலர், கல்வி, காமர்,
விண்ணினைச் சுழலவோடும் வெய்யவன் என்னும் பேரார்
எண்ணினுட் டலைக்கண்வைத்த கண்ணஃ தில்லையாயின்
மண்ணினுக்கிருளை நீக்கும் வகை பிறிதில்லை மன்னு"
(சூளா-மந்திர-30)

என்பது ஒப்புநோக்கத்தகும். (35)

**1435.** புறத்து நாமொரு பொருளினிப்
புகல்கின்ற தெவனோ
அறத்தின் மூர்த்திவந் தவதரித்
தானென்ப தல்லால்
பிறத்தி யாவையுங் காத்தவை
பின்னுறத் துடைக்கும்
திறத்து மூவருந் திருத்திய
திருத்துமத் திறலோன்.

'புறத்து நாம் ஒரு பொருள் இனிப் புகல்கின்றது எவனோ?
அறத்தின் மூர்த்தி வந்து அவதரித்தான் என்பது அல்லால்,
பிறத்து யாவையும் காத்து அவை பின் உறத் துடைக்கும்
திறத்து மூவரும் திருத்திய திருத்தும் அத் திறலோன்.'

பொ :—'தருமமூர்த்தியாகிய திருமாலே வந்து அவதாரம் செய்துளான் என்பது மட்டுமல்லாமல், எல்லா வுயிரையும் பிறக்கச் செய்து காத்து அவற்றைப் பின்னர் அழிக்கின்ற திறமையுடைய மூவரும் செய்யும் திருந்திய செயல்களை அத்திறலோனுகிய இராமபிரான் ஒருவனே செய்து முடிப்பான்; அவன் திறமைக்குப் புறம்பாக நாம் ஒரு பொருளை இனிக் கூறுவது என்ன பயனுடையதாகும்?'

கு :—மும்மூர்த்திகள் செய்வனவற்றைத் தான் ஒருவனே செய்யும் ஆற்றலுடையவன் இராமபிரான் ஆதலின் அவன் ஆற்றலைப் புலப்

படுத்த நாம் வேறு ஒரு பொருளைக் கூறுவது மிகை என்பது கருத்து. அவதாரம் மேலிருந்து கீழிறங்குதல். அறத்தின் மூர்த்தி யென்பதற் கேற்ப, அவன் மகனாகத் தோன்றியதை, 'அவதரித்தான்' என்றான். "அவ தரித்தான் என்பதல்லால் புகல்கின்ற தெவனோ' என இயைத்துப் பொருள் கூறுவாரும் உளர். பிறந்து தன்வினை; பிறத்து பிறவினை; 'பிறப்பித்து' என்னும் பொருளது. துடைத்தல் - அழித்தல். 'பெருமகன் என் வயிற் பிறக்கச் சீதையாம் திருமகள் மணவினை தெரியக் கண்ட யான்" எனத் திருமாலின் அவதாரம் இராமபிரான் என்பதைத் தயரதனே கூறினான் ஆகலின், வசிட்டன் அதற்கு மேலும் சிறப்புண்டு என்பதை இங்கு விளக்க. அறத்தின் மூர்த்தி வந்தவதரித்தான் என்பதல்லால்... மூவரும் திருத்திய திருத்துமத் திறலோன்" என்றான். 'திருத்துதல் இங்குச் 'செய்தல்' என்னும் பொருளது. மூவராவார், அயன், அரி, அரன் என்பார். 'மூவர் காரியமுந் திருத்தும் முதல்வனை' (பெரியாழ்வார் திருமொழி—360) என்றதும் காண்க. (36)

**1436.** பொன்னு யிர்த்தபூ மடந்தையும்
புவியெனுந் திருவும்
இன்னு யிர்த்துணை யிவனென
நினைக்கின்ற விராமன்
என்னு யிர்க்கென்கை புல்லிதிங்
கிவற்பயந் தெடுத்த
உன்னு யிர்க்கென நல்லன்மன்
னுயிர்க்கெலா முரவோய்.

'பொன் உயிர்த்த பூமடந்தையும், புவி எனும் திருவும்,
இன் உயிர்த் துணை இவன் என நினைக்கின்ற இராமன்,
என் உயிர்க்கு என்கை புல்லிது; இங்கு இவற் பயந்து எடுத்த
உன் உயிர்க்கு என நல்லன், மன் உயிர்க்கு எலாம்; உரவோய்!'

பொ :—'வலிமை மிக்க மன்னனே ! பொன்னைத் தோற்றுவிக்கின்ற செந்தாமரைச் செல்வியாகிய திருமகளும், பூதேவி என்கின்ற பெரு மகளும், தமக்கு இனிய உயிர்போன்ற கணவன் இவனே என நினைக் கப்படுகின்ற இராமன், என்னுயிர்க்கு நல்லன் என்று சொல்லுதல் சிறப் பினதன்று இங்கு; இவ்விராமனைப் பெற்று வளர்த்த உன்னுயிர்க்கு எத்துணை இனியனோ அத்துணை இனியனாக இருக்கின்றான் உலகில் நிலை பெற்ற உயிர்கட்கெல்லாம்.'

கு :—செல்வத்திற்குரிய தெய்வம் திருமகளாதலின் அவளை வணங்கினோர்க்குப் பொன் முதலிய பொருள்களைத் தோற்றுவிக்கும் இயல்பு பற்றிப், 'பொன்னுயிர்த்த பூமடந்தை' என்றார். உயிர்த்தல் - தோற்றுவித்தல். பூ, செந்தாமரைப்பூ. திருமாலே இராமனாகப் பிறந்தான் என்பதை உட்கொண்டு 'இன்னுயிர்த்துணை இவன்' என நினைக்கின்றார்கள் என்றான். 'நினைக்கின்ற இராமன்' என்புழிப் பெயரெச்சம் செயப்படு பொருள் கொண்டது. தந்தைக்கு மகன் நல்லனாக இருக்கின்றான் என்பதில் சிறப்பின்மையின், 'புல்லிது' என்றார். "மறையோதுவித் திவரை வளர்த்தானும் வசிட்டன் காண்'' (பால—744) என்று கோசிகன் கூறுதலால் வசிட்டனும் கல்வித் தந்தையாதல் அறியலாம். "காதலென்றனுயிர்மேலு மிக்கரியோன் பாலுண்டால்" (பால-குலமுறை-749) எனக் கோசிகனும் இராமனை உயிரினும் சிறந்தானாக மதித்திருத்தலைக் கூறியவாறு காண்க. இராமனைப் பெற்றெடுத்த நினக்கு நல்லனாதல் போலவே மன்னுயிர்க்கெலாம் நல்லனாக விளங்குகின்றான் என எல்லோர்க்கும் இராமன் இனியனாய்த் தன் பெயர்க் காரணத்திற்கேற்ப விளங்குதலை விளக்கினான். ராமன்-எல்லோர்க்கு மகிழ்ச்சி தருபவன். "தம்மில் தம்மக்கள் அறிவுடைமை மாநிலத்து மன்னுயிர்க்கெல்லா மினிது" (குறள்-68) என்றதை உளங்கொண்டு கூறியது இப்பாடல். இராமன் அறிவுடைமை சிறப்புத் தந்தையும் பிறப்புத் தந்தையுமாகிய வசிட்டனுக்கும் தயரதனுக்கும் இனிதாதல்போலவே மாநிலத்து மன்னுயிர்க்கெல்லாம் இனிதாயிருக்கின்றமையை விளக்கியவாறு. உயிர்த்துணை - உயிர்க்குத் துணை எனினுமாம். (37)

**1437.** வார மென்னினிப் பகர்வது
வைகலு மனையான்
பேரி னல்வரு மிடையுறு
பெயர்கின்ற பயத்தால்
வீர நின்குல மைந்தனை
வேதியர் முதலோர்
யாரும் யாஞ்செய்த நல்லறப்
பயனென விருப்பார்.

"வாரம் என் இனிப் பகர்வது? வைகலும் அனையான்
பேரினால் வரும் இடையுறு பெயர்கின்ற பயத்தால்,
வீர! நின் குல மைந்தனை வேதியர் முதலோர்
யாரும், 'யாம் செய்த நல் அறப் பயன்' என இருப்பார்."

பொ :—"வீரனே ! நாள்தோறும் அவ்விராமன் பேரைக் கூறுவதனுல் வரும் இடையூறு நீங்குகின்றதாகிய பயனுடைமையால், அந்தணர் முதலிய எல்லா வருணத்தோரும், நின் குலத்துத் தோன்றிய நின்மகனை ''யாம் செய்த நல்ல தருமத்தின் பயனே இவன்" என அன்புகொண் டிருக்கின்ருர்கள் ; ஆதலால் இனி உலக மக்கள் இராமபிரானிடம் கொண் டுள்ள அன்பைப்பற்றி என்ன கூறுவது ?"

கு :—வாரம் - அன்பு; "வாரம் பட்டுழித் தீயவும் நல்லவாம்" (சீவக-888) என்புழியும் இப்பொருட்டாதல் காண்க. இடையூறு குறுகி "இடையுறு" ஆயிற்று; துன்பம் என்னும் பொருளது. இராம நாமம் தாரக மந்திரம் ஆதலை விளக்கியவாறு. "தின்மையும் பாவமும் சிதைந்து தேயுமே, சென்மமும் மரணமும் இன்றித் தீருமே, இம்மையே இராம வென்றிரண்டெழுத்தினுல்" என்பதால் அப்பெயரின் ஏற்றம் விளங்கும். இராமபிரானிடத்தில் சாதி குலம் பிறப்பென்னும் வேறுபாடு காணுது அனைவரும் அப்பெயரைப் போற்றி அப்பிரானைத் தம்முடைய புண்ணியப் பயனுகவே எண்ணுகின்றமை தோன்ற, "நின் குல மைந்தனை வேதியர் முதலோர் யாரும் யாம் செய்த நல்லறப் பயன் என இருப்பார்" என்ருர். அந்தணர் முதல் அனைவரும் அவன் பேரை மந்திரமாகவும் அவனைப் புண்ணியப் பயனுகவும் கருதுகின்ருர்கள் எனின் மக்கள் அன்பை இனிச் சொல்வது எதற்கு? சொல்லாமலே விளங்கும் என்க. (38)

**1438.** மண்ணி னுங்நல்லண் மலர்மகள்
கலைமகள் கலையூர்
பெண்ணி னுங்நல்லள் பெரும்புகழ்ச்
சனகிபே ருலகின்
கண்ணி னுங்நல்லன் கற்றவர்
கற்றிலா தவரும்
உண்ணு நீரினு முயிரினு
மவனையே யுவப்பார்.

"மண்ணினும் நல்லள் ; மலர்மகள், கலைமகள், கலையூர்
பெண்ணினும் நல்லள் ; பெரும் புகழ்ச் சனகி; பேருலகின்
கண்ணினும் நல்லன்; கற்றவர் கற்றிலாதவரும்
உண்ணும் நீரினும், உயிரினும், அவனையே உவப்பார்."

பொ :—'பெரிய புகழையுடைய சானகி, (பொறுமையால்) நிலமடந்தையினும் நல்லவள், (அழகாலும் அறிவாலும் கற்பாலும்) திருமகள் கலைமகள்; கலைமானை ஊர்தியாகக் கொண்ட மலைமகள் ஆகிய மூவரினும்

நல்லவள்; (இராமபிரானே) பெரிய உலகத்துக்குக் கண்ணினும் சிறந்தவன் ; சிறந்த நூலைக் கற்றவர்களும் கல்லாதவர்களும் தாம் உண்ணும் நீரைக்காட்டிலும் அந்நீரால் நிலைபெறும் தம்முயிரைக் காட்டிலும் அவ்விராமபிரானாகிய மன்னனையே சிறந்தானாகக் கொண்டு மகிழ்வார்கள்.'

ரு :—" நல்லோள் கணவன் " (பதிற்-61) எனவும், " காமர் கடவுளும் ஆளுங் கற்பின், சேணாறு நறுநுதற் சேயிழை கணவ " (பதிற்-65) எனவும், தேவியொடு சேர்த்து மன்னவன் கூறப்படும் மரபு பற்றியும், அரசியலில் அரசிக்கும் பங்குண்மை பற்றியும் முன்னிரண்டடிகளில் சீதையின் சிறப்பையும் பின்னிரண்டடிகளில் இராமபிரானின் சிறப்பையும் விளக்கினார். சிறையிருந்தாள் ஏற்றம் கூறும் இவ்விராமாயணத்தில் சீதையை முற்கூறியது முறையாதல் காண்க. " பிறத்தியாவையும் காத்தவை பின்னுறத் துடைக்கும், திறத்து மூவரும் திருத்திய திருத்துமத் திறலோன் " (1435) என இராமபிரான் மும்மூர்த்திகட்கும் மேலானவன் என்பதை விளக்கியது போன்றே அவன் தேவியாகிய சீதாபிராட்டியும் அம் மும்மூர்த்திகளின் தேவியரை விடச் சிறந்தவள் என்பதைக் கூறி அத்தலைவன் தலைவிக்குள்ள ஒப்புமை புலப்படுத்தியவாறு. தன் அழகாலும் குணங்களாலும் தனக்காகவைத்த வில்லின் பெருமையாலும் உலகத்தோரால் நன்கறியப் பெற்றவளாதலின் ' பெரும்புகழ்ச் சனகி ' என்றார்.

இராமபிரான் உலகுயிர்க்குக் கண்போல் சிறந்தவன் என்பார், " பேருலகின் கண்ணினும் நல்லன்" என்றார். இக்கருத்தே பற்றி " நிலமகள் மற்றுனைப் பிரிந்து கண்ணிழந்திலள் எனச் செயும் நீதந்த கழலோன்" (1434) என முன்னும் கூறியதை நினைக்க. கைப்பூணுக்குக் கண்ணாடி வேண்டாதவாறு போலக் கண்முன் தோன்றும் இராமன் பெருமையை உணர்ந்து அன்புசெய்யக் கல்வியாகிய துணையும் வேண்டா என்பது விளக்க, " கற்றவர் கற்றிலாதவரும்...அவனையே யுவப்பார் " என்றார். அவ்விருதிறத்தார்க்கும் ஒப்ப அருள் செய்தற்குரிய அவன் பெருந்தன்மையும் அவர் உவகைக்குக் காரணமாகும். " நீரின்றமையா யாக்கை " (புறநா-18) என்று சிறப்பிக்கப்படும் உண்ணும் நீரைக் காட்டிலும், மக்கட்கு மன்னனாகும் இராமபிரான் சிறந்தமையின் " உண்ணு நீரினும் அவனையே உவப்பார் " என்றார். உயிரைவிடச் சிறந்தபொருள் யார்க்கும் இல்லையாயினும், உலகுக்கே உயிராய மன்னன், தம்முயிரினும் சிறந்தமைபற்றி " உயிரினும் அவனையே யுவப்பார் " என்றார். " இன்னுயிர்க்கு மின்னுயிராய் இருநிலங்காத்தார்"(குலமுறை-7) என்பது காண்க. இனி, "உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே " (புறநா-18) என்று உண்டியை உயிராகக் கூறிய ஒற்றுமைகருதி உண்டியையே இங்கு ' உயிர் ' என்று ஆகுபெயரால் சிறப்பித்தார் என்று கொண்டு உண்ணு நீரினும் உணவினும் அவனையே உவப்பார் என்று பொருள் கூறலுமாம்.

"நெல்லு முயிரன்றே நீரு முயிரன்றே
மன்னன் உயிர்த்தே மலர்தலை யுலகம்" (புறநா-186)

என்ற பாடல் இப்பொருளுக்குத் துணையாதல் காண்க. இங்கு நெல் என்றது உணவை. உணவையும் நீரையும் உயிராகக் கொள்வதினும் அவ்விரண்டையும் உண்டாக்கித்தரும் செங்கோல் வேந்தனே உலகுக்கு உயிர் என்பதே சிறப்புடைத்து என்பது கருத்து. "மன்னனுயிர்த்து'' என்ற கருத்து, உயிரையாக்கும் நெல்லும் நீரும் உளவாவது மன்னன் முறை செய்து காப்பின் என்றதாம்" என்ற பழைய உரையும் நோக்குக. நெல்லைக்காட்டிலும் நீரைக்காட்டிலும் மன்னனே உயிர் எனற்குச் சிறந் தவன் என்ற இப்புறப்பாட்டின் கருத்தையே உளங்கொண்டு கம்பர். "உண்ணுநீரினு முயிரினு மவனையே யுவப்பார்" என்று கூறினர், இராமன் மன்னன் என்னும் கருத்திற்கேற்பக் கூறியவை இவை.

இனி, இராமன் பரம்பொருள் என்ற நினைவொடு நோக்குங்கால், தம்முயிர்க்குயிராய கடவுள் இராமபிரானே ஆதலின் "உயிரினும் உவப் பார்" என்றதாகக் கொள்ளலாம். "என்னிலாரும் எனக் கினியாரில்லை, என்னினும் இனியான் ஒருவன் உளன்" (5-21-1) என்ற அப்பர் அடிக ளின் வாக்கும், "உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையும் எல் லாம் கண்ணன்" (திருவாய்மொழி 6-7-1) என்ற நம்மாழ்வாரின் வாக்கும் ஈண்டு நோக்கத்தகும்.

இப்பாடல் "மண்ணினல்லவண்ணம் வாழலாம்" என்ற தேவாரப் பாசுர அடிகளை நினைப்பிக்கின்றது. (39)

1439. மனிதர் வானவர் மற்றுளோ
ரற்றங்காத் தளிப்பார்
இனியிம் மன்னுயிர்க் கிராமனிற்
சிறந்தவ ரில்லை
அனைய தாதலி னரசநிற்
குறுபொரு ளறியில்
புனித மாதவ மல்லதொன்
றில்லெனப் புகன்றான்.

"மனிதர் வானவர் மற்று உளோர் அற்றம் காத்து அளிப்பார், இனி இம் மன் உயிர்க்கு இராமனில் சிறந்தவர் இல்லை; அனையது ஆதலின், அரச! நிற்கு உறு பொருள் அறியில், புனித மாதவம் அல்லது ஒன்று இல்''எனப் புகன்றான்.

பொ :—'அரச! மக்களும் தேவரும் மற்றுமுள்ள நாகரும் ஆகிய இந்த நிலைபேறுடைய உயிர்களுக்கு வரும் துன்பங்களை வராமல் காத்து அருள் செய்கின்றவர்கள் இராமனைக் காட்டிலும் சிறந்தவர் இல்லை. அரசு அவ்வாறு இராமனை யெதிர்நோக்கியதாக இருத்தலின் நினக்குப் பொருந்தும் செயல் யாது? என ஆராயின், "தூய பெரிய தவம் அல்லது வேறொன்றும் இல்லை" எனச் சொன்னான்.

கு :—மற்றுளார் என்றது, நாகரை. அற்றம்-துன்பம், "அற்றம் அழிவுரைப்பினும்" (தொல் - பொருள் - 150) என்புழியும் 'அற்றம்' அப் பொருட்டாதல் நச்சினார்க்கினியர் உரையான் உணரலாம். அற்றம் காத்தலாவது துன்பம் வாராமல் தடுத்துக் காத்தல். மற்றுளாராகிய இம் மன்னுயிர் என இயைக்க. 'அனையது' என்றது, "அரசு இராமனையே எதிர்நோக்கி யிருக்கின்ற அத்தன்மையது" என்னும் பொருளது. உற்ற நோய் நோன்று உயிர்க்குறுகண் செய்யாத தவம் ஆதலின், "புனித மாதவம்" எனப்பட்டது. வேண்டிய வேண்டியாங்கு எய்தும் பயத்தது ஆதலின் 'மாதவம்' எனப்பட்டது. 'நிருப நின்குல' என்ற செய்யுள் தொடங்கி இச்செய்யுள்வரையுள்ள ஏழு செய்யுட்களில் வசிட்டன், தயரதன் கருத்தை உடன்பட்டுக் கூறினான். (40)

## வசிட்டன் வாய்மொழியால் தயரதன் மகிழ்தல்

**1440.** மற்ற வன்சொன்ன வாசகங்
கேட்டலு மகனைப்
பெற்ற வன்றினும் பிஞ்ஞகன்
பிடித்தவப் பெருவில்
இற்ற வன்றினு மெறிமழு
வாளவ னிழுக்கம்
உற்ற வன்றினும் பெரியதோ
ருவகைய னானான்.

மற்று அவன் சொன்ன வாசகம் கேட்டலும், மகனைப்
பெற்ற அன்றினும், பிஞ்ஞகன் பிடித்த அப் பெருவில்
இற்ற அன்றினும், எறி மழு வாளவன் இழுக்கம்
உற்ற அன்றினும் பெரியது ஓர் உவகையன் ஆனான்.

பொ :—அவ் வசிட்ட முனிவன் சொன்ன வார்த்தையைக் கேட்ட அளவில் இராமனாகிய மகனைப் பெற்ற அன்று தோன்றிய மகிழ்ச்சியைக் காட்டிலும், உருத்திரன் பிடித்த அப்பெரியவில் இராமனால் ஒடிந்த

அன்று தோன்றிய மகிழ்ச்சியைக் காட்டிலும், அவ்விராமனுல், வீசுகின்ற மழுவாளையுடைய பரசுராமன் தோல்வியுற்ற அன்று தோன்றிய மகிழ்ச்சியைக் காட்டிலும் பெரிதாகிய ஒப்பற்ற மகிழ்ச்சி யுடையவனுக ஆயினன்.

கு :—மற்று அசை. "ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன் மகனைச் சான்ருே னெனக்கேட்ட தாய்" (69) என்ற குறளின் விரிவுரை போன்றது இச்செய்யுள். பத்துத் திங்கள் சுமந்து வயிறுளைந்தீன்ற சிறப்புடைமையின் தாய்மேல் வைத்துக் கூறினுராயினும், தன் மகனைச் சான்ருேன் எனச் சான்ருேர் சொல்லக்கேட்ட தந்தை உவப்பதையும் வள்ளுவர் உடன்பட்டவரே என்பது விளங்கக் கம்பர் இங்ஙனம் கூறியுள்ளார். அக்குறளையே விரித்தார் என்றறிதற்கு முத்திரை யிட்டது போலப் 'பெரிதுவக்கும்' என்ற சொல்லைப் "பெரியதோருவகையன் ஆனுன்" எனவும் "ஈன்ற பொழுதில்" என்பதை 'மகனைப் பெற்ற அன்றினும்' எனவும், 'கேட்ட' என்பதைக் கேட்டலும் எனவும், அக்குறளில் உள்ள சொல்லையும் பொருளையும் சுவைபட ஆண்டிருத்தல் காண்க. இங்ஙனமே கம்பர், திருவள்ளுவர் மொழிபொருளேயன்றி அவர் மொழியும் பொன்னேபோல் போற்றியாளும் இடங்கள் மிகப்பல; அவை வந்துழி வந்துழிக் காட்டுதும். உரிய பருவத்தில் மகனைப் பெற்ருர் மகிழ்ச்சியினும் மைந்தரை யின்மையின் வரம்பில் காலமும் நொந்து பின் வேள்வி செய்து மகனைப் பெற்ற மகிழ்ச்சி மிகப் பெரிதாதலும், அம்மகன் 'அன்று முதலின்றளவும் ஆருமந்தச் சிலையருகு சென்றுமிலர் போயொளித்த தேர் வேந்தர் திரிந்துமிலர்' என்று சிறப்பிக்கப்பட்டதும், மும்மூர்த்தியரி லொருவனுகிய உருத்திரன் பிடித்ததுமாகிய பெரிய வில்லை ஒடித்தான் என்பது அறிந்தபொழுது அவன் ஆற்றல்சால் வீரம் நினைந்தும், அதை ஒடித்தமையால் தக்க மருமகள் வாய்க்கின்ருள் என்பதை நினைந்தும் கொண்ட மகிழ்ச்சி அதனினும் பெரிதாதலும், தன் குலத்திற்கே மாற்றுனய் அடிக்கடி அச்சுறுத்திக் கொண்டிருந்த பரசுராமன் தோல்வியுற்றதைக் கண்ணுரக்கண்ட மகிழ்ச்சி அதனினும் பெரிதாதலும் தெளிவு. இராமனுக்கு மறையோதுவித்து அறிவு வளரச்செய்த அறிவு சான்ற வசிட்டமுனிவன் வாக்கினுல் "உன்னுயிர்க்கென நல்லன் மன்னுயிர்க்கெலாம்" என இராமன், அன்பும் ஒப்புரவு முடைமையும் "மனிதர் வானவர் மற்றுளார் அற்றங் காத்தளிப்பார் இனி யிம்மன்னுயிர்க் கிராமனில் சிறந்தவரில்லை" என அவன் கண்ணேட்டம் உடைமையும், "வேதியர் முதலோர் யாரும் யாஞ்செய்த நல்லறப் பயனென விருப்பார்" என அவன் பழி பாவங்கட்கு அஞ்சும் நாணுடைமையும், 'உண்ணு நீரினும் உயிரினும் அவனையே யுவப்பார்' என அவன், உள்ளத்தால் பொய்யாது ஒழுகி உலகத்தார் உள்ளத்துள் எல்லாம் இருக்கும் வாய்மையுடைமையும் கூறி, இராமபிரான் சான்ருேன் என்பதை விளக்கிப் புகழ்ந்த பொழுது தயரதனுக்கு உளதாய மகிழ்ச்சி முன்னையவற்றிற்கெல்லாம் பெரிதாதல் அறிக.

"அன்பு நாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மையோ டைந்துசால் பூன்றிய தூண்" (குறள் 983) என்றபடி இவ்வைந்தும் இராமபிரானிடம் இருப்பதை வசிட்டமுனிவர் குறிப்பாக விளக்கி, அவன் சான்றோனுதலை வலியுறுத்தினுர் என்க. இராமபிரானின் இளமை தொடங்கி அவன் குணத்தொடு பழகிய பேரறிஞன் வசிட்டனுகலின் அவ்விராமனைச் சான்றோன் எனற்குரியார் வசிட்டனிற் சிறந்தோர் பிறரின்மையும் உணர்க. பிஞ்ஞகன்-பிஞ்ஞகம் என்னும் மயிற்பீலியாலாய தலைக்கோலத்தை யுடைய உருத்திரன். மகனைப்பெற்ற மகிழ்ச்சி தன்னலம் பற்றியதாதலும், பிஞ்ஞகன் பிடித்த பெருவில் இறுத்த நிகழ்ச்சியும் அத்தகையதேயாதலும், எறிமழுவாளவன் இழுக்க முற்ற நிகழ்ச்சி உலக அரசர்க்கெல்லாம் நன்மைசெய்ததாதலின் பிறர் நலம் பற்றியதாதலும் சான்றோனுகிய வசிட்டன் வாக்கினுல் நல்லன் என்று புகழ்ந்து கூறப்பட்ட சொல் இராமபிரானின் உயிரினுஞ் சிறந்த ஒழுக்கத்தை யுணர்த்துவதாய் முன் கூறிய எல்லாவற்றினும் சிறந்ததாதலும் பற்றி அதைக் கேட்டலும் பெரியதோர் உவகையன் ஆனுன் என்க. (41)

## மன்னன் வசிட்டனைப் பாராட்டுதல் 1441-1442

**1441.** அனைய தாகிய உவகையன்
கண்கணீ ரரும்ப
முனிவன் மாமலர்ப் பாதங்கண்
முறைமையி னிறைஞ்சி
இனிய சொல்லினை யெம்பெரு
மானருள் விழியின்
தனிய ஞனிலந் தாங்கிய
தவற்கிது தகாதோ.

அனையது ஆகிய உவகையன், கண்கள் நீர் அரும்ப,
முனிவன் மாமலர்ப் பாதங்கள் முறைமையின் இறைஞ்சி,
'இனிய சொல்லினை; எம்பெருமான் அருள் விழியின்
தனியன் நானிலம் தாங்கியது; அவற்கு இது தகாதோ ?'

பொ :—அத்தன்மையான மகிழ்ச்சியுடையவனுகிய தயரதன் கண்களில் உவகைக்கலுழ்ச்சியாகிய நீர் தோன்ற, வசிட்ட முனிவனுடைய சிறந்த தாமரை மலர் போன்ற பாதங்களை முறைப்படி வணங்கி, 'இனிய சொற்களையே சொன்னுய்; தனியனுகிய யான் நானிலத்தைத் தாங்கியது, எம்பெருமானுகிய நினது அருள் விழி நோக்கினுலாகும்; அவ்வருள் நோக்காலாகிய இப்பெருமைகள் அவ்விராமபிரானுக்கும் பொருந்தாதோ? (பொருந்தும்.)'

கு :—உவகையன், வினைக்குறிப்புப் பெயர். 'உவகையன் கண்கள் நீர்' என்றமையால் 'உவகைக் கலுழ்ச்சி' ஆதல் பெற்றும். முறைமையின் இறைஞ்சலாவது, ஐந்துறுப்பும் எட்டுறுப்பும் நிலத்துற வணங்குவது. வசிட்டன் புகழ்ச்சியெல்லாம் தன் மகற்கு ஏற்றதே என்று உடம்பட்டிருப்பது, தற்புகழ்ச்சிக்குடம்பட்டிருப்பதாகும்; ஆதலின் இராமபிரான் சிறப்பெல்லாம் நும் அருட் பார்வையாலாயதே என அச்சிறப்பை வசிட்டற்கு உரித்தாக்கினுன் தயரதன் என்க. தான் ஆண்டதும் தன்திறமையினுலன்று, வசிட்டன் அருள் நோக்கின் ஆற்றலால்தான் என்பதை எடுத்துக்காட்டி, அந்நோக்கம் இராமபிரானுக்கும் பொருந்தும் என்பதை விளக்கினுன். நானிலம், முல்லையும் குறிஞ்சியும் மருதமும் நெய்தலும் என்ற நான்கு நிலங்களையுடைய பூமி. பாலைத்திணைக்கு நிலம் தொல்காப்பியர் கூறிற்றிலர். "தனியன் நால் நிலந் தாங்கியது" என்புழித் தாங்குதற் கருமையை, நான்கு என்னும் எண் உணர்த்தியது. தனியன் தனிநிலம் தாங்குவதன்றி நால்நிலம் தாங்குவது அருமையன்றே? 'இறைஞ்சி' என்னும் வினையெச்சம், அடுத்த செய்யுளில் 'உரைசெய்து மகிழ்ந்தான்' என்பது கொண்டு முடியும், இது குளகம். **(42)**

**1442.** எந்தை நீயுவந் திதஞ்சொல
வெங்குலத் தரசர்
அந்த மில்லரும் பெரும்புக
ழவனியி னிறுவி
முந்து வேள்வியு முடித்துத்தம்
மிருவினை முடித்தார்
வந்த தவ்வரு ளெனக்குமென்
றுரைசெய்து மகிழ்ந்தான்.

'எந்தை நீ உவந்து இதம் சொல, எம் குலத்து அரசர்,
அந்தம் இல் அரும் பெரும் புகழ் அவனியில் நிறுவி,
முந்து வேள்வியும் முடித்துத் தம் இருவினை முடித்தார்;
வந்தது அவ்வருள் எனக்கும்' என்று உரைசெய்து மகிழ்ந்தான்.

பொ :—"எம் தந்தையாகிய நீ மகிழ்ந்து இனியவற்றை யெடுத்துச் சொல்ல, எம் குலத்து முன் தோன்றிய அரசர்கள், எல்லையில்லாத அரிய பெரிய புகழை இவ்வுலகில் நிலைபெறச்செய்து முதன்மையான வேள்விகளையும் செய்து முடித்துப் பின் தம்முடைய இருவினைகளையும் முடித்து விட்டார்கள்; அவ்வருள் எனக்கும் வந்தது;" என்று சொல்லி மகிழ்ந்தான்.

கு :—குருவையும் தந்தையாகக் கூறும் மரபு பற்றிக் குருவாகிய வசிட்ட முனிவனை "எந்தை நீ" என்றான். இதஞ் சொலல்-இதமானவை இவையென்று சொல்லுதல். தக்க இன்ன, தகாதன இன்ன, என இருதிறமும் கூறுதற்குக் குரு உரியராயினும் தக்கன கூறவே மற்றைய தகாதன என்பது விளங்குதல் பற்றி, "இதஞ்சொல" என்று மட்டும் கூறினார். முந்து வேள்வி, பரிமேதம் முதலிய சிறந்த வேள்விகள். தவஞ் செய்து வீடுபெற்றார் என்பதை, 'இருவினை முடித்து' என்பதனால் தெரிவித்தார். வினைமுடித்தல் தவத்தானன்றிக் கூடாமை உணர்க. "சார் புணர்ந்து சார்புகெட வொழுகின் மற்றழித்துச் சார்தரா சார்தரு நோய்" (குறள்-359) என்பதும் காண்க. "வந்தது, அவ்வருள்" என்றது தான் தவஞ்செய்ய வசிட்டமுனிவன் உடன்பட்டமை உணர்த்திற்று. எனக்கும் என்புழி உம்மை இறந்தது தழீஇயது. 'மகிழ்ச்சி' தன் கருமமாகிய தவஞ்செய்ய வாய்த்தமைகருதி. (43)

### சுமந்திரன் சொல்லத் தொடங்குதல்

1443. பழுதின் மாதவன் பின்னொன்றும்
பணித்தில னிருந்தான்
முழுது மெண்ணுறு மந்திரக்
கிழவர்தம் முகத்தால்
எழுதி நீட்டிய விங்கித
மிறைமகற் கேறத்
தொழுத கையினன் சுமந்திரன்
முன்னின்று சொல்லும்.

பழுது இல் மாதவன் பின் ஒன்றும் பணித்திலன் இருந்தான்;
முழுதும் எண்ணுறும் மந்திரக்கிழவர், தம் முகத்தால்
எழுதி நீட்டிய இங்கிதம், இறைமகற்கு ஏறத்
தொழுத கையினன், சுமந்திரன், முன் நின்று சொல்லும்.

பொ :—குற்றமற்ற பெரிய தவத்தினனாகிய வசிட்ட முனிவன், பின்னர் ஒன்றும் பேசாமல் இருந்தான்; அரசியலுக்குரியவை முழுதும் குறைவற ஆராய்கின்ற மந்திரிகள், தம்முடைய முகமாகிய ஓலையில் எழுதி நீட்டிய குறிப்பினைத் தயரத மன்னவனுக்கு விளங்குமாறு, சுமந்திரன் தொழுதகையினனாய் முன்நின்று சொல்லுவான்.

கு :—'பழுது' ஆவது, காமம் முதலியவற்றால் தவம் இடையறவுபடல். அஃது ஒருவாற்றானும் வசிட்டனுக்கு இன்மையின் அவனைப்

'பழுதில் மாதவன்' என்ருர். கூறவேண்டியவற்றைக் கூறி முடித்தமையின் பின்னர் ஒன்றும் கூருமல் இருந்தான். எழுதி என்ற வினையால் முகமாகிய ஓலையில் என்பது உணரவைத்தது, குறிப்புருவகம். இங்கிதம்-குறிப்பின் நிகழும் உறுப்பின் தொழில். 'கையினன்' குறிப்புமுற்றெச்சம். சொல்லுபவன் சுமந்திரனே ஆயினும் அமைச்சர்கள் எல்லோருடைய குறிப்பையும் உணர்ந்தே சொல்லுகின்ருன் என்பது கருத்து. (44)

### சுமந்திரன் கூற்று 1444-1445

1444. உறத்த கும்மர சிராமற்கென்
றுவக்கின்ற மனத்தைத்
துறத்தி நீயெனுஞ் சொற்சுடு
நின்குலத் தொல்லோர்
மறத்தல் செய்கிலாத் தருமத்தை
மறப்பதும் வழக்கன்
றறத்தி னூங்கினிக் கொடிதென
லாவதொன் றியாதே.

"உறத் தகும் அரசு இராமற்கு என்று
உவக்கின்ற மனத்தைத்
துறத்தி நீ எனும் சொல் சுடும்;
நின்குலத் தொல்லோர்
மறத்தல் செய்கிலாத் தருமத்தை
மறப்பதும் வழக்கு அன்று;
அறத்தின் ஊங்கு இனிக் கொடிது எனல்
ஆவது ஒன்று யாதே?"

பொ :—"அரசு, இராமனுக்கு உரியதாய்ப் பொருந்தல் தகும் என்று மகிழ்கின்ற மனத்தை, நீ துறக்கின்ருய் என்கின்ற சொல் சுடாநிற்கும்; நின் குலத்துப் பிறந்த முன்னேர்கள் மறவாத அறத்தை மறப்பதும் முறையன்று. அறத்தைக் காட்டிலும் கொடியது என்று சொல்லுதற்குரியது இனி யாது உளது? (யாதும் இல்லை.)"

கு :—உவக்கின்ற மனத்தைச் சுடுகின்ற சொல்லை அறம் நோக்கி யேற்றுக்கொள்ளவேண்டியிருத்தலின் அறத்தினும் கொடியது ஒன்று இல்லை என்ருன். தயரதனைப் பிரிகின்ற பெருந்துன்பத்தைப் பயத்தலின் அறமே கொடிது என்று வெறுத்துக் கூறுகின்ருன். "ஒ கொடிதே அற மென்னும்" (கைகேசி சூழ்-21) எனத் தயரதன் பின்னர்க் கூறுவதும்

காண்க. துறத்திநீ என்னும் சொல் சுடுவதாகக் கூறியது, பிரிவையுண் டாக்குதல் பற்றி. "பசைந்தாரிற் றீர்தலில் தீப்புகுதல் நன்று" (நான் மணிக்கடிகை-15) என அன்புடையார்ப் பிரிவு தீயினும் சாலச்சுடுதலே யுணர்த்தியுள்ளமை காண்க. தொல்லோர் மறத்தல் செய்கிலாத் தரும மாவது, தன் குலப் புதல்வர் தரணிதாங்கப் போய் வன்புலப்பகைவெலத் தவஞ்செய்தல். ஊங்கு-மேம்பட்டது. (45)

1445. புரைசை மாக்கரி நிருபர்க்கும்
புரத்துறை வோர்க்கும்
உரைசெய் மந்திரக் கிழவர்க்கு
முனிவர்க்கு முள்ளம்
முரைச மார்ப்பநின் முதன்மணிப்
புதல்வனை முறையால்
அரைச னுக்கிப்பின் னப்புறத்
தடுத்தது புரிவாய்.

"புரைசை மாக்கரி நிருபர்க்கும், புரத்து உறைவோர்க்கும்,
உரைசெய் மந்திரக் கிழவர்க்கும், முனிவர்க்கும், உள்ளம்
முரைசம் ஆர்ப்ப, நின் முதல் மணிப் புதல்வனை முறையால்
அரைசன் ஆக்கிப் பின் அப்புறத்து அடுத்தது புரிவாய்."

பொ :—'கழுத்திடு கயிறு தாங்கிய பெரிய யானைப்படையுடைய மன்னர்க்கும், நகரத்தில் வசிக்கின்றவர்க்கும், வரும்பொருள் உரைக்கும் மந்திரிகட்கும் முனிவர்க்கும் மகிழ்ச்சியால் உள்ளம் முரசுபோல் அடித்துக் கொண்டு ஆரவாரம் செய்யுமாறு நின்னுடைய நீலமணி போன்ற நிறத்தையுடைய முதல்புதல்வனுகிய இராமனை முறையால் அரசன் ஆக்கிப் பின்னர் அப்புறத்துப் பொருந்தியதாகிய தவத்தினைச் செய்வாய்.'

கு :—முரசு, அரசு என்பன எதுகை நோக்கி முரைசு, அரைசு என அகரத்திற்கு ஐகாரம் போலியாய் வந்தது. புரம் - அயோத்திநகரம். உள்ளம் மகிழ்ச்சியால் துள்ள என்பார், 'முரைச மார்ப்ப' என்ருர். முறையாவது, மூத்தவர்க் குரித்து அரசு என்பது. முடிசூட்டலும், முடி துறந்து தவஞ்செயச் செல்லுதலும் ஆகிய இரண்டினுள், ஒன்றை முன்னர்க்கூறினமையின் மற்ருென்று, அப்புறத்து அடுத்ததாயிற்று. "தவம் புரிவாய்" என்று சொல்லுதற்கும் விருப்பமின்றி இங்ஙனம் கூறினுன். 'மற்றையதொன்றும் மறவென்ருன்' (கைகேசி சூழ்-28) என்றதும் காண்க. இல்லறத்திற்கு அப்புறத்தது துறவறம் ஆதலின் அங்ஙனம் கூறினுன் எனினுமாம். (46)

## தயரதன் இராமனைக் கொண்டுவரச் சுமந்திரனை அனுப்புதல்

**1446.** என்ற வாசகம் சுமந்திர
 னியம்பலு மிறைவன்
நன்று சொல்லினை நம்பியை
 நளிமுடி சூட்டி
நின்று நின்றது செய்வது
 விரைவினி னீயே
சென்று கொண்டணை திருமகள்
 கொழுநனை யென்றான்.

என்ற வாசகம் சுமந்திரன் இயம்பலும், இறைவன்,
'நன்று சொல்லினை; நம்பியை நளிமுடி சூட்டி
நின்று, நின்றது செய்வது; விரைவினில் நீயே
சென்று, கொண்டுஅணை திருமகள் கொழுநனை' என்றான்.

பொ :—மேற்கூறிய வுரைகளைச் சுமந்திரன் சொல்லியவுடன் தயரத மன்னன், "நன்று சொன்னாய் : நம்பியாகிய இராமனுக்குப் பெரிய முடியைச் சூட்டிவிட்டே எஞ்சிநின்றதாகிய தவத்தினைச் செய்வது ; நீயே விரைவினிற் சென்று திருமகள்கேள்வனாகிய இராமபிரானை அழைத்துக் கொண்டு இங்கு வருவாயாக" என்றான்.

கு :—முடி சூட்டியபின் தயரதன் துறத்தலே முறையாதலின் அமுறையை எடுத்துக் கூறிய சுமந்திரனை, 'நன்று சொல்லினை' என்றான். நம்பி - ஆடவரிற் சிறந்தோன்; இராமன். நளி - பெருமை. 'நின்று' என்பது சூட்டி என்பதற்குத் துணைவினையாய் வந்தது. சுமந்திரன் கூறியவாறு தயரதனும் 'தவஞ்செய்வதை' நின்றது என்றே குறித்தான். முடிசூட்டல் ஆகிய மங்கலச் செயல்பற்றிப் பேசுங் காலத்துத் துறத்தலைப் பற்றிப் பேசுதல் மரபன்மை பற்றி என்க. எவ்வளவு விழிப்போடு பேசினும், விதிவழி மதியாதலின் நின்று, நின்றது என்ற சொற்கள் முடிசூட்டு விழா நிகழாமல் நிற்கப் போவதைக் குறிப்பனவாகவே அமைந்துவிட்டன. 'நீயே' என்புழி ஏகாரம் பிரிநிலை. திருமகள் கொழுநன் என்றது, 'இராமன்' என்னும் பொருட்டாய்நின்றது. "திருவின் கேள்வனைக் கொணர்மின்" (பால—333) என முன்னும் வந்துளது. செய்வது தொழிற்பெயர். (47)

## சுமந்திரன் இராமனை அடைதல்

**1447.** அலங்கன் மன்னனை யடிதொழு
தவன்மன மனையான்
விலங்கன் மாளிகை வீதியில்
விரைவொடு சென்றான்
தலங்கள் யாவையும் பெற்றனன்
றானெனத் தளிர்ப்பான்
பொலன்கொ டேரொடு மிராகவன்
றிருமனை புக்கான்.

**அலங்கல் மன்னனை அடி தொழுது, அவன் மனம் அனையான்**
**விலங்கல் மாளிகை வீதியில் விரைவொடு சென்றான்,**
**தலங்கள் யாவையும் பெற்றனன் தான் எனத் தளிர்ப்பான்,**
**பொலன் கொள் தேரொடும் இராகவன் திரு மனை புக்கான்.**

பொ :—மாலையணிந்த தயரதமன்னனை அடிக்கண் விழுந்து தொழுது அம்மன்னன் மனம்போன்ற சுமந்திரன், மலையென மருளும் மாளிகைகள் நிறைந்த வீதியில் விரைவொடு சென்று, நாடுகள் எல்லாவற்றையும் தான் அரசாளப் பெற்றவன் போலப் பூரிப்பு அடைந்தவனாய்ப் பொன்னால் இயன்ற தேரோடும் இராமபிரானுடைய திருமனையை அடைந்தான்.

கு :—அலங்கல் - மாலை. தயரதன் கருத்து அறிந்து செய்யும் இயல்புபற்றிச் சுமந்திரனை, 'அவன்மன மனையான்' என்றார். 'வேந்தன் மனம்போல வந்த மகன்' (பு. வெ. 26) என்றல் காண்க. இனி, 'அனையானாய் விரைவொடு சென்றான்' என முற்றெச்சமாக்கி உரைப்பினும் அமையும். விரைவிற்கு மனம் உவமை கூறப்படுதலை, "மானுருவாக நின் மனம் பூட்டினையோ" (அகநா—384) என்பதால் அறியலாம். தயரதன் மனம்போல் விரைவொடு சேறல் சிறப்பாதல் காண்க. "மலையென மழையென மாடமோங்கி" (மலைபடு—484) என மாளிகைக்கு மலையை உவமை கூறியிருத்தல் காண்க. தலங்கள் இங்கு நாடுகள் என்னும் பொருளது. இராமராச்சியத்தில் எல்லோரும் இந்நாட்டு மன்னர்போல வேண்டிய போகம் ஈண்டப் பெறுவர் ஆதலின், சுமந்திரன் தலங்கள் யாவையும்தான் பெற்றனன்போல் மகிழ்ந்தான். 'உத்தமத் தொருவன் சென்னி விளங்கிய வுயர்பொன் மௌலி...மூவுலகத்தோர்க்கும், தத்த முச்சியின்மேல் வைத்த தொத்தெனத் தளர்வு தீர்ந்தார்.' (உயுத்த—திருமுசுட்டுப்—40) என்பதும் காண்க. தளிர்த்தல் - மகிழ்ச்சியால் உடம்பு பூரித்தல். "தத்தமக்குற்ற அரசெனத் தழைக்கின்ற மனத்தார்"

(மந்திரப்-78) எனப் பின்னர்க் கூறுவதும் காண்க. ரகுவின் வழிவந்தவ ஞதலின் இராமன், 'இராகவன்' எனப்பட்டான். சென்ருன், முற்றெச்சம். (48)

## சுமந்திரன் இராமனைக் காண்டல்

1448. பெண்ணி னின்னமு தன்னவ
டன்ஞெடும் பிரியா
வண்ண வெஞ்சிலைக் குரிசிலு
மருங்கினி திருப்ப
அண்ண லாண்டிருந் தானழ
கருநற வென்னக்
கண்ணு முள்ளமும் வண்டெனக்
களிப்புறக் கண்டான்.

பெண்ணின் இன் அமுது அன்னவள் தன்ஞெடும், பிரியா வண்ண வெம் சிலைக் குரிசிலும் மருங்கு இனிது இருப்ப, அண்ணல் ஆண்டு இருந்தான் அழகு அரு நறவு என்னக் கண்ணும் உள்ளமும் வண்டு எனக் களிப்பு உறக் கண்டான்.

பொ :—பெண்டிர்க்குள் இனிய அமுதத்தைப் போன்ற சீதாபிராட்டியும், தன்னை என்றும் பிரியாத அழகிய கொடிய வில்லை யேந்திய இலக்குவனும் இருமருங்கினும் இனிதாக இருக்க, அங்கு இருந்தவஞகிய அண்ணலின் அழகு அரிய தேஞகத் தன் கண்ணும் மனமும் வண்டு ஆகப் பருகிக் களிப்படையக் கண்டான் சுமந்திரன்.

கு :—பெண் வடிவத்தொடு தோன்றிய இனிய அமுது அனையவள் எனலுமாம். 'அலையிடைப் பிறவா அமுதே' (சிலப்-மனை-78) என்பதற்கு அடியார்க்கு நல்லார், 'அலையிடைப் பிறக்கும் அமுதிற்கு இவ்வடிவின்மையின் அதனிற் பிறவாத அமுதே என்பேஞ" எனப் பொருள்கூறி அழகிய பெண் வடிவுடன் கூடிய அமுதம் போன்றவள் கண்ணகி என்பதை விளக்கியிருத்தல் காண்க. பிரியாக் குரிசில் என்க. பிரியாமையைச் சிலைக்கேற்றலும் ஆம். அண்ணனுக்கு அல்லல் வராமல் காக்கும் கருத்தஞய் இலக்குவன் எப்பொழுதும் வில்லை யேந்திய கையோடு இருக்கும் இயல்பு இதனல் புலஞம். காட்சியால் அழகிதாகவும் செயலால் கொடிதாகவும் இருக்கும் இயல்புதோன்ற "வண்ண வெஞ்சிலை' என்ருர். அன்னவள் தன்ஞெடும் குரிசிலும் மருங்கினிதிருப்ப எனவும், ஆண்டிருந்தாஞகிய அண்ணல்அழகு எனவும் இயைக்க. இருந்தான், வினையாலணையும் பெயர்.

'இருந்தானுகிய அண்ணல்' என இரு பெயரொட்டு ஆக்குக. இராமன் அழகைத் தேனுகவும் அவ்வழகை நுகரும் மனத்தையும் அதற்கு வாயிலாகிய கண்ணையும் வண்டாகவும் உருவகம் செய்தார். கள் உண்டமைக் கேற்பக் 'களிப்புறக் கண்டான்' என்ருர். களி, கள் குடித்த மகிழ்ச்சி· இளையபெருமாளும் பிராட்டியும் இருமருங்கிருப்ப இடையிலிருந்த இராம பிரான் அழகு, மிக்குத் தோன்றியதென்க. (49)

## இராமன் தேர்மேற்கொள்ளல்

**1449.** கண்டு கைதொழு தையவிக்
கடலிடைக் கிழவோன்
உண்டொர் காரியம் வருகென
வுரைத்தன னெனலும்
புண்ட ரீகக்கட் புரவலன்
பொருக்கென வெழுந்தோர்
கொண்டல் போலவன் கொடிநெடுந்
தேர்மிசைக் கொண்டான்.

கண்டு கைதொழுது "ஐய! இக்
கடல் இடைக் கிழவோன்
'உண்டு ஓர் காரியம், வருக' என
உரைத்தனன்" எனலும்
புண்ட ரீகக் கண் புரவலன்
பொருக்கென எழுந்து, ஓர்
கொண்டல் போல் அவன் கொடி நெடும்
தேர்மிசைக் கொண்டான்.

பொ :—அவ்வாறு கண்டு கைதொழுது, 'ஐய ! இந்தக் கடல்சூழ் உலகிற்கு உரிய சக்கரவர்த்தி, "ஓர் காரியம் உண்டு, வருக" என உரைத்தனன்' என்று சொல்லிய அளவில் தாமரை மலர்போன்ற கண்ணையுடைய இராமபிரான் விரைந்து எழுந்து ஒரு மேகம் போலச் சென்று, அச் சுமந்திரன் கொண்டுவந்த கொடிகள் கட்டியுள்ள நெடிய தேர்மேல் ஏறிக் கொண்டான்.

கு :—கிழவோன் - உரிமையுடையவன். மன்னன் ஆணை என்பது தோன்றத் 'தந்தை' என்னுது, 'கடலிடைக் கிழவோன்' என்ருன். புரவலன் - காப்பாற்றவல்ல அரசன். மன்னனுகப்போகும் நிலையை நினைந்து

'புரவலன்' என்றார். பொருக்கெனல், விரைவுககுறிப்பு. மேகம் நடந்து சென்று தேரேறுவதுபோல இருந்தது இராமன் தேரேறிய தோற்றம். (50)

## இராமன் தேரில் செல்லல்

**1450.** முறையின் மொய்ம்முகி லெனமுர
சார்த்திட மடவார்
இறைக ழன்றசங் கார்த்திட
விமையவ ரெங்கள்
குறை முடிந்ததென் றார்த்திடக்
குஞ்சியைச் சூழ்ந்த
நறைய லங்கல்வண் டார்த்திடத்
தேர்மிசை நடந்தான்.

முறையின் மொய்ம் முகில் என முரசு ஆர்த்திட, மடவார்
இறை கழன்ற சங்கு ஆர்த்திட, இமையவர் 'எங்கள்
குறை முடிந்தது' என்று ஆர்த்திடக், குஞ்சியைச் சூழ்ந்த
நறை அலங்கல் வண்டு ஆர்த்திடத் தேர்மிசை நடந்தான்.

பொ :—மழை பெய்ய நெருங்கிய மேகம்போல முறைப்படி முரசம் முழங்கவும், பெண்டிருடைய முன்கையினின்று கழன்ற சங்க வளைகள் கீழ்வீழ்தலால் ஒலியெழவும், தேவர்கள், 'எங்கள் குறை முடிந்தது' என்று ஆரவாரம் செய்யவும், குடுமியைச் சூழக் கட்டியுள்ள தேன் நிரம்பிய மலர்மாலையில் வண்டுகள் தேனையுண்டு களித்து ஆரவாரிக்கவும், தேர்மேல் சென்றான்.

கு :—முரசின் முழக்கத்திற்கு முகிலின் இடிமுழக்கம் உவமை. மொய்த்தல் - நெருங்குதல். சக்கரவர்த்தித் திருமகனார் புறப்படுங்கால் முரசறைதல் முறைமையாதலின், 'முறையின் முரசு ஆர்த்திட' என்றார். இறை - முன்கை. தேர்மிசைச் செல்லும் கார்நிறத்தண்ணலைக் கண்டு காமுற்ற பெண்டிர் தம் கருத்து முற்றுப்பெறாது மெலிதலின் முன்கையிலுள்ள வளைகள் கழன்று வீழ்ந்து ஒலியெழுப்பின. தலைவனுடைய பேரழகைச் சிறப்பிக்கவேண்டி, அவனைத் தேர்மிசை வரக்கண்ட மகளிர் காதல் கொண்டு வருந்தினர் என்று ஒருதலைக் காமத்தைக் கூறுதல் கவி மரபு. இராமபிரான் ஏகதார விரதன் ஆதலின் அவனைக் காதலித்தார் கைக்கிளையில் நிற்கவேண்டியவர்களே ஆவர். இராமன் அருட்கடலாயினும் முறையற்ற வேண்டுகோளுக்கு இணங்காதவன் என அவன்

பெருமை கூறிச் சூர்ப்பனகையின் காதலும் இவ்வாறே யாகப்போகின்ற தென்பதை முன்கூட்டியே குறிப்பித்தவாறு. தேர்மிசைச் செல்லும் இராமபிரானின் எதிர்கால நிகழ்ச்சியை யுணர்ந்தவர் ஆதலின் தேவர்கள் தங்கள் குறை முடிந்ததாக எண்ணி ஆர்த்தனர். குறை - காரியம். துணிவுபற்றி 'முடிந்தது' என இறந்தகாலத்தால் கூறினர். குஞ்சி - குடுமி. நறை - தேன். அலங்கல் - மாலை. நறையலங்கல் ஆதலின் தேனையுண்டு வண்டுகள் ஆர்த்தன. இறைகழன்ற சங்கின் ஆர்ப்பு, குறை பெருமையாலானது. இமையவரார்ப்பு, பெறுவோம் என்ற துணிவினாலாயது. வண்டின் ஆர்ப்பு, பெற்றதாலாயது. இறைவன் அருளை வேண்டும் ஆன்மாக்களும் பக்குவ வேறுபாட்டான் இங்ஙனே வெவ்வேறு நிலையவாதலைக் குறிப்பில் பெறவைத்தவாறு. (51)

## இராமனைக் கண்ட பெண்டிர் செயல்

**1451.** பணை நிரந்தன பாட்டொலி
நிரந்தன வனங்கன்
கணை நிரந்தன நாணொலி
கறங்கின நிறைப்பேர்
அணை நிரந்தன வறிவெனும்
பெரும்புன லனையார்
பிணை நிரந்தெனப் பரந்தனர்
நாணமும் பிரிந்தார்.

பணை நிரந்தன, பாட்டு ஒலி நிரந்தன; அனங்கன் கணை நிரந்தன; நாண்ஒலி கறங்கின; நிறைப் பேர் அணை நிரந்தன அறிவு எனும் பெரும்புனல்; அனையார் பிணை நிரந்து எனப் பரந்தனர், நாணமும் பிரிந்தார்.

பொ :—வாத்திய ஒலி எங்கும் பரவின; வாய்ப்பாட்டின் ஒலி எங்கும் பரவின; மன்மதன் எய்த கணைகள் ஆகிய மலர்கள் எங்கும் பரவின; மன்மதன் நாண் ஒலி எங்கும் ஒலித்தன; அம் மன்மதன் கணையேறுண்ட பெண்டிருடைய உணர்ச்சி ஆகியவெள்ளம் நிறையாகிய பெரிய அணையைக் கடந்து பரவின; அப்பெண்டிர், உயிரனைய நாணமும் பிரிந்தவராய் மான்கூட்டம் பரவி வருதல் போலப் பரவி வந்தனர்.

கு :—அனங்கன்-அங்கமில்லாதவன்; மன்மதன். மேலைச் செய்யுளில் முன்கைவளைகழன்ற மகளிரைப் பற்றிக் கூறியவர், இச்செய்யுளில் அவர்கள் மதன் கணைபட்டு ஆற்ருராய் இராமனைப் பின் தொடர்வதைக்கூறியுள்ளார். இது பெருந்திணை. நிரத்தல்-பரவுதல், மதன் தன்கணை

களால் மகளிரையெய்தபின் வெற்றி தோன்ற நாணொலி செய்தான் எனக் கொள்க. அன்றிக் கணை நிரத்தலுக்கு முன் நாணொலியைக் கூட்டினுமாம். நிறை-மனவடக்கம். உணர்ச்சி வேகத்தைத் தடுத்து நிறுத்துதல் பற்றி நிறை, 'பேரணை' எனப்பட்டது. அறிவு, ஈண்டு உணர்ச்சி என்னும் பொருளது. நிறையை அணையாக உருவகஞ் செய்தமைக்கேற்ப உணர்ச்சியை வெள்ளமாக உருவகஞ் செய்தார். பெரும்புனல்-வெள்ளம். 'அணை நிரந்தன' என்றது, அணையையும் தாண்டிப் பரவின என்னும் பொருளது. பிணை - பெண்மான். 'என' உவமையுருபு. 'பிரிந்தார்' முற்றெச்சம். பிரிந்தாராய்ப் பரந்தனர் என்க. அனங்கனுக்குக் கணையும் நாணும், மலர்களும் வண்டுமாதலின் மலர்கள் பரவியிருந்தன; அம் மலரில் வண்டுகள் தேனுண்டு ஒலி செய்தன எனலும் ஆம். (52)

**1452.** நீளெ ழுத்தொடர் வாயினுங்
குழையொடு நெகிழ்ந்த
ஆள கத்தினோ டரமியத்
தலத்தினு மலர்ந்த
வாள ரத்தவேல் வண்டொடு
கெண்டைகண் மயங்கச்
சாள ரத்தினும் பூத்தன
தாமரை மலர்கள்.

நீள் எழுத் தொடர் வாயினும் குழையொடும் நெகிழ்ந்த;
ஆளகத்திேனாடு அரமியத் தலத்தினும் அலர்ந்த;
வாள் அரத்தவேல் வண்டொடு கெண்டைகள் மயங்கச்
சாளரத்தினும் பூத்தன; தாமரை மலர்கள்.

பொ :—தாமரை மலர்கள், நீண்ட தூண்கள் தொடர்ந்து விளங்கும் வாயிலின் கண்ணும் குழையென்னும் காதணியுடன் மலர்ந்தன; நிலா முற்றத்திலும், கூந்தலோடு மலர்ந்தன; சன்னல்களிலும் வாளும் குருதி தோய்ந்த வேலும் வண்டும் கெண்டையும் தம்மிடத்தில் கலக்கப் பூத்தன.

கு :—பெண்டிர், வாயிலிலும் முற்றத்திலும் சன்னலிலும் நின்று மகிழ்ச்சியுடன் பார்த்தனர் என்க. தாமரை மலர்போன்ற முகத்தைத் தாமரைமலர்கள் என்றார், உவமை ஆகுபெயரான். வாய்-வாயில், எழு-தூண். வாயிலில் உள்ள நற்றூணைப் பற்றிநின்று பார்க்கும் பெண்டிர் இயல்பு தோன்ற எழுத்தொடர் வாயில் கூறினர். அளகம் நீட்டல் விகாரத்தான் ஆளகம் ஆயிற்று. பெண்டிர் கண்களில் வாளை

யொத்த நீட்சியும் வேலையொத்த கூர்மையும் வண்டையொத்த மதர்ப்பும் கெண்டையையொத்த பிறழ்ச்சியும் உடைய கண்கள் உளவாதலின் 'மயங்கப்பூத்தன' என்றார். மயங்கல்-கலத்தல். வாளும் வேலும் வண்டும் கெண்டையும் கொண்டனவாய்த் தாமரை மலர்கள் நீரில் பூவாது வாயிலிலும் நிலாமுற்றத்திலும் சாளரத்திலும் பூத்தன என்றது அற்புதந் தோன்ற நின்றமையின் அற்புத உருவகவணியின் பாற்படும். "சாளரந் தோறும் தோன்றுஞ் சந்திர உதயங் கண்டார்" (பால-மிதிலைக்-14) என்றது காண்க. நெகிழ்ந்த, மலர்ந்த என்பன அன்பெறாத அகரவீற்றுப் பலவின்பால் வினைமுற்றுக்கள்.' (53)

1453. மண்ட லந்தரு மதிகெழு
மழைமுகி லனைய
அண்டர் நாயகன் வரைபுரை
யகலத்து ளலங்கல்
தொண்டை வாய்ச்சியர் நிறையொடு
நாணொடுந் தொடர்ந்த
கெண்டை யும்முள கிளைபயில்
வண்டொடுங் கிடந்த.

மண் தலம்தரு மதி கெழு மழை முகில் அனைய
அண்டர் நாயகன், வரை புரை அகலத்துள் அலங்கல்,
தொண்டை வாய்ச்சியர் நிறையொடும் நாணொடும் தொடர்ந்த
கெண்டையும் உள கிளை பயில் வண்டொடும் கிடந்த.

பொ :—மண்ணுலகம் தந்த சந்திரனைத் தன்பால் கொண்ட கார் மேகம் போன்ற இராமபிரானுடைய மலைபோன்ற மார்பகத்தில் உள்ள மலர்மாலையில், கொவ்வைக்கனியனைய செவ்வாயினையுடைய மகளிர் தம் நிறை குணத்தோடும் நாணோடும் தொடர்ந்த கெண்டையும் (கண்களும்) உள்ளன; அவை, முன்னரே அம் மாலையில் உள்ள தேனையுண்டு கைக்கிளையென்னும் இசையைப் பயில்கின்ற வண்டுகளோடும் கிடந்தன.

கு :—மதியும் மழைமுகிலும் வானத்தின் மிசையன்றி மண்ணில் வாராவாகலின், இராமபிரானின் முகமதியையும் கார்மேனியையும் "மண் தலம்தரு மதிகெழு மழைமுகில் அனைய" என்றார். இஃது அபூத உவமை. "வானத்தின் மிசையன்றி மண்ணில் வளர் மதிக் கொழுந்தை" (பெரியபு-திருஞான-பு-728) என்பது ஈண்டு நோக்கத்தகும். "சந்திரவதனமும் தாழ்ந்தகைகளும்" (பால-619) என முன்கூறியதும் காண்க. மண்டலம்,

வட்டம் எனக் கொள்வாரும் உளர். 'அண்டர் நாயகன்' என்றது, இராம பிரான் என்னும் பொருளது. அகலம்-மார்பு. உலாவருந் தலைவனைக் கண்டு காதல்கொள்ளும் மகளிர் அவன் மாலை பெறும் நோக்கத்தவர் ஆத லின் அவர்கண்கள் அலங்கலில் கிடப்பனவாயின. அவன் மாலையில் கலக்கும் பேறு பெற்றமையின் மீண்டும் வரும் எண்ணம் இன்றி அம் மாலையிலேயே கிடந்தன என்க. உள்ளம் போலப் பிரிந்து செல்ல இய லாத கண்ணையும் போக்கு வரவுடையது போலக் கூறும் வழக்குண்மை, "கண்ணுங் கொளச்சேறி நெஞ்சே" (குறள்-1244) என்பதால் அறிக. 'வண்ணம் பசந்து' (தொல்-பொருள்-202) என்ற நூற்பாவில், 'புணர்ந்த வகையில்' என்பதால் இது போன்றனவற்றை நச்சினார்க்கினி யர் அடக்கினார். நிறையும் நாணும் முன்னரே அம்மகளிரைப் பிரிந்து இராமன்பால் செல்ல அவற்றைத் தொடர்ந்தே கண் சென்றமை தோன்ற, "நிறையொடு நாணொடும் தொடர்ந்த கெண்டை" என்றார். தலைவியரைப் பிரிந்த நாண் முதலிய குணங்களைத் தலைவன் கொண்ட தாகக் கூறும் வழக்குண்மை, "சாயலு நாணும் அவர் கொண்டார்" (1183-குறள்) என்பதால் அறிக. கெண்டைபோன்ற கண்ணைக் கெண்டையென் றார். கிளை, கைக்கிளை என்பதன்முதற்குறை. ஏழிசையில் கைக்கிளையும் ஒன்றாதலின் அதை வண்டு பயில்வதாகக் கூறினார். கைக்கிளைத் திணை யால் இராமபிரான் மாலையில் கலந்து கிடக்கின்ற பெண்டிர் கண்கள், கைக்கிளை பயிலும் வண்டொடு கிடத்தல் பொருத்தமாதல் காண்க. முன்னர் மகளிர் முகத்தில் உள்ளனவாகக் கூறப்பட்ட கெண்டைகள், இங்கு இராமபிரானின் அலங்கலில் கிடப்பனவாகக் கூறினார். மாலையில் கிடந்தது கட்பார்வையே; கண் கிடந்ததாகக் கூறுவது உபசாரம். (54)

**1454.** சரிந்த பூவுள மழையொடு
கலையுறத் தாழ்வ
பரிந்த பூவுள பனிக்கடை
முத்தினம் படைப்ப
எரிந்த பூவுள விளமுலை
யிழையிடை நுழைய
விரிந்த பூவுள மீனுடை
வானின்றும் வீழ்வ.

சரிந்த பூ உள, மழையொடு கலை உறத் தாழ்வ;
பரிந்த பூ உள, பனிக்கடை முத்து இனம் படைப்ப;
எரிந்த பூ உள, இள முலை இழைஇடை நுழைய,
விரிந்த பூ உள, மீன் உடை வான் நின்றும் வீழ்வ.

பொ :—சரிந்துபோன பூமாலையுள்ள கூந்தலாகிய மேகத்தோடு முக மாகிய மதிகள் மிகவும் தாழ்ந்து குனிகின்றன; இராமனைப் பார்க்கக் குவளைப்பூக்கள் கூந்தலில் இருந்து நழுவி முகத்தில் வீழ்ந்தன போன்று உள்ளனவாகிய குளிர்ந்த கண்களின்கடை கண்ணீர்த்துளி யாகிய முத்தின்கூட்டத்தைத் தோற்றுவிக்க, அந் நீர்த்துளி பட்டு எரிந்த பூக்கள் நெருங்கிய மாலையணிந்துள்ள இளைய நகில்கள் பூரித்து அணிகலன்களுக்கு இடையில் நுழையாநிற்க, விரிந்த பூத்தொழில் செய் யப்பட்டுள்ள மின்னுகின்ற உடை ஆகாயம்போன்ற இடையில் நின்று வீழ்வனவாயின.

கு :—பூவுள மழை எனக் கூந்தலைப் புலப்படுத்தினர். கலை சினை யாகுபெயராய்ச் சந்திரனை யுணர்த்த அது உவமையாகுபெயராய் முகத்தை யுணர்த்திற்று; இருமடியாகு பெயர். உறத்தாழ்வ-மிகுதி யாகத் தாழ்வன. தெருவில் தேர்மிசைச் செல்லும் இராமபிரானைக் காணும் ஆசையால் மாடங்களில் ஏறிப் பார்க்கின்ற மகளிர் குனிந்து பார்க்கின்றனர்கள்; பார்க்கும்போது அவர்கள் கூந்தலும் மாலையும் சரிந்து காணப்படுகின்றன என்க. இது கூழைவிரித்தல் என்னும் மெய்ப்பாடு. பரிதல்- அறுதல்; இங்குக் கூந்தலிலிருந்து நழுவுதலை யுணர்த்திற்று. குவளைப்பூக்கள் முகத்தில் வந்தமைக்குக் காரணம் கூறு வார்போலப் பாலைக்கவுதமனர், "கார்மலர்கமழுந்தாழிருங் கூந்தல், ஒரீஇ யனபோல விரவுமலர் நின்று, திருமுகத்தலமரும் பெருமதர்மழைக் கண்" (பதிற்றுப்-21) என்று கூறியிருத்தல் காண்க. இது நோக்கியே கூந்தலிலிருந்து பரிந்த பூப்போன்றுள்ள கண் எனப் பொருள் கூற லாயிற்று. முத்தினம் என்றது முத்துப்போன்ற கண் நீர்த்துளியை, ஆகு பெயர். காம எரி வெதுப்புதலால் வந்த கண்ணீர் ஆதலின் மகளிர் மார் பின் மாலையிலுள்ள பூக்களை எரிக்கலாயின. ஆடையில் வினைத்திறத் தால் அமைத்த பூக்கள் ஆதலின் விரிந்தே காணப்படுதல் தோன்ற, "விரிந்த பூவுள...உடை" என்றனர். மீனுடை-மின்னுகின்ற சேலை. 'வான்' உவம ஆகுபெயராய் இடையை யுணர்த்திற்று. கூந்தல் சரித லும் கண்ணீர்துளித்தலும் உடைநெகிழ்தலும் காதல் மீக்கூர்ந்தோர்க்கு இயல்பு. மகளிர் தலையிலிருந்து பூக்கள் சரிகின்றன. சரிந்த பூப் போன்ற கண்கள் நீர்த்துளிகளைத் தோற்றுவிக்கின்றன. அத்துளிகள் மார்பிடை மாலையை வெதுப்புகின்றன; அம்மாலையணிந்த நகில்கள் அணிகலன்களிடை நுழைகின்றன; அவ்வணிகலனைச் சார்ந்துள்ள இடையிலிருந்த ஆடைகள் நெகிழ்ந்து கீழ்வீழ்கின்றன எனத் தொடர்பு தோன்றக்கூறிய நயம் காண்க. (55)

**1455.** வள்ளு றைகழித் தொளிர்வன
வாணிமிர் மதியம்
தள்ளு றச்சுமந் தெழுதருந்
தமனியக் கொம்பிற்
புள்ளி நுண்பனி பொடிப்பன
பொன்னிடைப் பொதிந்த
எள்ளுடைப் பொரி விரவின
வுளசில விளநீர்.

வள் உறை கழித்து ஒளிர்வன வாள் நிமிர் மதியம்
தள்ளுறச் சுமந்து எழுதரும் தமனியக் கொம்பில்,
புள்ளி நுண் பனி பொடிப்பன, பொன் இடைப் பொதிந்த,
எள் உடைப் பொரி விரவின, உள சில இளநீர்.

பொ :—வளவிய இமையாகிய உறையில் நின்று கழிக்கப் பெற்று ஒளிவீசுகின்ற கண்களாகிய வாள்களுடன் ஓங்கிய முகமாகிய சந்திரனைத் தாங்கமாட்டாது தள்ளாடச் சுமந்து கொண்டு எழுகின்ற பெண்டிராகிய பொற்கொம்பில், பசலையாகிய பொன்னுக்கு இடையிடையே, திரண்ட எள்ளின்பொரி விரவியுள்ளமை போலப் புள்ளி புள்ளியாக நுண்ணிய வியர்வைத்துளிகள் தோன்றுவனவாய் நகில்களாகிய சில இளநீர்கள் உள்ளன.

கு :—வள், வலிமையுமாம். இமையாகிய உறை, கண்ணாகிய வாள், முகமாகிய மதியம், மங்கையராகிய பொற்கொம்பு, பசலையாகிய பொன், நகில்களாகிய இளநீர் என்று பொருளையும் கூட்டிக் கூறுமையால் இது மாட்டேறில்லா உருவகம் எனப்படும். நகில்களில் முன்னரே தோன்றியுள்ள பசலை பொன் போல் தோன்ற, அப்பொன்னுக் கிடையிடையே எள்ளின் பொரி விரவியுள்ளமை போல விரகதாபத்தாலுளதாய வியர்வை நீர்த்துளிகள் தோன்றின என்க. பிறக்குங்கால் உடன் தோன்றிய தலையையே சுமக்கமாட்டாத மெல்லியலார்க்கு இடையே தோன்றிப் பின்னும் பெரும்பாரமாக நகில்களாகிய சில இளநீர்களும் உள்ளனவே என்று இரங்கியவாறு. பொரிவிரவின போன்று பனிபொடிப்பன என்று உவமையுருபு விரிக்க. எழுதரும் ஒருசொல். ஐந்து கவிகளால் இராமனைக் கண்டு காதல் கொண்ட காரிகையரின் செயல்களைக் கூறு முகத்தால் அவ் இராமபிரானின் பேரழகையும் பேராண்மையையும் விளக்கியவாறு. இராமன் செல்லும் வழி இளநீர்களால் அலங்கரிக்கப் பெற்றிருந்தன என்னும் பொருளும் தோன்றுதல் காண்க. (56)

## இராமன் தயரதன்பக்கல் சார்தல்

**1456.** ஆய தவ்வழி நிகழ்தர
வாடவ ரெல்லாம்
தாயை முன்னிய கன்றெனு
நின்றுயிர் தளிர்ப்பத்
தூய தம்பியுந் தானுமச்
சுமந்திரன் றேர்மேல்
போய கங்குளிர் புரவல
னிருந்துழிப் புக்கான்.

ஆயது அவ்வழி நிகழ்தர, ஆடவர் எல்லாம்
தாயை முன்னிய கன்று என நின்று உயிர் தளிர்ப்பத்
தூய தம்பியும், தானும், அச் சுமந்திரன் தேர் மேல்
போய், அகம் குளிர் புரவலன் இருந்துழிப் புக்கான்.

பொ :—அத்தன்மையான நிகழ்ச்சிகள் அவ்வழியில் நிகழாநிற்க, ஆடவர்கள் எல்லாம், தாய்ப்பசுவை முன்வரக்கண்ட கன்றுபோல நின்று உளம் மகிழத் தூய்மை மிக்க தம்பி இலக்குவனும் தானுமாய் அந்தச் சுமந்திரன் கொடுவந்த தேரின்மேல் சென்று இவன் வருகையை நோக்கி உளம் குளிர்ந்திருக்கின்ற தயரதன் இருந்த மந்திர மண்டபத்தில் புகுந்தான்.

கு :—இராமனைக் கண்ட பெண்டிர்நிலை பல்வேறு வகையாக விரிக்க வேண்டியிருந்தமையின் அதனை ஐந்து கவிகளாற் கூறி அப்பிரானைக் கண்ட ஆடவர்நிலை ஒரே தன்மையதாதலின், 'ஆடவரெல்லாம் தாயை முன்னிய கன்றென நின்றுயிர்தளிர்ப்ப' எனச் சுருங்க உரைத்தார். "தாய்வர நோக்கிய கன்றின் தன்மையார்" (ஆரணிய–அகத்-5) என்றதும் காண்க. பாற் பயன் சுரக்கும் தாய்ப் பசுவைக் கண்ட கன்று மனம் மகிழ்வதுபோல எல்லா நலன்களையும் தந்து காக்கவல்ல இராமபிரானைக் கண்ட ஆடவர்கள் மனமகிழ்ந்தார்கள். அன்புடையார்க்கு எடுத்துக்காட்டாகப் பசுவையும் கன்றையும் கூறுதல் மரபு. ஆடவர்க்கு இராமபிரானைக் கண்டவுடன் தோன்றிய அன்பு தாயைக் கண்ட கன்றின் அன்பு போன்றது என அவர் அன்பின் மிகுதியை விளக்கியவாறு. தம்பியைத் 'தூய தம்பி' எனச் சிறப்பித்தது, மனமொழிகள் தூய்மையுடையனாய் மந்திராலோசனையில் உடனிருத்தற்குரியன் என்பதை விளக்க வேண்டி யென்க. 'புரவலன் இருந்துழி' என்றது, மந்திராலோசனை மண்டபத்தை. "தம்பியும் தானும் போய்,' என்ற பொது வினையெச்சம், 'புக்கான்' எனச் சிறப்புவினைகொண்டு முடிந்தது, "தானுந் தேரும்

பாகனும் வந்து என் நலன் உண்டான்" என்புழிப்போல. "சென்று கொண்டனை திருமகள் கொழுநனை" என்பது தயரதன் ஆணையாயினும், இராமபிரானின் நிழல்போல் பிரியாத இயல்பினனுதலின் இலக்குவனும் உடன்வந்தான் என்க. "பிரியா வண்ண வெஞ்சிலைக் குரிசில்" (1448) என முன்னர்க் கூறியதும் ஓர்க. இராமனுடன் இலக்குவனும் போனதாக வான்மீகத்தில் இல்லை. (57)

## இராமனைத் தயரதன் தழுவுதல் 1457-1458

**1457.** மாத வன்றனை வரன்முறை
வணங்கிவா ளுழவன்
பாத பங்கயம் பணிந்தனன்
பணிதலு மனையான்
காதல் பொங்கிடக் கண்பனி
யுகுத்திடக் கனிவாய்ச்
சீதை கொண்கனைத் திருவுறை
மார்பகஞ் சேர்த்தான்.

மா தவன் தனை வரன்முறை வணங்கி, வாள் உழவன்
பாத பங்கயம் பணிந்தனன்; பணிதலும், அனையான்,
காதல் பொங்கிடக் கண் பனி உகுத்திடக் கனி வாய்ச்
சீதை கொண்கனைத் திரு உறை மார்பகம் சேர்த்தான்.

பொ :—பெரிய தவத்தினையுடைய வசிட்டனைத் தொன்றுதொட்டுவரு முறைப்படி வணங்கிப் பின் வாள் ஏர் உழவனுகிய தயரதனுடைய திருவடித் தாமரைகளை வணங்கினுன்; இராமபிரான் அங்ஙனம் வணங்குதலும், அத்தயரதன் அன்பு மேற்படலால் கண்கள் நீர்த்துளிகளைச் சிந்திடக் கொவ்வைக் கனிபோன்ற வாயையுடைய சீதையின் கணவனுகிய அவ்விராமபிரானைத் தன் திருத்தங்கிய மார்பின்கண் அணைத்துக்கொண்டான்.

கு :—மூவுலகமும் வணங்கத்தக்க பெருமையுடைய இராமபிரான் தனை வணங்கற்கேற்ற பெருந்தவமுடையன் வசிட்டன் என்பது போதர, 'மாதவன்' என்றுர். வாளாகிய கலப்பை கொண்டு பகைவர் மார்பாகிய நிலத்தையுழுபவன் தயரதன் ஆதலின் அவன், 'வாளுழவன்' எனப் பட்டான் "வில்லேருழவர்" (குறள்-872). காதல் – அன்பு. 'கண்பனி' என்றது அன்பால் வரும் கண்ணீரை. உவகைக் கலுழ்ச்சி எனலுமாம். தயரதன் மார்பகத்தைத் 'திருவுறை மார்பகம்' என்றது, திருமாலின்

அமிசமாய் உலகாளும் திருவுடை மன்னனுதல்பற்றி. "திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே" (திருவாய்மொழி-4-4-8) எனச் சடகோபரும் சாற்றியருளியது காண்க. 'திருத்துயில்பெற்ற மார்பன்' (சீவக-1504) என்பதும் காண்க. குலகுருவாகிய வசிட்டனை முன் வணங்கித் தந்தையைப் பின் வணங்கல், மேல் தொட்டு வந்த முறைமையாகலின், 'வரன்முறை வணங்கி' என்றார். திருவுறை மார்பில் அணைத்துக் கோடற்குரிய தகுதியுடைமை தோன்றச் 'சீதை கொண்கனை' என்றார். (58)

1458. நலங்கொண் மைந்தனைத் தழுவின
னென்பதென் னளிநீர்
நிலங்க டாங்குறு நிலையினை
நிலையிட நினைந்தான்
விலங்க லன்னதிண் டோளையு
மெய்த்திரு விருக்கும்
அலங்கன் மார்பையுந் தனதுதோண்
மார்புகொண் டளந்தான்.

நலம் கொள் மைந்தனைத் தழுவினன்
என்பது என்? நளி நீர்
நிலங்கள் தாங்குறும் நிலையினை
நிலையிட நினைந்தான்,
விலங்கல் அன்ன திண் தோளையும்,
மெய்த் திரு இருக்கும்
அலங்கல் மார்பையும், தனது தோள்
மார்பு கொண்டு அளந்தான்.

பொ :—நன்மைகள் எல்லாவற்றையும் கொண்டுள்ள மைந்தனுகிய இராமபிரானைத் தழுவினன் என்று கூறுவது எதற்கு? பெரிய கடல் சூழ்ந்த பூமியைத் தாங்கப் போகும் அவ்விராமனுடைய நிலைமையினை அளவிட நினைத்தவனுகிய தயரதன், அவ்விராமனுடைய மலைபோன்ற திண்ணிய தோள்களையும், உண்மையான திருவீற்றிருக்கும் மாலையணிந்த மார்பினையும், தனது தோள்களையும் மார்பையும் கொண்டு அளந்தான் என்பதே பொருத்தமாம்.

கு :—தயரதன் மைந்தனைத் தழுவியதே உண்மையாகவும் அதனை மறுத்துப் பிறிதோர் காரணம் கூறியது, தற்குறிப்பேற்றம். நளி-பெருமை. நளிநீர் என்றது கடலை. பூமி நானிலங்களாகப் பிரிக்கப்படுதல் நோக்கி

'நிலங்கள்' என்று பன்மையாற் கூறினர். நிலையிடல் - அளவிடல். நினைந்தான், வினையாலணையும் பெயர்; முற்றெச்சம் எனலுமாம். விலங்கல் - மலை. மேல் 'திருவுறை மார்பகம் சோத்தான்' எனத் தயரதனைக் கூறியது, மன்னனுதல் பற்றிய உபசாரமே; திருமாலின் அவதாரம் ஆதலின் இராமன் மார்பகம் உண்மையாகவே திருவிருக்கும் மார்பு என்பார், "மெய்த்திருவிருக்கும் அலங்கன் மார்பு." என்றார். (59)

## தயரதன் இராமனை வேண்டுதல் 1459–1467

1459. ஆண்டு தன்மருங் கிரீஇயுவந்
தன்புற நோக்கிப்
பூண்ட போர்மழு வுடையவ
னெடும்புகழ் குறுக
நீண்ட தோளைய நிற்பயந்
தெடுத்தயா னின்னை
வேண்டி யெய்திட விரைவதொன்
றுளதென விளம்பும்.

ஆண்டு தன் மருங்கு இரீஇ, உவந்து, அன்பு உற நோக்கிப்
'பூண்ட போர் மழு உடையவன் நெடும் புகழ் குறுக
நீண்ட தோள் ஐய! நிற்பயந்து எடுத்த யான் நின்னை
வேண்டி எய்திட விரைவது ஒன்று உளது' என விளம்பும்.

பொ:—அவ்விடத்தில் இராமபிரானைத் தன் பக்கத்தில் இருக்கச் செய்து, மகிழ்ந்து அன்பு பொருந்த நோக்கி (அரசர் குலத்தை வேரறுப்பேன் என்று) விரதம் பூண்ட போருக்குரிய மழுவாயுதத்தையுடைய பரசுராமனுடைய நீண்ட புகழும் குறுகும் வண்ணம் (அவனை வென்று) நீண்ட தோள்களையுடைய ஐயனே! நின்னைப்பெற்று வளர்த்த யான், நின்னை வேண்டிப் பெறும்படி விரைதற்குக் காரணமான ஒரு செயல் உண்டு என்று சொல்லலானான்.

கு:—குறுக நீண்ட தோள், முரண் தொடை. இதில் பரசுராமாவதாரத்திருந்த ஆவேசமும் இராமபிரானிடம் வந்துவிட்டது என்ற குறிப்புண்டு. பகைவென்று. பார் காத்தற்குரியவன் என்பது தோன்ற, பரசுராமனை வென்ற நிகழ்ச்சி கூறினன். மகன் தந்தைபால் பெறுவதன்றித் தந்தை மகன்பால் வேண்டிப் பெறுவதில்லையன்றே, அங்ஙனமாகவும் நின்னை வேண்டிப் பெற யான் விரைதற்குரிய ஒரு செயல் உண்டு என்றது அரசு ஏற்றலை. அரசு ஏற்றுக் கொள்ளுமாறு தந்தை வேண்டிக் கொள்ளுதலால் வேண்டுதல் வேண்டாமையிலான் இராம

பிரான் என்பது பெறப்படும். தயரதன் இராமனுக்கு முடிசூட்ட விரைதற்குரிய காரணமாக முதல் நூலில் கூறியுள்ளவற்றை முன்னர் விளக்கியுள்ளமை காண்க. இரீஇ, உவந்து, நோக்கி என்ற செய்து என் எச்சங்கள், 'விளம்பும்' என்ற வினைமுதல்வினை கொண்டு முடிந்தது. 'விளம்பும்' என்பது செய்யும் என் முற்று; படர்க்கையில் பலர்பால் தவிர்த்து ஏனை நான்கு பாலுக்கும் வரும். (60)

**1460.** ஐய சாலவு மலசினெ
னரும்பெரு மூப்பு
மெய்ய தாயது பியலிடம்
பெரும்பரம் விசித்த
தொய்யன் மாநிலச் சுமையுறு
சிறைதுறந் தினியான்
உய்ய லாவதோர் நெறிபுக
வுதவிட வேண்டும்.

'ஐய! சாலவும் அலசினென்; அரும் பெரும் மூப்பும்
மெய்யது ஆயது; பியல் இடம் பெரும்பரம் விசித்த
தொய்யல் மாநிலச் சுமை உறு சிறை துறந்து, இனி, யான்
உய்யல் ஆவது ஓர் நெறி புக உதவிட வேண்டும்.'

பொ :—ஐயனே! (அறுபதினுயிரமாண்டுகளாண்டு) மிகவும் அலுத்துவிட்டேன்; தாங்குதற்கரிய பெரிய மூப்பும் என் உடம்பிற்குரியது ஆயது. எனது பிடரியின்கண் பெரிய பாரமாகப் பூட்டப்பெற்ற துன்பமிக்க பெரிய நிலமாகிய சுமையைத் தாங்கிக்கொண்டு இருக்கின்றதாகிய சிறையைத் துறந்துவிட்டு இனிமேல் யான், உய்தற்குரிய ஒப்பற்ற நெறியில் புகுதற்கு நீ உதவவேண்டும்.

கு :—மூப்பும் என்புழி உம்மை இறந்தது தழீஇயது. மூப்பின் மிகுதி தோன்றப் 'பெருமூப்பு' என்ருர், "வையம் காக்கும் படுநுகம்" (சீவகசிந்-203) எனக் காத்தல் தொழிலை 'நுகம்' என்றற்கேற்ப, அதைத் தாங்குதற்குரியது 'பியல்' எனக் கூறப்பட்டது. பியல் - பிடர். தொய்யல் - துன்பம். அரசு மேற்கொண்டிருத்தல் சிறைத்துன்பம் போறலின், 'சுமையுறு சிறை' என்ருர். "மன்பதை காக்கும் நன்குடிப் பிறத்தல், துன்பமல்லது தொழுதகவில்" (சிலப்-காட்சி. 103, 104) எனச் செங்குட்டுவன் கூறியதும் நினைக்க. 'ஓர் நெறி' என்றது துறவினை. உதவலாவது முடிசூட்டிக்கோடல். (61)

1461. உரிமை மைந்தரைப் பெறுகின்ற
துறுதுயர் நீங்கி
இருமை யும்பெறற் கென்பது
பெரியவ ரியற்கை
தரும மன்னநிற் றந்தயான்
றளர்வது தகவோ
கரும மென்வயிற் செய்யிலென்
கட்டுரை கோடி.

'உரிமை மைந்தரைப் பெறுகின்றது உறு துயர் நீங்கி
இருமையும் பெறற்கு என்பது, பெரியவர் இயற்கை;
தருமம் அன்ன நின் தந்த யான், தளர்வது தகவோ?
கருமம் என் வயின் செய்யில், என் கட்டுரை கோடி.'

பொ:—'உரிமை வாய்ந்த புதல்வரைப் பெறுவது, "இம்மையில் வரும் துன்பமும் மறுமையில் வரும் துன்பமும் நீங்கப் பெற்று இருமை இன்பமும் பெறுதற்காகவே" என்று கூறுவது, பெரியவர் இயல்பு. அங்ஙனமாகவும், தருமமூர்த்தியையொத்த நின்னைப் பெற்ற யான், மறுமையின்பம் பெருது இங்குத் தளர்ந்து துன்புறுவது தகுதி யாமோ? என்னிடத்து நீ செய்யவேண்டிய செயல் செய்வதாயின் யான் கூறும் உறுதி மொழியை ஏற்றுக் கொள்வாயாக.'

கு:—'இருமை' என்றது, ஆகுபெயராய் இம்மையிலும் மறுமை யிலும் பெறுதற்குரிய இன்பத்தை உணர்த்திநின்றது. இம்மையின்ப மாவது மக்கள் மெய் தீண்டலாலும் மழலைமொழி கேட்டலாலும் அவர் வளர்ச்சியுற்றவழிச் சான்றோன் எனச் சான்றோர் சொல்லக் கேட்டலாலும் வருவது. நீர்க்கடன் முதலிய செய்து தந்தையை நல்வழிச் செலுத்து தலால் மறுமையில் துறக்க இன்பத்தைப் பெறுதல். 'உறுதுயர்' என்றது, இம்மையில் பசி, தாகம், நோய், மூப்பு முதலியவற்றால் வரும் துன்பமும், மறுமையில் நரகத்துன்பமும் ஆம். "இம்மையுலகத் திசையொடும் விளங்கி, மறுமையுலகமும் மறுவின்றெய்துப, செறுநரும் விழையும் செயிர்தீர் காட்சிச், சிறுவர்ப் பயந்த செம்மலோர் எனப், பல்லோர் கூறிய பழமொழி" (அகநா-66) என மைந்தரைப் பெறுதலின் பயனைச் செல்லூர்க் கோசிகன் கண்ணனர் சொல்லியதும் காண்க. பொதுமக்கட்குரிய இவ் வியல்புதானும் சிறப்பியல்புடைய நின்னைப்பெற்ற எனக்கு இன்றி வருந் தல் தகாது என்றவாறு. கோள்-த்-இ கோடி ஆயிற்று. 'கொள்ளுதி' என்பது பொருள். 'கருமம் என்வயிற் செய்யில்' என்பது பின்வரும் தீங்கினைக் குறிப்பால் உணர்த்திற்று எனலாம். இறுதிக் கடனைக் 'கருமம்' என்னும் வழக்குண்மை யுணர்க. கட்டுரை – உறுதியான

சொல். 'பயன் இனைத்தென்றே கட்டுரைத்திலன்' (கந்தபு. அயனைச் சிறை–14) என்புழியும் இப்பொருளது ஆதல் காண்க. (62)

**1462.** மைந்த நங்குல மரபினின்
மணிமுடி வேந்தர்
தந்த மக்களே கடைமுறை
நெடுநிலந் தாங்க
ஐந்தொ டாகிய முப்பகை
மருங்கற வகற்றி
உய்ந்து போயின ரூழிநின்
றெண்ணினு முலவார்.

'மைந்த! நம் குல மரபினில் மணி முடி வேந்தர்,
தம் தம் மக்களே கடைமுறை நெடு நிலம் தாங்க,
ஐந்தொடு ஆகிய முப்பகை மருங்கு அற அகற்றி,
உய்ந்து போயினர் ; ஊழி நின்று எண்ணினும் உலவார்.'

பொ :—'மைந்தனே, நமது சிறந்த மரபினிற் பிறந்த மணிமுடியணிந்த வேந்தர்கள் (தம் காமஞ் சான்ற கடைக்கோட் காலத்து) தம் தம்முடைய மக்களே பரந்த பாரினைத் தாங்கி அரசு செய்ய ஐம்பொறிகள் என்னும் பகையோடு தொடர்புடையதாகிய காம வெகுளி மயக்க மென்னும் மூன்று பகையினையும் வேரறக் களைந்து தவத்தால் உயர்ந்து உய்ந்து வீட்டுலகிற்குப் போனவர்கள், எத்துணையர் என ஊழிக்காலம் வரை நின்று எண்ணினும் முடிவுபெற மாட்டார்கள்.'

கு :—குலம் - சிறப்பு. கடைமுறை என்றது, காமஞ்சான்ற கடைக்கோட்காலத்தை ; முதுமைக் காலத்து என்பது கருத்து. 'தந்தம்' என்புழித் தொக்குநின்ற ஆறும் வேற்றுமை முருகனது குறிஞ்சி நிலம்' என்பதுபோல உரிமைப் பொருட்கண் வந்தது (குறள்–63–பரி–உரை). நெடுமை பரப்புணர்த்திற்று. 'அரசாள' என்னது, 'தாங்க' என்றது "மாநிலச்சுமை' என்று முன்னர்க் கூறியதற்கேற்பக் கூறிய முகமன். ஐந்து என்றது ஐம்பொறி வாயிலாக வரும் அவாவினை. ஐம்புலநுகர்ச்சி பற்றியே காம வெகுளி மயக்கமாகிய முக்குற்றங்கள் தோன்றுதலால், 'ஐந்தொடாகிய முப்பகை' என்றார்; "காம வெகுளி மயக்க மிவைமூன்றின், நாமங் கெடக்கெடு நோய்" (360) என்ற குறட் கருத்தையே 'முப்பகை மருங்கற வகற்றி' என்றார். உய்ந்துபோதல்–வீடு அடைதல். "நம் குலக் குரவர்கள்" (1415) என்ற பாடலின் கருத்தையே மீண்டும்

இராமபிரானுக்குக் கூறுகின்றான். எண்ணிறந்தனர் என்பார், 'ஊழி நின்றெண்ணினு முலவார்' என்றார்; ஊழி கற்பம் என்னும் பொருளது. (63)

1463. முன்னை யூழ்வினைப் பயத்தினு
முற்றிய வேள்விப்
பின்னை யெய்திய நலத்தினு
மரிதினிற் பெற்றேன்
இன்னம் யானிந்த வரசிய
லிடும்பைய னென்றால்
நின்னை யீன்றுள பயத்தினி
னிரம்புவ தியாதோ.

'முன்னை ஊழ்வினைப் பயத்தினும், முற்றிய வேள்விப்
பின்னை எய்திய நலத்தினும், அரிதின் நிற் பெற்றேன்;
இன்னம் யான் இந்த அரசியல் இடும்பையன் என்றால்,
நின்னை ஈன்று உள பயத்தினில் நிரம்புவது யாதோ?'

பொ:—'முன்னைப் பிறவிகளிற் செய்த நல்வினையின் பயனாலும், இப்பிறவியில் முற்றுப் பெறச் செய்த வேள்விகளால் அடைந்த நன்மையாலும், அருமையாக நின்னைப் பெற்றேன்; அவ்வாறு நின்னைப் பெற்ற யான், இன்னும் இந்த அரசியல் தாங்கும் துன்பத்தை நீக்காது பெற்றிருக்கின்றேன் என்றால், நின்னைப் பெற்றதால் உளதாகிய பயனால் நிறைவு எய்துவது யாது?'

கு:—ஊழாவது, இருவினைப்பயன் செய்தவனையே சென்றடைதற்கு ஏதுவாகிய நியதி. ஊழையுடைய வினை 'ஊழ்வினை' ஆயிற்று. 'பின்னை முற்றிய வேள்வி' என்றியைக்க. எடுத்த இப்பிறவியைப் 'பின்னை' என்றார். வேள்வி என்றது, கலைக்கோட்டு முனியைக் கொண்டு இயற்றிய மகவருள் வேள்வியை (புத்திரகாமேட்டியை). அங்ஙனம் ஊழானும் முயற்சியானும் இராமனை அரிதிற் பெற்றது அரசாளவே என்பது தயரதன் கருத்தாதலை, "பிறிதொரு குறையிலை யெற்பின் வையகம், மறுகுறு மென்பதோர் மறுக்க முண்டரோ" (பால—182) என்பதால் அறியலாம். அப்பயன் இராமனைப் பெற்ற பின்னரும் நிரம்பாமையின், 'நிரம்புவது யாதோ' என்றான். (64)

**1464.** ஒருத்த லைப்பரத் தொருத்தலைப்
பங்குவி னூர்தி
எருத்தி னீங்குநின் றியல்வரக்
குழைந்திட ருழக்கும்
வருத்த நீங்கியவ் வரம்பறு
திருவினை மருவும்
அருத்தி யுண்டெனக் கையவீ
தருளிட வேண்டும்.

'ஒருத்தலைப் பரத்து ஒருத்தலைப் பங்குவின் ஊர்தி
எருத்தின், ஈங்கு நின்று இயல்வரக் குழைந்து இடர் உழக்கும்
வருத்தம் நீங்கி, அவ் வரம்பு அறு திருவினை மருவும்
அருத்தி உண்டு, எனக்கு; ஐய! ஈது அருளிடவேண்டும்.'

பொ :—'ஒரு பக்கம் பாரம் தாங்குவதால் உளதாய துன்பத்தையும் மற்றொரு பக்கம் முடத்தன்மையால் உளதாய துன்பத்தையும் உடைய, வண்டியில் பூட்டப்பெற்ற எருத்தினைப்போல, இங்கு நின்று அரசுச் சுமையைத் தாங்கி இயங்க மெலிந்து துன்பம் அநுபவிக்கும் வருத்தத்தில் நின்றும் நீங்கி, அந்த எல்லையற்ற இன்பம் உடைய வீடாகிய செல்வத்தை அடையவேண்டும் என்கின்ற ஆசை எனக்கு உண்டு; ஐயனே! இவ்வருத்தம் நீங்கும் வரத்தை எனக்கு அருளுதல் வேண்டும்.'

கு :—'காவற் சாகாடு' என்பதற் கேற்பத் தனக்கு எருத்தினை உவமை ஆக்கினான் தயரதன். இயல்வரல் – மாநிலச் சுமையோடு இயங்குதல். நொண்டித்தன்மையால் பாரந்தாங்க முடியாது வருந்தும் எருதுபோலக் கிழத்தன்மையால் நானிலப் பாரம் தாங்கமுடியாது வருந்துதலை விளக்கிய வாறு. வீட்டுலகத்தை, 'வரம்பறுதிரு' என்றது, இந்த அரசுத்திரு காலவரம்பு உடையது என்பதைக் குறிப்பால் பெறவைத்து, அந்தமில் இன்பத்து அழிவில் வீடு ஆகிய அதன் சிறப்புணர்த்தியவாறு. 'அவ் வரம்பறுதிரு' என்புழி அகரம் உலகறிசுட்டு. எருது, எருத்து என இரட்டித்து வருதலுமுண்டு. ஈது என்றது, தான் வருத்தம் நீங்க இராமன் அரசபாரத்தை யேற்றுக் கொள்ளுதலை. இது வருஞ் செய்யு ளாலும் விளங்கும். (65)

**1465.** ஆளு நன்னெறிக் கமைவரு
மமைதியின் றாக
நாளு நங்குல நாயக
னறைவிரி கமலத்

தாளி னல்கிய கங்கையைத்
தந்துதந் தையரை
மீள்வி லின்னுல கேற்றின
னொருமகன் மேனாள்.

'ஆளும் நல் நெறிக்கு அமைவரும் அமைதி இன்று ஆக,
நாளும் நம் குல நாயகன் நறை விரி கமலத்
தாளின் நல்கிய கங்கையைத் தந்து, தந்தையரை
மீள்வு இல் இன் உலகு ஏற்றினன், ஒரு மகன் மேல் நாள்.'

போ :—'ஒப்பற்ற பகீரதன், முற்காலத்தில் சிறந்தோர் மேற்கொள்ளத்தக்க நல்ல நெறியில் பொருந்தும் அமைதி தம் மூதாதையர்க்கு இல்லாமற்போனமையால், நம் குலதெய்வமாகிய நாராயணனுடைய' எப்பொழுதும் தேனோடு மலர்ந்திருக்கின்ற தாமரை மலர்போன்ற பாதத்தில் தோற்றுவித்த கங்கையைப் பூமிக்குக் கொணர்ந்து அம் மூதாதையராகிய சகரரை மீளாத நல்லுலகத்தில் ஏற்றினன்.'

கு :—பிரமன் ஆராதித்த திருமாலின் உருவம் இட்சுவாகுவால் அயோத்திக்குக் கொணரப் பெற்றுச் சூரியகுலத்தரசர் அனைவராலும் பரம்பரையாக ஆராதிக்கப் பெற்று வருகின்றமையின் திருமாலை, 'நங்குல நாயகன்' என்றான். நாளும் நறை விரி கமலத்தாள் என்றது, என்றுங் கூம்பாது அன்பர்க்கு அருள் சுரக்கும் அந்நற்றாளின் சிறப்பினை யுணர்த்த இல்பொருளுவமையாகக் கூறியவாறு. நன்னெறிக்குரிய அமைதியில்லா தோரையும் மீள்விலா உலகத்துய்த்த பகீரதன் மரபிற் பிறந்த நீ எனக்கஃதளித்தல் எளிது என்றவாறு. மீள்வில் இன்னுலகு—மீட்டிங்குவாரா முத்தியுலகு. இதனை, "வாராவுலகம்" (புறநா–341) என்று முன்னோர் கூறியிருத்தல் காண்க. மீள முடியாத இன்னா நரக உலகத்தை விலக்குதற்கு, 'இன்னுலகு' என்றார். கீழுலகமாகிய நரகத்திருந்தோரை மேலுலகு அடைவித்தமை தோன்ற, 'ஏற்றினன்' என்றார். (66)

**1466.** மன்ன ரானவ ரல்லர்மேல்
வானவர்க் கரசாம்
பொன்னின் வார்கழற் புரந்தரன்
போலிய ரல்லர்

பின்னு மாதவந் தொடங்கிநோன்
பிழைத்தவ ரல்லர்
சொன்ம ருமகப் பெற்றவ
ரருந்துயர் துறந்தார்.

'மன்னர் ஆனவர் அல்லர், மேல் வானவர்க்கு அரசு ஆம்
பொன்னின் வார் கழல் புரந்தரன் போலியர் அல்லர்,
பின்னும் மாதவம் தொடங்கி நோன்பு இழைத்தவர் அல்லர்,
சொல் மரு மகப் பெற்றவர் அருந்துயர் துறந்தார்.'

பொ :—'பொறுத்தற்கரிய துயரை நீக்கினவர்கள், (யார் எனின்) மண்ணுலகமுழுதாளும் மன்னரும் அல்லர்; விண்ணுலகத்தில் தேவர்கட்கு அரசனாகிய, பொன்னால் இயன்ற நீண்ட வீரக் கழலினையணிந்த இந்திரன் போன்றவரும் அல்லர்; மேலும், பெரிய தவத்தைத் தொடங்கி அதற் குரிய நோன்புகளை விடாது செய்த முனிவரும் அல்லர்; தன் சொல்லை மருது ஏற்றுக் கொள்கின்ற மகனைப் பெற்றோரே ஆவர்.'

கு :—மக்களுள் எல்லாச் செல்வமும் எய்தி இன்புறுதற்கு உரியவர் மண்ணுள் செல்வம் எய்திய மன்னரே ஆதலின், அம்மன்னரை முன்னும், அம்மன்னரினும் இன்பவுலகம் ஆகிய பொன்னுலகாளும் புரந்தரன் சிறந்தமையின் அவர்க்குப் பின், புரந்தரனாதியரையும், "வானேயும் பெறில் வேண்டேன்; மண்ணுள்வான் மதித்துமிரேன்" என்று வெறுக் கின்ற முனிவர் அவரினுஞ் சிறந்தமையின் அவரை இறுதியினும் வைத் துக் கூறினர். துன்பிலா மனத்தார் என்று மதிக்கப்படுவோர் மேற்கூறிய முத்திறத்தோரே ஆதலின் அவரையே இங்குத் துயரைத் துறந்தவர் ஆகார் என மறுத்துச் சொல்மரு மகப்பேற்றின் உயர்வுணர்த்தியவாறு. தயரதன், தன் சொல்லை இராமன் மருது ஏற்றுக்கொள்ள வேண்டி உலகின்மேல் வைத்துப் பொதுமையிற் கூறினான். "எழுபிறப்புந் தீயவை தீண்டா பழிபிறங்காப் பண்புடை மக்கட்பெறின்" (குறள்–62) என்பது காண்க. (67)

1467. அனைய தாதலி னருந்துயர்ப்
பெரும்பர மரசன்
வினையி னென்வயின் வைத்தன
னெனக்கொள வேண்டா
புனையு மாமுடி புனைந்திந்த
நல்லறம் புரக்க
நினையல் வேண்டும்யா னின்வயிற்
பெறுவதீ தென்றான்.

அனையது ஆதலின், அரும் துயர்ப் பெரும் பரம் அரசன்
வினையின் என்வயின் வைத்தனன் எனக் கொளவேண்டா;
புனையும் மா முடி புனைந்து இந்த நல் அறம் புரக்க
நினையல்வேண்டும்; யான் நின் வயின் பெறுவது ஈது' என்றான்.

பொ :—'(சொன்மருமகப் பெற்றோரின் சிறப்பு) அத்தன்மையது ஆதலால், "தாங்குதற்கு அரிய துயரைச் செய்யும் பெரும் பாரத்தை அரசன், தந்திரத்தால் என்மேல் வைத்துவிட்டான்," என நினைதல் வேண்டாம்; அழகு செய்யப்பெற்ற சிறந்த முடியினைச் சூடிக்கொண்டு இந்த (உலகம் காத்தலாகிய) நல்ல அறத்தைக் காப்பாற்ற மனங்கொளல் வேண்டும்; யான், நின்னிடத்துப் பெறுவது உண்டு என்றது இதுவே' என்றான்.

கு :—எல்லோருள்ளமும் மகிழ அரசு செய்வதின் அருமை தோன்ற, 'அருந்துயர்ப் பெரும்பரம்' என்றார். பெரும்பாரத்தை மகன்மேல் வைக்கத் தந்தையுள்ளம் உடன்படாமை தோன்ற, 'அரசன்' என்றான்; அவன் கடமை யுணர்ச்சியுடையன் ஆதலின். வினை—தந்திரம். பெரும்பாரமாகக் கருதாது நல்லறமாகக் கருதி ஏற்றுக் கொள்க என்பது கருத்து. முதுமை காரணமாகத் தான் கூறிய "பியலிடம் பெரும்பரம் விசித்த தொய்யல் மாநிலச்சுமை" என்பது இளமைச் செவ்வியானாகிய இராமபிரானுக்குப் பொருந்தாது என்பது உட்கோள். பல்லுயிர் ஓம்பல் நூலோர் தொகுத்த வற்றுள் எல்லாம் தலையாதலின் உலகுயிர் அனைத்தும் காக்கும் அரசினை, 'நல்லறம்' என்று சிறப்பித்தார். (68)

## தந்தை பணியை மைந்தன் உடன்படல்

1468. தாதை யப்பரி சுரைசெயத்
தாமரைக் கண்ணன்
காத லுற்றில னிகழ்ந்திலன்
கடனிதென் றுணர்ந்தும்
யாது கொற்றவ னேவிய
ததுசெய லன்றோ
நீதி யெற்கென நினைந்துமப்
பணிதலை நின்றான்.

தாதை அப் பரிசு உரைசெயத்
தாமரைக் கண்ணன்
காதல் உற்றிலன்; இகழ்ந்திலன்;
கடன் இது என்று உணர்ந்தும்,

'யாது கொற்றவன் ஏவியது
அது செயல் அன்றே
நீதி எற்கு?' என நினைந்தும்,
அப் பணி தலை நின்றான்.

பொ:—தந்தையாகிய தயரத மன்னன் அவ்வாறு கூறத் தாமரை மலர்போன்ற கண்ணையுடைய இராமபிரான், முடிசூடிக்கொள்ள விருப்பங் கொள்ளவுமில்லை; இகழ்ந்து வெறுக்கவுமில்லை; மன்னவன் மகனுக்குரிய கடமையிது என்றுணர்ந்தும், மன்னவன் ஏவிய செயல் யாதாயினும் அதைச் செய்வதன்றே எனக்கு நீதி? என்று எண்ணியும், தந்தை ஏவிய அரசாளும் பணியை மேற்கொள்ள உடன்பட்டு நின்றான்.

கு:—ஞாயிற்றைக் கண்டு மலர்தலும் திங்களைக் கண்டு கூம்புதலு மாகிய இயல்பையுடைய தாமரை மலரைப்போன்ற கண்ணையுடையவனு யிருந்தும், செல்வம் வந்துற்றதென மகிழாதும் அரசாளும் அல்லல் வந்துற்றதென இகழாதும் இருந்தான் என அவன் நடுவு நிலைமை யுணர்த்தியவாறு. அரசினைச் செல்வமாகக் கருதி மகிழ்தலும் அதைப் பெரும்பாரமாகக் கருதி இகழ்தலும் இலன் என்றது, வேண்டுதல் வேண்டாமையிலான் எனும் அவன் உண்மைத் தன்மையை விளக்கிய வாறு. "தந்தை சொல் மிக்க மந்திரமில்லை" ஆதலின், தந்தை ஏவியது செய்தலே நீதி எற்கு என நினைந்தான். இந்நினைவால் இராமன், தயரதனைச் சொல் மருமகப்பெற்றவனுக்கி அருந்துயர் துறக்கச்செய்தான் என்க. இங்ஙனமே, கோசிகன் தாடகையைக் கொல்லுமாறு சொல்லிய பொழுதும் "அறனல்லவும், எய்தினல் அது செய்கவென்றேவினல், மெய்ய நின்னுரை வேதமெனக்கொடு, செய்கையன்றே அறம் செய்யு மாறு" (பால–408) என்று கூறியதும் நினைக்க. (69)

## தயரதன் தன் கோயில் செல்லுதல்

1469. குருசில் சிந்தையை மனக்கொண்ட
கொற்றவெண் குடையான்
தருதி யிவ்வர மெனச்சொலி
யுயிருறத் தழுவிச்
சுருதி யன்னதன் மந்திரச்
சுற்றமுஞ் சுற்றப்
பொருவில் மேருவும் பொருவருங்
கோயில்போய்ப் புக்கான்.

குருசில் சிந்தையை மனக்கொண்ட
கொற்ற வெண் குடையான்,
'தருதி இவ்வரம்' எனச் சொலி,
உயிர் உறத் தழுவிச்
சுருதி அன்ன தன் மந்திரச்
சுற்றமும் சுற்றப்
பொருவில் மேருவும் பொரு அரும்
கோயில் போய்ப் புக்கான்.

பொ :—இராமபிரானின் உள்ள நிலையைக் குறிப்பால் உணர்ந்த ஒற்றை வெண்கொற்றக்குடையுடைய தயரதன், 'இவ்வரம் தருவாயாக' என மீண்டும் வற்புறுத்திச் சொல்லி உயிரோடு உயிர் கலக்கத் தழுவி விட்டு வேதத்தை ஒத்த தன் மந்திரிகளாகிய சுற்றம் தன்னைச் சுற்றிவரத் தனக் கொப்பின்றி உயர்ந்த மேருமலையும் ஒப்பாகாத தன் கோயிலை யடைந்தான்.

கு :—குருசில் - உபகாரி; ஆடவன். 'குரிசில்' எனவும் இச்சொல் வழங்கும். இராமபிரானின் உடன்பாடு உணர்ந்தும், 'தருதியிவ்வரம்' என்றது, வற்புறுத்த வேண்டி. தழுவுவது உடம்பேனும், உள்ளமும் உயிரும் கலக்கும் உண்மையை யுணர்த்த 'உயிருறத்தழுவி' என்றார். மந்திரிகளின் நூலறிவின் மிகுதியையும் நடையின் மேன்மையையு முணர்த்த 'சுருதியை' உவமையாக்கினர். "நால்வேத நெறிதிரியினுந் திரியாச் சுற்றம்" (புறநா-2) என்று கூறப்படுதல் காண்க. பொருவில் மேரு – 'சிவபிரானுடைய போர் வில்லாகிய மேரு' எனப் பொருள் கூறலுமாம். 'சுற்றமும்' என்ற இறந்தது தழீஇய எச்சவும்மை, ஏனைச் சுற்றமும் சுற்றியதை யுணர்த்தியது. இதனால், "சுற்றத்தாற் சுற்றப்பட வொழுகல் செல்வந்தான் பெற்றத்தாற் பெற்ற பயன்" (குறள்-524) என்றதற்கு ஏற்பத் தயரதன் நடந்தமை பெறப்படும். (70)

## இராமன் தன் கோயிலுக்குச் செல்லுதல்

**1470.** நிவந்த வந்தணர் நெடுந்தகை
மன்னவர் நகரத்
துவந்த மைந்தர்கண் மடந்தைய
ருழையர்பின் றொடரச்
சுமந்தி ரன்றடங் தேர்மிசைச்
சுந்தரத் திரடோள்
அமைந்த மைந்தனுங் தன்னெடுங்
கோயில்சென் றடைந்தான்.

நிவந்த அந்தணர், நெடுந்தகை
மன்னவர், நகரத்து
உவந்த மைந்தர்கள், மடந்தையர்,
உழையர் பின் தொடரச்
சுமந்திரன் தடம் தேர்மிசைச்
சுந்தரத் திரள் தோள்
அமைந்த மைந்தனும், தன் நெடும்
கோயில் சென்று அடைந்தான்.

பொ :—உயர்ந்த இயல்புள்ள அந்தணரும், பெருந்தன்மை வாய்ந்த மன்னரும், நகரத்து மகிழ்ந்து வாழும் மைந்தர்களும், பெண்டிரும் பக்கத்தவராய்ப் பின்தொடராநிற்கச் சுமந்திரன்கொணர்ந்த பெரிய தேர்மேல் ஏறிக்கொண்டு, அழகிய திரண்ட தோள் அமையப்பெற்ற இராமபிரானும் தனது நெடிய மாளிகையை அடைந்தான்.

கு :—எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டு ஒழுகும் மேன்மைபற்றி, 'நிவந்த அந்தணர்' எனப்பட்டார் (குறள்–30). நிவப்பு – உயர்ச்சி. நால்வருணத்தோரில் முதல்வர் எனப்படலால் அங்ஙனம் கூறினர் எனலும் ஆம். நெடுந்தகை மன்னவர் – தம்பெருமையால் நெடுந் தொலைவு வரையில் பலரால் அறியப்படும் பெருமையுடைய மன்னர். உவந்தமைந்தர்கள்-இராமனைக் காண உவந்த மைந்தர்கள் எனலுமாம். "ஆடவரெல்லாந் தாயை முன்னிய கன்றென நின்றுயிர் தளிர்ப்ப" என முன்னர்க் கூறியதும் காண்க. இராமனுடைய பேரழகு காண விரும்பி வந்தார் மடந்தையர் என்க. "உழையராய்ப் பின்தொடர" என முற்றெச்சக் குறிப்பாக்குக. அந்தணர் முதல் மடந்தையர் ஈருகவுள்ளோர் பின்தொடர்தற்குக் காரணம் கூறுவார் போலச் "சுந்தரத் திரள் தோள்...மைந்தனும்" என்றார். தாடகையை வதைத்தும் சிவன் வில்லை ஒடித்தும் பரசுராமன் வில்லை வளைத்தும் புகழமைந்து, காண்பார் கண் கவர் தோற்றமுடைமை தோற்றுவித்தவாறு. "தோள் கண்டார் தோளே கண்டார்" (பால. 1166) என அத்தோளின் சிறப்பை முன்னும் உணர்த்தியது காண்க. 'மைந்தனும்' என்ற உம்மை இறந்தது தழீஇ முன் தந்தை போனமை யுணர்த்திற்று. (71)

தயரதன் வேந்தர்க்கு ஓலை போக்கியபின் வசிட்டனை முடிபுனைதற்கு வேண்டுவ அமைக்க எனல்

**1471.** வென்றி வேந்தரை வருகவென்
றுவணம்வீற் றிருந்த
பொன்றி ணிந்ததோட் டரும்பெற
லிலச்சினை போக்கி

நன்று சித்திர நளிமுடி
கவித்தற்கு நல்லோய்
சென்று வேண்டுவ வரன்முறை
யமைக்கெனச் செப்ப.

வென்றி வேந்தரை 'வருக' என்று, உவணம் வீற்றிருந்த
பொன் திணிந்த தோட்டு அரும் பெறல் இலச்சினை போக்கி,
'நன்று சித்திர நளி முடி கவித்தற்கு, நல்லோய்!
சென்று வேண்டுவ வரன்முறை அமைக்க' எனச் செப்ப.

பொ :—வெற்றி வாய்ந்த வேந்தரை 'வருக' என்று எழுதிய பொன்னுலியன்ற திண்ணிய இதழில் கருடன் உருவம் தங்கிய பெறற்கரிய முத்திரையிட்டு அனுப்பிவிட்டு, 'நல்லோய்! பெரிய அழகிய முடி நன்று கவித்தற்கு வேண்டுவனவற்றை நீ சென்று வரன்முறைப்படி அமைப்பாயாக' எனத் தயரதன் வசிட்டனை நோக்கிச் சொல்ல.

கு :—உவணம் – கருடன். ஓலையில் உவண இலச்சினை பொறித்தல் உண்டு என்பதை, "உட்குறுமுவண முச்சியில் சுமந்த...முடக்கமை ஓலை" (பெருங்கதை-4. 10. பிரச்சோதனன் தூதுவிட்டது–92-96) என்பதால் அறியலாம். திருவுடை மன்னர் திருமாலோடொப்பர் ஆதலின் திருமாலின் ஊர்தியும் கொடியுமாகிய கருடனை இலச்சினையாகக் கொண்டார் போலும். அரசச் செல்வத்திற்கேற்பப் பொன்னுலியன்ற ஓலை போக்கினுன். தோடு-ஓலை. 'இலச்சினையிட்டுப் போக்கி' என உரைக்க. சித்திரம் – வேலைப்பாடுமாம். நளி – பெருமை. 'நன்று கவித்தற்கு' என்றியைக்க. 'நல்லோய்' என்றது வசிட்டனை. பரம்பரையாக முடிசூட்டும் பழக்கமுடையன் வசிட்டன் ஆதலின் விரித்துக் கூருது, 'வரன்முறை அமைக்க' எனக் கூறினுன். "வரன்முறை"—பண்டுதொட்டுவரு முறைமை. 'செப்ப' என்ற எச்சம், அடுத்த செய்யுளில், "உரியமாதவ னெள்ளிதென்றுவந் தனன்" என்பது கொண்டு முடியும். (72)

இராமனுக்கு முடிபுனைதலை மன்னவர்க்குத் தயரதன் கூறல்

**1472.** உரிய மாதவ னெள்ளிதென்
றுவந்தனன் விரைந்தோர்
பொருவி றேர்மிசை யந்தணர்
குழாத்தொடும் போக

நிருபர் கேண்மின்க ளிராமற்கு
நெறிமுறை மையினுல்
திருவும் பூமியுஞ் சீதையிற்
சிறந்தன வென்ருன்.

உரிய மா தவன், 'ஒள்ளிது' என்று
உவந்தனன், விரைந்து, ஓர்
பொருவில் தேர்மிசை அந்தணர்
குழாத்தொடும் போக,
'நிருபர்! கேண்மின்கள்; இராமற்கு
நெறி முறைமையினுல்
திருவும், பூமியும், சீதையில்
சிறந்தன' என்ருன்.

பொ:—முடிசூட்டும் சடங்கிற்கு உரிய வசிட்ட முனிவன் 'நல்லது' என்று உவந்தவனுய் விரைந்து சென்று ஓர் ஒப்பற்ற தேர்மேல் அந்தணர் கூட்டத்தோடும் போனுனுக, "மன்னர்களே! கேளுங்கள்: இராமனுக்கு நெறிப்பட வந்த முறைமையினுல் அரசச் செல்வமும் பூமியும் சீதையைப் போலவே சிறப்புரிமையுடைய ஆயின" என்று (தயரதன்) கூறினுன்.

கு:—ஒள்ளிது - நல்லது; திராவிடக் குழு மொழிகளுள் ஒன்ருன கன்னடத்தில் இச்சொல் இப்பொருளில் இன்றும் வழங்குகிறது. நிருபர் என்றது அன்று திறை செலுத்த இயல்பாக வந்திருந்த மன்னரை. ஓலேகண்டு வந்தவரல்லர். 'நெறிமுறைமை' என்றது, 'மூத்தவற்குரித்து அரசு' என்ற வழக்கத்தை. "சீதையாம், திருமகண் மணவினே தெரியக் கண்ட யான், அருமகனிறை குணத் தவனி மாதெனும், ஒருமகண் மண முங்கண் டுவப்ப வுன்னினேன்" (1427) என முன்னர்க் கூறியதற்கேற்ப, 'திருவும் பூமியும் சீதையிற் சிறந்தன' என்ருன். 'சிந்தையில்' என்ற பாடத்திற்குத் திருவும் பூமியும் அவற்றின் சிந்தையின்படி இராமனுக் குரிமையுடையவாய்ச் சிறந்தன என்று கொள்க. "நிவப்புறு நிலனெ னும் நிரம்பு நங்கையும் சிவப்புறு மலர்மிசைச் சிறந்த செல்வியும் உவப் புறு கணவனே" (1428) என்று முன் கூறியதால் அவற்றின் சிந்தை தெளியலாம். மன்னரை மட்டும் தனியே அழைத்துப் பேசியதாக முதல் நூலில் இல்லே; மந்திரிகளோடு சேர்ந்தே மன்னர்களும் மந்திராலோசனே மண்டபத்தில் இருந்ததாகக் கூறுகின்றது. (73)

### தயரதன் மொழிகேட்டு நிருபர்கள் மகிழ்தல்

**1473.** இறைவன் சொல்லெனு மின்னற
வருந்தினர் யாரும்
முறையி னின்றிலர் முந்துறு
களியிடை மூழ்கி
நிறையு நெஞ்சிடை யுவகைபோய்
மயிர்வழி நிமிர
உறையும் விண்ணக முடலொடு
மெய்தின ரொத்தார்.

**இறைவன் சொல் எனும் இன் நறவு அருந்தினர் யாரும்
முறையின் நின்றிலர், முந்துறு களி இடை மூழ்கி,
நிறையும் நெஞ்சிடை உவகை போய் மயிர்வழி நிமிர,
உறையும் விண்ணகம் உடலொடும் எய்தினர் ஒத்தார்.**

பொ :—தயரத மன்னவனுடைய சொல் என்கின்ற இனிய தேனைப் பருகினவர்களாகிய மன்னவர் யாவரும், நிற்க வேண்டிய முறையில் நிற்காதவர்களாய், முற்பட்டுத் தோன்றுகின்ற களிப்பெனும் வெள்ளத்தில் மூழ்கி, மனத்தில் நிறைந்த மகிழ்ச்சி பெருக்கெடுத்துப்போய் மயிர்க்கால்தோறும் புளகமாய் நிமிர்ந்து தோன்றப் புண்ணியம் புரிந்தோர் தங்குதற்குரிய விண்ணுலகத்தை உடம்போடு எய்தினவர்களை ஒத்து விளங்கினர்கள்.

கு :—'முறையினின்றிலர்' என்று நறவருந்தினர் இயல்பை விளக்கினர். அரசர்க்கு அரசன் முன் வாய்புதைத்தும் தானை மடக்கியும் நில்லாது வேண்டியாங்கு இருந்தனர் என்க. களிப்பின் மிகுதி தோன்ற 'மூழ்கி' என்றார். மூழ்கி என்றமையால் களிப்பை வெள்ளமாகக் குறிப்பான் உருவகஞ் செய்தார் என்பதறியலாம். மகிழ்ச்சியால் மயிர்க்கூச்செறியப் பெற்றார் என்பார், "உவகைபோய் மயிர்வழி நிமிர" என்றார். உறையும் என்ற வினைக்கேற்ற எழுவாய் வருவிக்கப்பட்டது. "தவஞ் செய் மாக்கள் தம்முடம்பிடாது, அதன் பயம் எய்திய அளவைமான" (பொருநராற்றுப்–91, 92) என்று உடம்பொடு துறக்கம் புகுதலைச் சிறப்பாகக் கூறியிருத்தல் காண்க. "உடம்பொடு துறக்க நகர் உற்றவரை யொத்தார்" (பால. 1245) என முன்னர் வந்துள்ளமையும் காண்க. இதனால் இராமபிரானுக்கு முடிசூட்டுவதில் மன்னர்கட்கிருந்த மகிழ்ச்சி மிகுதி பெறப்படும். . . . (74)

மன்னவர் மகிழ்ச்சியால் தயரதனுக்குக் கூறுதல் 1474-1475

**1474.** ஒத்த சிந்தைய ருவகைய
ரொருவரி னொருவர்
தத்த மக்குற்ற வரசெனத்
தழைக்கின்ற மனத்தார்
முத்த வெண்குடை மன்னனை
முறைமுறை தொழுதார்
அத்த நன்றென வன்பினோ
டறிவிப்ப தானார்.

ஒத்த சிந்தையர், உவகையர், ஒருவரின் ஒருவர்,
தத்தமக்கு உற்ற அரசு எனத் தழைக்கின்ற மனத்தார்,
முத்த வெண் குடை மன்னனை முறைமுறை தொழுதார்,
'அத்த! நன்று' என அன்பினோடு அறிவிப்பது ஆனார்.

பொ :—ஒத்த மனமுடைய மன்னர், ஒருவர் போல ஒருவர் மகிழ்ச்சியுடையராய்த் தங்கள் தங்களுக்குப் பொருந்தியது அரசு என்று பூரிக்கின்ற மனத்தையுடையராய், முத்துக்களால் இயன்ற வெண்குடையுடைய தயரத மன்னனை முறைமுறையே தொழுதார்கள். பின், 'தந்தை போன்றவனே! நின் கருத்து நல்லது' என அன்போடு அறிவிக்கத் தொடங்கினார்கள்.

கு :—மன்னர் பலராயினும் இராமபிரானுக்கு முடிசூட்டுவதில் கருத்து வேற்றுமையில்லாதவர் என்பார், 'ஒத்த சிந்தையர்' என்றார். சிந்தையையுடைய மன்னர் எனப் பெயராக்குக. ஒருவரின் என்புழி, 'இன்' ஒப்புப் பொருளது. ஒருவரின் ஒருவர்...தழைக்கின்ற மனத்தார் என்றியைப்பினும் ஆம். குணங்களால் சிறந்த இராமபிரான் அரசாட்சியில் அவ் இராமனைப் போலவே எல்லோரும் ஒத்த நலங்களைப் பெறுவார்கள் ஆதலின், தத்தமக்குற்ற அரசு எனத் தழைக்கின்ற மனத்தார் ஆனார். சுமந்திரன், 'தலங்கள் யாவையும் பெற்றனன் றுனெனத் தளிர்ப்பான்' (1447) என முன்னர்க் கூறியிருத்தலும் காண்க. முறைமுறை தொழுதலாவது வரிசையால் வணங்குதல். பன்முறைதொழுதார் எனினுமாம். இராமன் பெற்ற அரசைத் தாம் பெற்றது போலக் கருதியதற்கேற்ப அவ்விராமன் தந்தையைத் தம்தந்தையாகக் கருதி, 'அத்த' என்றார்கள். (75)

1475. மூவெழு முறைமையெங் குலங்கண் முற்றுறப்
★ பூவெழு மழுவினுற் பொருது போக்கிய
சேவகன் சேவகம் செகுத்த சேவகற்
காவதிவ் வுலகமீ தறனென் ருரரோ.

"மூவெழு முறைமை எம் குலங்கள் முற்றுறப்
பூ எழு மழுவினுல் பொருது போக்கிய
சேவகன் சேவகம் செகுத்த சேவகற்கு
ஆவது இவ்வுலகம் ; ஈது அறன் ;" என்ருர், அரோ.

பொ :—'இருபத்தொரு தலைமுறை எம் அரசகுலங்கள் அழிந்தொழியு மாறு கூர்மை பொருந்திய மழுப்படையால் போர் செய்து மாய்த்த வீரனுகிய பரசுராமனது வீரத்தைப் போக்கிய வீரனுகிய இராமபிரானுக்கே உரிமையாதற் குரியது இவ்வுலகம்; அவனுக்குரியதைப் பலருமறிய உரிமையாக்குவதாகிய இது அறமாகும்' என்றனர்.

கு :—பூ-கூர்மை. "பூவாட் கோவலர்" (புற நா-224) என்புழியும் இப்பொருட்டாதல் காண்க. செகுத்தல்-போக்குதல். இராமபிரான், பரசுராமனை வெல்லாதிருந்தால் இவ்வுலகம் பரசுராமற்கன்றே யுரித்தாயிருக்கும்; அங்ஙனமாகாது பரசுராமனை வென்ற அன்றே இவ்வுலகம் இராமனுக்கு உரித்தாயது என்பது தோன்ற, 'சேவகற்காவது இவ்வுலகம்' என்ருர். அவனை வென்ற அன்றே உரியதாய அரசினை இன்று தருவதில் வியப்பில்லை என்பார், 'ஈது அறம்' என்ருர். வென்ருர்க்கே அரசு உரியது என்பதை: "சம்பரனைக் குலத்தோடுந் தொலைத்து நீ கொண்டு அன்றளித்த அரசன்ருே புரந்தரனின் ருள்கின்றது" (பால-325) எனத் தயரதனை நோக்கிக் கோசிகன் கூறுமாற்ருல் உணரலாம். 'சேவகற்கே' என்ற ஏகாரம் விகாரத்தால் தொக்கது. மூன்ருமடி முற்று மோனையால் முற்றி யிருத்தல் காண்க. தயரதன் அறுபதினுயிரம் ஆண்டுகளாகப் பரசுராமன் வெகுளிக்கு இலக்காகா திருந்தமையால், அவனை உளப்படுத்தாது. "எங்குலங்கள் முற்றுற" என்றனர். (76)

45-ஆம் பிரதியில், இப்பாடலின் பின்னும் வேறு சில பிரதிகளில் 1478-ஆம் பாடலின் பின்னும் பின்வரும் 14 கவிகள் காணப்படுகின்றன.

1475. a. நறைக்குழற் சீதையு ஞால நங்கையும்
மறுத்துமிங் கொருவற்கு மணத்தின் பாலரோ
கறுத்தமா மிடறுடைக் கடவுள் காலவில்
இறுத்தவற் கன்றியென் றிரட்டர் கூறினர்.

b. ஏத்தவந் துலகெலா மீன்ற வேந்தனைப்
பூத்தவ னல்லனேற் புனித வேள்வியைக்
காத்தவ னுலகினைக் காத்த னன்றென
வேத்தவை வியப்புற விதர்ப்பர் கூறினர்.

c. பெருமையா லுலகினைப் பின்னு முன்னுநின்
றுரிமையோ டோம்புதற் குரிமை பூண்டவத்
தருமமே தாங்கலிற் றக்க தீண்டொரு
கருமம்வே றிலதெனக் கலிங்கர் கூறினர்.

d. கேடக மடியெனக் கெடுத்துக் கேடிலாத்
தாடகை வலிக்கெலாஞ் சரமொன் றேவிய
ஆடக வில்லிக்கே யாக பாரெனுத்
தோடக மலர்முடித் துருக்கர் கூறினர்.

e. கற்றநான் மறையவர் கண்ணை மன்னுயிர்
பெற்றதா யெனவருள் பிறக்கும் வாரியை
உற்றதே லுலகினில் உறுதி யாதெனக்
கொற்றவேல் வனைகழற் குருக்கள் கூறினர்.

f. வாய்நனி புரந்தமா மனுவி னூன்முறைத்
தாய்நனி புரந்தனை தரும வேலியாய்
நீநனி புரத்தலி னெடிது காலநின்
சேய்நனி புரக்கெனத் தெலுங்கர் கூறினர்.

g. வையமும் வானமும் மதியு ஞாயிறும்
எய்திய வெய்துப நிகழும் யாண்டெலாம்
நெய்தவழ் வேலினுய் நிற்கும் வாசகம்
செய்தவம் பெரிதெனச் சேரர் கூறினர்.

h. பேரிசை பெற்றனை பெருத தென்னினிச்
சீரிய தெண்ணினை செப்பு கின்றதென்
ஆரிய நங்குடிக் கபர மானதோர்
சூரிய னீயெனச் சோழர் கூறினர்.

i. ஒன்றிய வுவகைய ரொருங்கு சிந்தையர்
தென்றமிழ் சேனுற வளர்த்த தென்னரும்
என்றுநின் புகழொடு தரும மேமுற
நின்றது நிலையென நினைந்து கூறினர்.

j. வாட்டொழில் உழவநீ யுவகை வைகலும்
ஊட்டினை யருளமு துரிமை மைந்தனைப்
பூட்டினை யாதலிற் பொருவி னன்னெறி
காட்டினை நன்றெனக் கங்கர் கூறினர்.

k. தொழுகழல் வேந்தநின் தொல்கு லத்துளோர்
முழுமுதல் இழித்தகை முறைமை யாக்கியீண்
டெழுமுகில் வண்ணனுக் களித்த விச்செல்வம்
விழுமிது பெரிதென மிலேச்சர் கூறினர்.

l. கொங்கலர் நறுவிரைக் கோதை மௌலியாய்
சங்கநீ ருலகத்துட் டவத்தின் றன்மையால்
அங்கண ரரசுசெய் தருளு மாயிடிற்
சிங்கள ரிங்கிதிற் சிறந்த தில்லென்றார்.

m. ஆதியின் மனுவினு லமைந்த மைந்தற்குப்
பாதியு மாகிலே பரிந்து வாழ்த்துதல்
வேதியர் தவப்பயன் விளைந்த தாமெனச்
சேதியர் சிந்தனே தெரியச் செப்பினர்.

n. அளம்படு குரைகட லகழி யேழுடை
வளம்படு நெடுநில மன்னர் மன்னனே
உளம்படிந் துயிரெலா முவப்ப தோர்பொருள்
விளம்பினே பெரிதென விராடர் கூறினர்.

### தயரதன் மீண்டும் கூறத் தொடங்குதல்

**1476.** வேறிலா மன்னரும் விரும்பி யின்னது
கூறின ரதுமனங் கொண்ட கொற்றவன்
ஊறின வுவகையை யொளிக்குஞ் சிந்தையான்
மாறுமோ ரளவைசால் வாய்மை கூறினன்.

வேறு இலா மன்னரும் விரும்பி இன்னது
கூறினர் ; அது மனம் கொண்ட கொற்றவன்,
ஊறின உவகையை ஒளிக்கும் சிந்தையான்,
மாறும் ஓர் அளவைசால் வாய்மை கூறினன்.

பொ :—தன் கருத்திற்கு வேறுபடாத மன்னர்களும் விரும்பி இத் தகைய கருத்துக்களைக் கூறினராக ; அதை உளங் கொண்ட தயரதன், உள்ளே ஊற்றெடுத்துப் பெருகுகின்ற மகிழ்ச்சியை மறைக்கும் மன முடையனாய், அவ்வுவகைக்கு மாறுபட்டு மன்னர் கருத்தை அளப்பதற் குப் பொருத்தமான ஒரு சொல்லைச் சொன்னான்.

கு :—மன்னர்கள் எல்லாம் தன் மகனைச் சான்றோனெனக் கேட்ட பொழுது பேருவகை தோன்றுதல் இயல்பாதலின் அதை ஒளிக்க வேண்

டியதாயிற்று. ஊறுதல்-சுரத்தல்; உவகையை ஒளித்துப் பேசிய சொல், உவகைக்கு மாறுபட்டிருத்தலின் 'மாறும்' என்றும், மன்னர் கருத்தினை யளத்தற்குத் தக்க சொல் ஆதலின், 'அளவைசால்' என்றும், கூறினர். வாய்மை, இங்குச் 'சொல்' என்னும் பொருளது; வாயில் தோன்றுவது என்ற காரணம் பற்றி வந்தது. (77)

## மன்னர் கருத்துணரத் தயரதன் வினுதல்

**1477.** மகன்வயி னன்பினுன்
மயங்கி யானிது
புகலநீர் புகன்றவிப்
பொம்மல் வாசகம்
உகவையின் மொழிந்ததோ
வுள்ள நோக்கியோ
தகவென நினைந்ததோ
தன்மை யென்னென்ருன்.

'மகன் வயின் அன்பினுல் மயங்கி யான் இது
புகல, நீர் புகன்ற இப் பொம்மல் வாசகம்,
உகவையின் மொழிந்ததோ? உள்ளம் நோக்கியோ?
தகவு என நினைந்ததோ? தன்மை என்?' என்ருன்.

பொ :—'என் மகனிடத்தில் அன்பினுல் மயங்கி யான் இக்கருத்தைக் கூற, நீர் கூறிய இம்மகிழ்ச்சியை உணர்த்தும் பொலிவுடைய சொல், 'முடி புனைதல்' என்ற சொல்லைக் கேட்டவுடன் மேற்பட்டுத் தோன்றும் மகிழ்ச்சியால் கூறியதோ? அன்றி என் உள்ளக்கருத்தை நோக்கிக் கூறியதோ? அல்லது, இராமனுக்கு முடிசூடுதல் தகுதியான தென்பதை ஆராய்ந்துதான் கூறியதோ? நும் சொல்லின் தன்மை எத்தகையது?' என்ருன்.

கு :—அன்பு காரணமாகத் தீயதும் நல்லதாகத் தோன்றும் என் பதை, "வாரம் பட்டுழித் தீயவும் நல்லவாம்" (சீவகசிந்-888) என்பதால் அறியலாம். பெற்ரோர் அன்பு தீயதையும் நல்லதாகக் காணும் இயல் பினது என்பது தோன்ற 'மயங்கி' என்ருன். மயக்கம், உண்மையல்லா ததை உண்மையாகக் காணும் திரிபுணர்ச்சி. ஓகாரம் மூன்றும் ஐயவினு வில் வந்தன. முடிசூடுதற்கு இராமன் தக்கவன் என்பதைக் காரணத் தான் ஆராய்ந்து கூறியிருப்பின் உண்மையாவதல்லது, மேற்போக்காகத்

தோன்றிய மகிழ்ச்சியினுல் ஆராயாது உடன்பட்டிருப்பினும், மன்னவன் சொல்வழிநின்று, புனல்சாய்வழிச் சாயும் புல்போலத் தம் தன்மையொன்றின்றிக் கூறியிருப்பினும் உண்மையாகாதாதலின் இங்ஙனம் வினவினுன். 'என்னே' என்பது 'என்' எனக் குறைந்துநின்றது. 'உக' என்ற சொல்லடியாக உகவை என்பது தோன்றியது. (78)

## இராமனிடம் மக்கள் செய்யும் அன்பினே மன்னர் கூறல் 1478-1481

**1478.** இவ்வகை யுரைசெய விருந்த வேந்தர்கள்
செவ்விய நின்றிரு மகற்குத் தேயத்தோர்
அவ்வவர்க் கவ்வவ ராற்ற வாற்றுறும்
எவ்வமி லன்பினே யினிது கேளெனு.

**இவ்வகை உரைசெய, இருந்த வேந்தர்கள்,**
**'செவ்விய நின் திரு மகற்குத் தேயத்தோர்**
**அவ் அவர்க்கு அவ் அவர் ஆற்ற ஆற்றுறும்**
**எவ்வம் இல் அன்பினே இனிது கேள்' எனு.**

பொ :—தயரதன் இவ்வாறு சொல்ல, எதிர் இருந்த அரசர்கள் "செம்மை வாய்ந்த நின் திருமகனுகிய இராமனுக்கு நாட்டு மக்கள் அவ்வவர் தகுதிக்கு ஏற்ப அவர் அவர்களும் செய்கின்ற குற்றம் அற்ற அன்பினே இனிதாகக் கேள்'' என்று.

கு :—செவ்விய திருமகற்கு என்க. செவ்விய நின் எனத் தயரதற்கு அடையாக்கலும் ஆம். ஆற்ற – மிகுதியாக. ஆற்றுறும் - செய்யும். எவ்வம்-குற்றம். 'எனு' என்ற எச்சம் குளகமாய்ப் பின், 'என்றனர்' (1481) என்பதோடு முடியும். (79)

**1479.** தானமுந் தருமமுந் தவமுந் தன்மைசேர்
ஞானமு நல்லவர்ப் பேணு நன்மையும்
மானவ வையநின் மகற்கு வைகலும்
ஈனமில் செல்வம்வந் தியைக வென்னவே.

'தானமும், தருமமும், தவமும், தன்மை சேர்
ஞானமும், நல்லவர்ப் பேணும் நன்மையும்,
மானவ ! வையம் நின் மகற்கு வைகலும்
ஈனம் இல் செல்வம் வந்து இயைக என்னவே.'

பொ :—'மனுகுலத்துதித்த மன்ன ! நின் மகனுகிய இராமபிரானுக்கு நாள் தோறும் குறைவற்ற செல்வம் வந்து பொருந்துவதாக என்று கருதியே வையத்திலுள்ளோர் செய்யும் தானமும், தருமமும், தவமும் மேன்மை பொருந்திய ஞானமும் நல்லவரைப் போற்றுதலாகிய நற்செயல்களும் நடைபெறுகின்றன.'

கு :—மேற் செய்யுளில் கூறிய அவ்வவர் ஆற்ற ஆற்றுறும் எவ்வமில் அன்பினை இச்செய்யுளால் விளக்கியவாறு. நாட்டில் உள்ளோர், தானம் புரிதலும், தருமம் செய்தலும், நல்லவரைப் பேணலும் நின் மகற்கு ஈனமில் செல்வம் வந்து இயைக என்று கருதியே, தங்கள் நன்மையைக் கருதியன்று என்று நாட்டு மக்களின் நல்லன்பை விளக்கியவாறு. தாம் செய்யும் தானம் முதலியவற்றின் பலனைத் தம்மால் விரும்பப்பட்டோர்க்கு உரித்தாக்குவதுண்டு என்பதை: "காதற் குரங்கு கடைநாளெய்தவும், தானஞ் செய்வுழி அதற்கொரு கூறு, தீதறு கென்றே செய்தனள்" (சிலப்-அடைக்கலக்-175-177) என்றும், "விண்ணோர் வடிவம் பெற்றனனுதலின், பெற்ற செல்வப் பெரும் பயன் எல்லாம், தற்காத்தளித்தோள் தானச் சிறப்பென" (சிலப்-அடைக்-183-185) என்றும், சாயலன் மனைவி தானந்தன்னுல் குரங்கு தேவனுயிற்று என்பதை உணர்த்துதலால் அறியலாம். தானமாவது அறநெறியான் வந்த பொருள்களைத் தக்கார்க்கு உவகையோடும் கொடுத்தல். தருமமாவது ஈகை; அஃதாவது வறியராய் ஏற்றூர்க்கு மாற்றுது கொடுத்தல். நல்லவர் என்றது துறவியரை. நல்லவரைப் பேணலாவது உண்டியும் உறையுளும் மருந்தும் முதலியனவும் உதவி அவரைச் செந்நெறிச் செலுத்துதல். 'நடைபெறுகின்றன' என்பதை எச்சமாய் வருவித்து முடிக்க. "ஐந்தவித் தரிதிற் செய்த தவமுனக் காகவென்பார், பைந்துழாய்த் தெரியலாய்க்கே நல்வினை பயக்கவென்பார்" (கைகேசிசூழ்வினை. 88) எனப் பின்னர் மக்கள் கூறுவதையும் ஓர்க. (80)

1480. ஊருணி நிறையவு முதவு மாடுயர்
பார்நுகர் பழுமரம் பழுத்த தாகவும்
கார்மழை பொழியவுங் கழனி பாய்நதி
வார்புனல் பெருகவும் மறுக்கின் றூர்கள்யார்.

'ஊருணி நிறையவும், உதவும் மாடு உயர்
பார் நுகர் பழுமரம் பழுத்தது ஆகவும்,
கார் மழை பொழியவும், கழனி பாய் நதி
வார் புனல் பெருகவும், மறுக்கின்றார்கள் யார்?'

பொ :—'ஊரவர் நீருண்ணுதற்குரிய குளத்தில் நீர் நிறைதலையும், எளிதில் உதவும் தன்மையதாய்ப் பக்கத்தில் உயர்ந்து வளர்ந்துள்ள—மக்கள் நுகர்தற்குரிய பழங்களைக் கொடுக்கும்—மரம் பழுத்தலையும், மேகம் மழை பொழிதலையும், கழனியில் பாய்தற்குரிய ஆற்றில் நெடிதாகச் செல்லும் நீர் பெருகுதலையும், வேண்டாம் என்று மறுத்துக்கூறுவோர் யார்? (யாருமிலர்.)'

கு :—ஊராரால் உண்ணப்படுவது என்ற காரணம் பற்றிக் குளம் 'ஊருணி' எனப்பட்டது. 'பார்' என்பது ஆகுபெயராய் மக்களையுணர்த்திற்று. 'மாடுயர்' என்பது மரத்தைச்சுற்றியுள்ள வேதிகையை யுணர்த்திற்று எனலுமாம். "ஊருணி நீர் நிறைந்தற்றே யுலகவாம் பேரறிவாளன் திரு" (215) "பயன் மரம் உள்ளூர்ப் பழுத்தற்றாற் செல்வம் நயனுடையான்கட் படின்," (216) "கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட், டென்னாற்றுங் கொல்லோ உலகு" (211) என்ற குறட்கருத்துக்களை மூன்றடியினும் முறையே அமைத்துக் கூறியுள்ள அழகைக் காண்க. இராமபிரானிடத்தில் அரசச்செல்வம் வந்தடைதற்கு இவை உவமையாகக் கூறப்படுதலின் அவ் இராமபிரான், 'உலகவாம்' பேரறிவாளன் என்பதையும், நயனுடையான் என்பதையும் 'கடப்பாட்டாளன்' என்பதையும் குறிப்பால் விளக்கியவாறு காண்க. கடலில் நேரே சென்று பாயும் நதியினால் மக்கட்குப் பயனின்மையின், 'கழனி பாய் நதி' என்றார். ஊருணி நிறைதலாலும் பழுமரம் பழுத்தலாலும் கார் மழை பொழிதலாலும் நதி வார்புனல் பெருகுவதாலும் மக்கள் மகிழ்ச்சியும் பயனும் எய்துதல் போல இராமபிரானுக்கு அரசுமுடி புனைவதால், மக்கள், மகிழ்ச்சியும் பயனும் எய்துவார்கள் எனப் பொருள் வருவித்துரைக்க வேண்டுதலின், 'இது ஒட்டணி'. 'யார்,' என்ற வினா இன்மையுணர்த்திநின்றது. இதனால் மன்னர்கள், இராமபிரானுக்கு முடி புனைதல் தகவென நினைந்து கூறினார்கள் என்பதை நிறுவியவாறு. (81)

1481. பனையவா நெடுங்கரப் பருமயானையாய்
நினையவாந் தன்மையை நினைந்த மன்னுயிர்க்
கெனையவா றன்பின னிராம னீண்டவற்
கனையவா றன்பின வவையு மென்றனர்.

'பனை அவாம் நெடும் கரப் பரும யானையாய்!
நினை அவாம் தன்மையை நினைந்த மன்னுயிர்க்கு
எனையவாறு அன்பினன் இராமன், ஈண்டு அவற்கு,
அனையவாறு அன்பின அவையும்' என்றனர்.

பொ :—'பனைமரம் போன்ற நீண்ட துதிக்கையையும், பருமத்தையும் உடைய யானையை யுடைய மன்னனே! நின்னை விரும்புகின்ற தன்மையை நினைந்துகொண்டுள்ள நிலைபேறுடைய உயிர்கட்கு இராமபிரான் எவ்வாறு அன்பைக் காட்டுகின்ருனே அவ்வாறே அவ்வுயிர்களும் இங்கு இராமபிரானுக்கு அன்புடையனவாக விளங்குகின்றன.' என்று கூறினர்.

கு :—யானை, கவுளின்கண் ஒளித்த கல்போல மனத்தகத்து ஒளித்த கருத்தினன் தயரதன் என்பதை விளக்க, 'யானையாய்' என்று விளித்தனர்; 'ஊறின அன்பினை ஒளிக்குஞ் சிந்தையன்' என மேற் கூறியது காண்க. பருமம்–யானைமேற் றவிசு. யானை மன்னரைத் தேர்ந்து மாலையிட்டுக் காட்டும் தன்மையிற் சிறத்தலின் இராமனை மன்னனுக்க நினைந்த தயரதனை 'யானையாய்' என்று ஒப்புமை கருதி விளித்தனர் எனலுமாம். மன்னனுகிய நின்னை விரும்பும் தன்மையை மறவாத மன்னுயிர்களிடத்தில் இராமபிரான் அன்புடையனுக இருக்கின்ருன் என்றது, தந்தைக்கும் தனக்கு முள்ள ஒற்றுமையைப் புலப்படுத்தியவாறு. உயிர்கள் யாவும் இராமபிரானிடத்தில் அன்புமிக்கிருப்பதற்குக் காரணம் இராமபிரான் அவ்வுயிர்களிடத்தில் காட்டும் அன்பே என்பதை விளக்கியவாறு. "அன்பீனு மார்வமுடைமை யதுவீனு, நண்பென்னு நாடாச் சிறப்பு" (குறள்-74) என்பதை யீண்டைக்கு நினைக்க. இவ்விருதிறத்தார் அன்பும் இத்தகையது என்பதைப் பாலகாண்டத்துப் (314,-315) பாடல்களால் அறியலாம். (82)

### மன்னர்சொல் கேட்டுத் தயரதன் மகிழ்தல்

1482. மொழிந்தது கேட்டலு மொய்த்து நெஞ்சினைப்
பொழிந்தபே ருவகையான் பொங்கு காதலான்
கழிந்ததோ ரிடரினன் களிக்குஞ் சிந்தையான்
வழிந்தகண் ணீரினன் மன்னன் கூறுவான்.

மொழிந்தது கேட்டலும் மொய்த்து நெஞ்சினைப்
பொழிந்த பேர் உவகையான், பொங்கு காதலான்,
கழிந்தது ஓர் இடரினன், களிக்கும் சிந்தையான்,
வழிந்த கண் நீரினன், மன்னன் கூறுவான்.

பொ :—மன்னர்கள் இராமனைப்பற்றி மொழிந்ததைக் கேட்ட அளவில், நெஞ்சிடமெல்லாம் மொய்த்துக்கொண்டு பொழிந்த பெரிய மகிழ்ச்சியை யுடையனாய்ப் பொங்கி மேலெழுகின்ற காதலை உடையனாய், இடரெலாம் கழிந்தவனாய்க் களிக்கின்ற மனத்தை யுடையவனாய், வழிந்த கண்ணீரை யுடையனாய்த் தயரதமன்னன் சொல்லுவான்.

கு :—"ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச் சான்றோனெனக்கேட்ட தாய்" (69) என்ற குறளை நினைந்து இவ்வாறு கூறினார் என்பதைக் 'கேட்டலும்,' 'பேருவகையான்' என்ற சொல்லொப்புமையானும் உணரலாம். கேட்டபின் உவத்தல் பெண் தன்மையாலன்று ; ஆண் தன்மையார்க்கும் அதுவே தகவு என்பதை வற்புறுத்தியவாறு. முன்னர், ஊறிய உவகையை ஒளிக்குஞ் சிந்தையன் ஆனமையின் இப்பொழுது, நெஞ்சினை மொய்த்துப் பொழிந்த பேருவகையன் ஆனான் என்க. மன்னர் சொல்லைக் கேட்டுப் பேருவகையுற்றவன், மகன்பால் பேரன்பு கொள்ளல் இயல்பாகலின், 'பொங்கு காதலான்' என்றார். உலகமன்னர் யாரும் மாறுபடலின்றி இராமனை மன்னனாக ஏற்றுக் கொண்டார்கள் என்பதறிந்தமையால் தனக்குப்பின் வையகம் மறுகுறுமோ என்ற இடர் நீங்கப் பெற்றான் என்பார், 'கழிந்த தோரிடரினன்' என்றார். இருள் நீங்கிய வழி ஒளிபோல இடர் நீங்கின வழிக் களிப்பு மிகுதல் இயல்பாதலின், "களிக்கும் சிந்தையான்" என்றார். களிப்பு மிகுதியால் உவகைக் கலுழ்ச்சியுளதாயது என்பதை விளக்க, 'கண்ணீரினன்' என்றார். உவகையான், காதலான், கழிந்த தோரிடரினன், சிந்தையான் நீரினன் என்ற முற்றெச்சங்கள், கூறுவான் என்ற வினையொடு முடிந்தன. (83)

### தயரதன் இராமனை மன்னவர் கையடையாக்கல்

1483. செம்மையிற் றருமத்திற்
செயலிற் றீங்கின்பால்
வெம்மையி லொழுக்கத்தின்
மெய்ம்மை மேவினீர்
என்மக னென்பதென்
னெறியி னீங்கிவன்
நும்மகன் கையடை
நோக்கு மூங்கென்றான்.

"செம்மையில், தருமத்தில், செயலில், தீங்கின்பால்
வெம்மையில் ஒழுக்கத்தில் மெய்ம்மை மேவினீர்!
என் மகன் என்பது என்? நெறியின் ஈங்கு இவன்
நும் மகன்; கையடை நோக்கும் ஊங்கு" என்ருன்.

பொ :—'நேர்மையிலும், தருமத்திலும் செயலிலும் தீவினையில் கொண்டுள்ள வெகுட்சியிலும் ஒழுக்கத்திலும்,மெய்ம்மையாகப் பொருந்தியுள்ள மன்னர்களே! இராமனை என்மகன் என்று சொல்லுவது எதற்கு? அறநெறியால் நோக்கின் இங்குள்ள இவ்விராமன் நும்மகனே ஆவான்; நும் கையில் அடைக்கலமாகக் கொடுத்தேன்; நும்மகனுகவே நோக்குமின் இனி' என்ருன்.

கு :—தீவினையில் வெறுப்புள்ளவர் என்பார், 'தீங்கின்பால் வெம்மையில்' என்ருர். வெம்மை, இங்கு வெகுளியை உணர்த்திற்று; அது நெருப்பு எனப்படுதலின். முதியவராய் அரசியல் அநுபவம் முதிர்ந்த வேந்தர்களுக்கு இராமன் பால் உள்ள அன்பு தந்தைக்கு மகன்பால் உள்ள அன்பு போன்றதாகலின், 'நெறியினீங்கிவன் நும்மகன்' என்ருன். கையடை-அடைக்கலம்; கையில் அடைவித்தது என்ற காரண முணர்த்துவது. 'நோக்குமின்' என்பது, 'நோக்கும்' எனத் திரிந்துநின்றது. ஊங்கு என்றது எதிர்காலத்தை யுணர்த்திற்று. அது காலமும் இடமும் உணர்த்தும். தயரதன் தவஞ் செய்யப் போகும் எண்ணத்தனுதலின் இனிமேல் நும் மகனுகவே எண்ணிக் காப்பாற்றுங்கள் என்று மன்னரை வேண்டினுன். (84)

## தயரதன் இராமனுக்கு முடிபுனைநாள் பார்க்கப் போதல்

1484. அரசரை விடுத்தபின் ஞணை மன்னவன்
புரைதபு நாளொடு பொழுது நோக்குவான்
உரைதெரி கணிதரை யொருங்கு கொண்டொரு
வரைபொரு மண்டப மருங்கு போயினுன்.

அரசரை விடுத்தபின், ஆணை மன்னவன்,
புரை தபு நாளொடு பொழுதும் நோக்குவான்,
உரை தெரி கணிதரை ஒருங்கு கொண்டு, ஒரு
வரை பொரு மண்டப மருங்கு போயினுன்.

பொ :—அரசர்களை (மேற்கூறியாங்குப் பாராட்டி) அனுப்பிய பின்னர், ஆணை செலுத்தும் தயரத மன்னவன், குற்றமற்ற நாளும்

முழுத்தமும் நோக்கும்பொருட்டுக் கணிதநூலில் தேர்ச்சிபெற்ற கணிதரை உடன் அழைத்துக்கொண்டு ஒரு மலைபோன்ற மண்டபத்திற்குப் போனான்.

கு :—நாள் - நட்சத்திரம். பொழுது - முழுத்தம்; ஓரை எனலுமாம். இராமபிரானுக்கு முடி புனைதற்குப் பொருத்தமான நாளைப் பார்த்தற்கு ஏற்றவர் என்பது தோன்ற "உரைதெரி கணிதர்" என்றார். 'உரை' என்பது ஆகுபெயராய்க் கணிதநூலை உணர்த்திற்று. 'சொற்றிறம் தெரிந்த கணிதர்' எனலுமாம். புரை – குற்றம் ; 'உயர்வு' என்னும் பொருளுடையதாய்ப் 'பெருமைகெடற்குரிய நாள்' என மற்றொரு பொருளும் தொனிக்கக் கூறியுள்ள திறன் காண்க. (85)

கோசலையின் பணிப்பெண்கள் சிலர் மகிழ்தல்

1485. ஆண்ட வன்னிலை யாக வறிந்தவர்
★ பூண்ட காதலர் பூட்டவிழ் கொங்கையர்
நீண்ட கூந்தலர் நீள்கலை தாங்கலர்
ஈண்ட வோடின ரிட்டிடை யிற்றிலர்.

ஆண்டு அவன் நிலை ஆக, அறிந்தவர்,
பூண்ட காதலர், பூட்டு அவிழ் கொங்கையர்,
நீண்ட கூந்தலர், நீள் கலை தாங்கலர்,
ஈண்ட ஓடினர், இட்டிடை இற்றிலர்.

பொ :—அவ்விடத்தில் தயரதன் (நாள் பார்ப்பதில்) நிலை பெற்றானாக, அதை அறிந்த மகளிர் சிலர், (இராமன் முடிபுனைவில்) காதல் பூண்டவ ராய் உடல் பூரிப்பினால் கச்சின் பூட்டு அவிழப்பெற்ற நகில்களை யுடையவ ராய், அவிழ்ந்து நீண்ட கூந்தலையுடையவராய், நெகிழ்ந்து நீளும் ஆடையையும் தாங்கமாட்டாதவராய்க் கோசலையை நெருங்க ஓடினர் ; நல்லகாலமாக அவர்கள் வேகத்தால் நுண்ணிய இடை முரியாமல் நின்றது.

கு:—கணிதரோடு தயரதன் நாள் பார்ப்பதில் நெடிது பொழுது கழித்தான் என்பார், 'ஆண்டு அவன் நிலையாக' என்றார். கச்சின் பூட்டவிழ்தல், உடம்பு பூரிப்பினாலும் ஓட்டத்தின் மிகுதியாலும் நிகழ்ந்த தென்க. 'நீண்ட கூந்தலர்', 'நீள்கலை தாங்கலர்' 'இட்டிடை இற்றிலர்' என்பன அவர் ஓட்டத்தின் மிகுதியுணர்த்திநின்றன. இட்டிடை - நுண்ணிய இடை. தன் சிறுமையாலும் தன்மேலுள்ள பாரங்களின் பெருமையாலும் விரைந்த செலவாலும் இடை முரிந்தே இருக்க வேண்டும் என்பது கருத்து. (86)

## அம்மங்கையர் கோசலையை அடைதல்

**1486.** ஆடு கின்றனர் பண்ணடை வின்றியே
பாடு கின்றனர் பார்த்தவர்க் கேகரம்
சூடு கின்றனர் சொல்லுவ தோர்கிலார்
மாடு சென்றனர் மங்கையர் நால்வரே.

**ஆடுகின்றனர், பண் அடைவு இன்றியே**
**பாடுகின்றனர், பார்த்தவர்க்கே கரம்**
**சூடுகின்றனர், சொல்லுவது ஓர்கிலார்,**
**மாடு சென்றனர், மங்கையர் நால்வரே.**

பொ :—மங்கைப் பருவமுள்ள நங்கையர் நால்வர், மகிழ்ச்சி மிக்கு ஆடுகின்றனராய், பண்ணெடு இயைபு இல்லாமல் வேண்டியவாறே பாடுகின்றனராய்ச் சொல்லுவது யாது என்பது அறியாமல் எதிரில் பார்த்தவர்கட்கெல்லாம் சிரமேல் கரம் கூப்பு கின்றவருமாய்க் கோசலை யின் பக்கலில் புக்கனர்.

கு :—ஆடுகின்றனர், பாடுகின்றனர், ஓர்கிலார், சூடுகின்றனர் என்ற முற்று வடிவில்வந்த எச்சங்கள், 'சென்றனர்' என்ற வினை கொண்டு முடிந்தன. கரத்தை மலர் என்கின்ற கருத்தால் 'சூடுகின்றனர்' என அதற்கேற்ற வினை கொடுக்கப்பட்டது. மகிழ்ச்சி மிகுதியால் சொல்லமாட்டாதவராயினும், கைகூப்பி வணங்கத்தக்க முடிபுனை விழா வைக் கரம் சூடும் செய்கையால் குறிப்பிட்டார் என்க. மாடு - பக்கம். (87)

## கோசலை வினுதல்

**1487.** கண்ட மாதரைக்
காதலி னேக்கினள்
கொண்டல் வண்ணனை
நல்கிய கோசலை
உண்டு பேருவ
கைப்பொரு ளென்னது
தொண்டை வாயினிர்
சொல்லுமி னீண்டென்ருள்.

கண்ட மாதரைக் காதலின் நோக்கினுள்,
கொண்டல் வண்ணனை நல்கிய கோசலை,
'உண்டு பேர் உவகைப் பொருள் : அன்னது,
தொண்டை வாயினிர்! சொல்லுமின் ஈண்டு' என்றுள்.

போ :—கார்வண்ணனுகிய இராமபிரானைப் பெற்ற கோசலை, தன்னை வந்து கண்ட பெண்டிரை அன்பொடு பார்த்து, 'கொவ்வைக் கனிபோன்ற வாயினையுடைய மங்கைமீர் ! உங்கள் மகிழ்ச்சி மிக்க செயலால் பெரிய உவகைக்குக் காரணமாகிய பொருள் நிகழ்வுற்றது என்பதை அறிந்தேன்; அதை இப்பொழுதே சொல்லுங்கள்' என்று சொன்னுள்.

கு :—'கண்ட மாதரை' என்றது, தன்னைக் கண்ட மாதரை, தன்னுல் காணப்பட்ட மாதரை என இருபொருட்கும் ஏற்ப அமைந்துளது. 'கொண்டல் வண்ணனை நல்கிய கோசலை' என்றது, பேருவகைப் பொருள் கொண்டல் வண்ணனைச் சார்ந்ததாயிருக்கும் என்பதை ஊகித்தறிந்தாள் என்ற குறிப்புணர்த்திற்று. கண்டமாதரைக் காதலினேக்கினுள் என்றது, காட்சிக்கெளிமையும் கடுஞ்சொல்லள் அன்மையும் உணர்த்திற்று ; அரசிக்கும் அக்குணங்கள் இன்றியமையாதனவாம். உவகைப் பொருளைப் பொதுவகையான் அவர் மகிழ்ச்சியாலறிந்தும் சிறப்பு வகையால் அறிய அவாவி, "அன்னது ஈண்டு சொல்லுமின்" என்றுள். சொல்லுதற்குரிய அழகிய வாய்பெற்றும் விரைந்து சொல்லாமல் காலம் தாழ்க்கின்றீர்களே என்ற கருத்துத் தோன்ற, "தொண்டை வாயினிர் சொல்லுமின்" என்றுள். 'ஈண்டு' என்றது காலமுணர்த்தியது; 'இப்பொழுதே' என்க. (88)

## இராமன் முடிசூடுதலைத் தெரிவித்தல்

1488. மன்னெ டுங்கழல் வந்து வணங்கிடப்
பன்னெ டும்பகல் பாரளிப் பாயென
நின்னெ டும்புதல் வன்றனை நேமியான்
தொன்னெ டும்முடி சூட்டுகின் றுனென்றுர்.

"'மன் நெடுங்கழல் வந்து வணங்கிடப்
பல் நெடும் பகல் பார் அளிப்பாய்' என
நின் நெடும் புதல்வன்தனை நேமியான்,
தொல் நெடு முடி சூட்டுகின்றுன்" என்றுர்.

போ :—"ஆணைச்சக்கரமுடைய சக்கரவர்த்தி, நின்னுடைய நெடிய புதல்வனுகிய இராமபிரானை, 'மன்னர்கள் எல்லாம் வந்து நின் நீண்ட கழலணிந்த அடிகளில் வணங்கிடப் பல ஆண்டுகள் இப்பூமியை

ஆள்வாய்' என வழிவழிவந்த பழைய நீண்ட முடியைச் சூட்டப் போகின்றான்" என்றனர்.

கு :—'நெடும்பகல்' என்றது ஆண்டினை. 'பல்லாண்டு பார் அளிப்பாய்' என்பதே கருத்து. ஓராண்டு தேவர்க்கு ஒரு பகலாதலும் இங்கு நினைக்க. நெடியோன் என்ற தன் பழம் பெயர்க்கேற்ப, 'இராமன்' நெடியனாகவே இருக்கின்றமை யுணர்த்த, 'நெடும்புதல்வன்' என்றார். சூட்டப்போகின்றான் என்று கூற வேண்டிய எதிர்கால நிகழ்ச்சியை விரைவுபற்றிச் 'சூட்டுகின்றான்' என நிகழ்காலத்துக் கூறினார். (89)

## கோசலை மகிழ்வும் நடுக்கமும் அடைதல்

1489. சிறக்குஞ் செல்வ மகற்கெனச் சிந்தையில்
பிறக்கும் பேருவ கைக்கடல் பெட்பற
வறக்கு மாவட வைக்கன லானதால்
துறக்கு மன்னவ னென்னுந் துணுக்கமே.

'சிறக்கும் செல்வம் மகற்கு' எனச் சிந்தையில்
பிறக்கும் பேருவகைக் கடல் பெட்பு அற
வறக்கும் மா வடவைக் கனல் ஆனது ஆல்,
துறக்கும் மன்னவன் என்னும் துணுக்கமே.

பொ :—'தன் மகனுக்கு அரசச் செல்வம் வந்து சிறக்கும்' என்று சொல்லக் கேட்டதால் கோசலை சிந்தையில் தோன்றும் பெரிய மகிழ்ச்சிக் கடலின் தன்மை முழுதும் வற்றச் செய்யும் பெரிய வடவைக்கனல் ஆயது, மன்னவன் முடிதுறப்பான் என்பதால் உளதாகும் நடுக்கம்.

கு :—மகனுக்கு முடிசூட்டுவது கேட்டு உண்டாய மகிழ்ச்சியைக் கணவன் முடிதுறப்பான் என்ற நடுக்கம் அடக்கிவிட்டது என்பது கருத்து. உள்ளங்குளிரச் செய்யும் உவகையைக் கடலாகவும் உள்ளங் கொதிக்கச் செய்யும் துணுக்கத்தை வடவைத் தீயாகவும் உருவகஞ் செய்தார். உவகையும் துணுக்கமும் ஒருங்கெய்தினாள் என்க. பெட்பு - தன்மை (சூடாமணி). ஊழிமுடிவில் கடல்நீரை வற்றச்செய்து உலகை யழிப்பது வடவைத்தீ என்றும் அது பெண்குதிரையின் வடிவினதாக இருக்கும் என்றும் கூறுவர். துணுக்கம், வடவைக் கனலானது; என்று இயைக்க. "உறத்தகும்மர சிராமற்கென் றுவக்கின்ற மனத்தைத் துறத்தி நீயெனுஞ் சொற்சுடும்" (1444) எனச் சுமந்திரன் கூறியதும் காண்க. ஆல், ஏ, அசைநிலை. (90)

### கோசலை திருமால் கோயிலுக்குச் செல்லுதல்

1490. அன்ன ளாயு மரும்பெற லாரமும்
நன்னி திக்குவை யுந்நனி நல்கித்தன்
துன்னு காதற் சுமித்திரை யோடும்போய்
மின்னு நேமியன் மேவிட மேவினள்.

அன்னள் ஆயும், அரும் பெறல் ஆரமும்,
நல் நிதிக் குவையும் நனி நல்கித் தன்
துன்னு காதல் சுமித்திரையோடும் போய்,
மின்னும் நேமியன் மேவு இடம் மேவினள்.

பொ :—அத்தன்மையள் ஆகியும், (உவகைச் செய்தி கூறின பெண்டிர்க்குப்) பெறுதற்கு அரிய முத்துமாலையினையும் நல்ல பொருட் குவியலையும் கொடுத்துவிட்டுத் தன்பால் நெருங்கிய அன்புடைய சுமித்திரையோடும் சென்று, மின்னுகின்ற சக்கரப்படையுடைய திருநாராயணமூர்த்தி பொருந்தியுள்ள கோயிலை அடைந்தாள்.

கு :—உவகையோடு துனுக்கமும் எய்திய நிலையினையே, 'அன்ன ளாயும்' என்று சுட்டினர். துணுக்க மெய்தியவழியும் உவகைப் பரிசு கொடுத்த உயர்வுணர்த்தலின், 'அன்னளாயும்' என்ற உம்மை உயர்வு சிறப்பும்மை. நேமியன் என்றது, இட்சுவாகு முதலிய சூரியகுல மன்னர்க்குக் குலதெய்வமாக விளங்கும் திருநாராயணமூர்த்தியை. 'துன்னு காதல் சுமித்திரை' என்றமையால், கைகேயியின் நிலையை எதிர்மறுத்துணரச் செய்த குறிப்புணர்க. (91)

### கோசலை திருமாலை வணங்கல்

1491. மேவி மென்மல ராணில மாதெனும்
தேவி மாரொடுந் தேவர்கள் யாவர்க்கும்
ஆவி யும்மறி வும்முத லாயவன்
வாவி மாமலர்ப் பாதம் வணங்கினள்.

மேவி, மெல் மலராள் நிலமாது எனும்
தேவிமாரொடும், தேவர்கள் யாவர்க்கும்
ஆவியும் அறிவும் முதல் ஆயவன்
வாவி மா மலர்ப் பாதம் வணங்கினள்.

பொ :—கோயிலை அடைந்து, செந்தாமரையின் மெல்லிய மலரில் தங்கியுள்ள திருமகள் பூதேவி என்கின்ற இரு தேவிமாரோடும் (வீற்

றிருக்கின்ற) தேவர்கள் எல்லோர்க்கும் உயிரும் அறிவும் முதலுமாய் இருக்கும் திருநாராயணனுடைய, தடாகத்தில் பூத்த சிறந்த தாமரை மலர் போன்ற பாதங்களை வணங்கினாள்.

கு :—'மேவி வணங்கினாள்' என்க. தேவி மாரோடும் வீற்றிருக்கின்ற முதலாயவன் பாதம் என்றியைக்க. 'முதலும்' என்புழி உம்மை விகாரத் தால் தொக்கது. தேவர்களின் உயிராகவும் அறிவாகவும் இருக்கின்றான் என்றது, இறைவனின் பொதுவியல்பு கூறியவாறு. அவர்கள் உயிர்க் கும் அறிவிற்கும் காரணனாக இருக்கின்றான் என்றது, இறைவனின் சிறப்பியல்பு உணர்த்தியவாறு. முதல் - காரணம்; காரியத்திற்கு இன்றி யமையாததாய் முன்னிற்பது காரணம் என்னும் அளவை நூல் முறையும் காண்க. தேவர்க்கே இறைவன் அவ்வாறாயின் ஏனையோர்க்கு ஆதல் கூறாமலே அமையும். எனவே எல்லா உயிர்க்கும் உயிரும் அறிவும் முதலுமாயவன் இறைவன் என்பது விளங்கிற்று. தேவர்கள் யாவர்க் கும், யாவர்க்கும் எனக் கூட்டிப் பிரித்தல் (யோகவிபாகம்) என்ற நூற் புணர்ப்பால் தேவர்கள் எல்லோர்க்கும் ஏனை யாவர்க்கும் எனப் பொருள் கூறலுமாம். இங்ஙனம் இருக்கின்ற இறைவன், இராமனுடைய ஆவி யாக நின்று நீடித்தும், அறிவாக நின்று உலக மாண்டும், முதலாக நின்று பாதுகாத்தும் வருதற்குரியன் என்ற குறிப்புணர்த்தியவாறு. அப் பொழுது அலர்ந்த செந்தாம்மரை யென்பார், 'வாவிமாமலர்' என்றார். பூவினுட் சிறந்தது பொங்கு தாமரை யாதலின், 'மாமலர்' எனப் பட்டது. (92)

### கோசலை, இறைவனை வேண்டல்

1492. என்வ யிற்றரு மைந்தற் கினியருள்
உன்வ யிற்றதென் றாளுலகி யாவையும்
மன்வ யிற்றி னடக்கிய மாயனைத்
தன்வ யிற்றி னடக்குந் தவத்தினாள்.

'என் வயிற்று அரு மைந்தற்கு இனி அருள்
உன் வயிற்றது' என்றாள், உலகு யாவையும்
மன் வயிற்றின் அடக்கிய மாயனைத்
தன் வயிற்றின் அடக்கும் தவத்தினாள்.

பொ :—உலகங்கள் எல்லாவற்றையும் நிலைபேறுடைய தன் வயிற்றில் ஒடுங்கச் செய்த திருமாலைத் தன் வயிற்றில் கருவாக அடக்கி வைத் திருந்த தவத்தையுடையாளாகிய கோசலை, (அந்நாராயண மூர்த்தியை நோக்கி) 'என் வயிற்றில் நின்னருளால் பிறந்த அரிய மைந்தனுக்கினி

இராமனுக்கு(த் துணையாய் நின்று) அருள் செய்வது, இனி உன்கண்ணது' என்றாள்.

கு :—'என்வயின்தரு' எனப் பிரித்தலுமாம். 'வயினது' என்பது, வயிற்றது என விகாரப்பட்டது. மன் – நிலைபேறு. நிலைபெறுது ஊழி வெள்ளத்தில் அழியுமுயிர்களை அடக்கும் வயிறு ஆதலின், 'மன்வயிறு' எனப்பட்டது. மன் – பெருமையுமாம். மாயன் – கருநிறமுடையவன். பிறர் அறிய இயலாத மாய விளையாட்டையுடையவன் எனலுமாம். உலகம் யாவுமடக்கும் பெருவயிறனைத் தன் ஆலிலையன்ன வயிற்றில் அடக்கியிருந்த பெருமை கோசலைக்கு முற்செய் தவத்தானன்றே வந்தது; என வியந்தவாறு. 'ஒருபக லுலகெலா முதரத்துட்பொதிந், தருமறைக் குணர்வரு மவனை...திருவுறப் பயந்தனள் திறங்கொள் கோசலை' (பால-284) என்பது காண்க. மாயனைத் தன் வயிற்றிலடக்கிய தவத்தினள் ஆகிய கோசலை, 'இனி அருள் உன்வயிற்றது' என வேண்டி, மகப்பெற்றோர் செய்யத்தகும் வழிபாட்டிற்கு வழிகாட்டியவாறு. (93)

## கோசலைகோதானம் புரிதல்

1493. என்றி றைஞ்சியவ் விந்திரை கேள்வனுக்
கொன்று நான்மறை யோதிய பூசனை
நன்றி ழைத்தவ ணல்ல தவர்க்கெலாம்
கன்று டைப்பசு வின்கட னல்கினாள்.

என்று இறைஞ்சி, அவ் இந்திரை கேள்வனுக்கு
ஒன்றும் நான்மறை ஓதிய பூசனை
நன்று இழைத்து, அவண் நல்ல தவர்க்கு எலாம்
கன்று உடைப் பசுவின் கடல் நல்கினாள்.

பொ :—என்று சொல்லி வணங்கி, அந்தத் திருமகள் கணவனாகிய நாராயணமூர்த்திக்குப் பொருத்தமானதும், நான்கு வேதங்களில் ஓதப்பட்டதும், ஆகிய பூசனையை நன்றாகச் செய்து பின், அங்கிருந்த நல்ல தவத்தினோர்க்கு எல்லாம் கன்றுகளையுடைய பசுக்களின் கூட்டத்தை மிகுதியாகக் கொடுத்தாள்.

கு :—இந்திரை – திருமகள். பாற்பயன் தருதற்குரியது என்பார், 'கன்றுடைப் பசு' என்றார். தானம் கொடுத்த பசுக்களின் பன்மை தோன்றப் 'பசுவின் கடல்' என்றார். 'நல்ல தவர்க்கு' எனத் தானம் பெறுதற்குத் தகுதியுடைமை விளக்கியவாறு. அடங்கலர்க்கீந்த தானம் தீங்குவிளைத்தலின் (சீவக – முத்தி – 244) நல்ல தவர்க்கே தானஞ் செய்தாள் என்க. (94)

### கோசலை சொன்னதானம் முதலியன செய்தல்

1494. பொன்னு மாமணி யும்புனை சாந்தமும்
கன்னி மாரொடு காசினி யீட்டமும்
இன்ன யாவையு மீந்தன ளந்தணர்க்
கன்ன தானமு மாடையு நல்கினாள்.

பொன்னும், மா மணியும், புனை சாந்தமும்,
கன்னிமாரொடு காசினி ஈட்டமும்,
இன்ன யாவையும் ஈந்தனள், அந்தணர்க்கு,
அன்ன தானமும், ஆடையும் நல்கினாள்.

பொ :—பொன்னும் சிறந்த மணிகளும் பூசுதற்கு உரிய சந்தனமும், கன்னிப்பெண்டிரும் பூமியும் இவைபோல்வனவும் ஆகிய எல்லாவற்றையும் கொடுத்து, அந்தணர்க்கு அன்னமும் ஆடையும் தந்தாள்.

கு :—'அந்தணர்க்கு' என்பது இடைநிலை விளக்காய் முன்னும் பின்னும் சென்றியைந்தது. அன்றி, முன்கூறிய தவத்தினர்க்கே பொன் முதல் பூமிவரையுள்ளவற்றைக் கொடுத்து அந்தணர்க்குச் சோறும், கூறையும் மட்டும் நல்கினாள் எனலுமாம். காசினி - பூமி. ஈட்டம், என்றது, பல காணிகளையும் வேலிகளையு முணர்த்திற்று. (95)

### கோசலை நோன்பிருத்தல்

1495. நல்கி நாயக னாண்மலர்ப் பாதத்தைப்
புல்லிப் போற்றி வணங்கிப் புரையிலா
மல்லன் மாளிகைக் கோயில் வலங்கொளாத்
தொல்லை நோன்புகள் யாவுந் தொடங்கினாள்.

நல்கி, நாயகன் நாள் மலர்ப் பாதத்தைப்
புல்லிப் போற்றி வணங்கிப் புரை இலா
மல்லல் மாளிகைக் கோயில் வலம் கொளாத்
தொல்லை நோன்புகள் யாவும் தொடங்கினாள்.

பொ :—(தானங்களை) நல்கிப் பின் திருநாராயணமூர்த்தியின் அன்று அலர்ந்த மலர்போன்ற திருவடிகளைக் கையால் தொட்டுப் போற்றிகூறி வணங்கிக் குற்றம் இல்லாத வளம் வாய்ந்த மாளிகைக்குள் இருக்கும்

அக்கோயிலை வலங்கொண்டு போய்ப் பழமையாகத் தாய்மார் செய்தற் குரிய நோன்புகள் எல்லாவற்றையும் செய்யத் தொடங்கினுள்.

கு :—புல்லுதல் - கையால் தொடுதல்; அன்றி, 'அத்திருவடிகளைத் தழுவி' எனலும் ஆம். போற்றி கூறுதல் – துதித்தல்; தோத்திரம் கூறுதல். ஆயிரமோலியான் ஆலயம் மாளிகையில் ஒரு பகுதியில் இருந்ததென்பதை இங்கு விளக்கினர். தொல்லை – பழமை. நோன்பு - விரதம். கோயில் வலங்கொளாப் புரையிலா மல்லல் மாளிகையில் நோன்புகள் தொடங்கினுள் என மாற்றி உரைத்தலுமாம். (96)

மந்திரப் படலம் முற்றிற்று.

---

# 2. மந்தரை சூழ்ச்சிப்படலம்

இராமபிரானுக்கு முடிசூட்டப்போகின்றார்கள் என்பதை அறிந்த மந்தரை என்பவள், தன் தலைவியாகிய கைகேயிக்குக் கலக மூட்டுதலைத் தெரிவிக்கும் பகுதியாதலின் இது, 'மந்தரை சூழ்ச்சிப்படலம்' என்று பெயர் பெறுகின்றது. சில சுவடிகளில் இப்படலம், 'மந்தரைப் படலம்' எனவும், சிலசுவடிகளில் சூழ்ச்சிப் படலம் எனவும் குறிக்கப் பெற்றுள் ளது. வேறு சில சுவடிகளில் இப்படலம், வசிட்டன் உபதேசப் படலம், மந்தரைப் படலம் என இரண்டாகவும், நலந்தெரி படலம், மந்தரை சூழ்ச்சிப் படலம் என இரண்டாகவும் பிரித்துக் குறிக்கப்பெற்றுள்ளது. கூனி கைகேயிக்கு வஞ்சனையான ஆலோசனை கூறும் படலம் என்பது பொருள்.

தயரதன், சோதிடர்களை நோக்கி இராமனுக்கு முடிபுனைதற்கு உரிய நாள் பார்த்துச் சொல்லும்படி கூறுகின்றான். கணித மாக்களும் அவ்வாறே ஆராய்ந்து பார்த்து நாளை நல்லநாள் என்கின்றனர். அது கேட்ட தயரதன் வசிட்டனை வரவழைத்து, "இராமனுக்கு முடி புனைநாள் நாளையே யாதலின் அவனுக்கு முடிபுனையுமுன் செய்தற் குரிய சடங்குகளைச் செய்து உறுதிப் பொருளையும் உரைக்க" என்று கூறுகின்றான். வசிட்டனும் மகிழ்ச்சியோடு விரைந்து இராமன் திரு மாளிகைக்குச் சென்று, தன்னை வணங்கி வரவேற்ற அவ்விராமனை நோக்கி, "போரில்வல்லவனே! நாளை மன்னவன் உன்னை மன்னன் ஆக்கப் போகின்றான். மன்னனுக்கேற்ற சில உறுதிப் பொருள்களைக் கூறுகின்றேன்," என்று இராமனுக்குச் சிறந்த நீதிகளைச் செவியறி வுறுத்துகின்றான். பின்னர், அவ்விராமனோடு, திருமால் கோயிலையடைந்து வணங்கி அக்கடவுள் முன்னிலையில் அவனுக்குத் திருமஞ்சனம் ஆட் டிப் பின் செய்ய வேண்டிய சடங்குகளைச் செய்து தருப்பைப் புல்லில் இருந்து இராமனை நோன்பு மேற்கொள்ளுமாறு செய்துவிட்டு, மன்ன னுக்கு அறிவிக்கின்றான். அதை அறிந்த தயரதன், நகரத்தை அலங் கரிக்குமாறு மக்களுக்குப் பறையறைந்து தெரிவிக்கும்படி கட்டளையிட, வள்ளுவரும் அரசன் கட்டளையைப் பறைசாற்றி அறிவிக்கின்றனர். இராமன், நாளை முடிபுனைவான் என்பதைக் கேட்ட நகரமாந்தர், மகிழ்ச்சி மிக்கவராய் அழகிய நகரத்தை மேலும் அழகு செய்கின்றார் கள். அதைக் கூனி காண்கின்றாள். இ ரா ம ன் முடிசூடும் விழா நாளை என்பதை அறிந்து கொள்கின்றாள். இளமைக்காலத்துத் தன் கூன்சிதைய உண்டை தெறித்த இராமன், மன்னன் ஆவது, அவ ளுக்குப் பொறுக்கவில்லை. பொறாமையால் உளம் வெதும்பிக் கோபத் துடன் கைகேயியின் மாளிகைக்கு விரைகின்றாள். பஞ்சணையில் துஞ்சும்

வஞ்சியனையாளின் பஞ்சின் மெல்லடியை மெல்லத் தீண்டி எழுப்புகின்ருள். "உன்னை வருத்தப் பெருந்துன்பம் வருகின்றபொழுது வருத்தம் கொள்ளாமல் உறங்குகின்ருயே! பொருந்துமா?" என்றுகூறி இராமன் முடிசூடப்போவதைத் தெரிவிக்கின்ருள். கைகேயி மகிழ்ந்து, சிறந்த மணிமாலையைக் கூனிக்கு மகிழ்ச்சிப் பரிசாக அளிக்கின்ருள். அம்மாலையைத் தரையில் வீசிவிட்டுக் கோபமிக்குப் பலவகையான கற்பனைத்திறன் மிக்க சொற்களால் படிப்படியாகக் கைகேயியின் உள்ளத்தைக் கவர்ந்துகொள்கின்ருள். முன் வெறுத்துக்கூறிய கைகேயி, பின் கூனியை விரும்பித் தழுவிக்கொண்டு, பரதன் அரசு எய்தும் வழியாது? என்று கேட்கின்ருள். கூனி, மகிழ்ந்து அவளைப் புகழ்ந்து, "சம்பரன் போரில் நீ துணை செய்ததற்காக மன்னவன் மகிழ்ந்து அருளிய வரம் இரண்டும் கொண்டு, ஒருவரத்தால் பரதனுக்கு முடிசூட்டுதலும், மற்றொருவரத்தால் இராமனைக் காட்டிற்கு ஓட்டுதலும் செய்க" என்று உபாயம் கூறுகின்ருள். அவள் கூறிய உபாயத்தைக் கேட்டவுடன் மகிழ்ந்து அவளைத் தழுவிப் பாராட்டி அனுப்பிப் பின் தன் அணிகலன்களை யெல்லாம் கழற்றியெறிந்து கரிய கூந்தலில் சொருகிய மாலையையும் பிய்த்து எறிந்துவிட்டு மலரணை விடுத்துத் தரையில் புரண்டு பொலிவிழந்து கிடக்கின்ருள்: என்பது இப்படலத்துக் கூறும் கதைச் சுருக்கம்.

## வான்மீகத்தோடு வேறுபடும் இடங்கள்.

இம் மந்தரைசூழ்ச்சிப் படலத்தில் கம்பர் முதல் நூலை யொட்டியே பெரும்பாலும் கூறிச் செல்கின்ருர்.

முடிசூடிக் கொள்ளப்போகும் இராமபிரானுக்கு வேண்டிய நீதிகளைத் தயரதனே கூறியதாக வான்மீகம் கூறும். கம்பர், தயரதன் வேண்டுகோளின்படி வசிட்டரே இராமனுக்கு நீதிகளைச் சொன்னதாகக் கூறியுள்ளார். அறம் கூறுவதற்குத் தயரதனைக் காட்டிலும் மறையோதுவித்த வசிட்டனே தக்கவன் என்பது கம்பர் கருத்தாக இருக்கலாம்.

முடிசூட்டு விழாவின் முன்னளில் சீதாபிராட்டியும் இராமபிரானும் உபவாசம் மேற்கொள்ளும்படி செய்துவிட்டு, வசிட்டன் போய் அரசனுக்கு அறிவித்ததாகவும், வசிட்டன் போனபின் சீதையோடு இராமன், நாராயணன் கோயிலுக்குச் சென்று வணங்கி ஓமத்தீயில் அவிசு கொடுத்து எஞ்சியதைச் சீதையும் தானும் அருந்திவிட்டு அந்த நாராயணனை உள்ளத்தே இருத்தி அவன் ஆயிரம் நாமங்களையும் சொல்லித் துதித்துவிட்டு அச் சந்நிதியிலேயே தருப்பைப் புல்லைத் தானே பரப்பி அதன்மேல் பள்ளி கொண்டதாகவும் முதல் நூல் கூறும்.

வசிட்டர் இராமபிரானுக்கு நீதி கூறிமுடித்தவுடன் இராமனை மட்டும் அழைத்துக்கொண்டு நாராயணன்கோயிலுக்குச் சென்று வணங்கச் செய்து அச்சந்நிதியில் அவ்விராமனுக்கு மஞ்சனம் ஆட்டி உரிய சடங்குகளைச் செய்துமுடித்துத் தருப்பை விரித்து அதில் இராமனை இருக்கச் செய்ததாகக் கம்பர் கூறுகின்றார். சீதையும் உடன் உபவாசம் இருந்ததாகக் கூறவில்லை.

முதல் நூலில் சொல்லப்படாத ஒன்றைக் கம்பர் கூறியுள்ளார். அது, இராமன் இளமைப் பருவத்தில் கூனியின் கூன்சிதைய உண்டை தெறித்தது. இதுவே கூனியின் கலகத்திற்குக் காரணம் என்பது கம்பர் கருத்து. இதை ஆழ்வார்கள் பாசுரங்களால் அவர் அறிந்து கூறியுள்ளார் எனலாம்.

## படலப்பொருட்சிறப்பு.

இப்படலத்தில் இராமபிரானுக்கு வசிட்டர் அரசியலறம் கூறும் பகுதி ஆழ்ந்து சிந்திக்கத்தக்க பொருளாழ முடையது. பதினாறு பாடல்களில் இதை விரிக்கின்றார். தொடக்கத்தில் நான்கு செய்யுட்களில் அந்தணரின் சிறப்பை விளக்கி அவர் ஏவிய பணியை மனமுவந்து செய்யுமாறு இராமனுக்கு வசிட்டர் சொல்லுகின்றார். வள்ளுவர் நீத்தார் பெருமையில் கூறிய சிறந்த கருத்துக்களையே இங்கு அமைத்துக் கூறுகின்றார் கம்பர். முதலில் இவ்வந்தணராகிய நீத்தாரின் சிறப்பை ஏன் கூறவேண்டும்? என்று நோக்கினால் ஒரு கருத்துப் புலப்படுகின்றது. இராமன், மணிமுடி சூடாமல் சடைமுடி தாங்கி, நாடாளாமல் காடாளப் போகின்றான் என்பதை நன்கு அறிந்தவர் வசிட்டர் ஆகலின் முதலில் அவ்வந்தணர் பெருமை கூறி அவர்க்குப் பணிபுரியுமாறு சொல்லியுள்ளார். உடனே அவன் செய்ய இருப்பதும் இப்பணியே என்பதை "மாதவர்க்கு வழிபா டிழைத்தரும் போதமுற்றிப் பொருவரு விஞ்சைகள், ஏதமற்றன தாங்கி" (நகர் நீங்கு-24) என இராமன் கோசலைக்குக் கூறுமாற்றால் அறியலாம். இதைப் பின் பரத்துவாச முனிவர் முதலியவர்களின் தொடர்பாலும் அறியலாம்.

நாட்டில் போர் நிகழாமல் இருப்பதற்குக் கூறும் காரணம் மிகவும் பாராட்டத்தக்கதாக வுள்ளது (13). இக்காலத்திற்கும் ஏற்றதாக வுள்ளது. யாரொடும் பகை கொள்ளாமலிருப்பதே அது. நில முழுதாளும் நீண்முடி வேந்தர்க்குக் கடினமாய்த் தோற்றினும் அக் கொள்கையை மேற்கொண்டால் உலகிற்கு உளவாம் நன்மைகள் மிகப்பல. போரினால் தான் புகழ்விளையும் என்பார் கருத்தை மறுத்துப் 'போரொடுங்கும் புகழொடுங்காது' என்று கூறுவதும், போர் ஒடுங்குவதால் படைகள் பொருது மடியாமல் நெடிது வாழும் என்று கூறுவதும், மன்னனும் வேரொடும் கெடவேண்டிய நிலை தோன்றாது என்பதும் இக்காலத்து உலக வல்லரசுகள் சிந்தித்துச் செயற்படுத்தற்குரிய சீரிய கருத்துக்களாகும்.

அரசர் ஐம்பொறிகளால் நுகரும் நுகர்ச்சிகளைக் குறைத்துக் கொண்டு நாளும் நாட்டில் பொருளைப் பெருக்க வேண்டும் என்பதும் பகைவர் நடுங்கப் பல துறைகளிலும் வல்லமை பெற்றவராக வாழ வேண்டும் என்பதும் அரசபதவியைப் போகம் நுகர் பதவியாகக் கொள்ளாமல் வாளின்மேல் வரும் மாதவமாகக் கருதவேண்டும் என்பதும் (14) கம்பரின் அரசியல் அநுபவத்தைச் சிறக்க விளக்குகின்றன. இக்காலத்து அரசியற் பதவியில் உள்ளோர் என்றும் மறவாது போற்றக் கூடிய சிறப்புடைய கருத்துக்களாக இவை மிளிர்கின்றன.

மன்னனை மக்கட்கு உயிராகக் கூறும் பழங் கொள்கையை மாற்றி, "வையம் மன்னுயிராக அம் மன்னுயிர், உய்யத் தாங்கு முடலன்ன மன்னனுக்கு" (17) எனக் குடிமக்களை உயிராகவும், மன்னனை அவ்வுயிர் வாழுமாறு தாங்குகின்ற உடல் போன்றவனுகவும் கூறியுள்ள கருத்துக்கள், முடியாட்சியில் குடியாட்சி காணும் கம்பரின் முற்போக்கினை நன்கு எடுத்துக் காட்டுகின்றன. குடிகளைக் காக்கவே முடிமன்னன் உளன்; தான் வேண்டிய போகத்தை வேண்டியாங்குத் துய்க்கவன்று என்பதும், குடிமக்கள் வாழ்வின்றேல் மன்னவன் வாழ்வு இல்லை என்பதும், உயிர்கள் மன்னுயிராதல் போலக் குடிமக்கள் என்றும் நிலைபேறுடைய நிலைமையுடையவர்கள் என்பதும், உயிர் தாங்கும் உடல், காலம் வரும் போது நீங்க, அவ்வுயிர்க்கு வேறொரு உடம்பு வருதல்போல மன்னனும் காலம் வரும்போது நீங்க வேறொரு தலைவன் வருவது இயல்பு என்பதும், உடம்பு போன்ற மன்னனைக் காட்டிலும் உயிர் போன்ற குடிமக்களே சிறப்புடையர் என்பதும், மிகத் தெளிவாக இங்கு விளங்குகின்றன. இவ்விருபதாம் நூற்றாண்டில் அரசியல் அறிஞர் எண்ணுகின்ற எண்ணங்கட்கெல்லாம் மேலான எண்ணங்களைக் கம்பர் எண்ணிக் கூறியுள்ளமை நம்மை வியப்பிற்குள்ளாக்கி அவற்றை நயப்பிக்கின்றது.

வசிட்டர் இறுதியாகக் கூறிய நீதி, இராமாயணத்தில் பின் வரும் விளைவுகளையெல்லாம் நுண்ணிதின் விளக்க எண்ணிவைத்த மகுடம் போலக் காணப்படுகின்றது (21). தயரதன், கைகேயியினிடத்துவைத்த காமமே இராமனைக் காட்டிற்கு ஓட்டியது; இராமன் சூர்ப்பணகையினிடம் காதல் உடையான் போல் பேசியதே சீதையைப் பிரியச்செய்தது; அவன் சீதையின்பால் கொண்ட காமமே பொய்மான் பின் போகச் செய்து, இராவணன் சீதையைக் கவர்ந்துசெல்ல இடமுண்டாக்கியது. வாலி உருமையின்பால் கொண்ட காமமே அவனை அழித்தது; இராவணன் சீதைமேல் கொண்ட காமமே அவனைக் குலத்தோடும் அழியச் செய்தது. காமத்தால் அழிவுண்டாகும் என்பதை உணர்த்தவந்ததே இராமாயணம் என்னலாம். இவற்றை நோக்குங்கால், "மங்கையரால் வரும், காமமில்லையெனில் கடுங்கேடெனும், நாமமில்லை நரகமுமில்லையே" (1516) என்பது எத்துணை உண்மையானகூற்று! என்பது விளங்கும். வசிட்டர் கூறியவற்றை அப்படியே ஒழுகிக்காட்டும் இராமனும்

சிறிது வழுவ நேர்ந்ததும் அதனால் கடுங்கேட்டினை அடைய நேர்ந்ததும் பின்னர்க் காணலாம். இதனால் இறுதியில் கூறிய நீதியின் இன்றியமையாமை தெற்றெனப் புலப்படுதல் காண்க.

கூனி, இப்படல நிகழ்ச்சியில் சிறப்பான உறுப்பினளாக விளங்குகின்றாள் என்பது படலப் பெயரானே நன்கு விளங்கும். இவள் உளநூல் உணர்ந்த உயர்வுடையவளாக விளங்குகின்றாள். "உறுகணோம்பல் தன்னியல்பாகலின், உரியதாகும் தோழிகண் ணுரனே" (பொருள்–239) எனத் தொல்காப்பியர் கூறியது வேறொரு வகையில் இவள் பால் பொருந்தியிருப்பது காணலாம். தோழிக்கு உரிய உரம் இவள் பால் அளவு கடந்து காணப்படுகின்றது. "இராமனைப் பயந்த எற் கிடருண்டோவென்றாள்" (1542) என்று கூறிய அன்பு மிகு கைகேயியின் மனத்தைப் படிப்படியாக மாற்றி அவ்விராமனையே காட்டிற்கு ஓட்டுமாறு செய்வித்த திறமை கூனிக்கே சிறப்புரிமையாகும். "எனக்கு நல்லையுமல்லை நீ யென்மகன் பரதன், தனக்கு நல்லையு மல்லை" என்று வெகுண்டு கூறிய கைகேயியை, "எனையுவந்தனை யினியை யென்மகனுக்கும்" என மகிழ்ந்து புகழ்ந்து உடன்படும் வண்ணம் செய்த திறல் கூனியின் பெருவிறலன்றோ? இக்கூனியின் சூழ்ச்சி யில்லையேல் இராமாயணமே நிகழ்ந்திராது! இராமன் புகழ் உலகமெலாம் பரவி நிலைபெற்றிராது என்பது உண்மையாதலின், கம்பர் கைகேயியைப் பற்றிக் கூறும், "தூ மொழி மடமான், இரக்கமின்மையன்றோ இன்றிவ்வுலகங்கள் இராமன், பரக்குந் தொல்புக ழமுதினைப் பருகுகின்றனவே" என்ற புகழ்ச்சி கூனிக்கும் ஏற்கும் எனலாம்.

கூனியின் சொற்படி கைகேயி அணிகலன்களை அகற்றிவிட்டுப் பூவுதிர்ந்த கொம்பெனத் தரையில் படுத்துக்கொண்டிருந்த காட்சியை விளக்கக் கம்பர் தற்குறிப் பேற்றமாகக்கூறிய, "சனகியாம் கடிகமழ் கமலத்து, அவ்வை நீங்குமென் றயோத்திவந்தடைந்த அம்மடந்தை, தவ்வையாமெனக் கிடந்தனள் கேகயன்றனயை" என்ற அடிகள் கற்பனையின் உச்சநிலையில் நிற்கின்றன. இந்தக் கற்பனைக்கு ஒரு சிறந்த மூலம் கண்டு காட்டியுள்ள தன்மை பாராட்டற்குரியது. பொறாமையுடையவரிடத்தைச் சீதேவி வெறுத்து அவள் தமக்கையாகிய மூதேவிக்குக் காட்டிவிட்டு நீங்குவாள் என்ற கருத்து அமைய, "அவ்வித் தழுக்காறுடையானைச் செய்யவள் தவ்வையைக் காட்டிவிடும்" (குறள்-167) என்று திருவள்ளுவர் கூறியுள்ளார். அவர் ஆண்பாலில் வைத்து விளக்கிய நீதி பெண்பாலுக்கும் ஒக்கும் என்பதைக் கம்பர் காட்டுகின்றார். அக்குறளின் கருத்தை விளக்குதற்கு இதனினும் சீரிய இடம் வேறும் உண்டோ? என்னுமாறு கிடைத்த அவ்விடத்தில் அக்குறளின் எதுகையும் இவ்விருத்தத்தில் அமைத்துத் தான் குறித்த குறள் இதுதான் என்பது தோன்ற வைத்த அருமை, பெருமை மிக்கதாகும்.

———

# 2. மந்தரை சூழ்ச்சிப் படலம்

## தயரதன் சோதிடரை நாள் கேட்டல்

1496. கடிகமழ் தாரினுன் கணித மாக்களை
★ முடிவுற நோக்கியோர் முகமன் கூறிப்பின்
வடிமழு வாளவற் கடந்த மைந்தற்கு
முடிபுனை கடிகைநாள் மொழிமி னென்றனன்.

கடி கமழ் தாரினுன் கணித மாக்களை
முடிவுற நோக்கி, ஓர் முகமன் கூறிப் பின்,
'வடி மழு வாளவற் கடந்த மைந்தற்கு
முடி புனை கடிகை நாள் மொழிமின்' என்றனன்.

பொ :—மணம் கமழும் மாலையணிந்த தயரதன், கணித நூல் வல்ல சோதிடரை நன்கு பார்த்து ஒப்பற்ற முகமன்மொழி சொல்லிப் பின்னர், 'கூரிய மழுவாள் தாங்கிய பரசுராமனை வென்ற மைந்தனாகிய இராமபிரானுக்கு முடிபுனைதற்குரிய நாழிகையும் நாளும் ஆராய்ந்து சொல்லுங்கள்' என்று கூறினான்.

கு :—மாக்கள் என்பது ஐயறிவுடையோர்க்குப் பெயராகும் என்பது தொல்காப்பியர் கருத்து; ஆயினும், அச்சொல், 'மக்கள்' என்ற பொருளிலும் வருவதுண்டு "தவஞ்செய் மாக்கள்" (பொருநராற்றுப்-91) "நூல்வழி நுனித்த நுழைநுண் ணுணர்வினர் நால்வகைக் கோலத்து நால்வகை மாக்கள்" (பெருங்கதை-2-5-102) என்பன காண்க. முகமனாவது, விண்ணில் இயங்குகின்ற கோளும் நாளும் குறிக்கொண்டு நோக்கி மண்ணில் இயங்கும் மக்கட்கு வருபயன் கூறுவோர் சோதிடரே என்பது போன்ற மொழி என்க. மேல், "சேவகன் சேவகஞ் செகுத்த சேவகற் காவதிவ் வுலகம்" என மன்னர் கூறிய வாய்மைமொழி மன்னவன் மனத்தே மன்னியிருத்தலின், இங்கு "மழுவாளவற் கடந்த மைந்தற்கு" என்றான். கடத்தல்-வஞ்சியாது நேர் நின்று வெல்லல். நாள்-நட்சத்திரம். கடிகை - நாழிகை. முடிபுனைவைக் கடிதல் செய்தற்குரிய நாள் என வேறும் ஒரு பொருள் தோற்றுதல் காண்க.

இச்செய்யுள் 13, 15, 19, 20, 21, 25, 28, 29-ஆம் பிரதிகளில் இல்லை; 17, 40-ஆம் பிரதிகளில் முன்படலத்தின் இறுதிச் செய்யுளாக உள்ளது. (1)

## தயரதன் அழைக்க வசிட்டன் வருதல்

**1497.** பொருந்துநா ளைநின்
புதல்வற் கென்றனர்
திருந்தினு ரன்னசொற்
கேட்ட செய்கழல்
பெருந்திண்மால் யானையான்
பிழைப்பில் செய்தவம்
வருந்தினன் வருகென
வசிட்ட னெய்தினன்.

'பொருந்தும் நாள் நாளை நின் புதல்வற்கு' என்றனர்
திருந்தினர்: அன்ன சொல் கேட்ட செய் கழல்
பெரும் திண் மால் யானையான், 'பிழைப்பு இல் செய் தவம்
வருந்தினன் வருக' என, வசிட்டன் எய்தினன்.

பொ:—'திருந்திய புலமை பெற்ற சோதிடர், நின் மகனுக்கு முடிபுனையப் பொருத்தமான நாள் நாளையே' என்று கூறினர்; அச்சொல்லைக் கேட்ட, செய்யப்பட்ட வீரக்கழல் அணிந்தவனாகிய பெரிய திண்ணிய மதயானைகளையுடைய தயரதன், 'தவறு நிகழாமல் செய்யும் தவத்தில் முயன்றோனாகிய வசிட்டன் வருவானாக' என்று சொல்ல, வசிட்டன் வந்தான்.

கு:—'நின்புதல்வற்குப் பொருந்தும் நாள் நாளை' என்ற கணிதர், முடிபுனைய என்று கூறுது விடுத்து, 'வனம்போகப் பொருந்து நாள் நாளை' எனவும் பொருள் கொள்ளுமாறு அமைத்த நயம் காண்க. ஈண்டும் தயரதனை யானையான் என்றது, நாடாளும் மன்னனை நியமிக்க விரையும் யானையின் இயல்புடைமை கருதியேயாம். தவஞ் செய்வோர்கள் வெருவுறச் சென்றடைகாம வெகுளிகளால் பிழைபடாத வண்ணம் முயன்ற தவத்தினன் வசிட்டன் என்பார், 'பிழைப்பில் செய் தவம் வருந்தினன்' என்றார். "ஆற்றின் வருந்தா வருத்தம்" (குறள்-468) என்புழி வருத்தம் அப்பொருட்டாதல் காண்க. தவமாவது, மனம் பொறிவழி போகாது நிற்றற்பொருட்டு விரதங்களான் உண்டி சுருக்கலும், கோடைக்கண் வெயில்நிலை நிற்றலும், மாரியினும் பனியினும் நீர்நிலை நிற்றலும் முதலிய செயல்களை மேற்கொண்டு, அவற்றால் தம் உயிர்க்கு வரும் துன்பங்களைப் பொறுத்தல் ஆதலின் தவம் வருந்தினன்' என்றார் எனலும் ஆம். (2)

## தயரதன், இராமனுக்கு அரசியல் அறங்கூற வசிட்டனை வேண்டல்

1498. நல்லியன் மங்கல
நாளு நாளையவ்
வில்லிய ரோளவற்
கீண்டு வேண்டுவ
ஒல்லையி னியற்றிநல்
லுறுதி வாய்மையும்
சொல்லுதி பெரிதெனத்
தொழுது சொல்லினான்.

'நல் இயல் மங்கல நாளும் நாளை; அவ்
வில் இயல் தோளவற்கு ஈண்டு வேண்டுவ
ஒல்லையின் இயற்றி, நல் உறுதி வாய்மையும்
சொல்லுதி பெரிது' எனத் தொழுது சொல்லினான்.

பொ:—(தயரதன், வந்த வசிட்டனை நோக்கி) 'நல்ல இயல்பு வாய்ந்த மங்கல நாளும் நாளைக்கே ஆதலின் அந்த வில்லோடு பழகும் இயல்பு வாய்ந்த தோளையுடைய இராமனுக்கு இப்பொழுது வேண்டுவனவாகிய சடங்குகளை விரைவில் செய்து, நல்ல உறுதிதரத்தக்க வார்த்தைகளையும் மிகுதியாகச் சொல்லுக' என்று வணங்கிக் கூறினான்.

கு:—உருத்திரன் வில்லை முறித்துத் திருமால்வில்லை வளைத்த பெருமையுடைமை நினைந்து, இராமனை 'வில்லியல் தோளவன்' என்றான். முடிபுனைதற்கு முன்னாளில் செய்ய வேண்டிய பூசை முதலியவற்றையே, 'வேண்டுவ' என்றான். முடிபுனை நாள் நாளை ஆதலின், 'ஒல்லையின் இயற்றி' என்றான். வாய்மை - வார்த்தை. "மாறுமோரளவைசால் வாய்மை கூறினான்" (1476) என முன்னும் இச்சொல் இப்பொருளில் வந்திருத்தல் காண்க. உறுதி தரும் வார்த்தை என்க. பெரிது, மிகுதியை உணர்த்திற்று. அரசியலறங்களை, முடிபுனைந்து கொள்வோர்க்கு முன்னாள் கூற வேண்டியது முறையாகலின் வசிட்டனை அது கூறுமாறு வேண்டினான். வான்மீகத்தில் தயரதனே பெரும்பான்மையான அறங்களை இராமனுக்குக் கூறியதாக உள்ளது. (3)

## இராமன் வசிட்டனை வரவேற்றல்

1499. முனிவனு முவகையுந்
 தானு முந்துவான்
மனுகுல நாயகன்
 வாயின் முன்னினான்
அனையவன் வரவுகேட்
 டலங்கல் வீரனும்
இனிதெதிர் கொண்டுதன்
 னிருக்கை யெய்தினான்.

முனிவனும், உவகையும் தானும் முந்துவான்,
மனுகுல நாயகன் வாயில் முன்னினான்;
அனையவன் வரவு கேட்டு, அலங்கல் வீரனும்,
இனிது எதிர்கொண்டு தன் இருக்கை எய்தினான்.

பொ :—வசிட்ட முனிவனும், மகிழ்ச்சியும் தானுமாய் முற்பட்டுச் சென்று மனுகுலத்துப் பிறந்து சிறந்த இராமபிரானுடைய திருமாளிகை வாயிலை அடைந்தான்; அம்முனிவனுடைய வரவை (வாயிற் காவலர் கூற)க் கேட்டு, மாலை யணிந்த இராமபிரானும் அம் முனிவனை இனிதாக எதிர்வந்து, அழைத்துக்கொண்டு தன் இருப்பிடம் அடைந்தான். (4)

## வசிட்டன் முடிசூட்டுவிழா நாளை எனல்

1500. ஒல்க லில்தவத் துத்தம னோதுநூல்
★ மல்கு கேள்வியவ் வள்ளலை நோக்கினான்
புல்கு காதற் புரவலன் போர்வலாய்
நல்கு நானில நாளை நினக்கென்றான்.

ஒல்கல் இல் தவத்து உத்தமன் ஓதும் நூல்
மல்கு கேள்வி அவ் வள்ளலை நோக்கினான்;
"புல்கு காதல் புரவலன், போர்வலாய்!
நல்கும் நானிலம் நாளை நினக்கு" என்றான்.

பொ :—தளர்தல் இல்லாத தவத்தினையுடைய உத்தமனாகிய வசிட்ட முனிவன், ஓதுதற்குரிய நூலறிவையும் நிறைந்த கேள்வியறிவையு முடைய அவ்வள்ளலாகிய இராமபிரானை நோக்கிப் 'போரில் வல்லவனே! பொருந்திய அன்பினையுடைய மன்னவன், நாளை நினக்கு இந் நாட்டைக் கொடுக்கப்போகின்றான்' என்று கூறினான்.

கு :—'ஒல்கலில் தவம்' என்பதற்குப் "பிழைப்பில் செய்தவம்" என்புழி உரைத்தது உரைக்க. உத்தமன் - தலைமையானவன். நோக்கி னுன், முற்றெச்சம். புல்குதல் - பொருந்துதல். நானிலம், என்றது பூமியை. பாலையை யொழித்து நிலம், முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் என நான்காகப் பகுக்கப்படுதலின் அது அப் பெயர் பெறுவதாயிற்று. 'நானிலம் வாய்க்கொண்டு' (திருவிருத்தம். 26) என நம்மாழ்வாரும் கூறுதல் காண்க. 'நல்கும்' செய்யும் என் முற்று. 'புரவலன் நல்கும்' என்க. (5)

## வசிட்டன் செவியறிவுறூஉ 1501—1516

1501. என்று பின்னு மிராமனை நோக்கினான்
ஒன்று கூறுவ துண்டுறு திப்பொருள்
நன்று கேட்டுக் கடைப்பிடி நன்றெனத்
துன்று தாரவற் சொல்லுதன் மேயினுன்.

என்று, பின்னும் இராமனை நோக்கி, 'நான்
ஒன்று கூறுவது உண்டு உறுதிப் பொருள்;
நன்று கேட்டுக் கடைப் பிடி நன்று' எனத்
துன்று தாரவற் சொல்லுதல் மேயினுன்.

பொ :—என்று கூறி, மீண்டும் இராமனை நோக்கி, 'யான் நினக்குக் கூறுவதற்குரிய உறுதிப் பொருள் ஒன்று உண்டு; அதை நன்ருகக் கேட்டு, நன்கு கடைப்பிடிப்பாயாக' என்று, நெருங்கிய மலர் மாலை அணிந்த இராமபிரானுக்குக் கூறத் தொடங்கினுன்.

கு :—நன்று கேட்டல் - ஐயந் திரிபறக் கேட்டல். நன்று கடைப் பிடித்தல் - கேட்ட நெறியில் வழுவாமல் ஒழுகல். 'நன்று பெரிதாகும்' (தொல். சொல். 343) என்ற விதிப்படி, பெரிது கேட்டுப் பெரிது கடைப் பிடிக்க எனப் பொருள் கூறித் தயரதன் 'சொல்லுதி பெரிது' என்று முன் கூறியதற்கேற்ப அமைத்தலும் ஆம். சொல்லுதல் - கற்பித்தல்; தாரவனை என இரண்டனுருபு விரிக்க. (6)

1502. கரிய மாலினுங் கண்ணுத லானினும்
உரிய தாமரை மேலுறை வானினும்
விரியும் பூதமொ ரைந்தினு மெய்யினும்
பெரிய ரந்தணர் பேணுதி யுள்ளத்தால்.

'கரிய மாலினும், கண்ணுதலானினும்,
உரிய தாமரை மேல் உறைவானினும்,
விரியும் பூதம் ஓர் ஐந்தினும், மெய்யினும்,
பெரியர் அந்தணர்; பேணுதி உள்ளத்தால்.'

பொ :—'கரிய திருமேனியையுடைய திருமாலைக் காட்டிலும், நுதல் விழி நாட்டத்து உருத்திரனைக் காட்டிலும், தனக்குரிய தாமரை மலர் மேல் தங்குகின்ற பிரமனைக் காட்டிலும் ஒன்றற் கொன்று பெரியதாய் விரிந்துள்ள ஐந்து பூதங்களைக் காட்டிலும், சத்தியத்தைக் காட்டிலும், அந்தணரே பெரியர் ஆவர்; ஆதலின் அவரை மனத்தால் போற்றுக.'

கு :—மும்மூர்த்திகட்கும் அவர்களால் செயல்படுகின்ற ஐம்பூதங் களின் கலப்பாலாகிய உலகத்திற்கும், எல்லாவற்றிற்கும் ஆதாரமாய மெய்ப்பொருளுக்கும் பெரியர் அந்தணர் என அவர் பெருமையுணர்த்திய வாறு. "சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின் வகை தெரிவான் கட்டே யுலகு" (குறள்-27) எனவும், "துறந்தார் பெருமை துணைக் கூறின் வையத் திறந்தாரை எண்ணிக் கொண்டற்று" (குறள்–22) எனவும், "இருமை வகைதெரிந் தீண்டறம் பூண்டார் பெருமை பிறங் கிற்றுலகு" (குறள்–23) எனவும் வள்ளுவர், ஐம்பெரும் பூதக் கலப்பாலாய உலகினும் பெரியர் அந்தணர் என்பதையும், அவர் பெருமைக்கு அளவில்லை என்பதையும் அவ்வந்தணர் பெருமையே உலகின் கண் உயர்ந்தது என்பதையும் விளக்கியிருத்தல் காண்க. அந்தணர் என்றது, ஈண்டுத் துறந்தவர்களை. 'மெய்' என்றது மெய்ப் பொருளாகிய பரம் பொருளை எனலும் ஆம். கண்ணபிரானும், கீதையில், "உலகமுழுதும் தெய்வத்தின் வயத்தது; அத்தெய்வம் மந்திரத்தின் வயத்தது; அம் மந் திரம் அந்தணர் வயத்தது; அவ்வந்தணர் எமக்குக் கடவுளாவார்" என்று கூறியதும் இக்கருத்தே பற்றி யென்க. எல்லாப் பொருளினும் பெரியராகிய அந்தணர் உதவியின்றி இவ்வுலகியல் நடை பெருதாகலின் இவ்வுலகம் காக்கும் மன்னர்க்கு அவ்வந்தணரைப் போற்றுதல் இன்றி யமையாது வேண்டப்படுதலின் முதற்கண் கூறினர். (7)

1503. அந்த ணாளர் முனியவு மாங்கவர்
சிந்தை யாலருள் செய்யவுந் தேவரில்
நொந்து ளாரையு நோய்தவிர்ந் தாரையும்
மைந்த வெண்ண வரம்புமுண் டாங்கொலோ.

'அந்தணாளர் முனியவும், ஆங்கு அவர்
சிந்தையால் அருள் செய்யவும், தேவரில்,

நொந்துளாரையும், நோய் தவிர்ந்தாரையும்,
மைந்த! எண்ண வரம்பும் உண்டாங்கொல், ஓ?'

பொ :—'மைந்தனே! அந்தணர் வெகுண்டு கூறியதாலும், அவர் மனத்தால் அருளிக் கூறியதாலும், தேவர்களில் வருந்தினவர்களையும், வருத்தம் நீங்கினவர்களையும் எண்ணின் வரம்பும் உண்டோ ? (இல்லை).'

கு:—மைந்த! என்று இராமனை வசிட்டன்விளித்தது, கல்வித்தந்தையாதல்பற்றி. "மறையோதுவித்திவரை வளர்த்தானும் வசிட்டன்" என்றது நினைக்க. அந்தணர் முனிய நொந்துளாரையும், அருள்செய நோய் தவிர்ந்தாரையும் என நிரனிறையாகக் கூட்டிப் பொருள் கொள்க. அந்தணர், நிறைமொழி மாந்தர் ஆதலின் அவர் அருளிக் கூறினும் வெகுண்டு கூறினும் அவ்வப் பயன்கள் எளிதினும் கடிதினும் தேவர்க்கும் வந்தெய்தும் என்க. "நிறை மொழி மாந்தர் பெருமை நிலத்து மறை மொழி காட்டி விடும்" (குறள்-28) என்றதைத் தழுவி எழுந்த கவியாகும் இது. அவர் முனிய நொந்துளாரில் இந்திரனு மொருவன் என்பதை, "ஐந்தவித்தானாற்ற லகல் விசும்புளார் கோமா னிந்திரனே சாலுங்கரி" (குறள்-25) என வள்ளுவரே கூறியுள்ளார். கோதமன் கோபத்தால் இந்திரன் மெய்யெலாம் கண்ணாய் நொந்தான் என்பதும் புலைத் தன்மையெய்திய திரிசங்கு கோசிகன் அருள் செய்யத் துறக்கம் பெற்றதும் பால காண்டத்து அகலிகைப் படலத்தும் மிதிலைக்காட்சிப்படலத்தும் முறையே கூறியுள்ளமை காண்க. 'ஆங்கு' மறுதலைத் தொழிலுவமத்தின்கண் வந்த உவம வுருபு. தேவரிலும் என்ற உயர்வு சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. இதனால் அந்தணரின் சாப அருள்களின் பெருமை கூறப் பட்டது. கொல் அசை. ஓகாரம் எதிர்மறை. (8)

1504. அனைய ராதலி னையவிவ் வெய்யதீ
வினையி னீங்கிய மேலவர் தாளிணை
புனையுஞ் சென்னியை யாய்ப்புகழ்ந் தேத்துதி
இனிய கூறிநின் றேயின செய்தியால்.

'அனையர் ஆதலின், ஐய! இவ் வெய்ய தீ
வினையின் நீங்கிய மேலவர் தாளிணை
புனையும் சென்னியையாய்ப் புகழ்ந்து ஏத்துதி;
இனிய கூறி நின்று ஏயின செய்தி, ஆல்.'

பொ :—'அத்தன்மையர் ஆதலால், ஐயனே! இந்தக் கொடிய தீவினையில் நின்றும் நீங்கிய மேலவராகிய அந்தணர்தம் திருவடிகளைச் சூடும் தலையை உடையையாய் அவரைப் புகழ்ந்து துதிப்பாயாக; இனிய சொற்களைச் சொல்லிநின்று அவர் ஏவிய பணிகளைச் செய்வாயாக.'

கு :—தீவினையின் கொடுமைமிகுதி தோன்ற, "வெய்ய தீவினை" என்றார். மேலவர் எனற்குக் காரணம், தீவினையின் நீங்கினமையே என்பதும் பெற வைத்தவாறு. இது, "வினையினீங்கி விளங்கிய அறிவின் முனைவன்" என்ற தொல்காப்பிய நூற்பாவினை நினைந்து கூறியது. அவர்கள் திருவடிமேல் முடிவைத்து வணங்குக என்பார், 'தாளிணை புனையுஞ் சென்னியையாய்' என்றார். தாள்களை, மலர் என்ற கருத்தால் புனைதல் கூறினர். அந்தணரைப் பணிந்து போற்றிப் பணிசெய்க என்றவாறு. ஆல்-அசை. "இறைஞ்சுக பெரும நின் சென்னி சிறந்த நான்மறை முனிவ ரேந்துகை யெதிரே" (புறநா-6) என்றதும் நினைக்க. (9)

**1505.** ஆவ தற்கும் மழிவதற் கும்மவர்
ஏவ நிற்கும் விதியுமென் றாலினி
யாவ தெப்பொரு ளிம்மையு மம்மையும்
தேவ ரைப்பர வுந்துணை சீர்த்ததே.

'ஆவதற்கும் அழிவதற்கும், அவர்
ஏவ நிற்கும் விதியும் என்றால், இனி
யாவது, எப்பொருள், இம்மையும், அம்மையும்,
தேவரைப் பரவும் துணை சீர்த்ததே ?'

பொ :—'ஒருவன் ஆக்கம் பெறுதற்கும், ஒருவன் அழிவதற்கும் அவர்கள், (அருளியும் வெகுண்டும்) ஏவினால், விதியும் அவர் ஏவல் வழிநின்று பயன் அளிக்கும் என்றால், அப் பூதேவராகிய அந்தணரை வணங்குவதைப் போன்று சிறப்புடையது, இம்மண்ணுலகத்திலும் அவ் விண்ணுலகத்திலும் இனி எச் செயல் உளது ? எப்பொருள் உளது ? (இல்லை).'

கு :—ஆதல் - செல்வம் பதவி முதலியன உயர்தல். 'ஊழிற் பெரு வலி யாவுள'? என்று சிறப்பிக்கப்படும் பெருவலியுடையது ஊழ். "அஞ்சு தரு தீவினையின லமுது நஞ்சாம், நஞ்சு மமுதாமுரிய நல்வினையின் மாதோ" (வில்லி பாரதம்-ஆதி-சம்பவச். 100) என அவ்வூழின் வலி விளக்கப்படுகின்றது. இவ்வந்தணரின் அருள் ஏவலால், தீப்பயன் கொடுக்க வேண்டிய ஒருவன் போகூழ் ஆகூழாய் மாறி நற்பயன் அளிக்கும் என்றும், அவர் வெகுண்டு ஏவுதலால் நற்பயன் கொடுக்க வேண்டிய ஒருவன் ஆகூழ் போகூழாக மாறித் தீப்பயன் அளிக்கும் என்றும் கொள்க. 'ஒன்னார்த் தெறலு முவந்தாரை யாக்கலும் எண்ணிற் றவத்தான் வரும்' (குறள். 264) என்பது காண்க. 'விதியும்' என்புழி உம்மை உயர்வு சிறப்பு. இம்மை என்றது இம் மண்ணுலகை ; அம்மை என்றது, மறுமையில் அடைதற்குரிய அவ்விண்ணுலகை.

ஒப்பற்றுச் சிறந்த தொரு பொருளைவிளக்கும் போது, ' புத்தேளுலகத் தும் ஈண்டும் பெறலரிதே யொப்புரவினல்ல பிற' (குறள்-214) என இரண்டு உலகத்தும் இல்லை என்று கூறும் மரபுண்மை காண்க. பூதேவர், நாட்டுத் தேவர் என்னும் வழக்குண்மையால் அந்தணரை, 'தேவர்' என்றார். அத்தேவர் எனச் சுட்டு வருவிக்க. துணை, உவமையுருபு. அந்தணரைப் பரவுதல்போன்ற செயலுமில்லை, பொருளுமில்லை என்பார், யாவது? எப்பொருள்? என இருமுறை வினவினர். வினா இரண்டும் இன்மையுணர்த்திநின்றன. சீர்த்தது-சிறப்புடையது. விதிவலி மாற்றும் ஆற்றல் அந்தணர்க்கன்றி இன்மையின் அவரை வழிபட்டுப் பயன் பெறு தலே இரண்டுலகத்திலும் செய்தற் குரியது என அவரை வழிபடுதலின் சிறப்புணர்த்தியவாறு. (10)

1506. உருளு நேமியு மொண்கவ ரெஃகமும்
மருளில் வாணியும் வல்லவர் மூவர்க்கும்
தெருளு நல்லற மும்மனச் செம்மையும்
அருளு நீத்தபின் னுவதுண் டாகுமோ.

'உருளும் நேமியும் ஒண் கவர் எஃகமும்,
மருள் இல் வாணியும், வல்லவர் மூவர்க்கும்
தெருளும் நல் அறமும், மனச் செம்மையும்,
அருளும், நீத்தபின் ஆவது உண்டாகுமோ?'

போ :—'உருண்டு செல்கின்ற சக்கரப் படையாலும் ஒளியுடன் மூன் றாகக் கவர்த்த சூலப்படையாலும் மருட்சியில்லாத வேதவாக்காலும் முத் தொழிலும் செய்யவல்ல அரி, அரன், அயன் என்ற மும்மூர்த்திகட்கே ஆயினும், தெளிவான நல்ல அறமும் மனத்தின்கண் நடுவுநிலைமை யும் அருளும் நீங்கிய பிறகு அவர்க்கு ஆக்கம் உண்டாகுமோ? (ஆகாது).

கு :—கவர்த்தல்-பலதலையாகப் பிரிதல். "மகளிர் நெஞ்சமேபோற் பல கவர்களும் பட்டது" (சீவக-1212) என்புழிக் 'கவர்த்தல்'-பலவாதல் என நச்சினர்க்கினியர் கூறியதும் காண்க. முத்தலைச் சூலத்தையே 'கவர் எஃகம்' என்றார். 'வாணி' என்றது இங்கு வேதத்தை; கலைமகள் எனின், நேமியும் சூலமும்போல் கருவியாகாமை காண்க. சூலமும் திகிரி யும் சொல்லும் தாங்கிய, மூலம் வந்துதவிய மூவர்" (கிளைக்கண்டு நீங்கு-73) எனப் பின்னும் கூறுதல் காண்க. ஆண்டும் வேதத்தையே 'சொல்' என்றார். நேமியாலும் சூலத்தாலும் வேதத்தாலும் காத்தலும் நீக்கலும் ஆக்கலும் செய்பவர் என்பார், 'வல்லவர் மூவர்' என்றார். யாவர்க்கும் தலைவராம் மூவர்க்கே அறமுதலியனவற்றை நீக்கிய பின்

ஆக்கம் இல்லை யென்றால் நாடாளும் மன்னர்க்குச் சொல்ல வேண்டுமோ என்றவாறு. தெருளும் நல்லறம்-நூல்களால் தெளிந்த நல்லதாகிய அறம். செம்மை-நடுவுநிலைமை; பகை, நட்பு, நொதுமல் என்ற மூவிடத்தும் ஒருபாற்கோடாது நடுவுநின்று முடிவு கூறல். இன்பத்துன்பங்களில் ஒத்த நிலையாதலும் ஆம். அருளாவது, தொடர்பு கருதாது இயல்பாக எல்லாவுயிர்கள்மேலும் செல்வதாகிய கருணை. "அறநெறி முதற்றே அரசின் கொற்றம்" (புறநா-55) என்று சிறப்பிக்கப்படுதலின் அறத்தை முதற்கண் கூறினர். ஆவது, என்றது ஆக்கத்தை. (11)

**1507.** சூது முந்துறச் சொல்லிய மாத்துயர்
நீதி மைந்த நினக்கிலை யாயினும்
ஏத மென்பன யாவையு மெய்துதற்
கோது மூல மவையென வோர்தியே.

'சூது முந்துறச் சொல்லிய மாத் துயர்,
நீதி மைந்த! நினக்கு இலை; ஆயினும்,
ஏதம் என்பன யாவையும் எய்துதற்கு
ஓதும் மூலம் அவை என ஓர்தியே.'

பொ :—'நீதிவாய்ந்த மைந்தா! சூதாடல் முதலாகச் சொல்லப்பட்ட பெரிய துயர் தரத்தக்க தீச்செயல்கள், நின்னிடத்தில் இல்லை; ஆனாலும், குற்றம் என்று சொல்லப்படுகின்ற எல்லாவற்றையும் எய்துதற்குக் கூறப்படுகின்ற மூலமாகிய செயல்கள் அவையே என்று அறிந்து கொள்க.'

கு :—"இருமனப் பெண்டிரும் கள்ளுங் கவறும் திரு நீக்கப்பட்டார் தொடர்பு" (920) என்ற குறளில் இறுதியில் கூறிய சூதினை முதலாகக் கொண்டு 'சூதுமுந்துறச் சொல்லிய' என்றார்; இருமருங்கில் எதனையும் முதலாக எண்ணலாம் அன்றே. சொல்லிய-சொல்லப்பட்ட; செய்வினையைச் செயப்பாட்டுவினையாக்குக. சூதும், கள்ளும், பரத்தையும் என்பவையே சொல்லிய மாத்துயர் என்க. மாத்துயர் தருவனவற்றை 'மாத்துயர்' எனக் காரணத்தைக் காரியமாக்கினர். நீதிவழிச் செல்லும் மைந்தனுகலின் நினக்கிலை எனக் கொள்ள வைத்தமையின், 'நீதிமைந்த' என்றது, கருத்துடையடைகொளியணியாகும். ஏதம்-குற்றம். மூலம்-காரணம். கவறும் கள்ளும் பரத்தையரும் காரணமாகக் களவும் கொலையும் பொய்யும் முதலிய பெருங்குற்றங்கள்யாவும் தோன்றுதலின் அவற்றை மூலம் என்றார். வருமுன் காத்தவாறு. "வேட்டங் கடுஞ்சொல் மிகுதண்டம் சூது பொரு ளீட்டங்கள் காமமிவை யேழு" என்பவையே சூதுமுந்துறச் சொல்லிய என்பர்; சூது முதலாக எண்ணப்படாமை காண்க. (12)

**1508.** யாரொ டும்பகை கொள்ளல னென்றபின்
போரொ டுங்கும் புகழொடுங் காதுதன்
தாரொ டுங்கல்செல் லாதது தந்தபின்
வேரொ டுங்கெடல் வேண்ட லுண்டாகுமோ.

'யாரொடும் பகை கொள்ளலன் என்ற பின்,
போர் ஒடுங்கும், புகழ் ஒடுங்காது; தன்
தார் ஒடுங்கல் செல்லாது; அது தந்தபின்
வேரொடும் கெடல் வேண்டல் உண்டாகுமோ?'

பொ :—'ஒருமன்னன் யாரோடும் பகைகொள்ள மாட்டான் என்று பிறர் சொல்லுமாறு நடந்து கொண்டால் பிறகு, போரே இல்லாமல் போய்விடும்; போர் இல்லாமையால் தன் புகழும் சுருங்காது; தன் சேனையும் சுருங்காது; அந்த நிலைமையை யுண்டாக்கிய பின் தான் வேரொடும் கெடவேண்டிய நிலை உண்டாகுமோ? (உண்டாகாது).'

கு :—"பகையென்னும் பண்பி லதனை யொருவன் நகையேயும் வேண்டற்பாற் றன்று" (குறள்-871) "ஊரொடுபகைக்கின் வேரொடுங் கெடும்" என்பவற்றைத் தழீஇக் கூறப்பட்டது இச்செய்யுள். தன்மனத்துத் தோன்றும் மாறுபாடே பிறர் பகைவராதற்குக் காரணமாதலின் "பகைகொள்ளலன் என்ற பின் போர் ஒடுங்கும்" என்றார். "இகல் என்னும் எவ்வநோய் நீக்கிற் றவலில்லாத் தாவில் விளக்கம் தரும்" (குறள்-853) என்புழிக் கூறப்பட்ட 'இகல் நீங்கின் புகழ் ஓங்கும்' என்ற கருத்தினை உளங்கொண்டு, "போரொடுங்கும் புகழொடுங்காது" என்றார். தாவில் விளக்கம், "எஞ்ஞான்றும் நிற்கும் புகழ்": பரிமேலழகர் உரை காண்க. போரில் வென்று வாகை கொள்வதே புகழ்க்குக் காரணம் என்னும் கருத்தை மறுத்தவாறு. தார் – தூசிப்படை ; இங்கு எல்லாப் படையையும் குறித்தது. போரில் அழிதல் இன்மையின் 'தாரொடுங்கல் செல்லாது' என்றார். படைப்பெருமையோடு பல்லாண்டு வாழலாம் என்பார், வேரொடுங் கெடல் வேண்டல் உண்டாகுமோ ? என்றார். யாரொடும் பகைகொள்ளாமையால் போரொடுங்கும், போரொடுங்குதலால் தார் ஒடுங்காது, தாரொடுங்காமையால் வேரொடுங் கெடல் உண்டாகாது, எனக்காரண காரிய முறையில் வைத்துக் கூறிய அழகு காண்க. உண்டாகுமோ என்ற வினா, உண்டாகாமை யுணர்த்திற்று. "இகலின் மிகலினி தென்பவன் வாழ்க்கை, தவலுங் கெடலு நணித்து" (குறள். 856) என்பதும் நினைக்க. (13)

**1509.** கோளு மைம்பொறி யுங்குறை யப்பொருள்
நாளுங் கண்டு நடுக்குறு நோன்மையின்

ஆளு மவ்வர சேயர சன்னது
வாளின் மேல்வரு மாதவ மைந்தனே.

'கோளும் ஐம்பொறியும் குறையப் பொருள்
நாளும் கண்டு, நடுக்குறு நோன்மையின்
ஆளும் அவ் அரசே அரசு; அன்னது
வாளின் மேல் வரும் மாதவம், மைந்தனே!'

பொ :—'மைந்தனே! சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்ற ஐம் புலன்களையும் கொள்கின்ற ஐம்பொறி வாயிலாக வரும் ஆசை குறையச் செய்து, நாட்டில் பொருளை நாளும் பெருக்கி, பிற மன்னர் நடுங்குதற்குக் காரணமான வல்லமையோடு ஆளும் அரசே அரசு ஆகும்; அவ் வரசு, வாளின்மேல் நின்று செய்யும் மாதவம் ஆகும்.'

கு :—'கோளில் பொறியில்' (குறள்-9) என்பதை நினைந்து, கோளு மைம் பொறி' என்றார். கொள் 'கோள்,' என நீண்டது. கொள்ளுதற்குச் செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. ஐம்பொறியும் குறைய என்றது, ஐம்பொறி நுகர்ச்சியிலுள்ள ஆசையைக் குறைத்தலை. தான் நுகராது நின்று வருந்தியும் நாட்டில் பொருள் பெருக்க வேண்டும் என்பது கருத்து. 'செறுநர் செருக்கறுக்கு மெஃகதனிற்கூரியதில்' (குறள்-759) ஆதலின் பொருள் நாளுங் கண்டு என்றார். கண்டு-செய்து. மன்னன் உளனாக வேண்டி, "உழுத நோன்பகடு அழிதின்றாங்கு" (புறநா-125) சிறிது நுகர்வதன்றிப் பெருக நுகர்ந்து பொருளை அழித்தல் கூடாது என்றவாறு. "அலமந்து, நெஞ்சு நடுங்கவலம் பாயத், துஞ்சாக் கண்ண வடபுலத் தரசே" (புறநா-31) என்றாற்போலத் தன் புகழால் பிறரை நடுங்கச் செய்யும் வல்லமை வேண்டும் என்பார், நடுக்குறு நோன்மை யின் என்றார். இனி, 'பழியும் பாவமும் நேர்ந்து விடுமோ என்று நெஞ்சு நடுக்குற்றுப் பொறுமையோடு ஆளும் அரசு' என்று கூறலுமாம். "மழைவளங் கரப்பின் வான்பே ரச்சம், பிழையுயிர் எய்திற் பெரும்பே ரச் சம், குடிபுரவுண்டுங் கொடுங்கோலஞ்சி மன்பதை காக்கும் நன்குடிப் பிறத்தல், துன்பமல்லது தொழுதகவில் " (சிலப்-காட்சி-100-104) எனச் செங்குட்டுவன் கூறியது கொண்டு, மன்னர் கொடுங்கோலஞ்சி நடுங்கு தல் உண்டு என்பது அறியலாம். பொறிநுகர்ச்சியைக் குறைத்தலும் (மெய்ப்) பொருளை நாளும் காண்டலும் பாவத்திற்கு நடுக்குறுதலும் தமக்குற்ற துன்பத்தைப் பொறுத்துக் கொள்ளுதலும் தவஞ்செய் வோர்க்கே உரியவாகலின் அவ்வாறு அவற்றைச் செய்கின்ற அரசும் மாதவத்தோடொக்கும் என்பார், "அன்னது வாளின்மேல்வரு மாதவம்" என்றார். நெருப்பினும் நீரினும் நின்று செய்யும் தவத்தினும் உயர்ந்த தென்பார், 'வாளின்மேல் வரும் மாதவம்' என்றார். 'அரசு' என்பது, போகந்துய்ப்பதன்று என்பதை விளக்கியவாறு. (14)

1510. உமைக்கு நாதற்கு மோங்குபுள் ளூர்திக்கும்
இமைப்பி னாட்டமோ ரெட்டுடை யானுக்கும்
சமைத்த தோள்வலி தாங்கின ராயினும்
அமைச்சர் சொல்வழி ஆற்றுத லாற்றலே.

'உமைக்கு நாதற்கும், ஓங்கு புள் ஊர்திக்கும்,
இமைப்பு இல் நாட்டம் ஒர் எட்டு உடையானுக்கும்,
சமைத்த தோள்வலி தாங்கினர் ஆயினும்,
அமைச்சர் சொல்வழி ஆற்றுதல் ஆற்றலே.'

பொ :—'உமையம்மைக்குக் கொழுனனாகிய சிவபிரானுக்கும், உயர்ந்து பறக்கும் கருடனை ஊர்தியாக உடைய திருமாலுக்கும், இமையாத எட்டுக் கண்களையுடைய பிரமனுக்கும் பொருந்திய தோள்வலியெலாம் ஒருங்குதாங்கிய வல்லமையுடையராயினும் மந்திரிகள் சொல்வழி நின்று அரசு செய்தலே ஆற்றல் என்று சொல்லப்படும்.'

கு :—புள், இங்குக் கருடன். நான்முகனுதலின் நாட்டம் எட்டுடையான் என்றார். 'சமைந்த' என்பது, எதுகை நோக்கி வலித்தல் விகாரம் பெற்றது. மும்மூர்த்திகளின் வலிமையையும் ஒருவனே தாங்கி நிற்பினும், தன் வலிகண்டு செருக்காது, அமைச்சர் அறிவுரை வெறுக்காது ஏற்றுச் செயல் ஆற்றுதல் வேண்டும் என்றவாறு. இராமபிரான் அரன்வில்லை முரித்தும் அரிவில்லை வளைத்தும் அவ்விருவர் போல் வலியுடையன் என்பது காட்டியுளான் ஆகலான், அவ்வலியுடையனுயினும் அமைச்சர் சொல்வழி நிற்க என்பார், "தாங்கின ராயினும்...ஆற்றுதல் ஆற்றலே" எனப் பொதுமையிற் கூறினர். திறத்து மூவரும் திருத்தின திருத்துமத் திறலோன் (மந்திரப்-37) என முன்னர் இராமனைப் புகழ்ந்த வசிட்டரே இங்கு இவ்வாறு கூறியது, "இடிப்பாரை யில்லாத வேமரா மன்னன், கெடுப்பா ரிலானுங் கெடும்" (குறள்-448) என்றும், "அறனறிந்தான்ற மைந்த சொல்லா னெஞ்ஞான்றும் திறனறிந்தான் தேர்ச்சித் துணை" (குறள். 635) என்றும், "செவிகைப்பச் சொற் பொறுக்கும் பண்புடை வேந்தன், கவிகைக்கீழ்த் தங்கு முலகு" (குறள்–389) என்றும் கூறப்படும் அமைச்சர் சொல்லின் இன்றியமையாமை கருதியேயாம். ஆற்றல் தருவதனை ஆற்றல் என்றது உபசாரம். ஆற்றுதல்-செய்தல். ஆற்றல்-வலிமை. (15)

1511. என்பு தோலுடை யார்க்கு மிலார்க்குந்தம்
வன்ப கைப்புலன் மாசற மாய்ப்பதென்
முன்பு பின்பின்றி மூவுல கத்தினும்
அன்பி னல்லதொ ராக்கமுண் டாகுமோ.

'என்புதோல் உடையார்க்கும், இலார்க்கும், தம்
வன் பகைப் புலன் மாசு அற மாய்ப்பது என் ?
முன்பு பின்பு இன்றி, மூவுலகத்தினும்,
அன்பின் அல்லது ஓர் ஆக்கம் உண்டாகுமோ ?'

பொ :—'என்பு தோல் முதலிய எழுவகைத் தாதுக்களால் ஆகிய உடம்பையுடைய மனிதர்க்கும் அவ்வுடம்பு இல்லாத (ஒளியுடம்புடைய) தேவர்கட்கும் தம் வலிய பகையாகிய ஐந்து புலன்கள் மேல் செல்லும் ஆசையைக் குற்றமற ஒழிப்பதால் மட்டும் யாது பயன் ? முற்காலம் பிற்காலம் என்பது இல்லாமல் எக்காலத்தும் மூன்று உலகத்திலும் அன்பினுல் அன்றி ஒரு நன்மை உளதாகுமோ ? உளதாகாது.

கு :—மனிதர்க்கும் தேவர்க்கும் அன்பினுலன்றிப் பொறியடக்கத்தால் மட்டும் ஒப்பற்ற நன்மையைப் பெற முடியாது என்பது கருத்து. பொறியடக்கத்தினும் அன்பே இன்றியமையாதது என்க. அன்புடையராயின் புலப்பகையை மாய்க்காதவழியும் பயனுண்டு என்பது பெற்ரும். என்பும் தோலும் கூறவே இனம் பற்றி ஏனைத் தாதுக்களும் கொள்ளப்படும். ஒளியுடம்பினர் தேவராதலின் அவரை, என்பு தோல் இலார்க்கும் என்ருர். கதிவேறுபாடும், கால வேறுபாடும், இடவேறுபாடும் இன்றி எல்லாவுயிர்க்கும் எக்காலத்தும், எவ்விடத்தும், அன்பினுலேதான் சிறந்த செல்வத்தைப் பெற இயலும் என்க. எக்காலத்தும் என்பார், 'முன்பு பின்பு இன்றி' என்றும், எவ்விடத்தும் என்பார், மூவுலகத்தினும் என்றும் கூறினர். புலப்பகை, புறப்பகை வென்ருர்க்கும் வெலற்கரும் வீறுடையதாகலின் வன்பகை என்ருர். மாய்ப்பது- அழிப்பது. மாசறமாய்த்தல் - முழுதும் களைதல். தேவர்க்கும் அன்பாலன்றி ஆக்கமில்லை என்றமையால், மன்னர்க்குச் சொல்லவேண்டுமோ ? என்றவாறு. "அன்பின் வழியது உயிர்நிலை யஃதிலார்க் கென்பு தோல் போர்த்த வுடம்பு" (80) என்ற குறளை நினைப்பிக்கின்றது இச் செய்யுள். புலப்பகைமாய்க்குங்கால் வரும் நோயைப் பொறுத்துக் கொள்ளுதலும் பிறவுயிர்க்குத் துன்பம் செய்யாது காத்தலுமே தவம் (குறள். 261) எனப்படுதலின் அவ்விரண்டனுள் உற்ற நோய் நோன்று புலனடக்கியவழியும் உயிர்க்கு உறுகண்செய்யாது காக்கின்ற அன்புடைமை இல்வழிப் பயனில்லை என்பதை விளக்கியவாறு. (16)

**1512.** வைய மன்னுயி ராகவம் மன்னுயிர்
உய்யத் தாங்கு முடலன்ன மன்னனுக்
கைய மின்றி யறங்கட வாதருள்
மெய்யி னின்றபின் வேள்வியும் வேண்டுமோ.

'வையம் மன் உயிராக, அம் மன்னுயிர்
உய்யத் தாங்கும் உடல் அன்ன மன்னனுக்கு,
ஐயம் இன்றி அறம் கடவாது அருள்
மெய்யின் நின்றபின் வேள்வியும் வேண்டுமோ ?'

பொ :—'உலகமே தன் நிலை பெற்ற உயிராக, அம்மன்னுயிர் வாழு மாறு தாங்குகின்ற உடம்பு போன்ற மன்னனுக்குத் தரும நெறியில் தவருது, அருளாகிய மெய்ம்மை நெறியில் உறுதியாக நின்று ஒழுகினுல் அதன்பின்பு வேள்வியும் செய்ய வேண்டுமோ ? (வேண்டா)'

கு :—வையம், ஆகுபெயராய் உயிர்களை உணர்த்திற்று. உய்தல் - வாழ்தல். "செயிரிலா வுலகினில் சென்று நின்று வாழ், உயிரெலாம் உறைவதோர் உடம்புமாயினன்." (பால-177.) 'மன்னுயிரெல்லாம் மண்ணுள் வேந்தன் தன்னுயிர்" (மணிமே-7-8) "தன்னுயிர் போலத் தழீஇ யுலகத்து மன்னுயிர் காக்கும் மன்னனும்" (கலி-143) என்பன ஈண்டு நினைக்கத் தக்கன. உயிர் இல்வழி உடம்பு பயனற்றுப் போதல் போலக் குடிமக்கள் இல்வழிக் கோமகன் இல்லையாதல் தோன்ற, உடலன்ன மன்னன் என்ருர். உடலினும் உயிர் சிறந்ததாதல் போலக் கோமகனைக் காட்டிலும் குடிமக்கள் சிறந்தவர்கள் என்பதை விளக்கிய வாறு. மெய் என்றது மெய்ந்நெறியை. "அவிசொரிந் தாயிரம் வேட்டலின் ஒன்றன் உயிர் செகுத்துண்ணுமை நன்று." (குறள். 259) என்ற கருத்தைத் தழுவி, "வேள்வியும் வேண்டுமோ" என்ருர். அருளாகிய மெய்ந்நெறி என்றது, 'ஒன்றன் உயிர் செகுத்துண்ணுமையாகிய அறத்தையே ஆம். அருள் மெய் என்பதை உம்மைத்தொகையாக்கி, அருளிலும் வாய்மையிலும் நின்றபின் என்று பொருள் கூறலுமாம். "ஒன்ருக நல்லது கொல்லாமை மற்றதன் பின்சாரப் பொய்யாமை நன்று" (குறள்-323) என்று கூறியுள்ள முறைமை யுணர்ந்து அருளை முன்னும் மெய்யைப் பின்னும் கூறியதாகக் கொள்க. அருளாவது கொல்லாமையே என்பதை, "அருளல்லதி யாதெனிற் கொல்லாமை கோறல்" (குறள். 254) என்றதால் அறியலாம். 'ஐயமின்றி நின்ற பின்' என்று இயைக்க. முன் பாட்டில் அன்பின் சிறப்பைக் கூறியவர், இப்பாட்டில் அருளின் பெருமையைக் கூறினர். ஓகாரம் எதிர்மறைப் பொருள் உணர்த்திற்று. வேள்வியும் என்புழி உம்மை உயர்வு சிறப்பு. தன்னுயிராக மன்னுயிரை யெண்ணு மன்னனுதலின் அருள் வேண்டும் என்ருர். (17)

**1513.** இனிய சொல்லின னீகைய னெண்ணினன்
வினையன் றூயன் விழுமியன் வென்றியன்
நினையு நீதி நெறிகட வானெனில்
அனைய மன்னற் கழிவுமுண் டாங்கொலோ.

'இனிய சொல்லினன், ஈகையன், எண்ணினன்,
வினையன், தூயன், விழுமியன், வென்றியன்,
நினையும் நீதிநெறி கடவான், எனில்,
அனைய மன்னற்கு அழிவும் உண்டாங்கொலோ?'

பொ :—'இனிமையான சொற்களைச் சொல்பவனாகவும், வறியார்க்கு ஈயும் வண்மையுடையனாகவும், ஆராய்ச்சியுடையனாகவும், வினைத் திட்பம் உடையனாகவும், வினைத்தூய்மையுடையனாகவும், உயர்வையே உள்ளும் சிறப்புடையனாகவும், சென்ற போர்தோறும் வென்றியே புனைபவனாகவும், எக்காலத்தும் நினைக்கத் தக்க நீதிவழியைக் கடவாதவனாகவும், ஒரு மன்னன் இருப்பின், அம்மன்னனுக்கு அழிவும் உளதாகுமோ? (உண்டாகாது.)'

கு :—"இன்சொலால் ஈத்தளிக்க வல்லாற்குத் தன்சொலால் தான் கண்டனைத்திவ் வுலகு." (387) என்ற குறளை முதலடி நினைவூட்டுகின்றது. 'தெரிந்த வினத்தொடு தேர்ந்தெண்ணிச் செய்வாற்கு அரும் பொருள் யாதொன்றுமில்' (குறள். 462) எனவும், 'எண்ணித் துணிக கருமம்' (குறள். 467) எனவும் மன்னற்கு எண்ணிச் செயும் இயல்பு வேண்டும் என்றலின் 'எண்ணினன்' என்றார். 'வினையன்' என்றது வினைத்திட்பமும் வினைசெயல் வகையும் உடையன் என்றவாறு. "எனைத் திட்ப மெய்தியக் கண்ணும் வினைத்திட்பம் வேண்டாரை வேண்டாதுலகு" (குறள். 670) "முடிவு மிடையூறும் முற்றியாங் கெய்தும் படு பயனும் பார்த்துச் செயல்" (குறள். 676) என மன்னற்கு அவ்விரண்டும் வற்புறுத்தப்படுதல் காண்க. 'தூயன்,' வினைத் தூய்மையுடையவன். "என்று மொருவுதல் வேண்டும் புகழொடு, நன்றிபயவாவினை" (குறள். 652) என வினைத்தூய்மையை விளக்குதல் காண்க. விழுமியன் - உள்ளத்தால் உயர்வுடையவன். 'உள்ளுவ தெல்லா முயர்வுள்ளல் மற்றது தள்ளினும் தள்ளாமை நீர்த்து" (குறள். 596) என்றது காண்க. வெற்றியுறும் நற்றிறன் இலாக் கொற்றவன் நாட்டு மக்கள் பகைவரால் நலிவு பலவெய்தி நடுங்குவராதலின், மன்னன் வென்றியனாதல் வேண்டும் என்றார். "முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட்கு இறையென்று வைக்கப்படும்" (குறள். 388) என்று சிறப்பிக்கப்படுதலின், வேந்தற்கு நீதிநெறி கடவாமை வேண்டும் என்றார். 'அவனை முறை காக்கு முட்டாச் செயின்" (குறள். 547) என்பது நோக்கி, 'அனைய மன்னற்கு அழிவுமுண்டாங்கொலோ' என்றார். இப்பண்பெலாம் நிறைந்த மன்னவனுடைய வாழ்நாள் இடையூறின்றி இனிது நிகழும் என்பது கருத்து. கொல் அசை. ஓகாரவினா இன்மை யுணர்த்திநின்றது. (18)

1514. சீல மல்லன நீக்கிச்செம் பொற்றுலைத்
தால மன்ன தனிநிலை தாங்கிய
ஞால மன்னற்கு நல்லவர் நோக்கிய
கால மல்லது கண்ணுமுண் டாகுமோ.

சீலம் அல்லன நீக்கிச் செம் பொன் துலைத்
தாலம் அன்ன தனி நிலை தாங்கிய
ஞால மன்னற்கு, நல்லவர் நோக்கிய
காலம் அல்லது, கண்ணும் உண்டாகுமோ?'

பொ :—'சீலம் அல்லனவாகிய குற்றங்களை நீக்கிச் செம்பொன்னை நிறுக்கும் துலாக்கோலின் நாக்குப் போன்ற நடுவு நிலைமையை மேற் கொண்டுள்ள உலக மன்னனுக்கு நல்லவர்கள் கருதிய காலம் அன்றி வேறு கண்ணும் உண்டோ? (இல்லை)'

கு :—'குற்றம்' எனக் கூறவும் அஞ்சிச் 'சீலமல்லன' என்றார். சீலமல்லாத குற்றங்களாவன: காமம், வெகுளி, கடும்பற்றுள்ளம், மானம், உவகை, மதம் என்ற ஆறும் ஆம். இக்குற்றங்கள் தன்கண் நிகழாமல் மன்னன் நீக்கவேண்டும் என்பார் சீலமல்லன நீக்கி என்றார். திருவள்ளுவர், குற்றங்கடிதல் என்று ஓர் அதிகாரத்தால் கூறியவற்றை இவர் தொகுத்துக்கூறினர். நிறைப்பொருள்களில் பொன்னே மதிப்பு மிக்கதாய் ஒரு பாற்கோடாது சமன் செய்து சீர்தூக்கற்குரிய சிறப்புடைய தாகலின் 'செம்பொற்றுலைத்தாலம்' நடுவு நிலைக்கு உவமையாகக் கூறப்பட்டது. தாலம்-நாக்கு. தனிநிலை-நடுவுநிலைமை. "சமன் செய்து சீர்தூக்கும் கோல்போ லமைந்தொருபால் கோடாமை சான்றோர்க் கணி" (குறள்-118) என்பதை நினைத்து இங்ஙனம் கூறினர். "ஓர்வுற்றொரு திறமொல்காத நேர்கோல் அறம்புரி நெஞ்சத்தவன்" (கலி-42;-14-15) "தெரிகோன் ஞமன்ன் போல வொருதிறம் பற்றலிலியரோ" (புறநா-6) என்பனவும் காண்க. நடுவுநிலைமை மன்னற்கு இன்றியமையாதது என் பதை, தனிநிலை தாங்கிய ஞாலமன்னற்கு என்று அடையாக்கிப் பெற வைத்தார். நோக்குதல்-கருதுதல்; நோக்கல் நோக்கம் என்பர். நல்லவர் என்றது, வள்ளுவர் போன்ற அறநூல் ஆசிரியர்களை. "ஞாலங் கருதினுங் கைகூடும் காலம் கருதி யிடத்தாற் செயின்" (484) என்ற குறளைத் தழுவியதாகப் பின்னிரண்டு அடிகள் அமைந்துள்ளமை காண்க. காலம் என்றது, வலிமிக்க வேந்தன் பகைமேல் செல்லுதற் கேற்ற காலத்தை. கண்ணால் நோக்கி அறியும் இடத்தினும், கருத்தால் நோக்கியறியும் காலம் சிறந்தமையாலும், வெற்றி காண்டற்குக் கருவி யாதலாலும், "காலமல்லது கண்ணும் உண்டாகுமோ" என்றார். ஓகாரம், எதிர்மறை. (19)

1515. ஓர்வி னல்வினை யூற்றத்தி னுருரை
பேர்வி றொல்விதி பெற்றுள தென்றரோ
தீர்வி லன்பு செலுத்தலிற் செவ்வியோர்
ஆர்வ மன்னவற் காயுத மாவதே.

'ஓர்வின் நல் வினை ஊற்றத்தினர் உரை
பேர்வு இல் தொல் விதி பெற்றுளது என்று அரோ,
தீர்வு இல் அன்பு செலுத்தலில், செவ்வியோர்
ஆர்வம் மன்னவற்கு ஆயுதம் ஆவதே.'

பொ :—'(நூல்களானும் அநுபவத்தானும்) ஆராய்ந்து கண்டமையால் நல்வினையில் பற்றுமிக்க பெரியோரின் ஆணையை, மாறுபடாத பழைய விதியும் பெற்று நடக்கின்றது என்பது அறிந்து, அவர் பால் நீங்காத அன்பு செலுத்துதலால், அப்பெரியோர் உள்ளத்தில் எழுகின்ற ஆர்வமே மன்னவற்கு ஆயுதமாகும்.'

கு :—ஊற்றம் - அழுத்தமான பற்று. நல்வினை ஊற்றத்தினர் என்றது, அமைச்சர் புரோகிதர் முதலிய பெரியோர்களை. மற்றொன்று சூழினும் தான் முந்துறும் இயல்பு தோன்ற 'பேர்வில் தொல்விதி' என்றார். விதி - ஊழ். பேரா விதியும், பெரியோர் ஆணையின்படி பேரும் தன்மையது என அவர் உரையின் பெருமை யுணர்த்தியவாறு. "உற்ற நோய் நீக்கி யுறாமை முற்காக்கும் பெற்றியார்" (குறள். 442) ஆதலின் இங்ஙனம் கூறினர். அந்தணரைப் பற்றிக் கூறியபொழுது, "ஆவதற்கு மழிவதற்கும் அவர், ஏவ நிற்கும் விதியும்" என்று முன் (1505) கூறியதும் காண்க. திருவள்ளுவர், 'அறனறிந்து மூத்த அறிவுடையார் கேண்மை திறனறிந்து தேர்ந்து கொளல்" (குறள். 441) என்றதை நினைக்க. "தீர்வி லன்பு செலுத்தலிற் செவ்வியோர் ஆர்வம்" என்றது, "அன்பீனு மார்வமுடைமை" (குறள். 74) என்பதற்கு விளக்கம் போல் அமைந்துளது. ஆர்வம் - விருப்பம். மன்னன் பெரியோர்மாட்டு அன்பு செலுத்தினல் அவர்கள் அவன்பால் விருப்பமுடையராய் இருப்பார்கள். அவ்விருப்பமே மன்னவற்கு ஆயுதமாகத் துணைசெய்யவல்லது என்க. "தம்மிற் பெரியார் தமரா வொழுகுதல் வன்மையுளெல்லாந் தலை" (குறள். 444) என்புழி, 'வன்மையுள் எல்லாந் தலை' என்றதை விளக்க ஆயுதமாவது என்றார். ஆர்வம் அன்னவற்கு' எனப் பிரித்துரைப்பினும் ஆம். அரோ அசை. விதியும் என்புழி உயர்வுசிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. (20)

**1516.** தூம கேது புவிக்கெனத் தோன்றிய
வாம மேகலை மங்கைய ரால்வரும்
காம மில்லை யெனிற்கடுங் கேடெனும்
நாம மில்லை நரகமு மில்லையே.

'தூமகேது புவிக்கு எனத் தோன்றிய
வாம மேகலை மங்கையரால் வரும்
காமம் இல்லை எனில், கடும் கேடு எனும்
நாமம் இல்லை ; நரகமும் இல்லையே.'

பொ :—'பூமிக்குத் துன்பமுண்டாக்கப் புகைக்கொடி தோன்றுமாறு போல (மக்களுக்கு அழிவை யுண்டாக்க மனத்துத்) தோன்றியதும், அழகிய மேகலையணிந்த மங்கையரால் வளர்வதும் ஆகிய காமம் இல்லை என்றால், இம்மையில் கடுமையான துன்பம் என்கின்ற பெயரும் இல்லை; மறுமையில் நரகத் துன்பமும் இல்லை.'

கு :—தூமகேது – புகைக்கொடி ; வால் நட்சத்திரம் என்பர் இக் காலத்து. இதன் தோற்றம் உலகிற்குத் தீங்கு விளைவிக்கும். "மைம்மீன் புகையினும் தூமந் தோன்றினும்" (புறநா-117) "கரியவன் புகையினும் புகைக் கொடி தோன்றினும்" (சிலப்-10; 102) என்பன காண்க. தோன்றிய காமம்; மங்கையரால் வரும் காமம் என்று இயைக்க வரும் – வளரும். காமம் – உயிர்க்குணமாய் எல்லா உயிரிடத்தும் தோன்றிப் புறத்துத் தோன்றும் பொருள்களால் வளர்ச்சி பெறும் ஆசை. ஆசை எல்லாவற்றினும் பெண்டிரால் வளர்ச்சி பெறும் காமமே மிக்க கேடு விளைப்பதாகலின் அதனையே எடுத்துக் கூறினர். "காமம் வெகுளி மயக்கம் இவை மூன்றன் நாமங் கெடக் கெடும் நோய்" (குறள். 360) என்பதை நினைப்பிக்கின்றது இச் செய்யுள். இம் மூன்றனுள் காமமே தலையாய குற்றமாகலின் அதனை எடுத்துக் கூறி, ஏனை இரண்டையும் இனம் பற்றிக் கொள்ளவைத்தார். தூமத்தின் தோற்றத்தால் உலகிற்கு அழிவு உண்டாதல் போலக் காமத்தின் தோற்றத்தால் மக்கட்கு அழிவு உண்டாதல்கொண்டு, 'தூமகேது புவிக்கெனத் தோன்றிய...காமம்' என உவமை கூறினர். தோன்றிய மங்கையர் என்றியைத்துத் தூமகேது போன்றவர்கள் வாமமேகலை மங்கையர் என்று உரைப்பாரும் உளர். மேற் காட்டிய குறளில் நோய்க்குக் காரணம் காமம் என்பதே கருத்தாதல் காண்க. நாமம் – பெயர். காமத்தால் வரும் துன்பத்தின் மிகுதி தோன்ற, 'கடும் கேடு' என்றார். எல்லாக் கேட்டிற்கும் காமமே வித்து ஆதலின் அஃதில்வழி மக்கட்குத் துன்பமே இல்லை யென்பார், 'கேடெனும் நாம மில்லை' என்றார். உயிர்களின் தீவினைகட்குத் தக மறுமைக்கண் துன்பம் துய்க்கும் இடம் 'நரகம்' எனப்படும். நரகமும் என்புழி உம்மை

இறந்தது தழீஇயது; கேடெனும் நாமம் இல்லையாதலே அன்றி என்று பொருள் படுதல் காண்க. "சினனே காமம் கழிகண்ணோட்டம்...... அறந்தெரிதிகிரிக்கு வழியடையாகும்" (பதிற்றுப்-22) என்றலின் திகிரி தாங்கப் போகும் இராமனுக்கு இதைக் கூறினர். சச்சந்தன் காமத்தால் அழிந்ததைச் சீவக சிந்தாமணியால் அறியலாம். மிக்க காமமே கடியப் பட்டது. (21)

## வசிட்டன் இராமனுடன் திருமால் கோயிலை அடைதல்

**1517.** ஏனை நீதி யினையன வையகப்
போன கற்கு விளம்பிப் புலன்கொளீஇ
ஆன வன்னொடு மாயிர மௌலியான்
தான நண்ணினன் றத்துவ நண்ணினான்.

ஏனை நீதி இனையன, வையகப்
போனகற்கு விளம்பிப், புலன் கொளீஇ,
ஆனவன் னொடும், ஆயிரம் மௌலியான்
தானம் நண்ணினன், தத்துவம் நண்ணினான்.

பொ :—மெய்யுணர்ந்த வசிட்ட முனிவன், இத்தன்மையவான மற்றைய நீதிகளையும் இராமபிரானுக்குக் கூறி அறிவு கொளுத்தி, அவ்விராம பிரானோடும் திருமால்கோயிலை அடைந்தான்.

கு :—அறிவிப்பான் தானே அறிவிக்கப்படுவோனாய் வேடத்திற் கேற்ப இருந்தான் என்பது தோன்ற, 'வையகப் போனகற்கு விளம்பி' என்றார். வையகப் போனகன் - உலகமுண்ட திருமால். போனகம் - உணவு. இராமபிரான் திருமாலின் அவதாரமாதலின் அப்பெயரால் கூறினர். புலன் - அறிவு. கொளீஇ - கொள்ளச் செய்து. ஆனவன்: சுட்டுப்பெயர். ஆயிரமௌலியான் என்றது, இட்சுவாகு முதலாகச் சூரிய குலத்து மன்னர்கள் வழிபடும் திருமாலின் உருவை. தத்துவம் நண்ணுதல் - மெய்யுணர்தல்; அது, பிறப்பு வீடுகளையும் அவற்றின் காரணங்களையும் ஐயந் திரிபுகளானன்றி உண்மையான் உணர்தல். தாங்கிய வேடத்திற்கேற்ப இராமனுக்கு நீதிகளைக் கூறினனேயன்றி அவன் வையகப் போனகன் என்ற உண்மை நிலையை உணராதவன் அல்லன் வசிட்டன் என்பது தோன்ற அவனைத் தத்துவம் நண்ணினான் என்று சிறப்பித்தார். (22)

## இராமனை நீராட்டித் தருப்பையில் இருக்கச் செய்தல்

1518. நண்ணி நாகணை வள்ளலை நான்மறைப்
புண்ணி யப்புன லாட்டிப் புலமையோர்
எண்ணு நல்வினை முற்றுவித் தேற்றினன்
வெண்ணி றத்த தருப்பை விரித்தரோ.

நண்ணி, நாகணை வள்ளலை நான்மறைப்
புண்ணியப் புனல் ஆட்டிப், புலமையோர்
எண்ணும் நல்வினை முற்றுவித்து, ஏற்றினன்.
வெள் நிறத்த தருப்பை விரித்து, அரோ.

பொ :—ஆதிசேடனாகிய பாம்பணையில் பள்ளிகொண்டுள்ள வள்ளலாகிய அரங்கநாதனிடம் அடைந்து, (அவன் முன்னிலையில் இராமபிரானை,) நான்கு வேதங்களிற் கண்ட மந்திரங்களால் மந்திரிக்கப் பெற்ற புண்ணிய நீரால் மஞ்சனம் ஆட்டி, அறிவுடையோரால், மணிமுடி சூடப்போகும் மன்னர்க்குரியவாக எண்ணப்பட்ட நல்ல சடங்குகளைச் செய்து முடித்து, வெண்மையான நிறத்தையுடைய தருப்பைப் புல்லை விரித்து அதில் ஏறி அமரச் செய்தான் வசிட்டன்.

கு :—புனலாட்டியது நாகணை வள்ளலுக்கே என்றும் கொள்ளலாம். முடிசூடுதற்கு முன்னுள் மேற்கொள்ளவேண்டிய நோன்பின்பொருட்டுத் தருப்பையில் அமரச் செய்தான் ; நோன்பிகட்கு அது மரபு ஆதலின். தருப்பை விரித்து ஏற்றினன் என்று இயைக்க. (23)

## தயரதன் நகரை அணிசெயச் சொல்லல்

1519. ஏற்றிட வாண்டகை யினிதி ருந்துழி
★ நூற்றட மார்பனு நொய்தி னெய்தப்போய்
ஆற்றல்சா லரசனுக் கறிவித் தானவன்
சாற்றுக நகரணி சமைக்க வென்றனன்.

ஏற்றிட, ஆண் தகை இனிது இருந்துழி,
நூல் தட மார்பனும் நொய்தின் எய்தப் போய்,
ஆற்றல் சால் அரசனுக்கு அறிவித்தான் ; அவன்,
'சாற்றுக, நகர் அணி சமைக்க' என்றனன்.

பொ :—அவ்வாறு தருப்பைப் புல்லில் ஏற்றிட இராமபிரான் அப்புல்லில் இனிதாக (த்தியானத்தில்) இருந்தபொழுது, முன்னூல் அணிந்த

மார்பினையுடைய வசிட்டனும் விரைந்து சென்று, ஆற்றல் மிக்க அரசனுக்குத் தான் சடங்குகளை முடித்ததை அறிவித்தான்; அம்மன்னனும், 'நகரை அழகு செய்யுமாறு பறைசாற்றுக' என வள்ளுவனுக்குக் கட்டளையிட்டான்.

கு :—ஆண்தகை-ஆண்தன்மையிற் சிறந்த இராமன். இனிதிருத்தலாவது பதுமாசனத்தில் இனிதாகத் தியானஞ்செய்துகொண்டிருத்தல். நூல் என்றது பூணூலினை. "ஒன்பது கொண்ட மூன்று புரி நுண்ஞாண்" (திருமுருகாற்றுப்படை 183) என்பர் நக்கீரர். நொய்து-விரைவு. சமைத்தல்-செய்தல். இருந்த உழி என்பது 'இருந்துழி' என அகரம் தொகுத்தல் பெற்றது. அரசனுக்கு வசிட்டன் அறிவித்த செய்தியாவது, சடங்கு முடித்துத் தருப்பையில் இருத்தியது. (24)

## வள்ளுவர் முரசறைதல்

**1520.** ஏவின வள்ளுவ ரிராம னாளையே
பூமகள் கொழுநனுய்ப் புனையு மௌலியிக்
கோநக ரணிகெனக் கொட்டும் பேரியத்
தேவருங் களிகொளத் திரிந்து சாற்றினர்.

ஏவின வள்ளுவர், "இராமன் நாளையே
பூமகள் கொழுநனுய்ப் புனையும் மௌலி; இக்
கோ நகர் அணிக" எனக் கொட்டும் பேரி, அத்
தேவரும் களி கொளத், திரிந்து சாற்றினர்.

பொ :—தயரதனல் ஏவப்பெற்ற வள்ளுவர், "இராமபிரான் நாளையே மண்மகளின் தலைவனய் முடிபுனைவான்; ஆதலின், இந்தச் சிறந்த தலைநகரமாகிய அயோத்தியை அலங்கரியுங்கள்" என்று தெருத் தொறும் திரிந்து முழக்குதற்குரிய முரசத்தை அந்தத் தேவர்களும் களிப்படையுமாறு சாற்றினர்கள்.

கு :—ஏவின-ஏவப்பட்ட. வள்ளுவர் - முரசறைவோர். 'நாட்டிற்குத் தலைவனய் முடிபுனைவான்' என்பார், 'பூமகள் கொழுநனய்' என்ருர். மன்னவனை மண்மகளுக்கு மணாளனகக் கூறும் வழக்குண்டு. "பொருவில் பூமகட் புணர்ந்தனன்" (சீவகசிந்-2368) என்பது காண்க. "அவனி மாதெனும் ஒருமகள் மணமுங்கண்டு" (1427) என்ருர் முன்னும். கோ-சிறப்பு; தலைமை. அணிக எனச் சாற்றினர் என்று இயைக்க. அகரம் தொகுத்தல். பேரி - முரசு. அத்தேவர் என்புழிச் சுட்டு விண்

ணுலகத்தை யுணர்த்திற்று. மண்ணுலகில், கொட்டிய முரசொலி விண் ணுலகினும் சென்று எட்டியது என முரசத்தின் சிறப்புணர்த்தியவாறு. 'தேவரும்' என்புழி உம்மை உயர்வுசிறப்பு. மண்ணுலகத்தோரேயன்றித் தேவரும் களிகொள எனப் பொருள்படலால் இறந்ததுதழீஇய எச்ச வும்மையாகவும் கொள்ளலாம். 'நாளையே' என்புழி ஏகாரம் தேற்றம்.(25)

### இராமன் முடிபுனைவது அறிந்து நகரமக்கள் மகிழ்தல்

1521. கவியமை கீர்த்தியக் காளை நாளையே
புவியமை மணிமுடி புனையு மென்றசொல்
செவியமை நுகர்ச்சிய தெனினுந் தேவர்தம்
அவியமு தானதந் நகரு ளார்க்கெலாம்.

'கவி அமை கீர்த்தி அக் காளை நாளையே
புவி அமை மணி முடி புனையும்' என்ற சொல்,
செவி அமை நுகர்ச்சியது எனினும், தேவர்தம்
அவி அமுது ஆனது; அந்நகர் உளார்க்கு எலாம்.

பொ :—'பாடலில் அமைதற்குரிய புகழையுடைய அந்தக் காளை போன்ற இராமன், நாளையே பூமியெலாம் தன் கீழ் அமைதற்குக் காரண மான மணிமுடி புனைவான்' என்ற சொல், செவிப் பொறியில் அமையும் நுகர்ச்சியாகும் தன்மையது ஆயினும், தேவர்களுண்ணும் அவியுணவாக வும் அமுதமாகவும் இனித்தது அவ்வயோத்தி நகரத்து உள்ள வர்க்கு எல்லாம்.

கு :—புலவர் பாடும் புகழுடையான் இராமன் என்பார், 'கவியமை கீர்த்தியக் காளை' என்றார். அன்னதற்கு இவ்விராமாயணமே சான்று தல் காண்க. காளை—காளைப் பருவமுடையான் எனினுமாம். சொல் செவி யால் நுகரப்படுவதாயினும், வாயால் நுகரப்படும் அவியமுதாக இனித்தது என்றது, செவிச்சுவையினும் வாய்ச்சுவை மிக்கதாதல் பற்றி. அவியும் அமுதமும் என உம்மைத்தொகையாக்குக. அந்தணர் வேள்வித் தீயில் தேவர்க்கு அளிப்பது, 'அவி'. பாற்கடலில் தோன்றியது அமு தம். அமுதம் பிணி மூப்புச் சாக்காடு அறச்செய்தல்போல இராமநாம மும் செய்தலானும் இராமபிரானிடத்து இருந்த பற்றால் அவன் முடிபுனை வது தாம் புனைவதாகவே அந்நகருளார் எண்ணுதலாலும் அத்துணைச் சுவையுடையதாயிற்று அச்சொல். (26)

### நகரமக்களின் மகிழ்வுறு செயல்கள்

1522. ஆர்த்தனர் களித்தன
ராடிப் பாடினர்
வேர்த்தனர் தடித்தனர்
சிலிர்த்து மெய்ம்மயிர்
போர்த்தனர் மன்னனைப்
புகழ்ந்து வாழ்த்தினர்
தூர்த்தனர் நீணிதி
சொல்லி னார்க்கெலாம்.

**ஆர்த்தனர், களித்தனர், ஆடிப் பாடினர்,**
**வேர்த்தனர், தடித்தனர், சிலிர்த்து மெய்ம் மயிர்**
**போர்த்தனர், மன்னனைப் புகழ்ந்து வாழ்த்தினர்,**
**தூர்த்தனர் நீள்நிதி சொல்லினார்க்கு எலாம்.**

பொ :—இராமன் முடிபுனைவது கேட்ட நகரமக்கள், ஆரவாரித்தார்கள்; களிப்பு மிக்கவராய் ஆடிக்கொண்டே பாடினார்கள்; அதனால் வேர்த்தார்கள்; உடம்பு பூரித்தார்கள்; சிலிர்ப்பு அடைந்து உடம்பெலாம் மயிர்க்கூச்சால் போர்க்கப் பெற்றார்கள்; நாளையே முடிபுனையக் கருதிய தயரத மன்னனைப் புகழ்ந்து வாழ்த்தினார்கள்; முடிபுனை செய்தியைச் சொல்லியவர்கட்கெல்லாம் பெருஞ்செல்வத்தை வாரிவழங்கி அவர் ஆசைக் கடலைத் தூர்த்தார்கள்.

கு :—ஆர்த்தனர் முதலியவற்றை முற்றெச்சமாக்கித் தூர்த்தனர் என்பதோடு முடிப்பினும் ஆம். கள்ளுண்டார் போறலின், 'களித்தனர்' என்றார். தடித்தல்-பருத்தல்; பூரித்தல். உடம்பு சிலிர்க்குங்கால் உடம்பிலுள்ள மயிர் நிமிர்ந்து நிற்றல் பற்றி, 'மெய்ம் மயிர் போர்த்தனர்' என்றார். போர்த்தல்-மூடுதல். தூர்த்தனர் என்ற வினைக்கேற்ப, 'ஆசைக்கடல்' எச்சமாய் வருவிக்கப்பட்டது. நீட்சி இங்கு மிகுதி யுணர்த்திற்று. (27)

### நகரை அழகு செய்தல் 1523—1531

1523. திணிசுட ரிரவியைத் திருத்து மாறுமப்
பணியிடைப் பள்ளியான் பரந்த மார்பிடை
மணியினை வேகடம் வகுக்கு மாறும்போல்
அணிநக ரணிந்தன ரருத்தி மாக்களே.

திணி சுடர் இரவியைத் திருத்தும் ஆறும், அப்
பணியிடைப் பள்ளியான் பரந்த மார்பிடை
மணியினை வேகடம் வகுக்கும் ஆறும் போல்,
அணி நகர் அணிந்தனர் அருத்தி மாக்களே.

பொ :—அந்நகரத்திலுள்ள ஆர்வமிக்க மக்கள், நிறைந்த கதிர்களையுடைய ஞாயிற்றைத் திருத்தும் தன்மை போலவும் அந்தப் பாம்பணையில் பள்ளிகொள்ளும் பரந்தாமனுடைய பரந்த மார்பில் அணிந்துள்ள கவுத்துவ மணியைச் சாணை பிடிக்கும் தன்மை போலவும் இயல்பாகவே அழகினையுடைய நகரைச் செயற்கையால் அழகுபடுத்தினர்.

கு :—ஒளியிலும் அழகிலும் தமக்கு இணையிலாத சூரியனையும் கவுத்துவ மணியையும் திருத்தி அழகு செய்ய வேண்டாதவாறு போல, இயல்பாகவே அழகிற் சிறந்துள்ள அயோத்தியையும் அழகுசெய்யவேண்டுவதில்லை; ஆசைமிகுதியால் நகர மக்கள் அவ்வுண்மையுணராமல் அந்த அணிநகரை அழகு செய்தனர் என்க. சூரியனைப் போலும் சுடர் இலாதவாறுபோல அயோத்திபோலும் நகரம் உலகத் தின்மையானும் சூரியகுலத்து மன்னரால் ஆளப்படும் சிறப்புண்மையானும் இங்ஙனம் உவமை கூறினர். "மாயோன் மார்பினன் மணிகள் வைத்த பொற்பெட்டியோ" (பால-94) என முன்னர் அயோத்தியைச் சிறப்பித்ததற்கேற்ப இங்கும் அக்கவுத்துவ மணியை அதற்கு உவமையாக்கினர். திணிதல்-நிறைதல், வேகடம் வகுத்தல்-சாணைபிடித்தல்; மாசு போக்குதல். 'வேகடஞ்செய் மணி' (பால. 1035) (28)

1524. வெள்ளிய கரியன
செய்ய வேறுள
கொள்ளைவான் கொடிநிரைக்
குழாங்க டோன்றுவ
கள்ளவிழ் கோதையான்
செல்வங் காணிய
புள்ளெலாந் திருநகர்
புகுந்த போன்றவே.

வெள்ளிய, கரியன, செய்ய, வேறு உள,
கொள்ளை வான் கொடி நிரைக் குழாங்கள் தோன்றுவ,
கள் அவிழ் கோதையான் செல்வம் காணிய
புள் எலாம் திருநகர் புகுந்த போன்றவே.

போ :—வெள்ளை நிறமுடையனவும் கருநிறமுடையனவும் செந்நிற முடையனவும் வேறுபட்ட பிற நிறங்களையுடையனவுமாய் மிகுதியான சிறந்த கொடியின் வரிசையாகிய கூட்டங்கள் தோன்றுபவை, தேனொடு மலர்ந்த மலராலாய மாலையணிந்த இராமபிரான் எய்தும் அரசச் செல்வத்தைக் காண்பதற்காகப் பலநிறங்களையுடைய பறவைகள் எல்லாம் செல்வமிக்க அயோத்தி நகரில் புகுந்தன போன்றன.

கு :—'வேறுள' என்றது பசுமையும் பொன்மையும் முதலிய நிறங்களை. முதலடி கூழைமுரண். கொள்ளை-மிகுதி. குழாம்-கூட்டம். தோன்றுவ வினையாலணையும் பெயர். தோன்றுவனவாகிய குழாங்கள் என மாற்றியுரைப்பினும் ஆம். கள்-தேன். காணிய, செய்யிய என்னும் வாய்பாட்டு வினையெச்சம். திரு கண்டாரால் விரும்பப்படும் அழகு எனினும் அமையும். தாதுண் பறவையாகிய வண்டுகட்கு விருந்தளிக்கும் கோதையானதலின் அதன் இனமாய பறவைகள் எல்லாம் அவ்விராமன் செல்வநிலையைக் காணவந்தன போன்றன என்ற கருத்துத் தோன்றக்கூறிய 'கள்ளவிழ் கோதையான்' என்பது கருத்துடையடை கொளியணி. தம்மினத்திற்கு உதவி செய்தாரது மல்லற் காலத்தும் அல்லற் காலத்தும் பறவைகள் வந்து கூடித் தம் நன்றியைத் தெரிவிக்கும் இயல்பின. பறவைகளைப் பாதுகாத்த ஆய் எயினன் என்பவன் மிஞிலியொடு பொருது நண்பகலில் இறந்து வீழ்ந்தானாக, அவனுடலை வெயில் தாக்காதவாறு பறவைகள் சிறகை விரித்து நிழல் செய்த செய்தியை : "ஆஅயெயினன்......மயங்கமர் வீழ்ந்தென......ஒண்கதிர் தெறுமைச் சிறகரிற் கோலி நிழல் செய்துழறல்" (அகநா-208; 5-12) என்பதால் அறியலாம். கொடிகள் பல வண்ணத்தனவாய்ப் பறந்து கொண்டிருக்கும் தோற்றம் பலவண்ணத்த பறவைகள் இராமன் செல்வத்தைப் பார்க்க வந்து பறப்பதுபோன்றன என்பது தற்குறிப்பேற்றம். (29)

1525. மங்கையர் குறங்கென வகுத்த வாழைகள்
அங்கவர் கழுத்தெனக் கமுக மார்ந்தன
தங்கொளி முறுவலிற் றாம நான்றன
கொங்கையை நிகர்த்தன கனக கும்பமே.

மங்கையர் குறங்கு என வகுத்த வாழைகள் ;
அங்கு அவர் கழுத்து எனக் கமுகம் ஆர்ந்தன ;
தங்கு ஒளி முறுவலில் தாமம் நான்றன ;
கொங்கையை நிகர்த்தன கனக கும்பமே.

பொ :—மங்கையரின் துடைபோல வாழைமரங்கள் வாயிலில் வகுத்துக் கட்டப்பட்டன; அவ்விடத்தே அம்மங்கையரின் கழுத்துப் போலக் கமுக மரங்கள் நிறையக் கட்டப்பெற்றன; அவர்தம் ஒளிதங்கும் பற்கள் போல முத்துமாலைகள் தொங்கவிடப்பட்டன; அவருடைய நகில்களைப் போலப் பொற்குடங்கள் வைக்கப்பெற்றன.

கு :—குறங்கு-துடை. முறுவல்-புன்சிரிப்பு; இங்குப் பல்லையுணர்த்தியது. தாமம்-முத்துமாலை. நாலுதல்-தொங்குதல். மங்கையரின் துடைக்கும், கழுத்திற்கும், பல்லுக்கும், கொங்கைக்கும் உவமையாகக் கூறப்படும் வாழையும் கமுகும் முத்தும் பொற்குடமும் இங்கு உவமேயமாகக் கூறப்பட்டுள்ளன ; இதுவிபரீத உவமை. வாழைமரங்களும் கமுக மரங்களும் வாயில்களில் கட்டினுர்கள்; முத்துமாலைகளைத் தொங்கவிட்டார்கள்; பொற்குடங்களை நீர்நிறைகுடங்களாய் வைத்தார்கள் என்பதைக் கூற வந்தவர், இந்நான்கற்கும் மங்கையரிடத்திருந்தே உவமைகாட்டிய சிறப்புக் காண்க. 'வகுத்த' என்பது, அன்சாரியை யின்றிவந்த அகரவீற்றுப் பலவின்பால் வினைமுற்று. வகுத்த வாழைகள், கமுகமார்ந்தன. தாமம் நான்றன என்பன செயப்படு பொருளைச் செய்தது போலத் தொழிற்படக் கிளக்கப்பெற்றன. (30)

**1526.** முதிரொளி யுயிர்த்தன முடுகிக் காலையில்
கதிரவன் வேறெரு கவின்கொண் டானென
மதிதொட நிவந்தன மகர தோரணம்
புதியன வலந்தன புதவ ராசியே.

முதிர் ஒளி உயிர்த்தன, முடுகிக் காலையில்
கதிரவன் வேறு ஒரு கவின் கொண்டான் என,
மதி தொட நிவந்தன மகர தோரணம்
புதியன வலந்தன புதவ ராசியே.

பொ :—சந்திரனைத் தொடுமாறு உயர்ந்தனவாகிய மகர தோரணங்களைப் புதியனவாகக் கட்டப்பெற்ற கோபுரவாயில்கள் சூரியன் காலையில் விரைந்து வந்து வேறெரு கவினர் வேடம் கொண்டான் என்னுமாறு மிக்க ஒளியை வீசின.

கு :—மகர தோரணம்-மகரமீன் வடிவாகச் செய்யப்பட்ட (ஒளியுடைய) தோரணம். இதன் உயர்ச்சி தோன்ற, 'மதிதொட நிவந்தன' என்ருர். மதி-சந்திரன். நிவந்தன-உயர்ந்தன. முடிபுனை விழாவிற்காகக் கட்டப்பட்டமை தோன்ற, 'புதியன வலந்தன' என்ருர். வலத்தல்-கட்டுதல். புதவம் வாயில், 'புதவம் பலவுள' (சிலப்-காடுகாண்-119) என்

புழியும் அப்பொருளதாதல் அடியார்க்கு நல்லார் உரையால் அறியலாம். மகரதோரணம் கட்டிய கோபுர வாயில் புதிய ஒளியுடையதாகக் காணப் பட்டமையின் சூரியன் போன்றது என்பார், வாயில் வட்டவடிவாக இன்றி நாற்கோணமுடையதாக இருப்பது நினைந்து, "கதிரவன் வேறொரு கவின் கொண்டான் என" என்றார். இது விகாரவுவமை. முதிரொளி - பேரொளி. உயிர்த்தல் - வெளிப்படுத்தல்; வீசுதல். ராசி-வரிசை. தோரணம் வலந்தன புதவராசி, கதிரவன்......என ஒளி உயிர்த்தன என்று இயைக்க. (31)

1527. துனியறு செம்மணித்
தூண நீறுதோய்
வனிதையோர் கூறினன்
வடிவு காட்டின
புனைதுகி லுறைதொறும்
பொதிந்து தோன்றின
பனிபொதி கதிரெனப்
பவளத் தூண்களே.

துனி அறு செம் மணித் தூணம், நீறு தோய்
வனிதை ஓர் கூறினன் வடிவு காட்டின;
புனை துகில் உறை தொறும் பொதிந்து தோன்றின,
பனி பொதி கதிரெனப் பவளத் தூண்களே.

பொ :—அழகு செய்யப் பெற்ற வெள்ளைத் துகிலால் ஆய உறை தோறும் மூடப்பட்டுக் குற்றமற்ற செம்மணியாலாய தூண்கள், வெண்ணீறு பூசிய மங்கை பங்கனாகிய சிவபிரானுடைய வடிவத்தைக் காட்டின; அவ்வாறே உறைகளால் மூடப்பட்ட பவளத் தூண்கள், பனிப் படலத்தால் மறைக்கப் பெற்ற சூரியனைப் போலத் தோன்றின.

ரு :—'துகிலுறை தொறும் பொதிதல்' இடை நிலை விளக்காய் நின்று செம்மணித் தூணுக்கும் பவளத் தூணுக்கும் அடையாயது துகிலுறை பொதிந்த செம்மணித் தூணுக்கு நீறு தோய்ந்த சிவபிரானும் அவ்வாறே துகிலுறை பொதிந்த பவளத் தூணுக்குப் பனிபொதி கதிரும் உவமையாயின; இரட்டையுவமம்; "பொன்காண் கட்டளை கடுப்பக் கண்பின், புன்காய்ச் சுண்ணம் புடைத்த மார்பின்" (பெரும் பாண்-220) என்பது போல. "இரட்டைக் கிளவியும் இரட்டை வழித்தே" (தொல்-உவமை-22) என்பர் தொல்காப்பியர். சிவபிரான், 'செம்மேனி அம்மான்' (அப்பர்-4-9) ஆதலின் செம்மணித் தூண்கள்

அவ்வடிவு காட்டின. முழுநீறு பூசிய முதல்வர் என்பது தோன்ற 'நீறு தோய்' என்ருர். வனிதை இங்குப் பார்வதி. கூறினன்-பாகத்தில் கொண்டவன். "நீலமேனி, வாலிழைபாகத் தொருவன் " (ஐங்குறுநூறு. கடவுள் வாழ்த்து) என்றது காண்க. "மற்றவரறியா மாணிக்க மலையை" (திருவிசைப்பா 5-2) எனச் சிவபிரானுக்கு மாணிக்க மலையை உவமை கூறியுள்ளமை காண்க. நூருயிரங் கோடி சூரியர்கள் ஒன்று சேர்ந்தாற் போன்ற ஒளிவடிவினன் ஆதலின் சிவபிரானை ஒளிமிக்க செம்மணிக்கும், சூரியனைப் பவளத்திற்கும் உவமையாக்கினுர். " உலகெலாந் தொழவந் தெழுகதிர்ப்பருதி ஒன்று நூருயிர கோடி அலகெலாம் பொதிந்த திரு வுடம்பச்சோ அங்ஙனே அழகிதோ " (திருவிசைப்பா-9-1) என்றது காண்க. பவளத் தூண்கள் கதிரெனத் தோன்றின என்று இயைக்க. பனி பொதிதல் கூறினமையின் காலைக் கதிரவனே பவளத் தூணுக்கு உவமை என்பது அறிக. துகில், வெள்ளை நூலால் ஆய ஆடை. பொதிதல்-மூடுதல். இறைவனுடைய செம்மேனி நீருெடு பொலிவது போல் செம் மணித் தூணம் புனைதுகிலுறையொடு பொலிந்த தென்க. (32)

**1528.** முத்தினின் முழுநில வெறிப்ப மொய்ம்மணிப்
பத்தியி னிளவெயில் பரப்ப நீலத்தின்
தொத்தின மிருள்வரத் தூண்டச் சோதிட
வித்தகர் விரித்தநா ளொத்த வீதியே.

முத்தினின் முழு நிலவு எறிப்ப, மொய்ம் மணிப்
பத்தியின் இள வெயில் பரப்ப, நீலத்தின்
தொத்தினம் இருள்வரத் தூண்டச், சோதிட
வித்தகர் விரித்த நாள் ஒத்த, வீதியே !

போ :—அயோத்தி நகரத் தெருக்கள், அலங்காரம் செய்யப்பட்ட முத்துக்களால் முழுநிலவு போன்ற தண்ணிய வெள்ளொளி வீசப்படுத லாலும், நெருங்கிய செம்மணிகளின் வரிசையால் இளவெயில் போன்ற செவ்வொளி பரப்பப் படுதலாலும், நீலமணியின் கொத்துக்களால் இருள் உண்டாகத் தூண்டப்படுதலாலும் சோதிடம் வல்லவர் விரித்துக் கூறிய ஒரு நாளை ஒத்தன.

கு :—இன் மூன்றும் ஏதுப் பொருளன. 'முத்தினின்' என்புழி, இன் சாரியையும் உடன் வந்தது; "கற்பினின் வழா நற்பலவுதவி" (அகநா-86) என்புழிப் போல. தொத்தினம் - தொத்தாகிய இனம். ஒரு நாள் என்பது, ஞாயிற்றின் வெயிலொளியும், திங்களின் நிலவொளி யும் இருளின் கருமையும் சேர்ந்ததே ஆம். அம் மூன்றும் வீதியில் அலங்கரிக்கப் பெற்ற வெண் முத்துக்களாலும் செம்மணிகளாலும் நீல

மணிகளாலும் உண்டாக்கப்படுதலின், 'நாள் ஒத்த' என்றார். நாளைப் பற்றி ஆராயும் இயல்பினர் சோதிடரே ஆதலின், 'சோதிட வித்தகர் விரித்த நாள் என அடை கொடுத்தார். "நீலமாலைத், தஞ்சுடைய இருள் தழைப்பத் தரளமாங்கே தண்மதியின் நிலாக்காட்டப் பவளந்தன்னால், செஞ்சுடர வெயில் விரிக்கும் அழகார் காழி" (பெரிய திருமொழி-3-3-4) என்பதை இச்செய்யுள் நினைப்பித்தல் காண்க. "குடையொடு...இடையொரு கணத்தினுள்ளே இரவுண்டு பகலுமுண்டே" (பால. 871) என்பதும் காண்க.

இனி, வான்மீகத்தில் (அயோத்தி-4-18) தயரதன், இராமனிடம், "சோதிடர்கள் என் பிறப்பு நட்சத்திரமானது சூரியன், அங்காரகன், இராகு என்கிற கிரகங்களால் பீடிக்கப்படுகின்றதெனச் சொல்லுகின்றார்கள்" எனக் கூறியதாகக் குறிக்கப்பட்டிருத்தலால் அதை மனதிற் கொண்டு, கம்பர், 'சோதிட வித்தகர் விரித்த நாள்' என்று கூறினர். எனலுமாம். தயரதன் பிறந்த நட்சத்திரம் வெள்ளொளியுடையதாதலும் அதைப் பீடித்த சூரியனும் அங்காரகனும் செவ்வொளியுடையவாதலும் இராகு கருநிறமுடையதாதலும் கருத்திற் கொண்டு காண்க. (33)

1529. ஆடன்மான் றேர்க்குழா மவனி காணிய
வீடெனு முலகின்வீழ் விமானம் போன்றன
ஓடைமாக் கடகளி றுதய மால்வரை
தேடருங் கதிரொடுந் திரிவ போன்றவே.

ஆடல் மான் தேர்க் குழாம், அவனி காணிய,
வீடு எனும் உலகின் வீழ் விமானம் போன்றன;
ஓடை மாக் கட களிறு, உதய மால் வரை
தேடருங் கதிரொடும் திரிவ போன்றவே.

பொ :—ஆடுகின்ற தன்மையுடைய குதிரைகள் பூட்டப் பெற்ற தேர்களின் கூட்டம், மண்ணுலகைக் காணும் பொருட்டு முத்தி என்கின்ற விண்ணுலகில் நின்றும் வீழ்ந்த விமானங்களைப் போன்றன; நெற்றிப் பட்டம் அணிந்த மதயானைகள், உதயமலை உவமை தேடுதற்கு அரிய ஞாயிறுகளோடும் திரிவனவற்றைப் போன்றன.

கு :—ஆடல், தாள வொற்றுக் கேற்ப ஐங்கதி நடத்தல். அடல் என்பதன் நீட்டல் விகாரமாகக் கொண்டு 'வலிய குதிரை' எனலுமாம். தேர்கள் எல்லாம் பொன்னாலியன்று அழகுமிக்கனவாய் இருத்தலின் வீட்டுலகினின்றும் வீழ்ந்த விமானம் போன்றன என்றார். இது தற்குறிப்பேற்றவுவமை. ஓடை-யானையின் நெற்றியில் அணியும் பட்டம். இப்பட்டம் சூரியனைப் போன்று ஒளிமிக்கதாக இருத்தலின் இதனொடு திரியும்

யானைக்குக் கதிரொடு திரியும் உதய மலையை உவமையாக்கினர். உதய கிரி யானைக்கும் சூரியன் நெற்றிப் பட்டத்திற்கும் உவமை. உதயமால் வரை கதிரொடு திரிதலும் பலவாதலும் இன்மையின் இஃது இல் பொருள் உவமை. தேட அரும் எனல் வேண்டும் அகரம் தொக்கது. அவனி என்றது, அயோத்தியைக் குறித்ததாகக் கொள்க. "எவ்வுல கத்தோ ரியாவரும் தவஞ்செய்தேறுவா னுதரிக்கின்ற அவ்வுலகத்தோ ரிழிவதற்கு அருத்தி புரிகின்ற தயோத்தி மாநகரம்" (பால-93) ஆதலின் அந்நகரைக் காண விண்ணுலக விமானம் வீழ்வது பொருத்தமாதல் காண்க. (34)

1530. வளங்கெழு திருநகர் வைகும் வைகலும்
பளிங்குடை நெடுஞ்சுவர் படுத்த பத்தியில்
கிளர்ந்தெரி சுடர்மணி யிருளைக் கீறலால்
தளர்ந்தில பிரிந்தில சக்(க)ர வாகமே.

வளம் கெழு திரு நகர் வைகும் வைகலும்
பளிங்கு உடை நெடும் சுவர் படுத்த பத்தியில்
கிளர்ந்து எரி சுடர் மணி இருளைக் கீறலால்,
தளர்ந்தில பிரிந்தில சக்(க)ர வாகமே.

பொ :—வளம் பொருந்திய அழகிய அயோத்தி நகரில், பளிங்குக் கற்களால் செய்த நெடியசுவரில் பதிக்கப் பெற்றனவாய் வரிசையாக மிக விளங்குகின்ற ஒளியையுடைய மணிகள் இருளைக் கிழித்து ஒழித்தலால், (பகலாகவே தோன்றுதலின்) சக்கரவாகம் என்னும் பறவைகள், தளர்ச்சி யடைதலும் தன் பெடையைப் பிரிதலும் இலவாய் நாடொறும் மகிழ்ச்சி யோடு தங்கியிருக்கும்.

கு :—படுத்தல் - பதித்தல். பத்தி - வரிசை. அயோத்திநகரத்து வீடுகளின் சுவர்கள் பளிங்கினுலியன்றன; மாணிக்கக் கற்கள் பதிக்கப் பெற்றன; ஆதலின் அம்மணியொளி இருளை யொழித்துப் பகலாக்கு கின்றது; இரவில் பிரிந்து இரைதேடும் இயல்பினவாகிய சக்கரவாகப் பறவைகள், இரவையும் பகலாகவே எண்ணிப் பிரிதலும் பிரிந்து தளர் தலுமின்றி நாள் தோறும் அவ்வீடுகளிலேயே மகிழ்ச்சியுடன் தங்கியிருக் கின்றன என்க. சூரிய ஒளியென்று மணியொளியை மயங்கியுண்ணு கின்றமையால் பசியால் தளர்ந்தில எனினும் அமையும். அப்பறவை சூரியன் ஒளியை அருந்தும் இயல்பினது. சகோரம் நிலவையுண்பது. அயோத்தியில் இரவொன்றில்லை என்பதை விளக்கியவாறு. "செந்தழல்... எந்தையார் திருக்காளத்தி மலையினி லிரவொன்றில்லை" (பெரிய-கண்ணப்ப-131) என்பது இங்கு நினைக்கத்தகும். வைகலும் வைகும்

என மாறுக. பறவைகட்கும் பசித்துயரையும் பிரிவுத்துயரையும் நீக்குகின்ற நகரமென அதன் சிறப்புணர்த்தியவாறு. மணியொளியைப் பகல் ஒளியாகப் பறவைகள் மயங்கின என்றமையின், இது, திரிபதிசய அணி. (35)

1531. பூமழை புனன்மழை புதுமென் சுண்ணத்தின்
தூமழை தரளத்தின் றோமில் வெண்மழை
தாமிழை நெரிதலிற் றகர்ந்த பொன்மழை
மாமழை நிகர்த்தன மாட வீதியே.

பூ மழை, புனல் மழை, புதுமென் சுண்ணத்தின்
தூ மழை, தரளத்தின் தோம் இல் வெண் மழை,
தாம் இழை நெரிதலில் தகர்ந்த பொன்மழை,
மா மழை நிகர்த்தன, மாட வீதியே.

பொ :—மாடங்கள் நிறைந்த வீதியில், அலங்காரம் செய்வோர் சொரிகின்ற பூமழையும், வாசநீர்மழையும், புதிய மெல்லிய வாசச் சுண்ணத்தின் தூய மழையும், குற்றமற்ற வெள்ளிய முத்துக்களின் மழையும், மக்களின் நெருக்கத்தால் அவர்கள் அணிந்துள்ள ஆபரணங்கள் நெரிதலால் அவை சிதைந்து சிந்திய பொன்மழையும், ஊழியிறுதியில் ஏழு மேகங்களும் பொழியும் பெருமழையை ஒத்துக் காணப்பட்டன.

கு :—புனல் என்றது, தெருக்களில் புழுதியடங்கத் தெளிக்கின்ற வாசநீரை. வாசனைப் பொருள்களைச் சேர்த்து அப்பொழுது இடித்த சுண்ணம் என்பார், 'புதுமென் சுண்ணம்' என்றார். தூவுமழை என்பது இடை நின்ற உயிர்மெய் கெட்டுத் 'தூமழை' ஆயிற்று என்று கொண்டு பொருள் கூறலுமாம். தோமில் வெண் தரளம் என மாறுக. தாம் அசை. 'இழைதாம் நெரிதலில்' என மாறிக் கூறினும் ஆம். தகர்தல் - சிதைதல். ஏழு மேகங்களில், பூமழை பொழியும் சங்காரித்தமும், புனல்மழை பொழியும் ஆவர்த்தமும், சுண்ணம் போன்ற மண் மழை பொழியும் துரோணமும், முத்து முதலிய மணி மழை பொழியும் சம்வர்த்தமும், பொன் மழை பொழியும் புட்கலாவர்த்தமும் ஆகிய ஐந்து மேகங்களுங் கூடிப் பொழிந்தாற் போன்று பூமழையும் புனல் மழையும் சுண்ணமழையும் முத்துமழையும் பொன்மழையும் வீதிகளில் மிகுதியாகப் பொழியப்பெற்றன என்க. இழை நெரிதலில் தகர்ந்தமை கூறி, நெருப்புப் போன்ற செம்மணிகளும் பிற மணிகளும் சிந்தினமை இனம் பற்றிக் கொள்ள வைத்தமையின், தீயைப்பொழியும் நீல வருணமும், கல்லைப்பொழியும் சாளமுகியும் கொள்ளலாம். எனவே, ஏழு

மேகமும் பொழியும் ஊழிப் பெருமழையே இங்கு மாமழை என உவமை ஆக்கப்பட்டது என்பது புலனுகும். (36)

## பிடியும் களிறும் செல்லுங் காட்சி

**1532.** காரொடு தொடர்மதக் களிறு சென்றன
வாரொடு தொடர்கழன் மைந்த ராமெனத்
தாரொடு நடந்தன பிடிக டாழ்கலைத்
தேரொடு நடக்குமத் தெரிவை மாரினே.

காரொடு தொடர் மதக் களிறு சென்றன,
வாரொடு தொடர் கழல் மைந்தர் ஆம் என;
தாரொடு நடந்தன பிடிகள், தாழ் கலைத்
தேரொடு நடக்கும் அத் தெரிவைமாரினே.

பொ :—மேகத்தை ஒத்த மதம் பொருந்திய ஆண்யானைகள், வாரொடு பொருந்திய வீரக்கழல் அணிந்த மைந்தர் போலச் சென்றன; பெண்யானைகள், தாழ்ந்த மணிமேகலை அணிந்த தேர்போன்ற அல்குலோடு நடக்கும் அப் பெண்டிர் போலக் கிண்கிணி மாலையோடு நடந்தன.

கு:—கார், நிறத்தால் யானைக்குவமை. பண்புவமையும் வினையுவமையுமாய் வேறுபடுதலின், "காரொடு தொடர் மதக்களிறு மைந்தராம் எனச் சென்றன" என்றது உவமைக்கு உவமை வந்ததன்று. தொடர், உவமையுருபு. கார்போல் மதம் பொழியும் களிறு எனலும் ஆம். மைந்தர் நடைக்குக் களிற்றின் நடையையும் மகளிர் நடைக்குப் பிடியின் நடையையும் உவமை கூருது, மைந்தராமெனக் களிறு சென்றன எனவும், தெரிவைமாரின் பிடிகள் நடந்தன எனவும் மாறிக் கூறியது விபரீதவுவமையாகும். தார்-கிண்கிணி மாலை. கலை-மேகலை என்னும் அணி. தேர் என்பது உவமையாகுபெயராய் அல்குலை யுணர்த்திற்று. அகரம் உலகறி சுட்டு. ஆம், இன் என்பன ஒப்புணர்த்தின. (37)

## அயோத்தியை அமரர் அமராவதியாகவே எண்ணுதல்

**1533.** ஏய்ந்தெழு செல்வமு மழகு மின்பமும்
தேய்ந்தில வனையது தெரிகி லாமையால்
ஆய்ந்தனர் பெருகவு மமர ரிம்பரில்
போந்தவர் போந்தில மென்னும் புந்தியால்.

ஏய்ந்து எழு செல்வமும், அழகும், இன்பமும்,
தேய்ந்தில; அனையது தெரிகிலாமையால்
ஆய்ந்தனர் பெருகவும் அமரர், இம்பரில்
போந்தவர், 'போந்திலம்' என்னும் புந்தியால்.

பொ :—அயோத்தியில் பொருந்தி வளர்கின்ற செல்வமும் மக்களின் அழகும், அவர் பெறும் இன்பமும் பொன்னுலகத்து இருப்பதினும் குறைவாக இல்லை; ஒப்பாகவே உள்ளன; அதனைத் தேவர்கள் தெரிந்து கொள்ளாமையால், அவர்கள் முடிபுனை விழாக்காண இவ்வுலகத்தில் உள்ள அயோத்திக்கு வந்திருந்தும், வந்திலேம் என்னும் எண்ணத்தால் பெரிதும் சிந்திக்கலாயினர்.

கு :—பொன்னுலகத்துள்ளது போலவே அயோத்தி நகரத்தும், செல்வமும், அழகும், இன்பமும், இருக்கும் காரணத்தால் அயோத்திக்கு வந்த அமரர் அந்நகரைத் தம் பொன்னகரே என மயங்கி மண்ணுலகத்திற்குப் போந்திலம் என்று ஆய்ந்தனர் என்றது, மயக்கவணி; திரிபதிசயம் என்பர் தண்டி யாசிரியர். "சேயிரு விசும்பிடைத் திரியும் சாரணர் நாயகன் இவன்கொலென் றயிர்த்து நாட்டமோர், ஆயிர மில்லை யென் றைய நீங்கினர்." (பால-319) எனவும், "ஐயன் வில்லிறுத்த வாற்றல் காணிய அமரர் நாட்டுத் தையலா ரிழிந்து பாரின் மகளிரைத் தழுவிக் கொண்டார், செய்கையின் வடிவின் ஆடல் பாடலிற் றெளிதல் தேற்றார், மையரி நெடுங்க ணோக்கம் இமைத்தலுமயங்கி நின்றார்." (பால. 790 எனவும் முன்னர்க் கூறியுள்ளன இங்கு ஒப்பு நோக்கத்தகுவன. (38)

## கூனி தோன்றுதல்

**1534.** அந்நக ரணிவுறு மமலை வானவர்
பொன்னக ரியல்பெனப் பொலியு மேல்வையில்
இன்னல்செ யிராவண னிழைத்த தீமைபோல்
துன்னருங் கொடுமனக் கூனி தோன்றினாள்.

அந்நகர் அணிவு உறும் அமலை, வானவர்
பொன்னகர் இயல்பு எனப் பொலியும் ஏல்வையில்,
இன்னல் செய் இராவணன் இழைத்த தீமை போல்,
துன்னரும் கொடு மனக் கூனி தோன்றினாள்.

பொ :—அலங்கரிக்கின்ற ஆரவாரத்தையுடைய அவ்வயோத்திநகரம் தேவர்கள்வாழும் பொன்னகரின் தன்மைபோலப் பொலிகின்ற அமையத்தில், உலகிற்குத் துன்பஞ் செய்கின்ற இராவணன் செய்த தீமை

யெலாம் ஒருவடிவுகொண்டு வந்ததுபோல் நெருங்குதற்குஅரிய கொடிய மனத்தையுடைய கூனி வந்து தோன்றினள்.

கு :—ஏல்வை - பொழுது, இன்னல் - துன்பம். கூனி இழைக்கப் போகும் கொடுமையால் இராமபிரான் கோல் துறந்து கானும் கடலும் கடந்து, இமையோர் இடுக்கண் தீர இராவணனைக் கொல்லப்போவதால், அவளை இராவணன் இழைத்த தீமைபோல் தோன்றினள் என்றார். பின், கைகேயி, கூனியின் சொல்லால் நல்லருள் துறந்தமைக்குக் காரணமாக, அரக்கர்பாவம் துரத்தலைக் கூறுவதும் காண்க. ஒருவன் உறும் துன்பத்திற்கும் அழிவிற்கும் அவன் செய்த தீமையே காரணம் என்பதை இங்குப் பெறவைத்தார். இராவணன் தீமை இழைக்கவில்லை யென்றால் கூனியின் கலகமும் இராமன் காடு நண்ணலும் இராவணன் சீதையைக் கவர்தலும் அதுகாரணமாக அவன் இராமனால் இறத்தலும் நிகழா என்க. செம்மை நெறி செல்லாது கொடு நெறியே சென்று பழகிய நெஞ்சம் என்பார், அதை மனத்திற்கு ஏற்றிக் கொடு மனம் என்றார். கொடுமனம்–வளைந்தமனம். "உள்ளமுங் கோடிய கொடியாள்" (கைகேசி சூழ்-81) எனப் பின்னர்க் கூறுவதும் காண்க. கொடுமனக் கூனி–கோணிய உள்ளமும் உடம்பும் உடையவளாகிய மந்தரை. துன்னினர் நன்மனத்தையும் கோணுவிக்கும் ஆற்றல் பெற்ற மனம் என்பார், "துன்னரும் கொடு மனக் கூனி" என்றார். "தேவி தூய சிந்தையும் திரிந்தது" (கைகேசி சூழ்-77) இத் தீய மந்தரை துன்னியதாலன்றோ? இவள் மனவியல்பை யுணர்ந்தார் இவளைத் துன்னார் என்க. கைகேயியும் இக்கூனியைப் "போதி யென்னெதிர்நின்று" (1562) எனக் கூறுவதும் இவள் கொடுமனம் உணர்ந்தேயாம். இராவணன் அழிவிற்கு வித்திட்டவள் கூனியே என்பது பெறவைத்தவாறு. (39)

### கூனியின் சினம்

**1535.** தோன்றிய கூனியுந் துடிக்கு நெஞ்சினள்
ஊன்றிய வெகுளியா ளுளைக்கு முள்ளத்தாள்
கான்றெரி நயனத்தாள் கதிக்குஞ் சொல்லினள்
மூன்றுல கினுக்குமோ ரிடுக்கண் மூட்டுவாள்.

தோன்றிய கூனியும் துடிக்கும் நெஞ்சினள்,
ஊன்றிய வெகுளியாள், உளைக்கும் உள்ளத்தாள்,
கான்று எரி நயனத்தாள், கதிக்கும் சொல்லினள்,
மூன்று உலகினுக்கும் ஓர் இடுக்கண் மூட்டுவாள்.

பொ :—அவ்வாறு தோன்றிய கூனியும், (இராமபிரானின் முடி புனை விழாவிற்கு நகர் அலங்கரிக்கப்படுதலையுணர்ந்து) துடிதுடிக்கும்

நெஞ்சினளாய், அழுந்திய கோபமுடையளாய்க் குழம்புகின்ற உள்ளத்தளாய் சினநெருப்பைக் கக்கிக்கொண்டு எரிகின்ற கண்களையுடையளாய், சினந்த சொல்லையுடையவளாய் மூன்று உலகத்திற்கும் ஒரு துன்ப நெருப்பை மூட்டுவாளாய்.

கு :—நெஞ்சினள், வெகுளியாள், உள்ளத்தாள், நயனத்தாள், சொல்லினள், மூட்டுவாள் என்ற முற்றுக்கள் வினையெச்சப்பொருளில் வந்தன. மூட்டுவாளாய் மண்டினள், என வரும் பாடலில் முடியும்; குளகம். ஊன்றுதல் - அழுந்துதல்; நிலைபெறுதல். உளைதல் - குழம்புதல்; துன்பத்தால் கலங்குதல். மூன்றுலகினுக்கு மோ ரிடுக்கண் மூட்டுதலாவது, இராபிராமனைக் கோல் துறந்து காடுபுகச்செய்தல்; அந் நிகழ்ச்சி மூவுலகத்தார்க்கும் துன்பம் விளைத்தமை அறிந்தது. வான் மீகத்தில் கூனி, மேனிலைமாடத்தேறி நகரம் அலங்கரிக்கப்படுவதையும் மக்கள் மகிழ்ச்சி மிக்கிருப்பதையும் கண்டு தன்னருகிருந்த இராமனது செவிலித்தாயை நோக்கி, இராமன் தாய் செல்வத்தை மிகுதியாகக் கொடுப்பதற்கும் மக்களின் மகிழ்ச்சிக்கும் நகர் அலங்கரிப்பிற்கும் காரணம் யாதென்று கேட்டு, இராமன் முடிசூடப் போவதை அறிந்து கொண்டதாகக் காணப்படுகின்றது. நகர் அலங்கரிக்கும் நிகழ்ச்சியால் கூனி, இராமன் முடிசூடுதலை ஊகித்து அறிந்து கொண்டதாகக் கொள்ளவைத்தார் கம்பர். (40)

## கூனி கைகேயியிடம் விரைதல்

1536. தொண்டைவாய்க் கேகயன்
றோகை கோயின்மேல்
மண்டினள் வெகுளியின்
மடித்த வாயினள்
பண்டைநா ளிராகவன்
பாணி வில்லுமிழ்
உண்டையுண் டதனைத்தன்
னுள்ளத் துள்ளுவாள்.

தொண்டைவாய்க் கேகயன் தோகை கோயில் மேல்
மண்டினள், வெகுளியின் மடித்த வாயினள்,
பண்டை நாள் இராகவன் பாணி வில் உமிழ்
உண்டை உண்டதனைத் தன் உள்ளத்து உள்ளுவாள்.

பொ :—பண்டைக்காலத்து, இராமன் தன் கைவில்லால் வெளிப்படுத்திய உண்டை தன் கூனைச் சிதைத்ததனைத் தன் மனத்து நினைவு

கூர்ந்து கோபத்தால் மடித்த வாயினையுடையவளாய்க் கொவ்வைக்கனி போன்ற வாயினையுடைய கைகேயியின் மாளிகைக்கு விரைந்தாள்.

கு :—தொண்டை-ஆதொண்டைக்கனியுமாம். கேகயன் தோகை-கேகயன்மகள். தோகை, உவமை ஆகுபெயராய்க் கைகேயியை உணர்த் திற்று. மயில்முறைக்குலத்தின் இயைபுதோன்ற அப்பெயரால் கூறினர். மேல்: ஏழனுருபு. மண்டுதல்—விரைதல். 'கடற்படை குளிப்ப மண்டி' (புறநா-6) என்புழியும் அப்பொருட்டாதல் காண்க. பாணி-கை. இராமன் இளமைக்காலத்துக் கையிற் சிறுவில்லும் மண்ணுண்டையும் கொண்டு விளையாடிக்கொண்டிருக்கையில் நீர்க்குடத்தொடு கோணி நடந்து சென்ற கூனியின் முதுகில் இலக்குவைத்து உண்டை எறிந்தானாகக் கூனி கூனிமிர்ந்து குடத்தைக் கீழ் விடுத்தமை கண்டு பிறர் நகைத்தன ராக, அவள் நாணி, எறிந்தவன் மன்னவன் மகனாதலின் யாதுஞ் செய்ய வியலாது காலம் கருதியிருந்தாள் என்பது கதை. இக்கதை வான்மீ கத்தில் இல்லை. "கூனே சிதைய வுண்டைவில் நிறத்திற்றெறித்தாய்" (திருவாய்மொழி-1-5-5) என மயர்வற மதிநலம் அருளப்பெற்ற நம்மாழ்வார் கூறியருளியதுகொண்டு இங்ஙனம் கூறினர். உள்ளுவாள், வாயினள், மண்டினள் என்று இயைக்க. முன்னைய இரண்டும் முற்றெச் சங்கள். கூனியின்மேல் உண்டையெறிந்த விளையாட்டுச் செயல் கோல் துறந்து கானும் கடலும் கடத்தற்குக் காரணமான வினையாயிற்று என்க. (41)

## கைகேயியைக் கூனி அடைதல்

**1537.** நாற்கடற் படுமணி நளினம் பூத்ததோர்
பாற்கடற் படுதிரைப் பவள வல்லியே
போற்கடைக் கண்ணளி பொழியப் பொங்கணை
மேற்கிடந் தாடனை விரைவி னெய்தினாள்.

நாற்கடல் படும் மணி நளினம் பூத்தது ஓர்
பாற்கடல் படு திரைப் பவள வல்லியே
போல், கடைக்கண் அளி பொழியப் பொங்கு அணை
மேல் கிடந்தாள்தனை, விரைவின் எய்தினாள்.

பொ :—நான்கு திசையிலும் உள்ள கடலில் உண்டான மணிக ளோடு தாமரை பூத்ததும், பாற்கடலில் பொருந்திய அலையிடைத் தோன்றியதுமான ஒருபவளக் கொடிபோல், கடைக்கண் கருணைபொழிய உயர்ந்த படுக்கைமேல் படுத்திருந்த கைகேயியை விரைவாக அடைந் தாள்.

கு :—'மணி நளினம் பூத்ததோர் பவளவல்லி' என்றது அபூத வுவமை. மணி, ஆபரணத்திற் பதித்த மணி. நளினம் என்றது முகம் கண் வாய் முதலிய உறுப்புக்களை. பவளக் கொடி கைகேயிக்கு உவமை. பாற்கடல் படுதிரை, பஞ்சணைக்கு உவமை. வெளுத்த தூய மடி விரிக்கப்பெற்ற பஞ்சணை ஆதலின் பாற்கடல் திரையை உவமை கூறினர். ஐந்து மூன்று அடுக்கிய அமளி ஆதலின் பொங்கணை என்றார். பொங்குதல்-உயர்தல். அளி-அருள். அருள் உள்ளம் உறக்கத்தினும் கண்வழிப் புலப்படுதல் தோன்றக் 'கண்ணளிபொழிய' என்றார். 'நளினம் பூத்ததோர் பவளவல்லி' என்க. கைகேயி இயல்பாக அருள் உள்ளம் உடையளே என்பதை விளக்கக் கண்ணளிபொழிதல் கூறினர். "அரக்கர் பாவமும் அல்லவரியற்றிய வறமும், துரக்க நல்லருள் துறந்தனள் தூமொழி மடமான்" (1573) எனப் பின்னர்க் கூறும் இயைபும் நோக்குக. "பாற்கடல் முளைத்ததோர் பவளப்பூங்கொடி, போற்சுடர்ந் திலங்கொளிப் பொன்செய் கோதை" (சிந்தாமணி-2413) என்பதை நினைப்பிக்கின்றது இப்பாடல்; எதுகையும் ஒத்திருத்தல் காண்க. நினைத்தது தப்பாமல் முடிக்கவேண்டி விரைவின் எய்தினள். (42)

## கூனி கைகேயியை எழுப்புதல்

**1538.** எய்தியக் கேகயன் மடந்தை யேடவிழ்
நொய்தலர் தாமரை நோற்ற நோன்பினாற்
செய்தபே ருவமைசால் செம்பொற் சீறடி
கைகளிற் றீண்டினாள் காலக் கோளனாள்.

**எய்தி, அக் கேகயன் மடந்தை ஏடு அவிழ்**
**நொய்து அலர் தாமரை நோற்ற நோன்பினால்**
**செய்த பேர் உவமை சால் செம் பொன் சீறடி**
**கைகளில் தீண்டினாள், காலக் கோள் அனாள்.**

பொ:—கெடுங்காலத்தை யுண்டாக்கும் தீயகோள் போன்றவளாகிய கூனி, அவ்வாறு அடைந்து, அந்தக் கைகேயியின், இதழ்கள் முறுக் கவிழ்ந்து மெல்லிதின் மலர்ந்த தாமரை மலர், (ஒரு தாளில் நீர்நிலை நின்று கண்ணீர் வார உள் நெகிழ்ந்து) செய்த தவத்தினால் புலவர்கள் செய்த பெரிய உவமையாகப் பொருந்துதற்குக் காரணமான செம் பொன்னாலாய அணிகளணிந்த சிறிய அடியைத் தன் கைகளால் தீண்டினாள்.

கு :—கேகயன் மடந்தை சீறடி என்று இயைக்க. அடி, சிறுத் திருத்தல் பெண்டிர்க்கு அழகு; ஆதலின் 'சீறடி' என்றார். " நுதலடி

நுசுப்பென மூவழிச் சிறுகி" (கலித்-108) என்றது காண்க. ஏடு-இதழ். நொய்து - மெல்லிது. காலக்கோள் என்றது தீங்குபயக்கும் கேது என்னும் கோளை. கேது, பாம்பாதலின் தீண்டினுள் என்று அதற்கேற்ற வினை கொடுத்தார். காலில் தீண்டினும் பாம்பின் நஞ்சு தலைக்கேறுதல் இயல்பு. ஏனைய பாம்பு தீண்டினுரையே கொல்லும், இப்பாம்பு தீண்டப் பட்டாரின் இனமாகிய தயரதனைக் கொன்றது என்க. வெவ்விட மனையவள் (1541) என்பர் பின்னும். கூனியின் கலகத்தால் கைகேயி அருள் துறத்தலும் அதனுல் தயரதன் உயிர் துறத்தலும் காண்க. உறங்குபவரை எழுப்புவார் அடி தொட்டு எழுப்புதல் இயல்பு. (43)

### கூனி கூறத் தொடங்குதல்

**1539.** தீண்டலு முணர்ந்தவத் தெய்வக் கற்பினுள்
நீண்டக ணனந்தரு நீங்கு கிற்றிலள்
மூண்டெழு பெரும்பழி முடிக்கும் வெவ்வினை
தூண்டிடக் கட்டுரை சொல்லன் மேயினுள்.

**தீண்டலும், உணர்ந்த அத் தெய்வக் கற்பினுள்,**
**நீண்ட கண் அனந்தரும் நீங்குகிற்றிலள் ;**
**மூண்டு எழு பெரும் பழி முடிக்கும் வெவ்வினை**
**தூண்டிடக் கட்டுரை சொல்லல் மேயினுள்.**

பொ :—அவ்வாறு கூனி தீண்டுதலும் துயில் உணர்ந்த அந்தத் தெய்வத்தன்மைவாய்ந்த கற்பினையுடைய கைகேயி, தன் நீண்ட கண் களில் உள்ள தூக்க மயக்கமும் நீங்காதவளாக, அந்த நிலையிலேயே உள்ளத்திலிருந்து மூண்டு எழுகின்ற பெரும்பழியை முடித்தற்குக் காரணமாகிய கொடிய வினை தூண்டத் தன் கற்பனைச் சொல்லைச் சொல்லத் தொடங்கினுள்.

கு :—துயிலுணருங்காலத்தே கொழுநனை நினைந்து தொழுத அமைதிதோன்ற, உணர்ந்த அத் தெய்வக் கற்பினுள் என்ருர். தெய்வக் கற்பு, அருந்ததி போன்ற கற்பு எனினுமாம். இத்தகைய தெய்வக் கற்பு, கூனியின் சொல்லால் மாறப்போகின்ற வியத்தகு நிலையை நினைப் பித்தவாறு. அனந்தர்-உளம் விழித்தும் கண்விழிக்க முடியாத மயக்க நிலை. சிறிது காலம் தாழ்க்கவும் மனமிலாது விரைந்து சொன்னுள் என் பார், 'அனந்தருநீங்குகிற்றிலள்' என்ருர். உம்மை இழிவுசிறப்பு. இரா மன், உண்டையால் கூனில் எறிந்த பழிக்கு ஈடு செய்யவேண்டு மென்று மனத்திலிருந்து மூண்டு எழுகின்ற பெரிய பழிச் செயலாவது, இராமனைக் காடுபுகுவித்தல். முடித்தற்குக் காரணமான கொடியவினை,

எனப் பெயரெச்சம் ஏதுப்பெயர் கொண்டதாக்குக. பழிக்குப் பழிசெய்யத் தொடங்குங்கால் முன்செய்த பழியின் அளவன்றிப் பழிசெய்யப்பட்டார் தன்மைக்கேற்பப் பெரிதாகச் செய்ய நினைந்தாள் என்பார் மூண்டெழு பெரும்பழி என்றார். வெவ்வினை தூண்டிட என்றது, அரக்கர் செய்த பாவம் துரத்தலை. கட்டுரை-கற்பனைச்சொல். உறக்கம் தெளியுமுன் சொன்னது வெய்யவினை தூண்டும் விரைவால் என்க. (44)

### கூனி கைகேயியை வெகுண்டு கூறல்

1540. அணங்குவாள் விடவரா
வணுகு மெல்லையும் *
குணங்கெடா தொளிவிரி
குளிர்வெண் டிங்கள்போல்
பிணங்குவான் பேரிடர்
பிணிக்க நண்ணவும்
உணங்குவா யல்லைநீ
யுறங்குவா யென்றாள்.

'அணங்கு வாள் விட அரா அணுகும் எல்லையும்
குணம் கெடாது ஒளி விரி குளிர் வெண் திங்கள் போல்,
பிணங்கு வான் பேர் இடர் பிணிக்க நண்ணவும்,
உணங்குவாய் அல்லை, நீ உறங்குவாய்?' என்றாள்.

பொ :—'வருத்துகின்ற கொடிய நச்சுப் பாம்பு நெருங்குகின்ற காலத்தும் தன் இயல்பு மாறுபடாது ஒளியை வீசுகின்ற குளிர்ந்த வெள்ளிய சந்திரனைப் போல, நின் இயல்பிற்கு மாறுபட்ட மிகப் பெரிய துன்பம் நின்னை வருத்துதற்கு நெருங்காநிற்கவும், அது கண்டு வாடி வருந்தவேண்டிய நீ அங்ஙனம் செய்யாமல் உறங்குவாயோ?' என்று கூறினள்.

கு :—அணங்குதல் - வருத்துதல். வாள் - கொடிய. அரா – பாம்பு. அணங்குகின்ற அரா என்க; வினைத்தொகை. "ஒருபுடை பாம்பு கொளினும் ஒருபுடை, அங்கண்மாஞாலம் விளக்குறூஉம் – திங்கள் போல்" (நாலடி–148) என்றதால் திங்களினியல்பு தெற்றென விளங்கும். பிணங்குதல் - வேறுபடுதல். வான் பேர், மீமிசைச் சொல். பிணிக்க – வருத்த. உணங்குதல் – வருத்தத்தால் உடம்பும் உள்ளமும் வாடுதல்.

* அணங்குவாள் விடவரா வனுக்கும் எல்லையும் என்று ஒரு பாடம் நாலடியார் உரைவளத்தில் 148 ஒப்புமைப் பகுதியில் காணப்படுகின்றது.

அல்லையாய் எனக் குறிப்புமுற்றெச்சமாக்குக. விட அரா வான்பேரிடர்க்கும், திங்கள் கைகேயிக்கும் உவமை. குணங்கெடாது ஒளிரும் திங்கள் போல நீ உணங்காதிருக்கின்றாய் என்க. வெண்டிங்கள் ஆதலின் அங்ஙனமிருக்கலாம் நீயிருத்தல் தக்கதன்று என்பது குறிப்பு. வெண்மை அறியாமையாதல் அறிக. கைகேயிக்கு மிக்க பேரிடரை உண்டாக்க வருகின்ற கூனியை, பிணங்கு வான் பேரிடர் பிணிக்க நண்ணுவதாகக் கம்பர் கூறவைத்த நயம் போற்றற்கு உரியது. கூனியின் சொல்லாலாய இடரன்றிப் பிறிதிடர் இன்மை காண்க. **(45)**

## கைகேயி, எவ்விடர் தனக்கு வரும் எனல் 1541-1542

**1541.** வெவ்விட மனையவள் விளம்ப வேற்கணாள்
தெவ்வடு சிலைக்கையென் சிறுவர் செவ்வியர்
அவ்வவர் துறைதொறு மறந்தி றம்பலர்
எவ்விட ரெனக்குவந் தடுப்ப தீண்டெனா.

வெவ்விடம் அனையவள் விளம்ப, வேல் கணாள்,
'தெவ் அடு சிலைக்கை என் சிறுவர் செவ்வியர்;
அவ்வவர் துறை தொறும் அறம் திறம்பலர்;
எவ் இடர் எனக்கு வந்து அடுப்பது ஈண்டு?' எனா.

பொ :—கொடிய விடம் போன்ற கூனி அவ்வாறு சொல்ல, வேல் போன்ற கண்களையுடைய கைகேயி, 'பகைவரைக் கொல்லுகின்ற வில்லைப் பிடித்த கையையுடைய என் புதல்வர்கள் செவ்வியராக இருக்கின்றார்கள்; அவரவர்க்குரிய துறைகளில் அறத்தொடு மாறுபடாது நடந்துகொள்கின்றார்கள்; அங்ஙனம் இருக்க, இங்கு எனக்கு எந்தத் துன்பம் வந்து பொருந்தும்?' என்று கூறி, (மேலும்)

கு :—கூனியின் சொல் கேட்ட கைகேயி அக்கூனியைக் கூர்மையாகப் பார்த்தமை தோன்ற 'வேற்கணாள்' என்றார். தெவ் - பகை (தொல். சொல்-346). என் சிறுவர் என நால்வரையும் பொதுவகையாற் கூறினளாயினும், "தெவ்வடு சிலைக்கை" என்ற அடையை நோக்கும் போது சிறப்பாக இராமனையே நினைந்தாள் என்று கொள்ளலாம். குலப் பகையாகிய பரசுராமனை வென்றதும் தாடகை முதலிய அரக்கரைக் கொன்றதும் இராமனே ஆதல் காண்க. 'இராமனைப் பயந்த எற்கு' எனப் பின்னர்க் கூறுவதும் காண்க. துன்பம் தனக்கு வரவேண்டுமாயின் பகைவராலோ தன் மக்கள் அறம் திறம்புவதாலோ வரலாம். சிலைக்கைச் சிறுவர் செவ்வியராய் அறம் திறம்பாது இருத்தலின் அவ்விருவகையாலும் துன்பம் வர வழியில்லை என்பாள், 'எவ்விடரெனக்கு வந்தடுப்ப தீண்டு?'

என்றாள். பரதன் ஒருவனைப் பெற்ற கைகேயி இராமன் முதலிய நால்வரையும் தன் மக்களாகக் கருதி அன்புசெய்தமையும், அம்மக்கள் செவ்வியராகவும் அறம் திறம்பாதவராகவும் இருப்பதால் தனக்கு இடர் வராது என்று எண்ணும் அவள் தாய்மையன்பும் காண்க. என என்பது வரும் செய்யுளில் என்றாள் என்பது கொண்டு முடியும். (46)

1542. பராவரும் புதல்வரைப்
பயக்க யாவரும்
உராவருந் துயரைவிட்
டுறுதி காண்பரால்
விராவரும் புவிக்கெலாம்
வேத மேயன
இராமனைப் பயந்தவெற்
கிடருண் டோவென்றாள்.

'பராவு அரும் புதல்வரைப் பயக்க யாவரும்,
உராவு அரும் துயரை விட்டு உறுதி காண்பரால்;
விராவு அரும் புவிக்கு எலாம் வேதமே அன
இராமனைப் பயந்த எற்கு இடர் உண்டோ?' என்றாள்.

பொ :—'பிறரால் புகழப்படும் சிறப்புடைய புதல்வரைப் பெறுதலால் எத்தகையோரும் வலிதாய்ப் பிறரால் நீக்குதற்கு அரிய நரகத் துன்பத்தை விட்டுத் துறக்கமாகிய உறுதியைக் காண்பார்கள் என்றால், பல்லுயிரும் கலந்து வாழ்கின்ற அருமையான உலகத்திற்கு எல்லாம் ஒழுக்கத்தால் வேதமே போன்ற இராமனைப் பெற்ற எனக்குத் துன்பம் உண்டோ?' என்றாள்.

கு :—பராவுதல் – புகழ்தல். 'தற்பராய் நிற்ப' (பு–வெ. 10–15) என்புழியும் அப்பொருட்டாதல் காண்க. அருமை சிறப்புணர்த்திற்று. உராவு-வலிமை. அருமை, பிறரால் நீக்குதற்கு அருமை உணர்த்திற்று. துயரம் என்றது இவ்வுலகத்து வரும் துன்பத்தையும் மறுமைக் கண் நரகத்துப் படும் துன்பத்தையும் உணர்த்திற்று. உறுதி என்றது இவ்வுலகத்துப் பெறும் புகழ் முதலிய உறுதிகளையும் மறுமைக்கண் பெறும் துறக்கத்தையும் ஆம். "இம்மையுலகத் திசையொடும் விளங்கி மறுமையுலகமு மறுவின் றெய்துப...சிறுவர்ப் பயந்த செம்மலோர்" (அகநா-66) என்றது காண்க. "தமரம துடன்வளர் சதுமறை யெனவும், குமரர்கள் நிலமகள் குறைவற வளர்நாள்" (பால–305) என்றும் "சுருதியன்ன சேவகன் சீருமுன்னம்" (சுந்தர. 20) என்றும் முன்னும் பின்னும்

வேதத்தை இராமனுக்கு உவமை கூறியுள்ளமை காண்க. பரதனைப் பெற்ற கைகேயி இராமனைப் பெற்றதாகக் கூறியது பரதனிடத்து அவட்கு உள்ள அன்பினும் இராமனிடத்துள்ள அன்பு பெரிதென்பதை உணர்த்திற்று. ஓகாரம் எதிர்மறை. "தாய் கையில் வளர்ந்திலன் வளர்த்தது தவத்தால் கேகயன் மடந்தை" (கைகேயி சூழ்வினை-97) என ஊரவர் உரைப்பதும், "வள்ளலிராமன் உன் மைந்தன் ஆணை" என்று தயரதன் சாற்றுவதும் ஈண்டு நினைக்க. "எனக்குயிர்ச் சிறுவனுவன் நந் தனே" (சீவ-1916) என விசயை தான் பெருத நந்தட்டனைத் தன் மகன் எனக் கூறியதும் இங்கு நினைக்க. (47)

### கூனி, கைகேயிக்கு வீழ்வும் கோசலைக்கு வாழ்வும் வந்தமை கூறல்

1543. ஆழ்ந்தபே ரன்பின ளனைய கூறலும்
சூழ்ந்ததீ வினைநிகர் கூனி சொல்லுவாள்
வீழ்ந்தது நின்னலந் திருவும் வீந்தது
வாழ்ந்தனள் கோசலை மதியின லென்ருள்.

ஆழ்ந்த பேர் அன்பினள் அனைய கூறலும்,
சூழ்ந்த தீவினை நிகர் கூனி சொல்லுவாள்,
'வீழ்ந்தது நின் நலம்; திருவும் வீந்தது;
வாழ்ந்தனள் கோசலை மதியினல்' என்ருள்.

பொ :—இராமபிரானிடத்து ஆழ்ந்த பேரன்பு உடையவளாகிய கைகேயி அத்தன்மையான சொற்களைச் சொல்லுதலும், அவளை விடாது சூழ்ந்து கொண்ட தீவினையை யொத்த கூனி சொல்லுகின்ருளாய், "நின்னுடைய நலம் வீழ்ந்தது; நின்னுடைய செல்வமும் அழிந்தது; கோசலை மதியினல் வாழ்ந்தனள்" என்று கூறினள்.

கு :—மற்ருென்று சூழினும் தான் முந்துறும் ஊழின் இயல்பு போலக் கூனி கைகேயியின் ஆழ்ந்தபேரன்பையும் கெடுத்து மனத்தைத் திரிக்கின்றமையால், 'தீவினை நிகர் கூனி' என்ருர். தனக்கு வரும் அல்லலை முன்னர் உணர்த்தி மாற்ருள் பெறும் செல்வத்தைப் பின் உணர்த்தினல் அவள் மனம் விரைவில் மாறும் என்பதை உணர்ந்து கூறுகின்ருள் கூனி; உளத்தின் இயல்பை யுணர்ந்தவளாதலின். அவள் உள்ளத்தில் அதிர்ச்சி தோன்ற "வீழ்ந்தது நின்னலம்" எனவும் "வாழ்ந்தனள் கோசலை மதியினல்" எனவும் முடிக்கும் வினைச் சொற்களை முன்னர் எடுத்துக்கூறும் திறனும் காண்க. தெளிவு பற்றி வீழ்ந்தது, வீந்தது, வாழ்ந்தனள் என இறந்த காலத்தால்

கூறினள். மதி - அறிவு. கோசலை மதியினல் வாழ்ந்தாள் எனவே கைகேயி தன் மதியின்மையால் செல்வமும் நலமும் சேர இழந்தாள் என்பதைப் பெறவைத்து அவள் உள்ளத்து ஆராய்ச்சியை எழுப்பிய திறம் காண்க. வன்பினளாக மாற இருக்கின்ற கைகேயிக்கு ஆழ்ந்த பேரன்பினள் எனப் பெயர் கொடுத்துக் கூனியின் திறமையை விளக்கிய நுட்பம் வியத்தற்குரியது. அன்பினள், பண்பால் வருபெயர். (48)

### கைகேயி, கோசலை எய்தும் வாழ்வு யாது எனல்

**1544.** அன்னவ ளவ்வுரை
யுரைப்ப வாயிழை
மன்னவர் மன்னனென்
கணவன் மைந்தனேல்
பன்னரும் பெரும்புகழ்ப்
பரதன் பார்தனில்
என்னிதன் மேலவட்
கெய்தும் வாழ்வென்றாள்.

அன்னவள் அ்வ்வுரை உரைப்ப, ஆய் இழை,
'மன்னவர் மன்னன் என் கணவன்; மைந்தனேல்,
பன்னரும் பெரும் புகழ்ப் பரதன்; பார்தனில்,
என் இதன்மேல் அவட்கு எய்தும் வாழ்வு?' என்றாள்.

பொ :—கூனி அச்சொல்லைச் சொல்ல, ஆய்ந்து எடுத்து அணிந்த அணிகலன்களையுடைய கைகேயி, "என் கணவன் மன்னர்க்கு மன்னனாகிய தயரதச் சக்கரவர்த்தி, என் மைந்தன், சொல்லுதற்கரிய பெரிய புகழையுடைய பரதன் என்றால், இப்பூமியில் இதனினும் சிறப்பாக அக் கோசலைக்கு வரும் வாழ்வுதான் என்னை?" என்று வினவினள்.

கு :—கூனியின் சொல்லைச் சொன்னவாறே ஏற்றுக்கொள்ளாமல் ஆராயும் தன்மையள் என்பது தோன்றக் கைகேயியை, 'ஆயிழை' என்று கூறினர். அணிகலப் பேழையில் தன் வடிவிற்குப் பொருந்திய நல்ல அணிகலன்களையே ஆய்ந்தணியும் அவள் இயல்பு, கூனியின் சொற்களையும் ஆராயச் செய்தது என்க. கோசலையும் கைகேயியும் தயரதச் சக்கரவர்த்தியைக் கணவனகப் பெற்றுள்ளமையாலும் கோசலை இராமனை மகனகப் பெற்றுள்ளது போலக் கைகேயியும் பரதனை மகனகப் பெற்றுள்ளமையாலும் அவ்விருவர் வாழ்வும் ஒப்புடையவேயன்றி உயர்வு தாழ்வு உடையனவல்ல; ஆதலின் "பார்தனில் என் இதன் மேல் அவட்கு எய்தும் வாழ்வு" என்று கைகேயி வினவினள். பரதனை

மகனாகப் பெற்றதே ஏற்றம் என்பாள்போல், 'பன்னரும் பெரும் புகழ்ப் பரதன்' எனச் சிறப்பிக்கின்றாள். இராமனைக்காட்டிலும் பரதன் சிறந்தான் என்பதைக் கோசலையே "மும்மையின் நிறை குணத்தவன் நின்னினு நல்லன்" (நகர்நீங்கு–5) எனப் பாராட்டுதலும், குகன் "ஆயிரம் இராமர் நின்கேழாவரோ" (குகப்–35) எனப் புகழ்தலும் கொண்டு உணரலாம். பாரை விட்டு விண்ணுலகம் செல்லுங்கால் இராமனைப் பெற்ற பெருமையால் கோசலை பெருஞ்சிறப்புப் பெறலாம்; பூமியில் வாழும்வரை என் வாழ்வினும் அவள் வாழ்வு எவ்வாறு சிறந்ததாகும்? என்ற குறிப்புத் தோன்றப் 'பார்தனில்' என்றாள். (49)

## இராமன் முடிசூடுவான் எனல்

1545. ஆடவர் நகையுற வாண்மை மாசுறத்
தாடகை யெனும்பெயர்த் தைய லாள்படக்
கோடிய வரிசிலை யிராமன் கோமுடி
சூடுவ னாளைவாழ் விதெனச் சொல்லினாள்.

'ஆடவர் நகை உற, ஆண்மை மாசு உறத்
தாடகை எனும் பெயர்த் தையலாள் படக்
கோடிய வரிசிலை இராமன், கோ முடி
சூடுவன் நாளை; வாழ்வு இது' எனச் சொல்லினாள்.

பொ:—'ஆண்பாலார் எல்லாம் இகழ்ச்சியுறவும் ஆண்மைக்கே மாசு பொருந்தவும், தாடகை என்னும் பெயரையுடைய பெண், போர்க்களத்தில் இறந்துபடுமாறு வளைந்த கட்டமைந்த வில்லையுடைய இராமன், நாளைக்கு மன்னனாக மணிமுடி சூடப்போகின்றான்; இதுவே கோசலை எய்தும் வாழ்வு' எனக் கூறினாள்.

கு:—ஆடவருள் ஒருவர் செய்த இழிசெயல் எல்லார்க்கும் இழிவை யுண்டாக்கலின் 'ஆடவர் நகையுற' என்றாள். நகை இகழ்ச்சிக் குறிப்பு. 'ஊர் சிரிக்கின்றது' என்புழிச் சிரிப்பு அப் பொருளதாதலை வழக்கு நோக்கி உணர்க. ஓரினத்தில் ஒருவர்க்குற்ற சிறுமை பெருமைகள் எல் லார்க்குமாதலை, "சோகத்தாளாய நங்கை கற்பினால் தொழுதற் கொத்த மாகத்தார் தேவிமாரும் வான்சிறப்புற்றார் மற்றைப் பாகத்தாள் இப் போதீசன் மகுடத்தாள் பதுமத்தாளும், ஆகத்தாளல்லள் மாயன் ஆயிர மௌலி மேலாள்" (சுந்தர–1313) என்புழிச் சிறையிருந்து நோற்ற சீதையின் கற்பினால் பெண்டிரினம் பெருஞ்சிறப்புற்றமை கூறப்படுத லாலும் அறியலாம். ஆண்மை—ஆடவரின் தன்மை. பொருளழியினும் தன்மையழிதல் இன்மையான் அதை வேறு பிரித்து, 'ஆண்மை மாசுற'

என்ருர். இராமன், கன்னிப் போரில் பெண்ணைக் கொலை புரிந்த பெரும் பழிச் செயலால் ஆண் இனத்தவர் பழிக்கப்பட்டதேயன்றி ஆண்மையே குற்றப்பட்டுவிட்டது என்க. தையல்-பெண். தாடகையைக் கொல்லவே இராமன்வில் முதலில் வளைந்தமை தோன்றத் ‘தையலாள் படக் கோடிய வரிசிலை’ என்ருள். நாணேற்ருதமுன் இருந்த நேர்மையிலிருந்து நாணேற்றியபின் மாறுபட்டுக் கோடியது வில் என்க. ‘கோடிய இராமன்’ என்று இயைத்து நேர்மை திறம்பிய இராமன் என்றலும் ஆம். துண் ணெனும் வினைத் தொழில் தொடங்கிய தாடகையைப் பெண் என நினைந்த பெருந்தகைமை கோடி முனிவன் ஏவலால் முனிந்து கொன் றமை நினைக்க. நாளை மகன் கோமுடி சூடுதலே கோசலைக்குச் சிறந்த வாழ்வு என்க. “இராமனைப் பயந்த எற்கு இடருண்டோ” என்ற கைகேயி யின் கருத்தை மறுக்கவேண்டி, நல்லோரைக்காக்கும் புண்ணியச் செயலாகிய தாடகைவதையையும் பாவச் செயலாகக் கூனி காட்டினுள். ஆடவர் நகையுற ஆண்மை மாசுறப் பெண் கொலை புரிந்தவனுக்கு முடிபுனைவது தக்கதன்று என்பதும் தொடக்கத்திலேயே பெண் கொலை புரிந்தவன் மணிமுடி சூடியபின் தனக்கும் இடுக்கண் விளைப்பான் என்ப தும் கைகேயி எண்ணுமாறு இங்ஙனம் கூறினுள் கூனி என்க. கூனி கொடியளாதலின் கொடிய தாடகைக்கு உருகினுள். (50)

## கைகேயி மகிழ்தல்

1546. மாற்றமஃ துரைசெய மங்கை யுள்ளமும்
ஆற்றல்சால் கோசலை யறிவு மொத்தவால்
வேற்றுமை யுற்றிலள் வீரன் ருதைபுக்
கேற்றவ ளிருதயத் திருக்க வேகொலாம்.

மாற்றம் அஃது உரைசெய, மங்கை உள்ளமும்
ஆற்றல் சால் கோசலை அறிவும் ஒத்தவால்;
வேற்றுமை உற்றிலள், வீரன் தாதை புக்கு
ஏற்று அவள் இருதயத்து இருக்கவே கொல்ஆம்!

பொ:-கூனி அச்சொல்லைச் சொல்லக் (கேட்ட) கைகேயியின் மனமும், ஆற்றல் மிக்க கோசலையின் புத்தியும் ஒத்தன; வேறுபட்ட வுணர்ச்சி கொண்டிலள்; காரணம், இராமன் தந்தையாகிய தயரதன் அவள் உள்ளத்தே புகுந்து அதையே இடமாக ஏற்றுக்கொண்டு இருத்தலாற் போலும்!

கு:—கவிக்கூற்று. மாற்றம் - விடையாகக் கூறிய சொல். மங்கை என்றது கைகேயியை; கோசலையினும் இளமைப் பருவத்தளாய் மன்னன்

மனத்திற்கு மகிழ்ச்சி தருபவள் என்ற குறிப்புத் தோன்ற அப்பெயரால் கூறினர். உலகியாவையும் மன்வயிற்றில் அடக்கிய மாயனைத் தன் வயிற்றில் அடக்கிய வலிமை தோன்ற 'ஆற்றல்சால் கோசலை' என்ருர். பின்னர் மாறுபடுகின்ற கைகேயியின் மனம் இப்பொழுது கோசலை போலவே மகிழ்தற்குக் காரணம் தயரதன் அவள் இதய கமலத்தில் இருத்தல் போலும் என்கிருர், அவன் மகிழ்ச்சியைத் தன் மகிழ்ச்சி யாகக் கொண்டொழுகும் அவள் இயல்பு பற்றி. கூனியின் மொழிகேட்ட பின்னர்த் தயரதனைத் தன் மனத்திருந்து விலக்கினளாத லின் இராமனை வனம்புகச் செய்கின்ருள் என்க. மங்கையுள்ளமும் கோசலையுள்ளமும் ஒத்தன என்னது, 'கோசலை யறிவும்' என்றது, பின் கூனியின் மொழியால் கைகேயியின் கருத்து வேறுபடுவது கருதியும் கோசலையின் என்றும் ஒரு தன்மையான அன்புடைமை கருதியும் ஆம். "இனம்போன் றினமல்லார் கேண்மை மகளிர் மனம் போல வேறுபடும்" (குறள்: 822) என்று மனம் வேறுபடுவதையும், 'மலர்தலும் கூம்பலுமில்லதறிவு' (குறள் 425) என்று அறிவின் வேறுபடாத்தன்மை யையும் வள்ளுவர் விளக்கியவற்றை உளங்கொண்டு இங்ஙனம் கூறினர். ''மாதர்கள் கற்பின் மிக்கார் கோசலை மனத்தை யொத்தார்" (கைகேசி சூழ்வினை–66) என்பதும் காண்க. (51)

### கைகேயி கூனிக்கு மாலை கொடுத்தல்

**1547.** ஆயபே ரன்பெனு மளக்க ரார்த்தெழத்
தேய்விலா முகமதி விளங்கித் தேசுறத்
தூயவ ளுவகைபோய் மிகச்சு டர்க்கெலாம்
நாயக மனையதோர் மாலை நல்கினள்.

ஆய பேர் அன்பு எனும் அளக்கர் ஆர்த்து எழத்,
தேய்வு இலா முக மதி விளங்கித் தேசு உறத்,
தூயவள் உவகை போய் மிகச், சுடர்க்கு எலாம்
நாயகம் அனையது ஓர் மாலை நல்கினள்.

பொ :—தூய சிந்தையளாகிய கைகேயி, (இராமபிரானிடத்துத் தனக்கு) உண்டாய பெரிய அன்பு என்கின்ற கடல் ஆரவாரித்துப் பொங்குமாறும் இருட்பக்கத்திலும் தேய்தல் இல்லாத முகமாகிய சந்திரன் முன்னையினும் விளக்கம்பெற்று ஒளியுடையதாகுமாறும் மகிழ்ச்சி வளர்ச்சியுறத் திங்களும் ஞாயிறும் அங்கியும் ஆய முச்சுடர்க்கும் தலைமைச் சுடர்போன்ற ஒரு மணிமாலையைக் கூனிக்குக் கொடுத்தாள்.

கு :—முழுமதியின் உதயத்தைக்கண்டு கடல் ஆர்த்துப் பொங்கும் இயல்பினது. அன்பின் மிகுதிதோன்ற ‘அளக்கர்’ என்றும், மகிழ்ச்சியான் ஒளிமிக்கமை தோன்ற ‘முகமதி’ என்றும் உருவகம் செய்தார். ‘தேய்விலா முகமதி’ என்றது, விருபக உருவகம்; தேய்விலாமையாகிய கூடாத இயல்பை மதிக்கேற்றியுரைத்தமை காண்க. தேசு–ஒளி. அமரர் மாயத்தாலும் அரக்கர் பாவத்தாலும் அல்லவர் அறத்தாலும் இன்னும் திரிந்திலள் சிந்தையாதலின் கைகேயியைத் ‘தூயவள்’ என்ருர். உவகைச் செய்தி கூறினர்க்குச் சிறந்த பரிசளிப்பது இயல்பாகலின், உவகைமிகச் சுடர்க்கெலாம் நாயகமனையதோர் மாலை நல்கினுள். கோசலையும் இங்ஙனமே உவகைகூறினுர்க்கு அரும்பெறலாரமும் நன்னிதிக்குவையும் நனிநல்கியது (மந்தரை–92) காண்க. ‘ஆயபேரன்பு’ என்புழிக் கைகேயியின் அன்பு இயல்பானதன்று காரணத்தால் தன்மை திரியும் செயற்கையானது என்ற குறிப்பும் நோக்குக; ஆக்கம் செயற்கைக் கண்ணதேயாதலும் ஓர்க. சுடர்க்கெலாம் நாயகம் சூரியன் எனக் கொண்டு சூரியனை ஒத்த ஒளியுள்ள மணியாலாய மாலை கொடுத்தாள் எனலும் ஆம். உவகையின் உயர்ச்சிக்கேற்பப் பரிசும் உயர்ந்தது என்க. கைகேயியின் முகமதி இறுதியாக விளங்கித்தோன்றும் நாள் இதுவேயென்பதும் இதற்குப்பின் தேய்விலா முகமதி ஒளி தேய்ந்துபோம் என்பதும் அறிக. எழ, உற என்ற செயவெனெச்சங்கள் காரியப்பொருளன; மிக என்றது, காரணப் பொருளது. அது நல்கினுள் என்னும் பிறவினை கொண்டது. (52)

## கூனி மாலையை எறிதல்

1548. தெழித்தன ளுரப்பினள் சிறுகண் டீயுக
விழித்தனள் வைதனள் வெய்து யிர்த்தனள்
அழித்தன ளழுதன ளம்பொன் மாலையால்
குழித்தன ணிலத்தையக் கொடிய கூனியே.

தெழித்தனள், உரப்பினள், சிறு கண் தீ உக
விழித்தனள், வைதனள், வெய்துயிர்த்தனள்,
அழித்தனள், அழுதனள், அம் பொன் மாலையால்
குழித்தனள் நிலத்தை, அக் கொடிய கூனியே.

பொ :—அந்தக் கொடுமை மிக்க கூனி, கோபத்தால் அதட்டினுள்; அச்சுறுத்தினுள்; சிறியகண்களில் தீப்பொறி சிந்த அகல விழித்துப் பார்த்தாள்; கைகேயியை ஏசினுள்; வெப்பமாகப் பெருமூச்சுவிட்டாள்; தன் அலங்காரத்தை அழித்துக்கொண்டாள்; பரிசாகக்கொடுத்த அழகிய பொன்னில் பதித்த மணிமாலையால் நிலத்தைக் குழிபடச்செய்தாள்.

கு :—தெழித்தல்,-அதட்டுதல். உரப்புதல்-அச்சுறுத்தல்; 'காலனை... உரப்பிய சேவடியான்' (தேவாரம். 524) என்பது காண்க. மகளிர்க்குக் கண் பெரிதாக இருத்தலே அழகு; ஆயின் கூனிக்கு உள்ளது சிறு கண்ணே என்க. கூன்தன்மையே யன்றிக் கண்ணழகும் குறைந்தவள் அவள் என்பதை இதனால் அறிக. உறுப்புக்களின் அமைப்புக்கேற்பவே மனமும் அமையும். மாலையால் குழித்தனள் என்றது, கூனி மாலையை எறிந்த வேகத்தால் தரையும் குழிபட்டது என்னும் கருத்தினது. இதனால் அவள் வெகுளிமிகுதியை உணர்த்தியவாறு. இராமன் முடிபுனைவது தவறு என்று விளக்கவந்தவளிடத்தில் அம்முடிபுனைவை மகிழ்ச்சிக்கு உரிய நிகழ்ச்சியாகக்கருதிக் கைகேயி பரிசளித்ததால் அக்கூனி பெரிதும் வெகுண்டாள் என்க. மணிகளைப் பொன்னிடைப் பதித்துச்செய்த மாலையாதலின் இங்குப் பொன்மாலை எனப்பட்டது. 'கொடியகூனி' என்புழிக் கொடுமை உள்ளத்தின் கோணலைக் குறித்தது. (53)

## கூனி, தன் கருத்தை விளக்குதல் 1549-1557

1549. வேதனைக் கூனிபின் வெகுண்டு நோக்கியப்
பேதையைப் பித்திநிற் பிறந்த சேயொடும்
நீதுயர்ப் படுகநா னெடிதுன் மாற்றவள்
தாதியர்க் காட்செயத் தரிக்கிலே னென்றாள்.

வேதனைக் கூனி, பின், வெகுண்டு நோக்கி, அப்
பேதையைப் 'பித்தி! நிற் பிறந்த சேயொடும்
நீ துயர்ப் படுக! நான் நெடிது உன் மாற்றவள்
தாதியர்க்கு ஆள் செயத் தரிக்கிலேன்' என்றாள்.

பொ :—மனத்தில் வேதனையுடைய கூனி, அக்கைகேயியைப் பின்னும் வெகுண்டு பார்த்து, 'பைத்தியக்காரி! நின்னிடத்தில் பிறந்த பிள்ளை பரதனோடும் நீ துன்பப்படுக நெடுங்காலம்! நான், உன் மாற்றாளாகிய கோசலையின் பணிப்பெண்டிர்க்கு ஆளாய்ப் பணிசெய்து கிடக்கத் தரிக்கமாட்டேன்' என்றாள்.

கு :—இராமன் எறிந்த உண்டையால் வேதனைப்பட்ட உள்ளத்தாளாதலின் கைகேயியை மகிழவிடாது மீண்டும் வெகுண்டுநோக்கி வேறுபடுத்துகின்றாள் என்பதுதோன்ற, 'வேதனைக்கூனி' என்றார். வஞ்சனையறியா நெஞ்சினள் கைகேயி என்பார், 'பேதையை' என்றார். 'பேதை' ஈண்டுப் பருவம் குறித்திலது; வஞ்சனையறியாதவள் என்றபொருளில் வந்துளது. நின்கண் பிறந்த என ஏழாவது விரிக்க. தான் துன்புறினும் தன்சேய் துன்பப்படப்பாரார் தாயர்; பித்துக்கொளியாகிய நீ

அத்துன்பமும் பார்க்கப்போகின்ருய் என்பாள், பித்தி! நிற்பிறந்தசே யொடும் நீ துயர்ப்படுக என்ருள். தனக்கும் தன்மகனுக்கும் தீங்கு வருவதை யெண்ணுது மகிழ்வது பித்துப்பிடித்தவர் செயலே ஆதலின், 'பித்தி' என்ருள். நின்பால் பிறக்கத்தக்கவன் அல்லன் என்பதுதோன்ற, நிற்பிறந்த சேய் என்ருள். அத்துன்பந்தானும் உடனே நீங்கற்குரியது அன்று என்பாள், "துயர்ப்படுக நெடிது" என்ருள். இராமன் முடிபுனைந்தால் கோசலைக்கு நீ தாதியாதல் வேண்டிவரும்; நினக்குத் தாதியாகிய யான் ஏனைத்தாதியர்க்கும் ஏவல்செய்யவேண்டிவரும்; இந்நிலையை நான் தரிக்கிலேன் என்ருள் கூனி. மாற்றவள் — சக்களத்தியாகிய கோசலை. அந்நிலையை நீபொறுமையோடு ஏற்றுக் கொண்டாலும் யான் தரிக்கிலேன் என அந்நிலையின் இழிபை உணர்த்தினுள். தரித்தல்-தாங்குதல்; பொறுத்தல். (54)

**1550.** சிவந்தவாய்ச் சீதையுங் கரிய செம்மலும்
நிவந்தவா சனத்தினி திருப்ப நின்மகன்
அவந்தனுய் வெறுநிலத் திருக்க லானபோ
துவந்தவா றென்னிதற் குறுதி யாதென்ருள்.

'சிவந்த வாய்ச் சீதையும், கரிய செம்மலும்,
நிவந்த ஆசனத்து இனிது இருப்ப, நின் மகன்,
அவந்தனுய் வெறுநிலத்து இருக்கல் ஆனபோது,
உவந்தவாறு என் இதற்கு? உறுதி யாது?' என்ருள்.

பொ :—'சிவந்த வாயினையுடைய சீதையும் கருநிறத்து இராமனும் உயர்ந்த (சிங்கஞ்சுமந்த) இருக்கையில் இனிதாக இருக்க, நின்மகனுகிய பரதன், அவ்விருவரையும் தலைகுனிந்து வணங்குவோனுய் வெறுந் தரையில் துன்புற்றிருக்கவேண்டியநிலைமை உண்டானபோது இம் முடி புனைவிழாவிற்கு மகிழ்ந்தது என்னை? (இராமன் முடிபுனைவதால் உனக்குவரும்) உறுதி யாது?' என்ருள்.

கு :—பெண்டிர்க்கு வாய் சிவந்திருத்தல் அழகே; ஆயினும், அதனையும் பழிக்கும் குறிப்பினளாய்க் கூனி கூறுகின்ருள். கரிய செம்மல் என்றதும் அக்கருத்தினதே; இராமன் என்ற பெயரையும் கூறப்பொருதவளாய் அப்பெயராற் கூறினுள். நிவப்பு-உயர்ச்சி. ஆசனத்தின் சிறப்புத் தோன்ற இனிதிருத்தல் கூறினுள். இனிதிருத்தல் - மகிழ்வோடிருத்தல். 'நின்மகன்' என்றது கோசலைபோலப் பட்டத்துத் தேவியாகிய நின்மகன் என்னும் சிறப்புத்தோன்ற நின்றது. அவந்தன் - தலை குனிந்து வணங்குபவன்; 'அரசனவந்தனுனுன்' (கோயிற்பு—இரணி 14) என்புழியும் அப்பொருளது ஆதல் காண்க. ஒத்த உரிமையுள்ள இராம

னும் பரதனும் இருக்கையாலும் வேறுபடுதற்குக் காரணமாய இராமன் முடிபுனேவிற்குத் துன்புறுவதே இயல்பு; உவத்தல் இயல்பன்று என்றவாறு. 'இனிதிருப்ப' என்றதால், துன்புற்றுக் கொண்டிருக்க என்பது பெறப்படும். இதற்கு-இம்முடிபுனேவிழாவிற்கு. உறுதி-பயன். 'வெறு நிலம்' என்புழி வெறுமை, விரிக்கும் பாயும் இன்மையை உணர்த்திற்று. (55)

1551. மறந்திலள் கோசலே யுறுதி மைந்தனும்
சிறந்தநற் றிருவினிற் றிருவு மெய்தினன்
இறந்தில னிருந்தன னென்செய் தாற்றுவான்
பிறந்திலன் பரதனீ பெற்றதா லென்ருள்.

'மறந்திலள் கோசலே உறுதி; மைந்தனும்,
சிறந்த நல் திருவினில் திருவும் எய்தினன்;
இறந்திலன், இருந்தனன், என்செய்து ஆற்றுவான்?
பிறந்திலன் பரதன், நீ பெற்றதால்' என்ருள்.

போ:—'கோசலே தனக்கு உறுதிதருஞ்செயலே மறக்கவில்லே; அதனுல் அவள் மைந்தனுகிய இராமனும், சிறந்த நல்ல செல்வத்துட் செல்வமாகிய அரசச் செல்வத்தையும் அடைந்தான்; பரதன், இறந்துவிடவில்லே; உயிரோடு இருக்கின்ருன்; இருந்தும் எந்த உபாயத்தைச் செய்து (முடிபெருததுன்பத்தைப்) பொறுப்பான்? நீபெற்றதால் அவன் பிறந்தும் பிறவாதவனே ஆனுன்' என்று கூறினுள்.

கு:—"உறுதி மறந்திலள்" என்றது, தயரதனே வற்புறுத்தி இராமனுக்கு முடிபுனேயச் செய்வதாகிய உறுதியானசெயலே மறவாது செய்தாள் என்றவாறு. தயரதன் இராமனுக்கு முடிபுனேயத்துணிந்தது, கோசலேயின் தூண்டுதலாலாகும் என்பது கூறிப் பரதனுக்குப் பட்டங் கட்டுமாறு நீ தூண்டாது கெடுத்தாய் என்பதை உணர்த்தியவாறு. ஆற்றுதல், முடிபுனேயப்பெருத் துன்பத்தைப் பொறுத்தல். நீ பெருமல் கோசலே அவனேப் பெற்றிருந்தால், அப்பரதனுக்கு வேண்டிய செல்வத்தை ஈண்டச் செய்திருப்பாள் என்க. மன்னவன் மகனுய்ப்பிறந்திருந்தும் பிறந்ததற்குப் பயனுக மன்னவனுகவில்லே; ஆதலின், "பிறந்திலன்" என்ருள். பிறப்பின் பயன் எய்தாதவர் பிறவாதவரேயாவர் என்பதை, "துறந்திலனென்பதோர் சொல்லுண்டானபின், பிறந்திலனென்பதிற் பிறிதுண்டாகுமோ?" (மந்திரப்–28) என முன் உரைத்தவாற்ருனும் உணரலாம். பரதன் பிறந்ததன் பயன் மன்னனுதலே என்பது கூனியின் உட்கோள். பரதனேப் பிறந்திலனுக்கியது கைகேயியே என்பது அவள் கருத்து. (56)

1552. சரதமிப் புவியெலாந் தம்பி யோடுமிவ்
வரதனே காக்குமேல் வரம்பில் காலமும்
பரதனு மிளவலும் பதியி னீங்கிப்போய்
விரதமா தவஞ்செய விடுத னன்றென்றாள்.

'சரதம் இப் புவி எலாம் தம்பியோடும் இவ்
வரதனே காக்குமேல், வரம்பு இல் காலமும்,
பரதனும் இளவலும் பதியின் நீங்கிப் போய்
விரத மா தவம் செய விடுதல் நன்று' என்றாள்.

பொ :—"மெய்ம்மையாக, இவ்வுலக முழுமையும் காலவரம்பு இல்லாமல், இவ்வரதனாகிய இராமனே தன் தம்பியோடும் அரசாளுவான் என்றால், பரதனும் அவன் இளவலாகிய சத்துருக்கனும் இவ்வயோத்திநகரினின்றும் நீங்கி வனத்திற்குச்சென்று விரதங்களையுடைய பெரிய தவத்தைச் செய்யுமாறு அனுப்பிவிடுதல் நல்லது" என்று கூறினாள்.

கு :—புவியிற்பாதி பகுத்துக் கொடுத்தலோ அல்லது இராமன் இத்துணையாண்டும், பரதன் இத்துணையாண்டும் ஆள்க எனக் காலத்தைப் பகுத்துக் கொடுத்தலோ இன்றி என்பாள், "இப்புவியெலாம், வரம்பில் காலமும் வரதனே காக்குமேல்" என்றாள். இடத்தானும் காலத்தானும் பரதனுக்குப் பங்கு இன்றி என்பாள், "வரதனே காக்குமேல்" எனப் பிரிநிலை ஏகாரம் கொடுத்துக் கூறினாள். வரதன், இராமன் என்னும் பொருளளவாய் நின்றது. பின்னர் இராமனையும் இலக்குவனையும் பதினாலாண்டு பதியினீங்கி வனம்புக்கு வாழுமாறு வரம் கேட்கச் செய்யும் கருத்துடைய இவள், பொய்யாக இப்பொழுது, "பரதனும் இளவலும்......தவஞ்செய விடுதல் நன்று" என்று கூறுகின்றாள். எவ்விடத்தும் எக்காலத்தும் நாட்டில் பரதனுக்குச் சிறிதும் உரிமையில்லாதபோது பதியிலிருத்தலைவிடக் கடும்புலி வாழும் காட்டிலிருத்தல் நன்றென்றவாறு. விரதமாவது, மனம் பொறிவழி போகாது நிற்றற் பொருட்டு உண்டிசுருக்கல் முதலியன. பரதனும் சத்துருக்கனும், இராமலக்குவர்போலப் பிரியாதுவாழும் இயல்பினராதலின் "பரதனும் இளவலும்" எனச் சேர்த்துக்கூறினாள். (57)

1553. பண்ணுறு கடகரிப் பரதன் பார்மகள்
கண்ணுறு கவினரா யினிது காத்தவம்
மண்ணுறு முரசுடை மன்னர் மாலையில்
எண்ணுறப் பிறந்தில னிறத்த னன்றென்றாள்.

'பண் உறு கட கரிப் பரதன், பார்மகள்
கண் உறு கவினராய் இனிது காத்த அம்
மண் உறு முரசு உடை மன்னர் மாலேயில்
எண் உறப் பிறந்திலன், இறத்தல் நன்று' என்ருள்.

பொ :—'அலங்கரிக்கப் பெற்ற மதக்களிறு போன்ற பரதன், நில மகளின் கண் என்னுமாறு பொருந்திய அழகுடையராய் உலகுயிர்களே இனிமையாகக் காப்பாற்றிய அந்த மண்ணுதல் பொருந்திய முரசத்தை யுடைய அரசர்கள் வரிசையில் வைத்து எண்ணுமாறு பிறக்கவில்லே ; ஆகவே இறந்து படுதல் நல்லது' என்ருள்.

கு :—பண்ணுதல் - அலங்கரித்தல். அரசனுதற்குரிய இலக்கணம் எல்லாம் பொருந்தப் பெற்றவன் பரதன் என்பாள், யானேயை உவமை கூறினுள்; "இருகை வேழத் திராகவன்" (பாயிரம்-1) என இராம னுக்கும்; பனேயவாம் நெடுங்கரப் பரும யானேயாய்" எனத் தயரத னுக்கும் இவ்வாறே யானேயை உவமை கூறியிருத்தல் காண்க. பார்மகளுக்கு அரசன் கண் என்பது முன்னும் (மந்திரப்-38) விளக்கப் பட்டது. கவின் - அழகு. இனிது காத்தலாவது, "பிறர் பிறர் நலியாது வேற்றுப்பொருள் வெஃகாது, மையிலறிவினர் செவ்விதினடந்து தம் அமர் துணேப் பிரியாது பாத்துண்டு மாக்கள், மூத்த யாக்கையொடு பிணி யின்று கழிய"க் காத்தல் (பதிற்றுப்-22). மண் – மார்ச்சனே. அம்மன்னர் மாலே என்றது, ஆதித்தன் குல மன்னரின் வரிசை ; அது குலமுறை கிளத்துபடலத்துக் கூறியுள்ளமை காண்க. அரசர்குடியிற் பிறப் பினும் அரசு மேற்கொண்டோரே அவ்வரிசையில் எண்ணப்படுவார்; ஆதலின், அப் பேறில்லாப் பரதன் இருப்பதினும் இறப்பதே நல்லது என்பது கருத்து. "இசையொழிய வாழ்வாரே வாழாதவர்" (குறள்-240) என்பது இங்கு நோக்கத்தகும். (58)

**1554.** பாக்கியம் புரிந்திலாப் பரதன் றன்னேப்பண்
டாக்கிய பொலன்கழ லரச ஞணையால்
தேக்குயர் கல்லதர் கடிது சேணிடைப்
போக்கிய பொருளெனக் கின்று போந்ததால்.

'பாக்கியம் புரிந்திலாப் பரதன் தன்னேப் பண்டு
ஆக்கிய பொலன் கழல் அரசன், ஆணேயால்
தேக்கு உயர் கல் அதர் கடிது சேணிடைப்
போக்கிய பொருள் எனக்கு இன்று போந்ததால்.'

பொ :—'மன்னன் ஆதற்குரிய புண்ணியம் புரியாத பரதனை முன்னர், பொன்னால் ஆக்கிய கழல் அணிந்த தயரத மன்னன், தேக்கு மரங்கள் உயர்ந்துள்ள கல் நிறைந்த வழியில் சேய்மையில் உள்ள கேகய தேயத்திற்கு ஆணையால் விரைந்து போகச் செய்ததன் கருத்து எனக்கு இன்றுதான் விளங்கிற்று.'

கு :—பொலன் - பொன். பொலன் ஆக்கிய கழல் என்க. பரதன் போக விரும்பவில்லை என்பாள் "ஆணையால் போக்கிய" என்றாள். ஆணையால் போக்கியதை, "ஆணை நின்றன் முதுதாதை யைய நிற், காணிய விழைவதோர் கருத்தனுதலிற், கேணியில் வளைமுரல் கேகயம் புகப் பூணுளிர் மார்பநீ போதி யென்றனன்" (பால-1395) என்பதால் அறியலாம். பரதன் இராமனைப் பிரிய விருப்பமின்றி மன்னன் ஏவலால் போனான் என்பதை, "ஏவலு மிறைஞ்சிப் போய் இராமன் சேவடிப், பூவினைச் சென்னியிற் புனைந்து போயினான், ஓவலிலுயிர்... பிரிந் துடல்சென்றென்னவே," (பால-1396) என்பதால் தெளியலாம். வழியின் கொடுமையும் நெடுமையும் தோன்றத் 'தேக்குயர் கல்லதர்' எனவும், 'சேணிடை' எனவும் கூறினாள். ஆணையாற் கடிதுபோக்கிய கருத்தாவது, பரதன் இங்கிருத்தல் இராமன் முடிசூட்டு விழாவிற்குத் தடையாகலாம் என்பதே ஆம். அதர் - வழி. (59)

**1555.** மந்தரை பின்னரும் வகைந்து கூறுவாள்
அந்தரந் தீர்ந்துல களிக்கு நீர்மையால்
தந்தையுங் கொடியனற் றாயுந் தீயளால்
எந்தையே பரதனே யென்செய் வாயென்றாள்.

மந்தரை பின்னரும் வகைந்து கூறுவாள்,
'அந்தரம் தீர்ந்து உலகு அளிக்கும் நீர்மையால்
தந்தையும் கொடியன், நல் தாயும் தீயளால்;
எந்தையே! பரதனே! என் செய்வாய்?' என்றாள்.

பொ :—கூனி, மேலும் வகுத்துக் கூறுவாளாய், 'நடுவுநிலைமை நீங்கி (இராமனுக்கு) உலகைக் கொடுக்கும் தன்மையால் தந்தையும் கொடியனாயினான்; அதை யறிந்து மகிழ்தலால் நற்றாய் ஆகிய கைகேயி யும் கொடியளாய் இருக்கின்றாள்; என் அப்பா! பரதனே! நீ என்ன செய்வாய்?' என்று இரங்கினாள்.

கு :—வகைந்து - வகைப்படுத்தி. அந்தரம் - நடுவுநிலை. தீர்தல்—நீங்குதல். பரதனுக்கின்றி இராமனுக்கே பார் அளித்தலின், 'அந்தரம் தீர்ந்து' என்றாள். உலகளித்தல், உலகைப் பாதுகாத்தலுமாம். நீர்மை—

தன்மை. ஒருபாற் கோடிய மனத்தன் ஆதலின் தந்தை கொடியன் என்றாள். தந்தைக்கு ஏற்பச் சொல்லிப் பரதனுக்குப் பட்டம் கட்டச் செய்யாமையேயன்றிச் சக்களத்தியின் மகன் முடிசூடுதற்கு மகிழ்ச்சியும் அடைகின்றாள் ஆதலின், ' நற்றாயும் தீயள் ' என்றாள். இரக்கமிக்கவள் போல முன்னிலையில் இல்லாத பரதனை விளித்து, 'என்செய்வாய்?' என் கின்றாள். மகன்முறைக்குரிய பரதனை, ' எந்தையே ' என்றது, அன்பு பற்றிய வழுவமைதி. எல்லாச் செல்வமும் நல்குதற்குரிய தந்தையும் தாயும் கொடியராயவழிச் செய்யலாவது யாதுமில்லை என்பாள், ' என் செய்வாய் ?' என்றாள். (60)

1556. அரசரிற் பிறந்துபின் னரச ரில்வளர்ந்
தரசரிற் புகுந்துபே ரரசி யானநீ
கரைசெயற் கருந்துயர்க் கடலில் வீழ்கின்றாய்
உரைசெயக் கேட்கிலை யுணர்தி யோவென்றாள்.

' அரசர் இல் பிறந்து, பின் அரசர் இல் வளர்ந்து,
அரசர் இல் புகுந்து, பேர் அரசி ஆன நீ,
கரை செயற்கு அரும் துயர்க் கடலில் வீழ்கின்றாய்!
உரை செயக் கேட்கிலை ; உணர்தியோ?' என்றாள்.

பொ :—'அரசர்குடியிற் பிறந்து அரசர்வீட்டிலே வளர்ந்து பின் அரசர்வீட்டில் மருமகளாகப் புகுந்து பெரிய பட்டத்து அரசியாகப் பேறு பெற்ற நீ, கரைகாண இயலாத பெரிய துன்பக் கடலில் வீழ் கின்றனை ; யான் சொல்லக் கேட்கின்றாயில்லை ; கேளாவிடினும், நீ யேனும் உணர்கின்றாயோ ? (உணர்ந்திலையே !)' என்று கூறினாள்.

கு :—நீ பிறந்ததும் வளர்ந்ததும் புகுந்ததும் அரசர்குடியாய் இருந்தும் நின் மகனை அரசனுக்க முயலும் நினைவே இல்லாதது வியப்பு என்றவாறு. பிறந்த நாள் தொட்டுச் சிறந்த அரசபோகம் துய்த்த நீ நின் மகனை அரசனுக்க முயலாமையால் பெருந்துயர்க் கடலில் வீழ்வது உறுதி என்பாள், தெளிவுபற்றி வீழ்கின்றாய் என நிகழ்காலத்தால் கூறினாள். தானாகவேனும் உணர்தல் வேண்டும், அன்றிப் பிறர் சொல்வதையேனும் கேட்டல் வேண்டும் ; இவ் இரண்டும் நின்பால் இல்லையென்பாள், ' கேட்கிலை ; உணர்தியோ ?' என்றாள். துயர்க்கடல் பெரிதாகலின் கரைசெயற்கு அரிதாயிற்று. (61)

1557. கல்வியு மிளமையுங் கணக்கி லாற்றலும்
வில்வினை யுரிமையு மழகும் வீரமும்
எல்லையில் குணங்களும் பரதற் கெய்திய
புல்லிடை யுக்கநல் லமுதம் போலுமால்.

'கல்வியும், இளமையும், கணக்கில் ஆற்றலும்,
வில்வினை உரிமையும், அழகும், வீரமும்,
எல்லை இல் குணங்களும், பரதற்கு எய்திய,
புல் இடை உக்க நல் அமுதம் போலுமால்'.

பொ —'பரதனிடத்துப் பொருந்தியுள்ள கல்வியறிவும், இளமைச் செவ்வியும், அளவிலாத ஆற்றலும், வில்லினால் போர் செய்ய வல்ல நல்ல உரிமையும், அழகும், வீரவுணர்ச்சியும், அளவிட முடியாத பிற குணங்களும் தூய்மையற்ற இழிவான இடத்துச் சிந்திய நல்ல அமுதத்தையொத்து வீணாயின' (என்றாள்).

கு :—அரசனுக்கு இருக்கவேண்டிய கல்வி முதலாகச் சொல்லப் பட்டவையெல்லாம் பரதனுக்கு வாய்த்திருந்தும் அரசனாகும் வாய்ப்பு இன்மையால் அவை சிறந்து தோன்றாமையின் புல்லிடை உக்க நல் லமுதை ஒக்கும் என்றாள். புல் இடை - தூய்மையற்ற இழிந்த முற்றம். "அங்கணத்து ளுக்க வமிழ்தற்றால் தங்கணத்த ரல்லார்முன் கோட்டி கொளல்" (குறள்-720) என்றவிடத்து இவ்வுவமை வந்துள்ளமை காண்க. இங்குக் கூறிய அங்கணத்தையே 'புல்லிடை' என்றார். கழிவுநீர் தேங்கும் இடத்தை அங்கணம் என்றல் பண்டை வழக்கு. புல் முளைத்துள்ள இடத்து அமிழ்தம் சிந்தினால் சிறிது எடுத்துப் பயன் படுத்தலுமாம்; அதனால் அது பொருளன்று. வறுநிலத்தினும் இழிந்த இடம் என்பார், 'புல்லிடை' என்றார். இடை - இடம். "வில்லினும் வாளினும் விரிந்த வாண்டொழில் புல்லிடை யுகுத்தனென்" (பள்ளி படைப் : 112) எனப் பரதன் பின் கூறுதலும் இப்பொருளதே. கணக்கு— அளவு. ஆற்றல் - வலிமை. வில்வினையுரிமை - விற்போர்த் திறனைத் தனக்கே யுரிமையாக்குதல். அழகு - கண்டோர் விழையும் உருவ நலம். வீரம் - பகை வெல்லும் ஆண்மை. இராமனில் பரதன் குறைந்தவ னல்லன் என்பதை நிறுவி, அரசு பெருமையால் அவன் கல்வி முதலியன பயனற்றமையும் இராமன் கல்வி முதலியன பயனுற்றமையும் விளக்கிய வாறு. (62)

## கைகேயி சினந்து கூறல் 1558-1562

**1558.** வாய்க யப்புற மந்தரை
★ வழங்கிய வெஞ்சொல்
காய்க னற்றலை நெய்சொரிந்
தெனக்கதங் கனற்றக்
கேக யர்க்கிறை திருமகள்
கிளரிள வரிகள்
தோய்க யற்கண்கள் சிவப்புற
நோக்கினள் சொல்லும்.

வாய் கயப்பு உற மந்தரை வழங்கிய வெம் சொல்,
காய் கனல் தலை நெய் சொரிந்து எனக் கதம் கனற்றக்,
கேகயர்க்கு இறை திருமகள், கிளர் இள வரிகள்
தோய் கயல் கண்கள் சிவப்பு உற நோக்கினள், சொல்லும்.

பொ :—சொன்ன தன் வாயும் கசக்குமாறு மந்தரை வரையாது உரைத்த கொடிய சொற்கள், எரிகின்ற நெருப்பில் நெய் சொரிந்தது போலக் கோபத்தை மிகுதிப் படுத்த, கேகயதேயத்தார்க்கு மன்னனாகிய கேகயனின் திருப்புதல்வியாகிய கைகேயி, விளக்கமான இளமைச் செவ்விக்குரிய செவ்வரிகள் தோய்ந்த கயல்மீன் போன்ற தன் கண்கள், வெகுளியால் சிவக்கக் கூனியைப் பார்த்துச் சொல்லுகின்றாள்.

கு :—கயப்பு – கசப்பு. நற்குணங்கள் நிறைந்த இராமன்மேலும் கோசலைமேலும் வெறுப்பூட்டும் நஞ்சனைய இன்னாச் சொற்கள் ஆதலின் அவற்றைச் சொன்ன நாவுக்கும் கசப்புத்தன்மையேறி யிருக்கும் என்பார், 'வாய்கயப்புற' என்றார். கூனி தன்னாற்றல் தோற்றச் சலியாது மேன்மேலும் கூறியமை விளங்க, 'வழங்கிய' என்றார். கதம் – கோபம். சினத்தீ என்றல் கருதி, 'கனற்ற' என அதற்கேற்ற வினை கொடுத்தார். "மண்டு மெரியுள் மரந்தடிந்திட்டற்று" (பு. வெ. 1) என்பது காண்க. அரசியல் நெறிகளை நன்குணர்ந்தவள் என்பது தோன்றக் "கேகயர்க் கிறை திருமகள்" என்றார். இறைக்கு மகள் என நான்காவது விரிக்க. திரு – சிறப்புணர்த்தும் அடை. மன்னன் மகள் ஆதலின் கீழ்மைக்குணம் கண்டு வெகுண்டாள் என்க. கைகேயியின் இளமைச் செவ்வியை உணர்த்த, "கிளரிளவரிகள் தோய் கயற்கண்கள்" என்றார். கோபத்தால் கண் சிவத்தல் இயல்பு. **(63)**

**1559.** வெயின்மு றைக்குலக் கதிரவன்
முதலிய மேலோர்
உயிர்மு தற்பொரு டிறம்பினு
முரைதிறம் பாதோர்
மயின்மு றைக்குலத் துரிமையை
மனுமுதன் மரபைச்
செயிரு றப்புலைச் சிந்தையா
லென்சொனாய் தீயோய்.

'வெயில் முறைக் குலக் கதிரவன் முதலிய மேலோர்,
உயிர் முதல் பொருள் திறம்பினும் உரை திறம்பாதோர்;
மயில் முறைக் குலத்து உரிமையை, மனு முதல் மரபைச்
செயிர் உறப் புலைச் சிந்தையால், என் சொனாய்? தீயோய்!

பொ :—'தீயவளே! வெயில் தரும் முறைமையை மேற்கொண்டுள்ள சிறந்த சூரியன் முதலாக வந்த மேன்மை வாய்ந்த சூரிய குலத்து அரசர்கள் உயிர் முதலாகிய பொருள்கள் மாறுபடினும் சொல் மாறுபடாதவர்கள்; மயிலின் முறைமையைத் தன்பாற் கொண்ட குலத்தின் உரிமையையும் மனு முதலாக வழி வழி வந்த வழக்கையும் குற்றம் பொருந்த இழிந்த எண்ணத்தால் என்ன சொன்னாய்?'

கு :—'மேலோர்' என்றது ஞாயிற்றின் வழிவந்த மன்னர்களை. உயிர் திறம்பினும் உரை திறம்பாமை புறவொன்றின் பொருட்டாகத் துலைபுக்க சிபியின் செயலால் அறியலாம். இராமனுக்கு அரசு அளிப்பதாகச் சொல்லிய சொல் திறம்பான் தயரதன் என்பது தோன்ற, 'உரை திறம்பாதோர்' எனவும், மூத்தவற்கு அரசு அளித்தலே குல முறைமை என்பது தோன்ற, "மயின் முறைக் குலத்துரிமையை மனு முதன் மரபை" எனவும் கூறினாள். உயிர் திறம்பலாவது உடலோடு வாழும் இயல்பிலிருந்து வேறுபட்டு நீங்குதல்; சாதல். உயிரை விட்டேனும் வாய்மை காப்பார் என்றவாறு. பால் புளிப்பினும் பகல் இருளினும் நால்வேதநெறி திரியினும் உரை திறம்பார் என்பாள், "உயிர் முதற் பொருள் திறம்பினும்" என்றாள். மயில் முட்டை பல இட்டுப் பொரிக்கும் போது முதற் பிறந்த குஞ்சுக்கே பொன்னிறப் பீலி முளைக்க ஏனையவற்றிற்கு இல்லையாதல்போல முதல் மகனுக்கே அரசுரிமை கொடுக்கும் வழக்கம் இக்குடிக்கு உண்டு என்பாள், "மயின் முறைக் குலத்துரிமை" என்றாள். "பலாவம் பொழிலின் ஒருதா யுயிர்த்த பல மயிற்கும் கலாவம் புனைந்த களிமயில் மூத்ததெனக் கருத" (தணிகைப்-களவுப்-244) என்பதும் நோக்குக. கேகய குலத்து உரிமை என்று கொண்டு, "பிறந்தகத்து உரிமையும் புகுந்த இடத்து மரபும் குற்றம் பொருந்த" எனப்

பொருள் கூறலுமாம். புலைச்சிந்தை - கீழ்மையுள்ளம். நற்சிந்தையார் யாரும் இங்ஙனம் கூறார் என்றவாறு. சூரியன் எவ்வுயிர்க்கும் ஒருபடித்தாய் வெயில் வீசுதல் போல அவன் குலத்து மன்னரும் எல்லார்க்கும் ஒப்ப அரசு புரிவர் என்ற குறிப்புக் காண்க. (64)

1560. எனக்கு நல்லையு மல்லைநீ
யென்மகன் பரதன்
தனக்கு நல்லையு மல்லையத்
தருமமே நோக்கின்
உனக்கு நல்லையு மல்லைவந்
தூழ்வினை தூண்ட
மனக்கு நல்லன சொல்லினை
மதியிலா மனத்தோய்.

'எனக்கு நல்லையும் அல்லை நீ; என்மகன் பரதன்
தனக்கு நல்லையும் அல்லை; அத் தருமமே நோக்கின்,
உனக்கு நல்லையும் அல்லை; வந்து ஊழ்வினை தூண்ட
மனக்கு நல்லன சொல்லினை, மதியிலா மனத்தோய்!'

பொ :—'புத்தியில்லாத மனமுடையவளே! நீ எனக்கு நல்லவளும் ஆகாய்; என் மகனாகிய பரதனுக்கு நல்லவளும் ஆகாய்; அம்முறையே கொண்டு பார்த்தால் உனக்கு நல்லவளும் ஆகாய்; ஊழ்வினை வந்து தூண்டுதலால் நின் மனத்திற்கு நல்லனவாகத் தோன்றியவற்றைச் சொன்னாய்!'

கு :—பரதனுக்கும் கைகேயிக்கும் நன்மைசெய்வாள்போல் இது காறும் மந்தரை கூறிக்கொண்டுவந்தமையால் அவள் கருத்தை மறுத்துக்கூறியவாறு. தருமம் - முறை. தனக்கும் பரதனுக்கும் நல்லளல்லள் என்றது, அவள் சொல் நன்மை பயவாமையின் அன்றே? அம்முறையால் நோக்கின், அவள் சொல் அவளுக்கே நன்மை பயவாது தீமை பயக்குமாதலின் 'உனக்கு நல்லையும் அல்லை' என்றாள். தனக்கும் தீங்கு பயக்கும் சொற்களைக் கூனி சொன்னதற்குக் காரணம் அவள் தீய ஊழ்வினை உள் நின்று தூண்டுதலே ஆம் என அமைதியும் கூறியவாறு. கூனியின் கூற்று மனவழிப்பட்டதன்றி மதிவழிப்பட்டதன்று என்பாள் "மதியிலா மனத்தோய்" என்றாள். (65)

**1561.** பிறந்தி றந்துபோய்ப் பெறுவது
மிழப்பதும் புகழேல்
நிறந்தி றம்பினு நியாயமே
திறம்பினு நெறியின்
திறந்தி றம்பினுஞ் செய்தவந்
திறம்பினுஞ் செயிர்தீர்
மறந்தி றம்பினும் வரன்முறை
திறம்புதல் வழக்கோ.

**'பிறந்து இறந்து போய்ப் பெறுவதும் இழப்பதும் புகழேல், நிறம் திறம்பினும், நியாயமே திறம்பினும், நெறியின் திறம் திறம்பினும், செய்தவம் திறம்பினும், செயிர் தீர் மறம் திறம்பினும், வரன்முறை திறம்புதல் வழக்கோ?'**

**பொ :—**'நற்செயல் செய்தமையால் இவ்வுலகத்துப் பிறந்தோராய்ப் பெறுதற்குரியதும், அது செய்யாமையால் இறந்துபோனவராய் இழப்ப தற்குரியதும் புகழாகுமானுல், ஒளி மாறுபட்டாலும், நீதி மாறுபட்டாலும், அறநெறியின் பெருமை மாறுபட்டாலும், செய்த தவம் பயன்தாராது மாறுபட்டாலும், குற்றமற்ற வீரநெறி மாறுபட்டாலும், எம் புகழ் கெடு மாறு எம் குலத்திற்குரிய வரன்முறையினின்றும் மாறுபடுவது முறை யாகுமோ? (ஆகாது.)'

**கு :—** பிறந்து பெறுவதும், இறந்துபோய் இழப்பதும் புகழேல் என நிரனிறையாகக் கொள்க. "வசையொழிய வாழ்வாரே வாழ்வார் இசை யொழிய வாழ்வாரே வாழாதவர்" (குறள்-240) என்ற கருத்தை உளங்கொண்டு இங்ஙனம் கூறினர். "வசையென்ப வையத்தார்க் கெல் லாம் இசையென்னும் எச்சம் பெருஅவிடின்" (குறள்–238) என்றதால் இசைபெருமையே ஒருவற்கு வசையாம் என்பது பெறப்பட்டது. இசை பெற்று வாழ்வாரே உயிர் வாழ்வார் ஆவார் என்பதும் புகழுண்டாகாமல் வாழ்வாரே இறந்தோராவர் என்பதும் வள்ளுவர் கருத்தாகும். "மன்னர் மாலேயில் எண்ணுறப் பிறந்திலன் இறத்தல் நன்று" (1552) என்றும், 'பிறந்திலன் பரதன்' (1550) என்றும் கூனி கூறியதும் இக்கருத் தானே யாம். "பிறந்திறந்து போய்ப் பெறுவதும் இழப்பதும் புகழேல்... வரன்முறை திறம்புதல் வழக்கோ" என்ருரேனும், புகழ் பெறுவதே பிறத்தலும் அது பெருமையே இறத்தலும் ஆகுமேல், எம் வரன்முறை திறம்பாதுநின்று புகழ்பெற்றுப் பிறந்தோராய் வாழாமல் வரன்முறை திறம்பி வசைபெற்று இறந்தோராகுதல் வழக்கோ என்பது கருத்தாகக் கொள்க. நிறம் – ஒளி; தான் இருக்கும்போது பிறரினும் சிறக்கத் தோன்றுதல். திறம்பல்கூடாத நிறமுதலியன திறம்பினும் என்றது,

வரன்முறை திறம்பாமையின் சிறப்புணர்த்தவேண்டி. நியாயம் - நடுவுநிலே. நெறி - அறநெறி. மறந்திறம்பலாவது, ஒத்தாரோடன்றித் தன்னின் இளேயார்மேலும் முதியோர்மேலும் புறங்கொடுத்தோர்மேலும் போர் தொடங்கிப் படையெறிதல். வரன்முறையாவது மூத்தவர்க்குரித்து அரசு என்பது. (66)

1562. போதி யென்னெதிர் னின்றுநின்
புன்பொறி நாவைச்
சேதி யாதிது பொறுத்தனென்
புறஞ்சில ரறியின்
நீதி யல்லவு நெறிமுறை
யல்லவு நினேந்தாய்
ஆதி யாதலி னறிவிலி
யடங்குதி யென்ருள்.

'போதி என் எதிர்நின்று! நின் புன் பொறி நாவைச்
சேதியாது இது பொறுத்தனென்; புறம் சிலர் அறியின்,
நீதி அல்லவும் நெறிமுறை அல்லவும் நினேந்தாய்
ஆதி ; ஆதலின், அறிவிலி ! அடங்குதி ' என்ருள்.

பொ :—"என் எதிரில் நில்லாது இங்கிருந்து போய்விடு; நினது கீழ்மையுள்ள நாவாகிய பொறியை அறுக்காமல் இக்குற்றத்தைப் பொறுத்துக்கொண்டேன் : புறத்தே யுள்ள சிலர் நின் சொல்லே அறிந்தால் நீதியல்லாதனவற்றையும் நெறிப்பட்டுவந்த முறைமையல்லாதன வற்றையும் நினேந்தவளாகக் குற்றம் சார்த்தப்படுவாய் ; ஆதலால், அறிவில்லாதவளே ! இதோடு நாவடங்குக" என்ருள்.

கு :—போதி அடங்குதி என்பன இகரவீற்று ஏவல். என் எதிர் நின்று போதி எனவும், புன் நாப் பொறியை எனவும் மாற்றியுரைக்க. சேதித்தல் – அறுத்தல். இது என்றது கூனியின் சூழ்ச்சிச் சொல்லே. யாஞதலின் பொறுத்துக்கொண்டேன் ; பிறர் அறிந்திருந்தால் நின்னே நீதியல்லாதவற்றையும் நெறிப்பட வந்த முறையல்லாதவற்றையும் நினேத்தவளாகக் குற்றம் சார்த்தித் தண்டனேக்கு உள்ளாக்குவார்கள் என்பது கருத்து. இராமனுக்கன்றிப் பரதனுக்கு முடிபுனேதல், நீதியு மன்று, நெறிப்படவந்த வழக்குமன்று என்றவாறு. நாவினேக் காவாது பல மொழிந்து குற்றப்பட்டாளாகலின் ' நாவை அடக்கு ' என்பாள், அடங்குதி என்ருள். அறிவுடையோர் கூருதன கூறிஞளாதலின் ' அறிவிலி ' என்ருள். "மதியிலா மனத்தோய்" என்ருள் முன்னரும்.

ஆதி - ஆவாய்; முன்னிலை வினைமுற்று. புல்லிய மொழி புகன்றமை யால், "புன்பொறிநா" என்றாள். சேதியாதிது பொறுத்தனென் எனவும், புறஞ்சிலரறியின் நீதியல்லவும்...நினைந்தாய் ஆதி எனவும் அடங்குதி எனவும் கைகேயி கூனியின்பால் பற்றோடு கூறிய சொற்களே அவள் மேலும் கலகஞ்செய்யத் துணைநின்றன. (67)

## மந்தரை மேலும் மொழிதல் 1563-1571

**1563.** அஞ்சி மந்தரை யகன்றில
எம்மொழி கேட்டும்
நஞ்சு தீர்க்கினுந் தீர்கிலா
தது நலிந் தென்னத்
தஞ்ச மேயுனக் குறுபொரு
ளுணர்த்துகை தவிரேன்
வஞ்சி போலியென் றடிமிசை
வீழ்ந்துரை வழங்கும்.

அஞ்சி மந்தரை அகன்றிலள், அம்மொழி கேட்டும்;
நஞ்சு தீர்க்கினும் தீர்கிலாது அது நலிந்தென்னத்
''தஞ்சமே! உனக்கு உறு பொருள் உணர்த்துகை தவிரேன்;
வஞ்சி போலி!'' என்று அடி மிசை வீழ்ந்து உரை வழங்கும்.

பொ :—உடம்பில் ஏறிய நஞ்சு மந்திரமொழியால் தீர்க்க முயன் றும் (மந்திரவாதியின் உறுதியின்மையால்) தீராது அது துன்புறுத்து வது போலக் கைகேயி வெகுண்டு கூறிய அம்மொழியைக் கேட்டும் மந் தரை அஞ்சி அவ்விடத்தினின்றும் நீங்காதவளாய், "என் புகலிடமே! வஞ்சிக்கொடி போன்றவளே! உனக்குப் பொருத்தமான நற்பொருளை உணர்த்துவதை (நீ வெகுண்டபோதும்) விடேன்" என்று அவள் அடி யின்மேல் வீழ்ந்து விரித்துச் சொல்லத்தொடங்கினாள்.

கு :—கூனிக்கு நஞ்சு உவமை. நஞ்சுதீர்க்கினும் தீராது நலிவது போலக் கைகேயி வெகுண்டு கூறி அகற்றியும் அகலாது உரைவழங்கும் என்க. "கைகளிற் றீண்டினாள் காலக் கோளனாள்" (1537) என முன்கூறி யதற்கேற்ப இங்கும் கூனிக்கு நஞ்சினை உவமை கூறியிருக்கும் பொருத் தம் காண்க. "கடிக்கும் வல்லரவும் கேட்கும் மந்திரம்" (சுந்தர. 465) என அரவும் மந்திரம் கேட்டு நடப்பதாகக் கூறுபவர் இங்குத் "தீர்க்கினும் தீர்கிலாதது நலிந்தென்ன" என்றது என்னை? எனின் மந்திரவாதியின் மனவுறுதியில்லாதவழி மந்திரத்தால் நஞ்சு தீராது நலிதலுண்டு என்பது கூறிக் கைகேயியின் மனவுறுதி இல்லாத

அன்புகலந்த வெகுட்சிமொழியால் கூனி, அஞ்சி அகலாது மீண்டும் மொழியலானுள் என்பதைப் பெறவைத்தவாறு. தஞ்சம்-புகலிடம். "நாவைச் சேதியாதிது பொறுத்தனென்" என்பன போன்ற கைகேயி யின் மொழிகள் கூனிக்குப் புகலிடம் தந்தாள் என்பதை யுணர்த்தலின், தஞ்சமே! என விளித்தாள். அரசர்க்குச் சூழ்ச்சித்துணையாய அமைச்சர், தம்முயிர்க்குறுதியெண்ணுர் தலைமகன் வெகுண்டபோதும், வெம்மையைத் தாங்கி நீதிவிடாதுநின்றுரைத்தல்போல அரசிக்குச் சூழ்ச்சித் துணையாகிய கூனியும், தலைமகள் வெகுண்டபோதும் தன்னுயிர்க்கு உறுதியெண்ணுது உறுபொருள் உணர்த்துகை தவிராதவள் ஆனுள் என்க. நலிந்தென்ன உரைவழங்கும் என்பது தொழில் உவமம். இனி, கூனி சொல்லப்போகும் சொல்லின் மிகுதிதோன்ற "வழங்கும்" என்ருர். (68)

1564. மூத்த வற்குரித் தரசெனு
முறைமையி னுலகம்
காத்த மன்னனி லிளையனன்
ருேகடல் வண்ணன்
ஏத்து நீண்முடி புனைவதற்
கிசைந்தன னென்ருல்
மீத்த ருஞ்செல்வம் பரதனை
விலக்குமா றெவனே.

'மூத்தவற்கு உரித்து அரசு எனும் முறைமையின், உலகம்
காத்த மன்னனில் இளையன் அன்ருே கடல் வண்ணன்?
ஏத்தும் நீள் முடி புனைவதற்கு இசைந்தனன் என்ருல்,
மீத் தரும் செல்வம் பரதனை விலக்கும் ஆறு எவனே?'

பொ :—"மூத்தவனுக்கு உரித்து அரசு என்கின்ற முறையின்படி பார்த்தால் உலகத்தை இதுவரையில் காத்துவந்த தயரத மன்னனைச் காட்டிலும் கடல்போன்ற கரியவண்ணனுகிய இராமன் இளையவன் அன்ருே? அவ்வாறு இளையவனுக இருந்தும், எல்லோரும் போற்றுதற் குரிய நீண்ட முடியைப் புனைந்துகொள்வதற்கு உடன்பட்டான் என்ருல் மேன்மைபொருந்திய அரசச் செல்வம் எய்தாதபடி இளையன் என்ற காரணத்தால் பரதனை விலக்குவது எக்காரணம்பற்றியோ?"

கு :—மயின்முறைக்குலத்துரிமை எனவும் வரன்முறை எனவும் கைகேயி கூறியது மூத்த மகனுக்கே அரசு உரியது என்னும் கருத்தால் ஆதலின் அதை நேரே மறுக்கஇயலாத கூனி, மூத்தமகனுக்கு என்பதில்

மகனுக்கு என்ற சொல்லை விடுத்து, மூத்தவற்கு உரித்து அரசு என்பதே அவள் கூறிய வரன்முறையாகக் கொண்டு அம்முறையின்படி இராமனுக்கு முடிசூட்டுவதும் வழுவானது என்பது காட்டி அவ்வழுவிய முறை இராமனுக்குப் பொருந்தும்போது பரதனுக்கு ஏன் பொருந்தாது? என்று கேட்கின்றாள். இராமனுக்கு முடிசூடுதல் உறுதியான வுடன் உரிமை அவனுக்கு ஆயினமையின், தயரதனை "உலகம் காத்த மன்னன்" என இறந்த காலத்தால் கூறினாள். மீத்தருஞ் செல்வம்-மேன்மைபொருந்திய அரசச் செல்வம். பரதனும் அரசினைப் பெறல் முறையே என்பதைக் காட்டியவாறு. (69)

**1565.** அறநி ரம்பிய வருளுடை
யருந்தவர்க் கேனும்
பெறல ருந்திருப் பெற்றபின்
சிந்தனை பிறிதாம்
மறநி னைந்துமை வலிகில
ராயினு மனத்தால்
இறலு றும்படி யியற்றுவ
ரிடையரு வின்னல்.

'அறம் நிரம்பிய அருள் உடை அருந்தவர்க்கேனும்,
பெறலரும் திருப் பெற்ற பின் சிந்தனை பிறிது ஆம்;
மறம் நினைந்து உமை வலிகிலர் ஆயினும், மனத்தால்
இறல் உறும்படி இயற்றுவர் இடையரு இன்னல்.'

பொ :—"துறவறம் மேற்கொண்டமையால் அறம் நிரம்பப்பெற்ற அருளையுடைய அரிய தவத்தினையுடையோர்க்காயினும், பெறுதற்கு அரிய செல்வத்தைப் பெற்றபின்னர் மனநிலை வேறுபடுதல் இயல்பு; (இதுவரையில் இராமனும் கோசலையும்) கொடுமை செய்ய நினைந்து உங்களைத் துன்புறுத்தல் இலர்; ஆயினும், (அரசுபெற்ற பின்னர்) நீங்கள் மனத்துன்பத்தால் அழியும்படி இடையறாத இன்னல் இயற்றுவார்கள்."

கு :—இல்லறம் துறவறம் எனப்பட்ட அறத்தின் பகுப்பில் இல்லறம் நிகழ்த்தியபின் துறவறம் மேற்கொண்டு காத்த தவத்தினர் என்பார், அறம் நிரம்பிய அருளுடை அருந்தவர் என்றார். "அறந்தலை நிரம்ப............துறந்திலன்" (1426) என முன்னர்க் கூறியதும் காண்க. இல்லறத்திற்கு அன்பு சிறந்தாற்போல் துறவறத்திற்குச் சிறந்தது அருளாதலின், அருளுடை அருந்தவர் என்றார். துறவு

பூண்ட அருளுடை அருந்தவர்க்கும் திருப்பெற்ற பின் சிந்தனை பிறி தாயின், துறவாத இராமனுக்குச் சிந்தனை பிறிதாதற்குச் சொல்ல வேண்டுமோ? என்றவாறு. மறம், அறத்திற்கு மாறுய பாவச்செயல். வலிதல் – துன்புறுத்தல். மனத்தால் இறல் ஆவது, மனத்துன்பத் தால் தாமே இறத்தல். பிறர் அறியாதவாறு இழைக்கும் இன்னல் களால் மனமுடைந்து பிறர் கொல்லவேண்டாது தாமே இறப்பர் என்ற படி. இதனல் இராமன் அரசு ஏற்ருல் கைகேயிக்குக் கடுந்துன்பம் வரும் என்பதை விளக்கினுள். (70)

**1566.** புரியுந் தன்மக னரசெனிற்
பூதல மெல்லாம்
விரியுஞ் சிந்தனைக் கோசலைக்
குடைமையா மென்ருல்
பரியு நின்குலப் புதல்வற்கு
முனக்குமிப் பார்மேல்
உரிய தென்னவ ளுதவிய
வொருபொரு ளல்லால்.

'புரியும் தன் மகன் அரசு எனில், பூதலம் எல்லாம்
விரியும் சிந்தனைக் கோசலைக்கு உடைமையாம் என்ருல்,
பரியும் நின் குலப் புதல்வற்கும், உனக்கும், இப் பார் மேல்
உரியது என், அவள் உதவிய ஒரு பொருள் அல்லால்?'

பொ :—'தன்மகனுகிய இராமன் அரசுபுரிவானுயின் இந்நிலவுலக முழுமையும், விரிவான முன்யோசனையுடைய கோசலைக்கே உரிய உடைமையாகும் என்ருல், இரங்கத்தக்க நின் சிறந்த மகனுகிய பரதனுக்கும் உனக்கும் உரியபொருள் இப்பூமிமேல் அக்கோசலை உதவும் ஒரு சிறு பொருள் அல்லது வேறு என்ன இருக்கின்றது? (ஏதும் இல்லை)'

கு :— விரிவான முன்யோசனையுடைமையால் இப்பூதலமெல்லாம் தனக்கு உடைமையாகப் பெற்ருள் கோசலை என்பாள், "விரியுஞ் சிந்த னைக் கோசலை" என்ருள். இதனல் கைகேயி அந்த முன்யோசனையின்மை யால் உரிமையிழந்தாள் என்பதும் பெறவைத்தவாறு. பரிதல்-இரங்கு தல்; வருந்துதலும் ஆம். குலம்-சிறப்பு. முன் 'இராமனைப் பெற்ற வெற்கு' என்று கைகேயி கூறினுளாதலின் இங்குப் பரதனை, "நின்குலப் புதல்வன்" என்று சிறப்பித்தாள். 'ஒருபொருள்' என்றது சிறுமை யுணர்த்திநின்றது. அவள் உதவிய சிறுபொருள்கொண்டே இனி

வாழ்க்கை நடத்தவேண்டும் என்னின் அவள் மனமாறுதல் எளிதாதல் காண்க. பெண் உள்ளம் எதைக்கூறினுல் விரைந்துமாறும் என்பதைக் கூனி நன்குணர்ந்தவளாதலின் மேலும் இங்ஙனம் கட்டுரைக்கின்ருள். இராமன் அரசுரிமையேற்ருல் கைகேயிக்கும் பரதனுக்கும் எவ்வுரிமையும் இல்லை என்பதை விளக்கியவாறு. (71)

**1567.** தூண்டு மின்ன லும் வறுமையுந்
தொடர்தரத் துயரால்
ஈண்டு வந்துனை யிரந்தவர்க்
கிருநிதி யவளை
வேண்டி யீதியோ வெள்குதியோ
விம்ம னோயால்
மாண்டு போதியோ மறுத்தியோ
வெங்ஙனம் வாழ்தி.

'தூண்டும் இன்னலும் வறுமையும் தொடர்தரத் துயரால்
ஈண்டு வந்து உனை இரந்தவர்க்கு, இருநிதி, அவளை
வேண்டி ஈதியோ? வெள்குதியோ? விம்மல் நோயால்
மாண்டுபோதியோ? மறுத்தியோ? எங்ஙனம் வாழ்தி?'

பொ :—'பிறர்பால் சென்று இரக்கத் தூண்டுகின்ற பசித்துன்பமும் வறுமையும் தம்மை முன்தள்ளிப் பின்தொடர்ந்து வருதலால் அத்துன்பத்தால் இங்கு வந்து உன்னை இரந்தவர்கட்குப் பெருஞ்செல்வம் அக்கோசலையைக்கேட்டு வாங்கிக் கொடுப்பாயோ? அல்லது, அவள்பால் சென்று வேண்ட நாணுவையோ? (இரந்தார்க்கு ஈயாது வாழவேண்டி இருக்கின்ற) தேம்புதற்குரிய துன்பத்தால் மாண்டுபோவாயோ? அல்லது, இல்லை என்று இரப்போர்க்கு இல்லை என்று மறுத்துக் கூறுவாயோ? எவ்வாறு வாழப்போகின்ருய்?'

கு :—இன்னல்-பசித்துன்பம். இன்மை இடும்பை இரந்து தீர்வாம் என்னும் வன்மையை உண்டாக்குதலின் தூண்டும் இன்னல் என்ருள். வறுமை – நுகர்பொருள் யாதும் இன்மை. பசியும் வறுமையும் தம்மையுடையானைத் தூண்டி இரக்கச்செய்துவிட்டு அவையும் பின்தொடர்ந்து வருதல் தோன்றத் "தொடர்தர" என்ருள். துயர், பிறர்பால் இரக்க நேர்ந்ததே என்று மனத்துள் தோன்றும் கலக்கம். இதனுல் இரப்போரின் இன்னல் நன்கு எடுத்துவிளக்கப்பட்டது. இருநிதி – பெரும்பொருள். அவர் இன்மை தீரக் கொடுக்கவேண்டுமாதலின், 'இருநிதி' என்ருள். தனக்கென்று ஒருபொருள் கைகேயிக்கு இன்மை மேலே கூறினமையால்

கோசலையைவேண்டியே கொடுக்கவேண்டும் என்பாள், 'வேண்டி யீதியோ' என்ருள். வெள்குதல் – நாணுதல்; தன்பால் வந்து இரக்கும் வறியவர் போலத் தானும் கோசலைபால் இரக்கவேண்டி யுளதே என்று நாணுதல். விம்மல்நோய்-பிறர்க்குப் பயன்படாத உடற் பொறை தாங்கவேண்டியுளதே என்று தேம்பியழுதற்குரிய பெருந் துன்பம். "சாதலி னின்னுத தில்லை யினிததூஉம் ஈத லியையாக்கடை" (குறள்–230) என்பதும், "ஈத லிரந்தார்க்கொன் ருற்ருது வாழ்தலிற் சாதலுங் கூடுமா மற்று" (குறிஞ்சிக்கலி–61) என்பதும், "இன்மை யுரைத்தார்க் கது நிறைக்க லாற்ருக்கால், தன்மெய் துறப்பான் மலை" (குறிஞ்சிக்கலி-43) என்பதும் இங்கு ஒப்புநோக்கத்தகுவன. இலன் என மறுத்தல் குலனுடையார்க்கு அழகன்மையின் 'மறுத்தியோ' என்ருள். "பிறந்திறந்து போய்ப் பெறுவதும் இழப்பதும் புகழேல்" (1560) எனக் கைகேயியினுள்ளம் புகழ்மேலது ஆதலுணர்ந்து இறப்பார்க்கொன் றீவார்மேல் நிற்கும் புகழ்தானும் அவட்கு இல்லை என்பதை விளக்கியவாறு. (72)

**1568.** சிந்தை செய்கையிற் றிகைத்தனை
யினிச்சில நாளில்
தந்த மின்மையு மெளிமையு
நிற்கொண்டு தவிர்க்க
உந்தை யுன்னையுன் கிளைஞர்மற்
றுன்குலத் துள்ளோர்
வந்து காண்பதுன் மாற்றவள்
செல்வமோ மதியாய்.

'சிந்தை செய்கையில் திகைத்தனை ;
இனிச் சில நாளில்,
தம் தம் இன்மையும் எளிமையும்
நிற்கொண்டு தவிர்க்க,
உந்தை, உன்னை, உன் கிளைஞர், மற்று
உன் குலத்து உள்ளோர்,
வந்து காண்பது உன் மாற்றவள்
செல்வமோ? மதியாய்.'

போ :— 'நீ நினைவிலும் செயலிலும் திகைப்புற்ருய்; இனிச் சில நாட்களில் தங்கள் தங்களுடைய வறுமையையும் அதனுலுளதாகிய தாழ்வையும் நின்னைக்கொண்டு நீக்கிக் கொள்ள எண்ணி, உன்

தந்தையோ, உன் தாயோ, அன்றி உன் உறவினரோ, அல்லது உன்குலத்துப் பிறந்தோர்களோ (வருவார்களாயின் அவர்கள்) இங்கு வந்து காண்பது உன்னுடைய சக்களத்தியின் செல்வத்தையோ ? நினைத்துப்பார்.'

கு :—திகைத்தல்-மயங்குதல். உந்தை உன்னை என்பவை முன்னிலையில் வந்த முறைப்பெயர்கள். இரவலர் இன்மைதீர்க்க இயலாத நிலையை முன் உணர்த்தியவள், இங்குச் செழுங்கிளை தாங்கவியலாத அழுங்கல் நிலையை உணர்த்துகின்றாள். செழுங்கிளை தாங்கும் செல்வமுடையாய் என நினைந்து தம் இன்மை நீங்க வந்த உறவினர் நின்பால் காண்பது வறுமையோ என்பாள், "காண்பதுன் மாற்றவள் செல்வமோ" என்றாள். மதித்தல் -நினைத்தல் ; 'மதியையுடையாய்' என விளியாக்கி இகழ்ச்சி தோற்றுவித்தலும் ஆம். கைகேயியின் தந்தை மன்னனாயிருக்க இன்மையால் வருவான் என்றது, குடைநிழலிருந்து குஞ்சர மூர்ந்தோர் நடைமெலிந் தோரிடம் நண்ணினும் நண்ணுவர் என்ற கருத்தால் ஆம். இன்மையும் இழிவும் நிற்கொண்டு தவிர்க்க வந்த நின் உறவினர்களை மேலும் இன்மையும் இழிவும் அடையவே செய்யப்போகின்றாய் என்றபடி. தன்வீட்டுத் தாழ்வைப் பொறுத்தாலும் தாய்வீட்டாரின் தாழ்வைப் பொருது மகளிர் மனமாகலின் அம் மனவியல்புணர்ந்து கூனி இங்ஙனம் கூறினாள். (73)

**1569.** காத லுன்பெருங் கணவனை
யஞ்சியக் கனிவாய்ச்
சீதை தந்தையுன் றாதையைத்
தெறுகில னிராமன்
மாது லன்னவ னுந்தைக்கு
வாழ்வினி யுண்டோ
பேதை யுன்றுணை யாருளர்
பழிபடப் பிறந்தார்.

'காதல் உன் பெருங்கணவனை அஞ்சி, அக் கனிவாய்ச்
சீதை தந்தை உன் தாதையைத் தெறுகிலன்; இராமன்
மாதுலன் அவன்: உந்தைக்கு வாழ்வு இனி உண்டோ?
பேதை உன் துணை யார் உளர் பழி படப் பிறந்தார்?'

பொ :—'உன்னிடத்துப் பெருங்காதலையுடைய உன் கணவனாகிய தயரதனுக்கு அஞ்சி, அந்தக் கொவ்வைக் கனிபோன்ற வாயினையுடைய சீதையின் தந்தை உன் தந்தையை அழிக்கவில்லை ; அச்சனகன் இராம

னுக்கு மாமன் என்ருல் நின் தந்தைக்கு இனி வாழ்வு உண்டோ? ஏ அறிவிலாதவளே ! உன்னைப் போலப் பழிபூணப் பிறந்தவர்கள் வேறு யாருளர் ?'

கு :—உன் பெருங்காதற் கணவன் என மாற்றுக. தெறுதல்-அழித்தல். சனகன் தயரதனுக்கு அஞ்சிக் கேகயமன்னன்பால் இதுகாறும் படையெடுக்கவில்லை. இனித் தன் மருகனே அரசனுதலின் அஞ்சாது படையெடுத்துச் சென்று உன் தந்தையை அழிப்பான் என்பது உறுதி என்பாள், "உந்தைக்கு வாழ்வினி யுண்டோ?" என்ருள். மேல் கூறியாங்குத் தாய்வீட்டார் வறுமையடைதற்குக் காரணம் கூறியவாறு. சீதையாலும் இராமனுலும் இங்கு நீ வாழ்விழக்கின்ருய் ; சீதையின் தந்தையால் உந்தை வாழ்விழக்கச்செய்கின்ருய் ; ஆதலால் அறிவின்மையால் தானும் வருந்தித் தன் சுற்றத்தையும் வருத்திப் பழி பூண்போர் நீயன்றிப் பிறர் இலர் என்பாள், உன் துணை பழிபடப் பிறந்தார் யாருளர்: என்ருள். இதனுல், புகழ்பெறவே விரும்பிய கைகேயி இராமன் முடி சூடுவதால் புகழை இழத்தலேயன்றிப் பழியையும் பெறுகின்ருள் என்பதைக் காட்டியவாறு. "அறிவிலார் தாந்தம்மைப் பீழிக்கும் பீழை, செறுவார்க்குஞ் செய்த லரிது" (குறள் - 843) என்றதற்கேற்ப எல்லாத் துன்பங்களுக்கும் அவள் அறிவின்மையே காரணம் என்பது தோன்றப் பேதை என்று விளித்தாள். இனித் தனக்கும் தன் சுற்றத்தார்க்கும் ஏதம் உண்டாக அரசபோகமாகிய ஊதியத்தைப் போகவிட்ட பேதைமையுடையாள் என்பது தோன்ற அங்ஙனம் விளித்தாள் எனலும் ஆம் ; "பேதைமை யென்பதொன் றியாதெனி னேதங்கொண் டூதியம் போகவிடல்" (குறள் - 831) என்பது காண்க. சீதைதந்தை என்றதோடமையாது, 'இராமன் மாதுலன்' என்றது, முடிபுனைந்து மன்னனுகும் இராமன், தன் மாமன் செயலுக்கு உடன்பட வேண்டியவனே என்னும் கருத்துணர்த்திற்று. (74)

**1570.** மற்று நுந்தைக்கு வான்பகை
பெரிதுள மாற்ருர்
செற்ற போதிவர் சென்றுத
வாரெனிற் செருவிற்
கொற்ற மென்பதொன் றெவ்வழி
யுண்டது கூருய்
சுற்ற முங்கெடச் சுடுதுயர்க்
கடல்விழத் துணிந்தாய்.

'மற்றும் நுந்தைக்கு வான்' பகை பெரிது உள; மாற்ருர்
செற்றபோது இவர் சென்று உதவார் எனில், செருவில்
கொற்றம் என்பது ஒன்று எவ்வழி உண்டு? அது கூருய்;
சுற்றமும் கெடச் சுடு துயர்க் கடல் விழத் துணிந்தாய்.'

பொ :—'வேறும் நின் தந்தைக்குச் சிறந்த பகைகள் பெரிதும் இருக்கின்றன ; பகைவர் வெகுண்டு தாக்கியபோது இக்கோசலநாட்டு மன்னர் சென்று உதவாவிட்டால் போரில் வெற்றி என்கின்ற ஒன்று நின் தந்தைக்கு எவ்வழியில் உண்டாகும் ? அதைச் சொல்லுக ; நின் சுற்றத் தாரும் கெடச் சுடுகின்ற துயராகிய கடலில் நீ விழுவதற்குத் துணிந்து விட்டாய்.'

கு :—சனகனேயன்றி வேறு பகையும் உண்டு என்னும் பொருள் தருதலின் மற்று பிறிது என்னும் பொருளது. 'இவர்' என்றது, கோசலநாட்டுமன்னரை. பரதன் மன்னனுயின் பாட்டனுக்குத் துணே யாவான் ; இராமன் மன்னனுயின் உதவுவதற்கு என்ன இயைபு இருக் கின்றது ? என்பாள், "கொற்றம்...எவ்வழியுண்டு" என்ருள். செரு - போர். கொற்றம் - வெற்றி. துயரத்தின் வெம்மையும் மிகுதியம் தோன்றச் சுடுதுயர்க் கடல் என்று சிறப்பித்தார். அறியாது துன்பத்தில் வீழ்தல் இயல்பு ; அறிந்தும் சுடுதுயர்க் கடலில் வீழ்தல் வியப்பாம் என்பாள், 'துயர்க்கடல் விழத் துணிந்தாய்' என்ருள். துணிந்தாய் என்பதை விளியாக்கலுமாம். தாய்வீட்டார் பிற பகைவரால் துன்புறும் போது உதவுவாரின்றி அழிவர் என்பது கூறியவாறு. சுற்றத்தையும் கெடுத்துத் தானும் கெடும் செயலே யாரும் துணிந்து செய்யார் ; அதை நீ செய்யத் துணிந்தாய்; இத் துணிவு நற்றுணிவன்று என்றவாறு. (75)

**1571.** கெடுத்தொ ழிந்தனே யுனக்கரும்
புதல்வனேக் கிளர்நீர்
உடுத்த பாரக முடையவ
ஞெருமகற் கெனவே
கொடுத்த பேரர சவன்குலக்
கோமைந்தர் தமக்கும்
அடுத்த தம்பிக்கு மாம்பிறர்க்
காகுமோ வென்ருள்.

'கெடுத்தொழிந்தனே உனக்கு அரும் புதல்வனே ; கிளர் நீர்
உடுத்த பாரகம் உடையவன் ஒரு மகற்கு எனவே
கொடுத்த பேரரசு, அவன் குலக் கோமைந்தர் தமக்கும்
அடுத்த தம்பிக்கும் ஆம்; பிறர்க்கு ஆகுமோ?' என்ருள்.

பொ :—'உனக்குப் பிறந்த அரிய புதல்வனாகிய பரதனை அரசனைக் காது கெடுத்துவிட்டாய்; மிக்க நீரையுடைய கடலை ஆடையாக உடுத்த பூமியிடம் முழுமையும் உடைய மன்னன், தன் ஒரு மகனாகிய இராமனுக்கு எனவே கொடுத்த பெரிய அரசு, இனி அவ்விராமனுக்குப் பிறக்கும் சிறந்த அரசகுமாரர்க்கும் அவனை அடுத்துள்ள இலக்குவனாகிய தம்பிக்கும் உரியதாகும்; அவர்க் கன்றிப் பிறர்க்கு உரியதாகுமோ? (ஆகாது)' என்றாள்.

கு :—கெடுத்தொழிந்தனை என்றது ஒருசொல். கைகேயி! நீ முயன்றிருந்தால் பரதன் மன்னனாயிருப்பான்; அவ்வாறு ஆக்காமையால் அவனை நீயே கெடுத்துவிட்டாய் என்றாள். அரசாளுதற்குரிய பண்புகள் நிறைந்த புதல்வன் என்பாள், அரும் புதல்வனை என்றாள். பாரகம் - பூமியாகிய இடம். 'உடையவன்' என்றது தயரதனை. பேரரசு ஆதலின் இருவர்க்குப் பகுத்துக்கொடுக்கவும் கூடும்; அது செய்திலன் என்பது தோன்ற, "ஒரு மகற்கெனவே கொடுத்த பேரரசு" என்றாள். அவன் என்றது இராமனை. இராமனுக்குக் கொடுத்தமையால் இனி இப் பேரரசு அவன் மைந்தர்க்கு உரித்தாகலாம்; மைந்தர் இலரேல் அவனைப் பிரியாது அடுத்துள்ள தம்பியாகிய இலக்குவனுக்கு உரித்தாகலாம். பிறர் என்றது, பரதனையும் அவன் மைத்தரையும் சத்துருக்கனையும் ஆம். குலமைந்தர் - சிறப்புடைய மைந்தர். கிளர் நீர் என்றது ஆகுபெயராய்க் கடலை உணர்த்திநின்றது. (76)

இப்பாடற்குப் பின் 26 எனும் எண்ணுள்ள ஏட்டில் பின்வரும் பாடல் காணப்படுகின்றது.

1571. (a) உன்னை யீன்றவ ளுனக்கடைக் கலமென வுரைத்த
முன்னை வாசகத் தாலுமென் னுக்கைபோய் முடிந்த
பின்னை யாவரும் பழிபடப் பேசுவ ரென்றும்
நின்னை வேண்டியு மீதுரைத் தேனென நின்றாள்.

## கவிக்கூற்று 1572-1573

1572. தீய மந்தரை யிவ்வுரை
செப்பலுந் தேவி
தூய சிந்தையுந் திரிந்தது
சூழ்ச்சியி னிமையோர்
மாயை யும்மவர் பெற்றநல்
வரமுண் மை யாலும்
ஆய வந்தண ரியற்றிய
வருந்தவத் தாலும்.

தீய மந்தரை இவ்வுரை செப்பலும், தேவி
தூய சிந்தையும் திரிந்தது ; சூழ்ச்சியின் இமையோர்
மாயையும், அவர் பெற்ற நல் வரம் உண்மையாலும்,
ஆய அந்தணர் இயற்றிய அருந்தவத்தாலும்.

பொ :—கொடியளாகிய கூனி இச்சொல்லைச் சொன்னவுடன் ஆராய்ச்சியினையுடைய தேவர்கள் செய்த மாயமும் அவர்கள் திருமாலிடம் பெற்ற நல்ல வரமும் இருத்தலாலும் தண்டகவனத்துள்ளவராகிய முனிவர்கள் செய்த அரிய தவத்தாலும் கைகேயியின் தூய மனமும் வேறுபட்டது.

கு :—இவ்வுரை என்றது, அரசுரிமை இராமனுக்கும் அவன் வழித் தோன்றல்கட்குமன்றிப் பிறர்க்கு இல்லை என்ற சொல்லை. 'மூத்தவற் குரித்து அரசெனில்' என்ற செய்யுள் தொடங்கிக் கூனி கூறிவந்த சொற்களால் படிப்படியாகக் கைகேயியின் மனம் மாறுதல் பெற்று வந்ததாயினும், முழுதும் மாற்றம் பெற்றது இவ்வுரை கேட்டபின்னரே என்க. "இராமனைப் பயந்தவெற்கு இடர் உண்டோ ?" (1542) என முன்னர்க் கூறியவளாதலின், தேவி தூய சிந்தையும் என்றார். தேவர்கள் மாயையால் கைகேயியின் மனத்தை மாற்றினார்கள் என்க. சூழ்ச்சியின் திரிந்தது என மாற்றிக் கூனி சூழ்ச்சியின்படி திரிந்தது எனப் பொருள் கூறலுமாம். இங்குச் 'சூழ்ச்சி' வஞ்சனையான உபாயம். வரமும் என உம்மை விரிக்க. அவர் பெற்ற வரமாவது, 'மசரத மனையவர் வரமும் வாழ்வுமோர் நிசரத கணைகளால் நீறு செய்ய யாம்...தசரதன் மதலையாய் வருதும்" (பால-201) என்பது. அந்தணர் என்றது தண்டக வனத்துத் தவமுனிவரை. தீய மந்தரை சொல்லால் தேவியின் தூய சிந்தனை திரிந்ததற்குத் தடுக்க முடியாத மூன்று காரணங்கள் உண்டு என்பது கருத்து. (77)

1573. அரக்கர் பாவமு மல்லவ
ரியற்றிய வறமும்
துரக்க நல்லரு டுறந்தன
டுமொழி மடமான்
இரக்க மின்மையன் றோவின்றிவ்
வுலகங்க ளிராமன்
பரக்குந் தொல்புக ழமுதினைப்
பருகுகின் றனவே.

அரக்கர் பாவமும், அல்லவர் இயற்றிய அறமும்
துரக்க, நல் அருள் துறந்தனள் தூ மொழி மட மான் ;
இரக்கம் இன்மை அன்றோ இன்று இவ் உலகங்கள் இராமன்
பரக்கும் தொல் புகழ் அமுதினைப் பருகுகின்றனவே ?

பொ :—இராவணன் முதலிய அரக்கர்கள் செய்த பாவமும், தேவரும் முனிவரும் செய்த தருமமும் துரத்துதலால் தூய சொற்களை யுடைய இளைய மான் போன்ற கைகேயி நல்ல அருளை நீக்கினள் ; அவளுடைய இரக்கமில்லாமையாலன்றோ இன்று இந்த உலகங்கள் இராமனுடைய பரவிய பழைய புகழாகிய அமுதினைப் பருகுகின்றன ?

கு :—கைகேயி நல்லருள் உடையளாயிருந்தால் இராமன் காடு நண்ணான்; ஆகவே இராவணன் முதலியோர் அழிதலும் தேவரும் முனிவரும் நல்வாழ்வெய்துதலும் கூறும் இராமாயணமே நிகழ்ந்திராது. அரக்கர் செய்த தீவினையின் பயனும் தேவரும் முனிவரும் இயற்றிய நல்வினைப் பயனும் கைகேயி நல்லருள் மாறினமைக்குக் காரணம் என்பது கூறிக் கைகேயிபால் தவறின்மையை விளக்கும் கவிஞர், அவள் இரக்கமின்மை நன்மையும் பயந்தது என்று புகழ்கின்றார். ஒன்றற்கொன்று முரண்பட்ட அறமும் பாவமும் கைகேயியின் நல்லருளைத் துரத்துவதில் ஒற்றுமையுற்ற வியப்பை விளக்கியவாறு. உலகங்கள் என்றது தேயங்களை ; அவை ஆகுபெயராய் மக்களை யுணர்த்தின ; புகழமுதினைப் பருகுதற்குரியோர் அவரே யாதலின். கேட்போர்க்கு நிகழ்வின்கண் சுவைபயத்தலானும் எதிர்வின்கண் பிறவித்துயர் தீர்த்தலானும் புகழினை 'அமுது' என்றார். இளைய மான்குட்டி தனக்கு வரும் தீங்கினை யுணராது துள்ளி விளையாடுதல் போலக் கைகேயியும் கணவனை இழத்தலும் மகனால் வெறுக்கப்படுதலும் ஆகிய பெருந்துன்பம் வருதலை யுணராதவள் என்பதை உணர்த்த அவளை 'மடமான்' என்றார். தயரதன் விரும்பத்தக்க இளமைச்செவ்வி மிக்குள்ளமையும் இதனால் உணர்த்தினார். (78)

## கைகேயி, பரதன் முடிசூட வழி வினாதல்

**1574.** அனைய தன்மைய ளாகிய
கேகய னன்னம்
வினைநி ரம்பிய கூனியை
விரும்பின ணோக்கி

எனையு வந்தனை யினியையென்
மகனுக்கு மனையான்
புனையு நீண்முடி பெறும்படி
புகலுதி யென்றாள்.

அனைய தன்மையள் ஆகிய கேகயன் அன்னம்,
வினை நிரம்பிய கூனியை விரும்பினள் நோக்கி,
'எனை உவந்தனை; இனியை என் மகனுக்கும்; அனையான்
புனையும் நீள் முடி பெறும் படி புகலுதி' என்றாள்.

பொ :—அவ்வாறு அருள் துறந்தவளாகிய கைகேயி, வஞ்சகம் நிரம்பிய கூனியை விரும்பிப் பார்த்து, "என்னை விரும்பி எனக்கு நல்லையாயினை; என் மகன் பரதனுக்கும் இனியையாயினை; அப்பரதன் புனைதற்கு உரிய நீண்ட மணிமுடி பெறும் வழியைச் சொல்லுக" என்றாள்.

கு :—'அனைய தன்மை' என்றது, நல்லருள் துறந்தமையை. கேகயனுக்கு மகள் ஆகிய கைகேயி அன்னம் அன்ன மென்னடையினள் ஆதலின் 'அன்னம்' என்று ஆகுபெயரால் கூறினர். பாலும் நீரும் கலந்துவைத்தவழியும் நீர் நீக்கிப் பாலுண்ணும் அன்னம் போன்று 'நல்லன கொள்ளும் இயல்பினள்' முன்னம் என்பது தோன்ற, 'அன்னம்' என்றார் எனலும் ஆம். வினை - வஞ்சனை. 'இராமன் வந்த வினை நிரம்ப நோக்கினள்' என வேறொரு பொருளும் தோன்றநின்றது. தேவி தூய சிந்தையும் திரிந்து நல்லருள் துறந்ததால், முன் கண்கள் சிவப்புற நோக்கியமைக்கு மாறாக விரும்பினள் நோக்கினள்: 'எனக்கு நல்லையுமல்லை' என்றதற்கு மாறாக, 'எனை உவந்தனை' என்றாள்; "என் மகன் பரதன் தனக்கு நல்லையுமல்லை" என்றதற்கு மாறாக, 'இனியை என் மகனுக்கும்' என்றாள். 'வரன்முறை திறம்புதல் வழக்கோ' என்றதற்கு மாறாகப் "புனையு நீள்முடி பெறும்படி புகலுதி" என்றாள். விரும்பினள் முற்றெச்சம். (79)

கூனி, என் சொல்வழிநிற்பின் எளிது எனல்

**1575.** மாழை யுண்கணி யுரைசெயக்
கேட்டமந் தரையென்
தோழி வல்லளென் றுணைவல்ல
ளென்றடி தொழுதாள்

தாழு மன்னிலை யென்னுரை
தலைநிற்பி னுலகம்
ஏழு மேழுமுன் னொருமகற்
காக்குவெ னென்றாள்.

மாழை உண் கணி உரைசெயக் கேட்ட மந்தரை, ‘என்
தோழி வல்லள்! என் துணை வல்லள்!’ என்று அடி தொழுதாள்;
‘தாழும் மன் நிலை; என் உரை தலைநிற்பின், உலகம்
ஏழும் ஏழும் உன் ஒரு மகற்கு ஆக்குவென்;’ என்றாள்.

பொ :—மாவடுப் போன்ற மையுண்ட கண்களையுடைய கைகேயி இவ்வாறு சொல்லக் கேட்ட கூனி, ‘என் தோழி வல்லவள்! என் துணை வல்லவள்!’ என்று புகழ்ந்து கூறி அவள் அடியில் விழுந்து தொழுது ‘என் சொல்வழி நீ நின்றால் தயரதமன்னவனுடைய மனநிலை தோல்வியுறும்; பதினான்கு உலகங்களையும் உன் ஒரு மகன் பரதனுக்கு உரியவாகச் செய்வேன்’ என்று சொன்னாள்.

கு :—மாழை - மாவடு. இதன் பிளவே கண்ணிற்கு உவமையாவது: “மாவடு வகிரன்ன கண்ணி” (திருவாசகம் - அடைக்கலப் -8) என்பது காண்க. தொழுதாள் முற்றெச்சம். மன் - தயரதன். அவன் நிலையாவது, இராமனுக்கு முடி சூட்ட விரும்பிய நிலை. தாழ்தலாவது அவ்விருப்பம் முடிவு பெறாது போதல். மன்னிலை தாழும் என மாறுக. மன்னன் நிலைத் திருத்தலினின்று தாழ்ந்து இறந்துபடுவான் என வேறும் ஒருபொருள் தோற்றுவித்தல் காண்க. ‘உலகம் ஏழும் ஏழும்’ என்று உயர்வு நவிற்சியாகக் கூறினாள். பூலோக முதலிய மேலேழுலகங்களும் அதலம் விதல முதலிய கீழேழுலகங்களும் ஆகிய பதினான்கு என்க. (80)

கூனி கூறும் உபாயம் 1576-1577

**1576.** நாடி யொன்றுனக் குரைசெய்வெ
னளிர்மணி நகையாய்
தோடி வர்ந்ததார்ச் சம்பரன்
றொலைவுற்ற வேலை
ஆடல் வென்றியா னருளிய
வரமவை யிரண்டும்
கோடி யென்றன ளுள்ளமுங்
கோடிய கொடியாள்.

'நாடி ஒன்று உனக்கு உரைசெய்வென்,
நளிர் மணி நகையாய்!
தோடு இவர்ந்த தார்ச் சம்பரன்
தொலைவுற்ற வேலை,
ஆடல் வென்றியான் அருளிய
வரம் அவை இரண்டும்
கோடி' என்றனள், உள்ளமும்
கோடிய கொடியாள்.

பொ :—'குளிர்ந்த முத்துப்போன்ற பற்களையுடையாய்! ஆராய்ந்து பார்த்து ஓர் உபாயத்தை உனக்குச் சொல்வேன்; (அது யாதெனின்?) மலர்கள் பொருந்திய மாலையணிந்த சம்பரன் (நின்னுதவியால்) தொலைந்தபோது, போரில் வெற்றிபெற்ற தயரதன் மகிழ்ந்து உனக்குக் கொடுத்த வரங்கள் இரண்டையும் இப்பொழுது கொள்க' என்றனள்; உடம்புபோல் மனமும் கோணிய கொடியவளாகிய கூனி.

கு :—மனமொருக்கி நெடிது ஆராய்ந்துகண்ட முடிபு என்பாள் நாடி என்றும், பிறர்க்காயின் உரைசெய்யேன் என்பாள் "உனக்கு உரைசெய்வென்" என்றும் கூறினாள். கூனியின் கருத்தினைச் சிறப் புடையதாகக் கருதிக் கைகேயி மகிழ்ந்திருந்தநிலைமை தோன்ற, நளிர் மணி நகையாய் என்று விளித்தாள். நளிர்—குளிர்ச்சி. தோடு-இதழ்; ஆகுபெயராய் மலரை உணர்த்திற்று. இவர்தல்-பொருந்துதல். ஆடல்-போர். தயரதன் தானே மனமுவந்து கொடுத்த வரம் என்பது தோன்ற, 'அருளிய வரம்' என்றாள். வரமவை-வரங்களாகிய அவை. 'இரண்டும்' என்புழி உம்மை, முற்றுப் பொருளது. உள்ளமும் என்புழி உம்மை உடம்பும் கோணிய தன்மையைத் தழுவலின் இறந்தது தழீஇய எச்ச வும்மை. உடம்பும் உள்ளமும் பண்பும் கோடியவள் என்பார், "கொடி யாள்" என்று பெயர் கூறினார். (81)

1577. இருவ ரத்தினி லொன்றினு
லரசுகொண் டிராமன்
பெருவ னத்திடை யேழிரு
பருவங்கள் பெயர்ந்து
திரித ரச்செய்தி யொன்றினுற்
செழுநில மெல்லாம்
ஒருவ ழிப்படு முன்மகற்
குபாயமீ தென்றாள்.

'இரு வரத்தினில், ஒன்றினல் அரசு கொண்டு, இராமன்
பெரு வனத்திடை ஏழ் இரு பருவங்கள் பெயர்ந்து
திரிதரச் செய்தி ஒன்றினல்; செழுநிலம் எல்லாம்
ஒருவழிப்படும் உன் மகற்கு; உபாயம் ஈது' என்ருள்.

பொ :—'இரண்டு வரங்களில் ஒருவரத்தால் பரதனுக்கு அரசைப் பெற்றுக்கொண்டு, மற்ருெருவரத்தால் இராமன் பெரிய காட்டில் பதினன்கு ஆண்டுகள் சென்று திரியுமாறு செய்வாயாக; (அவ்வாறு செய்தால்) செழுமையான இவ்வுலக முழுமையும் உன்மகன் ஆளுகைக்குள் ஒருவழிப்படும்; உபாயம் இதுதான்' என்று சொன்னுள்.

கு :—கொண்டு என்னும் வினையெச்சம், செய்தி என்னும் முன்னிலை வினைகொண்டு முடிந்தது. பருவம்-ஆண்டு. பெயர்ந்து-நகரைவிட்டு நீங்கி. அரசுமட்டும் பெற்றுக்கொண்டு பரதனை அரசனுக்கினுலும் இராமன் அயோத்தியில் இருப்பானுயின் நாட்டுமக்கள் இராமன்பால் வைத்த பேரன்பினல் பரதனுக்கு அடங்காது அவனுக்குத் தீங்குசெய்யவும் கூடும்; ஆதலின் பதினலாண்டு காடுபுக்குத் திரியுமாறு செய்ய வேண்டும் என்ருள். இப்பதினன்காண்டில் மக்கள் மனநிலை மாறுபட்டுப் பரதனையே அரசனுக ஏற்று ஒருவழிப்படுவார்கள் என்பது அவள் கருத்து. அரசு பெறுவதினும் இராமனைக் காட்டிற்கு அனுப்புவதே கூனியின் உட்கோளாதலின் அதனை விரித்துக் கூறுகின்ருள். (82)

### கைகேயியின் உவகை

1578. உரைத்த கூனியை யுவந்தன
ளுயிருறத் தழுவி
நிரைத்த மாமணி யாரமு
நிதியமு நீட்டி
இரைத்த வேலைசூ ழுலகமென்
ஞெருமகற் கீந்தாய்
தரைக்கு நாயகன் றுயினி
நீயெனத் தணியா.

உரைத்த கூனியை உவந்தனள், உயிர் உறத் தழுவி,
நிரைத்த மா மணி ஆரமும் நிதியமும் நீட்டி,
'இரைத்த வேலை சூழ் உலகம் என் ஒரு மகற்கு ஈந்தாய்!
தரைக்கு நாயகன் தாய் இனி நீ; எனத் தணியா.'

பொ :—இவ்வாறு கூறிய கூனியை மகிழ்ந்து அவள் உயிரோடு தன்னுயிர் பொருந்துமாறு தழுவி வரிசைபடக் கோத்த சிறந்த மணி மாலையையும் செல்வத்தினையும் அவளுக்குக் கொடுத்துவிட்டு, "ஒலிக்கின்ற கடல்சூழ்ந்த இவ்வுலகத்தை என்னுடைய ஒருமகனுகிய பரதனுக்குக் கொடுத்தாய் ஆதலின், பூமிக்கு அரசனுகிய பரதனுக்குத் தாய் இனி நீயே எனத் தணிந்தவளாய்."

கு :—உவந்தனளாய் என முற்றெச்சமாக்குக. நீட்டுதல் இங்குக் கொடுத்தலை உணர்த்தியது. வேலைசூழுலகம் என்றது, நாட்டின் பரப்பை யுணர்த்தவேண்டி. ஒருமகன், ஒப்பற்றமகன் என்ற பொருளும் தோன்ற நின்றது. பெற்றதாயாகிய கைகேயி, பிறள்பெற்ற மகனுக்கு முடிசூட்ட இசைந்திருக்கவும் அவளைக்காட்டிலும் பரதனிடம் பற்றுள்ளவளாய் அவனுக்கு முடிசூட்ட வழிசெய்த தகுதியால் கூனியைத் "தரைக்குநாயகன் தாய் இனி நீ" என்ருள். 'ஈந்தாய்' என இறந்த காலத்தால் கூறியதும் பரதனைத் "தரைக்குநாயகன்" என்று கூறியதும் தரையைப் பெறுவது உறுதி என்ற துணிவுபற்றியேயாம். (83)

## கைகேயியின் உறுதிமொழி

**1579.** நன்று சொல்லினை நம்பியை
நளிர்முடி சூட்டல்
துன்று கானத்தி லிராமனைத்
துரத்தலிவ் விரண்டும்
அன்ற தாமெனி லரசன்முன்
ஞருயிர் துறந்து
பொன்றி நீங்குதல் புரிவென்யான்
போதிநீ யென்ருள்.

நன்று சொல்லினை! நம்பியை நளிர் முடி சூட்டல்,
துன்று கானத்தில் இராமனைத் துரத்தல், இவ் இரண்டும்
அன்று அது ஆம் எனில், அரசன் முன் ஆருயிர் துறந்து
பொன்றி நீங்குதல் புரிவென் யான்; போதி நீ' என்ருள்.

பொ :—'நன்ருகச் சொன்னுய்! பரதனுக்குப் பெரிய முடிசூட்டுதல்; இராமனை மரங்கள் அடர்ந்த காட்டுக்குத் துரத்துதல் ; இந்த இரண்டு செயல்களும் நிகழாமல் வேறுபடுமாயின் தயரதமன்னனுக்கு முன்பு என் அரிய உயிரை விடுத்து இறந்துபோதலைச் செய்வேன் யான் நீ போவாயாக!' என்று கூறினுள்.

கு :—தன் கருத்திற்குப் பொருத்தமான உபாயத்தைக் கூறினமையால், 'நன்று சொல்லினை' எனக் கைகேயி பாராட்டினுள். 'நம்பி' என்றது, பரதனை. "சூட்டல், துரத்தல் இவ்விரண்டும்" என வினைச் செவ்வெண் தொகைபெற்றுவந்தது. அன்றது என்புழி 'அது' பகுதிப் பொருள் விகுதி. அன்றும் எனின் என்க. அன்றுதல்-மாறுபடுதல். ஆருயிர் துறத்தலும் பொன்றுதலும் ஒருபொருளவே யெனினும் இறத்தல் உறுதி என்பதை வற்புறுத்தவேண்டி அவ்விருசொல்லானும் கூறியவாறு. 'பொன்றிநீங்குதல்' என்பது ஒருசொல்; இறந்து போதல் என்பதுபோல. 'போதி நீ' என்றது, அதுபற்றி ஐயுற்றுக் கவலற்க என்னுங் கருத்தினது. பரதனுக்கு முடிசூட்டலையும் இராமனைக் காட்டுக்குத் துரத்தலையும் என் உயிரினும் சிறந்தனவாக எண்ணுகின்றேன் என்பாள், "இவ்விரண்டும் அன்றதாமெனில் அரசன் முன் ஆருயிர் துறந்து பொன்றி நீங்குதல் புரிவென்" என்றுள். (84)

இப்பாடலோடு மந்தரைசூழ்ச்சிப்படலம் முற்றுப் பெற்று, இதன்பின் கைகேயி சூழ்வினைப் படலம் தொடங்குவதாக 12, 15, 21, 23, 43, 49 என்ற எண்ணுள்ள சுவடிகளில் அமைந்த முறை பொருத்தமுடையதாயிருத்தலால் அம்முறையினையே மேற்கொள்ளலாயிற்று.

மந்தரை சூழ்ச்சிப் படலம் முற்றிற்று.

---

# 3. கைகேயி சூழ்வினைப் படலம்.

கைகேயி, இராமன் முடிசூடுதலைத் தவிர்க்க ஆலோசித்துச் செய்த தீச்செயலைத் தெரிவிக்கும் பகுதியாகலின் இது, 'கைகேயி சூழ் வினைப் படலம்' என்று பெயர் பெறுகின்றது. கேகயநாட்டு மன்னன் மகள் ஆதலின் கைகேயி எனப்பட்டாள்; தந்தை பெயரடியாக வந்த பெயர். இப்படலத்திற்குச் சில சுவடிகளில், 'கைகேசிப் படலம்' என் றும் சில சுவடிகளில், 'முடிதவிர்த்த படலம்' என்றும் ஒரு சுவடியில் கைகேசி சூழ்வினையால் முடிதவிர்த்த படலம் என்றும் பெயர் காணப் படுகின்றது. 45 ஆம் பாடல்வரை 'சூழ்வினைப்படலம்' என்ற தலைப் பிலும், அதன் பிற்பகுதி 'விடைபெறு படலம்' என்ற தலைப்பிலும் ஒரு சுவடியில் காணப்படுகின்றது. அதில், 'விழுந்து பார்மிசை' என்று தொடங்கும் புதிய பாடலோடு இப்படலம் முடிவுபெறுகிறது.

## படலக் கதைச் சுருக்கம்

கூனியின் கலகத்தால் மனம் மாறுபட்ட கைகேயி, தலைவிரிகோலத் துடன் தரையில் கிடக்கின்றாள். தயரதன், முடிசூட்டுவிழாவின் ஏற்பாடு களால் காலம் தாழ்த்து நள்ளிரவில் கைகேயியின் மாளிகைக்கு வருகின் றான். இராமன்முடிசூட்டுவிழா நிகழ்ச்சியைக் கைகேயிக்குத் தெரிவிக்க விரைந்துவந்தவன், அவள் தரையில் புரண்டு கரையில் துயர் எய்துவதைக் கண்டு தரியானாய் மனம் நடுங்கி, என்ன நேர்ந்ததோ என அவளை எடுக்கத் தொடங்க, அவள் கைகளை விடுவித்துக்கொண்டு தரையில் விழுந்து பெருமூச்சு விடுகின்றாள் கைகேயி. அதைக் கண்ட தயரதன், அஞ்சி, 'வஞ்சி! என்ன நிகழ்ந்தது? உன்னை இகழ்ந்தவர் யாவரேயாயினும் மாள்வர்! உற்றதைச் சொல்; சொன்னபின் என் செயல் காண்க' என்று கூறுகின்றான். அதுகேட்ட கைகேயி, கண் களில் நீர்வார, "என்னிடம் உமக்கு அன்பிருப்பது உண்மையாயின் முன்பு கொடுத்த வரத்தை அன்புடன் அளிமின்" என்கின்றாள். அவள் வஞ்சனை யுணராத மன்னன், சிரித்துக்கொண்டே 'நீ வேண்டியதை இராமன் ஆணையாகத் தருகின்றேன்' என்கின்றான். 'வரம் இரண்டில்: ஒரு வரத்தால் என் மகன் பரதன் பாராள, மற்றொரு வரத்தால் இராமன் காடாளச் செய்க' என்று கைகேயி தன் கருத்தைப் புலப்படுத்துகின் றாள். அது கேட்ட தயரதன், பாம்புதீண்ட வேகம் அடங்கி விழும் யானை போல் தேம்பி வீழ்கின்றான்; புரளுகின்றான்; பெருமூச்சு விடுகின்றான்; வெந்த புண்ணில் வேல் நுழையப்பெற்ற யானைபோல் வருந்துகின் றான். அவன் அல்லல் கண்டும் மனம் இரங்காது கைகேயி நிற்பதைக் கண்டு, 'நீ திகைத்தது உண்டோ? அல்லது வஞ்சகர் யாரேனும்

உனக்குக் கற்பித்த வஞ்சகமுண்டோ?' என்று வினவுகின்றான். 'யான் திகைக்கவுமில்லை; தீயோர் எனக்கு வந்து இசைக்கவுமில்லை; வரம் தந்தால் கொள்வேன்; இன்றேல் மாள்வேன்' என்று கைகேயி கூறுகின்றாள். அதுகேட்ட மன்னன் மிக வருந்திக் கைகேயியைப் பழிக்கின்றான்; கொல்லவும் எண்ணுகின்றான். பின்னர் அவளை இரந்துகேட்டால் பயன் கிடைக்கலாம் என்று எண்ணி, அவள் கால்மேல் வீழ்ந்து, 'மண்ணே கொள் நீ, மற்றைய தொன்று மற' என்று இரந்து வேண்டுகின்றான். இராமன் நீங்கினால் என் ஆருயிர் நீங்கும்; ஆதலின் இராமன் இந்த நாடு கடவாது இருக்க வரம் நல்குவாய் என்று கெஞ்சிக் கேட்கின்றான். கைகேயியின் மனம் இரங்கவில்லை; அவள் வஞ்சத் தன்மையை நெஞ்சில் நினைந்து செய்வதறியாது திகைக்கின்றான். 'வரந் தரவில்லையாயின் யான் உயிர்மாய்வேன்' என்று கைகேயி கூறும் கடு மொழியைக் கேட்டு அஞ்சிய மன்னன், 'ஈந்தேன் வரம்; என் மகன் கானாள யான்போய் வானாள்வேன்; நீ, நின்மகனோடு பழிக்கடலில் வீழ்ந்து நீந்துக' என்று சொல்லிவிட்டு மூர்ச்சையுறுகின்றான். தன் எண்ணம் முற்றியது என்ற மகிழ்ச்சியொடு கைகேயி துயில்கின்றாள்.

இரவு கழிகின்றது; பொழுது புலர்கின்றது, முடிபுனை விழாக் காண நகரமக்களும் பிறரும் அழகு செய்துகொண்டு வந்து திரள்கின்றனர். மன்னர்களும் மகிழ்ச்சியுடன் மணிமுடி சூட்டும் மண்டபத்தை அடைகின்றனர். வசிட்டன், முடிசூட்டுதற்கு வேண்டியவற்றை எடுத்துக் கொண்டு அந்தணர் பலருடன் வந்து தோன்றுகின்றான். 'முடிசூடுதற் குரிய நன் முழுத்தம் வந்துவிட்டது' என்று சோதிடர் கூறக்கேட்ட வசிட்டன், மன்னவனை விரைவில் அழைத்துவருக எனச் சுமந்திரனிடம் கூறுகின்றான். சுமந்திரன் மகிழ்ச்சியுடன் விரைந்து தயரதன் இருக்கும் கைகேயி மாளிகையை அடைகின்றான். கைகேயி, 'இராமனை இங்கு அழைத்து வருக' என்றாளாகச் சுமந்திரன், முடிசூடுமுன் இராமனைக் கண்டு வாழ்த்துக் கூறவே அழைப்பதாக எண்ணி மகிழ்ந்து, இராமனை அடைகின்றான்; அடக்கத்துடன் நின்று, சிற்றன்னையின் விருப்பத்தைத் தெரிவித்து, 'மகுடம் சூட விரைந்துவருக' என அழைக்கின்றான். இராமபிரானும் நாராயணனை வணங்கிவிட்டு, அரசர் பலர் சூழ, வாத்தியங்கள் பல ஒலிக்கத் தேரில் ஏறி மகிழ்ச்சியோடு அரண்மனையை அடைகின்றான். தயரதன் அங்கு இன்மை தெரிந்து கைகேயி மாளிகையை அடைகின்றான். தந்தையை நாடி வருகின்ற இராமனுக்கு எதிரே கைகேயி வந்து, தன்னை வணங்கி வாய்புதைத்து நின்ற இராமனிடம், 'மன்னவன் உனக்குச் சொன்ன ஏவல் ஒன்று உளது; யான் கூறலாம் என்றால் கூறுகின்றேன்' என்கின்றாள். "தந்தையே ஏவத் தாயாகிய நீரே சொல்லவாய்த்தால் யான் உய்ந்துவிட்டேன்; இதன்மேல் உறுதி யாதுளது? நும்பணி தலைமேற் கொள்கின்றேன்; பணிமின்" என்கின்றான் இராமன். 'பரதன்

பாராள, நீ கான் புகுந்து புண்ணியத் துறைகளாடி ஈரேழாண்டு கழித்து வருக என மன்னவன் ஏவினன்' என்கின்றாள் கைகேயி. அதுகேட்ட இராமன், இராச்சிய பாரம் நீங்கியது பற்றிப் பெரிதும் மகிழ்ந்து முகம் மிக மலர்கின்றான். மன்னவன்பணியன்றாயினும் நும் பணி மறுப்பேனோ? நும்பணி தலைமேற்கொண்டேன்; போகின்றேன்; நும்பால் விடையும் கொண்டேன், என்று கூறிப் புறப்படுகின்றான்.

## கம்பர், வான்மீகத்தொடு வேறுபடும் இடங்கள்.

இந்தக் கைகேயி சூழ்வினைப் படலத்தில் கம்பர் வான்மீகத்தோடு வேறுபடும் இடங்கள் பல காணப்படுகின்றன. ஆனால் அவை யாவும் சிறுசிறு வேறுபாடுகளே அன்றி எடுத்துக் கூறுதற்குரிய இன்றியமையாச் சிறப்புடையனவல்ல. சிறப்பான வேறுபாடுகள் சிலமட்டும் இங்குக் குறிப்பிடப்படுகின்றன.

"முடிசூடும் மண்டபத்திலிருந்து வசிட்டனால் அனுப்பப்பட்ட சுமந்திரன், தயரதன் இருக்கும் இடத்துக்கு நேரே சென்று அம்மன்னவன் மகிழ்ச்சியுடன் உறங்குவதாக எண்ணிப் புகழ்மொழிகள் கூறி எழுப்பினனாக, மன்னவன் வெகுண்டு 'நின் புகழ்மொழிகளால் என் துன்பத்தை மிகுதிப் படுத்தாதே' என்று வெறுத்துக்கூறச் சுமந்திரன் அஞ்சி ஒதுங்கிநின்று, மன்னவன் வருத்தத்திற்குக் காரணம் அறிய அவாவி இருந்தானாகக் கைகேயி, "இராமன்பால் உள்ள பாசத்தால் மன்னன் இரவுமுழுவதும் உறக்கமின்றி இருந்தமையால் சிறிது உடல் நலமின்றி இருக்கின்றார்; நீ சென்று இராமனை விரைவில் அழைத்து வருக" என்று கூறினாள். அது கேட்டுச் சுமந்திரன் அவள் இராமன்பால் உள்ள அன்புள்ளத்தால் அவ்வாறு கூறினாள் எனக் கொண்டு மகிழ்ந்து இராமன் மாளிகைக்குப் போகும்போது வழியில் முடிசூடும் மண்டபத்தில் குழுமியிருந்த பெரியோர் பலர், முடிசூடும் முழுத்தம் வந்தும் முடிமன்னன் கடிது வாராமைக்குக் காரணம் வினவச் சுமந்திரன், மன்னவனைக் கேட்டுச் சொல்வதாக மீட்டும் தயரதனை அடைந்தானாக, அத்தயரதன், 'இராமனை விரைவில் அழைத்து வாராது ஏன் வந்தாய்?' என்று வெகுண்டு கேட்கச் சுமந்திரன், பணிந்து உடனே அழைத்துவருவதாகக் கூறி இராமன் மாளிகைக்குச் சென்று இராமனுக்குத் தந்தையின் கட்டளையைத் தெரிவிக்க, அவ்விராமன், 'தந்தையழைத்தது நல்லன பல சொல்லவே' என எண்ணி மகிழ்ந்து 'இராணி ஆகும் பேறு பெற்றுளாய்' எனச் சீதையைப் புகழ்ந்து விடைபெற்றுக்கொண்டு இலக்குவனோடு சுமந்திரன் தேரில் ஏறி, தயரதன் மாளிகையை அடைந்தான்" என்று வான்மீகம் கூறுகிறது.

"வசிட்டனால் அனுப்பப் பெற்ற சுமந்திரன், கைகேயியின் மாளிகைக்குச் சென்று, பணிப் பெண்டிர்பால் தன்வருகையை மன்னர்க்குத்

தெரிவிக்குமாறு கூற, அவ்வாறே தெரிவிக்க வந்த அப் பணிப்பெண்டி ரிடம் கைகேயி, 'இராமனைக் கொணர்க' என்று சுமந்திரனுக்குத் தெரிவிக்குமாறு சொல்ல, அப் பணிப்பெண்டிர்வழியே கைகேயியின் கட்டளையை அறிந்து, இராமன்பால் உள்ள அன்பால் அழைப்பதாக எண்ணி மகிழ்ந்து, நாராயணன் கோயிலில் தியானத்தில் இருந்த இராமனை அணுகிச் சிற்றன்னையின் கட்டளையைக் கூற அவ்விராமன், ஆயிரமௌலியான் சேவடியைச் சென்னியில் சூடி வணங்கிச் சுமந்தி ரன் தேரில் கைகேயி மாளிகைக்குச் சென்றான்" என்று கம்பர் கூறி யுள்ளார்.

சுமந்திரன், தயரதனையும் கைகேயியையும் நேரில் கண்டு பேசிய தாகவோ, இரண்டாவது முறையும் சுமந்திரன் தயரதனைக் கண்ட தாகவோ, இராமனை அழைத்துவரத் தயரதனே கட்டளையிட்டதாகவோ, கம்பர் கூறவில்லை. இராமன் சீதையுடன் தன் மாளிகையில் இருக் கும் பொழுது சுமந்திரன் கண்டு மன்னன் கட்டளையைக் கூறியதாக வும் அதையுணர்ந்த இராமன், சீதையிடம் அவள் இராணியாகப் போகும் பாக்கியத்தைப் பற்றிக் கூறியதாகவும் முதல் நூல் கூறக் கம்பர், ஆயிரமௌலியான் ஆலயத்தில் தியானத்திலிருந்த இராமனைக் கண்டு சுமந்திரன் கைகேயியின் கட்டளையைத் தெரிவிக்கத் தேரில் புறப்பட்டு இராமன் கைகேயி மனைக்கு வந்ததாகக் கூறியுள் ளார். செல்வக் காலத்து மகிழ்தல் மக்களுக்குப் பொருந்துமேயன் றித் தெய்வத்தன்மையுடைய இராமனுக்குப் பொருந்தாது என்ற கருத்தால் சீதையுடன் இராமன் பேசிய மகிழுரைகளைக் கம்பர் கூறாதுவிடுத்தார்போலும். இலக்குவனும் இராமனுடன் கைகேயி மனைக்குச் சென்றதாகக் கம்பர் கூறவில்லை. பின்னர் அவ்விலக்கு வனே இராமன் வனம் புகுவதைக் கேள்விப்பட்டு வெகுண்டதாகக் கூறுவதே சிறப்பு என்ற கருத்தால் செய்த மாற்றமாக இருக்கலாம்.

இராமன், அந்தப்புரத்தில் தந்தை வருந்திக்கொண்டு மஞ்சத் தில் அமர்ந்திருக்கும் அறைக்கு நேரே சென்று தான் வணங்கவும், மகிழ்ச்சிகொள்ளாமலும் கண்குளிர நோக்காமலும் மனக்கவலை மிக் கிருந்த தந்தையின் துயர்நிலைக்குக் காரணம் யாதென்று அறியாது சிற்றன்னையை வினவ, அக் கைகேயி, "தான்கேட்ட வரத்தைக் கொடுப்பதாக முன் வாக்களித்துவிட்டுப் பின் அவ்வரம் தன் விருப் பத்திற்கு மாறாக இருப்பதால் அதை நின்னிடம் கூறமுடியாமல் வருந் திக்கொண்டிருக்கின்றார். உனக்குத் துன்பம் வருமே என்ற கார ணத்தால் உன்னிடம் சொல்லாமல் உன்பால் உள்ள பேரன்பால் மாழ்குகின்றார். இவர் எனக்கு வாக்களித்ததைச் செய்து முடிக்க வேண் டியவன் நீயே யாவாய். முன்னொருகாலத்து யான்செய்த உதவிக்கு உவந்துகொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றுவதாகச்சொல்லிவிட்டுப்

பின் கழிவிரக்கம் கொள்கின்றார். மன்னவர் உன்னிடம் வைத்த பேரன்பால் தருமநெறியைப் பயன் அற்றதாகச் செய்ய நினைக்கின்றார். சொல் தவறாமையே வீட்டிற்கு வாயில் ஆகும்; நினக்கு நன்மை செய்யவேண்டும் என்ற காரணத்தால் அந்த வாய்மையறத்தைக் கடத்தல் ஆகுமோ? விரும்பத்தக்கதாயினும் அதற்கு மாறுபட்டதாயினும் நுந்தை உடன்பட்டதை நீ இப்பொழுதே செய்து முடிப்பதாயின் விளங்கச் சொல்கின்றேன். உன்னிடம் இவர் உரைசெய்ய மாட்டார். இவரால் வாக்களிக்கப்பட்டது நின்னால் பயனற்றதாகச் செய்யப்படமாட்டாது என்பது உறுதியாயின் யான் சொல்கின்றேன்" என்றாள்.

இராமன் அதைக் கேட்டு, "தந்தையார் கட்டளை என்றால் நெருப்பிலும் குதிப்பேன்; நஞ்சையும் உண்பேன்; கடலிலும் வீழ்வேன்; அத்தகைய அன்புள்ள என்பால் நீர் ஐயம் கொள்ளல் ஆமோ? அது, எனக்கு மானக்கேட்டைத் தருவதொன்றாகும். 'இராமன், முன்னொன்று கூறிப் பின்னொன்று பேசமாட்டான்'. சக்கரவர்த்தியாரின் திருவுளத்தில் இருக்கும் கட்டளை இன்னது என்பதைத் தாங்கள் தெரிவித்தால் யான் உடனே செய்வேன் என்பதை உறுதியாகக் கூறுகின்றேன்" என்றான்.

"இராம! முன்பு ஒரு காலத்தில் தேவர்க்கும் அசுரர்க்கும் நடந்த போரில் நின் தந்தையார், தேவர்க்குத் துணையாய்ப் போர் செய்த காலத்துப் பகைவர் படைகளால் புண்பட்டு வருந்தும்போது யான் உதவி செய்து பாதுகாத்தமைக்கு அவர் பரிந்தளித்த வரங்கள் இரண்டு; அவ்வரங்களின்படி தற்காலம் மட்டும் நீ தண்டகாரணியத்தில் வசிக்க வேண்டும் எனவும், பரதன் பாராளவேண்டும் எனவும் நின் தந்தையார் கேட்டுக்கொள்ளப்பட்டார். மக்களுள் சிறந்த இராம! மனக் கவலை கொண்டுள்ள நின் தந்தையாரை நீ வாய்மையுடையராக ஆக்க வேண்டும் என்று கருதுவாயாயின், இந்தக் கட்டளையை நிறைவேற்றுவதில் முயற்சியுள்ளவனாகுக. நீ, ஒன்பதோடு கூடிய ஐந்தாண்டுகள் காட்டில் வாழ்தல்வேண்டும் என்பது அவர் உடன்பட்டதாகும். எனவே இம் மணிமுடி வெறுத்துச் சடைமுடி தரித்து மான்தோல் உடுத்து ஏழொடு சேர்ந்த ஏழாண்டுகள் தண்டக வனத்தில் தங்கி வருக. பரதன், உனக்குப் பதிலாகப் பாராள்க. சக்கரவர்த்தியார் நின்பால் வைத்த பாசத்தால் சோகமிக்கு முகவொளி குன்றி உன்னைக் கண்களாற் பார்க்கவும் இயலாமல் இருக்கின்றார். அவருடைய கட்டளையைச் செய்து முடிக்கின்ற பெரிய அறச்செயலால் அவரைப் பெருந்துன்பத்திலிருந்து விலக்குவாயாக" என்றாள் கைகேயி.

அவளது கடுமையான கட்டளையைக் கேட்டும் இராமன், சிறிதும் மன வருத்தம் கொள்ளாமலிருந்தான். ஆனால் சக்கரவர்த்தியோ மகவன்பால்

மனந்தளர்ந்து முன்னையினும் இன்னல் பெரிதுற்றனர். பெரும் பகை தாங்கும் பெற்றியனுகிய இராமன், மரணத்திற் கீடான அவள் கட்டளையைத் தலைமேற்கொண்டு மனக் கவலை தினைத்துணையும் கொள்ளாது, “அன்னையே! நும் விருப்பப்படி சடைமுடி தாங்கி வனத் திற்குப் புறப்படுகின்றேன்; எதற்கும் சலியாத மனவலியுடைய என் தந்தையார், எப்பொழுதும்போல் என்பால் அன்பு காட்டாதது என்னே? பரதனுக்கு முடிசூட்ட வேண்டும் என எனக்கு ஐயம் நீங்கக் கட்டளையிடவில்லையே என்ற ஏக்கந்தான் என் நெஞ்சைப் பிளக் கின்றது. அவர் கட்டளையின்படி என் தம்பி பரதனுக்கு அரசு முதல் எல்லாவற்றையும் ஒப்புவித்திடுவேன். சக்கரவர்த்தியார் பூமியையே பார்த்துக்கொண்டு கண்ணீர்விட்டு வருந்துகிருர். நீங்களாவது இனி அவரைச் சமாதானம் செய்தருள்வீராக. தூதுவர்கள், சக்கரவர்த்தியின் கட்டளையைப் பெற்றுக்கொண்டு, விரைந்து செல்லும் குதிரைகளில் ஏறி மாமன் வீட்டிற்குச் சென்று பரதனை அழைத்து வர இப்பொழுதே பயண மாவார்களாக. தந்தையாரின் கட்டளையைப் பற்றி யாதும் ஆராயாது, முதலில் செய்ய வேண்டிய கடமையாகத் தலைமேற்கொண்டு இப்பொழுதே தண்டகாரணியத்திற்குப் புறப்படுகின்றேன்” என்ருன்.

இராமன் சொல்லைக் கேட்ட கைகேயி, தன் எண்ணம் கைகூடு வதை யுணர்ந்து மகிழ்வுற்ருள். “இராம! நீ கூறியவாறே தூதுவர்கள் பரதனை அழைக்க விரைவார்கள். அதற்காக நின் பயணம் தடையுற வேண்டியது இல்லை. சக்கரவர்த்தியார் நின்பால் உள்ள பாசத்தால் ஏற்பட்ட தளர்ச்சியினுல் உன்னிடம் பேசமுடியாமல் இருக்கின்ருர். அவர் பேசாமைக்கு வேறு காரணம் ஏதும் இல்லை. இந் நகரிலிருந்து நீ காட்டிற்குப் புறப்படும்வரையில் நின் தந்தையார் நீராடார்; உணவும் கொள்ளார்” என்ருள் கைகேயி.

அவள் சொல்லைக் கேட்ட சக்கரவர்த்தியார் அளவு கடந்த துன்பத் தால் மூர்ச்சையுற்று மஞ்சத்தில் வீழ்ந்துவிட்டார். மூர்ச்சையுற்று வீழ்ந்த தந்தையாரை இராமன் உபசரித்து உட்காரச் செய்கின்ற பொழுதும், கைகேயி, குதிரையைச் சவுக்கால் அடித்துத் துரத்துவது போலக் கடுஞ்சொல்லால் இராமனைக் காட்டிற்குப் போகுமாறு விரைவு படுத்தினுள். அதை யுணர்ந்த இராமன், “தந்தையின் கட்டளையை என் உயிரைக் கொடுத்தேனும் செய்துமுடிப்பேன்; என் தந்தையா ரிடத்தில் நேரில் கட்டளைபெருமல்போனுலும் தாயாகிய நும் கட்டளை யென்ற காரணத்தால் பதினுன்கு ஆண்டுகள் காட்டில் வாழ்வேன். எனக்குக் கட்டளையிடச் சக்கரவர்த்தியிடம் உரிமை பெற்ற நீங்கள் எனக்குப் பெருங்குணம் உண்டு என்பதைச் சிறிதும் சிந்தியாமல் இவ்வாறு கூறுகின்றீர்கள். என் அன்னையார் திருவடிகளை வணங்கி இதோ விடைபெற்றுக்கொண்டு சீதைக்கு இனிய மொழி சொல்லி இங்கு இருக்கச்செய்துவிட்டு இன்றே இட்சுவாகுவின்பிள்ளையாகிய

தண்டகனுக்குரிமையுள்ள காட்டிற்குப் பயணமாகின்றேன். பரதன் தந்தையார்க்குப் பணிபுரிந்துகொண்டு நாட்டை ஆள்வானாக" என்று கூறினான். அதைக் கேட்ட தயரதன் அடக்க முடியாத துக்கத்தால் உரத்த குரலுடன் வாய்விட்டுப் புலம்பிப் பின்னும் மூர்ச்சையுற்றான். அப்பொழுது இராமன், அத் தந்தையாரின் திருவடிகளிலும் சிற்றன்னையாரின் திருவடிகளிலும் வணங்கிவிட்டுப் புறப்பட்டான்" என்று வான்மீகம் கூறுகின்றது.

இந்த விரிந்த உரையாடல்களைக் கம்பர் கூறவேயில்லை; இராமன் தயரதனைக் காணாதபடி கைகேயியே முற்பட்டு வந்து 'நின் தந்தையின் கட்டளை இது' என்று கூற, இராமன் ஏற்றுக் கொண்டு உடனே புறப்பட்டதாகக் கூறியுள்ளார். தயரதன் கைகேயி சொல்லால் கட்டுண்டு இராமனைக் கண்களால் கண்டும் ஒன்றும் கூற இயலாது வாளா இருக்கும் அவலநிலையையும், அவ்விராமன் பிரிதலைக் கண்டும் தடுக்க இயலாது தவிக்கும் நிலையையும் விவரிக்க மனமிலாது கம்பர் விடுத்திருக்கவேண்டும். வான்மீகி இராமனை மக்களுள் சிறந்தோனாகக் காட்டக் கம்பர் அவனைத் தேவரினும் சிறந்தோனாகவே நமக்குக் காட்டிச் செல்கின்றார்.

" ஆழிசூ ழுலக மெல்லாம் பரதனே யாள நீபோய்த்
தாழிருஞ் சடைகள் தாங்கித் தாங்கருந் தவமேற் கொண்டு
பூழிவெங் கான நண்ணிப் புண்ணியத் துறைக ளாடி
ஏழிரண் டாண்டின் வாவென் றேவினன் அரசன்"

என்ற கைகேயியின் சொல்லைக் கேட்டதும் அப்பொழுது அலர்ந்த செந்தாமரையினை வெல்லும் வகையில் இராமன் முகம் மிக மலர்தலும் அரசபாரம் நீங்கியதென்று அக மிக மகிழ்தலும் ஆகிய கம்பரின் கற்பனைகள் மனிதத்தன்மைக்கு அப்பாற்பட்டனவேயாதல் காண்க.

## படலப் பொருட் சிறப்பு

என்றும் எதிர்பாராத நிலையில் கைகேயி வரங்களைக் கேட்டவுடன் தயரதன் துணுக்கமுற்று வீழ்தலுக்குப் பாம்பு தீண்டி வீழ்ந்த யானையை உவமை கூறியிருத்தலும், பின் நான்கு பாடல்களில் அவன் உரையாடாது அடைந்த துன்பமுணர்த்தும் மெய்ப்பாடுகளைக் கன்னெஞ்சும் கரையும்வண்ணம் முறைப்படுத்தி யுரைத்திருத்தலும் மிகுசிறப்புடையன. துன்பம் தாங்கமாட்டாது திடுக்கிட்டு வீழ்ந்தவன், அத்துன்ப நிலையை எண்ணி எண்ணித் தரையிற் புரளுதலும், வெம்மையாகப் பெருமூச்சு விடுதலும், நாவறட்சியடைதலும், கண்ணீர் சொரிதலும், செய்வதறியாது திகைத்தலும், திகைப்பு மிகுதியால் கண் முதலிய அறிதற் கருவிகள் செயற்படாது கலங்குதலும், உயிர் நீங்குவது போன்ற நிலையுண்டாதலும், சிறிது நேர அமைதிக்குப்

பின் விழுந்தவன் எழுந்து நிலத்திலிருத்தலும், பின் ஆற்ருது வீழ் தலும் அத்துன்பத்திற்குக் காரணமாயிருந்தவளைப் பற்றித் தாக்க எண் ணுதலும், பழைய அன்பினை நினைந்து ஆவி பதைத்தலும் பெண் என்று அஞ்சுதலும் அவளைக் கொன்ருல் வரும் பெரும்பழிக்கு நாணுதலும் பின் எழுந்து உள்ளத்து நிறைந்த துன்பவெப்பத்தோடு பெருமூச்சு விட்டுக்கொண்டு உலாவுதலும், பின் தன்னை மறந்திருத்தலும் துன்பத் தின் பலவகைப் படிகளாய் இயல்பாக நிகழத்தக்கனவாய் படிப் போர்க்கும் துன்ப வுணர்ச்சிகளை யெழுப்புமாறு அமைந்துள்ள அருமை நினைத்தொறும் வியத்தற்குரியதாகவுள்ளது. இந்த மெய்ப்பாடுகளை நாடக அரங்கில் ஒருவன் நடித்துக்காட்டக் காண்பது போன்ற உணர்ச்சி யைக் கம்பர் கவிகள் எழுப்புகின்றமை காண்மின்! 'துன்ப வுணர்ச்சியின் மேல்வரம்பில் தயரதன் உளன்' என்பது உணர்த்த இறுதியில், வெந்த புண்ணில் வேல் நுழையும்போது உழைக்கும் யானையை அவனுக்கு உவமை கூறியிருத்தல் மிகப் பொருத்தமாக வுள்ளது.

தயரதனுடைய இந்தத் துன்பநிலை கண்டும் கலங்காத கல் நெஞ்ச முடையளாய் அவன் சாமம் தானம் பேதம் தண்டம் என்ற நால்வகை உபாயத்தாலும் கூறிய சொற்களால் சிறிதும் மனம் மாருதவளாய் வன் னெஞ்சிற்கு மேல்வரம்பாய்க் கைகேயியைக் காட்டியிருத்தல் வியத்தகு சிறப்புடையது.

பொழுது புலர்ந்தமை யுணர்த்தப் புகுந்து இரவு நீங்குதல், கோழி கூவுதல், பறவைகள் ஒலித்தல், யானை துயிலெழுதல், விண்மீன்கள் மறைதல், காலை முரசு ஒலித்தல் முதலிய நிகழ்ச்சிகளைக் கதைத் தொடர் புடையனவாகத் தற்குறிப்பேற்றத்தாற் கம்பர் கூறும் கற்பனைகள் படிக்குந்தொறும் சுவைமிகப் பயக்கும் நயமிகவுடையன. இக் கற்பனை கள் வான்மீகத்தில் காணப்படாதவை.

இரவெல்லாம் கைகேயியின் செயலால் தயரதன் அடைந்த அவல நிலையை யுணர்த்திய கம்பர், அவ்வவலச் சுவைக்குத் தொடர்புடைய தாகப் பொழுதுபுலர்தல்பற்றிய வருணனையைக் கூறிப் பகற்காலம் தொடங்கியவுடன் நகர மக்களின் பெரு மகிழ்ச்சியைப் பல்வகையாக உணர்த்திப் படிப்போரை அழுகைச் சுவையிலும் மருட்கைச் சுவையிலும் உவகைச் சுவையிலும் மாற்றி மாற்றி ஆழ்த்துவதாக உள்ளமை காணின் அவர் உளநூற்புலமையை உள்ளவாறு உணரலாம். ஓரிடத்தில் முளைத்த பூங்கொடி பிறிதோரிடத்தில் படர்ந்து மலர்தல் போலக் கம்பர், மந்திரப் படலத்தில் கூறிய சில கருத்துக்களை இக் கைகேயிசூழ்வினைப்படலத் தில் மக்கள் உரையாடலில்வைத்து விளக்கியிருத்தல், இலக்கிய நயந் தேரும் நலத்தகு புலவர்க்கு உலப்பில் இன்பம் பயப்பதாகும்.

மந்திரப்படலத்தில் இராமனுக்கு முடிசூட முடிவு செய்துள்ளதை உணர்த்திய தயரதனுக்கு மன்னர்கள் கூறுவதாகப் புலப்படுத்திய, “இவ்வுலகத்தோர், ‘நின்மகற்கு வைகலும் ஈனமில் செல்வம் வந்து இயைக’ என்ற எண்ணத்தால்தான் தானமும் தருமமும் தவமும் செய்கின்றார்கள்” (1479) என்ற கருத்தைப் பொதுமக்கள் கூறுவதாக இப்படலத்தில்

“‘ஐந்தவித் தரிதிற் செய்த தவமுனக்காக’ என்பார்;
‘பைந்துழாய்த் தெரியலாய்க்கே நல்வினை பயக்க’ என்பார்” (88)

என விவரித்திருத்தலும், அங்கு வசிட்டன் தயரதனுக்குக் கூறிய, உன்னுயிர்க்கென நல்லன் மன்னுயிர்க்கெலாம் உரவோய்” என்ற கருத்தை, மக்களின் அன்புணர்ந்த சுமந்திரன் மூலமாக,

“கொற்றவர் முனிவர் மற்றுங் குவலயத்துள்ளோ ருன்னைப்
பெற்றவன்தன்னைப் போலப் பெரும்பரி வியற்றி நின்றார்” (81)

எனப் புலப்படுத்தியிருத்தலும் நோக்கி உணர்க.

“மைந்த நீ கோடியெங்கள் வாழ்க்கைநாள் யாவும்” என்பார் (88) என்ற கருத்து, “யான்வாழு நாளும் பண்ணன் வாழிய” (புறநா-173) என்ற சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் கூற்றினை நினைவுறுத்திக் கம்பரின் சங்க நூற்புலமையைப் புலப்படுத்தல் காண்க. இராமன்பால் பொதுமக்கட்கு உள்ள அன்பு இத்தகையது என்பதை அம்மக்கள்வாயிலாகவே உணர்த்தியுள்ள கருத்துக்கள் மிக்க சிறப்புடையவை.

---

# 3. கைகேயி சூழ்வினைப் படலம்

## கைகேயி அலங்காரத்தை அழித்தல் 1580-1583

**1580.** கூனி போனபின் குலமலர்க்
குப்பைநின் றிழிந்தாள்
சோனை வார்குழற் கற்றையிற்
சொருகிய மாலை
வான வார்மழை நுழைதரு
மதிபிதிர்ப் பாள்போல்
தேன வாவுறு வண்டின
மலமரச் சிதைத்தாள்.

கூனி போனபின், குல மலர்க் குப்பைநின்று இழிந்தாள்;
சோனை வார் குழல் கற்றையில் சொருகிய மாலை,
வான வார் மழை நுழைதரு மதி பிதிர்ப்பாள் போல்,
தேன் அவாவுறு வண்டினம் அலமரச், சிதைத்தாள்.

பொ :—கூனி போன பிறகு சிறந்த மலர்க்குவியலையுடைய கட்டிலி லிருந்து இறங்கி, விடாமழைபெய்யும் மேகம்போன்ற நீண்ட கூந்தற் கற்றையில் சொருகியிருந்த மாலையை, வானத்திலுள்ள நீண்ட மேகத் தில் நுழையும் சந்திரனை உதிர்ப்பவள்போலத் தேனை விரும்புகின்ற வண்டின்கூட்டம் அலையுமாறு சிதைத்தாள்.

கு :—கட்டிலில் பரப்பியிருந்த மலர்களின் மிகுதி தோன்றக் 'குல மலர்க்குப்பை' என்றார். குப்பை-குவியல். மலர்க் குவியலையுடைய கட்டிலிலிருந்து இறங்கினாள் என்பார், ஒற்றுமை நயத்தால் மலர்க் குப்பை நின்றிழிந்தாள் என்றார். இழிந்தாள், முற்றெச்சம். சோனை-விடாமழை; ஆகுபெயராய் மேகத்தை உணர்த்திற்று. மாலை சிதைத்தாள்; என்க. 'மழை நுழைதரு மதி பிதிர்ப்பாள்போல்' என் றது, தற்குறிப்பேற்றம். மழை கூந்தலுக்கும் மதி மாலைக்கும் உவமை. நாட்டுமக்கள் அவாவுகின்ற இராமன் முடிபுனைவிழாவை அவர்கள் அலமரத் தடுத்துச் சிதைக்கும் எண்ணமுடைய கைகேயி, தேனை விரும்பும் வண்டுகள் அத்தேனைப் பெறாது அலைய மாலையைச் சிதைப்ப தாகக் கூறியது பொருத்தமான குறிப்பாதல் காண்க.

இச்செய்யுள்முதல் நான்கு செய்யுட்களை மந்தரைசூழ்ச்சிப்படலத்திற் சேர்த்தே பலர் அச்சிட்டுள்ளனர். 12, 15, 21, 23, 43, 49, என்ற எண்ணுள்ள ஆறு ஏடுகளில் இந்நான்கு செய்யுட்களையும் கைகேயி சூழ்வினைப்படலத்திற் சேர்த்துள்ளமையாலும் மந்தரையின் சூழ்ச்சி இப்பாடல்களில் இன்மையாலும் கைகேயியின் செயலாகவே அமைந்துள்ளமையாலும் கைகேயிசூழ்வினைப்படலத்திற் சேர்ப்பதே முறையாகும் எனச் சேர்க்கலாயிற்று. (1)

1581. விளையுந் தன்புகழ் வல்லியை
வேரறுத் தென்னக்
கிளைகொண் மேகலை சிந்தினள்
கிண்கிணி யோடும்
வளைது றந்தனண் மதியினின்
மறுத்துடைப் பாள்போல்
அளக வாணுத லரும்பெறற்
றிலதமு மழித்தாள்.

**விளையும் தன் புகழ் வல்லியை வேர் அறுத்தென்னக்,**
**கிளை கொள் மேகலை சிந்தினள்; கிண்கிணியோடும்**
**வளை துறந்தனள்; மதியினில் மறுத் துடைப்பாள் போல்**
**அளக வாள் நுதல் அரும் பெறல் திலதமும் அழித்தாள்.**

பொ:—வளர்ந்து வருகின்ற தன் புகழாகிய கொடியை வேரோடு அறுத்தாற்போல ஏழு வடங்களைக்கொண்ட மேகலையை அறுத்துச் சிந்தினாள்; கிண்கிணியென்னும் காலணியோடு கைவளையையும் கழற்றிவிட்டாள்; சந்திரனிடத்தில் இருக்கும் களங்கத்தைத் துடைப்பவள்போல அளகத்தையுடைய ஒளிபொருந்திய நெற்றியிலுள்ள பெறுதற்கரிய திலகத்தையும் அழித்துவிட்டாள்.

கு:—புகழ் வெண்ணிறமானது என்ற கவிமரபு கருதி, முத்தினால் இயன்ற மேகலையை அறுத்ததைப் 'புகழ்வல்லியை வேரறுத்தென்ன' எனத் தற்குறிப்பேற்றமாகக்கூறினார். மேகலை எழுகோவையுடைமையால் 'கிளைகொள்மேகலை' எனப்புட்டது. கைகேயியின் நெற்றியில் திலதம், திங்களில் தங்கும் களங்கம்போன்றிருந்தமையின் அத்திலதத்தை அழிப்பது மதியினில் மறுத்துடைப்பதுபோலிருந்ததெனத் தற்குறிப்பேற்றமாகக் கூறினார். அளகம், நெற்றிக்குமேலுள்ள கூந்தற்பகுதி; இதனைத் தனியே அழகுசெய்தலுண்டு. திலதத்தின் உயர்வு தோன்ற, 'அரும்பெறற்றிலதம்' என்றார். 'பெறலரும்' என மாற்றுக. (2)

1582. தாவின் மாமணிக் கலன்மற்றுந்
தனித்தனி சிதறி
நாவி நன்குழ ஞனிலந்
தைவரப் பரப்பிக்
காவி யுண்கண்க ளஞ்சனங்
கான்றிடக் கலுழாப்
பூவு திர்ந்ததோர் கொம்பெனப்
புவிமிசைப் புரண்டாள்.

**தா இல் மா மணிக் கலன் மற்றும் தனித்தனி சிதறி,**
**நாவி நன் குழல் நானிலம் தைவரப் பரப்பிக்,**
**காவி உண் கண்கள் அஞ்சனம் கான்றிடக் கலுழாப்,**
**பூ உதிர்ந்தது ஓர் கொம்பு எனப், புவி மிசைப் புரண்டாள்.**

பொ :—குற்றம் அற்ற சிறந்த மணிகள் பதித்த மற்ற அணிகலன் களையும் தனித்தனியே அறுத்துச் சிதறிவிட்டு, புழுகு நெய் அணிந்த நறுமணமுடைய நல்ல கூந்தல் பூமியைத் தடவுமாறு பரப்பிக்கொண்டு நீலமலரனைய மையுண்டகண்கள் மையைக் கக்குமாறு அழுதுகொண்டு மலர்கள் உதிரப்பெற்ற ஒரு பூங்கொம்புபோலப் பூமிமேல் புரண்டாள்.

கு :—தா-குற்றம். மற்று-பிறிது. நாவி-புழுகுநெய். தைவரல்-தடவு தல். காவி-நீலமலர். கலுழ்தல்-அழுதல். கண்ணீர்ப் பெருக்கு, கண் மையைக் காலச்செய்தது. கூனியின்சொல் கேளாமுன் அணியுடன் இருந்த நிலைக்கு, “நளினம் பூத்ததோர் பாற்கடற் படுதிரைப் பவளவல்லி யே போல்” (1537) என முன்னம் உவமை கூறியவர், அவள் சொல் கேட்டபின் அணியிழந்த கைகேயியின் தோற்றத்திற்குப் பூவுதிர்ந்த கொம்பினை உவமை கூறினர். தன் சூழ்வினையால் விளையப்போகும் விளைவை இப்பொழுதே மேற்கொண்டு கழிகல மகளானாள் என்க. (3)

1583. நவ்வி வீழ்ந்தென நாடக
மயிறுயின் றென்னக்
கவ்வை கூர்தரச் சனகியாங்
கடிகமழ் கமலத்
தவ்வை நீங்குமென் றயோத்திவந்
தடைந்தவம் மடந்தை
தவ்வை யாமெனக் கிடந்தனள்
கேகயன் றனயை.

நவ்வி வீழ்ந்தென, நாடக
மயில் துயின்றென்னக்,
கவ்வை கூர்தரச், சனகியாம்
கடிகமழ் கமலத்து
அவ்வை நீங்கும் என்று அயோத்தி வந்து
அடைந்த அம் மடந்தை
தவ்வை ஆம் எனக், கிடந்தனள்,
கேகயன் தனயை.

பொ :—பெண்மான் துள்ளிவிளையாடுதல் ஒழிந்து வீழ்ந்தது போலவும், நாடகம் ஆடிய மயில் நாடகத்தை விடுத்துத் துயில்கொண்டது போலவும், மணம் கமழ்கின்ற தாமரைமலரில் வீற்றிருக்கும் சீதையாகிய திருமகள் துன்பமிகுமாறு நீங்கப்போகின்றுள் என்று அவளிடத்தை நிரப்ப அயோத்திக்கு வந்து அடைந்த அச் சீதேவியின் தமக்கையாகிய மூதேவி கிடந்தாள் என்று சொல்லுமாறும் கைகேயி தரையில் கிடந்தாள்.

கு :—கைகேயி, மான்விழி தாங்கும் மடக்கொடியாதலின் அவள் வீழ்ந்து கிடந்தமைக்கு நவ்வி வீழ்ந்தமையை உவமைகூறினுர். கேகயன்மகளாய் மயில்போன்ற சாயலளாய் மகிழ்ந்து விளையாடும் இயல்புடையளாதலின் அவள் துயின்றமைக்கு நாடகமயில் துயின்றமையை உவமைகூறியது பொருத்தமாதல் காண்க. அயோத்தியிலுள்ளார்க்குக் கவ்வை கூர்தர என்க. கவ்வை கூர்தரக் கிடந்தனள் எனக் கைகேயிக்கு ஏற்றலுமாம். அவ்வை-தாய். தவ்வை-தமக்கை; மூதேவி. “அவ்வித்து அழுக்காறுடையானைச் செய்யவள் தவ்வையைக் காட்டிவிடும்” (குறள் - 167)என்பது காண்க.இராமன் முடிசூடுதலில் பொருமைகொண்டவருள்ள இடத்தைச் செய்யவள் விட்டுநீங்க அவள் தவ்வை வருதல் உறுதியாகலின் அக்குறிப்பும் தோன்ற அம்மடந்தை தவ்வையாமெனக் கிடந்தனள் என்று தற்குறிப்பேற்றமாகக்கூறினுர். கிடத்தலே மூதேவியின் இயல்பு என்பதும் இங்கு உணரற்பாலது. (4)

## தயரதன் கைகேயியின் மனைக்குப் போதல்

1584. நாழிகை கங்குலி னள்ள
★ டைந்த பின்றை
யாழிசை யஞ்சிய வஞ்சொ
லேழை கோயில்

வாழிய வென்றயின் மன்னர்
துன்ன வந்தான்
ஆழிநெ டுங்கை மடங்க
லாளி யன்னுன்.

நாழிகை கங்குலின் நள் அடைந்த பின்றை,
யாழிசை அஞ்சிய அம் சொல் ஏழை கோயில்,
'வாழிய!' என்று அயில் மன்னர் துன்ன, வந்தான்—
ஆழி நெடுங்கை மடங்கல் ஆளி அன்னுன்.

பொ :—இரவுப்பொழுது நடுயாமத்தை எட்டிய பிறகு, ஆணைச்சக்கரம் தாங்கிய நீண்ட கையையுடையனுய்ப் பிடரியையுடைய சிங்க ஏறுபோன்ற பீடுநடையும் ஈடில் ஆற்றலுமுடைய தயரதன், வேல்தாங்கிய மன்னர்கள் எல்லாம் 'வாழிய!' என்று வாழ்த்திப் பின்தொடர, யாழில் தோன்றும் இனிய இசையும் அஞ்சிப் பின்வாங்கத்தக்க அழகிய சொல்லையுடைய கைகேயியின் மாளிகைக்கு வந்தான்.

கு :—நாழிகை என்பது ஒருநாளில் அறுபதில் ஒரு கூற்றிற்குப் பெயர். இங்குப் பொழுது என்னும் பொருளில் வந்தது. கங்குலின் நாழிகை என மாற்றுக. 'இன்' அல்வழிச்சாரியை. பின்றை-பின். ஆளியன்னுன், மன்னர் துன்ன ஏழைகோயில் வந்தான் என இயைக்க. நெடுங்கை - (முழந்தாள் அளவு) நீண்ட கை. ஆழி-ஆணைச்சக்கரம். மடங்கல், மடங்கி வீழ்ந்து கிடக்கின்ற பிடரிமயிர். யாழ் கண்ணுக்கு இன்னுதாகலின் அதனில் தோன்றிய இசை, கண்ணிற்கினிய கட்டழகுடைய கைகேயியின் அஞ்சொல்லுக்கு அஞ்ச வேண்டியதாயிற்று; "யாழிற் பிறவா இசையே என்கோ" (சிலம்பு-மனை-79) என்பது நினைக்க. சொல்லிற்கு அழகு, கேட்டற்கு இனிமையும் மென்மையும் உடையதாதல். அத்தகைய அஞ்சொல் கேட்கும் ஆசையால் தயரதன் செல்லுகின்றுன் என்பதையும் அது வன்சொலாக மாறப்போவதையும் குறிப்பால் உணர்த்தியவாறு. ஏழை-பெண். அழகிய சொல்லுடையளாயினும் கைகேயி பிறர் சொல்வழிநிற்கும் அறிவிலி என்ற பொருளும் தோன்ற "அஞ்சொலேழை" என்ருர். தயரதன் உயிரை வாங்கும் வன்மையைக் குறிப்பால் உணர்த்தியவாறு எனினுமாம். முடிசூட்டுவிழாவிற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்ய வேண்டியிருந்தமையின் காலம் தாழ்த்து நடுயாமத்தில் தயரதன் வந்தான். (5)

## தயரதன் கைகேயியை அடைதல்

**1585.** வாயிலின் மன்னர் வணங்கி
நிற்ப வந்தாங்
கேயின செய்யு மடந்தை
மாரொ டேகிப்
பாய றுறந்த படைத்த
டங்கண் மென்றோள்
ஆயிழை தன்னை யடைந்த
வாழி மன்னன்.

**வாயிலில் மன்னர் வணங்கி நிற்ப, வந்து ஆங்கு**
**ஏயின செய்யும் மடந்தைமாரொடு ஏகிப்,**
**பாயல் துறந்த படைத் தடங்கண் மென் தோள்**
**ஆயிழைதன்னை அடைந்த ஆழி மன்னன்.**

போ :—தன்னுடன் வந்த மன்னர் வாயிலில் வணங்கி நிற்கத் தயரதன், ஆங்கு வந்து ஏவல் செய்யும் பெண்டிரோடு சென்று, பஞ்சணையை விடுத்துத் தரையில் கிடக்கின்ற வாட்படைபோன்று கூரிய பெரிய கண்ணினையும் மெல்லிய தோளினையும் உடைய கைகேயியை அடைந்த ஆணைச் சக்கரத்தையுடைய அரசன்.

கு :—இப்பாட்டு குளகம்; அடுத்த செய்யுளில் முடியும். ஆடவர் குறுகா அந்தப்புரத்து வாயில் ஆதலின் மன்னர் உடன் போகாது வணங்கி நின்றனர். அவர்கள் நின்றவுடன் ஏவல் மகளிர் அங்கு வந்து வரவேற்றனர் என்க. ஆங்குவந்து என மாற்றுக. வருதலைப் புகுதலாக்கித் தயரதன்வினையாக்கலும் ஒன்று. பாயல்-படுக்கை; பஞ்சணை. உறக்கமுமாம். படை, வாட்படை. கண்பெரிதாதல் மகளிர்க்கு அழகு; அஃதுடைமை தோன்றத் 'தடங்கண்' என்றார். அக்கண் மென்கணாகாமல் வன்கணாக நின்று தயரதன் உயிர்வாங்கும் இயல்பு தோன்ற, 'படைத்தடங்கண்' என்றார். மென்மை உள்ளத்திற்கு இல்லை என்னும் குறிப்புத் தோன்ற, 'மென்தோள்' என்றார். 'ஆயிழை' என்றது, காரணங்காட்டாது 'பெண்' என்னும் பொருளதாய் நின்றது; பூவுதிர்ந்த தோர் கொம்பென அணிகலன் நீக்கியிருந்தாள் கைகேயி என்பது முன்னர்க் கூறப்பட்ட தாகலின் ஆயிழை அவட்கு இப்பொழுதில்லை என்பது தெளிவாதல் காண்க. அடைதல், அவள் உள்வழிச்சார்தல். இயல்பாகப் படுக்கும் பஞ்சணையில் நீங்கி ஊடல் அறையில் படுத்திருந்த தாக முதல் நூல் கூறும். 'ஆழி மன்னன்' என்பதற்கு முன்பாட்டில் கூறிய குறிப்பே கொள்க. (6)

## தயரதன் கைகேயியை எடுத்தல்

1586. அடைந்தவ ணோக்கி யரந்தை
யென்கொல் வந்து
தொடர்ந்த தெனத்துயர் கொண்டு
சோரு நெஞ்சன்
மடந்தையை மானை யெடுக்கு
மானை யேபோல்
தடங்கைகள் கொண்டு தழீஇ
யெடுக்க லுற்றான்.

அடைந்து, அவள்நோக்கி, 'அரந்தை என்கொல் வந்து தொடர்ந்தது ?' எனத் துயர்கொண்டு சோரும் நெஞ்சன், மடந்தையை மானை எடுக்கும் ஆனையே போல் தடங்கைகள் கொண்டு தழீஇ, எடுக்கல் உற்றான்.

பொ :—அருகில் வந்து அக்கைகேயியை உற்றுநோக்கி, என்ன துன்பம் வந்து நேர்ந்தது ? என்று (ஐயுற்றுத்) துயரங்கொண்டு சோர்கின்ற நெஞ்சத்தவனாய்க் கைகேயியை, மானை எடுக்கின்ற ஆனையைப் போலப் பெரிய கைகளைக்கொண்டு தழுவி எடுக்கத்தொடங்கினான்.

கு :—அடைதல், - அருகில் நெருங்குதல். அவளை நோக்கி என இரண்டாவது விரிக்க. உயர்திணையிடத்து விகாரத்தால் இரண்டனுருபு தொக்கது. நோக்குதல், கண்ணினும் கருத்தினும் நோக்குதல். அரந்தை-துன்பம். வரக்கூடாத இடத்து வந்தமை தோன்ற, 'வந்து' என்றும், அது நெடிதுநின்றமை தோன்ற, 'தொடர்ந்தது' என்றும் கூறினான். இது முதலாகப் படிப்படியே துன்பம் தொடர்ந்து வருதலும் இங்குக் குறிப்பானுணர்த்தியவாறு. சோர்தல் - துன்பத்தால் மெலிதல். 'நவ்வி வீழ்ந்தென' (மந்தரை சூழ்ச்சி-88) என முன் கூறியதற் கேற்ப, "'மானை' எடுக்கும் ஆனையே போல்" என்றார். கைகேயியின் மென்மையும் தயரதனின் வன்மையும் பருமையும் தோன்ற இங்ஙனம் கூறினர். மானை ஆனை யெடுத்தால் அது உடன்பட்டிராது அஞ்சி ஓட முயலுதல் போலக் கைகேயியும் உடன்பட்டிராது தொடர்ந்த நெடுங்கையை நீக்கித் துவண்டு வீழ்தல் பின்னர்க் கூறப்படுதல் நோக்கத்தகும். "அராவின் வேக மடங்கிய வேழமென்ன வீழ்ந்தான்" (15) எனவும், "வேல்வெம் புண்ணுழைகிற்க வுழைக்குமானைபோல்வான்" (19) எனவும், கம்ப நெடுங்களி யானையன்ன மன்னன்" (20) எனவும் தயரதனுக்கு யானையை உவமையாகப் பின்னரும் கூறுதல் காண்க. பரிச இன்

பத்தை விரும்பி யானை கெடுதல்போலத் தயரதனும் கெடும் இயல்பு பற்றி அவனுக்கு யானையை உவமை கூறினர் எனலுமாம். நெஞ்சனை எடுக்கலுற்றான் என முற்றெச்சமாக்குக. தடங்கை, வளைந்த கை எனலும் ஆம்; எடுக்குங்கால் கைவளைதல் இயல்பாதலின். "தடவென்கிளவி கோட்டமும் செய்யும்" (தொல். சொல். 321) என்பது காண்க. (7)

### கைகேயி பேசாது நெட்டுயிர்த்தல்

1587. நின்று தொடர்ந்த நெடுங்கை
தம்மை நீக்கி
மின்றுவள் கின்றது போல
மண்ணில் வீழ்ந்தாள்
ஒன்று மியம்பல ணீடு
யிர்க்க லுற்றாள்
மன்ற லருந்தொடை மன்ன
னாவி யன்னாள்.

நின்று தொடர்ந்த நெடுங்கைதம்மை நீக்கி,
மின் துவள்கின்றது போல மண்ணில் வீழ்ந்தாள்,
ஒன்றும் இயம்பலள், நீடு உயிர்க்கல் உற்றாள்,
மன்றல் அருந்தொடை மன்னன் ஆவி அன்னாள்.

பொ :—முன், மணம் பொருந்திய அருமையான மலர்மாலை யணிந்த தயரதனுடைய உயிர்போன்றவளாக இருந்த கைகேயி நின்றாங்குத் தொடர்ந்து பற்றிய நீண்ட கைகளை நீக்கிக்கொண்டு மின்னற்கொடி துவள்வது போலத் துவண்டு தரையில் வீழ்ந்து, ஒன்றும் சொல்லாமல் நெடுமூச்சு விட்டாள்.

கு :—பற்றிய கையை நீக்குதல், மன்னன் ஆவியன்னவளுக்குப் பொருந்தாச்செயல் என்பது விளக்கியவாறு. வீழ்ந்தாள், இயம்பலள் என்ற முற்றுக்கள் எச்சப் பொருளன. மன்றலைத் திருமணமெனக் கொண்டு தனக்கு மாலை சூட்டிய மன்னன் எனலும் ஆம். பட்டத்துக் குரிய அரசியர் மூவருள்ளும் கைகேயியின்பால் தயரதன் கடுங்காதலன் ஆதலின் அவளை, மன்னனாவியன்னாள் என்றார். பற்றிய கைகளை நீக்கித் தரையில் வீழ்தலும் ஒன்றும் கூறாமையும் நீடுயிர்த்தலும் அவள் ஆழ்ந்த வெகுளியை அறிவித்தன. (8)

## தயரதன் நிகழ்ந்ததை வினுதல்

1588. அன்னது கண்ட வலங்கன்
மன்ன னஞ்சி
என்னை நிகழ்ந்ததிஞ் ஞால
மேழில் வாழ்வார்
உன்னை யிகழ்ந்தவர் மாள்வ
ருற்ற தெல்லாம்
சொன்னபி னென்செயல் காண்டி
சொல்லி டென்ருன்.

அன்னது கண்ட அலங்கல் மன்னன், அஞ்சி,
"என்னை நிகழ்ந்தது? இஞ் ஞாலம் ஏழில் வாழ்வார்
உன்னை இகழ்ந்தவர் மாள்வர்! உற்றது எல்லாம்
சொன்னபின் என் செயல் காண்டி! சொல்லிடு!" என்ருன்.

பொ :—அவள் ஊடற்செயலைக் கண்ட மாலையணிந்த மன்னன், அச்சங்கொண்டு "என்ன நடந்தது? இந்த ஏழுலகத்திலும் வாழ்பவர்களில் உன்னை இகழ்ந்தவர் உளராயின் அவர் மாய்வர்; நிகழ்ந்ததெல்லாம் நீ சொன்னபின் என் செயலைக் காண்பாய்! விரைந்து சொல்!" என்ருன்.

கு :—அன்னது என்றது, அவள் ஊடற்செயலை. என்றும் காணுத ஊடலை இன்று கண்டாளுகலின் தயரதன் அஞ்சினுன். அவள் ஊடற்குக் காரணம் தானே என்பதை அறியாத தயரதன், பிறர் யாரேனும் இகழ்ந்திருப்பர் என்ற எண்ணத்தால் 'உன்னை இகழ்ந்தவர் மாள்வர்' என்று கூறினுன். 'ஞாலம் ஏழு' என்றது, ஏழு தீவுகளை எனலுமாம். பத்துத் திசையிலும் சென்று வென்றி கொண்டவன் ஆதலின், ஞாலம் ஏழில் வாழ்வார் உன்னை இகழ்ந்தவர் என்னுல் கொல்லப்படுவர் என்பது தோன்ற, 'மாள்வர்' என்ருன். இகழ்ந்த குற்றத்திற்காகக் கொலைத் தண்டனை கிடைக்கும் என்றது, இகழப்பட்டாளின் பெருமையையும் அவள்பால் மன்னன் கொண்ட காதற் பெருக்கையும் உணர்த்தியது. சொன்னவுடன் இகழ்ந்தவர் யாவராயினும் எத்திறத்தராயினும் தண்டிக்கப்படுவார் என்பான், 'சொன்ன பின் என் செயல் காண்டி' என்ருன். 'சொல்லிடு,' ஒருசொல் நீர்மையது. (9)

## கைகேயி வரம் கேட்டல்

**1589.** வண்டுளர் தாரவன் வாய்மை
கேட்ட மங்கை
கொண்ட நெடுங்கணி னாலி
கொங்கை கோப்ப
உண்டுகொ லாமரு ளென்க
ணுன்க ணொக்கில்
பண்டைய வின்று பரிந்த
ளித்தி யென்றாள்.

வண்டு உளர் தாரவன் வாய்மை கேட்ட மங்கை,
கொண்ட நெடுங்கணின் ஆலி கொங்கை கோப்ப,
'உண்டுகொலாம் அருள் என்கண்? உன்கண் ஒக்கில்
பண்டைய இன்று பரிந்து அளித்தி' என்றாள்.

பொ:—வண்டுகள் மகரந்தத்தைக் கிண்டுகின்ற மாலையை யணிந்த தயரதனுடைய வார்த்தையைக் கேட்ட கைகேயி, நீண்ட கண்களில் கொண்ட கண்ணீர்த் துளியாகிய முத்துக்கள் நகிலின்மேல் அணிந்த மாலை போலக் கோத்து நிற்க, "என்பால் நினக்கு அருள் உண்டு கொல்? இருக்குமாயின் பண்டு தந்தனவற்றை இன்று அன்புடன் அளித்திடுக!" என்று கூறினாள்.

கு:—உறவேதுமிலாத வண்டுகட்கும் வேண்டியது கொடுக்கும் வள்ளல், உறவிற் சிறந்த மனையாளுக்கு முன்னமே கொடுத்த வரத்தைக் கொடுப்பதில் தடையுளதோ என்னும் குறிப்புத் தோன்ற, "வண்டுளர் தாரவன்" என்றார். வாய்மை - வார்த்தை. மங்கை, பருவப்பெயரன்று; பெண்டு என்னுந்துணையாய் நின்றது. மற்றைத் தேவியரினும் இளமைச் செவ்வியுடைமை தோன்ற அச்சொல்லால் கூறினர் எனலுமாம். ஆலி - நீர்த்துளி. 'கோப்ப' என்று தொழில் கூறினமையால் ஆலியை முத்தாக உருவகஞ் செய்தமை பெறப்படுதலால் இது, குறிப்புருவகம். கோத்தல் முத்துக் கேற்ற செயலாதல் காண்க. நகில் மேல் சிந்திய கண்ணீர்த்துளிகள் பின் அந்நகிலிலிருந்து வீழ்தற்கு உவமையாக, "புணர்முலைமேற் பூண்டரளமாதாம்பு அற்றென்ன மழைக் கண்ணீர் ஆலியுக" (4 – 99) என முத்துமாலை அற்று உதிர்வதைக் கூறுதல் நோக்குக. பண்டைய என்றது, சம்பரன்போரில் உதவியபோது தயரதன் கைகேயிக்கு மகிழ்ந்தளித்த இருவரங்களை; வினையாலணையும் பெயர். பண்டையவாய வரங்களை என்க. புதியதாக ஒன்றையும் கேட்கவில்லை; முன்கொடுத்

தனவற்றையே கேட்கின்றேன்; ஆதலின் அன்புடன் அளிக்கத் தக்கதே என்பாள், 'இன்று பரிந்தளித்தி' என்ருள். கொள்ளுங்கால் உள்ள மனநிலைக்கும் கொண்டது கொடுக்குங்கால் உள்ள மனநிலைக்கும் வேறுபாடு நிகழ்தல் இயல்பு ஆதலின் அவ் வேறுபாடின்றி அன்புடன் அளிக்க என்றவாறு. பரிந்து - அன்புகூர்ந்து; 'வருந்தி' என்ற பொருளுங்காட்டி உண்மை நிலையையும் உணர்த்தியது காண்க. (10)

### தயரதன் தருவேன் எனல்

1590. கள்ளவிழ் கோதை கருத்துண
ராத மன்னன்
வெள்ள நெடுஞ்சுடர் மின்னின்
மின்ன நக்கான்
உள்ள முவந்தது செய்வெ
ஞென்று லோவேன்
வள்ள லிராமனுன் மைந்த
ஞணை யென்ருன்.

கள் அவிழ் கோதை கருத்து உணராத மன்னன்,
வெள்ள நெடுஞ்சுடர் மின்னின் மின்ன நக்கான்;
'உள்ளம் உவந்து அது செய்வென்; ஒன்று லோவேன்;
வள்ளல் இராமன் உன் மைந்தன் ஆணை!' என்ருன்.

பொ:—தேனுடையதாய் மலர்ந்த மாலை சூடிய கைகேயியின் கருத்தை உணராத தயரதன், மிகுதியான நீண்ட ஒளியையுடைய மின்னலைப் போலப் பற்கள் ஒளிவீசச் சிரித்து, "வள்ளல் தன்மையுடைய இராமனுகிய உன்மைந்தன் மேல் ஆணை; நீ கூறியதை மனமகிழ்ந்து செய்வேன்; ஒரு சிறிதும் உலோபம் செய்ய மாட்டேன்" என்று கூறினன்.

கு:—அரும்பாம் நிலையில் சூடப்பட்டுப் பின் அலர்ந்தமை தோன்றக் "கள்ளவிழ் கோதை" என்ருர். கள் - தேன். அரும்பாம் நிலையில் மறைத்துவைத்திருந்த கள்ளைப் பின் மலர்ந்து வெளிப்படுத்தும் மாலையையுடையாள் என்றது, வரம் என்று முன் தன் கருத்துப் புலப்படாதவாறு கேட்டு அதைக் கொடுத்தவுடன் அக்கருத்தைப் புலப் படுத்துகின்ற இயல்பினள் என்பதை விளக்குதலின் இது கருத்துடை யடைகொளியணியாம். 'மின்ன' என்ற வினைக்கேற்ப எழுவாய் வருவிக்கப்பட்டது. கருத்துணர்ந்திருப்பின் நகான் என்றவாறு. வரங் கொள்ளுதற்கு இத்துணையல்லல் எய்தவேண்டுமோ? என அவள்

பேதைமைகண்டு எள்ளி நகைத்தான் என்க. "பண்டைய இன்று பரிந்தளித்தி" என்பதே அவள் வேண்டுகோளாதலின் "அதுசெய்வென்," என்று உடன்பாடு தெரிவித்தான். 'அளிப்பேன்' என்பதே கருத்து. உள்ள முவந்து அது செய்வென் என்றது, அவள் கருத்திற்கு மாறு பாடின்மையை உணர்த்திற்று. ஒன்றும் என உம்மை விரிக்க. ஒன்றும்- சிறிதும். உலோபம் - கடும்பற்றுள்ளம். கொடாமல் இறுகப் பிடித்துக் கொள்ளேன் என்பான், 'ஒன்று லோவேன்' என்றான். உலோபஞ் செய்யாது கொடுத்தற்கு ஆணை கூறுகின்றானாதலின், 'வள்ளலிராமன்' என்றான். இராமன்பால் தன்னைக் காட்டிலும் பேரன்புடையளாதலின் இராமனை, 'உன் மைந்தன்' என்றான். "இராமனைப் பயந்த எற்கிட ருண்டோ" (மந்தரைசூழ்ச்சி - 47) என முன்னர்க் கைகேயி கூறி யுள்ளதும் காண்க. உறுதிகூற விரும்புவோர் தமக்குச் சிறந்தார்மேல் ஆணையிட்டுக் கூறுதல் மரபு. ஒளித்திடில் நின் திருவாணை கண்டாய்" என்றார் பெரியாழ்வாரும் (5. 3. 2.) (11)

### இரண்டு வரங்களையும் ஈக எனல்

1591. ஆன்றவ னவ்வுரை கூற
வைய மில்லாள்
தோன்றிய பேரவ லந்து
டைத்த லுண்டேல்
சான்றிமை யோர்குல மாக
மன்ன நீயன்
றேன்ற வரங்க ளிரண்டு
மீதி யென்றாள்.

ஆன்றவன் அவ்வுரை கூற, ஐயம் இல்லாள்,
'தோன்றிய பேரவலம் துடைத்தல் உண்டேல்,
சான்று இமையோர் குலம் ஆக, மன்ன ! நீ அன்று
ஏன்ற வரங்கள் இரண்டும் ஈதி !' என்றாள்.

பொ :—குணங்களால் நிறைந்த தயரதன் அச் சொல்லைச் சொல்ல, ஐயம் நீங்கப்பெற்ற கைகேயி, 'மன்ன ! என்னிடம் தோன்றிய பெரிய துன்பத்தைத் துடைக்கும் எண்ணம் உனக்கு உண்டானால், தேவர் கூட்டம் சான்றாக நீ அன்றைக்குக் கொடுப்பதாக ஏற்றுக்கொண்ட வரங்கள் இரண்டையும் கொடு' என்று கூறினாள்.

கு :—அவ்வுரை என்றது, இராமன் ஆணை ; உலோவேன் என்றதை. இராமன் ஆணை என்று கூறியவுடன் நம் கருத்து முற்றுப்பெறுமோ

என்று முன் எண்ணிய ஐயம் நீங்கப் பெற்றாள் என்க. இல்லாள், குறிப்பு வினைப்பெயர். சம்பரன்போர் நிகழ்ந்த இடம் தேவருலகம் ஆதலின் அப்போரில் துணைசெய்த கைகேயிக்கு இருவரங்கள் கொடுத்தமைக்கு இமையோர் குலம் சான்றாயிற்று. கணவனை, 'மன்ன' என்று விளித்தது, வரங்கள் இரண்டையும் அறநெறி நோக்கித் தப்பாமல் கொடுத்தற் குரியன் என்பது புலப்பட வேண்டி. என்னை? மன்னன், தான் அறநெறி நின்றன்றே பிறரை அறநெறி நிறுத்தல்வேண்டும்? கணவன் மனைவி என்ற உரிமை கொண்டாடின் கொள்வதும் கொடுப்பதும் வேண்டாவாய் எல்லாப் பொருட்கும் இருவரும் உரிமையுடையராதல் புலப்படும்; அவன் கருத்தும் முற்றாது. 'இரண்டும்' என்புழி உம்மை முற்றும்மை. "பண்டைய இன்று பரிந்தளித்தி" என்று முன் பொதுவகையால் கூறியதையே இங்கு வகைப்படுத்தி விளக்கியவாறு. கைகேயி கேட்கப் போகும் வரங்கள் தயரதனுக்கு முரண்பட்டனவாதலின் அவற்றை மேலும் மேலும் உறுதிசெய்துகொள்ளவேண்டி, இராமன் ஆணை, உலோவேன் என்று தயரதன் கூறிய பின்னும், வரங்கொடுத்த மைக்கும் சான்றுவார் பலர் உண்டு; அவர் தாமும் இமையா நாட்ட முடைய தேவர் என்று அச்சான்றின் பன்மையும் பெருமையும் உணர்த்தி மாற்ற இயலாமையை விளக்குகின்றாள். (12)

## இப்பொழுதே ஈவேன் எனல்

**1592.** வரங்கொள வித்துணை மன்னு
மல்ல லெய்தி
இரங்கிட வேண்டுவ தில்லை
யீவ னென்பால்
பரங்கெட விப்பொழு தேப
கர்ந்தி டென்றான்
உரங்கொண் மனத்தவள் வஞ்ச
மோர்கி லாதான்.

'வரம் கொள இத்துணை மன்னும் அல்லல் எய்தி
இரங்கிடவேண்டுவதில்லை; ஈவன்; என்பால்
பரம் கெட இப்பொழுதே; பகர்ந்திடு!' என்றான்;
உரம் கொள் மனத்தவள் வஞ்சம் ஓர்கிலாதான்.

பொ:—உரங்கொண்ட நெஞ்சத்தவளாகிய கைகேயியின் வஞ்சம் அறியாத தயரதன், "வரங்களைப் பெறுவதற்கு இவ்வளவு மிகுதியான துன்பமடைந்து மனம் இரங்க வேண்டுவது இல்லை; என்னிடத்துப் பாரம் நீங்க இப்பொழுதே கொடுத்துவிடுகிறேன்; சொல்" என்றான்.

கு :—மன் - மிகுதி. பரம் – பாரம். இப்பொழுதே ஈவன் என இயைக்க. 'இப்பொழுதே பகர்ந்திடு' என இயைக்கினும் ஆம். கைகேயியின் ஊடலை நீக்கி இராமனுக்கு முடி சூடுவதைத் தெரிவிக்க விரைகின்றவனுதலின், இங்ஙனம் கூறினுன் என்க. 'பகர்ந்திடு' ஒரு சொல் நீர்மைத்து. உரம் - வலிமை ; அது இரக்கமின்மை. ஓர்தல் - அறிதல். ஓர்ந்தாயுயின் அவ்வாறு கூருன் என்க. (13)

## கேட்ட வரம் இவையெனல்

1593. ஏய வரங்க ளிரண்டி
னென்றி னுலென்
சேயர சாள்வது சீதை
கேள்வ னென்ருல்
போய்வன மாள்வ தெனப்பு
கன்று நின்ருள்
தீயவை யாவை யினுஞ்
சிறந்த தீயாள்.

'ஏய வரங்கள் இரண்டின் ஒன்றினுல் என்
சேய் அரசு ஆள்வது ; சீதை கேள்வன், ஒன்ருல்
போய் வனம் ஆள்வது ;' எனப் புகன்று நின்ருள்;
தீயவை யாவையினும் சிறந்த தீயாள்.

பொ :—'சொன்ன வரங்கள் இரண்டில் ஒன்றினுல் என் மகன் பரதன் அரசு ஆள்வது ; மற்ருென்ருல் சீதையின் கணவன் நகர் நீங்கிப் போய்க் காடு ஆள்வது' என்று சொல்லிவிட்டுத் தீயவை யென்று சொல்லப்படும் எல்லாவற்றினும் மேம்பட்ட தீயவளாகிய கைகேயி நின்ருள்.

கு :—தயரதனுக்கு இராமன் என்ற பெயரில் உள்ள ஆர்வத்தை அறிந்தவள் ஆதலின் அப்பெயரால் கூருது, 'சீதை கேள்வன்' என்ருள். இது காறும் அன்போடு அழைத்துவந்த பெயராதலின் கைகேயி அதனைச் சொல்லமாட்டாதவளாய் இவ்வாறு கூறினுள் எனலும் ஆம். 'என் சேய்' என்னும் பொழுது, இராமனையே கூறுகின்ருள் என்று தோன்றுமாறு கூறியதும், சீதை கேள்வன் என்று பின் கூறியதனுல் முன், 'என் சேய்' என்றது பரதனையே எனப் பாரிசேட அளவையால் பெறவைத்ததும் அவள் சொற்றிறத்தை நன்கு விளக்குவன. 'ஆள்வது' என்பது இருவர்க்கும் உரித்தாகக் கூறி நடுநிலையுடையாளாகத் தன்னைக் காட்டிக்கொண்டாள். வனம்

ஆள்வது, காட்டையே இருப்பிடமாகக் கொள்வது. கூனி கூறியபடி, இராமன் பதினான்கு ஆண்டு காட்டில் வதிதல் வேண்டும் என்பதையும் கூற மனமிலளாய், "சீதை கேள்வனென்றால் போய் வனமாள்வது" என்றாள். முன்னும் "துன்று கானத்தில் இராமனைத் துரத்தல்" (மந்தரை-84) என்றே கூறியதும் காண்க. தயரதச் சக்கரவர்த்தியின் முன் இத்தகைய சொல்லைச் சொல்லிவிட்டு நிற்றல், பிறரால் செயற் கருஞ்செயல் என்பார், 'புகன்று நின்றாள்' என்றார். குணக்கடலாகிய இராமனைக் காடாளச்சொல்லிவிட்டு மன முளைந்து வீழாது நிற்கும் வன்மைக்குக் காரணம் கூறுவாராய், 'தீயவை யாவையினும் சிறந்த தீயாள்' என்றார். "தீவினையா ரஞ்சார் விழுமியா ரஞ்சுவர் தீவினை யென்னும் செருக்கு" (குறள்-201) என்றதும், மேல் தொட்டுச் செய்து கைவந்தமையான் அஞ்சார் என்ற பரிமேலழகர் விளக்கமும் இங்கு நினைக்கத்தகும். (14)

## அது கேட்ட தயரதன் நிலை 1594-1598

**1594.** நாக மெனுங்கொடி யாட
 னாவி னீந்த
சோக விடந்தொட ரத்து
 ணுக்க மெய்தா
ஆக மடங்கலும் வெந்த
 ழிந்த ராவின்
வேக மடங்கிய வேழ
 மென்ன வீழ்ந்தான்.

நாகம் எனும் கொடியாள், தன் நாவின் ஈந்த
சோக விடம் தொடரத் துணுக்கம் எய்தா,
ஆகம் அடங்கலும் வெந்து அழிந்து, அராவின்
வேகம் அடங்கிய வேழம் என்ன வீழ்ந்தான்.

பொ :—நல்லபாம்பு போன்ற கொடுமையுடைய கைகேயி, தன் நாவினால் கொடுத்த சோகம் தரத்தக்க நஞ்சு தொடர்ந்து வருத்துதலால் நடுக்கம் அடைந்து, உடம்பு முழுதும் துன்ப வெப்பத்தால் வெதும்பி அழியப், பாம்பினால் வேகம் அடங்கி வீழும் யானைபோலத் தரையில் வீழ்ந்தான்.

கு :—பாம்பு, பல்லின் வழிவந்த நஞ்சினால் கொல்லுதல் போலாது, பாம்பனைய கைகேயி நாவின்வழி வந்த நஞ்சனைய சொல்லால் தய ரதனை வீழ்த்தினாள் என்றது, வேற்றுமையணி. சோகம் - துன்பம்.

சோகம் தரும் விடம் என்க. நஞ்சனைய சொல்லை ஆகுபெயரால் நஞ்சாகக் கூறினர். பாம்பின் விடம் அது கடித்த வழி உடம்பில் பரவுவது ; இச்சொல் நஞ்சு, கேட்டவுடன் தொடர்வது என வேறுபாடு காண்க. துனுக்கம் - நடுக்கம். ஆகம் - உடம்பு. அடங்கலும் - முழுமையும். அரா - பாம்பு. சிறிய பாம்பினல் பெரிய யானை வேகம் அடங்கி வீழ்தல் போல ஒரு பெண்ணின் சொல்லால் வலிமை சான்ற தயரதன் வீழ்ந்தான் என்க. (15)

**1595.** பூதல முற்ற தனிற்பு
ரண்ட மன்னன்
மாதுய ரத்தினை யாவர்
சொல்ல வல்லார்
வேதனை முற்றிட வெந்து
வெந்து கொல்லன்
ஊதுலை யிற்கன லென்ன
வெய்து யிர்த்தான்.

பூதலம் உற்று அதனில் புரண்ட மன்னன்,
மா துயரத்தினை யாவர் சொல்ல வல்லார் ?
வேதனை முற்றிட வெந்து வெந்து, கொல்லன்
ஊது உலையில் கனல் என்ன, வெய்து உயிர்த்தான்.

பொ :—தரையில் வீழ்ந்து, அதில் புரண்டுகொண்டிருக்கின்ற தயரதனுடைய பெருந்துயரத்தை இவ்வளவினது எனச் சொல்ல வல்லவர் யாருளர் ? யாருமில்லை ; மனவேதனை முதிர உள்ளம் மேலும் மேலும் வேதலால், கொல்லனுடைய உலைக்களத்தில் ஊதுங்கால் உயர்ந்தும் தாழ்ந்தும் எரியும் கனல்போல வெம்மையாகப் பெருமூச்சு விட்டான்.

கு :—தயரதன் துயரம் இவ்வளவினது என வரையறை செய்து சொல்ல வல்லவர் இல்லை என அத்துயரின் மிகுதி புலப்படுத்தியவாறு. வேதனை - துன்பம். கைகேயியின் சொல் கேட்ட பொழுதினும் நினைக்க நினைக்கத் துன்பம் பெருகுதல் தோன்ற, 'வேதனை முற்றிட' என்றார். 'வெந்து வெந்து' என்ற அடுக்கு துன்பத்தின் பெருக்கை யுணர்த்திற்று. உலையிற் கனல், ஊதுகனல் என்க. ஊதுந்தொறும் உலைக் கனல் உயர்ந்தும் மடங்கியும் எரிதல் போல மன வேதனை முற்ற முற்ற வெப்பமான பெரு மூச்சு நீண்டும் மடங்கியும் போக்குவரவு புரிந்தது என்க. மனத் துன்பத்தின் மிகுதி வெய்துயிர்ப்பினல் வெளிப்பட்டது என்பது கருத்து. (16)

**1596.** உலர்ந்தது நாவுயி ரோட
லுற்ற துள்ளம்
புலர்ந்தது கண்கள் பொடித்த
பொங்கு சோரி
சலந்தலை மிக்கது தக்க
தென்கொ லென்றென்
றலந்தலை யுற்ற வரும்பு
லன்க ளைந்தும்.

உலர்ந்தது நா ; உயிர் ஓடல் உற்றது ; உள்ளம்
புலர்ந்தது ; கண்கள் பொடித்த பொங்கு சோரி ;
சலம் தலை மிக்கது—'தக்கது என்கொல்?' என்று என்று
அலந்து, அலையுற்ற அரும் புலன்கள் ஐந்தும்.

பொ :—வறண்டது நாக்கு ; உயிர் ஓடத் தொடங்கியது ; மனம் வாடியது; கண்கள் பொங்குகின்ற இரத்தத்தை வடித்தன ; 'இப்போது செய்யத்தக்கது' என்ன ? என்று மேலும் மேலும் ஆராய்ந்து வருந்தி ஒன்றுந்தோன்றுமையால் கோபம் தலைக்கேறியது ; நீங்கற்கரிய ஐம் பொறிகளும் கலங்கின.

கு :—'உயிர்' என்றது பிராணவாயுவை. பொடித்தல் - தோற்று வித்தல். சோரி - இரத்தம். " தக்கது என்கொல் என்று என்று அலந்து சலம் தலைமிக்கது " என இயைக்க. அலந்து - வருந்தி. சலம்-கோபம். செய்யத்தக்கது யாது? யாது? என்று எண்ணி எண்ணி வருந்தியும் முடிவு தோன்றுமையால் கோபம் மிகுவதாயிற்று. புலன்கள் என்றது ஈண்டுப் பொறிகளை. அலையுறுதல், பொறிகள் புலன்களைக் கொள்ளாமல் கலங்குதல்; மரண நிலையை விளக்கிற்று. " புலனைந்தும் பொறிகலங்கி " (1-130-1) என ஞான சம்பந்தப்பெருமானும் மரண அவத்தையைக் குறிப்பிடுதல் காண்க. (17)

**1597.** மேவி நிலத்தி லிருக்கு
நிற்கும் வீழும்
ஓவிய மொப்ப வுயிர்ப்ப
டங்கி யோயும்
பாவியை யுற்றெதிர் பற்றி
யெற்ற வெண்ணும்
ஆவி பதைப்ப வலக்க
ணெய்து கின்றான்.

மேவி நிலத்தில் இருக்கும் ; நிற்கும் ; வீழும் ;
ஓவியம் ஒப்ப உயிர்ப்பு அடங்கி ஓயும் ;
பாவியை உற்று எதிர் பற்றி எற்ற எண்ணும் ;
ஆவி பதைப்ப அலக்கண் எய்துகின்ருன்.

போ :—உயிர் துடிக்கத் துன்ப முறுகின்ற தயரதன், தரையில் பொருந்தி உட்காருவான் ; பிறகு எழுந்து நிற்பான் ; பிறகு நின்ருங்கே தரையில் வீழ்வான் ; உயிர்ப்பு அடங்கப்பெற்றுச் சித்திரம் போல ஓய்ந்து கிடப்பான் ; பாவியாகிய கைகேயியை எதிர்சென்று பற்றித் தரையில் மோதலாமா என எண்ணுவான்.

கு :—'அலக்கண் எய்துகின்ருன்' என்பது வினையால் அணையும் பெயர். இருக்கும், நிற்கும் முதலிய செய்யும் என்னும் முற்றுக்கள் உயர்திணை ஆண்ஞெருமை யுணர்த்திநின்றன. உயிர்ப்பு அடங்கினவுடன் அசைவின்மை காண்டலின் ஓவியம் உவமையாயிற்று. உண்ணு நீரினு முயிரினுஞ் சிறந்தானுக மக்களெல்லாம் கருதும் குணக்கடலாகிய இராமனைக் காட்டுக் கனுப்பும் பாவத்தைப் புரிகின்ருள் ஆதலின் கைகேயியைப் 'பாவி' என்ருர். உயிர்ப்படங்கி ஓய்ந்தநிலை மாறின வுடன் பழைய நினைவு வரப்பெற்றவன், அவளைப் பற்றி யெற்ற எண்ணு கின்ருன். அவலச்சுவையும் வெகுளிச்சுவையும் மாறிமாறி வருதலை விளக்கியவாறு. (18)

**1598.** பெண்ணென வுற்ற பெரும்ப
ழிக்கு நாணும்
உண்ணிறை வெப்பொ டுயிர்த்
துயிர்த்து லாவும்
கண்ணினி ேனாக்கு மயர்க்கும்
வன்கை வேல்வெம்
புண்ணுழை கிற்க வுழைக்கு
மானை போல்வான்.

பெண் என உற்ற பெரும் பழிக்கு நாணும் ;
உள் நிறை வெப்பொடு உயிர்த்து உயிர்த்து உலாவும் ;
கண்ணினில் நோக்கும் ; அயர்க்கும் ; வன் கை வேல் வெம்
புண் நுழைகிற்க உழைக்கும் ஆனை போல்வான்.

போ :—வலிய கைவேல் வெந்த புண்ணில் நுழைதலால் வருந்தும் யானையைப் போல்பவனுகிய தயரதன், பெண் என எண்ணி (அவளைப் பற்றி எற்றுவதால் வரும்) பெரும் பழிக்கு நாணி, அது செய்யாது பின்

வாங்குவான் ; உள்ளத்தில் நிறைந்த வெப்பத்தோடு பெருமூச்சுவிட்டுக் கொண்டே சிறிது உலாவுவான்; அவளைக் கண்ணால் நோக்குவான் ; பின் அயர்ச்சி எய்துவான்.

கு :—' உற்ற நோய் ' (குறள்-261) என்றது போல, 'உற்ற பெரும் பழி' என்பது, எதிர்வது இறந்ததாய் வந்த காலவழுவமைதி. நாணுதலாவது, சான்றோர் தமக்கு ஏலாதன செய்தற்குப் பின்வாங்குதல். உயிர்ப்பு வெய்துயிர்ப்பு ஆதற்கு உள்ளத்திலிருக்கும் துன்ப வெப்பமே காரணம் என்பது தோன்ற, " உண்ணிறை வெப்பொடுயிர்த்து " என்றார். கண்ணால் பார்க்கவும் தகாதவள் என்னும் குறிப்புத் தோன்ற, 'கண்ணினினோக்கும்' என்றார். நோக்குதற்குச் செயப்படுபொருள் கைகேயி. பழிக்குநாணி எற்றாது இருப்பினும், அவள் கேட்ட வரம் மீட்டும் பார்க்கச் செய்தது என்க. அயர்த்தல் - செய்வதறியாது சோர்தல். வெம்புண் என்றது, முன்னரே தீயினால் வெந்த புண்ணை. அப்புண்ணில் வன்கைவேல் நுழையுமாயின் அத்துயர் பொறுக்க வியலாது வலிய யானை பெரிதும் வருந்தும். அவ்வியானை போலத் தயரதன் பெரிதும் வருந்தினான் என்க. ' வெந்ததோர் புண்ணின்கண் வேல்கொண்டு நுழைப்பான் போல், காய்ந்தநோ யுழப்பாரைக் கலக்கிய வந்தாயோ' (கலி-120) என்பது நோக்குக. பரதன் அரசாள வேண்டும் என்ற வரத்திற்கு யானையின் வெந்த புண்ணும், இராமன் வனமாளச் செல்ல வேண்டும் என்ற வரத்திற்கு அப்புண்ணில் வன் கைவேல் நுழைதலும், தயரதனுக்கு யானையும் உவமம். இவ்வுவமையால் இராமன் அரசாளாது பரதன் அரசாளவேண்டும் என்று கேட்டதால் உளதாய வருத்தத்தினும் இராமன் வனம்புகவேண்டும் என்றதால் உளதாய வருத்தம் பெரிது என்பது விளக்கம் பெறுதல் காண்க. "மண்ணே கொள் நீ மற்றைய தொன்று மறவென்றான் " (32) எனப் பின்னர்க் கூறுதலும் காண்க. யானை வேட்டுவனாகிய தயரதனுக்கு இது ஏற்ற உவமையாதல் காண்க. (19)

### கைகேயி மனம் மாறாமை 1599-1600

1599. கம்ப நெடுங்களி யானை
யன்ன மன்னன்
வெம்பி விழுந்தழும் விம்மல்
கண்டு வெய்துற்
றும்பர் நடுங்கின ரூழி
பேர்வ தொத்த
தம்பன கண்ணவ ளுள்ள
மன்ன தேயால்.

கம்ப நெடுங்களி யானை அன்ன மன்னன்,
வெம்பி விழுந்து அழும் விம்மல் கண்டு வெய்துற்று,
உம்பர் நடுங்கினர் ; ஊழி பேர்வது ஒத்தது ;
அம்பன கண்ணவள் உள்ளம் அன்னதேயால்.

போ :—அசைந்து ஆடும் இயல்புடைய நெடிய களிப்பு வாய்ந்த யானை போன்ற பெருமிதமுடைய தயரதன், துன்பத்தால் வெதும்பி விழுந்து புலம்புகின்ற வேதனையைக்கண்டு தேவர்களும் மனம் வெந்து நடுங்கினர்கள்; ஊழிக் காலம் பேர்வது போன்ற துன்பம் உண்டாயது; அம்பு போன்ற கண்ணையுடைய கைகேயியின் மனம் மட்டும் முன்னை நிலையிலிருந்து மாறுபடவில்லை.

கு :—கம்பம் - அசைவு ; ஆடுதல். ஆடியல் யானை என்னும் கருத்தினது. கம்பம் என்பது கட்டுத்தறி எனக் கொண்டு, கட்டுத் தறியில் கட்டப்பட்ட யானை அக் கட்டில் அடங்கி யிருப்பது போலக் கைகேயியின் வரத்தால் தடைப்பட்டு அவள் வீட்டில் அடைபட்டுக் கிடக்கின்ற தயரதன், எனப் பொருள் கூறலுமாம். விம்முதல் - தேம்புதல் எனினுமாம். வெய்துறல் – மனம் வெதும்புதல். கைகேயியின் தூயவுள்ளத்தை மாற்ற மாயை செய்த தேவர்களும், தம் மாயை பலிப்பது கண்டு மகிழாமல் தயரதன் வருந்துவதைக் கண்டு மனம் வெதும்பி நடுங்கினர் என்று பொருள் படுதலால் 'உம்பரும்' என்புழிச் சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது எனக் கொள்க. "இமையோர் மாயையும் அவர் பெற்றநல் வரமுண்மையானும்" (1572) என்றுமுன் கூறியிருத்தலால் தேவர் மாயை செய்து அவள் மனம் மாற்றியது தெளியலாம். அவள் வன்கண்மை தோன்ற 'அம்பன கண்' என்றார். அம்புக்குப் புண்செய்யத் தெரிந்தும் அப்புண்ணை ஆற்றத் தெரியாதவாறு போலத் தயரதனைத் துன்பத்திலாழ்த்தியவள், அதைத் தீர்க்காமல் பார்த்துக்கொண்டிருக்கும் வன்மை தோன்ற இங்ஙனம் உவமை கூறினர் என்றலுமாம். மாயைசெய்தார் மனத்தினும் மாயை செய்யப் பெற்றாள் மனம் வன்மைமிக்கதாயது என்பதைப் புலப்படுத்தியவாறு. அன்னதே என்றது, தூய்மையிலிருந்து தூய்மையின்மைக்கு விரைந்து திரும்பிய உள்ளம், அத்தூய்மையின்மையையே பற்றிநிற்கும் வன்மையைப் புலப்படுத்தி நின்றது. ஏகாரம் தேற்றம். ஆல் - அசை. (20)

1600. அஞ்சல வாயன தல்லல்
கண்டு முள்ளம்
நஞ்சில ளுணில ளென்ன
நாண மாமால்

வஞ்சனை பண்டு மடந்தை
வேட மென்றே
தஞ்சென மாதரை யுள்ள
லார்க டக்கோர்.

அஞ்சலள், ஐயனது அல்லல் கண்டும் உள்ளம்
நஞ்சிலள், நாண் இலள் என்ன நாணம் ஆம் ஆல்;
வஞ்சனை பண்டு மடந்தை வேடம் என்றே
தஞ்சு என மாதரை உள்ளலார்கள் தக்கோர்.

பொ :—அஞ்சா நெஞ்சமுடைய கைகேயி, தன்கணவனுடைய துன்பத்தைக் கண்டும் மனம் நைந்து இரக்கம் காட்டவில்லை; கணவன் துன்பத்தைக்கண்டும் இரங்காதவள் என்று உலகம் பழிக்குமே என நாணவுமில்லை என்று அவள் நிலைமையைச் சொல்ல, சொல்லும் நமக்கே நாணமாக இருக்கின்றது; மடந்தையர் வஞ்சனையின் வேடமே என்று எண்ணிய பெரியோர்கள் பண்டுதொட்டுப் பெண்டிரைப் பற்றுக்கோடாக எண்ணுவதில்லை.

கு :—கணவனுக்கு அஞ்சி வாழும் கற்புடைப்பெண்டிர்நிலை கைகேயிக்கு இல்லை என்பார், 'அஞ்சலள்' என்றார்; அது, வினைப்பெயராய் நின்றது; 'அல்லல் கண்டும் அஞ்சலள்' என்று இயைத்து வினையாக்கலுமாம். நைந்திலள் என்பது, நஞ்சிலள் எனப் போலியாய்வந்தது. மன்னன் ஆவியன்னவளாக இதுகாறும் வாழ்ந்த கைகேயி, இன்று அவன் அல்லல் கண்டும் மனம் நையாமலும் அவ்வாறு இரக்கமின்றியிருக்கின்றாமே என நாணாமலும் இருக்கின்றாள் என்று சொல்லுதற்கே நம் வாய் கூசுகின்றது என்க. முன்னே அன்புடையாள் போல் காட்டிப் பின் வன்புடையளாக மாறியது வஞ்சனையே ஆகலின் அவளை வஞ்சனையின் வடிவம் என்று கூற வந்தவர், பொதுவகையால் மாதர் மேல் வைத்துக் கூறுகின்றார். மடந்தை வஞ்சனை வேடம் என்றது, வஞ்சனை நிறைந்தவர் பெண்டிர் என்னும் கருத்தினது. "பண்டறியேன் கூற்றென்பதனை இனியறிந்தேன் பெண்டகையாற் பேரமர்க் கட்டு" (குறள்-1083) என்புழிக் கூற்றுப் பெண்வடிவ முடையதாகக் கூறிய கற்பனையை இங்கு நினைக்க. தஞ்சம்-பற்றுக்கோடு. அம் குறைந்து, 'தஞ்சு' எனநின்றது. தக்கோர் மாதரைத் தஞ்சென உள்ளலார்கள் என்றது தயரதன் கைகேயியைத் தஞ்சென நினைந்தது தவறு என்னுங் கருத்துப் புலப்படுத்தவேண்டி. (21)

## தயரதன் மீட்டும் வினுதல்

1601. இந்நிலை நின்றவ டன்னை
யெய்த நோக்கி
நெய்ந்நிலை வேலவ னீதி
சைத்த துண்டோ
பொய்ந்நிலை யோர்கள் புணர்த்த
வஞ்ச முண்டோ
அந்நிலை சொல்லென தாணை
யுண்மை யென்ருன்.

**இந்நிலை நின்றவள்தன்னை எய்த நோக்கி**
**நெய்ந் நிலை வேலவன், 'நீ திசைத்தது உண்டோ ?**
**பொய்ந்நிலையோர்கள் புணர்த்த வஞ்சம் உண்டோ?**
**அந்நிலை சொல் எனது ஆணை உண்மை' என்ருன்.**

பொ :—இவ்வாறு நையாது நாணுது நின்ற கைகேயியை உற்று நோக்கி நெய்ப்பூச்சு நிலைபெற்ற வேலையுடைய தயரதன், "நீ மனம் திகைத்துப்போய்விட்டாயா? அல்லது, பொய்மை மிக்கவர்கள் யாரே னும் கட்டிக் கூறிய வஞ்சனைச் சொல்லைக் கேட்டாயோ? எனது ஆணை, அந்நிலையை உண்மையாகச் சொல்" என்று கேட்டான்.

கு :—நெய்ந் நிலைவேல் கூறியது, அதனைத் தயரதன் செயல்படுத் தாமையும் அதுகண்டும் கைகேயி அஞ்சாமையும் புலப்படுத்தவேண்டி. திசைத்தல்-திகைத்தல்; சித்த மயக்கம் எய்துதல். "கானத்தீயிற் கடுகுபு திசைப்ப" (பெருங்கதை - 1-43: 204) என்புழியும் அப்பொருட்டாதல் காண்க. இராமனைப் பெற்றவளாக இதுகாறும் கைகேயி செய்த பேரன்பிற்கும் இன்று அவ்விராமனைக் காடுபுகுத்தத் துணிந்த அவள் வன்பிற்கும் முரண்பாடு பெரிதாகத் தோற்றுதலின், இங்ஙனம் வினவு கின்ருன். ஐயவினு இரண்டனுள் பின்னையது மெய்மையாதல் தெளிவு. இந்த உண்மையை எண்ணிக்கூறிய தயரதன் நுண்ணறிவு வியக்கத் தக்கதாகும். 'புணர்த்த வஞ்சம்' எனவே அது மெய்யன்று என்பது புலப்படுத்தியவாறு. கூனியின் சூழ்ச்சியுரைகள் யாவும் கட்டியுரைத்த வஞ்ச உரையாதல் தெளிந்தது. கைகேயி, தன்னையே யுயிராகக் கொண் டிருப்பதாகத் தயரதன் கருதினுகலின் தனதாணையாகக் கூறுங்கால் பொய்கூருள் என எண்ணி அங்ஙனம் கூறுகின்ருன். தயரதன் தன் பொய்யாமையைத் தேற்ற, "இராமனுணை" என்று கூறியதும் காண்க. சித்தமயக்கத்தில் உள்ளோர் தாம் மயங்கியதாகக் கூருதவாறு போல வஞ்சனை புணர்க்கப்பட்டோரும் உண்மை கூருர் என்பது தெளிவு; இதை வருஞ்செய்யுளில் காணலாம். (22)

## கைகேயியின் மறுமாற்றம்

1602. திசைத்தது மில்லை யெனக்கு
வந்து தீயோர்
இசைத்தது மில்லை முனீந்த
விவ்வ ரங்கள்
குசைப்பரி யோய்தரி னின்று
கொள்வெ னன்றேல்
வசைத்திற நின்வயின் வைத்து
மாள்வெ னென்றாள்.

'திசைத்ததும் இல்லை; எனக்கு வந்து தீயோர்
இசைத்ததும் இல்லை; முன் ஈந்த இவ் வரங்கள்,
குசைப்பரியோய்! தரின் இன்று கொள்வென்; அன்றேல்,
வசைத்திறம் நின் வயின் வைத்து மாள்வென்' என்றாள்.

பொ :—'மனம் திகைப்பு எய்தியதும் இல்லை; எனக்குத் தீயவர்கள் யாரும் வந்து சொன்னதுமில்லை; கடிவாளத்தோடுங்கூடிய குதிரைகளை யுடைய அரசே! முன்கொடுத்த இவ்வரங்களை இன்று தரின் கொள்வேன்; இல்லையேல், பழி நின்மேல் வைத்து மாண்டு போவேன்' என்றாள்.

கு :—'திசைத்தது மில்லை' என்றது உண்மையாதலும், 'தீயோர் இசைத்ததுமில்லை' என்றது பொய்மையாதலும் உணர்க. எனதாணை உண்மை சொல், என்று தயரதன் கூறியும் பொய்மையே கூறினாள் கைகேயி. 'குசைப்பரியோய்' என்ற விளி, சம்பரன் போரில் கைகேயி குசைபிடித்துக் குதிரையோட்டித் தேர்செலுத்தி உதவியதற்காகக் கொடுத்தவரம் என்பதை நினைப்பித்தது; கருத்துடையடைகொளி யணி. 'ஈந்த' என்ற சொல்லால், ஈந்த தயரதன் உயர்வும் பெற்ற கைகேயியின் இழிபும் தோற்றுவித்துத் தப்பாது கொடுத்து அவன் உயர்வு காக்கத் தூண்டியவாறு. முன் ஈவதாக வாக்களித்ததைப் பின் மறுப்பதால் வரும் வசையும், மனைவியின் மரணத்திற்குக் காரணமானன் என்ற வசையும், பொய்கூறினன் என்ற வசையும் என அவனுக்கு வரும் வசை பலதிறப்படுதலின், 'வசைத்திறம்' என்றாள். நீ திசைத்த துண்டோ? புணர்த்த வஞ்சமுண்டோ? என்ற வினக்கள் வரம் கொடுப் பதற்கு விருப்பமின்மை யுணர்த்தலின், 'தரின் கொள்வேன்; அன்றேல் மாள்வேன்' என்று வரம் பெறுவதில் தனக்குள்ள உறுதியைக் கைகேயி புலப்படுத்தினாள் என்க. (23)

## தயரதன் வருந்தல் 1603-1607

**1603.** இந்த நெடுஞ்சொலவ் வேழை
கூறு முன்னே
வெந்த கொடும்புணில் வேனு
ழைந்த தொப்பச்
சிந்தை திரிந்து திகைத்த
யர்ந்து வீழ்ந்தான்
மைந்த னலாதுயிர் வேறி
லாத மன்னன்.

இந்த நெடுஞ்சொல் அவ் ஏழை கூறும் முன்னே,
வெந்த கொடும் புணில் வேல் நுழைந்தது ஒப்பச்,
சிந்தை திரிந்து, திகைத்து, அயர்ந்து வீழ்ந்தான்,
மைந்தன் அலாது உயிர் வேறு இலாத மன்னன்.

பொ :—மைந்தனாகிய இராமன் அல்லது உயிர்வேறு இல்லாத தயரதன் இந்த வஞ்சினச் சொல்லை, அக் கைகேயி கூறிமுடிப்பதற்கு முன், தீயால் வெந்த கொடிய புண்ணில் வேல் நுழைந்தது போலத் துன்புற்று மனநிலை திரிந்து திகைப்படைந்து சோர்ந்து வீழ்ந்தான்.

கு :—நெடுஞ்சொல்-நெடுமொழி; வஞ்சினம். கைகேயியை 'ஏழை' என்றது, அவள் அறிவின்மை புலப்படுத்தவேண்டி. இராமனே தயரதனுக்கு உயிர் என்பதை: "ஓவிய வெழிலுடை யொருவனை யலதோர் ஆவியுமுடலமுமிலதென அருளின் மேவினன் உலகுடை வேந்தர்தம் வேந்தன்" (பால-304) என்று முன்னும் மொழிந்தமை காண்க. "வெந்த கொடும்புணில் வேல் நுழைந்த தொப்ப" என்றது இரட்டையுவமம். கைகேயி கேட்ட வரங்களுக்கு வெந்த கொடும்புண்ணும் இவ்வரம் தராது மறுத்தால் இறப்பேன் என்றதற்கு வேல் நுழைதலும் உவமையாம். கைகேயி கேட்ட வரத்தால் வருந்தியிருந்த தயரதனுக்கு அவ்வரம் கொடாதொழியின் மாள்வேன் என்று அவள்கூறியது மிகப்பெரிய வருத்தத்தை யுண்டாக்கியது என்பதை விளக்கியவாறு. "நின் மகன் பிரிவால் நீ இறப்பாயாக" என்று காட்டில் ஓர் முனிவன் இட்ட சாபம் வெந்தகொடும்புண் போல் தயரதன் மனத்தை வருத்திக் கொண்டிருந்ததென்றும், கைகேயி இராமனை வனம்புகுவித்தல் அப்புண்ணில் வேல் நுழைந்தது போல மேலும் பெருந்துன்பத்தை யுண்டாக்கியது என்றும் கொள்ளலுமாம். முனிவன் சாபமும் கைகேயியின் வரமும் அரசன் மரணத்தை உறுதிசெய்தல் காண்க. வெந்த புண்ணில் வேல் நுழைந்தால் விளைவது மரணமேயாம். "வெந்ததோர் புண்ணின்கண் வேல்

கொண்டு நுழைப்பான் போல்" (கலி-120) என்பதும் காண்க. மைந்தன்பிரிய மன்னன் உயிர்நீங்கும் என்பதைப் புலப்படுத்த வேண்டி "மைந்தனலாதுயிர் வேறிலாத மன்னன்" என்ருர். (24)

1604. ஆகொடி யாயெனு மாவி
காலு மந்தோ
ஓகொடி தேயற மென்னு
முண்மை யொன்றும்
சாக. வெனுவெழு மெய்த
ளாடி வீழும்
மாகமு நாகமு மண்ணும்
வென்ற வாளான்.

'ஆ! கொடியாய்!' எனும்; ஆவி காலும்; 'அந்தோ!
ஓ! கொடிதே அறம்!' என்னும்; 'உண்மை ஒன்றும்
சாக!' என எழும்; மெய் தளாடி வீழும்;
மாகமும் நாகமும் மண்ணும் வென்ற வாளான்.

பொ :—விண்ணுலகமும் பாதாளமும் மண்ணுலகமும் வென்ற வாட்படையுடைய தயரதன், 'ஆ கொடியவளே!' என்பான்; உயிர் சோர்வான்; 'ஐயோ! ஓ அறம் கொடியதே!' என்பான்; 'சத்தியம் ஒன்று மட்டும் அழிவதாக' என்று சொல்லிக்கொண்டு எழுவான்; எழ முடியாமையால் உடம்பு தள்ளாடி வீழ்வான்.

கு :—மூன்றுலகமும் வென்றவன், ஒருபெண்ணுக்கு அடங்கி வருந்த நேர்ந்ததே என்ற கருத்துத்தோன்ற இறுதியடி அமைந்துளது. ஆ, அந்தோ, ஓ என்பன இரக்கக் குறிப்புணர்த்தின. உயிரனைய இராம பிரானைக் காடு புகுத்தும் கொடியள் ஆதலின், 'கொடியாய்' என்ருன். அவள் கொடுமைநினைக்குங்கால் உயிர் நீங்குவதுபோன்ற வருத்தம் மேற்படலின், 'ஆவிகாலும்' என்றும், அறம்நோக்கி அவளைக் கொல்லாது விடுக்கவேண்டியிருத்தலின், 'ஓகொடிதே அறம்' என்றும், வாய்மை காக்க வேண்டின் இராமனைக் காடாளச்செய்யவேண்டி வருமாதலின், "உண்மை யொன்றும் சாக" என்றும், கூறினுன். அங்ஙனம் தான் கூறியது பொருந்தாது என்ற எண்ணத்தால் மெய் நடுங்குதலின், தள்ளாடி வீழ்ந்தான் என்க. "அறத்தினுரங்கினிக் கொடிதென லாவதொன்றியாதே" (1444) எனச் சுமந்திரன் கூறியதும் காண்க. (25)

1605. நாரிய ரில்லையிஞ் ஞால
மேழு மென்னக்
கூரிய வாள்கொடு கொன்று
நீக்கி யானும்
பூரிய ரெண்ணிடை வீழ்வ
னென்று பொங்கும்
வீரியர் வீரம் விழுங்கி
நின்ற வேலான்.

'நாரியர் இல்லை இஞ் ஞாலம் ஏழும் என்னக்
கூரிய வாள்கொடு கொன்று நீக்கி யானும்
பூரியர் எண்ணிடை வீழ்வன்' என்று பொங்கும்;
வீரியர் வீரம் விழுங்கி நின்ற வேலான்.

பொ:—வீரர்களுடைய வீரத்தை விழுங்கி நிலைபெற்ற வேற்படையுடைய தயரதன், "இவ்வுலகம் ஏழிலும் பெண்களே இல்லை என்று கூறுமாறு கூர்மையான வாளைக்கொண்டு கொன்று ஒழித்துவிட்டு, யானும் கீழ்மக்கள் எண்ணிக்கையில் ஒருவனாக வீழ்வேன்" என்று சினம் பொங்குவான்.

கு.—வீரியரை வென்ற வேந்தன் நாரியரைக் கொன்று பூரியனாக எண்ணுமாறு சினம் பொங்கிற்று என்க. பெண்டிரைக் கொல்லுதல் வீரர்க்கு அழகன்று என்பதுணர்ந்த தயரதன், கைகேயியின் கொடுமை நோக்கி இங்ஙனம் கூறினன் என்க. தான் இழிவடையினும் தன்னுயிரனைய இராமனுக்குக் கேடு சூழ்ந்த பெண்ணினம் ஒழிந்தால் போதும் என்ற எண்ணமே இங்ஙனம் சொல்லச் செய்தது. பெண்டிருள் ஒருத்தி இருப்பினும் மீண்டும் இக்கொடுமை பரவும் என்பது கருத்து. பூரியர்-கீழ்மக்கள். (குறள்-241) அவர் எண்ணிடை வீழ்தலாவது, பூரியர்கள் வரிசையில் ஒருவனாக எண்ணப்படுதல். பொங்குதல்-சினமிகுதல். நாரியரைக் கொல்பவன் பூரியனேயாவான் என்பது கருத்து. பெண்ணினத்தில் ஒருத்தி செய்த கொடுமை, எல்லாப் பெண்டிரையும் கொடியராக்கியது. (26)

1606. கையொடு கையைப் புடைக்கும்
வாய்க டிக்கும்
மெய்யுரை குற்ற மெனப்பு
ழுங்கி விம்மும்

நெய்யெரி யுற்றென நெஞ்ச
ழிந்து சோரும்
வையக முற்று நடந்த
வாய்மை மன்னன்.

கையொடு கையைப் புடைக்கும்; வாய் கடிக்கும்;
'மெய்யுரை குற்றம்' எனப் புழுங்கி விம்மும்,
நெய் எரி உற்றென நெஞ்சு அழிந்து சோரும்;
வையகம் முற்றும் நடந்த வாய்மை மன்னன்.

பொ:—உலக முழுமையும் பிரசித்திபெற்ற சத்தியத்தையுடைய தயரதன், கையோடு கையைத் தட்டுவான்; வாய் இதழைச் சினக் குறிப்புத் தோன்றக் கடிப்பான்; மெய் சொல்லுவதே குற்றம் என மனம் புழுங்கித் தேம்புவான்; நெருப்பையுற்ற நெய்போல நெஞ்சமுருகிச் சோர்வான்.

கு:—வையக முற்றும் நடந்த வாய்மை மன்னன், மெய்யுரை குற்றம் என்று எண்ண நேர்ந்ததைப் புலப்படுத்தியவாறு. கைபுடைத்தலும் வாய்கடித்தலும் சினத்தால் நிகழும் மெய்ப்பாடு. உண்மை யொன்றும் சாக என்று மேல் கூறியவன், இங்கு 'மெய்யுரை குற்றம்' என்கின்ருன்; மெய்யுரையைக் காக்க இராமனைக் காட்டிற்கனுப்ப வேண்டி வருதலின். விம்முதலும் சோர்தலும் அவலம் பற்றிய மெய்ப்பாடு. நெருப்பை யடைந்த நெய் உருகுதல் போலத் துன்பத் தால் நெஞ்சுருகியது என்க. நெருப்பையுற்ற நெய் உருவழிதல் போல் துன்பத்தால் நெஞ்சு அழிந்தது எனலும் ஆம். வாய்மையிற் சிறந்தவன் தயரதன் என்பது உலகறிந்தது என்பார், "வையக முற்று நடந்த வாய்மை மன்னன்" என்ருர். (27)

**1607.** ஒறுப்பினு மந்தர முண்மை
யொன்று மோவா
மறுப்பினு மந்தர மென்று
வாய்மை மன்னன்
பொறுப்பினு மங்ஙிலை போகி
லாளை வாளால்
இறுப்பினு மாவ திரப்ப
தென்றெ ழுந்தான்.

'ஒறுப்பினும் அந்தரம்; உண்மை ஒன்றும் ஓவா
மறுப்பினும் அந்தரம்' என்று வாய்மை மன்னன்,
'பொறுப்பினும் அந்நிலை போகிலாளை வாளால்
இறுப்பினும் ஆவது இரப்பது' என்று எழுந்தான்.

பொ :—'கைகேயியைத் தண்டித்தாலும் துன்பம், சத்தியம் என்ற ஒன்றிலிருந்து நீங்கி அவள் கேட்ட வரத்தை மறுத்தாலும் துன்பம்' என்று எண்ணிய வாய்மையுடைய தயரதன், ஒறுத்தலும் மறுத்தலும் செய்யாது பொறுத்திருந்தாலும், அந்த நிலையில் நின்றும் மாறுபடாத கைகேயியை வாளினல் கொல்லுவதைக் காட்டிலும் அவளை இரந்து கேட்பது சிறந்தது என்று துணிந்து எழுந்தான்.

கு :—ஒறுத்தல் - தண்டித்தல். ஓவா, செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம்; ஓவா - நீங்கி. ஒறுத்தால், பெண்கொலை புரிந்த பாவமும் பழியும் வருவது நோக்கி, 'ஒறுப்பினும் அந்தரம்' என்ருர். அந்தரம் - துன்பம். கொடுத்த வரத்தைக் கொடுக்க மறுத்தாலும் வசைத்திறம் நம் வயின் வைத்து மாள்வாள். மேலும் வாய்மை தவறினன் என்ற பழியும் பாவமும் பரவும். எனவே பெண்கொலைப் பாவமும் பொய்யுரைத்த பாவமும் நிலைபெறும்; ஆதலால், 'மறுப்பினும் அந்தரம்' என்ருன். பொறுத்தல் - காலம் தாழ்த்தலும் ஆம். ஒருதும் மருதும் பொறுத்துக் கொண்டு அமைதியாக இருத்தலைநோக்கியேனும் கைகேயி தன்னிலை மாறுவாள் என்று தயரதன் எண்ணி இருந்தும் பயனில்லை என்பதைப் புலப்படுத்தியவாறு. இறுத்தல் – இறுதியைச் செய்தல்; கொல்லுதல். 'இரப்பது ஆவது' என மாறுக ஆவது – சிறப்புடையது. இறுப்பினும் என்புழி 'இன்' உறழ்ச்சிப் பொருளது; பொறுப்பதைக் காட்டிலும் இறுப்பதைக் காட்டிலும் இரப்பது சிறந்தது எனப் பொருள் கொள்ளலு மாம். (28)

தயரதன் கைகேயியின் காலில் வீழ்தல்

1608. கோன்மேற் கொண்டுங் குற்ற
★ மகற்றக் குறிகொண்டார்
போன்மே லுற்ற துண்டெனி
னன்ரும் பொறையென்ருக்
கான்மேல் வீழ்ந்தான் கந்துகொல்
யானைக் களிமன்னர்
மேன்மேல் வந்து முந்தி
வணங்க மிடைதாளான்.

கோல் மேற்கொண்டும் குற்றம் அகற்றக் குறி கொண்டார்
போல், மேல் உற்றது உண்டு எனின் நன்றும் பொறை என்னக்,
கால் மேல் வீழ்ந்தான், கந்து கொல் யானைக் களி மன்னர்,
மேல் மேல் வந்து முந்தி வணங்க மிடைதாளான்.

பொ :—கட்டுத்தறியை முறிக்கின்ற யானைப் படையுடைய அரசர்கள் மேலும் மேலும் வந்து முற்பட்டு வணங்க நெருங்குதற்குக் காரணமான அடிகளையுடைய தயரதன், செங்கோலை மேற்கொண்டிருந்தும் தம் நாட்டில் குற்றம் நிகழாமல் நீக்க வேண்டித் தம் தாழ்வு நோக்காது நாட்டிற்கு மேல்வரும் நன்மை நோக்கும் மன்னர் போல, மேல் வருகின்றதொரு நன்மை உண்டு எனின் பொறுமை நன்றாகும் என்று கருதிக் கைகேயியின் கால்மேல் வீழ்ந்தான்.

கு :—'குற்றமகற்றக் குறி கொண்டார்' என்றது பொற்கைப் பாண்டியன் போன்றாரை. அவன், தன்னாட்டில் குற்றம் நிகழாதிருக்கும் பொருட்டு நாட்டுக் காவலனாகிய தன் பெருமை நோக்காது வீட்டுக் காவலன்போல், யாத்திரை சென்றிருந்த அந்தணன் வீட்டை நாள் தோறும் காவல் செய்திருந்ததை நினைக்க. தயரதனும் தன் பெருமை நோக்காது கைகேயியின் காலில் வீழ்ந்தால் இராமன் காடுபுகுதலாகிய குற்றம் நிகழாதிருக்கும் நன்மையுண்டாகும் என எண்ணி அது செய்தான் என்க. உறுவது எனற்பாலது, 'உற்றது' என எதிர்வு இறப்பாய்க் காலமயக்கம் எய்திற்று. அடிவணங்கும் மன்னரின் படைப்பெருமை தோன்ற 'யானை' கூறினர். மன்னர் பன்மையால் முன்வந்தார்க்கன்றி வணங்க இடங்கிடையாமையின் மேல்மேல் வந்து முந்தி வணங்க மிடைதல் கூறினர். "நின்றீமின் மன்னீர் நெருநல் திறை கொணர்ந்து முன்றந்த மன்னர் முடிதாக்க - இன்றும், திருந்தடி புண்ணாகிச் செவ்வி யிலனே, பெருந்தண் உறந்தையார் கோ' (முத்தொள்-67) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். வலிய மன்னர்க்கு அரியவனாகிய தயரதன், மெல்லிய மங்கைக்கு எளியனாய்க் கால்மேல் வீழ்ந்த எளிமை புலப்பட அவன் அருமையும் உடன்கூறினர். (29)

## தயரதன் வேண்டுகோள் 1609-1612

**1609.** கொள்ளா னின்சே யிவ்வர
சன்னான் கொண்டாலும்
நள்ளா திந்த நானில
ஞாலந் தனிலென்றும்

உள்ளா ரெல்லா மோத
வுவக்கும் புகழ்கொள்ளாய்
எள்ளா நிற்கும் வன்பழி
கொண்டென் பயனென்றான்.

'கொள்ளான் நின் சேய் இவ்வரசு;
அன்னான் கொண்டாலும்,
நள்ளாது இந்த நானிலம்;
ஞாலம்தனில் என்றும்
உள்ளார் எல்லாம் ஓத
உவக்கும் புகழ் கொள்ளாய்,
எள்ளா நிற்கும் வன்பழி
கொண்டு என்பயன் ?' என்றான்.

பொ:—'(நீ விரும்பினாலும்) நின்மகன் இந்த அரசைக் கொள்ள மாட்டான்; அவன் ஒருகால் கொண்டாலும் இந்த உலகம் அதை உடன் படாது; (முறைப்படி இராமன் முடி சூடச் செய்து) எவ்விடத்தும் எக் காலத்தும் உலகத்தில் உள்ளார் அனைவரும் பாராட்டிக் கூற மகிழ்தற்குக் காரணமான புகழைக் கொள்ளாமல் (பரதனுக்குப் பாரளித்து) உலக மக்கள் என்றும் இகழ்ந்து பேசுதற்குரிய வலிய பழியைக் கொண்டதால் பயன் என்ன ?' என்று கூறினான் தயரதன்.

கு :—தயரதன், பரதன் பண்புகளை நன்கறிந்தவன் ஆதலின் 'கொள்ளான்' என்றான். 'என்சேய்' என முன்னர்க் கைகேயி பிரித்துக் கூறியவாறே தயரதனும் பரதனை, 'நின்சேய்' என்றான். நின்சேயே யாயினும் கொள்ளான் என அவன் பண்பினைச் சிறப்பித்தவாறு. மூத்த வற்குரித்து அரசு என்ற முறை மாறுபடுதலின், 'இந்த நானிலம் நள் ளாது' என்றான். நானிலம் – உலகம். நள்ளுதல் – விரும்பி யுடன் படல். முறைப்படி ஒழுகுவதால் வரும் நன்மையும் அது மாறுபட நடப்ப தால் வரும் தீமையும் புலப்படுத்தினனாகலின் 'வன்பழி கொண்டென் பயன்' என்றான். புகழ் பொன்றாதுநிற்பதொன்றாகலின் உலகமுள்ள அளவும் அவள்புகழ் மக்களால் உரைக்கப்படும் என்பார், "என்றும் உள்ளா ரெல்லா மோத" என்றார். உவத்தற்குக் காரணமான புகழ் என விரிக்க. புகழ் இவ்வாறு கூறப்பட்டதால், 'துன்புறுதற்குக் காரணமான வன்பழி' என அடையை யெதிர்மறுத்துப் பழியொடு சேர்க்க. 'ஞாலந் தனில் என்றும் உள்ளாரெல்லாம்' என்பதை எள்ளுதற்கும் இயைக்க. கூனியின் சொல் கேளாமுன் கைகேயி கூறிய, "பிறந்திறந்துபோய்ப் பெறுவது மிழப்பதும் புகழேல்.........வரன் முறை திறம்புதல் வழக்கோ" (1561) என்ற கருத்திற்கும் இங்குத் தயரதன் கூறிய கருத்திற்கும்

ஒற்றுமையுண்மை காண்க. அவ்விருவர்க்கும் கருத்தொன்றியிருந்த நிலையில் தோன்றினமையின் அவ்வொப்புமை காணப்படுகின்றது. (30)

1610. வானோர் கொள்ளார் மண்ணவ
ருய்யா ரினிமற்றென்
ஏனோர் செய்கை யாரொடு
நீயிவ் வரசாள்வாய்
யானே சொல்லக் கொள்ள
விசைந்தான் முறையாலே
தானே நல்கு முன்மக
னுக்குந் தரையென்றான்.

'வானோர் கொள்ளார்; மண்ணவர் உய்யார்; இனி மற்று என் ஏனோர் செய்கை? யாரொடு நீ இவ் அரசு ஆள்வாய்? யானே சொல்லக் கொள்ள இசைந்தான், முறையாலே தானே நல்கும் உன் மகனுக்கும் தரை' என்றான்.

பொ:—'(இராமனைக் காட்டிற்கு அனுப்பிவிட்டுப் பரதனுக்கு முடி சூட்டுதலை) வானுலகத்துத் தேவரும் ஏற்றுக்கொள்ளமாட்டார்கள்; மண்ணுலகத்து மக்களோ (இராமனைப் பிரிந்து) உய்ந்திருத்தலை விரும்பமாட்டார்கள்; இரண்டுலகத்தோரும் இவ்வாறு ஆனபின் கீழுலகத்தோராகிய நாகர்களின் செய்கையும் அத்தகையதே, வேறில்லை; அங்ஙனம் மூவுலகத்தவரும் உடன்படாதபோது யாரோடு இருந்து இந்த அரசை ஆளப்போகின்றாய்? யானே விரும்பி அழைத்துச் சொல்ல இராமன் முறையாலே அரசேற்க இசைந்தான்; நீ விரும்பினால் உன் மகனுக்கும் தானே தரையைக் கொடுத்துவிடுவான்' என்று கூறினான்.

கு:—"மண்ணவர் உய்யார்" என்றது, உண்ணும் நீரினும் உயிரினும் இராமனையே உவப்பவராகலின் என்க. ஏனோர் என்றது நாகரை. ஏனோர் செய்கை இனி மற்றென் என்றது, அவர் செய்கையும் அன்னதே என்னுங் கருத்தினது. மண்ணவருய்யார் வானோரும் ஏனோரும் கொள்ளார் எனவே ஆளப்படுவோர் எவரும் இலர் என்பான், "யாரொடு நீ யிவ்வரசாள்வாய்" என்றான். இராமன் அரசேற்கும் ஆசையிலன் என்பது புலப்படுத்த 'யானே சொல்லக் கொள்ள இசைந்தான்' என்றான். முறையாலே கொள்ள இசைந்தான் என மாற்றி மூத்தவற்குரித்து அரசு என்ற முறையுண்மையால் இசைந்தான் எனலும் ஆம். தந்தையாகிய யான் சொல்லக் கொள்ள இசைந்த முறைப்படி தாயாகிய நீ சொல்லப் பரதனுக்கும் கொடுப்பான் எனலும்

ஆம். அரசு பெற இராமனைக் காட்டிற்குத் துரத்தவேண்டியதில்லை; அவன் தானே நல்குவான் பரதனுக்கும்; வரத்தால் பெற வேண்டியதில்லை என்க. அவன் தானே நல்குவானாயின் மூவுலகத்தோரும் உடன்படுவர். பரதனும் இடையூறின்றி அரசாளலாம் என்பதும் குறிப்பால் தோன்றும். தயரதனிடம் வரத்தால் பெறுவதினும் இராமனிடம் கேட்டுப் பெறுவது சிறப்புடைத்து என்றவாறு. (31)

1611. கண்ணே வேண்டு மென்னினு
மீயக் கடவேனென்
உண்ணே ராவி வேண்டினு
மின்றே யுனதன்றோ
பெண்ணே வண்மைக் கேகயன்
மானே பெறுவாயேல்
மண்ணே கொண்ணீ மற்றைய
தொன்றும் மறவென்றான்.

'கண்ணே வேண்டும் என்னினும் ஈயக்கடவேன்; என் உள் நேர் ஆவி வேண்டினும் இன்றே உனது அன்றோ? பெண்ணே! வண்மைக் கேகயன் மானே! பெறுவாயேல் மண்ணே கொள் நீ; மற்றையது ஒன்றும் மற' என்றான்.

பொ.—'என் கண்களை வேண்டும் என்று நீ கேட்டாலும் கொடுக்கச் சித்தமாயுள்ளேன்; என் உடம்பினுள் இருக்கின்ற உயிரையே கேட்டாலும் இப்பொழுதே உன்னுடையதன்றோ? இரக்கத்தை இயல்பாகக்கொண்ட பெண்ணே! வள்ளல் தன்மையுடைய கேகயனுக்கு மகளே! வரம் பெறுவதாயிருந்தால் மண்ணை மட்டும் கொள்க; மற்றையதாகிய ஒரு வரத்தை மட்டும் மறந்து விடு' என்றான்.

கு:—என் கண்ணையும் உயிரையும் ஈந்தாலும் ஈவேன்; இராமனைக் காட்டிற்குத் துரத்த உடன்படேன் என்ற குறிப்புக் காண்க. தயரதனுக்கு இராமன் கண்ணினும் உயிரினும் சிறந்தான் என்பதைப் புலப்படுத்தியவாறு. 'ஆவி இன்றே உனது' என்றது, அவள் கையிலுள்ளது என்னும் குறிப்பினது. அவள் இராமனைக் காட்டிற்குத் துரத்தாது அவ்வாவியை உடம்பில் நிலைபெறச் செய்தாலும் அல்லது, அவனைக் காடுபுகுத்தி அதினின்று பிரியச்செய்தாலும் அவள் விருப்பின்படி செய்யலாம் என்பது கருத்து. ஆணினும் பெண்பிறவிக்கு இரக்க மிகுதி என்பது தோன்ற, 'பெண்ணே!' என்றும், வள்ளல் தன்மை அவள் பிறப்புரிமை என்பது தோன்ற 'வண்மைக் கேகயன்

மானே !' என்றும் கூறி இவ்வரங்களைப் பெருதிருத்தற்கே தகுதியுடையவள் கைகேயி என்பதைப் பெற வைத்தலின் கருத்துடையடைகொளியணி. பெண் தன்மைக்கும் வண்மைக்குலப்பிறப்பிற்கும் மாருக வரம் பெறமாட்டாய் என்னும் கருத்துத் தோன்ற, 'பெறுவாயேல்' என்ருன். அரசாட்சியின்மேல் தனக்குள்ள வெறுப்புத் தோன்ற அரசு என்ளுது 'மண்ணே' என்றும், பரதன் கொள்ளான் என்பது தோன்ற, 'கொள் நீ' என்றும், இராமனைக் காட்டிற்குத் துரத்தல் என்ற வரத்தை வாயினல் கூறவும் மாட்டாதவனய், 'மற்றையது' என்றும், அந்த ஒன்றைக் கொடேன் என மறுத்தல் வாய்மைக்கு இழுக்காதலின் 'மற' என்றும் கூறினன். 'மண்ணே கொள் நீ' என்றது, 'நின்வாயில் மண்ணே கொள்' என வேறு மோர் இழிபொருள் தோற்றுவித்தது. (32)

**1612.** வாய்தந் தேனென் றேனினி
யானே வதுமாற்றேன்
நோய்தந் தென்னை நோவன
செய்து நுவலாதே
தாய்தந் தென்னத் தன்னை
யிரந்தாற் றழல்வெங்கட்
பேய்தந் தீயு நீயிது
தந்தாற் பிழையாமோ.

'வாய் தந்தேன் என்றேன்; இனி, யானே அது மாற்றேன் ;
நோய் தந்து என்னை நோவன செய்து நுவலாதே;
தாய் தந்து என்னத் தன்னை இரந்தால் தழல் வெம் கண்
பேய் தந்து ஈயும் ; நீ இது தந்தால் பிழையாமோ ?'

பொ :—'வாயால், 'தந்தேன்' என்று கூறிவிட்டேன்; இனி, அச்சொல்லை யான் மாற்றமாட்டேன்; எனக்கு வருத்தத்தைக் கொடுத்துவிட்டு மேலும் துன்புறத்தக்கவற்றைச் செய்து பேசாதே; நெருப்புப் போன்று விழிக்கும் கொடிய கண்ணையுடைய பேயும் தன்னை இரந்து கேட்டுக்கொண்டால் தாய் தருவதுபோல அன்புடன் கொடுக்கும்; (இராமனுக்குத் தாயாகிய) நீ இதைத் தந்தால் தவறு ஆகுமா? ஆகாது காண்.'

கு :—'வாயால்' என மூன்ருவது விரிக்க. வாய்மையாகத் தந்தேன் எனலும் ஆம். வாய்–வாய்மை. யானே என்புழி ஓகாரம் சிறப்புணர்த்திற்று. அது என்றது 'தந்தேன்' என்ற சொல்லை. 'நோய்தந்து' என்றது, வரமிரண்டால் பரதன் பாராள, இராமன் காடாளச் செய்க

என்று கேட்டுத் தயரதனைத் துன்பத்தில் ஆழ்த்தியது. வரங்கள் கொடுக்காவிட்டால் வசைத்திறன் நின்வயின் வைத்து மாள்வென் என்பன போன்ற சொற்களைச் சொல்லி மேலும் வருத்தாதே என்பான், 'நோவன செய்து நுவலாதே' என்றான். ஒரு குழந்தையைத் தாய் தூக்கச்செல்லும்போது, பேய் சென்று அக்குழந்தையை எடுத்துத் தின்னத்தொடங்கிற்றாக, அத்தாய் கண்டு அலறி அப்பேயை யாசித்துக் கேட்டுக்கொள்ள அத்தாயின் துன்பநிலையைப் பார்த்துப் பேய் இரக்கங்கொண்டு அன்புள்ளதாய், குழந்தையைத் துன்புறுத்தாது அத்தாய்கையில் கொடுக்கும் என்பார், இரந்தாற் பேய் தந்தீயும் என்றார். பேய் தாய் போலக் கொடுக்கும்போது தாய் கொடுப்பது தகுதியுடையதே என்பான், 'நீ இது தந்தால் பிழையாமோ' என்றான். இது என்றது, இராமனைக் காட்டுக்குத் துரத்துவதை மறப்பதாகிய வரத்தை; வாயால் கூறக் கூசிச் சுட்டால் உணர்த்தினன். இராமனைக் காட்டிற்கு அனுப்ப வேண்டும் வரம், பேய் கையில் சேயைக் கொடுப்பது போன்றதாகவும், அவ்வரத்தை மறப்பது, பேய் சேயைத் தாய்கையில் கொடுப்பது போன்றதாகவும், தயரதன் இரப்பது தாய் இரப்பது போன்றதாகவும் உவமையை விரித்துக் கொள்க. (33)

## கைகேயி மறுமொழி

**1613.** இன்னே யின்னே பன்னி
யிரந்தா னிகல்வேந்தன்
தன்னே ரில்லாத் தீயவ
ளுள்ளந் தடுமாறாள்
முன்னே தந்தா யிவ்வர
நல்காய் முனிவாயேல்
என்னே மன்னா யாருளர்
வாய்மைக் கினியென்றாள்.

இன்னே இன்னே பன்னி இரந்தான் இகல் வேந்தன்;
தன் நேர் இல்லாத் தீயவள் உள்ளம் தடுமாறாள்
'முன்னே தந்தாய், இவ்வரம் நல்காய் முனிவாயேல்,
என்னே மன்னா! யார் உளர் வாய்மைக்கு இனி?' என்றாள்.

போ :—வலிமை மிக்க தயரதன், இவ்வாறே பல சொல்லி யாசித்தான்; தனக்கு உவமையில்லாத சிறந்த கொடியவளாகிய கைகேயி மனம் மாறாதவளாய், அரசே! "இவ்வரங்களை முன்னே கொடுத்த நீ இப்போது தாராது கோபிப்பாயானால், என்னே! உண்மை பேசுதற்கு இனி யார் இருக்கின்றார்கள்?" என்று கூறினாள்.

கு :—தன் தகுதிக்கு ஏலாத பணிமொழிகூறி இரந்தான் என்பார், இகல் வேந்தன் இரந்தான் என்றார். கட்டளை இடவேண்டிய வேந்தன் பன்னி இரந்தான் என்பது கருத்து. 'தன்னேரில்லாத் தீயவள்' என்றது தீயவை யாவையினுஞ் சிறந்தமை பற்றி. உள்ளம் தடுமாறுமைக்குக் காரணம் அத் தீயதன்மையே என்பது கருத்து. கொழுநனை 'மன்ன' என்று விளித்தது, வாய்மைகாத்தற்குரியன் என்னும் கருத்துப் புலப்பட வேண்டி. 'என்னே' என்றது இரக்கக்குறிப்பு. வாய்மைகாக்கவேண்டிய மன்னனே தவறினல் இனி வாய்மை பேசுவோரே இலராவர் என்பது கருத்து. "நும்மோ ரன்னோர் மாட்டும் இன்ன, பொய்யொடு மிடைந் தவை தோன்றின், மெய்யாண்டுளதோ விவ்வுலகத்தானே" (அகநா—286) என்பது இங்கு ஒப்புநோக்கத்தகும். (34)

### மறுமொழி கேட்ட மன்னன் கூறல் 1614—1616

**1614.** அச்சொற் கேளா வாவி
புழுங்கா வயர்கின்றான்
பொய்ச்சொற் பேணு வாய்மொழி
மன்னன் பொறைகூர
நச்சுத் தீயே பெண்ணுரு
வன்று மெனநாணு
முச்சற்றார் போற் பின்னு
மிருந்தே மொழிகின்றான்.

அச்சொல் கேளா ஆவி புழுங்கா அயர்கின்றான்
பொய்ச்சொல் பேணு வாய்மொழி மன்னன் பொறை கூர
'நச்சுத் தீயே, பெண் உரு அன்றும்' என நாணு
மூச்சு அற்றார் போல் பின்னும் இருந்தே மொழிகின்றான்.

பொ :—பொய்ச்சொல்லையே விரும்பாத, மெய்ம்மையே பேசுகின்ற தயரதன், அவள் சொன்ன அச்சொல்லைக்கேட்டு உயிர் புழுங்கிச் சோர் கின்றவனாய் மிக்க பொறுமை மேற்பட 'இவ்வுரு நச்சுத்தன்மையுள்ள நெருப்பே; பெண்ணுருவம் அன்று' என்று வெட்கி மூச்சு அற்றவர் போல இருந்து, மேலும் சொல்லுகின்றான்.

கு :—கேளா, புழுங்கா, நாணு என்பன செய்யா என்னும் வாய் பாட்டு வினையெச்சங்கள். அயர்கின்றான், முற்றெச்சம். 'பேணு...மன் னன்' ஈறுகெட்ட எதிர்மறைப்பெயரெச்சம். பொய்ச் செல்லை விரும்பாத தயரதன் தன்னை வாய்மைதவறியவனாகக் கைகேயி கூறினமையின் ஆவி புழுங்கி அயர்ந்து நாணி மூச்சு அற்று இறந்தவர்போல அசைவு

அற்று இருந்து, மீண்டும் பேசத் தொடங்குகின்ருன் என்க. பின்னும் மொழிகின்ருன் என்று இயைக்க. கூர்தல்-மிகுதல். மூச்சு, 'முச்சு' என முதல் குறுகியது. நச்சாகிய தீ என்க. தன்னைக் கொல்வது போன்ற சொல்லைச் சொன்னமையால் கொல்லும் இயல்புடைய நச்சுத்தீயே; பெண்ணுரு அன்று எனத் தயரதன் கூறவேண்டியதாயிற்று. 'நாக மெனுங் கொடியாள்' (1594) என முன் கூறியதும் நினைக்க. (35)

**1615.** நின்மக னுள்வா னீயினி
தாள்வாய் நிலமெல்லாம்
உன்வய மாமே யாளுதி
தந்தே னுரைகுன்றேன்
என்மக னென்க ணென்னுயி
ரெல்லா வுயிர்கட்கும்
நன்மக னிந்த நாடிற
வாமை நயவென்ருன்.

'நின் மகன் ஆள்வான்; நீ இனிது ஆள்வாய்; நிலம் எல்லாம் உன் வயம் ஆமே; ஆளுதி; தந்தேன்; உரை குன்றேன்; என் மகன், என் கண், என் உயிர், எல்லா உயிர்கட்கும் நல் மகன், இந்த நாடு இறவாமை நய!' என்ருன்.

பொ :—'நின்னுடைய மகன் பரதன் ஆள்வானுக; நீயும் இனிதே ஆள்வாயாக! நிலமுழுதும் உன் வயமாகும்; ஆள்க; தந்துவிட்டேன்; சொன்னசொல் தவறேன்; ஆனுல், என்மகனும், என்னுடைய கண்ணும் உயிரும் போன்றவனும், எல்லா உயிர்களுக்கும் நல்ல மகனுக விளங்குபவனும் ஆகிய இராமன் இந்த நாடுகடவாதநிலையைமட்டும் விரும்பு' என்று கூறினுன்.

கு :—பரதன் அரசாளவேண்டும் என்ற வரத்திற்கு உடன்பட்டமையை இரண்டு அடிகளில் விரித்துக்கூறியது, கைகேயி மன மகிழ்ந்து தன் கருத்திற்கு இணங்குவாள் என்ற எண்ணத்தால் ஆகும். 'நின்மகன் ஆள்வான்' என்றபின் 'நீயினிதாள்வாய்' என்றது, பரதனுக்கு ஆளத்தெரியாதாயின் இனிது ஆளக் கற்பித்து அதிகாரம் செலுத்தலாம் என்னும் கருத்தினது. "இவ்வரம் நல்காய் முனிவாயேல்......யாருளர் வாய்மைக்கு" என்று அவள் கூறியதை உளங்கொண்டு, 'தந்தேன் உரைகுன்றேன்' என்கின்ருன். பின்னிரண்டடிகளில் இராமனிடம் தனக்குள்ள அன்பினை விவரிக்கின்ருன். நின்மகன் நாடாளக் கொடுக்கின்றேன்; என்மகன் நாடிறவாமையை விரும்பி உடன்படுக என

வரம் கொடுத்து அவளை வரம் கேட்டவாறு. கண், உயிர், என்பன உவமையாகுபெயர். 'உன்னுயிர்க்கென நல்லன் மன்னுயிர்க்கெலாம்' (1436) என வசிட்டன் கூறியதற்கேற்ப இங்கு, "எல்லாவுயிர்கட்கும் நன்மகன்" என்றான். 'மண்ணே கொண்ணீ மற்றைய தொன்றும் மற' என முற்கூறியதையே விரித்துரைத்தவாறு. இராமன்பால் தனக்குள்ள அன்புமிகுதியால் மீண்டும் கூறிப் பயன்பெற முயல்கின்றான். இறவாமை-கடவாமை. கொடு என்றது, 'நய' என்றது, அவன் பணிவு புலப்படுத்த. (36)

**1616.** மெய்யே யென்றன் வேரற
நூறும் வினைநோக்கி
நையா நின்றே னாவு
முலர்ந்தே னளினம்போற்
கையா னின்றென் கண்ணெதிர்
நின்றுங் கழிவானேல்
உய்யே னங்கா யுன்னப
யம்மென் னுயிரென்றான்.

'மெய்யே என் தன் வேர் அற நூறும் வினை நோக்கி,
நையா நின்றேன்; நாவும் உலர்ந்தேன்; நளினம்போல்
கையான் இன்று என் கண் எதிர் நின்றும் கழிவானேல்
உய்யேன்; நங்காய்! உன் அபயம் என் உயிர்' என்றான்.

பொ :—வாய்மையே, என்னுடைய மூலம் அற அழிக்கும் தீவினையைக் கருதியே வருந்துகின்றேன்; அதனால் நாவும் வறளப்பெற்றேன்; தாமரை மலர்போன்ற கையையுடைய இராமன் இன்று என் கண் முன் இருந்து காட்டிற்குப் பிரிவானானால் யான் பிழைக்கமாட்டேன்; நங்கையே! 'என் உயிர் உன் அடைக்கலம்' என்று கூறினான்.

கு :—'நளினம் போல் கையான்' என்றது, இராமனை. கண்ணேயன்றிக் கையும் காலும் முதலிய உறுப்புக்களும் இராமனுக்குச் சிவந்திருக்கும் என்பதை : "கடல்கரு முகிலொளிர் கமலம தலரா, வடவரையுடன் வருசெயலென" (313) எனக் கடல் தாமரை பூத்ததை உவமை கூறியிருத்தலால் அறியலாம். "கண்ணும் திருவடியுங்கையும் திருவாயும் செய்ய கரியவனை" (சிலப் - ஆய்ச்சியர்குரவை) என்பது இங்கு நினைக்கத்தகும். ஏனைய உறுப்புக்களையெல்லாம் விடுத்து இராமனது கையை நினைந்து கூறுதற்குக் காரணம், பரசுராமன் வில்லை விளைத்துத் தன்னை உய்வித்தது அந்தக் கையே என்னும் நினைவாலாகும். அன்று

உய்வித்த நளினம்போல் கையான் கழிவானேல் உய்யேன் என்றது கருத்துச்செறிவுடையது. அபயம்-அடைக்கலம். "இவனும் மெனதுயிரும் முன தபயம் மினி" (1367) என்புழியும் 'அபயம்' அப்பொருட்டாதல் காண்க. உய்யநிற் கபய மென்று னுயிரைத் தன்னுயிரினேம்புதல் ஆன்ருேர் மரபாதலின் அதைக் கைகேயி மேற்கொண்டால் இராமன் காடு நண்ணுன் என்ற எண்ணத்தால் அங்ஙனம் கூறினுன். உன் பெண்மையெழில் சிறப்படைதல் கருதியேனும் என்னை உய்விப்பாயாக என்னும் கருத்துத் தோன்ற 'உய்யேன் நங்காய்' என்ருன். நங்கை-பெண்டிரில் சிறந்தவள். கணவனை யிழந்தபின் நங்கையின் பெருமையும் கழியும் என்பது நினைக்க. (37)

### கைகேயியின் மறுமொழி

**1617.** இரந்தான் சொல்லு மின்னுரை
கொள்ளாண் முனிவெஞ்சாள்
மரந்தா னென்னு நெஞ்சின
ணுணுள் வசைபாராள்
சரந்தாழ் வில்லாய் தந்த
வரத்தைத் தவிர்கென்றல்
உரந்தா னல்லா னல்லற
மாமோ வுரையென்ருள்.

இரந்தான் சொல்லும் இன் உரை
கொள்ளாள் ; முனிவு எஞ்சாள் ;
மரம் தான் என்னும் நெஞ்சினள்,
நாணுள் ; வசை பாராள் ;
"சரம் தாழ் வில்லாய்! தந்த
வரத்தைத் தவிர்கென்றல்
உரம் தான் அல்லால், நல் அறம்
ஆமோ ? உரை" என்ருள்.

பொ :—மரம் போன்று உருகா நெஞ்சுடைய கைகேயி, யாசித்தவனுய்த் தயரதன் சொல்லும் இனிய வார்த்தைகளை ஏற்றுக் கொள்ளாதவளாய்க் கோபம் குறையாதவளாய் தன்செயலுக்கு நாணுதவளாய்ப் பழியைப் பாராதவளாய், "அம்பு பொருந்தும் வில்லையுடைய அரசே! தந்த வரத்தை மீட்டும் தவிர்த்துவிடு என்று கூறுதல், உன் வலிமையால் கூறியதாகுமேயன்றி நல்லற நெறியால் கூறியதாகுமோ? சொல்" என்று கூறினுள்.

கு :—இரந்தான், கொள்ளாள், எஞ்சாள், நாணுள், பாராள் என்பன எச்சப்பொருளில் வந்த முற்றுச்சொற்கள். உருகாத வன்னெஞ்சிற்கு மரம் உவமை. "மரங்கள் போல் வலிய நெஞ்ச வஞ்சனேன்" (திவ்-திருமாலை-27) என்றதும் காண்க. நின் வில்லம்பு விட்டபின்னர் மாற்றவியலாது குறியைத் தாக்கியே அமைதல்போல நின்சொல்லம்பும் வாயிலிருந்து புறப்பட்டபின் அதன் பயனைத் தருவதன்றி மாற்றவியலாது என்பதை யுணர்க என்னும் குறிப்புத் தோன்ற விளித்தலின் இது கருத்துடையடைகொளியணி. உரம் - வலிமை. "வேலொடு நின்ருன் இடுவென்றது போலும், கோலொடு நின்ரு னிரவு" (குறள்-552) என்றதற்கேற்ப வில்வலியுடைமையாற் கூறினுய் என்பாள், 'சரந்தாழ்வில்லாய்' என்ருள். தந்த வரத்தைத் தவிர்க என்றல் உரந்தான் ஆமோ? அல்லால் நல்லறந்தான் ஆமோ? என்று இயைத்துப் பொருள் கூறலும் ஆம். தந்த வரத்தைத் தவிர்க என்று சொல்லுதல் உரத்திற்கும் அழகன்று; அறத்திற்கும் தக்கதன்று என்பது கருத்து. இப்பொருளில் உரம்-அறிவு; 'உரனென்னும் தோட்டியான்' (குறள்-24) என்புழிப்போல. (38)

## தயரதன் துன்பச்சொல் 1618—1624

**1618.** கொடியா ளின்ன கூறினள்
கூறக் குலவேந்தன்
முடிசூ டாமற் காத்தலு
மொய்கா னிடைமெய்யே
நெடியா னீங்க நீங்குமென்
ளுவி யினியென்ரு
இடியே றுண்ட மால்வரை
போன்மண் ணிடைவீழ்ந்தான்.

கொடியாள் இன்ன கூறினள்; கூறக் குல வேந்தன்,
'முடி சூடாமல் காத்தலும் மொய் கான் இடை மெய்யே
நெடியான் நீங்க நீங்கும் என் ஆவி இனி' என்ரு,
இடி ஏறு உண்ட மால்வரை போல் மண் இடை வீழ்ந்தான்.

பொ :—கொடியவளாகிய கைகேயி இத்தன்மையான சொற்களைச் சொன்னுள்; அவள் அவ்வாறு சொல்லச் சிறந்த வேந்தனுகிய தயரதன், 'இவள் முடிசூடாமல் தடுத்தவுடன் நெடியவனுகிய இராமன், மரங்கள் நெருங்கியுள்ள காட்டிற்குப் போவான்; அவன் போக, மெய்யாக இனி என்னுயிரும் போகும்' என்று கூறி இடியேற்ருல்

தாக்குண்ட பெரிய மலைச்சிகரம் சாய்தல் போல மண்ணில் வீழ்ந்தான்.

கு :—குலம்—சிறப்பு காத்தல்-தடுத்தல்; "செல்லிடத்துக் காப்பான் சினம் காப்பான்" (குறள்-301) என்புழியும் காத்தல் அப்பொருளது ஆதல் காண்க. மொய்கான்-மரங்கள் நெருங்கிய காடு. நெடியான்-இராமன். 'நெடியான் நீங்க நீங்கும் என் ஆவி' என்றது, இரண்டும் இடையீடின்றி ஒரே காலத்தில் நிகழும் என்பதை யுணர்த்தியவாறு. 'மால்வரை' ஆகுபெயராய் மலைச்சிகரத்தை யுணர்த்திற்று. பேரிடி வீழின் மலைச்சிகரம் தகர்ந்து வீழ்தல் இயல்பு. இடியேற்றுக்குக் கைகேயியின் கூற்றும், பெரிய தோற்றமுடைய தயரதன் வீழ்தற்கு மலைச்சிகரம் வீழ்தலும் உவமை. (39)

**1619.** வீழ்ந்தான் வீழா வெந்துய
ரத்தின் கடல்வெள்ளத்
தாழ்ந்தா னூழா வக்கட
லுக்கோர் கரைகாணான்
சூழ்ந்தா டுன்பஞ் சொற்கொடி
யாள்சொற் கொடுநெஞ்சம்
போழ்ந்தா ளுள்ளப் புன்மையை
நோக்கிப் புலர்கின்றான்.

வீழ்ந்தான் ; வீழா வெம் துயரத்தின் கடல் வெள்ளத்து
ஆழ்ந்தான் ; ஆழா அக்கடலுக்கு ஓர் கரை காணான்,
சூழ்ந்தாள் துன்பம் சொல் கொடியாள், சொல் கொடு நெஞ்சம்
போழ்ந்தாள், உள்ளப் புன்மையை நோக்கிப் புலர்கின்றான்.

பொ :—அவ்வாறு தரையில் வீழ்ந்தவனாகிய தயரதன், கொடிய துன்பம் என்னும் கடல்நீரில் வீழ்ந்து ஆழ்ந்தான்; ஆழ்ந்து, அந்தக் கடலுக்கு ஒரு கரைகாணாதவனாய்த் தனக்குத் துன்பத்தைச் சூழ்ச்சியால் உண்டாக்கினவளும், சொல்லின் கொடுமையுடையவளும், சொல்லாகிய படையைக்கொண்டே தன் நெஞ்சைப் பிளந்தவளும் ஆகிய கைகேயியின் உள்ளச் சிறுமையை நினைந்து வாடுகின்றான் ஆனான்.

கு :—துயரத்தின்கடல் என்புழி அத்தும் இன்னும் தவிர்வழிச் சாரியை. வெள்ளம்-நீர். துயரத்தைக் கடலாக உருவகித்ததற்கு ஏற்ப ஆழ்தலும் கரை காணாமையும் கூறப்பட்டன. துன்பத்தால் மயங்கியிருத்தலை ஆழ்தலாகவும் அத்துன்பம் தீரும் வழியைக் கரையாகவும் கொள்க. இது குறிப்புருவகம். சூழ்தல் - கெட்டஆலோசனை

செய்தல். உள்ளத்தின் கொடுமை சொல்வழிப் புலப்படுதலின், 'சொற்கொடியாள்' என்ருன். இராமனைக் காட்டிற்குத் துரத்தவேண்டும் என்ற அவள் சொல்லே தயரதனை வீழ்த்துதலின், "சொற்கொடு நெஞ்சம் போழ்ந்தாள்" என்ருன். போழ்தல்-பிளத்தல். புகையால் நெருப்புண்மை அறிதல்போல் கொடுஞ்சொல்லால் அவள் உள்ளத்தின் சிறுமையைக் கருதி அறிந்து வாடுகின்ருன். நோக்குதல்-கருதல்; நோக்கல் நோக்கம். அவள் உள்ளச்சிறுமை அறியாது அன்புடையாளாகக் கருதிப் பல்லாண்டு பழகினேமே என்ற ஏக்கத்தால் புலர்தல் உண்டாயிற்று. (40)

**1620.** ஒன்று நின்ற வாருயி
ரோடு முயிர்கேள்வர்
பொன்று முன்னம் பொன்றின
ரென்னும் புகழல்லால்
இன்றோர் காறு மெல்வளை
யார்தம் மிறையோரைக்
கொன்று ரில்லைக் கொல்லுதி
யோநீ கொடியோளே.

'ஒன்று நின்ற ஆருயிரோடும் உயிர் கேள்வர்
பொன்று முன்னம் பொன்றினர் ; என்னும் புகழ் அல்லால்,
இன்று ஓர் காறும் எல் வளையார், தம் இறையோரைக்
கொன்ருர் இல்லை ; கொல்லுதியோ நீ கொடியோளே !'

பொ :—'ஒளிவாய்ந்த வளையணிந்த பெண்டிர், தம்முடைய அருமையான உயிரோடும் ஒன்றுபட்டுக் கலந்த உயிரையுடைய கணவரோடு உடன் இறந்தனர் என்று கூறுகின்ற புகழைப்பெற்றிருந்தாரே அன்றித் தம் கணவரைக் கொன்ருர் என்னும் பழியைப் பெற்றவர்கள் இன்று வரையில் இல்லை; அவ்வுலகியலுக்கு மாருக, ஏ கொடியாளே! நீ நின் கணவனைக் கொல்லுகின்ருயோ?'

கு :—ஆருயிரோடும் ஒன்று நின்ற உயிர் என்றது, ஒருயிர் ஆதலை. 'ஒருயிராக வுணர்க உடன்கலந்தார்க்கு' (பு. வெ–262) 'இன்னுயிரன்னற்கு, எனைத்தொன்றுந் தீதின்மை, என்னுயிர், காட்டாதோ' (கலி–143) என்பன காண்க. பொன்று முன்னம் பொன்றினர் என்றது, உடனிறத்தலை. உடனிறத்தற்குக் காரணம், ஆருயிரோடும் ஒன்றுநின்ற உயிருடைமையேயாம். "போரில், விடனேந்தும் வேலோற்கும் வெள்வளையினுட்கு முடனே யுலந்த துயிர்" (பு-வெ-262) என்பதும், "தரை

மகளுந் தன் கொழுநன் உடலந்தன்னைத் தாங்காமல் தன் கரத்தால் தாங்கி விண்ணுட்டு, அரமகளி ரவ்வுயிரைப் புணராமுன்னம் ஆவி யொக்க விடுவாளைக் காண்மின் காண்மின்" (கலிங்-பரணி-483) என்பதும் "பெருங்கோப் பெண்டும் ஒருங்குடன் மாய்ந்தனள்" (சிலப்-25-79) என்பதும் காண்க. கணவரொடு மாய்ந்து தம் கற்புடைமையைப் புலப்படுத்தினர் ஆகலின் புகழ் எய்தினர். கேள்வரொடு பொன்றிஞர் புகழ் எய்திஞர் எனவே இறையோரைக் கொன்ருர்க்குப் பழிவரும் என்பது பெறப்படும். எல்-ஒளி. இறையோர்-கணவர். பெண்டிர் இயல்பு நினைந்தேனும் நிலைமாறுவாள் என்னும் கருத்தால், 'கொல்லுதியோ' என்று வினவுகின்ருன். இது சாமோபாயத்தால் கூறியது. வளையணிதல் பெண்டிர்க்கே சிறப்பியல்பு ஆதலின் அவரை 'எல்வளையார்' என்ருர். ஆருயிரோடும் ஒன்ருநின்ற உயிர் கேள்வர் என்க. ஓர்-அசை. கொடியாளே என்பதற்குக் கொடியனையாளே எனவும் கொடியவளே எனவும் பொருள் கொள்ளலாம். (41)

**1621.** ஏவம் பாரா யினமுறை
நோக்கா யறமெண்ணுய்
ஆவென் பாயோ வல்லை
மனத்தா லருள்கொன்ருய்
நாவம் பாலென் ருருயி
ருண்டா யினிஞாலம்
பாவம் பாரா தின்னுயிர்
கொள்ளப் படுகின்ருய்.

'ஏவம் பாராய்; இன முறை நோக்காய்; அறம் எண்ணுய்;
ஆ! என்பாயோ அல்லை; மனத்தால் அருள் கொன்ருய்;
நா அம்பால் என் ஆருயிர் உண்டாய்; இனி, ஞாலம்
பாவம் பாராது இன் உயிர் கொள்ளப்படுகின்ருய்!'

பொ :—'நினக்கு வரும் குற்றத்தையும் பார்க்கிலை; நின் இனமாய பெண்டிர் சென்ற முறையையும் நோக்கிலை; தருமத்தையும் எண்ணுகின்ருயில்லை; ஐயோ! என்று இரக்கப்படவும் இல்லை; மனத்திலிருந்த அருளுணர்ச்சியையே கொன்றுதீர்த்துவிட்டாய்; சொல் ஆகிய அம்பினல் என் அரிய உயிரை உண்டுவிட்டாய்; இனிமேல் இவ்வுலகம், பெண்கொலை பாவமாயிற்றே என்றும் பாராது நின் இனிய உயிரைக் கொள்ள இறக்கப்போகின்ருய்!'

கு :—உலகத்தோரால் தனக்கு வரும் குற்றத்தைப் பார்த்திருந்தாலும், பெண்டிர் இனம் இதுகாறும் நடந்துள்ள முறையை நோக்கியிருந்தாலும், கணவனைக் கோறல் அறமன்று என்று எண்ணியிருந்தாலும், ஐயோ என்று இரங்கும் குறிப்பு இருந்தாலும் அருளுணர்ச்சியிருந்தாலும் என்னுயிரை உண்ணமாட்டாய் என்பது கருத்து. இந்த ஐந்தில் ஒன்றும் அவளிடம் இல்லை என்க. நோக்குதல்–கருதுதல். 'ஆ' இரக்கக் குறிப்பு. மனத்தால் என்புழி 'ஆல்' ஏழாவதன் பொருளில் வந்தது; வேற்றுமை மயக்கம். நா, ஆகுபெயராய்ச் சொல்லை யுணர்த்திற்று. வில்லம்பால் கொல்லாது சொல்லம்பால் கொன்றனை என்க. 'உண்டாய்' என்று இறந்தகாலத்தாற் கூறியது, தெளிவுபற்றிய காலவழுவமைதி. சொல் என்றது, வரம் கேட்ட சொல்லை. மன்னனைக் கொன்ற நிகழ்ச்சியறிந்த ஞாலத்தவர் பெண்ணென்றும் பாராது நின்னுயிர் கொள்வார்கள் எனத் தண்டோபாயத்தால் தெளிவித்தவாறு. "முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்" ஆதலின் நீ, என்னைக் கொன்றால் உன்னை உலகம் கொல்லும் என்பது விளக்கியவாறு. 'ஞாலம்' ஆகுபெயராய் மக்களையுணர்த்திற்று. (42)

**1622.** ஏண்பா லோவா நாண்மட
மச்ச மிவையேதம்
பூண்பா லாகக் காண்பவர்
நல்லார் புகழ்பேணி
நாண்பா லோரா நங்கையர்
தம்பா னணுகாரே
ஆண்பா லாரே பெண்பா
லாரோ டடைவம்மா.

'ஏண்பால் ஓவா நாண் மடம் அச்சம் இவையே தம்
பூண்பால் ஆகக் காண்பவர் நல்லார், புகழ் பேணி
நாண்பால் ஓரா நங்கையர்தம் பால் நணுகாரே;
ஆண்பாலாரே பெண்பாலாரோடு அடைவு; அம்மா !'

பொ :—'வலிமை நீங்காத நாணம் மடம் அச்சம் என்கின்ற இப் பண்புகளையே தம்முடைய சிறந்த அணிகலனாகக் கருதுபவராகிய நல்ல பெண்டிர்கள், புகழை விரும்பி நாணினைப் போற்றுதல் அறியாத பெண்டிரிடத்து நணுகவேமாட்டார்கள்; நணுகுவாராயின், பெண் பாலார் ஆண்பாலாரோடு அடைந்ததேபோலும்!'

கு :—இனம்பற்றிப் 'பயிர்ப்பும்' கொள்க. மதில் முதலிய சிறைக் காவலினும் நிறைக்காவல் வலிதாதல்பற்றி, "ஏண்பாலோவா நாண் மடம் அச்சம்" என்றார். இவை நிறைகுணங்கள் எனப்படும். "பெண் பாலவர்கட் கணியாய்ப் பிரியாத நாணும்" (சீவக-1961) என்புழியும் நாணைப் பூணாகக் கூறியுள்ளமை காண்க. "உயிரினுஞ் சிறந்தன்று நாணே" (தொல்-பொருள்–113) என்பதும் காண்க. மேல் மூன்று பாலும் பகுதி என்னும் பொருளன. பெண்டிர்க்குப் புகழ்தருவது நாணமேயாகலின், புகழ் பேணி நாண்பாலோரா நங்கையர் என்றார். 'நணுகின்' என ஒருசொல் வருவிக்க. 'அடைவு போலும்' என்க. நாண முடைய பெண்டிர்க்கும் அஃதிலாப் பெண்டிர்க்கும் உள்ள வேறுபாடு, பெண்டிர்க்கும் ஆடவர்க்கும் உள்ள வேறுபாடு போன்றது என்க. நாணமிலாப் பெண்டிர் ஆடவர்போன்றார் என்பது கருத்து. நின் இனமாய பெண்டிராலும் விலக்கப்படுவாய் எனப் பேதோபாயத்தால் உணர்த்தியவாறு. ஓடு பிரித்துக் கூட்டப்பட்டது. அம்மா வியப்பிடைச் சொல். (43)

**1623.** மண்ணாள் கின்றா ராகி
வலத்தான் மதியால்வைத்
தெண்ணா நின்றார் யாரையு
மெல்லா விகலாலும்
விண்ணோர் காறும் வென்ற
வெனக்கென் மனைவாழும்
பெண்ணால் வந்த தந்தர
மென்னப் பெறுவேனே.

'மண் ஆள்கின்றார் ஆகி, வலத்தால் மதியால் வைத்து
எண்ணாநின்றார் யாரையும் எல்லா இகலாலும்
விண்ணோர் காறும் வென்ற எனக்கு, என் மனை வாழும்
பெண்ணால் வந்தது அந்தரம் ; என்னப் பெறுவேனே?'

போ :—'மண்ணுலகப் பகுதிகளை ஆட்சிபுரிபவராய் வலிமையாலும் நன்மதியாலும் மேலாக வைத்து எண்ணப் படுவோர் எல்லோரையும் எல்லாவகையான வல்லமையாலும் தேவர்கள் வரையில் வென்று வாகைசூடிய எனக்கு, அவ்வலியும் மதியும் இல்லாமல் என்மனையில் இருக்கும் ஒரு பெண்ணால் வந்தது மரணம் என்று சொல்லப் பெறுவேனே?'

கு :—வலத்தாலும் மதிநலத்தாலும் சிறப்பித்து எண்ணப்படுகின்ற மண்ணுள் மன்னரையும் விண்ணுள் தேவரையும் வென்ற வீரன், தன் மனைவாழும் வலியும் மதியும் இல்லாப் பெண்ணால் இறந்தான் எனப் படுவது மிக்க இழிவானதாய் முன் பெற்ற வீரப் புகழையெல்லாம் வீழ்த் துவதாகும் ஆதலின் நாணுகின்றான். இகல் - வலிமை. வாள்வலியும் தோள்வலியும் வில்வலியும் மல்வலியுமென அது பலதிறப்படுதலின் எல்லா இகலாலும் என்றார். பலவல்லன் என்பதை யுணர்த்த, 'எல்லா இகலாலும்....வென்ற' என்றார். "காய்ந்தே கடந்தான் பகைவேலை" (172 என்றது நினைக்க. "எனக்கு என் மனைவாழும் பெண்ணால் வந் தது அந்தரம்" என்றதன் பொருட் சிறப்பை எடுத்தும் படுத்தும் கூறிக் காண்க. உலகெலாம் வென்றவனுக்கு மனைவாழ் பகையை வெல்ல இயலவில்லை; வன்மைமிக்க மன்னரையும் விண்ணவரையும் வென்றவன் பெண்ணுக்குத் தோற்றான் என்ற நயத்தை நினைக்க. மேல் நின்னலங் கருதி இசைக என்றவன், இங்கு என்னலங் கருதி இசைக எனத் தானேபாயத்தால் கூறினான். (44)

**1624.** என்றென் றுன்னும் பன்னி
யிரக்கு மிடர்தோயும்
ஒன்றென் றொவ்வா வின்ன
லுழக்கு முயிருண்டோ
இன்றின் றென்னும் வண்ண
மயங்கு மிடியும்பொன்
குன்றென் றொன்றோ டொன்றிய
தென்னக் குவிதோளான்.

என்று என்று உன்னும் ; பன்னி
இரக்கும் ; இடர் தோயும் ;
ஒன்று ஒன்று ஒவ்வா இன்னல்
உழக்கும் ; 'உயிர் உண்டோ ?
இன்று, இன்று!' என்னும் வண்ணம்
மயங்கும் ; இடியும்; பொன்
குன்று ஒன்று ஒன்றோடு ஒன்றியது
என்னக் குவி தோளான்.

பொ :—என்று என்று பல நினைப்பான்; பலமுறை பல சொல்லி யாசிப்பான்; துன்பக்கடலில் தோய்வான்; ஒன்றோடு ஒன்று ஒவ்வாத பலவகையான துன்பங்களால் வருந்துவான்; 'உயிர் உண்டோ? இல்லை;

இல்லை!' என்று சொல்லுமாறு மதிமயங்கிக்கிடப்பான்; உள்ளம் உடைவான்; பொன்குன்று ஒன்று மற்றொரு குன்றோடு வந்து பொருந்தியது என்று சொல்லுமாறு திரண்டதோள்களையுடைய தயரதன்.

கு :—தோளான், உன்னும், இரக்கும், தோயும், உழக்கும், மயங்கும், இடியும் என்று இயைக்க. பொன் குன்றம் தோளின் நிறத்திற்கும் அழுத்தத்திற்கும் திரட்சிக்கும் பருமைக்கும் உவமை. தோள் இரண்டாதலின் குன்று இரண்டு வேண்டுவதாயிற்று. தோள்வலி மிக்க தயரதன், இவ்வாறு துன்புறுதல் வியத்தற்குரியது என்பது தோற்றுவித்தவாறு. உன்னும் என்பது முதலிய செய்யும் என்னும் வாய்பாட்டு முற்றுக்கள் ஆண்பால் ஒருமை உணர்த்தின. (45)

## கைகேயி கூற்று 1625—1626

**1625.** ஆழிப் பொற்றேர் மன்னவ
னிவ்வா றயர்வெய்திப்
பூழிப் பொற்றோண் முற்று
மடங்கப் புரள்போழ்தில்
ஊழிற் பொய்த்தா லென்னுரை
யின்றே யுயிர்மாய்வென்
பாழிப் பொற்றார் மன்னவ
வென்றாள் பசையற்றாள்.

ஆழிப் பொன் தேர் மன்னவன் இவ்வாறு அயர்வு எய்திப்
பூழிப் பொன் தோள் முற்றும் அடங்கப் புரள் போழ்தில்,
" ஊழில் பொய்த்தால் என் உரை இன்றே உயிர் மாய்வென் ;
பாழிப் பொன் தார் மன்னவ !" என்றாள் ; பசையற்றாள்.

பொ :—சக்கரத்தையுடைய பொன்மயமான தேரையுடைய தயரதன், இவ்வாறு சோர்வடைந்து பொன்னிறமான தோள்முழுதும் புழுதி நிறையுமாறு புரள்கின்றபொழுது, அன்பு அற்ற கைகேயி, 'வலிமையையும் அழகிய வெற்றிமாலையையும் உடைய அரசே! என் சொல், முன்கூறிய முறையில் நின்றும் தவறுமானால் இன்றைக்கே இறப்பேன்' என்று கூறினாள்.

கு :—பூழி-புழுதி. ஊழ்-முறைமை. பொய்த்தல்-தவறுதல். பரதன் அரசாள இராமன் வனமாளச் செய்தல் வேண்டும் என்று முன்கூறிய முறையில் தவறலாகாது என்பதை வற்புறுத்த வேண்டி, 'இன்றே உயிர் மாய்வேன்' என்றாள். இது பெண்டிர்க்கியல்பு. பாழி-வலிமை

யசை—அன்பு. பசையற்றவள் ஆதலின், இவ்வாறு கூற இயன்றது என்பது கருத்து. (46)

**1626.** அரிந்தான் முன்னோர் மன்னவ
னன்றே யருமேனி
வரிந்தார் வில்லாய் வாய்மை
வளர்ப்பான் வரநல்கிப்
பரிந்தா லென்னு மென்றனள்
பாயுங் கனலேபோல்
எரிந்தா ருதே யின்னுயி
ருண்ணு மெரியன்னாள்.

'அரிந்தான் முன் ஓர் மன்னவன்
அன்றே அருமேனி ?
வரிந்து ஆர் வில்லாய் ! வாய்மை
வளர்ப்பான் ; வரம் நல்கிப்
பரிந்தால் என் ஆம் ?' என்றனள் ;
பாயும் கனலேபோல்
எரிந்து ஆருதே இன் உயிர்
உண்ணும் எரி அன்னாள்.

பொ :—விரைந்து பரவுகின்ற நெருப்புப் போல அழன்று தணியாது இனிய உயிரையுண்ணுகின்ற புதுவகையான நெருப்புப் போன்ற கைகேயி, 'இறுகக்கட்டிய வில்லையுடைய மன்னவ ! சத்தியத்தைக் காப்பாற்றும் பொருட்டு சிபி என்னும் ஒரு மன்னவன் தன்னுடைய அரிய உடம்பையே அரிந்து கொடுத்தான் அல்லவோ? அம்மன்னன் மரபில் வந்த நீ, முன்னர் வரத்தைக் கொடுத்து விட்டுப் பிறகு வருந்தினால் என்ன பயன் உண்டாகும்?' என்று கூறினாள்.

கு :—சிபி என்னும் மன்னவன், பருந்துக்குப் பயந்து தன்கண் அடைக்கலம் புகுந்த புறவைக் காப்பதாகக் கூறிய வார்த்தை பொய் யாகாதபடி அப்புறவின் எடைக்கீடாகத் தன்னுடம்பை அரிந்து அரிந்து வைத்தும் ஈடாகாமையின் தானே தராசுதட்டில் அமர்ந்தான் என்பது பழைய வரலாறு; "கூருகிர்ப் பருந்தின் ஏறு குறித்து ஒரீஇத் தன்னகம் புக்க குறுநடைப் புறவின் தபுதியஞ்சிச் சீரைபுக்க வரையா வீகை யுரவோன்" (புறநா-43) என்பது காண்க. வளர்த்தல்,-காத்தல் என்னும் பொருளில் வந்தது. வாய்மை காக்கவேண்டித் தன்னுடலையே அரிந்து தந்தவன் மரபில் வந்த நீ உயிரை விட்டேனும்

வாய்மையைக் காவாது வரம் நல்கிப் பின் வருந்துதல் தக்கதன்று என்றவாறு. உலகத்துக் கனல் எரிந்து ஆறும் இயல்பும் உடம்பை யுண்ணும் இயல்பும் உடையது. இக்கைகேயியாகிய கனல் ஆருதது ; அருவாகிய உயிரையும் உண்ணவல்லது என்ற வேற்றுமை தோற்றுவித்தலின் இது, வேற்றுமையணியாம். உலக நெருப்பிற்கும் கைகேயியாகிய நெருப்பிற்கும் எரிகின்ற தன்மையில் ஒற்றுமையும் ஆருமையும் உயிருண்ணுகையும் உடைமையால் வேற்றுமையும் உண்மை யுணர்க. 'புதிய கூற்றனையாள்' (பால–410) என்றது போலப் புதிய எரி என்பார், இவ்வாறு கூறினர். கைகேயி மனமிக அழன்று கூறிய நிலையை விளக்கியவாறு. (47)

## தயரதன் தந்தேன் எனல்

1627. வீந்தா ளேயிவ் வெய்யவ
ளென்னு மிடல் வேந்தன்
ஈந்தே னீந்தே னிவ்வர
மென்சேய் வனமாள
மாய்ந்தே நான்போய் வானுல
காள்வென் வசைவெள்ளம்
நீந்தாய் நீந்தாய் நின்மக
னோடு நெடிதென்றான்.

வீந்தாளே இவ் வெய்யவள்
என்னு மிடல் வேந்தன்,
'ஈந்தேன் ஈந்தேன் இவ்வரம் ;
என்சேய் வனம் ஆள,
மாய்ந்தே நான் போய் வான் உலகு
ஆள்வென், வசை வெள்ளம்
நீந்தாய் நீந்தாய் நின் மக
னோடும் நெடிது ;' என்றான்.

போ :—(நாம் வரம் கொடாதொழியின்) 'இக்கொடிய கைகேயி இறந்தே விடுவாள்' என்று கருதி வலிமை மிக்க தயரதன், "கொடுத்து விட்டேன் கொடுத்துவிட்டேன் இவ்வரத்தை ; என் மகனாகிய இராமன் கான் உலகு ஆள நான் மாய்ந்துபோய் வான் உலகு ஆள்வேன்; இனிப் பெருகுகின்ற பழி என்னும் வெள்ளத்தில் நீ நின்மகன் பரதனோடு நெடிது நீந்துக நீந்துக" என்று கூறினன்.

கு :—வரங்கொடாக்கால், "வசைத்திறம் நின்வயின் வைத்து மாள் வென்" (1602) என்று முன் அவள் கூறியபடி இறந்து படுவாள் என்ற துணிவு பற்றி இறந்த காலத்தால், 'வீந்தாளே' என்றான். 'வசைத்திறம் நின்வயின் வைத்து மாள்வென்' என்ற சொல்லை யானே செயற் படுத்த முந்துகின்றேன் என்பான், "நான் போய் வானுலகாள்வென் வசை வெள்ளம் நீந்தாய்" என்றான். இவ்வரம் ஈந்தேன் என்பதே முறையாயினும் அவ்வாறு கூறுமளவும் அவள் தரியாள் என்ற கருத் தால் "ஈந்தேன் ஈந்தேன் இவ்வரம்" என்றான். வசை, மூத்தவற்குரித்து அரசு என்ற முறையை மாய்த்து, இராமனைக் காட்டிற்குத் துரத்திக் கணவனை வானிற்கனுப்பிப் பெற்ற பெரும்பழி. அதன் மிகுதி தோன்ற 'வசைவெள்ளம்' என்றான். வெள்ளம் என்றதற்கேற்ப, 'நீந்தாய்' என்றான். தாய் பெறும் பழியில் பரதனுக்கும் பங்குண்டு ஆகலின், நின்மகனோடு எனவும், அப்பழி மாயாது என்பது தோன்ற நெடிது எனவும் கூறினன். இருவரத்தில் ஒன்றை, "மண்ணே கொள் நீ" என முன்னரே உடன்பட்டமையின் அதை இங்குக் கூறாது மற்றைய தொன்றை மட்டும் கூறினன். அடுக்கு இரண்டனுள் முன்னது உறுதி யுணர்த்திற்று ; பின்னது இடைவிடாமை யுணர்த்திற்று. 'நீந்தாய்' என்பதை ஏவல் ஆக்காது, எதிர்மறையாக்கி நெடிது நீந்த மாட்டாயாய் அப்பழிவெள்ளத்துள் அழுந்துவாய் என்னும் பொருளும் கூறலாம். (48)

### தயரதன் செயலறுதலும் கைகேயி துயிலுறுதலும்

**1628.** கூறா முன்னங் கூறு
படுக்குங் கொலைவாளின்
ஏறா மென்னும் வன்றுய
ராகத் திடைமூழ்கத்
தேறா னாகிச் செய்கை
மறந்தான் செயன்முற்றி
ஊறா நின்ற சிந்தையி
னாளுந் துயில்வுற்றாள்.

கூறாமுன்னம், கூறுபடுக்கும் கொலை வாளின்
ஏறு ஆம் என்னும் வன் துயர் ஆகத்திடை மூழ்கத்
தேறான் ஆகிச் செய்கை மறந்தான் ; செயல் முற்றி
ஊறாநின்ற சிந்தையினாளும் துயில்வு உற்றாள்.

பொ :—'ஈந்தேன் இவ்வரம்' என்று கூறி முடித்தற்குமுன்னரே உடம்பைக் கூறுசெய்கின்றதாகிய கொலைத்தொழிலையுடைய

வாளினுல் ஏறுண்ட புண்பட்டாற்போன்ற வலிய துன்பம் மனத்தில் அழுந்துதலால் தெளிவிழந்தவனுகித் தயரதன் செயல் மறந்து மயங்கிக் கிடந்தான்; தான் எண்ணிய செயல் முற்றப்பெற்று மகிழ் சுரக்கின்ற மனத்தையுடைய கைகேயியும் துயில் கொண்டு கிடந்தாள்.

கு :—கூருமுன்னம் வன்துயர் மூழ்க மறந்தான் என்று இயைக்க. கூருமுன்னம் செய்கை மறந்தான் என்றது, கூறி முடித்தற்கும் செய்கை மறந்து வீழ்தற்கும் இடையீடின்மை உணர்த்திற்று. வாள் ஏறுண்டதால் உளதாய புண்ணினை ஆகுபெயரால் 'வாளின் ஏறு' என்ருர். வரம் ஈந்தேன் என்று கூறியவுடன் இராமன் வனம் புகுவது உறுதி என்ற எண்ணம் தோன்றினமையால், வாளால் பிளந் தாற்போன்ற பெருந்துன்பம் தோன்றிற்று என்க. 'அகம்' நீட்டல் விகாரம் பெற்றது. உள்ளமும் உடலும் செயல் மறந்தன என்பார் "தேருனுகிச் செய்கை மறந்தான்" என்ருர். தேருனுதல் உள்ளத்தின் செயல். துன்பச்சிந்தையாற்கும் இன்பச்சிந்தையாட்கும் தோற்றத் தால் ஒற்றுமை காணப்படுகின்றது என்க. ஊறுதல் – மகிழ்ச்சி சுரத்தல். (49)

இதன்பின் ஒரு பிரதியில் 'சூழ்வினைப் படலம் முற்றும்' என்ற தொடரும், அதனை யடுத்து, "மன்பதை மகிழ்ச்சிப் படலம்" என்ற தலைப்பும் காணப்படுவதாக 45-ல் உள்ளது.

### கங்குலின் கழிவு

1629. சேணு லாவிய நாளெ லாமுயி
★ ரொன்று போல்வன செய்துபின்
ஏணு லாவிய தோளி ஞனிட
ரெய்த வொன்று மிரங்கிலா
வாணி லாநகை மாத ராள்செயல்
கண்டு மைந்தர்மு னிற்கவும்
நாணி ஞளென வேகி ஞணளிர்
கங்கு லாகிய நங்கையே.

சேண் உலாவிய நாள் எலாம் உயிர்
ஒன்றுபோல்வன செய்து, பின்
ஏண் உலாவிய தோளினுன் இடர்
எய்த ஒன்றும் இரங்கிலா,

வாள் நிலா நகை மாதராள் செயல்
கண்டு மைந்தர்முன் நிற்கவும்
நாணினுள் என ஏகினுள் நளிர்
கங்குல் ஆகிய நங்கையே.

பொ:—சேய்மையாகப் பொருந்திய நாட்கள் முழுதும் தனக்கும் தயரதற்கும் உயிர் ஒன்று என்பதற்கு ஏற்பனவாகிய செயல்களையே செய்துகொண்டுவந்து இப்பொழுது வலிமை பொருந்திய தோளை யுடைய தயரதன் துன்பம் அடையவும் அதுகண்டு சிறிதும் இரங்காத ஒளிபொருந்திய பற்களையுடைய கைகேயியின் அடாதசெயலைக் கண்டு, குளிர்ந்த இரவு என்னும் பெண், மைந்தர்கட்குமுன் நிற்கவும் நாணினுள் என்று சொல்லுமாறு நீங்கினுள்.

கு:—இரவு கழிந்தது என்பது கருத்து. சேண் - சேய்மை; மண நாள் முதற்கொண்டு என்பது கருத்து. இனி, சேண், விண் என்று கொண்டு சம்பரனைக் கொல்ல விண்ணுலகத்தில் உலாவிய நாள் முதல் எனலும் ஆம். உயிரொன்று போல்வன செய்தலாவது, இருவர்க்கும் இன் பத் துன்பங்கள் ஒன்ருய் வருதல். இது காறும் அவன் மகிழின் மகிழ்ந்தும் அவன் நோவின் நொந்தும் பழகியவள், இப்பொழுது, அவன் பேரிடர் எய்திப் பாரிற் புரளக் கண்ணிற் கண்டும் இரக்கங் கொள்ளாமை, அவள் வஞ்சமனத்தை எஞ்சாமல் உணர்த்துகின்றது; நிலைகெட்ட அவளைப் பழிக்கும் மைந்தர், ஏனைப் பெண்டிரையும் சேர்த்தே இகழ்வர் ஆதலின் இரவு என்கின்ற பெண், கைகேயி யின் செயலைக் கண்டு மைந்தர்முன் நிற்கவும் நாணிச் சென்ருள் என்னும்படி நீங்கினுள் என, ஏதுத்தற்குறிப்பேற்ற அணியைக் கதைத் தொடர்பு சிறப்புறுமாறு அமைத்துள்ள அழகு ஆழ்ந்து சுவைத்தற் குரியது. 'கங்குலாகிய நங்கை' உருவகம். இது தற்குறிப்பேற்றத்திற்கு உறுப்பாய் அமைந்து அழகுசெய்கின்றது. கைகேயியினுல் உளதாகிய இடரல்லது பிறிதிடர் அறியான் என்பது தோன்ற, 'ஏனுலாவிய தோளினுன்' என்ருர். தயரதன் பேரிடர் கண்டு இரங்காமைக்கு மேலும் மகிழ்நகைபூக்கின்ருள் என்பது விளங்க, 'வாணிலா நகை மாதராள்' என்ருர். (50)

## கோழி கூவுதல்

**1630.** எண்ட ருங்கடை சென்ற யாம
மியம்பு கின்றன வேழையால்
வண்டு தங்கிய தொங்கன் மார்பன்
மயங்கி விம்மிய வாறெலாம்

கண்டு நெஞ்சு கலங்கி யஞ்சிறை
யான காமர் துணைக்கரம்
கொண்டு தம்வயி றெற்றி யெற்றி
விளிப்ப போன்றன கோழியே.

எண் தரும் கடை சென்ற யாமம்
இயம்புகின்றன—ஏழையால்
வண்டு தங்கிய தொங்கல் மார்பன்
மயங்கி விம்மிய ஆறு எலாம்
கண்டு, நெஞ்சு கலங்கி அம் சிறை
ஆன காமர் துணைக் கரம்
கொண்டு தம் வயிறு எற்றி எற்றி
விளிப்ப போன்றன—கோழியே.

பொ :—மதிக்கத்தக்கதன்மை பொருந்திய வைகறையாமத்தில் கூவுகின்றனவாகிய கோழிகள், கைகேயியால், வண்டுகள் தங்கியுள்ள மாலையணிந்த மார்பினையுடைய தயரதன் மனம் மயங்கித் தேம்பியழுத தன்மையெல்லாம் கண்டு, மனம் கலங்கி, அழகிய சிறகுகளாகிய அழகிய இரண்டுகைகளாலும் தம் வயிற்றின்மேல் அடித்துக் கொண்டு கூவி அழுவதைப்போன்று காணப்பட்டன.

கு :—மக்கள் எல்லாம் துயிலுணர்ந்து கடவுளைத் தொழும் காலம் வைகறையாதல் பற்றி, "எண்டரும்" எனச் சிறப்பித்தார். எண்ணப் படும் எனப் பொருள்கூறலும் ஆம். யாமம் – சிறுபொழுது. கடை சென்ற யாமம் - வைகறையாமம்; அப்பொழுது கோழி சிறகுகளை அசைத்துக் கொண்டு கூவுதல் இயல்பு. அவ்வியல்பான நிகழ்ச்சியைத் தயரதன் விம்முதல்கண்டு கலங்கி அழுவதாகக் கவி கற்பனைசெய்தலின் இது தற்குறிப்பேற்றம்; அஞ்சிறையான காமர் துணைக்கரம் என்ற உருவகவணி அதற்கு உறுப்பாய் அமைந்தது. ஏழை என்றது கைகேயி யை. 'வண்டு தங்கிய தொங்கல் மார்பன்' என்றது, பறவையின மாகிய வண்டுகட்கு வாழ்வளிக்கும் வள்ளல் என்னும் கருத்துடையதாய்க் கோழிகளின் அழுகைக்கு இயைபுண்மை விளக்கிற்று. துணை - இரண்டு. கலங்கி என்பதால் மனத்தின் செயலும், 'இயம்புகின்றன' என்பதால் வாயின் செயலும், எற்றி எற்றி என்றமையால் மெய்யின் செயலும் விரித்தவாறு. காமர் – அழகு. அழுங்காலத்து வயிற்றின் மேல் அடித்துக்கொள்ளுதல் பெண்டிர் இயல்பு. விளித்தல் – அழுதல். அழைத்தல் என்று கொண்டு தயரதன் படும் அல்லல் காணப் பிறரை அழைப்பது போன்றது எனப் பொருள்கொள்ளலுமாம். (51)

## பறவைகளின் ஒலி

1631. தோய்க யத்து மரத்து மென்சிறை
துள்ளி மீதெழு புள்ளெலாம்
தேய்கை யொத்த மருங்குன் மாதர்
சிலம்பி னின்று சிலம்புவ
கேக யத்தர சன்ப யந்த
விடத்தை யின்னதொர் கேடு சூழ்
மாக யத்தியை யுட்கொ தித்து
மனத்து வைவன போன்றவே.

தோய் கயத்தும் மரத்தும் மென் சிறை
துள்ளி மீது எழு புள் எலாம்,
தேய்கை ஒத்த மருங்குல் மாதர்
சிலம்பின் நின்று சிலம்புவ,
கேகயத்து அரசன் பயந்த
விடத்தை இன்னது ஓர் கேடு சூழ்
மா கயத்தியை உள் கொதித்து
மனத்து வைவன போன்றவே.

பொ :—நீராடுதற்குரிய குளத்திலும் மரத்திலும் நின்று மென்மையான சிறகுகளை அசைத்துக் கொண்டு துள்ளி மேல் எழுகின்ற பறவைகளெல்லாம், தேய்தல்பொருந்திய நுண்ணிய இடையையுடைய பெண்டிர் சிலம்பு போல ஒலி செய்கின்றவை, கேகயநாட்டு அரசன் பெற்ற நஞ்சுபோன்ற கைகேயியை—இத்தன்மையான கேட்டினைச் சூழ்ந்து செய்த மிக்க கீழ்மைக் குணமுடையவளை உளம் புழுங்கித் தம் மனத்தே வைவன போலக் காணப்பட்டன.

கு :—இருள்புலர்காலையில் பறவைகள் விழித்து எழுந்து சிறகடித்து ஒலி செய்வது இயல்பு ; அவ்வியல்பான ஒலியே கைகேயியை வைவது போலக் காணப்படுவதாகக் கூறியது, தற்குறிப்பேற்ற அணி. சிலம்பு ஒலி பறவை ஒலிக்கு உவமை. அன்னத்தின் ஒலிக்குச் சிலம்பொலி உவமையாதலை, “அரங்கினுடுவார் சிலம்பினன்னநின் றிரங்கு வார்புனல் சரயு ” (338) என்றதால் அறியலாம். புள் - பறவைப் பொதுப்பெயர். தம் மினத்தின் பெயரைத் தன் பெயராகக்கொண்ட நாடன் புதல்வி ஆதலின், கைகேயியைப் பறவைகள் வைதற்கு இயைபுண்டு என்பது காட்டியவாறு. தயரதன் உயிருண்ணும் கொடுமைபற்றிக் கைகேயி விடம் எனப்பட்டாள். கேகயத்துக்குப் பகையாகிய பாம்பின்விடம் கேகயத் தரசனிடத்தில் தோன்றியதே தீ நிமித்தம் என்பது குறித்தவாறு. நச்சுத்

தன்மையும் கயத்தன்மையும் உடைமை பற்றித் தம்மினத்தின் பெயர் கொண்ட நாடன் மகள் என்றும் பாராது பறவைகள் வைதன என்க. தயரதன் படும் அல்லலை நினைந்து 'இன்னதொர் கேடு' என்றார்; நெஞ்சறி சுட்டு. கயமை-கீழ்மைப் பண்பு. பிறர்க்குக் கேடு சூழ்வதாக எண்ணித் தனக்கே கேடு சூழ்ந்துகொள்ளும் இழிவு மிகவுடைமை தோன்ற 'மாகயத்தி' என்றார். கயமையுடையவள் கயத்தி. பிறந்த நாட்டிற்கேயன்றித் தம்மினத்திற்கும் தாழ்வுண்டாக்கினாள் ஆதலின் பறவைகள் உளங் கொதித்து வைவனவாயின. கோழி கூவுவதுபோலப் பேரொலிசெய்யாது மெல்லொலியேசெய்தலின் பறவைகள் மனத்து வைவனவாகக் கூறினர். (52)

### யானைகள் துயிலெழல்

1632. சேம மென்பன பற்றி யன்பு
திருந்த வின்றுயில் செய்தபின்
வாம மேகலை மங்கை யோடு
வனத்துள் யாரு மறக்கிலா
நாம நம்பி நடக்கு மென்று
நடுங்கு கின்ற மனத்தவாய்
யாமு மிம்ம ணிறத்து மென்பன
பொலெ ழுந்தன யானையே.

சேமம் என்பன பற்றி, அன்பு
திருந்த இன் துயில் செய்தபின்,
'வாம மேகலை மங்கையோடு
வனத்துள், யாரும் மறக்கிலா
நாம நம்பி, நடக்கும்' என்று
நடுங்குகின்ற மனத்தவாய்,
'யாமும் இம்மண் இறத்தும்' என்பன
போல் எழுந்தன—யானையே.

பொ:—பாதுகாப்புள்ள இடங்கள் என்று சொல்லப்படும் கூடங்களில் அன்புவைத்துத் திருத்தமாக இனிது உறங்கியபின்னர், அழகிய மேகலையணிந்த மங்கைப்பருவத்துச் சீதையோடு, யாரும் மறவாது போற்றும் பெயரையுடைய நம்பி வனத்துள் செல்லப் போகின்றான் என்று எண்ணி, அச்சத்தால் நடுங்கும் மனத்தையுடையவாய், யாமும் இம் மண்ணினைவிட்டு நீங்குவோம் என்று கருதியனபோல உறங்கும் இடத்திலிருந்து யானைகள் எழுந்தன.

கு:—சேமம்-பாதுகாப்பான இடம்; இங்கு யானை கட்டும் கூடத்தை யுணர்த்திற்று. சேமம் என்பனவற்றில் அன்புபற்றி என்று மாறுக. 'என்பன,' பெயர். உறங்குவோர்க்குப் படுக்குமிடத்தில் அன்புண்டாதல் இயல்பாதல் அறிக. இன் துயில் திருந்தச்செய்தலாவது, கனவும் கலக்கமு மில்லாது நெடிது துயிலுதல். 'வாம மேகலை மங்கை' என்றது காட்டில் புகுதற்கு ஏலாத அணிகலனும் பருவமும் உடைமை புலப்படுத்தியவாறு. நம்பி மங்கையோடு வனத்துள் நடக்கும் என்று இயைக்க. யாரு மறக்கிலா நாமம் என்றது, இராம நாமத்தை; தாரக மந்திரம் என்று இப்பெயரை யாவரும் ஓதுவர் என்பது கருத்து. "வைகலு மனையான் பேரினல் வரு மிடையுறு பெயர்கின்ற பயத்தால்" (1437) என முன்னர்க் கூறியிருத்தலும் காண்க. நம்பி - ஆடவரிற் சிறந்தோன். மனநடுக்கத்திற்குக் காரணம் இராமனைப் பிரிய நேர்கின்றதே என்ற ஆற்றுமை. யாமும் என்புழி உம்மை இறந்தது தழீஇயது. இறத்தல் – கடத்தல். படுத்த இடத்தைவிட்டு இயல்பாக எழுந்த யானைகளை, இராமன் இம்மண்ணிறத்தலின் யாமும் இம் மண்ணிறப்போம் என்ற கருத்தால் எழுந்தன எனக் கூறியது தற்குறிப்பேற்றம். (53)

### விண்மீன் மறைதல்

1633. சிரித்த பங்கய மொத்த செங்க
ணிராம னைத்திரு மாலையக்
கரிக்க ரம்பொரு கைத்த லத்துயர்
காப்பு நாணணி தற்குமுன்
வரித்த தண்கதிர் முத்த தாகியிம்
மண்ண னைத்து நிழற்றமேல்
விரித்த பந்தர் பிரித்த தாமென
மீனொ ளித்தன வானமே.

சிரித்த பங்கயம் ஒத்த செங்கண்
இராமனைத் திருமாலை, அக்
கரிக் கரம் பொரு கைத்தலத்து, உயர்
காப்பு நாண் அணிதற்குமுன்,
வரித்த தண் கதிர் முத்தது ஆகி, இம்
மண் அனைத்தும் நிழற்ற, மேல்
விரித்த பந்தர் பிரித்தது ஆம் என
மீன் ஒளித்தன வானமே.

பொ :—மலர்ந்த தாமரைமலரை ஒத்த சிவந்த கண்ணையுடைய இராமனை—திருமாலை, அந்த யானையின் துதிக்கை போன்ற கையில் உயர்ந்த காப்புநாண்கட்டுதற்குமுன்னர், அழகுறப் புனைந்த குளிர்ந்த ஒளியுடைய முத்துக்களையுடையதாக இந்நிலமுழுமையும் நிழல்செய்யுமாறு மேல் விரித்திருந்த முத்துப்பந்தரைப் பிரித்துவிட்டதுபோல விண்மீன்கள் வானத்தில் மறைந்தன.

கு :—'இராமனைத் திருமாலை' ஒரு பொருட் பலபெயர்; அவதாரப் பெயரையும் மூல மூர்த்திப் பெயரையும் ஒருங்கு கூறியவாறு. அகரம் நெஞ்சறி சுட்டு. இராமபிரான்கைக்கு யானையின் துதிக்கை உவமை; கருமையும் நீட்சியும் திரட்சியும்பற்றி வந்தது. "இருகை வேழத் திராகவன்" எனக் காப்பின்கண் கூறியதும் காண்க. வரித்தல் - கோலம் செய்தல். முத்ததாகி விரித்த பந்தர் என்க. ஞாயிற்றின் தோற்றத்தால் ஒளியிழந்து விண்மீன்கள் மறைகின்ற இயல்பான நிகழ்ச்சியை, விரித்த முத்துப் பந்தர் பிரித்தது போலும் என்றது, தற்குறிப்பேற்ற அணி. காப்பு நாண் அணிதற்கு முன் பிரித்த தாமென என்று இயையும். முடிபுனைவிழாவிற்கு விரித்த பந்தரைக் காப்பு அணிதற்குமுன் பிரித்தது அவ்விழா நடவாது என அறிந்து செய்தது என்னும் குறிப்பும் காண்க. விண் முழுதும் காணப்படும் மீன்களின் மறைவைக் கூறவேண்டியிருத்தலின் இம்மண்ணனைத்து நிழற்ற மேல் விரித்த பந்தர் கூற வேண்டியதாயிற்று. (54)

## காலை முரசொலி கேட்டுக் காரிகையார் எழுதல்

**1634.** நாம விற்கையி ராமனைத் தொழு
நாள டைந்த துமக்கெலாம்
காம விற்குடை கங்குன் மாலை
கழிந்த தென்பது கற்பியாத்
தாமொ லித்தன பேரி யவ்வொலி
சாரன் மாரி தழங்கலா
மாம யிற்குல மென்ன முன்ன
மலர்ந்தெ ழுந்தனர் மாதரே.

'நாம வில் கை இராமனைத் தொழும்
நாள் அடைந்தது; உமக்கு எலாம்
காம விற்கு உடை கங்குல் மாலை
கழிந்தது;' என்பது கற்பியாத்

தாம் ஒலித்தன பேரி ; அவ் ஒலி
சாரல் மாரி தழங்கல் ஆ
மா மயில் குலம் என்ன முன்னம்
மலர்ந்து எழுந்தனர் மாதரே.

பொ :—'பகைவர்க்கு அச்சம் தரும் வில்லை ஏந்திய கையையுடைய இராமனை மன்னனாகக் கண்டு தொழும் நாள் தோன்றிவிட்டது; உங்கட் கெல்லாம், மன்மதனுடைய கரும்புவில்லுக்குத் தோற்குமாறு செய்கின்ற இராப்பொழுது கழிந்தது' என்பதைக் கூறிக்கொண்டு காலை முரசங்கள் ஒலித்தன; அவ்வொலி மலைச் சாரலில் மொய்க்கும் மேகத்தின் இடிமுழக்கம் போன்றதாக நகரத்துப் பெண்டிர் எல்லாம் சிறந்த மயிலின்கூட்டம் போலக் கொழுநர் எழுதற்கு முன்னமே கண் மலர்ந்து எழுந்தார்கள்.

கு :—நாம்-அச்சம். காலை முரசம் ஒலிப்பது, கங்குல் கழிந்தது; முடிபுனை நாள் வந்தது என்பதை அறிவிக்கின்றது. 'இராமனை மன்னனாகக் கண்டு தொழும் நாள்' என்பது கருத்து. உமக்கெலாம் நாள் அடைந்தது; உமக்கெலாம் கங்குல் கழிந்தது என இரு புறமும் இயைந்து இடைநிலைவிளக்காய் நின்றது. மாலை என்பது போது என்னும் பொருளது; தன்மை எனலுமாம். கற்பித்தல்-தெரிவித்தல். 'பேரிதாம்' என்க. முரசொலி இடியொலியாகக் கூற வேண்டி இடியொலிகேட்டு மகிழும் மயில்களாக மாதரைக் கூறினர். உருவக அணி. மாரி தழங்கல், இடி ஒலி. 'மலர்ந்து' என்றது கண் விழித்தலை. பின் தூங்கி முன்னெழும் பெற்றியர் ஆதலின் முன் எழுந்தனர். 'நாளடைந்த நமக்கெலாம்' எனப் பாடங்கொண்டு அதற்கியையப் பொருள் கூறலுமாம். (55)

## தென்றல் வீசுதல்

1635. இனமலர்க்குலம் வாய்விரித்திள
வாச மாருதம் வீசமுன்
புனைதுகிற்கலை சோர நெஞ்சு
புழுங்கி னார்சில பூவைமார்
மனம னுக்கம் விடத்த னித்தனி
வள்ளலைப்புணர் கள்ளவன்
கனவி னுக்கிடை யூற டுக்க
மயங்கி னார்சில கன்னிமார்.

இன மலர்க் குலம் வாய் விரித்து இள வாச மாருதம் வீச, முன்
புனே துகில் கலே சோர நெஞ்சு புழுங்கினர் சில பூவைமார்;
மனம் அனுக்கம் விடத் தனித்தனி வள்ளலேப் புணர் கள்ள வன்
கனவினுக்கு இடையூறு அடுக்க மயங்கினர் சில கன்னிமார்.

பொ:—பல இன மலர்களின் கூட்டத்தை வாய் மலரச்செய்து பெற்ற இளமையான வாசனேயோடு தென்றற்காற்று வீசுவதால் சில பெண்டிர், புனேந்த புடைவை நெகிழ மனம் புழுங்கினர்கள்; மண மாகாத சில கன்னிப்பெண்டிர், மனவருத்தம் நீங்கத் தனித் தனியாக இராமனேத் தழுவுவதாகக் காட்டிய வஞ்சகம் வாய்ந்த வலிய கன வுக்கு இடையூருக அத்தென்றல் பொருந்த, விழித்துத் திகைப்பெய் தினர்கள்.

கு:—இனம் என்றது தாமரை முதலிய மலர்வகைகளே. குலம்-கூட்டம். காலேயில் விரியாத நிலேயில் இருந்த போதுகளேத் தென்றல் அசைத்து அலரச் செய்தது என்க. "அறுகாற் குறும்பெறிந் தரும்பு பொதி வாசம் சிறு காற் செல்வன் மறுகில் தூற்ற" (சிலப்-4-17; 18) என்பதும் காண்க. உடற்புழுக்கத்தை நீக்கும் மெல்லிய பூங்காற்று உளப்புழுக்கத்தை யுண்டாக்கியது. வாசத் தென்றலால் காமவுணர்ச்சி மிக அவ்வுணர்ச்சியால் ஆடைநெகிழப்பெற்ருர்கள் என்க. உணர்ச்சி பெருகியும் புணர்ச்சிபெற இயலாது பொழுது விடிந்தமையின் மனம் புழுங்கவேண்டியவர்களானர்கள். இவர்கள் மணம்பெற்ற மகளிர். துகிலாகிய கலே என இருபெயரொட்டாக்குக. பூவை-நாகணவாய்ப்புள்; உவமையாகுபெயராய்ப் பெண்டிரை யுணர்த்திற்று. கன்னிமார் - மண மாகாத மங்கைமார். இவர்கள் இராமனுடைய பேரழகில் ஈடுபட்டு அவனேயே நினேந்து துயின்றமையின் அவனேத் தழுவுவதாகக் கனக் கண்டார்கள். இராமன் ஏகதார விரதன் ஆகலின் ஒருகாலும் நிகழாத அவன் புணர்வை நிகழ்வதாகக் காட்டிய வஞ்சனேயும் வன்கண்மையும் உடைமைபற்றி, 'வள்ளலேப் புணர் கள்ள வன்கனவு' என்ருர். அனுக்கம், இதுகாறும் பெருமையால் வருந்திய வருத்தம். கன்னிமார் பலர் தனித் தனியே இவ்வாறு கனவுகண்டு இன்புற்று இருக்கும் நிலேயில் மெல்லிய காற்றுச் சில்லென்று வீசவே அவர்கள் திடும் என எழுந்து வறுங்கை காட்டிய வாயல் கனவினே நினேந்து கலங்கினர்கள் என்க. மலர் வாய் விரித்த மணத்தென்றல், மணந்த மகளிரைப் புழுங்கச் செய்து மண வாத மகளிரைக் கலங்கச்செய்தது என்பது கருத்து. (56)

## குமுதம் குவிந்தமை

1636. சாய டங்க நலங்க லந்து
தயங்கு தன்குல நன்மையும்
போய டங்க நெடுங்கொ டும்பழி
கொண்ட ரும்புகழ் சிந்துமத்
தீய டங்கிய சிந்தை யாள்செயல்
கண்டு சீரிய நங்கைமார்
வாய டங்கின வென்ன வந்து
குவிந்த வண்குமு தங்களே.

சாய் அடங்க நலம், கலந்து
தயங்கு தன் குல நன்மையும்
போய் அடங்க, நெடுங்கொடும்பழி
கொண்டு அரும்புகழ் சிந்தும் அத்
தீ அடங்கிய சிந்தையாள் செயல்
கண்டு, சீரிய நங்கைமார்
வாய் அடங்கின என்ன வந்து
குவிந்த வண் குமுதங்களே.

பொ :—தன் நலங்கள் யாவும் சுருங்கிக் கெடவும் தன்னோடு தொடர்புற்றுவிளங்குகின்ற தன் குலத்தின் நன்மைகளும் நீங்கியொழியவும், நீண்ட கொடிய பழியைக் கைக்கொண்டு, பெறுதற்கு அரிய புகழை மாய்த்த அந்தத் தீமை நிறைந்த சிந்தையுடைய கைகேயியின் செயலைக் கண்டு, சிறந்த ஒழுக்க முடைய பெண்டிரின் வாய்கள் அடங்கின என்னுமாறு வளம் வாய்ந்த குமுதங்கள் இதழ்கள் சேரப்பெற்றுக் குவிந்தன.

கு :—சாய்தல்-சுருங்குதல்; உள்ளதன் நுணுக்கம் என்பர். "ஒய்தல் ஆய்த லிழத்தல் சாஅய், ஆவயின் நான்கு முள்ளதன் நுணுக்கம்" (தொல்-சொல்-330) என்றது காண்க. அடங்குதல்-கெடுதல். கலத்தல்-தன்னோடு தொடர்புடையதாதல். தன்குலம் என்றது கைகேயி பிறந்த குலத்தை. இவள் செயலால் இவளுக்கும் இவள் பிறந்தகத்துக்கும் தீமையே விளைவன என்றவாறு. இச்செயலால் அவள் பெற்றது, நெடுங்காலம் நிற்கும் கொடும்பழி; இழந்தது புகழ் என்க. இதுகாறும் அரிதில் ஈட்டிய புகழ் யாவும் இச் செயலால் சிதைந்து அழிந்தது என்க. தீ-தீமை. தீ நெருப்பெனக் கொண்டு கொடுமையால் தீயும் அடங்குதற்குக் காரணமான சிந்தனையுடையவள் எனக் கூறலும் ஆம். செயலாவது, கணவனைக் கோறல். சீரிய நங்கை மார்-சிறந்த ஒழுக்க

முடைய கற்புடைப்பெண்டிர். மகளிர் வாய்க்குக் குமுத மலர் உவமை யாதல் பற்றி, அம்மலர் குவியுந் தோற்றம், சீரிய நங்கைமார் வாயடங் கின தன்மைபோலக் காணப்பட்டது என்க. தம் இனத்தில் ஒரு பெண் செய்த தீச் செயல் பெண்டிர்க்கெல்லாம் தாழ்வு தருதலின் நற்பெண் டிர் பேசவும் நாணி வாய்மூடி யிருத்தல் இயல்பு. குமுதம் காலையில் குவிந்து மாலையில் மலரும். (57)

## காலைப் பாட்டு

**1637.** மொய்ய ராக நிரம்ப வாசை
முருங்கு தீயின் முழங்க மேல்
வைய ராவிய மாரன் வாளியும்
வானி லாநெடு வாடையும்
மெய்ய ராவிட வாவி சோர
வெதும்பு மாதர்த மென்செவிப்
பைய ராநுழை கின்ற போன்றன
பண்க னிந்தெழு பாடலே.

மொய் அராகம் நிரம்ப, ஆசை முருங்கு தீயின் முழங்க, மேல் வை அராவிய மாரன் வாளியும், வால் நிலா நெடு வாடையும், மெய் அராவிட, ஆவி சோர, வெதும்பும் மாதர்தம் மென் செவிப், பை அரா நுழைகின்ற போன்றன, பண் கனிந்து எழு பாடலே.

பொ:—வலிய வேட்கை நிரம்புமாறும் ஆசை எல்லாவற்றையும் அழிக்கும் தீப் போல வளர்ந்து ஆரவாரிக்குமாறும், கூர்மையாக அராவப் பெற்ற மன்மதனுடைய அம்பும், வெண்ணிலவும் நெடிய காற்றும் உடம்பைத்தாக்கி வருத்துதலால், உயிர் வாட வருந்துகின்ற பெண்டிருடைய மெல்லிய செவியில் பண் அமைந்து எழுகின்ற இசைப் பாடல்கள், படத்தையுடைய பாம்புகள் நுழைகின்றன போலக் கடுமையாக நுழைந்து துன்புறுத்தின.

கு:—மொய்-வலி. அராகம் - பொருள்கள்மேல் தோன்றும் பற்றுள்ளம். அதன் வலிமை தோன்ற, 'மொய்யராகம்' என்றார். ஆசை-அப் பொருள்களைப் பெறவேண்டும் என்று மேல் மேல் நிகழ்வது. 'அராகம் நிரம்ப மாரன் வாளி அராவிட ஆவி சோர' எனவும், ஆசை முழங்க வாடை அராவிட வெதும்பும் எனவும் நிரனிறையாகப் பொருள் கொள்க. அராகம் நிரம்புமாறு மாரன் வாளியும் ஆசை முழங்குமாறு நிலவும் வாடையும் மெய் அராவிடலால் ஆவி சோர்தலும்

வெதும்புதலும் செய்கின்ற மாதர் என்க. மாரன் வாளியால் வேட்கை தோன்றுதலும் தென்றலிளங்காற்றால் காமம் பெருகுதலும் இயல்பு. வாடை என்பது வடதிசையிலிருந்து வருங்காற்றைக் குறிக்காது காற்றின் பொதுப்பெயராய்நின்றது. சித்திரைப் பூசநாளே இராமன் முடி புனை நாளாக முதல் நூல் கூறுவதால் இளவேனிலில் கூதிர்க்குரிய வாடைக்கு இயக்க மின்மை தெளிக. இராமனைக் கணவனாகப் பெற விழைந்த கன்னிப்பெண்டிர் மாரன்வாளியாலும் வெண்ணிலாவாலும் வாடையாலும் ஆவி சோர்ந்து வெதும்பாநிற்க, அத்துன்பத்திற்கு மேலும் பெருந்துன்பமாக அவர்கள் மெல்லிய செவியில் பையுடைய பாம்பு பைய நுழைவது போல் பண்ணமைந்த பாட்டொலி நுழைந்து வருத்திற்று என்க. காமுகர்க்கு இசைப்பாட்டு மேலும் காமத்தை வளர்த்து வருத்தும். வை-கூர்மை; பை-படம். இதனால் அந்நகரத்துக் காலை நேரத்தில் பண் கனிந்த பாடல் பாடும் இயல்பு புலப்படுத்தியவாறு. (58)

மைந்தர் துயிலெழல்

1638. ஆழி யான்முடி சூடு நாளிடை
யான பாவி யிதோரிரா
ஊழி யாயின வாறெ னாவுயர்
போதின் மேலுறை பேதையும்
ஏழு லோகமு மெண்ட வஞ்செய்த
கண்ணு மெங்கண் மனங்களும்
வாழு நாளிதெ னாவெ ழுந்தனர்
மஞ்சு தோய்புய மஞ்சரே.

'ஆழியான் முடி சூடும் நாள், இடை
ஆனபாவி இது ஓர் இரா
ஊழி ஆயின ஆறு !' எனா, 'உயர்
போதின் மேல் உறை பேதையும்,
ஏழு லோகமும் எண் தவஞ் செய்த
கண்ணும், எங்கள் மனங்களும்
வாழும் நாள் இது !' எனா, எழுந்தனர் ;
மஞ்சு தோய் புய மஞ்சரே.

பொ :—'இராமன் முடிசூடும் நாளுக்கு இடையே தோன்றிய பாவியான இஃதோர் இரவு, பல ஊழிக்காலம் ஆயினவாறு என்னே !' எனவும், 'உயர்ந்த தாமரைமலர்மேல் தங்குகின்ற திருமகளின்

அமிசமான சீதையும், ஏழுலகத்தோரும் மதிக்கத் தவஞ்செய்த எங்கள் கண்களும், மனங்களும், வாழ்வின் பயன் எய்து நாள் இது !' எனவும், கூறிக் கொண்டு அழகு பொருந்திய புயத்தையுடைய மைந்தர்கள் படுக்கையை விட்டு எழுந்தனர்.

கு :—'ஆழியான்' என்றது, சக்கரப்படையுடைய திருமாலின் அமிசமான இராமபிரானை. உடனே இராமனை மன்னனுகக் காணுதவாறு தடைசெய்து இடையே நின்றமையின் இரா, பாவி என்று இகழப் பட்டது. 'ஓரிரா' என்றமையின் பல ஊழியாயின என்று பல என்பதை வருவிக்க. இராமன் முடிபுனைவிழாவில் மக்களுக்கிருந்த ஆசைமிகுதி யால் உறங்காது இருந்தனர் ஆதலின் ஓரிரவே பல்லூழிகாலம் போல் நீண்டு தோன்றிற்று என்க. "கரிய நாழிகை யூழியிற் பெரியன", "ஊழியில் பெரிதால் நாழிகை யென்னும்" (பெரியதிரு 2-7-4) என்று கூறுதலும் காண்க. ஏழுலோகமும் என்பதைத் தனியே எண்ணினும் ஆம். இராமனை நேரே கண்டு களிக்கும் வாய்ப்புத் தவத்தால் கிடைத்தது என்பது கருத்து. "கரியவனைக் காணுத கண்ணென்ன கண்ணே" (சிலப். ஆய்ச்சியர்குரவை) என்று இகழப் படாமல், "கண்விழித்துக் காண்பார்தம் கண்ணென்ன கண்ணே" என்று புகழக் காண்பதே வாழ்வின் பயன் ஆகலின் அதை வாழுநாள் என்ருர் கள். கண்ணுல் கண்ட வடிவத்தை நினைவில் கொண்டு இன்புறுவது மனமாகலின் அதனை வேறு எண்ணினர். மஞ்சு - அழகு. மஞ்சர், மைந்தர் என்பதன் மருஉ. இரவை இகழ்ந்து விடியலைப் புகழ்ந்து கொண்டு எழுந்தனர் என்க. (59)

### மாதர் துயில் எழுதல்

**1639.** ஐயு றுஞ்சுடர் மேனி யானெழில்
காண மூளு மவாவினுல்
கொய்யு றுங்குல மாம லர்க்குவை
நின்றெ ழுந்தனர் கூர்மைகூர்
நெய்யு றுஞ்சுடர் வேனெ டுங்கண்
முகிழ்த்து நெஞ்சினி னைப்பொடும்
பொய்யு றங்கு மடந்தை மார்குழல்
வண்டு பொம்மென விம்மவே.

ஐயுறும் சுடர் மேனியான் எழில்
காண மூளும் அவாவினுல்,
கொய் உறும் குல மா மலர்க் குவை
நின்று எழுந்தனர், கூர்மை கூர்

நெய் உறும் சுடர் வேல் நெடுங்கண்
முகிழ்த்து நெஞ்சில் நினைப்பொடும்
பொய் உறங்கும் மடந்தைமார், குழல்
வண்டு பொம் என விம்மவே.

பொ :—கூர்மை மிக்கதும் நெய் பூசப்பெற்றதும் ஆய ஒளி வாய்ந்த வேல் போன்ற நீண்ட கண்களை மூடிக்கொண்டு நெஞ்சில் இராமன் முடிபுனைவைப் பற்றிய நினைப்போடும் பொய்யாகத் தூங்கிக் கொண்டிருந்த பெண்டிர், தம் கூந்தலில் உள்ள வண்டு, பொம் என்று ஒலித்துக் கொண்டு எழ, அம்மெல்லொலியைக் கேட்டு, வியப்புமிக்க ஒளிவாய்ந்த மேனியானுகிய இராமனுடைய அழகைக் காணவேண்டும் என்று மேலெழுகின்ற ஆசையினுல், காம்பு கொய்து பெய்த சிறந்த மலர்க் குவியலிலிருந்து எழுந்தார்கள்.

கு :—ஐ - வியப்பு. உறு – மிகுதி. கருநாயிறு போல்பவன் ஆதலின், 'சுடர் மேனி' என்ருர். அவாவினுல் எழுந்தனர் என்க. மலர்க்குவை என்றது பஞ்சணையில் பரப்பிய மலர்த்திரளை. மலர்க் காம்பு மேனியில் உறுத்தும் என்று அஞ்சி அதைக் கொய்து களைந்தமை தோன்ற, 'கொய்யுறும்' என்றும், அம்மலரின் உயர்ச்சி தோன்றக் 'குலமாமலர்' என்றும், அம்மலரின் மிகுதி தோன்றக் 'குவை' என்றும் கூறினுர். அவர்கள் கூந்தலிலுள்ள இயற்கை மணத்தையும் அதில் சூடியுள்ள மலரின் மணத்தையும் முகர்ந்து தூங்கிய வண்டுகள் பொழுது புலர்ந்ததறிந்து பொம் என்ற அநுகரண ஒலியோடு எழுந்திருந்தன. பொய்த் தூக்கம் தூங்கும் பெண்டிராகலின் அவ்வண்டின் மெல்லொலியையும் கேட்டு இராமன் அழகு காணும் அவாவினுல் உடனே எழுந்தனர் என்க. விழிப்பு வரினும் மேலும் படுத்திருக்கத் தூண்டும் மென்மை மிக்க மலரணையில் நின்று உடனே எழுதற்கு அவன் எழில் காணும் அவாவைக் காரணமாக்கினுர். மலர் என்னும் கருத்தால் கண்ணிற்கு முகிழ்த்தல் கூறினுர். முகிழ்த்தல் – குவிதல். கண்களை மூடிக் கொண்டிருப்பதால் உறங்குவது போலக் காணப்பட்டு நெஞ்சில் நினைவு மறவாதிருந்த நிலையையே பொய்யுறக்கம் என்ருர், நினைவு மறத்தலே உறக்கம் ஆகலின். (60)

ஊடியவர் கூடாது எழுதல்

**1640.** ஆட கந்தரு பூண்மு யங்கிட
வஞ்சி யஞ்சி யகந்தரால்
ஏட கம்பொதி தார்பொ ருந்திட
யாம பேரி யிசைத்தலால்

சேட கம்புனை கோதை மங்கையர்
சிந்தை யிற்செறி திண்மையால்
ஊடல் கண்டவர் கூடல் கண்டிலர்
நைய மைந்தர்க ளுய்யவே.

ஆடகம் தரு பூண் முயங்கிட
அஞ்சி அஞ்சி அநந்தரால்
ஏடு அகம் பொதி தார் பொருந்திட,
யாம பேரி இசைத்தலால்,
சேடு அகம் புனை கோதை மங்கையர்,
சிந்தையில் செறி திண்மையால்,
ஊடல் கண்டவர் கூடல் கண்டிலர்,
நையும் மைந்தர்கள் உய்யவே.

பொ :—அழகைத் தன்பால் கொண்டதாய்ப் புனைந்த மாலையை யணிந்த மங்கைமார், சிந்தையில் பொருந்தியிருந்த திட்பத்தால் கொழுநரோடு ஊடுதலைச் செய்தவர்கள், பின்பு கூடும் எண்ணம் வந்தும், ஆடகம் என்னும் பொன்னால் செய்த அணிகலன்களோடு இருந்து தழுவுவதற்கு அஞ்சி அஞ்சிக் காலம் கழித்தார்கள்; பின் தூக்க மயக்கத்தோடு (அவ் அணிகலன்களைக் களைந்துவிட்டுத் தழுவலாம் என எண்ணி அவ்வணிகலன்களுக்குப் பதிலாக) அகவிதழ்கள் நிறைந்த மாலையை அணியாநிற்க, அப்பொழுது காலையாமத்திற்குரிய முரசு முழங்குதலால், ஊடலால் நைந்த மைந்துடைக் கொழுநர்கள் உய்யு மாறு கூடுதலைச் செய்யாது எழுந்தனர்.

கு :—சேடு - அழகு. ஊடல் நீடித்தற்கு நெஞ்சுரம் வேண்டி யிருத்தலின் சிந்தையிற் செறி திண்மையை அவ்வூடலுக்குக் காரண மாக்கினர். கண்டவர் – செய்தவர். முடிபுனை விழாவிற்குச் செல்ல வேண்டிப் பொற்கலன்களை மிகுதியாக அணிந்து கொண்டிருந்தமை யால் அப்பூணொடு முயங்கின் கொழுநர் மெய்யில் வடுப்படுமே என்று பெண்டிர் அஞ்சினர்கள் என்க. அடுக்கு இடையீடின்மை யுணர்த்திற்று. ஆடகம், கிளிச்சிறை, சாம்பூநதம், சாதரூபம் எனப் பொன் நால் வகைப்படும். இங்குக் கூறப்பட்ட பூண் ஆடகப் பொன்னால் இயன்றது என்க. அநந்தர் – சிறுதுயில் மயக்கம். ஆல் உருபு உடனிகழ்ச்சியில் வந்தது. ஏடு – இதழ்; 'அக ஏடு' என்பது முன் பின்னாக மாறி நின்றது. புறவிதழ் ஒடித்து அகவிதழ் கொண்டு செய்த மாலை என்க. புல்லுங்கால் புறவிதழும் உறுத்துமென்று அதனை ஒடித்தனர். கூடு தற்கு விரும்பித் தார் அணியும் பொழுது காலை முரசு முழங்குதலால் கூடல் காண இயலாது போயது. மைந்தர் – வலிமையுடைய ஆடவர்கள்.

அவர்கள் நைவிற்குக் காரணம் மகளிர் ஊடலே. "ஊடுதல் காமத்திற் கின்பம் அதற்கின்பம் கூடி முயங்கப் பெறின்" (குறள்–1330) என்றுங்குக் காமத்திற்கு இன்பம் விளைக்க ஊடியவர் அவ்வூடலுக்கு இன்பம் விளையக் கூடல் செய்திலர் என்க. கோதை – தலையிற் சூடுவது; 'கூந்தல் வேய்ந்த கோதையும்' (பெருங் 1-48-77) என்பது காண்க. தார் – மார்பில் அணிவது. ஊடல் நீட்டிப்பாலும் பூனொடு முயங்க அஞ்சியிருந்தமை யாலும் இராப்போது கழிந்துவிட்டது ; ஊடலின் நீட்சிக் கேற்ப இரா நீளவில்லை. (61)

## காலை ஒலிகள்

**1641.** தழையொ லித்தன வண்டொ லித்தன
தாரொ லித்தன பேரியாம்
முழவொ லித்தன தேரொ லித்தன
முத்தொ லித்தெழு மல்குலார்
இழையொ லித்தன புள்ளொ லித்தன
யாழொ லித்தன வெங்கணும்
மழையொ லித்தன போல்க லித்த
மனத்தின் முந்துறு வாசியே.

தழை ஒலித்தன ; வண்டு ஒலித்தன;
தார் ஒலித்தன ; பேரி ஆம்
முழவு ஒலித்தன; தேர் ஒலித்தன;
முத்து ஒலித்து எழும் அல்குலார்
இழை ஒலித்தன; புள் ஒலித்தன;
யாழ் ஒலித்தன; எங்கணும்
மழை ஒலித்தன போல் கலித்த
மனத்தின் முந்துறு வாசியே.

பொ :—எல்லா இடங்களிலும் பீலிக்குஞ்சங்கள் அசைந்தன; வண்டுகள் ஒலிசெய்தன ; மலர் மாலைகள் விளங்கின ; முரசு என்னும் வாத்தியம் முழங்கின; தேர் ஓடுங்கால் ஒலி செய்தன; முத்துவடம் ஒலித்து விளங்கும் அல்குலையுடைய மகளிரின் அணிகலன்கள் ஒலித்தன ; பறவைகள் எல்லாம் எழுந்து ஒலியெழுப்பின ; யாழ்கள் இசை எழுப்பின ; பாகனுடைய மனத்தினும் முந்திச் செல்கின்ற குதிரைகள் மேகம் இடிப்பதுபோல் கனைத்தன.

கு :—இது சொற்பின்வருநிலையணி. ஒலித்தல் என்ற வினைச் சொல் இடத்திற்கேற்ப வேறு பொருளும் தந்தது. தார் – கிண்கிணியு

மாம். "உள்ளம் போல உற்றுழியுதவும் புள்ளியற் கலிமா" (தொல் பொருள் 194) என்பதற்கேற்ப மனத்தைப் போல முந்துறும் எனப் பொருள்கோடலுமாம். வாசி - குதிரை. மழை ஒலித்தலாவது இடித்தல். முடிபுனை விழாவின்பொருட்டுக் காலையில் முரசு முதலிய ஒலித்தன. (62)

## விளக்கொளி மழுங்கல்

1642. வைய மேழுமொ ரேழு மாருயி
ரோடு கூட வழங்குமம்
மெய்யன் வீரருள் வீரன் மாமகன்
மேல்வி ளைந்ததோர் காதலால்
நைய நையந லைம்பு லன்கள
வித்த டங்கிந டுங்குவான்
தெய்வ மேனி படைத்த சேயொளி
போன்ம ழுங்கின தீபமே.

வையம் ஏழும் ஓர் ஏழும் ஆருயிரோடு
கூட வழங்கும் அம்
மெய்யன், வீரருள் வீரன், மாமகன்மேல்
விளைந்தது ஓர் காதலால்,
நைய நைய நல் ஐம்புலன்கள்
அவிந்து அடங்கி நடுங்குவான்
தெய்வ மேனி படைத்த சேயொளி
போல் மழுங்கின தீபமே.

பொ :—உலகம் பதினான்கையும் அரிய உயிரோடு சேர்த்துக் கொடுக்கும் அப்படிப்பட்ட மெய்மையாளனும் வீரருள் சிறந்த வீரனும் தன் சிறந்த மகனாகிய இராமன் மேல் உண்டான ஒப்பற்ற பேரன்பால் வருந்த வருந்த நல்ல ஐந்து புலன்களும் தம் ஆற்றல் அழிந்தமையால் வலியடங்கி நடுங்குகின்றவனும் ஆகிய தயரதனின் தெய்வத் தன்மையுடைய உடம்பு பெற்றிருந்த செவ்விய ஒளி மழுங்குமாறு போல விளக்குகள் ஒளி மழுங்கின.

கு :—தயரதன் புரந்த நாட்டையே வையமேழுமொரேழும் என்று உயர்வுநவிற்சியால் கூறியவாறு. இராமன் பிரிதலும் தயரதன் உயிர் பிரிதல் உறுதியாகலின் 'ஆருயிரோடு கூட வழங்கும்' என்றார். வாய்மை காக்க உயிர் துறந்த அவன் பெருமையை நினைந்து, 'அம்

மெய்யன்' என நெஞ்சறிசுட்டாகக் கூறினர். இந்திரனுக்கும் அரசளித்த வீரன் ஆதலின், 'வீரருள் வீரன்' என்றார். வருந்துதற்குக் காரணம் இராமனைப் பிரிந்து ஆற்றாத பேரன்பே என்க. மாமகன் – மூத்தமகன். பிறப்பாலும் சிறப்பாலும் மூத்தவன் என்க. புலன்கள் என்றது இங்குக் கண் முதலிய பொறிகளை. அவிதலால் அடங்கி என்க. திருமாலின் அமிசமான இராமனைப் பெற்ற பெருமை நோக்கித் தயரதன் மேனி, 'தெய்வமேனி' என்று சிறப்பிக்கப் பெற்றது; திருவுடை மன்னனாகலின் திருமாலே என்னுங் கருத்தால் கூறியதுமாம். மேனியின் செவ்வொளி மகன் பிரிவான் என்ற ஏக்கத்தால் மழுங்கியது; அதனை ஞாயிற்றின் தோற்றத்தால் ஒளிமழுங்கும் தெரு விளக்கிற்கு உவமை கூறினர். நடுங்குவான், வினைப் பெயர். மெய்யன், வீரன், நடுங்குவான் என்பன ஒரு பொருள் மேல் வந்த பல பெயர்கள். **(63)**

## பல்வகை வாத்திய ஒலிகள்

**1643.** வங்கி யம்பல தேன்வி ளம்பின
வாணி முந்தின பாணியின்
பங்கி யம்பர மெங்கும் விம்மின
பம்பை பம்பின பல்வகைப்
பொங்கி யம்பல வுங்க றங்கின
நூபு ரங்கள் புலம்பவெண்
சங்கி யம்பின கொம்ப லம்பின
சாம கிதத நிரந்தவே.

வங்கியம் பல தேன் விளம்பின;
வாணி முந்தின பாணியின்
பங்கி அம்பரம் எங்கும் விம்மின;
பம்பை பம்பின; பல்வகைப்
பொங்கு இயம் பலவும் கறங்கின;
நூபுரங்கள் புலம்ப வெண்
சங்கு இயம்பின; கொம்பு அலம்பின
சாம கீதம் நிரந்தவே.

பொ :—புல்லாங்குழல்கள் பல தேன் போன்ற இனிமையோடு ஊதப் பெற்றன; சொல்லை முற்கொண்டு எழுகின்ற இசைப்பாடலின் வகைகள் ஆகாயம் எங்கும் பரவி ஒலித்தன; பம்பை என்னும் வாத்தியம் முழங்கின; பல்வகையாக மிக்குள்ள மற்றைய வாத்தியங்கள் பலவும் ஒலித்தன; நடனமாடும் மகளிரின் காற்சிலம்புகள் ஒலிக்க,

வெண்மையான சங்குகள் முழங்கின; ஊது கொம்புகள் ஊதப்பட்டன சாமவேதத்தின் இசை நிறைந்தன.

கு :—வாணி - சொல். பாணி - இசைப்பாடல். பங்கி - வகை. அம்பரம் - ஆகாயம். தட்டுவ, கொட்டுவ, ஊதுவ, எழுப்புவ என வாத்தியங்கள் பலவகைப்படும். நூபுரங்கள் புலம்புதல் கூறவே மாதர் நடித்தல் பெற்றும். மங்கல நிகழ்ச்சிகளுக்குச் சங்கு ஊதல் மரபு. விளம்புதல் விம்முதல் முதலியன ஒலித்தல் என்ற ஒரு பொருள் குறித்த பல சொற்கள். (64)

## சூரியன் தோன்றுதல்

**1644.** தூப முற்றிய காரி ருட்பகை
துள்ளி யோடிட வுள்ளெழும்
தீப முற்றவு நீத்த கன்றெனச்
சேய தாருயிர் தேயவெம்
பாப முற்றிய பேதை செய்த
பகைத்தி றத்தினில் வெய்யவன்
கோப முற்றி மிகச்சி வந்தன
ளெத்த ன்குண குன்றிலே.

தூபம் முற்றிய கார் இருள் பகை
துள்ளி ஓடிட, உள் எழும்
தீபம் முற்றவும் நீத்து அகன்றெனச்,
சேயது ஆர் உயிர் தேய, வெம்
பாபம் முற்றிய பேதை செய்த
பகைத் திறத்தினில், வெய்யவன்
கோபம் முற்றி மிகச் சிவந்தனன்
ஒத்தனன், குண குன்றிலே.

பொ :—கரும்புகை போன்று சூழ்ந்துகொண்ட கரிய இருளாகிய பகை துள்ளி ஓடவும், வீடுகளின் உள்ளிடத்தில் எழுந்த விளக்குகள் முழுவதும் தம் தொழில் விடுத்து அகலவும், சூரியன், தன் குலத்துப் பிறந்த மகனாகிய தயரதனது அரிய உயிர் தேயுமாறு கொடிய தீவினை நிரம்புமாறு கைகேயியாகிய பேதை செய்த பகைத் தன்மையால் கோபம் முதிர்ந்து மிகவும் சிவந்தனன்போன்று உதய மலையில் தோன்றினன்.

கு :—தூபம்-புகை. முற்றுதல்-சூழ்தல். துள்ளியோடல், அச்சத்தால் உளதாகிய விரைவுபற்றிநிகழ்ந்தது. ஒளியும் இருளும் மாறுபட்டதன்மை யனவாகலின் பேரொளிப் பொருளாகிய ஞாயிற்றுக்கு இருள் பகை யாகக் கூறப்பட்டது. நீத்தல், விளக்குகள் வீட்டிருளை நீக்கிக்கொண் டிருந்த தம் தொழிலை விடுத்தல். அகலுதல்-இடம் விட்டுப் பெயர்தல். பகையாதல் பற்றி இருள் துள்ளி ஓடியதாகவும் விளக்கு நட்புப் பொருள் ஆதல் பற்றி அகன்றதாகவும் கூறிய நயம் காண்க. சூரியன் மறைந்தவழி அவன் வேலையைப் பகிர்ந்துகொண்டு விளக்குகள் பல இயன்றாங்குச் செய்தலும் மீண்டும் அவன் வந்துழி அவ் வேலையை விடுத்து நீங்குதலும் நட்புச்செயலாதல் காண்க. வெய்யவன், இருள் ஓடிடத், தீபம் அகலக் குணகுன்றில் சிவந்தனன் ஒத்துத் தோன்றினன் என முடிக்க. உதிக்குங்கால் செந்நிறத்தோடு தோன்றும் சூரியனுடைய இயல்பு நிகழ்ச்சியைத் தன் சேய் உயிர் தேயச்செய்த கைகேயியின் பகைச்செயல்கண்டு கோபத்தால் சிவந்ததாகக் கூறியது தற்குறிப் பேற்ற அணி. தயரதன்,' சூரிய குலத்தினன் ஆதல் பற்றிச் சூரிய னுக்குச் சேய் எனப்பட்டான். கோபம் முதிர்ந்தால் கண்ணும் முகமும் சிவத்தல் இயல்பு. தன் கணவன் உயிரைத் தேய்த்து எழுமையும் தான் புக்கழுந்தும் நிரயத்துன்பத்தைச் சிறிதுநேரத்தில் செய்துகொண் டாள் ஆதலின் கைகேயியை 'வெம்பாபம் முற்றிய பேதை' என்றார். "ஒருமைச் செயலாற்றும் பேதை யெழுமையும், தான்புக் கழுந்து மளறு" (குறள்–835) என்றது காண்க. கணவனைக் கோறலினும் கொடும்பாவம் பிறிதின்மையின் 'வெம்பாப முற்றிய...செய்த' என்றார். முற்றிய – செய்யிய என்னும் வாய்பாட்டு வினையெச்சம். பாபமுற்றுதலாவது பிற தீவினைகள் வேண்டாது தானே நிரம்புதல். ஒத்துத் தோன்றினன் என்க. குணகுன்று-கீழ்த்திசையிலுள்ளதாகிய உதயகிரி. குணக்கு – கிழக்கு. இயல்பாகவே வெய்யவனாக (கொடியவனாக) உள்ளவன் கோப முற்றி மிகச் சிவந்தான் என்ற நயம் ஓர்க. (65)

தாமரை மலர்தல்

**1645.** மூவ ராய்முத லாகி மூலம
தாகி ஞாலமு மாகுமத்
தேவ தேவர் பிடித்த போர்வி
லொடித்த சேவகர் சேணிலம்
காவன் மாமுடி சூடு பேரெழில்
காண லாமெனு மாசைகூர்
பாவை மார்முக மென்ன முன்ன
மலர்ந்த பங்கய ராசியே.

மூவராய் முதலாகி மூலமது
ஆகிஞாலமும் ஆகும் அத்
தேவதேவர் பிடித்த போர் வில்
ஒடித்த சேவகர், சேண் நிலம்
காவல் மா முடி சூடு பேர் எழில்
காணலாம் எனும் ஆசை கூர்
பாவைமார் முகம் என்ன முன்னம்
மலர்ந்த பங்கய ராசியே.

பொ :—அரன், அரி, அயன் என்ற மூவராகி, சங்கார காரணனாதல் பற்றி அம்மூவருள் முதன்மையுடையனாகி, மகாசங்கார காரணனாதல் பற்றி அம்முதல்வனுக்கும் மூலப் பொருளாகி, கலப்பாம் தன்மையால் உயிர்களுமாகிப் பொருட்டன்மையால் வேறுமாய் உயிர்க்குயிராந் தன்மையால் உடனுமாய் இருக்கின்ற அந்தத் தேவதேவனாகிய சிவபிரான் பிடித்த போர் செய்தற்குரிய வில்லை ஒடித்த வீரனாகிய இராமபிரான், பரந்த பூமியைக் காவல் செய்தற்கு அறிகுறியாகச் சிறந்த முடிசூடுகின்ற பெரிய அழகைக் காணலாம் என்னும் ஆசை மிக்க பெண்டிருடைய முகங்கள் போல முற்பட மலர்ந்தன தாமரை மலர்களின் கூட்டம்.

கு :—தேவ தேவர்-சிவபிரான். "நவந்தரு பேதம் ஏக நாதனே நடிப்பன்" (சிவஞான சித்தியார்–194) என்பதால், "மூவராய் முதலாகி மூலமதாகி'' என்றார். 'முதலாகி' என்பதற்கு ஈசனாகி எனவும், மூலமதாகி என்பதற்கு 'மகேசனாகி' எனவும் பொருள் கூறலாம். 'ஞாலம்' ஆகுபெயராய் உயிர்களையுணர்த்திற்று. 'ஞாலமும் ஆகும்' என்ற உம்மையை ஆக்க உம்மையாக்கி வேறுமாகி உடனுமாகிய என்பன கொள்ளப்பட்டன. "எட்டுத் திசைதானாய் வேறாயுடனானானிடம் வீழிம் மிழலையே" (திருஞான-தே-109) என இறைவன் உயிர்களோடு ஒன்றாய் வேறாய் உடனாகும் இயல்பை விளக்கியுள்ளவாறு காண்க. சீதையை மணக்க ஒடித்த வில் சிவதனுசு ஆதலின் இங்ஙனம் கூறினர். சீதேவியை மணந்தவர், பூதேவியை மணக்கும் எழிலைக் காண ஆசை மிக்கார் பெண்டிர் என்க. போர்விலொடித்த சேவகர் என்பது, சீதை மணத்தை நினைப்பித்தது. ஆளுதற்குரிய நாட்டின் பரப்பை விளக்க, 'சேணிலம்' என்றார். சேண் - தொலைவு. மன்னனாதல் மாநிலங் காவலனாதலே என்பது தோன்ற, 'காவன் மாமுடி' என்றார். அழகு கண்டு சுவைப்பதில் பெண்டிரே முதன்மையானவர் என்பதை விளக்கியவாறு. பெண்டிர் முகத்திற்குத் தாமரைமலரை உவமை கூறும் முறையை மாற்றிப் 'பாவைமார் – முகமென்ன...மலர்ந்த பங்கயராசி' என்றமையால் இது விபரீதவுவமையாம். ராசி, கூட்டம். பாவைமார் முகம் மலர்

தற்கு முன் மலர்ந்தன பங்கயம் எனலுமாம். 'மலர்ந்த' அன்பெறுது வந்த அகரவீற்று வினைமுற்று. (66)

விலைம டந்தையர் சீறவுமவர் வீடுவிட்டக லாதுநின்
றுலையு மவ்வழி வேறெரு ருத்த னுறப்பி ரித்தவ ளுமெனக்
கலைநி ரம்பிய திங்க ளந்தி கழிந்து மேகில தாசைவாய்
அலைத ருங்கட லூடெ ழுங்கதி ரால்ம ழுங்கி யகன்றதே.

என்ற பாடல் 27 ஆம் ஏட்டில் இதன்பின் காணப்படுகிறது.

## கவிக்கூற்று

1646. இன்ன வேலையி னேழு வேலையு
மொத்த போல விரைத்தெழுந்
தன்ன மாநகர் மைந்தன் மாமுடி
சூடும் வைகலி தாமெனுத்
துன்னு காத றுரப்ப வந்தவை
சொல்ல லாம்வகை யெம்மனோர்க்
குன்ன லாவன வல்ல வென்னினு
முற்ற பெற்றி யுணர்த்துவாம்.

இன்ன வேலையின், ஏழு வேலையும்
ஒத்தபோல இரைத்து எழுந்து,
அன்ன மாநகர், 'மைந்தன் மா முடி
சூடும்வைகல் இதாம்' எனுத்,
துன்னு காதல் துரப்ப வந்தவை
சொல்லல் ஆம் வகை எம்மனோர்க்கு
உன்னல் ஆவன அல்ல என்னினும்,
உற்ற பெற்றி உணர்த்துவாம்.

பொ—இப்படிப்பட்ட வேளையில் அந்த அயோத்திமாநகரத்து மக்கள், ஏழுகடலும் ஒருங்கெழுந்து ஒலிப்பதுபோல ஆரவாரித்துக் கொண்டு எழுந்து, சக்கரவர்த்தி திருமகன் சிறந்த முடிபுனையும் நாள் இதுவாகும் என்று நெருங்கிய காதல் தூண்டுதலால் அவர்கள் செய்தன வற்றை எல்லாம் சொல்லலாம் தன்மையவே என எம்மைப் போன் ரூர்க்கு நினைத்தற்கும் உரியன அல்ல; என்ருலும் இயன்ற அளவு சொல்லுவோமாக.

கு :—மாநகர், ஆகுபெயராய் மக்களை யுணர்த்திற்று. வேலை, முன்னது காலத்தையும் பின்னது கடலையும் உணர்த்திற்று. மக்களின் மகிழ்ச்சியாரவாரத்திற்கு எழுகடல் ஒலி உவமை. மைந்தன், இராம பிரான். வந்தவை, அந்நகரமக்கள்பால் தோன்றியவை; அவர்கள் செய்தவை. உன்னலும் ஆவன அல்ல என்னும் இழிவு சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. எமக்கு என்னும் கருத்தால் எம்மனோர்க்கு என்றார். 'அனோர்' என்பது ஒப்பில்போலி. கவி, தன் தாழ்வும் மக்களின் மகிழ்ச்சியுயர்வும் தோன்ற இங்ஙனம் கூறினார். (67)

## மங்கையர் புனைவு

1647. குஞ்சர மனையார் சிந்தைகொ ளிளையார்
★ பஞ்சினை யணிவார் பால்வளை தெரிவார்
அஞ்சன மெனவா ளம்புக ளிடையே
நஞ்சினை யிடுவார் நாண்மலர் புனைவார்.

குஞ்சரம் அனையார் சிந்தை கொள் இளையார்,
பஞ்சினை அணிவார்; பால் வளை தெரிவார்;
அஞ்சனம் என வாள் அம்புகளிடையே
நஞ்சினை இடுவார்; நாள் மலர் புனைவார்.

பொ :—யானையையொத்த பெருமிதமுடைய ஆடவர்தம் உள்ளங்களைக் கொள்ளைகொள்ளும் இளம்பெண்டிர் தம் அடிகளுக்குச் செம் பஞ்சினை அணிவார்களும், கைகளுக்கு ஏற்ற வெண்மையான சங்க வளையல்களை ஆராய்ந்து அணிவார்களும், கூரிய அம்புபோன்ற கண்களில் மை என்று பேர் சொல்லிக்கொண்டு நஞ்சினைத் தீட்டுபவர்களும், அன்றலர்ந்த மலர்களைக் கூந்தலில் புனைபவருமாயினர்கள்.

கு :—மைந்தர்க்கு யானை பெருமித நடையால் உவமையாகும். 'இருகை வேழத் திராகவன்' எனக் காப்புச் செய்யுளில் வந்தமையும் காண்க. 'இளையார்' என்றது பெண்டிரை. "பந்தினை இளையவர் பயிலிடம்" (பால-93) என்புழியும் அப்பொருளதாதல் காண்க. அடிகட்குச் செந்நிறமூட்டச் செம்பஞ்சுக்குழம்பு அணிதல் மரபு. மங்கல வினைக் குரியது வெள்வளை. அம்புகளுக்கு நஞ்சூட்டுதல் உண்டு. வாள் அம்பு-கூரிய அம்பு; ஆகுபெயராய்க் கண்களை யுணர்த்திற்று. கண்களுக்குத் தீட்டியது மையேயாயினும் ஆடவரை அழகால் கொல்லுதலின் 'அஞ்சன மென நஞ்சினை யிடுவார்' என்றார். 'அஞ்சன மென் றேய்ந்த நஞ்சினைத் தெரியத் தீட்டி' (74) எனப் பிற் கூறுதலும் காண்க. நாள் மலர் - அன்றலர்ந்த மலர். 'ஆவார்' என்று ஒருசொல் வருவித்து முடிக்க. (68)

## மைந்தர் மகிழ்ச்சி

1648. பொங்கிய வுவகை வெள்ளம்
★ பொழிதரக் கமலம் பூத்த
சங்கையின் முகத்தார் நம்பி
தம்பிய ரனைய ரானார்
செங்கய னறவ மாந்திக்
களிப்பன சிவணுங் கண்ணார்
குங்குமச் சுவடு நீங்காக்
குவவுத்தோட் குமர ரெல்லாம்.

பொங்கிய உவகை வெள்ளம் பொழிதரக், கமலம் பூத்த சங்கை இல் முகத்தார், நம்பி தம்பியர் அனையர் ஆனார், செங்கயல் நறவம் மாந்திக் களிப்பன சிவணும் கண்ணார் குங்குமச் சுவடு நீங்காக் குவவுத் தோள் குமரர் எல்லாம்.

பொ :—சிவந்த கயல்மீன்கள் தேனையுண்டு களிப்பனவற்றைப் போன்று சிவந்திருக்கின்ற கண்ணையுடைய மங்கையர் தம் குங்குமக் குழம்பின் சுவடு நீங்காதுள்ள குவிந்த தோளையுடைய காளையர் எல்லாம், மிகுதியான உவகைக் கலுழ்ச்சியாகிய வெள்ளம் பொழியக் கமலம் போன்று மலர்ந்த குற்றமற்ற முகத்தவராய் இராமபிரானின் தம்பியர்போன்று மகிழ்ச்சியுடையராயினர்.

கு :—உவகைக் கலுழ்ச்சியின் மிகுதி தோன்றப் "பொங்கிய உவகை வெள்ளம் பொழிதர" என்றார். கமலம் போல் பூத்தமுகம், சங்கையில், முகம், என்க. சங்கை—குற்றம். குமரர் எல்லாம் முகத்தாராய்த் தம்பியர் அனையரானார் என்க. தாமரை மலர் ஆடவர் முகத்திற்கும் உவமை யாதலை "இராமன் திருமுகச் செவ்வி நோக்கில் ஒப்பதே முன்பு...... அப்பொழுதலர்ந்த செந்தாமரையினை வென்றதம்மா" (112) எனப் பின் கூறுதலாலும் தெளியலாம். நம்பி, இராமன். (69)

## நகர மக்கள் மகிழ்ச்சி

1649. மாதர்கள் கற்பின் மிக்கார்
கோசலை மனத்தை யொத்தார்
வேதியர் வசிட்ட னொத்தார்
வேறுள மகளி ரெல்லாம்

சீதையை யொத்தா ரன்னு
டிருவினை யொத்தா ளவ்வூர்
சாதுகை மாந்த ரெல்லாந்
தயரதன் றன்னை யொத்தார்.

மாதர்கள், கற்பின் மிக்கார், கோசலை மனத்தை ஒத்தார்; வேதியர் வசிட்டன் ஒத்தார்; வேறு உள மகளிர் எல்லாம் சீதையை ஒத்தார்; அன்னுள் திருவினை ஒத்தாள்; அவ்வூர் சாதுகை மாந்தர் எல்லாம் தயரதன் தன்னை ஒத்தார்.

பொ:—அயோத்தி நகரத்துள்ள கற்பின் மிக்காராகிய மாதர்கள் எல்லாம் கோசலை மனத்தை யொத்த மனமுடையர் ஆயினர்; அவரின் வேருகவுள்ள பெண்டிர் எல்லாம் சீதையை யொத்து மகிழ்ந்தார்கள்; அச்சீதை இராசத் திருவினைப்போல மகிழ்ந்திருந்தாள்; அவ்வூரி லுள்ள சாந்தமான ஒழுக்கமுள்ள முதிய ஆடவர் எல்லாம் தயர தனைப் போல மகிழ்ந்தார்கள்; வேதம் வல்ல பார்ப்பார் எல்லாம் வசிட்டனைப் போல மகிழ்ந்தார்கள்.

கு:—கற்பின் மிக்க முதிய பெண்டிர் எல்லாம் தம் மகனுக்கு முடி புனைவதாகவே எண்ணி மகிழ்ந்தார்கள் எனவும் இளம்பெண்டிர் எல் லாம் தம் கணவர்க்கு முடி சூடினுல் போன்று மகிழ்ந்தார்கள் எனவும், புதிதின் வந்து எய்தும் இராச லட்சுமி போலச் சீதை மகிழ்வுடன் இருந்தாள் எனவும், முதிய ஆடவரெல்லாம் தம்மைந்தர்க்கு முடிசூடு வது போன்ற மகிழ்ச்சி யெய்தினர் எனவும் வேதியர் எல்லாம் தம்தம் சீடர் முடிசூடினுல் மகிழ்வது போல மகிழ்ந்தார் எனவும் கொள்க. மேல் குமரர் நம்பி தம்பியர் அனையரானர் என்று கூறினர். அந்நக ரத்து முதியரும் இளையருமாகிய ஆடவரும் பெண்டிரும் வேதியரும் எல்லாம் தத்தமக் குற்ற அரசெனத் தழைக்கின்ற மனத்தராய் இராமன் முடிபுனைவிழாவை மகிழ்ச்சியுடன் எதிர்நோக்கியுள்ளனர் என்பது கருத்து. சாதுகை - சாத்வீகம்; சாந்தம். அந்நகரத்துள்ள தாய்மாரில் கோசலையும் தந்தைமாரில் தயரதனும் மங்கையரில் சீதையும் குரவரில் வசிட்டனும் குமரரில் இலக்குவனும் இராமன் முடிபுனைவில் பெரு மகிழ்ச்சிக் குரியராதலின் அவர்களையே ஏனையோர் மகிழ்ச்சிக்கு உவமையாக்கினர். "ஏழையரனைவரு மிவர்தட முலைதோய், கேழ் கிளர் மதுகையர் கிளைகளு மினையார், வாழிய வெனவவர் மனனுறு கடவுட், டாழ்குவர் கவுசலை தயரதனெனவே" (பால-322) என்பது இங்கு ஒப்புநோக்கத்தகும். (70)

## அரசர்கூட்டம் வருகை

1650. இமிழ்திரைப் பரவை ஞால
மெங்கணும் வறுமை கூர
உமிழ்வதொத் துதவு காத
லுந்திட வந்த தன்றே
குமிழ்முலைச் சீதை கொண்கன்
கோமுடி புனைதல் காண்பான்
அமிழ்துணக் குழுமு கின்ற
வமரரி னரச வெள்ளம்.

இமிழ் திரைப் பரவை ஞாலம் எங்கணும் வறுமை கூர, உமிழ்வது ஒத்து உதவு காதல் உந்திட வந்தது அன்றே, குமிழ் முலைச் சீதை கொண்கன் கோ முடி புனைதல் காண்பான் அமிழ்து உணக் குழுமுகின்ற அமரரின் அரசவெள்ளம்.

பொ :—அரசர் கூட்டம், குவிந்த நகிலையுடைய சீதையின் கொழுநன் ஆகிய இராமபிரான் அரசனாய் முடி புனைதலைக் காணும் பொருட்டு உமிழலாம்படி பெருகுகின்ற காதல் தூண்டுதலால், ஒலிக்கின்ற அலைகளையுடைய கடல் சூழ்ந்த நிலவுலகத்தில் எல்லாவிடங்களும் வறுமையடையும்படி, அமிழ்தம் உண்ணக் கூடுகின்ற தேவர் கூட்டத்தைப் போல அயோத்திக்கு வந்தது.

கு :—நிலவுலகிலுள்ள அரசர் எல்லாம் அயோத்திக்கு வந்து விட்டமையால் அவ்விடங்கள் எல்லாம் அவரில்லாமல் வறுமை எய்தின. கூர்தல்–மிகுதல். இராமன் முடிபுனைதலைக் காணுங் காதல் மிகுதி புலப்பட 'உமிழ்வதொத்துதவுகாதல்' என்றார். உமிழ்தல், வெளிப்படுத்தல். அரசர்க்கு அமரரும், இராமன் முடி புனை விழாக் காண்டற்கு அமுதுண்ணலும் உவமை. அமிழ்துண்டவர் பிணி மூப்புச் சாக்காடு நீங்குதல் போல இராமன் முடிபுனைதலைக்கண்டோரும் அவை நீங்கப் பெற்று இன்புறுவர் என்பது குறிப்பு. இதனால் அவ் விழாவின் சுவை மிகுதியும் பயனும் பெறவைத்தவாறு. அரசர் கூட்டத்தின் மிகுதி தோன்ற 'வெள்ளம்' என்றார். பள்ளம் நோக்கி விரைந்துபுகும் வெள்ளம் போல அயோத்திநோக்கி அரசர் விரைந்தனர் என்ற குறிப்பும் இதனால் பெறலாம். (71)

## தெருவில் மக்கள் நெருங்குதல் 1651—1652

**1651.** பாகியல் பவளச் செவ்வாய்ப்
பணைமுலைப் பரவை யல்குல்
தோகையர் குழாமு மைந்தர்
சும்மையுந் துவன்றி யெங்கும்
ஏகுமி னேகு மென்றென்
றிடையிடை நிற்ற லல்லால்
போகில மீள கில்லா
பொன்னகர் வீதி யெல்லாம்.

பாகு இயல் பவளச் செவ்வாய்ப் பணை முலைப் பரவை அல்குல் தோகையர் குழாமும், மைந்தர் சும்மையும் துவன்றி, எங்கும், 'ஏகுமின் ஏகும்' என்று என்று, இடை இடை நிற்றல் அல்லால், போகில மீளகில்லா, பொன்னகர் வீதியெல்லாம்.

போ :—அழகிய அயோத்திநகரின் தெருக்களிலெல்லாம் சர்க்கரைப்பாகு போன்ற இனிமையியல்பும் பவழம் போன்ற செம்மை நிறமும் உடைய வாயினையும், பருத்த நகில்களையும், பரந்த அல்குலையும் உடைய மங்கையர்கூட்டமும் மைந்தர் கூட்டமும் எங்கும் நெருங்கி, 'ஏகுங்கள்! ஏகுங்கள்!' என்று சொல்லிக்கொண்டே தாமிருந்த இடங்களிலேயே நிற்பதன்றிப் போதலும் செய்யவில்லை ; மீளுதலும் செய்ய இயலவில்லை.

கு :—பாலொடு தேன் கலந்தாற் போன்ற வாலெயிறு ஊறும் நீருடைமையின் 'பாகியல்...வாய்' என்றார். மயில் போன்ற சாயலுடைமை தோன்றப் பெண்டிரைத் 'தோகையர்' என்றார். சும்மை-கூட்டம். "சொல்லுதல் யார்க்கும் எளிய அரியவாம் சொல்லிய வண்ணஞ் செயல்" (குறள்-664) என்ற குறளின் பொருளை விளக்குவார்போல 'ஏகுமின்' என்று சொல்லுகின்றவர்கள், தாம் ஏகாமல் நிற்கின்றார்கள் என்றார். போகவும் இயலாது மீளவும் இயலாது நிற்றற்குக் காரணம் மக்கள் திரண்டமையால் உளதாய நெருக்கமே. பொன்-அழகு. (72)

**1652.** வேந்தரே பெரிதென் பாரும்
வீரரே பெரிதென் பாரும்
மாந்தரே பெரிதென் பாரு
மகளிரே பெரிதென் பாரும்

போந்ததே பெரிதென் பாரும்
புகுவதே பெரிதென் பாரும்
தேர்ந்ததே தேரி னல்லால்
யாவரே தெரியக் கண்டார்.

'வேந்தரே பெரிது' என்பாரும், 'வீரரே பெரிது' என்பாரும்,
'மாந்தரே பெரிது' என்பாரும், 'மகளிரே பெரிது' என்பாரும்,
'போந்ததே பெரிது' என்பாரும், 'புகுவதே பெரிது' என்பாரும்,
தேர்ந்ததே தேரின் அல்லால், யாவரே தெரியக் கண்டார்?

பொ:—'அரசர்கூட்டமே பெரிது' என்று சொல்லுபவரும், 'படைவீரர்கூட்டமே பெரிது' என்று சொல்லுபவரும், 'ஆடவர்கூட்டமே பெரிது' என்று சொல்லுபவரும், 'மகளிர்கூட்டமே பெரிது' என்பவரும், 'அயோத்திநகர்க்கு வந்துவிட்ட கூட்டமே பெரிது' என்று சொல்லுபவரும், 'இப்பொழுது வந்துகொண்டிருக்கும் கூட்டமே பெரிது' என்று சொல்லுபவருமாய்த் தாம் தாம் கண்டதையே முழுதும் தெரிந்ததாகக் கூறினரேயல்லால் முழுதும் நன்கு கண்டவர்கள் யாருளர்? ஒருவருமில்லை.

கு:—வேந்தர் முதலிய உயர்திணைப் பெயர்கள், இங்கு 'கூட்டம்' என்னும் பொருளவாகலின், அதற்கேற்பப் பெரிது என அஃறிணைமுடிபு கொடுத்தார். "பாணன் பறையன் துடிபன் கடம்பன் என்று இந்நான் கல்லது குடியுமில்லை" (புறநா-335) என்புழிப் பாணன் முதலாயினரைக் குடியென்று சுட்டிக் குடிக்கேற்ற தொகை கொடுத்ததாகச் சேனவரையரும் (தொல்-சொல்-51) விளக்கியுள்ளமை காண்க. மாந்தர் என்பது உயர்திணை ஆண் பன்மைக்கேயுரிய பெயர். போந்தது-வந்த கூட்டம். புகுவது-வந்துகொண்டிருக்கும் கூட்டம். தேர்ந்தது-கண்டது. 'தேரின்' என்றது, தேர்ந்து கூறின் என்று பொருள்பட்டது. 'யாவரே' என்ற வினா, ஒருவருமின்மையுணர்த்திற்று. "வாள் கொண்ட கண்ணார் யாரே வடிவினை முடியக் கண்டார்" (1166) எனவும், "கடல் கண்டோ மென்பர் யாவரே முடிவுறக் கண்டார்" (கிட்கிந்தா-தானை-34) எனவும், கூறுதல் காண்க. வேந்தர் மிகுதியாக வருவதை மட்டும் கண்டவர், 'வேந்தரே பெரிது' என்றனரே அன்றி வீரர் முதலானோர் மிகுதியாக வருதலையும் அறிந்து சீர்தூக்கிக் கூறவில்லை என்பது கருத்து. (73)

மகளிர் குழுமுதல்

1653. குவளையி னெழிலும் வேலின்
கொடுமையுங் குழைத்துக் கூட்டித்
திவளுமஞ் சனமென் றேய்ந்த
நஞ்சினைத் தெரியத் தீட்டித்
தவளவொண் மதியுள் வைத்த
தன்மைசா றடங்க ணல்லார்
துவளுநுண் ணிடையா ராடுந்
தோகையங் குழாத்திற் றொக்கார்.

குவளையின் எழிலும் வேலின்
கொடுமையும் குழைத்துக் கூட்டித்,
திவளும் அஞ்சனம் என்று ஏய்ந்த
நஞ்சினைத் தெரியத் தீட்டித்,
தவள ஒண் மதியுள் வைத்த
தன்மை சால் தடங்கண் நல்லார்,
துவளும் நுண் இடையார் ஆடும்
தோகை அம் குழாத்தில் தொக்கார்.

பொ :—கருங்குவளைமலரின் அழகையும் வேற்படையின் கொடுமையையும் சேர்த்துக் குழைத்து அமைத்து, விளங்குகின்ற மை என்று பெயர் கொண்டுள்ள நஞ்சினை நன்கு தெரியுமாறு அதில் எழுதி, வெண்மையான ஒளியுடைய சந்திரனிடத்தில் வைத்தாற்போன்ற பெரிய கண்ணையுடைய நல்லாராகிய அசையும் சிற்றிடையை யுடைய பெண்டிர், ஆடுமியல்புள்ள அழகிய மயில் கூட்டத்தைப் போல வந்து கூடினார்கள்.

கு :—அழகால் குவளை மலரையும் பிறரை வருத்தும் கொடுமையால் வேலையும் போன்ற கண் என்பார், "குவளையின் எழிலும் வேலின் கொடுமையும் குழைத்துக் கூட்டி" என்றார். திவளுதல்–விளங்குதல். பெயரால் அஞ்சனமாய் ஆடவரைக் கொல்லும் செயலால் நஞ்சு போன்றது என்னும் கருத்தால், 'அஞ்சனமென் றேய்ந்த நஞ்சினை' என்றார். "அஞ்சனமென வாள் அம்புகளிடையே நஞ்சினை மிடுவார்" (1647) என முன் கூறியதும் நினைக்க. முகத்திற்கு மதி உவமை. "குழைத்துக் கூட்டித் தீட்டி, மதியுள் வைத்த தன்மைசால் தடங்கண்" என்றது விகாரவுவமை. "சீத மதியி னொளியுஞ் செழுங் கமலப், போதின் புது மலர்ச்சியுங் கொண்டு,–வேதாதன், கைம்மலரா னன்றிக் கருத்தால் வகுத்தமைத்தான், மொய்ம்மலர்ப்பூங் கோதை

முகம்" (தண்டி-விகாரவுவமை) என்பதும் இவ்வணியாதல் காண்க. தோகை, சினையாகுபெயராய் மயிலையுணர்த்திற்று. மகளிர் சாய லுக்கு மயில் உவமையாகும். (74)

முடிபுனை விழாவிற்கு வாராதோர்

1654. நலங்கிளர் பூமி யென்னும்
நங்கையை நறுந்து ழாயின்
அலங்கலான் புணருஞ் செல்வங்
காணவந் தடைந்தி லாதார்
இலங்கையி னிருத ரேயிவ்
வேழுல கத்து வாழும்
விலங்கலு மாசை நின்ற
விடாமத விலங்க லேயால்.

நலம் கிளர் பூமி என்னும் நங்கையை நறும் துழாயின் அலங்கலான் புணரும் செல்வம் காண வந்து அடைந்திலாதார், இலங்கையில் நிருதரே, இவ் ஏழ் உலகத்து வாழும் விலங்கலும், ஆசை நின்ற விடா மத விலங்கலே ஆல்.

பொ :—நலம் விளங்குகின்ற பூமி என்னும் பெண்ணை, நறுமண முடைய துளபமாலை அணிதற்குரிய இராமபிரான் கூடும் செல்வத் தைக் காண்பதற்கு அயோத்தி வந்து அடையாதவர்கள், இலங்கையி லுள்ள அரக்கர்களே ஆவர்; (அஃறிணைப் பொருள்களில்) இந்த ஏழுலகத்தும் பொருந்தியுள்ள மலைகளும், திசை எட்டினும் காவல் புரிந்துநிற்கின்ற மதம் நீங்காத மலை போன்ற திசையானைகளுமே ஆம்.

கு :—பூமி என்னும் நங்கையை நறுந்துழாயின் அலங்கலான் புணர்தலாவது, இராமன் முடிபுனைதலே. "அவனி மாதெனும் ஒரு மகண் மணமுங்கண் டுவப்ப தாயினேன்" (1427) என முன்னர்க் கூறியதும் காண்க. திருமாலின் அவதாரம் என்பது தோன்ற இராம னுக்குத் துழாயலங்கல் கூறினர்; பூதேவிக்கும் சீதேவிக்கும் கொழு நன் அத்திருமால் என்பது நினைக்க வேண்டி. வந்தவரே பெரும் பாலார் ஆதலின் வராதவரைக் கூறினர். அடைந்திலாதார், நிருதரே, விலங்கலும், மதவிலங்கலும் என்றது திணைவிரவிச் சிறப்பினால் உயர் திணைமுடிபுகொண்டது. மதவிலங்கல்-யானை. ஆசை-திசை. மனிதர் முடிசூட்டுவிழாவிற்கு அரக்கர் வருதற்கு இயைபின்மையானும், மலைகள் இயங்காதன ஆதலாலும், திசையானைகள் திசைக்காவலை விடுத்து வருதல்கூடாமையாலும் வரவில்லை. ஏனையுயிர்கள் யாவும்

வந்தன என்பது பெறவைத்தவாறு. இது உயர்வுநவிற்சியாகக் கூறப்பெற்றது. இராமனுடைய தம்பியர் ஆகிய பரதனும் சத்துருக்கனுமே இவ்விழாவிற்கு வரவில்லையென்பது நினைக்க. மதவிலங்கலும் ஆம் என வருவித்து முடிக்க. (75)

இதன்பின் காணப்படும் அதிகப்பாடல் ஒரு பிரதியிலிருப்பதாக 45-ல் குறித்திருக்கிறது.

1654. (1) வந்துமன் னகரிற் றத்தம் வகைப்படு முருவ மாற்றிச்
சுந்தரத் தடந்தோண் மாந்தர் தொல்லுருச் சுமந்து தோன்று
தந்தரத் தமரர் சித்த ரரம்பைய ராதி யாக
இந்திரை கொழுநற் போற்றி யிரைத்துமே யெய்தி நின்றார்.

## மன்னர் முடிசூடும் மண்டபத்துப் புகுதல்

1655. சந்திரர் கோடி யென்னத்
தரளவெண் கவிகை யோங்க
அந்தரத் தன்ன மெல்லா
மார்ந்தெனக் கவரி துன்ன
இந்திரற் குவமை சாலு
மிருநிலக் கிழவ ரெல்லாம்
வந்தனர் மௌலி சூட்டு
மண்டப மரபிற் புக்கார்.

**சந்திரர் கோடி என்னத் தரள வெண் கவிகை ஓங்க,**
**அந்தரத்து அன்னம் எல்லாம் ஆர்ந்தெனக் கவரி துன்ன,**
**இந்திரற்கு உவமை சாலும் இருநிலக் கிழவர் எல்லாம்**
**வந்தனர், மௌலி சூட்டும் மண்டபம் மரபில் புக்கார்.**

பொ :—தேவேந்திரனுக்கு உவமையாகப் பொருந்தத்தக்க செல்வச் சிறப்புடைய மன்னர்களெல்லாம், சந்திரர் கோடிக் கணக்கானவர் உளர் என்று கூறுமாறு முத்தவெண்குடைகள் உயர்ந்து தோன்றவும், அன்னப் பறவைகளெல்லாம் விண்ணில் நிறைந்தன என்னுமாறு வெண்சாமரைகள் நெருங்கவும் வந்தனராய் முடிசூட்டும் மண்டபத்தில் முறையாகப் புகுந்தார்கள்.

கு :—முத்தினலாய வெண்குடை ஒவ்வொன்றும் ஒவ்வொரு சந்திரனைப் போன்றது ஆகலின் கோடிக் கணக்கான குடைகளைக் கண்டவர்கள், சந்திரர் சிலரல்லர், கோடி என்னும் எண்ணினர் என்று

எண்ணுவர் என்பது கருத்து. கோடி என்றது மிகப் பல எனுங் கருத்தினது. வெண்சாமரைகள் அசைவாலும் நிறத்தாலும் அன்னப் பறவைகள்போல் காணப்படுதலின் இங்ஙனம் உவமை கூறினர். 'அந்தரத்து ஆர்ந்தென' என்க. கவரிகளின் மிகுதி தோன்ற, 'அன்னம் எல்லாம் ஆர்ந்தென' என்றார். ஆர்தல் - நிறைதல். செல்வ மிகுதியாலும் போக நுகர்ச்சியாலும் இந்திரனைவிடச் சிறந்தோர் என்பார், 'இந்திரற்கு உவமை சாலும் ..கிழவர்' என்றார். பொருளினும் உவமை எண்மடங்கு உயர்ந்திருத்தல்வேண்டும் என்னும் மரபு நினைக்க. இருநிலக் கிழவர் என்றது மன்னரை. கிழவர் - உரிமை யுடையவர். கிழவரெல்லாம், கவிகை யோங்க, கவரிதுன்ன வந்தனராய் மண்டபம் புக்கார் என்க. வந்தனர் முற்றெச்சம். (76)

### அந்தணர் புகுதல்

**1656.** முற்பயந் தெடுத்த காதற்
புதல்வனை முறையி னோடும்
இற்பயன் சிறப்பிப் பாரி
னீண்டிய வுவகை தூண்ட
அற்புதன் றிருவைச் சேரு
மருமணங் காணப் புக்கார்
நற்பயன் றவத்தி னுய்க்கு
நான்மறைக் கிழவ ரெல்லாம்.

முன் பயந்து எடுத்த காதல் புதல்வனை முறையினோடும்
இல் பயன் சிறப்பிப்பாரின் ஈண்டிய உவகை தூண்ட,
அற்புதன் திருவைச் சேரும் அருமணம் காணப் புக்கார்,
நல் பயன் தவத்தின் உய்க்கும் நான்மறைக் கிழவர் எல்லாம்.

பொ :—தம் தவவல்லமையால் உலகிற்கு நற்பயனைத் தருகின்ற நான்கு வேதங்களுக்கும் உரிமையுள்ள அந்தணரெல்லாம், தாம் முன்னதாகப் பெற்று வளர்த்த அன்பு மிக்க முதற்புதல்வனுக்கு முறைமையுடன் இல்லறப் பயன் எய்தத் திருமணச்சிறப்புச்செய்து காண்பார் போல மிக்க மகிழ்ச்சி தூண்டுதலால் இராமபிரான் இராச லட்சுமியைக் கூடுகின்றதாகிய அரிய மணத்தைக் காணப்புகுந்தார்கள்.

கு :—'முற்பயந் தெடுத்த காதற் புதல்வன்' என்றது, முதல்மகனை. முதல்மகன் மணம் காணத் தந்தையர்க்கு ஆர்வமிகுதல் இயல்பு. இற் பயன் சிறப்பித்தலாவது, திருமணம் செய்தல். ஈண்டுதல் - நெருங்குதல், மிகுதல். அற்புதன் - இராமபிரான். அழகுடையவன், மாய

விளையாட்டுடையவன் என்ற காரணங்களால் வந்த பெயர். 'திரு' என்றது, இராச்சியத்தை. "ஒன்னார்த் தெறலு முவந்தாரை யாக்கலும் எண்ணிற் றவத்தான் வரும்" (குறள்-264) என்று தவத்தின் பயன் கூறியவாறு காண்க. அவ்விரண்டுள் உவந்தாரையாக்கல் ஒன்றுமே செய்யும் அந்தணர் என்க. உலக முழுமையும் நட்பாகக் கருதுமியல் பினராதலின் தம் தவத்தினல் நற்பயனே பிறர்க்குத் தருவாராயினர். "தவத்தின் நற்பயன் உய்க்கும்" என மாற்றுக. உய்த்தலாவது உண்டாக்குதல். (77)

### பல்வகை நிகழ்ச்சிகள்

**1657.** விண்ணவர் விசும்பு தூர்த்தார்
விரிதிரை யுடுத்த கோல
மண்ணவர் திசைக டூர்த்தார்
மங்கல மிசைக்குஞ் சங்கம்
கண்ணகன் முரசி னோதை
கண்டவர் செவிக டூர்த்த
எண்ணருங் கனக மாரி
யெழுதிரைக் கடல்க டூர்த்த.

**விண்ணவர் விசும்பு தூர்த்தார்; விரி திரை உடுத்த கோல மண்ணவர் திசைகள் தூர்த்தார்; மங்கலம் இசைக்கும் சங்கம், கண் அகன் முரசின் ஓதை, கண்டவர் செவிகள் தூர்த்த; எண் அரும் கனக மாரி எழு திரைக் கடல்கள் தூர்த்த.**

பொ :—தேவர்கள் விண்ணிடத்தை எல்லாம் நிரப்பிவிட்டார்கள்; விரிந்த அலைகடலாகிய ஆடையை உடுத்த அழகினையுடைய நிலவுலகத்தவர், எல்லாத் திசைகளையும் நிரப்பிவிட்டார்கள்; மங்கலவினைக்கு ஊதுகின்ற சங்கின் ஓசையும், அகன்ற கண்ணினையுடைய முரசின் ஓசையும் முன் கூறப்பட்டவர் செவிகளைத் தூர்த்தன; அவர்கள் மகிழ்ச்சியால் வாரி வீசுகின்ற எண்ணவும் இயலாத பொற்காசுகளாகிய மழை, அலைகளையுடைய ஏழு கடல்களையும் தூர்த்துவிட்டன.

கு :—தூர்த்த என்ற சொல் பன்முறை வந்தமையால் இது சொற்பின்வருநிலையணி. தூர்த்தல் – நிரப்புதல். உடுத்த என்ற குறிப்பால் கடலாகிய ஆடை என்பது பெறப்படுதலின் இது குறிப்புருவகம். திரை, ஆகுபெயராய்க் கடலையுணர்த்திற்று. உடுத்த கோலம் மண்ணுக்கு அடை. முரசில் அடிபடும் இடம் கண் எனப்படும் ஆதலின், கண்

அகன் முரசு என்றார். சங்கம் ஆகுபெயராய் ஓசையை யுணர்த்திற்று. மகிழ்ச்சிமிகுதியால் பொற்காசுகளை வீசுதல் செல்வர் இயல்பு. மழை பொழிவதுபோல மிகுதியாகச் சொரிதலின் கனகமாரி எனவும் கடல்கள் தூர்த்த எனவும் கூறினர். எழுகடல், திரைக்கடல் என்க. கண்டவர் என்றது, மேற்கூறிய விண்ணவரையும் மண்ணவரையும் ஆம். மேற்கண்டவர் என்க. (78)

## பல ஒளிகள்

1658. விளக்கொளி மறைத்த மன்னர்
மின்னொளி மகுட கோடி
துளக்கொளி விசும்பி னூருஞ்
சுடரையு மறைத்த சூழ்ந்த
அளக்கர்வாய் முத்த மூரன்
முறுவலா ரணியின் சோதி
வளைக்கலா மென்றவ் வானோர்
கண்ணையு மறைத்த வன்றே.

விளக்கு ஒளி மறைத்த மன்னர்
மின் ஒளி; மகுடகோடி
துளக்கு ஒளி விசும்பின் ஊரும்
சுடரையும் மறைத்த; சூழ்ந்த
அளக்கர்வாய் முத்த மூரல்
முறுவலார் அணியின் சோதி,
வளைக்கல்ஆம் என்று அவ் வானோர்
கண்ணையும் மறைத்த அன்றே.

பொ :—மன்னர்களின் மேனி மின்னுகின்ற ஒளிகள் விளக்கொளியை மறைத்தன ; அம் மன்னர்கள் தம் மணிமுடிகளின் வரிசையை அசைத்தலால் ஆகிய ஒளிகள், ஆகாயத்தில் செல்லுகின்ற ஞாயிற்றினையும் மறைத்தன : நிலத்தைச் சூழ்ந்துள்ள கடலில் தோன்றும் முத்துப்போன்ற பற்களையும் புன்முறுவலையும் உடைய மகளிரணிந்த ஆபரணங்களின் ஒளிகள். மண்ணைவளைத்த நாம் விண்ணுலகையும் வளைத்தல் ஆகும் என்று அவ்விண்ணிலுள்ள தேவர்கண்ணையும் மறைத்தன.

கு :—மன்னர்களின் மேனியொளி, விளக்கொளியினும் சிறந்திருத்தலின் அம்மேனியொளிமுன் விளக்கொளிகள் தோன்றாமல் மறைந்தன

என்பது கருத்து. மின்னொளி என்றது மன்னரின் மேனி மின்னுகின்ற ஒளியை. மின்னொளியை மகுடத்திற்கு அடையாக்கி விளக்கொளி மறைத்ததாகிய மின்னொளி மகுட கோடி துளக்கொளி, சுடரையும் மறைத்த எனலும் ஆம். அன்றி, 'விளக்கொளி மறைத்த சுடரையும் மின்னொளி மகுட கோடி துளக்கொளி மறைத்த என்றியைத்தலும் ஆம். சூரியன் உதயத்தால் தீபங்கள் ஒளியிழந்தமை முன்னும் கூறப்பட்டது. மணிமகுடங்களின் ஒளி மிகுதியால் சூரியன் ஒளி தோன்றாதாயது என்பது கருத்து. அணியின்சோதி வானோர்கண்ணை மறைத்தலாவது ஒளி மிகுதியால் அவர்கண் கூசுமாறு செய்தல். அளக்கர் – கடல் வானோர் கண்ணை மறைத்தற்கு முத்தமூரலும் அணியின் சோதியோடு சேர்ந்தன என்னுங் குறிப்புத் தோன்ற 'மூரல் முறுவலார்' என்று மாதரைக் கூறினர். ஒளி மகுடங்கள் அசையும் போது பேரொளியுடன் விளங்கும் இயல்பு தோன்றத் 'துளக்கொளி' கூறப்பட்டது. சுடரையும் கண்ணையும் என்புழி உம்மைகள் உயர்வு சிறப்பின. (79)

## வசிட்டன் வருகை

**1659.** ஆயதோ ரமைதி யின்க
ணையனை மகுடஞ் சூட்டற்
கேயுமங் கலங்க ளான
யாவையு மியையக் கொண்டு
தூயநான் மறைகள் வேத
பாரகர் சொல்லத் தொல்லை
வாயில்க ணெருக்க நீங்க
மாதவக் கிழவன் வந்தான்.

ஆயது ஓர் அமைதியின்கண், ஐயனை மகுடம் சூட்டற்கு ஏயும் மங்கலங்கள்ஆன யாவையும் இயையக் கொண்டு, தூய நால் மறைகள் வேத பாரகர் சொல்லத், தொல்லை வாயில்கள் நெருக்கம் நீங்க, மாதவக் கிழவன் வந்தான்.

பொ :—அத்தகைய அமயத்தில் இராமனுக்கு முடிசூட்டுதற்கு வேண்டிய மங்கலப் பொருள்கள் எல்லாவற்றையும் பொருந்த எடுத்துக் கொண்டு, தூய்மையான நான்கு வேதங்களையும் வேதம் வல்ல அந்தணர்கள் சொல்லிக்கொண்டுவரப் பழமையான வாயில்களில் உள்ள மக்கள் நெருக்கம் நீங்கி வழிவிட வசிட்ட முனிவன் வந்தான்.

கு :—மங்கலங்களாவன தீர்த்தப் புனல் நிறை குடங்களும் தருப் பையும் சமிதையும் முதலியன; வருஞ் செய்யுளில் சில கூறுவர். வேத

பாரகர் – வேதங்கரைகண்டவர்கள். வேதவொலி கேட்டு வாயிலில் உள்ளவர்கள் நெருக்கம் நீங்கி வழிவிட்டனர் என்க. தொல்லை – பழமை. சூரிய குலத்தோர் எல்லாம் வழிவழி முடிசூடும் மண்டப வாயில் ஆதலின், 'தொல்லைவாயில்' என்றார். தொல்லை நெருக்கம் நீங்க என இயைத்து வசிட்டன்வருதற்குமுன்னிருந்த நெருக்கம் நீங்கி வழிவிட எனப் பொருள்கோடலுமாம். மாதவக்கிழவன், கொண்டு, சொல்ல, நீங்க, வந்தான் என்க. (80)

## வசிட்டன் செயல்கள்

**1660.** கங்கையே முதல வாய
கன்னியீ றான தீர்த்த
மங்கலப் புனலு நாலு
வாரியி னீரும் பூரித்
தங்கியின் வினையிற் கேற்ற
யாவையு மமைத்து வீரச்
சிங்கவா தனமும் வைத்துச்
செய்வன பிறவுஞ் செய்தான்.

கங்கையே முதல ஆய கன்னி ஈறான தீர்த்த
மங்கலப் புனலும், நாலு வாரியின் நீரும், பூரித்து,
அங்கியின் வினையிற்கு ஏற்ற யாவையும் அமைத்து, வீரச்
சிங்க ஆதனமும் வைத்துச், செய்வன பிறவும் செய்தான்.

பொ :—கங்கை முதலாகக் குமரி ஈறாக உள்ள தூய நதிகளின் மங்கல நீரும் நான்கு கடலின் நீரும் குடங்களில் நிறைத்து வைத்து, அங்கி வினையாகிய ஓமத்திற்கு ஏற்ற எல்லாவற்றையும் அமைத்து, வீரச்சிங்காசனமும் வைத்துச் செய்ய வேண்டிய பிற செயல்களையும் செய்தான்.

கு :—முதலும் ஈறும் கூறவே இடையிலுள்ள கோதாவிரி காவிரி போன்ற தீர்த்தங்களும் கொள்ளப்படும். வாரி – கடல். நான்கு திசையிலுமுள்ள கடல்களை நாலுவாரி என்றார். பூரித்தல் -நிறைத்தல். அங்கிவினை– வேள்வி ; அதற்கேற்றன தருப்பை, விறகு, நெய், அத்திமரத்தாலாய மணை, அகப்பை முதலியன. சிங்கஞ் சுமந்தாற்போன்று அமைந்த பீடம் சிங்காசனம் எனப்படும். சிங்கத்திற்குரிய வீரம் சிங்காசனத்திருப் போர்க்கும் அமையும் ஆதலின் 'வீரச் சிங்க ஆதனம்' என்றார். இவ் வாசனமே முடிசூடுங்கால் இராமன் இருத்தற்குரியது. (81)

## மன்னனைக் கொணரச் சுமந்திரன் போதல்

**1661.** கணிதநூ லுணர்ந்த மாந்தர்
காலம்வந் தடுத்த தென்னப்
பிணியற நோற்று நின்ற
பெரியவன் விரைவி னேகி
மணிமுடி வேந்தன் றன்னை
வல்லையிற் கொணர்தி யென்னப்
பணிதலை நின்ற காதற்
சுமந்திரன் பரிவிற் சென்றான்.

கணிதநூல் உணர்ந்த மாந்தர்,
'காலம் வந்து அடுத்தது' என்னப்,
பிணி அற நோற்றுநின்ற
பெரியவன், "விரைவின் ஏகி,
மணி முடி வேந்தன்தன்னை
வல்லையில் கொணர்தி" என்னப்,
பணி தலைநின்ற காதல்
சுமந்திரன் பரிவின் சென்றான்.

பொ :—சோதிடர்கள், (முடிபுனைவிற்குரிய) காலம் வந்துவிட்டது என்று சொல்ல, இருவினையாகிய பிணி அறுமாறு தவஞ்செய்த பெரியவனாகிய வசிட்டன், (சுமந்திரனை நோக்கி) 'விரைவில் போய் மணிமுடி அணிந்த தயரதனை விரைவில் அழைத்து வருக' என்று பணிக்க, அப் பணியைத் தலைமேற் கொண்ட விருப்பமிக்க சுமந்திரன் அன்போடு போனான்.

கு :—சோதிடர்களைக் 'கணித நூலுணர்ந்த மாந்தர்' என்றார். முடிபுனைதற்குரிய காலம் என்னாது பொதுவகையால், 'காலம் வந் தடுத்தது' என்று கூறிய திறம் வியக்கத்தக்கது. மணிமுடி புனைதற்குரிய காலம் சடைமுடிதாங்குதற்குரியதாக மாறியது நினைக்க. மேல் நிகழ்வு அறிந்தவன் என்பது தோன்ற வசிட்டனை 'நோற்று நின்ற பெரியவன்' என்றார். போவதும் கொணர்வதும் விரைவில் நிகழவேண்டும் என்பார், விரைவினேகி, வல்லையிற்கொணர்தி என்றார். (82)

## கைகேயி இராமனைக் கொணர்க எனல்

1662. விண்டொட நிவந்த கோயில்
வேந்தர்தம் வேந்தன் றன்னைக்
கண்டிலன் வினவக் கேட்டான்
கைகயள் கோயி னண்ணித்
தொண்டைவாய் மடந்தை மாரிற்
சொல்லமற் றவருஞ் சொல்லப்
பெண்டிரிற் கூற்ற மன்னாள்
பிள்ளையைக் கொணர்க வென்றாள்.

விண் தொட நிவந்த கோயில்
வேந்தர்தம் வேந்தன் தன்னைக்
கண்டிலன் வினவக் கேட்டான்,
கைகயள் கோயில் நண்ணித்
தொண்டைவாய் மடந்தைமாரில்
சொல்ல, மற்று அவரும் சொல்லப்
பெண்டிரில் கூற்றம் அன்னாள்,
'பிள்ளையைக் கொணர்க!' என்றாள்.

பொ :—ஆகாயம் அளாவ உயர்ந்த அரண்மனையில் தயரதனைக் காணாதவனாய் (அங்கு இருந்தவர்களை) வினவக் கேள்விப்பட்ட சுமந்திரன், கைகேயியின் மனையை அடைந்து, கொவ்வைக்கனி போன்ற வாயினையுடைய பணிப்பெண்டிரிடம் தன் வருகையைச் சொல்ல, அப் பெண்டிரும் கைகேயிக்குச் சொல்லப் பெண்களில் எமனைப் போன்ற கைகேயி, "இராமனை அழைத்துக் கொண்டு வருக" என்று கூறினாள்.

கு :—கண்டிலன் முற்றெச்சம். கேட்டான் வினையாலணையும் பெயர். மன்னவன் கைகேயியின் கோயிலில் உளன் என்பதே கேட்ட செய்தி ஆதலின் அவள் கோயிலை அடைந்தான். இராமனை வனம் புகுவித்துக் கணவனை வானம் புகுவிப்பவள் ஆதலின் 'பெண்டிரில் கூற்ற மன்னாள்' என்றார். கைகேயி கூறியது பணிப்பெண்டிரை நோக்கியேயாம். என்றாள் என இங்குக் கூறியவர் அடுத்த செய்யுளில் 'என்றனள் என்ன' என்றதால் இதனை உணரலாம். கொணர்க என்றது கொணருமாறு சொல்லுக என்னும் கருத்தினது. (83)

### சுமந்திரன் இராமனிடம் கூறத்தொடங்கல்

1663. என்றன ளென்னக் கேட்டா
　　னெழுந்தபே ருவகை பொங்கப்
பொன்றிணி மாட வீதி
　　பொருக்கென நீங்கிப் புக்கான்
தன்றிரு வுள்ளத் துள்ளே
　　தன்னையே நினையு மற்றக்
குன்றிவர் தோளி னானைத்
　　தொழுதுவாய் புதைத்துக் கூறும்.

'என்றனள்' என்னக் கேட்டான், எழுந்த பேர் உவகை பொங்கப்
பொன் திணி மாடவீதி பொருக்கென நீங்கிப் புக்கான்;
தன் திருவுள்ளத்துள்ளே தன்னையே நினையும் மற்றக்
குன்று இவர் தோளினானைத் தொழுது வாய் புதைத்துக் கூறும்.

பொ :—'இவ்வாறு கூறினள்' எனப் பணிப்பெண்டிர் கூறக் கேட்ட சுமந்திரன், மனத்து எழுந்த பெரு மகிழ்ச்சி பொங்கப் பொன்னால் திண்ணிதாகக் கட்டப்பட்ட மாடங்களையுடைய வீதியை விரைந்து கடந்து நாராயணன் கோயிற்குச் சென்று, தன்னுடைய சிறந்த உள்ளத்தில் தன்னையே தியானித்துக் கொண்டிருக்கின்ற அவ் இராமனை வணங்கி வாய்புதைத்துச் சொல்லுகின்றான்.

கு :— கேட்டான், வினைப்பெயர். 'பொருக்கென', விரைவுக் குறிப்பு. நாராயணன் கோயிலில் புகுந்தமையையே 'புக்கான்' என்றார்; இராமன் தருப்பைப் புல்லில் தியானத்தில் இருந்தது அவ் விடமே ஆகலின். நாராயணமூர்த்தியே இராமனாகப் பிறந்த உண்மை புலப்படத் 'தன்றிருவுள்ளத்துள்ளே தன்னையே நினையும்' என்றார். அவதார மூர்த்தியும் மூல மூர்த்தியும் ஒன்றே என்பது கருத்து. இராச்சிய பாரம் தாங்குதற்கேற்ற தோளுடைமை தோன்ற இராமனைக் 'குன்றிவர் தோளினான்' என்றார். குன்று போல் உயர்ந்த தோளை யுடைய இராமன் என்க. இவர்தல் - உயர்தல். உயர்ந்தோரிடம் பேசுங் கால் வணங்கி வாயைக் கையால் மூடிக்கொண்டு பேசுதல் மரபு. (84)

### சுமந்திரன் சொல்

1664. கொற்றவர் முனிவர் மற்றுங்
　　குவலயத் துள்ளா ருன்னைப்
பெற்றவன் றன்னைப் போலப்
　　பெரும்பரி வியற்றி நின்றார்

சிற்றவை தானு மாங்கே
கொணர்கெனச் செப்பி னுளப்
பொற்றட மகுடஞ் சூடப்
போதுதி விரைவி னென்ருன்.

'கொற்றவர், முனிவர், மற்றும்
குவலயத்து உள்ளார், உன்னைப்
பெற்றவன்தன்னைப்போலப்
பெரும் பரிவு இயற்றிநின்ருர் ;
சிற்றவை தானும் ஆங்கே
கொணர்க எனச் செப்பினுள்; அப்
பொன் தட மகுடம் சூடப்
போதுதி விரைவின்' என்ருன்.

பொ :—'மன்னர்களும், முனிவர்களும், மற்றும் இவ்வுலகத்தில் உள்ளவர்களும் உன்னைப் பெற்ற தயரதச் சக்கரவர்த்தியைப் போல உன்னிடம் பேரன்புசெய்து நின்றுகொண்டிருக்கின்ருர்கள் ; உன் சிறிய அன்னையாகிய கைகேயியும் உன்னை அங்கே அழைத்துவருமாறு கூறி யுள்ளாள்; அந்தப் பொன்னுல் ஆகிய பெரிய முடிசூடுதற்கு விரைவில் வருக' என்று கூறினுன்.

கு :—முனிவர் என்றது, வசிட்டன் முதலான அந்தணரை. 'சாதுகை மாந்தரெல்லாந் தயரதன்றன்னை யொத்தார்' (1649) என மேல் கூறியதற்கேற்ப ஈண்டும் 'உன்னைப் பெற்றவன்றன்னைப் போலப் பெரும்பரிவியற்றிநின்ருர்' என்ருன். பரிவு-அன்பு. சிற்றவை-சிறிய அன்னை. 'ஆங்கே' என்பதற்கு, 'அத்தகைய அன்போடே', எனினுமாம். அப்பொற்றடமகுடம் என்புழி, அகரம் பண்டறி சுட்டு. 'கொணர்க என' என்புழி அகரம் தொகுத்தல்விகாரமாயிற்று. அந்த அழகிய பெரிய சடாமகுடம் சூட விரைவின் வருதி என்ற பொருளும் எதிர்வு நோக்கித் தோன்றுதல் காண்க. (85)

### இராமன் புறப்பாடு

1665. ஐயனு மச்சொற் கேளா
வாயிர மௌலி யானைக்
கைதொழு தரச வெள்ளங்
கடலெனத் தொடர்ந்து சுற்றத்

தெய்வகீ தங்கள் பாடத்
தேவரு மகிழ்ந்து வாழ்த்தத்
தையலா ரிரைத்து நோக்கத்
தாரணி தேரிற் சென்ருன்.

ஐயனும் அச் சொல் கேளா,
ஆயிரமௌலியானைக்
கைதொழுது, அரசவெள்ளம்
கடல் எனத் தொடர்ந்து சுற்றத்,
தெய்வ கீதங்கள் பாடத்,
தேவரும் மகிழ்ந்து வாழ்த்தத்,
தையலார் இரைத்து நோக்கத்,
தாரணி தேரில் சென்ருன்.

பொ :—இராமனும் அச்சொல்லைக் கேட்டு ஆயிரம் முடியுடைய திருநாராயணனை வணங்கி, அரசர் பெருங்கூட்டம் கடல்போலத் தொடர்ந்து சூழ்ந்துவரவும், இசைவாணர்கள், தெய்வத்தைப் பற்றிய இன்னிசைப் பாடல்களைப் பாடவும், தேவர்களும் மகிழ்ந்து வாழ்த்துக் கூறவும், பெண்டிர் ஆரவாரித்துத் தெருவில் வந்து பார்க்கவும் மாலைகளால் அழகுசெய்யப்பட்ட தேரில் ஏறிச் சென்ருன்.

கு :—ஒரு மௌலி சூடப்போகும் இராமன் ஆயிரமௌலியானைத் தொழுதான் என்ற நயம் காண்க. திருநாராயணமூர்த்தியை 'ஆயிரமௌலியான்' என்ருர். திருமால் ஆயிரம் முடிகளையுடையவன் என்பதை, "பதுமத்தாளும் ஆகத்தாள் அல்லள் மாயன் ஆயிர மௌலி மேலாள்" (சுந்தர - திருவடி - 67) எனப் பின் கூறுவதாலும் உணரலாம். வெள்ளம் கடலாயிற்று எனப் புதுமைதோன்றக் கூறினர்; மேலும் மேலும் அரசர் கூட்டம் திரண்டமை தோன்ற. இராமன் நல்வாழ்வெய்தத் தெய்வத்தைப் பராவும் கீதங்களையே இசைவாணர் பாடினர் என்க. தேவர் வாழ்த்துங்கால் தெய்வ கீதங்கள் பாட வாழ்த்தினர் என்றலும் ஒன்று. 'தேவரும்' என்ற உம்மை உயர்வுசிறப்பு. தையலார் இரைத்தது, பேரழகனைக் கண்ட மகிழ்ச்சியாலாகும். இராமனுடைய பேரழகாகிய தேனைக் கண்களால் பருகிக்கொண்டேயிருந்தமை தோன்ற நோக்க என்ருர். கேளா, செய்யாவென்னும் வாய்பாட்டு வினையெச்சம். ஐயனும், கேட்டு, தொழுது, சுற்ற, பாட, வாழ்த்த, நோக்க, சென்ருன் என்க. (86)

## இராமனைக் கண்ட மக்கள் மகிழ்ச்சி (1666-1682)

**1666.** திருமணி மகுடஞ் சூடச்
சேவகன் செல்கின் றானென்
றொருவரி னொருவர் முந்தக்
காதலோ டுவகை யுந்த
இருகையு மிரைத்து மொய்த்தா
ரின்னுயிர் யார்க்கு மொன்றாய்ப்
பொருவரு தேரிற் செல்லப்
புறத்திடைக் கண்டார் போல்வார்.

திரு மணி மகுடம் சூடச்
சேவகன் செல்கின்றான் என்று,
ஒருவரின் ஒருவர் முந்தக்,
காதலோடு உவகை உந்த,
இருகையும் இரைத்து மொய்த்தார்;
இன் உயிர் யார்க்கும் ஒன்றாய்ப்
பொரு அரு தேரில் செல்லப்
புறத்திடைக் கண்டார் போல்வார்.

பொ :—அழகிய மணிமுடி சூடிக்கொள்ள இராமன் செல்கின்றான் என்று அறிந்து, எல்லோர்க்கும் இனிய உயிர் ஒன்றாய், அவ்வுயிர் ஒப் பற்ற தேரில் ஏறிச் செல்லப் புறத்தில் கண்டாரைப் போல்வாராய், ஒருவர்க்கு ஒருவர் முந்தவும் அன்போடு மகிழ்ச்சி சேர்ந்து தூண்டவும் ஆரவாரித்து, இருபுறத்தும் மொய்த்துக்கொண்டார்கள்.

கு :—சேவகன், - வீரன்; இராமன். ஒருவர்க்குமுன் ஒருவர் முந்தினாலும் முந்தினோரை மேலும் முந்துமாறு காதலும் உவகையும் உந்தின என்க. மக்களெல்லாம் தம் உயிர்மேல் வைத்த அன்பினும் மேலாக இராமன்மேல் அன்பு வைத்திருந்தமை புலப்பட இல்பொருள் உவமையால் விளக்கியவாறு. இன்னுயிர் யார்க்கும் ஒன்றாதலும் அது புறத்திடைப் போகக் காண்டலும் என்றும் நிகழாதனவேயாம் "உயிரினு மவனையே உவப்பார்" (1438) என்பதை விளக்கிய வாறு. கை - பக்கம். இராமனைக் கண்ட ஒவ்வொருவரும் தம் உயிரையே காண்பது போல் மகிழ்ந்தனர் என்க.

எல்லோருடைய உயிர்க்கும் உயிராயிருக்கும் பரம்பொருளே இராமன் ஆதலின், 'இன்னுயிர் யார்க்கு மொன்றாய்' என்றதற்கு ஏற்ற வாறறிக. (87)

1667. துண்ணெனுஞ் சொல்லாள் சொல்லச்
சுடர்முடி துறந்து தூய
மண்ணெனுந் திருவை நீங்கி
வழிக்கொளா முன்னம் வள்ளல்
பண்ணெனுஞ் சொல்லி னார்தந்
தோளெனும் பணைத்த வேயும்
கண்ணெனுங் கால வேலு
மிடைநெடுங் கானம் புக்கான்.

துண் எனும் சொல்லாள் சொல்லச் சுடர் முடி துறந்து, தூய மண் எனும் திருவை நீங்கி வழிக்கொளாமுன்னம், வள்ளல், பண் எனும் சொல்லினார்தம் தோள் எனும் பணைத்த வேயும், கண் எனும் கால வேலும், மிடை நெடுங்கானம் புக்கான்.

பொ :—அஞ்சித் திடுக்கிடத்தக்க சொல்லையுடைய கைகேயி ஏவ, ஒளியுடைய முடியைத் துறந்து, தூய்மையுள்ள நிலம் என்கின்ற பெண்ணைப் பிரிந்து பயணமாகாத முன்னமே, இராமன், பண்ணிசை போன்ற சொல்லினையுடைய பெண்டிரின் தோள்கள் என்கின்ற பருத்த மூங்கில்களும், அவர்தம் கண்கள் என்கின்ற எமன் போன்ற வேல்களும் நெருங்கியுள்ள நீண்ட காட்டில் புகுந்தான்.

கு :—பிறரை அஞ்சுவிக்கும் சொல்லையே, 'துண்ணெனுஞ் சொல்' என்றார். 'துண்' என்ற குறிப்புத் திடுக்கிடலை உணர்த்தும். "துண்ணெனும் வினைத் தொழில்" (பால-395) என்றார் முன்னும். மண்ணுக்குத் தூய்மையாவது, சூரியகுலத்தார்க்கன்றிப் பிறர்க்கு உரிமையாகாமை. பூமியைத் தேவியாகக் கூறும் மரபுபற்றி, 'மண்ணெனுந் திருவை' என்றார். மகளிர் பலர் திரண்டு மொய்த்துக்கொண்டு கை தலைமேல் குவித்துக்கொண்டு பார்க்க இராமன் சென்றான் என்பதையே தோளெனும் வேயும் கண்ணெனும் வேலும் மிடை கானம் புக்கதாகக் கூறினர். தன் மேனி யழகை மறைத்துக்கொள்ளாது எல்லோரும் பார்க்க எளியனாய்ச் சென்ற அருளுடைமைபற்றி இராமனை 'வள்ளல்' என்றார். வடிவானும் அளவானும் வழுவழுப்பானும் மூங்கில் போலுதலின், மகளிர்தோள்களை வேயாக உருவகஞ் செய்தார். 'கண்ணெனும் வேல்' என்புழி வேற்படையையுணர்த்தி நின்ற 'வேல்' என்னும் சொல், 'மிடை கானம்' என்புழி 'வேலமரம்' என்ற பொருளை இரட்டுறமொழிதலால் உணர்த்திற்று. வேய் எனும் புல்லும் வேல் எனும் மரமும் முள் நிறைந்தவையாதலின் இராமன் புக்க கானின் கடுமை புலப்படுத்தியவாறு. கான் புகுமுன் கடுங்கானில் புகுந்து பழகிக்கொண்டான் என்பது கருத்து. இந்தக் காட்டில்

உளவாகும் இடையூற்றினை வென்று நடந்து பழகினமையால் அந்தக் காட்டில் வரும் இடையூறுகளையும் வென்று திரும்பும் ஆற்றலுடையவன் என்பது குறிப்பாயறியப்படும். மேல் நிகழவிருப்பதை முன்னரே நிகழ்ந்ததாகக் கற்பனைசெய்வதை, "சேவகன் சீரு முன்னஞ் சேதுவுந் தெரிந்தது" (5-1-20) என்பதாலும் அறியலாம். வேயும் வேலும் மிக்குள்ள இடம் காடு எனப்படுதலின், தெருவழிச் செல்பவனைக் காடு புகுந்ததாகக் கூறினர். (88)

**1668.** சுண்ணமு மலருஞ் சாந்துங்
கனகமுந் தூவ வந்து
வண்ணமே கலையு நாணும்
வளைகளுந் தூவு வாரும்
புண்ணுற வனங்கன் வாளி
புழைத்ததம் புணர்மென் கொங்கை
கண்ணுறப் பொழிந்த காம
வெம்புனற் கழுவு வாரும்.

சுண்ணமும் மலரும் சாந்தும்
கனகமும் தூவவந்து,
வண்ண மேகலையும் நாணும்
வளைகளும் தூவுவாரும்;
புண் உற அனங்கன் வாளி
புழைத்த தம் புணர் மென் கொங்கை
கண் உறப் பொழிந்த காம
வெம் புனல் கழுவுவாரும்.

பொ:—பெண்டிர், வாசனைச் சுண்ணமும் பூவும் சந்தனமும் பொற்பொடியும் தெருக்களில் தூவுவதற்காக வந்து, (அவற்றைத் தூவாமல் இராமனுடைய பேரழகில் ஈடுபட்டு) அழகிய மேகலையையும் நாணத்தையும் கைவளைகளையும் தூவுகின்றவரும், புண் உண்டாகுமாறு மன்மதன் அம்பு துளைத்த தம்முடைய நெருங்கிய மெல்லிய நகில்களைக் கண் மிகுதியாகப் பொழிந்த காமநோயால் உண்டாய வெப்பமான நீரால் கழுவுகின்றவரும்.

கு:—சிந்துவாரும் கழுவுவாரும் நைவாராய் என்பார் என அடுத்த பாடலில் முடியும்; குளகம். சுண்ணம் - வாசனைப்பொடி. கனகம் என்றது பொற்பொடியை. இராமன் உலா வரும்போது தெருவில் சுண்ணமுதலியவற்றைத் தூவுதற்காக வந்த பெண்டிர்

இராமன் அழகினைக் கண்டு மதிமயங்கி வந்த வேலையை மறந்து காமுற்றனர் என்க. காமமிக்கவர்க்கு மேகலை நெகிழ்தலும் வளை கழலுதலும் நாண் நீங்குதலும் இயல்பு. நான்கினைத் தூவ வந்தவர்கள் மூன்றினைத் தூவினர்கள் என்ற நயமும் காண்க. காமத்தால் தாமே நிகழும் மேகலை நெகிழ்தலையும் வளை சரிதலையும் நாண் அழிதலையும் அவர்கள் தூவுவதாக உபசரித்தார். புண்ணில் வெந்நீர் விட்டுக் கழுவுதல் மரபு. காம வேதனைக் காற்ருது விட்ட கண்ணீர் வெம்மையாய்க் கொங்கைகள்மேல் படிந்தமையையே வெம்புனலால் கழுவுவதாகக் கூறினர். அநங்கன், உருவமிலாத காமன். நாணும் மகளிர்க்குப் பூணெனப்படுதலின் மேகலை வளைகளுடன் எண்ணப்பட்டது. (89)

**1669.** அங்கண னவனி காத்தற்
காமிவ னென்ன லாமோ
நங்கணன் பிலனென் றுள்ளந்
தள்ளுற நடுங்கி நைவார்
செங்கணுங் கரிய கோல
மேனியுந் தேரு மாகி
எங்கணுந் தோன்று கின்ரு
னெனேவரோ விராம னென்பார்.

'அம் கணன் அவனி காத்தற்கு
ஆம் இவன்' என்னல் ஆமோ?
'நம்கண் அன்பு இலன்;' என்று உள்ளம்
தள்ளுற நடுங்கி நைவார்;
'செங்கணும் கரிய கோல
மேனியும் தேரும் ஆகி,
எங்கணும் தோன்றுகின்ருன்
எனேவரோ இராமன்?' என்பார்.

பொ :—'அழகிய கண்களையுடைய இவ்விராமன், மெல்லியராகிய நம்மிடத்து அன்பு இல்லாதவனாக இருக்கின்ருனே, உலகத்தைக் காப்பாற்றுதற்குப் பொருத்தமானவன் என்று சொல்லல் ஆகுமோ?' என்று மனம் தடுமாற உடல் நடுங்கி வருந்துவாராய்ச் 'சிவந்த கண்களையும் கரிய மேனியையும் தேரையும் உடையவனாகி எல்லா இடங்களிலும் தோற்றம் அளிக்கின்ருனே! இராமன் எத்தனைபேரோ?' என்றும் சொல்லுவார்கள்.

கு :—புறத்துறுப்பாகிய அழகிய கண்களையுடைமையால் அரசனு தற்கு ஏற்றவனுயினும் அகத்துறுப்பாகிய அன்பு இன்மையால் ஏலாதவனே என்று மனம் தடுமாறினர் என்க. "புறத்துறுப் பெல்லா மெவன்செய்யும் யாக்கை அகத்துறுப் பன்பி லவர்க்கு " (குறள்-79) என்பது இங்கு நினைத்தற் குரியது. 'நங்கண்' என்றது, பெண் பாலாரையெல்லாம் உளப்படுத்தியது. இருபாற்பட்ட இவ்வுலகத்துப் பெண்பாலார்பால் அன்பிலாத இவன் ஒருபாற்கோடாது நடுவு நின்று நாடுகாத்தற்கு ஏற்றவனல்லன் என்பது கருத்து. அவன் தங்களைக் காமுறுதலையே அன்புடைமையாக எண்ணி இங்ஙனம் காம மயக்கால் பிதற்றுகின்றனர். இராமன்மேல் வைத்த பெருங்காதலால் எங்கும் அவனுருவமே உருவெளித் தோற்றமாகக் காணப்படுதலின், "எனைவரோ இராமன்" என்றனர். இராமன் வடிவுடையவர் என்னுங் கருத்தில் 'இராமன்' என்ருர் ஆகலின் 'எனைவரோ இராமன்' என்று இயைந்தது; ஒருமைப் பன்மை மயக்கம் என வழுவமைதியாக்கலுமாம். "ஏவரோ இராமன் என்பார்" என்ற பாடம் கொண்டு எங்கும் தோன்று கின்ற இராமன் தோற்றங்களில் உண்மையான இராமன் யாரோ என்று பொருள் கொள்ளுதலுமாம். சுண்ணம் முதலியவற்றைத் தூவ வந்த பெண்டிர், இராமனைக் கண்டு காமுற்று மேகலை முதலிய வற்றைத் தூவிவிட்டுக் காமன் கணை செய்த புண்களுக்கு ஆற்ருது அழுதனர் ; அழுகின்ற தம் துன்பத்தைப் போக்காததால் அன்பிலாத இவ்விராமன் உயிர்களைக் காத்தற்கு ஏற்றவன் அல்லன் என்று நைந்து, எங்கும் இராமன் தோற்றமே கண்டு, பிதற்றுகின்றனர் என்பது கருத்து. (90)

**1670.** இனையராய் மகளி ரெல்லா
மிரைத்தனர் நிரைத்து மொய்த்தார்
முனைவரு நகர மூதூர்
முதியரு மிளைஞர் தாமும்
அனையவன் மேனி கண்டா
ரன்பினுக் கெல்லை காணுர்
நினைவினர் மனத்தால் வாயா
னிகழ்ந்தது நிகழ்த்த லுற்ரும்.

இனையர் ஆய் மகளிர் எல்லாம்
இரைத்தனர் நிரைத்து மொய்த்தார் ;
முனைவரும் நகர மூதூர்
முதியரும் இளைஞர் தாமும்

அனையவன் மேனி கண்டார் ;
அன்பினுக்கு எல்லை காணார்
நினைவினர் மனத்தால் வாயால்
நிகழ்ந்தது நிகழ்த்தலுற்றாம்.

பொ :—இத்தன்மையாராய்ப் பெண்டிரெல்லாம் ஆரவாரித்துக் கொண்டு வரிசைவரிசையாக இராமனை மொய்த்துக்கொண்டார்கள். முனிவரும், அயோத்திநகரமாகிய பழைய ஊரில் உள்ள முதியவர்களும், இளைஞர்களும் அந்த இராமனுடைய மேனி அழகைக் கண்டு அவன்பக்கலில் தமக்கு உண்டாகும் அன்பிற்கு எல்லை காணாதவராய், மனத்தால் நினைக்கும் நினைவுள்ளவராய் வாயால் சொன்னதைச் சொல்லத் தொடங்கினோம்.

கு :—முனைவர் என்றது முனிவரை. கடவுட்கே 'முனைவன்' என்பது பெயர்; அக்கடவுளைத் தம்முள்ளத்து நீங்காது வைத்த முனிவரும் அப் பெயர்க்கு உரியராயினர். இராமன் எழில், பருவமும் நிலையும் பாலும் நோக்காது எல்லோரையும் ஈடுபடச் செய்யவல்லது என்பதை விளக்க, ஆடவரில் முனைவரும் முதியரும் இளைஞரும் கண்டு அன்பு கொண்டமை கூறினர். கண்டார் காணார் என்ற முரண் அணி காண்க. மேல், மகளிர் இராமனைக் கண்டு நினைவிழந்த மனத்தராய்க் கூறியவற்றை விளக்கினர் ஆகலின், ஆடவர் அவ்வாறு நினைவு இழந்திலர் என்பது உணர்த்த வேண்டி, 'நினைவினர்' என்றார். வாயால் நிகழ்ந்தது என்றது, சொல்லியதை. (91)

**1671.** உய்ந்ததிவ் வுலக மென்பா
ரூழிகாண் கிற்பா யென்பார்
மைந்தநீ கோடி யெங்கள்
வாழ்க்கைநாள் யாவு மென்பார்
ஐந்தவித் தரிதிற் செய்த
தவமுனக் காக வென்பார்
பைந்துழாய்த் தெரிய லாய்க்கே
நல்வினை பயக்க வென்பார்.

'உய்ந்தது இவ் உலகம் !' என்பார் ;
'ஊழி காண்கிற்பாய் !' என்பார் ;
'மைந்த ! நீ கோடி எங்கள்
வாழ்க்கைநாள் யாவும் !' என்பார் ;

'ஐந்து அவித்து அரிதில் செய்த
தவம் உனக்கு ஆக!' என்பார்;
'பைந்துழாய்த் தெரியலாய்க்கே
நல்வினை பயக்க!' என்பார்.

பொ :—'உன்னை அரசனுகப் பெற்றமையால் இவ்வுலகம் கடைத் தேறிவிட்டது!' என்று சொல்லுவார் சிலர்; 'ஊழியின் இறுதியைக் காணும் ஆயுளுடையனுகுக!' என்பர் சிலர்; 'வலிமை நிறைந்தவனே! எங்கள் வாழ்நாளெல்லாவற்றையும் நீயே கொண்டு நெடிது வாழ்க!' என்பார் சிலர்; 'ஐம்பொறிகளையும் அடக்கி அருமையாகச் செய்த எங்கள் தவமெல்லாம் உனக்கேயுரியவாய்ப் பயன் அளிக்க!' என்பார் சிலர்; 'பசுமையான துளபமாலையணிந்த உனக்கே யாங்கள் செய்த நல்வினையெல்லாம் பயன் அளிப்பனவாக!' என்பார் சிலர்.

கு :—ஊழிகாண்டல் - ஊழியிறுதிவரையில் வாழ்தல். 'மைந்த' என்பதை முறைப்பெயராகக் கொள்ளினும் ஆம். சாதுகைமாந்தர் கூறுவனவாகலின் அம் முறைப்பெயரால் கூறினர்; "சாதுகை மாந்த ரெல்லாம் தயரதன்றன்னையொத்தார்" என முன் கூறப்பட்டிருத்தல் காண்க. இராமன் நெடிதுவாழவேண்டும் என்ற எண்ணத்தால் தம் வாழ்நாளையெல்லாம் கொடுக்க முன்வந்தனர் என்க. தம் உயிரினும் சிறந்தவன் இராமனுதலின் தாம் இறந்தேனும் அவனை நெடிது வாழ்விக்க எண்ணினர் என்பது கருத்து. "யான் வாழுநாளும் பண்ணன் வாழிய" (புறநா-173) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். முதலடி இளைஞர்கூற்ருகவும், இரண்டாமடியும் நான்காமடியும் முதியவர்கூற்ருகவும், மூன்ருமடி முனிவர்கூற்ருக வும் கொள்க. ஐந்து என்றது ஐம்பொறிகளை. 'ஐந்தவித்தான்' (குறள்-25) என்றது நினைக்க. தவம் செயற்கரிய செயலாதலின், 'ஐந்தவித்து அரிதிற் செய்த' என்ருர். மாரியினும் பனியினும் நீர் நிலைநின்றும் கோடையில் நெருப்பிடைநின்றும் ஐம்பொறியடக்கி அரிதிற்செய்த தவப்பயனைத் தாம் துய்க்க எண்ணுது இராமனுக்கு உரிமைசெய்தனர் என்க. "தானமுந் தருமமுந் தகவுந் தன்மைசேர் ஞானமு நல்லவர்ப் பேணு நன்மையும், மானவ வையம் நின்மகற்கு வைகலும், ஈனமில் செல்வம்வந் தியைக வென்னவே" (1497) என்று முன்னர் மன்னர் தயரதனுக்குக் கூறியன இங்கு மக்கள் வாயால் உணர்த்துகின்ருர். தெரியலாய் என்றது, முன்னிலைக் குறிப் புப் பெயர். தாங்கள் செய்த நல்வினையெல்லாம் இராமனுக்கே பயனளிப்பனவாக என்பது கருத்து. (92)

1672. உயரரு ளொண்க ணொக்குந்
தாமரை நிறத்தை யொக்கும்
புயல்பொழி மேக மென்ன
புண்ணியஞ் செய்த வென்பார்
செயலருந் தவங்கள் செய்திச்
செம்மலைத் தந்த செல்வத்
தயரதற் கென்ன கைம்மா
றுடையம்யாந் தக்க தென்பார்.

'உயர் அருள் ஒண் கண் ஒக்கும்
தாமரை, நிறத்தை ஒக்கும்
புயல் பொழி மேகம், என்ன
புண்ணியம் செய்த?' என்பார்;
'செயலருந்தவங்கள் செய்து இச்
செம்மலைத் தந்த செல்வத்
தயரதற்கு என்ன கைம்மாறு
உடையம் யாம் தக்கது?' என்பார்.

போ :—'உயர்ந்ததாகிய அருளைப் பொழிகின்ற ஒளிவாய்ந்த இவன் கண்களுக்கு உவமையாகும் தாமரையும், இவன் நிறத்திற்கு உவமையாகும் மழை பொழியும் மேகமும், அவ்வாறு உவமையாதற்கு என்ன புண்ணியம் செய்தனவோ?' என்பார் சிலர்; 'செய்தற்கு அரிய தவங்களைச் செய்து இந்த இராமனை நமக்கு மன்னனாகப் பெற்றுத்தந்த செல்வமிக்க தயரதனுக்குத் தக்கதாக என்ன கைம்மாறு யாம் செய்வது உடையேம்?' என்பார் சிலர்.

கு :—அருளிற் சிறந்தது பிறிதொன்றின்மையின் உயர் அருள் எனப்பட்டது. அருளாவது, தொடர்புபற்றாது இயல்பாக எல்லா உயிர்கள்மேலும் செல்வதாகிய கருணை. அருள், கண்ணுக்கு அடை. புயல், இங்கு மழையையுணர்த்திற்று. அருள்வள்ளலாகிய இராமபிரான் கண்ணுக்கும் நிறத்திற்கும் உவமையாக வேண்டுமாயின் பெரும்புண்ணியம் செய்திருந்தாலொழிய வாய்க்காது; அப் புண்ணியம் இன்னது எனத் தெரிந்தால் நாமும் அப்புண்ணியம் செய்து அப் பெரும்பயனை அடையலாம் என்பது குறிப்பு. தாமரைக் கண்ணன், மேகவண்ணன் என்று கூறும் மரபும் காண்க. "மேகங்களோ வுரையீர், திருமால் திருமேனியொக்கும், யோகங்களுங் களுக் கெவ்வாறு பெற்றீர்" (நம்மாழ்வார்-திருவிருத்-32) என்பது இங்கு ஒப்புநோக்கத்தகும். தயரதன் தவஞ்செய்துபெற்றது தமக்குப் பெரும்பயனாக முடிந்தமையின் அவனுக்குத் தக்க கைம்மாறு

செய்ய எண்ணிப் பின் இயலாமை தெரிவிக்கின்றனர். 'செல்வத் தயரதன்' என்றது, பொருளைக் கைம்மாருகப் பெற வேண்டாதவன் என்பது தோன்றற்கு. இராமனைப் பெற்று அளித்ததற்கு ஈடான கைம் மாறு என்பார் 'தக்கது' என்றார். "செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும் வானகமு மாற்ற லரிது" (குறள்-101) ஆகலின், 'என்ன கைம்மாறுடையம் யாம்' என்றார். பிழையுயிர் எய்தாது மழைவளந் தரும் மாரிமாட்டு இவ்வுலகம் கைம்மாறு செய்ய இயலாதவாறு போல இராமனைத்தந்த தயரதற்குக் கைம்மாறுசெய்யவியலாது என்பது கருத்து. "நம்பியைக்..............இம்பரிந் நகரில் தந்த முனி வனை யிறைஞ்சு மென்பார்" (792) என முன் கூறியதும் இக் கருத்துப்பற்றியேயாம். (93)

**1673.** வாரண மரற்ற வந்து
கராவுயிர் மாற்று நேமி
நாரண னொக்கு மிந்த
நம்பிதன் கருணை யென்பார்
ஆரண மறித தேற்ரு
வையனை யணுகி நோக்கிக்
காரண மின்றி யேயுங்
கண்கணீர் கலுழ நிற்பார்.

'வாரணம் அரற்ற வந்து, கரா உயிர் மாற்றும் நேமி
நாரணன் ஒக்கும், இந்த நம்பிதன் கருணை!' என்பார்;
ஆரணம் அறிதல் தேற்ரு ஐயனை அணுகி நோக்கிக்,
காரணம் இன்றியேயும், கண்கள் நீர் கலுழ நிற்பார்.

பொ :—இந்த இராமபிரானுடைய அருளானது, யானை 'ஆதி மூலமே' என்று அழைத்து அலற உடனே அங்கு ஓடி வந்து முதலை யின் உயிரைப் பிரித்த சக்கரப்படை தாங்கிய நாராயணனுடைய அருளை ஒக்கும் என்று சொல்லுவார் பலர்; வேதங்களால் அறிய இயலாத திருமாலின் அமிசமான இராமனை அணுகிப் பார்த்துக் காரணம் யாதும் இல்லாமலேயே கண்கள் நீர் வார நிற்பார் பலர்.

கு :—தேவர்கள் அரற்ற வந்து அவர் துயர் போக்கத் தயரதன் மதலையாய்ப் பிறந்து, இராவணனைக் கொல்லுதற்குரியவன் இராமன் ஆதலின் இங்ஙனம் உவமை கூறினர். தங்கள் துன்பமும் இவ்வாறே தீர்க்கப்படும் என்பது கருத்து. வாரணம், கசேந்திரன் என்னும் யானை. 'அரற்ற வந்து' என்றது, அரற்றுதலும் வருதலும் உடனிகழ்ந்தமை

யுணர்த்திற்று. உயிர்க்கு அழிவின்மையின் கொன்று என்னாது, 'கரா உயிர் மாற்றும்' என்றார். நாரணன் அருளை ஒக்கும் என ஒருசொல் வருவிக்க. நம்பி என்றது, இராமபிரானை. ஆரணம்-வேதம். 'ஆரணமறிதல் தேற்றா ஐயன்' என்றது இராமபிரானின் ஆதி நிலையை நினைந்து கூறியது. அவன் திருவுருவை நெருங்கிப் பார்க்கும் பொழுது மகிழ்ச்சியால் கண்களில் நீர் பெருகுகின்றது; இது உவகைக் கலுழ்ச்சி. 'காரண மின்றியேயும்' என்றது, இயல்பாகக் கண்கள் நீர் சொரிந்தன என்றவாறு. இக்கலுழ்ச்சியை அவலக் கலுழ்ச்சியாகக் கொண்டு பின்வரும் அவல நிகழ்ச்சியை உணர்த்தும் குறிப்பாகவும் கொள்ளலாம். (94)

**1674.** நீலமா முகில னன்ற
　　னிறையினோ டறிவு நிற்க
சீலமார்க் குண்டு கெட்டேன்
　　றேவரி னடங்கு வானோ
காலமாக் கணிக்கு நுண்மைக்
　　கணக்கையுங் கடந்து நின்ற
மூலமாய் முடிவி லாத
　　மூர்த்தியிம் முன்ப னென்பார்.

'நீல மா முகில் அனான்தன் நிறையினோடு அறிவும் நிற்க,
சீலம் ஆர்க்கு உண்டு? கெட்டேன்! தேவரின் அடங்குவானோ?
காலமாக் கணிக்கும் நுண்மைக் கணக்கையும் கடந்து நின்ற
மூலமாய், முடிவு இலாத மூர்த்தி இம் முன்பன்!' என்பார்.

பொ:—'சிறந்த நீலமேகம் போன்ற நிறம்வாய்ந்த இவ்விராமனுடைய நிறையும் அறிவும் பிறர்க்கில்லை என்பது இருக்கட்டும்; இவன் சீலம் வேறு யார்க்கு இருக்கின்றது? யார்க்குமில்லை; இதுகாறும் இவ்வுண்மை யறியாது கெட்டேனே! பிறர்க்கில்லாத நிறையும் அறிவும் சீலமும் உடைமையால் மனிதரில் ஒருவனாக அடங்காத இவன், கால அளவிற்கு உட்பட்ட தேவரில் ஒருவனாக அடங்குவானோ? அடங்கான்; இந்த வலிமை மிக்க இராமன், காலம் என்று எண்ணுகின்ற நுட்பமான அளவையும் கடந்துநின்ற மூலப்பொருளாய் அழிவில்லாதிருக்கின்ற பரம்பொருளே ஆவன்!' என்று சொல்லுவார்கள்.

கு:—மா-சிறப்பு. நிறையும் அறிவும் ஆடவர்க்குரிய குணங்கள் நான்கில் அடங்குவன. நிறை - காப்பன காத்துக் கடிவன கடிந்தொழுகும் ஒழுக்கம். இராமனிடம் காணப்படும் நிறையும் அறிவும்

பிறர்க்கில்லை என்பது எல்லோரும் அறிந்ததாகலின், 'நிற்க' என்றார். சீலமாவது மிகவுயர்ந்த ஒருவன் மிக இழிந்தவரையும் ஒப்பாக எண்ணிப் பழகுதலாகிய எளிமைப் பண்பு. இப் பண்பினை இராமன் பார்வையாலறிந்தவர்கள் பேசுகின்றார்கள். இவ்வெளிமைப் பண்பினை இதுகாறும் அறியா திருந்த தம் நிலையையுணர்த்த, 'கெட்டேன்' எனக் கழிவிரக்கம் தோன்றக் கூறுகின்றார்கள் தனித்தனியே. இரக்கக் குறிப்புணர்த்த, 'கெட்டேன்' என்றல் மரபு. "அருளிதுவாயிற் கெட்டேன் பிழைப்பரோ வரக்கராயோர்" (யுத்த-விபீ-127) எனவும்," அத்தனுக் கென் கொல் கெட்டேன் அடுத்தது" (பெரிய-கண்ணப்-168) எனவும் வருதல் கண்டு தெளிக. அருவமாகிய காலத்தை ஞாயிறும் திங்களும் முதலிய அளவைகளால் அறியும் நுட்பம் தோன்ற 'நுண்மைக் கணக்கையும்' என்றார். காலதத்துவத்திற்கு அப்பாற்பட்டவர் கடவுள். 'மூலமாய்' என்றது, எல்லாவற்றிற்கும் முதற்காரணமாய் நின்றமையையும் 'முடிவிலாத' என்றது, அழிவின்மையையும் உணர்த்தின. முன்பு-வலிமை. ஒவ்வொருவரும் தனித் தனியே சொன்னதையுணர்த்த, 'கெட்டேன்' என ஒருமையிற் கூறி, எல்லோரையும் சேர்த்து நினைத்து, என்பார். என்று பன்மையிற் கூறினர். (95)

**1675.** ஆர்கலி யகழ்ந்தோர் கங்கை
யவனியிற் கொணர்ந்தோர் முந்தைப்
போர்கெழு புலவர்க் காகி
யசுரரைப் பொருது வென்றோர்
பேர்கெழு சிறப்பின் வந்த
பெரும்புகழ் நிற்ப தையன்
தார்கெழு திரடோ டந்த
புகழினைத் தழுவி யென்பார்

'ஆர்கலி அகழ்ந்தோர் கங்கை
அவனியில் கொணர்ந்தோர், முந்தைப்
போர் கெழு புலவர்க்கு ஆகி
அசுரரைப் பொருது வென்றோர்,
பேர் கெழு சிறப்பின் வந்த
பெரும்புகழ் நிற்பது ஐயன்,
தரர் கெழு திரள் தோள் தந்த
புகழினைத் தழுவி!' என்பார்.

பொ :—'கடலைத் தோண்டின சகரர்க்கும், ஆகாய கங்கையைப் பூமியிற் கொணர்ந்த பகீரதனுக்கும், முற்காலத்துப் போரில் கலந்த

தேவர்க்குத் துணையாகி அரக்கர்களைப் போர் செய்து வென்ற முசுகுந்தன் முதலியோர்க்கும், பெருமை பொருந்திய சிறப்பால் வந்த பெரிய புகழ், இராமனுடைய மாலை பொருந்திய திரண்ட தோள் தந்த புகழினைத் தழுவிப் பின் நிற்பதே ஆகும் !' என்று சொல்லுவார்.

கு :— சூரியகுலத்தில் இராமனுக்கு முன்னோராய்த் தோன்றிப் பெருஞ் செயல் செய்த சகரர் முதலியவர்களின் புகழ்கள் சிறந்தனவே எனினும், இராமன்புகழுக்குப் பின் எண்ணத் தக்கனவே என இராமன் புகழைச் சிறப்பித்தவாறு. "ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன், பின்சாரப் பொய்யாமை நன்று" (குறள். 323) என்பது ஒப்புநோக்கத் தகும். புலவர் - தேவர். துணையாகி என்க. வென்றோர், கருத்தன் முசுகுந்தன் முதலியோர். தோள் தந்த புகழ் என்றது, தாடகையையும் அவள் மகனையும் கொன்றும் உருத்திரன் வில்லை முறித்தும் பரசுராமனை வென்றும் பெற்ற புகழை. இத்தகைய பெரும் புகழ் இவனுக்கு முன் யாரும் பெற்றிலர் என்பது கருத்து. ஆர்கலி - கடல்; நிறைந்த ஒலியை யுடைமையால் வந்த பெயர். (96)

1676. சந்தமிவை தாவின்மணி
★ யாரமிவை யாவும்
சிந்துரமு மிங்கிவை
செறிந்தமத வேழப்
பந்திகள் வயப்பரி
பசும்பொனின் வெறுக்கை
மைந்தவறி யோர்கொள
வழங்கென நிரைப்பார்.

'சந்தம் இவை, தா இல் மணி ஆரம் இவை யாவும்,
சிந்துரமும், இங்கு இவை செறிந்த மத வேழப்
பந்திகள், வயப்பரி, பசும்பொனின் வெறுக்கை,
மைந்த! வறியோர் கொள வழங்கு!' என நிரைப்பார்.

பொ :— 'மைந்த! சந்தனக்குழம்புவகைகளாகிய இவற்றையும் குற்றமற்ற மணிமாலைகளாகிய இவை எல்லாவற்றையும், திலகமிடுதற்குரிய சிந்தூரத்தையும், இங்கு நெருங்கி யிருக்கின்ற மதம் வாய்ந்த யானை வரிசைகளாகிய இவற்றையும், வெற்றிவாய்ந்த குதிரைகளாகிய இவற்றையும், பசுமையான பொன்னாகிய செல்வத்தையும், ஏழை மக்கள் கொள்ளுமாறு வழங்குவாயாக !' என வரிசையாக வைப்பார்கள்.

கு :—விலையுயர்ந்த மணிகள் கோத்த மாலைகள் என எண்ணிச் சிலவற்றை நிறுத்த வேண்டாம் என்ற கருத்தால், 'ஆரமிவை யாவும்' என்றார். பூசுவன, பூண்பன, இடுவன, ஊர்வன, பொன் எல்லாவற்றையும் நாட்டுமக்கள் கொணர்ந்து இராமன் அருகில் வைக்கின்றார்கள்; அவற்றை அவன் வறியோர்க்கு வழங்கி நன்மைகள் பெறவேண்டி. இராமனை வாங்குபவனாக ஆக்கலாகாது என்ற கருத்தால் கொடுப்பார் என்னாது, 'நிரைப்பார்' என்றார். பசும்பொன் ஆகிய வெறுக்கை என்க. 'இன்' அல்வழிச் சாரியை. வெறுக்கை - செல்வம். நிரைப்போர் முதியவராதலின் 'மைந்த' என இராமனை விளித்தனர். தம் சொல் மறாமல் அவற்றைப் பெற்று வழங்கவேண்டும் என்ற உரிமை தோன்ற அங்ஙனம் விளித்தார் எனலுமாம். 'சாதுகை மாந்தரெல்லாம் தயரதன் றன்னை யொத்தார்' என்பதை விளக்கியவாறு. 'வறியார்க்கொன் றீவதே யீகை' (குறள் – 221) என்னும் முறைநோக்கி வறியோர்க்கு வழங்கு என்றனர். வழங்குதல் வரையறையின்றி வாரிக்கொடுத்தல். பந்தி-வரிசை. வயப்பரி - வலிய குதிரை எனலுமாம். (97)

**1677.** மின்பொருவு தேரின்மிசை
வீரன்வரு போழ்தில்
தன்பொருவில் கன்றுதனி
தாவிவரல் காண்டாங்
கன்புருகு சிந்தையொடு
மாவுருகு மாபோல்
என்புருகி நெஞ்சுருகி
நஞ்சுருகி நிற்பார்.

மின் பொருவு தேரின் மிசை வீரன் வரு போழ்தில்,
தன் பொரு இல் கன்று தனி தாவி வரல் கண்டு, ஆங்கு
அன்பு உருகு சிந்தையொடும் ஆ உருகுமாபோல்
என்பு உருகி நெஞ்சு உருகி நஞ்சு உருகி நிற்பார்.

பொ :—தனது ஒப்பற்ற கன்று தனியே தாவிக் குதித்து வருதலைக் கண்ட அப்பொழுது அன்பால் உருகுகின்ற சிந்தையோடும் பசு உருகுமாறுபோலக் கற்புமிக்க முதுமகளிர், மின்னலை ஒத்த ஒளியும் விரைவுமுடைய தேரின்மேல் வீரனாகிய இராமன் வரும்பொழுது கண்டு என்பும் உருகி மனம் உருகி உடம்பெல்லாம் நைந்து நீராய் உருகி நிற்பார்.

கு :—'மாதர்கள் கற்பின் மிக்கார் கோசலை மனத்தை யொத்தார்' (1649) என முன் கூறியதற்கு விளக்கம் தந்தவாறு. கன்று வரக்கண்ட ஆ உருகுமாபோல் என்ற உவமையால் உருகி நிற்பவர், கற்பு மிக்க முது மகளிரே என்பது பெற்றும். ஆங்கு - அப்பொழுது. என்பும் உருகி எனல் வேண்டும். உயர்வு சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. உடம்பில் என்பே வன்மை மிக்கதாதல் நினைக்க. "என் பெலா முருக நோக்கி அம் பலத்து ஆடுகின்ற" (திருவாசகம்–516) என்பதால் என்பும் உருகுதலை உணரலாம். நைந்துருகி என்பது, 'நஞ்சுருகி' எனப் போலியாய் வந்தது. நைந்துருகுதற்கு எழுவாய் உடம்பு. "உருகுவது, உள்ளங் கொண்டோருருச் செய்தாங் கெனக்கு, அள்ளூருக்கை அமைத்தனன்" (திருவாசகம்-திருவண்டப்பகுதி 176–177) என உருகும் உடம்பை விளக்கியிருத்தல் காண்க. (98)

1678. சத்திர நிழற்றநிமிர் தானையொடு நாறு
அத்திர நிழற்றவரு ளோடவனி யாள்வார்
புத்திர ரினிப்பெறுதல் புல்லிதென நல்லோர்
சித்திர மெனத்தனி திகைத்துருகி நிற்பார்.

'சத்திரம் நிழற்ற நிமிர் தானையொடு நாறு
அத்திரம் நிழற்ற அருளோடு அவனி ஆள்வார்,
புத்திரர் இனிப் பெறுதல் புல்லிது;' என நல்லோர்,
சித்திரம் எனத் தனி திகைத்து உருகி நிற்பார்.

பொ :—'ஒற்றை வெண்கொற்றக்குடை நிழல்செய்யப் பெருகிய சேனையோடு பலவகையான படைக்கலங்களும் ஒளி வீச, அருளோடும் இவ்வுலகத்தை ஆள்கின்ற அரசர்கள், இராமன் தோன்றியபின் புத்திரரைப் பெறுவது பெருமையாகாது சிறுமையானதே ஆகும்;' என்று பெண்டிர் எல்லாம் இராமன் பெருமைகளைக் கண்டு திகைத்து உருகிச் சித்திரம்போல் தனித்தனியே நிற்பார் ஆயினர்.

கு :—சத்திரம் – குடை. அத்திரம் - படை ; அது பலவகைப் படுதலின் 'நாறு அத்திரம்' என்றார். நிழல் - ஒளி. மக்கட்பேற்றை விடச் சிறந்த பொருள் பிறிதின்றேனும், எல்லா நலங்களும் நிறைந்த இராமனைப்போன்ற புத்திரரைப் பெறுதல் கூடாமையானும் அவ்விரா மனுக்குமுன் அம்மன்னவகுமரர் எல்லாம் ஞாயிற்றின்முன் மின்மினி போலச் சிறப்பிழந்துநிற்பர் ஆதலானும் ஆள்வார் புத்திரர் இனிப் பெறுதல் புல்லிது என்றார். "மன்னவர் நேமி பண்டுருட்டிப் பெருமை யெய்தினர் யாவரே யிராமனைப் பெற்றார்" (1433) என முன்னர்க் கூறியதும் இக்கருத்துப் பற்றியேயாம். இராமனை

யொத்தவர் முன்னும் பிறந்ததில்லை; பின்னும் பிறக்கப் போவதில்லை என்பது கருத்து. இராமனுக்குமுன் பிறந்த அரசகுமரர் எல்லாம் தம் தகுதிக் கேற்பச் சிறப்பெய்தியிருக்கலாம் ; இராமனுக்குப் பின் பிறக்கும் அரச குமாரர்கள் எவ்வகையாலும் இராமனைப்போல் சிறப் பெய்த முடியாது என்பதை விளக்கியவாறு. மிகச் சிறப்புடையவர் தோன்றியபின்பு தோன்றுமவர் புகழ் மிகப் பெறல் இயலாது என்பதை, "புறவினல்லல் சொல்லிய......துலாஅம் புக்கோன்மருக! ஈதனின் புகழுமன்றே;... தூங்கெயிலெறிந்த நின்னூங்கணோர் நினைப்பின் அடுதல் நின் புகழுமன்றே" (புறநா – 39) என்ற பகுதியும் விளக்குதல் காண்க. இராமன் பெருமையைக் கண்ணுற்றமையால் திகைப்பும், இத்தகை யோனைக் காணப் பெற்றோம் என்ற எண்ணத்தால் உருக்கமும் பெற்றனர் என்க. நல்லோர் - பெண்டிர். (99)

1679. கார்மினொ டுலாயதென நூல்கனலு மார்பன்
தேர்மிசைநம் வாயில்கடி தேகுதல்செய் வானோ
கூர்கனக ராசியொடு கோடிமணி யாலும்
தூர்மினெடு வீதியினை யென்று சொரிவாரும்.

'கார் மினொடு உலாயது என நூல் கனலும் மார்பன்
தேர்மிசை நம் வாயில் கடிது ஏகுதல்செய்வானோ ?
கூர் கனக ராசியொடு கோடி மணியாலும்
தூர்மின் நெடு வீதியினை !' என்று சொரிவாரும்.

பொ :—'மேகம் மின்னலோடு உலாவியதுபோல முந்நூல் விளங்கும் மார்பையுடைய இராமன், தேர் மேல் செல்வதால் நம் வீட்டு வாயிலை விரைவாகக் கடந்து சென்றுவிடுவானோ? அவன் தேர் விரைந்து செல்லாதபடி மிக்க பொன்னின் குவியல்களோடு மிகப் பல நவமணி களாலும் நீண்ட தெருவினைத் தூருங்கள்!' என்று சொல்லிக்கொண்டே அப்பொன்னையும் மணியையும் சொரிவார் பலர்.

கு :—மேகம் இராமனுக்கும், மின் பூணூலுக்கும் உவமை. கனலுதல் - விளங்குதல். கடிதேகின் அவனெழிலைப் பருகுதல் கூடாமையின் ஏகாது தடுத்தல்வேண்டும். அதற்கு வழி வீதியைத் தூர்த்தலே யென்று கருதி அதை ஒருவர் செய்தல் கூடாமையின் பிறரையும் தூர்மின் என்றேவித் தாமும் அது செய்வாராயினர். தலைவன் செல்லும் வழியில் மகிழ்ச்சியால் பொன்னும் மணியும் தூவுதல் மரபு ; அம்மரபின்படிசெய்வதாகப் பிறர் எண்ணத் தம் எண்ணத்தை முடித்துக் கொள்கின்றனர் பெண்டிர் என்பது கருத்து. கூர் - மிகுதி. கோடி, மிகுதி விளக்க வந்த சொல். தூர்த்தல்-அடைத்தல். நெடுந் தெருவைத்

தூர்க்கப் பொன்னும் மணியும் சொரிதலால் அப் பெண்டிரின் செல்வச் சிறப்பும் தேர் கடிதேகாது தடுக்க அங்ஙனம் செய்வதால் அவர் காதற் சிறப்பும் புலனும். சொரிவாரும் என்புழி உம் அசைநிலை. (100)

**1680.** தாய்கையில் வளர்ந்திலன்
வளர்த்தது தவத்தால்
கேகயன் மடந்தைகிளர்
ஞாலமிவ னாள
ஈகையி லுவந்தவவ்
வியற்கையிது வென்றால்
தோகையிவள் பேருவகை
சொல்லலரி தென்பார்.

'தாய் கையில் வளர்ந்திலன்; வளர்த்தது தவத்தால்
கேகயன் மடந்தை; கிளர் ஞாலம் இவன் ஆள,
ஈகையில் உவந்த அவ் இயற்கை இது; என்றால்,
தோகை இவள் பேர் உவகை சொல்லல் அரிது!' என்பார்.

பொ :—'பெற்றதாயாகிய கோசலையின் கையில் இராமன் வளரவில்லை; வளர்த்தது, முன் தவமுடைமையால் கேகயன்மகளாகிய கைகேயியே ஆவள்; விளக்கமுடைய இவ்வுலகத்தை இவன் ஆளக் கொடுக்கின்றதில் இவள் மகிழ்ந்த அவ்வியல்பு இதுவாயின் மயில் போன்ற இக்கைகேயியின் பெரிய மகிழ்ச்சியைச் சொல்லுதல் அரிதாகும்!' என்று சொல்லுவார் பலர்.

கு :—'வளர்த்தது மடந்தை' என்புழி வினைமுற்று தொழில் மேல் நின்றது. இராமனை வளர்க்கும் பேறு தவத்தான் அன்றி யெய்தாது என்பார், 'தவத்தால்' என்றார். ஈகை தயரதன் செயல்; உவத்தல் கைகேயியின் செயல் என்க. இது என்றது, இராமனைத் தன் மனைக்கு வரவழைத்ததை. அவ்வியற்கை இது—இராமனை வளர்த்து வந்த அவ்வியல்பான அன்பினாலான செயல் இது என்க. மூத்தவற் குரித்து அரசு என்பதை உடன்படற்கேற்ற மயின்முறைக்குலத்தினள் என்ற குறிப்புத் தோன்றக் 'கேகயன் மடந்தை' என்றும் 'தோகை' என்றும் பெயர் கூறினர். ஏனையோருவகைக்கெல்லாம் தலைமையான உவகையடைந்தாள் என்பார், 'பேருவகை சொல்லல் அரிது' என்றார். (101)

**1681.** பாவமு மருந்துயரும்
வேர்பறியு மென்பார்
பூவலய மின்றுதனி
யன்றுபொது வென்பார்
தேவர்பகை யுள்ளனவிவ்
வள்ள றெறுமென்பார்
ஏவல்செயு மன்னர்தவம்
யாவதுகொ லென்பார்.

'பாவமும் அருந்துயரும் வேர்பறியும்!' என்பார்;
'பூவலயம் இன்று தனியன்று பொது!' என்பார்;
'தேவர் பகை உள்ளன இவ் வள்ளல் தெறும்!' என்பார்;
'ஏவல் செயும் மன்னர்தவம் யாவதுகொல்?' என்பார்.

பொ :—'இவ் விராமனைக் கண்ட அளவில் நம் பாவமும், பிறரால் தீர்த்தற்கு அரிய துன்பங்களும் வேரோடு கெடும்' என்று சிலர் சொல்லு வார்கள்; 'உயர்ந்த பண்புள்ள இராமன் அரசேற்பதால் இப்பூமி வட்டம் இன்று அவனொருவனுக்கே தனியுரிமைச் சொத்தன்று; எல் லோர்க்கும் பொதுவுடைமையாம்' என்று சிலர் சொல்லுவார்கள்; 'தேவர்கட்குப் பகையாக உள்ள அரக்கர்கூட்டங்களை இவ்வள்ள லாகிய இராமன் அழிப்பான்' என்று சிலர் எதிர்கால வுணர்வுடன் சொல்லுவார்கள்; 'இவன் ஏவல் செய்யும் மன்னவர்தம் தவந்தான் யாதோ?' என்று சிலர் வியப்பார்கள்.

கு :—"வைகலு மனையான் பேரினல் வருமிடையுறு பெயர்கின்ற பயத்தால்" (1437) என்றதற்கு விளக்கமாகப் "பாவமும் அருந்துயரும் வேர் பறியும் என்பார்" என்றார். இராமன் ஆட்சியில் எல்லோரும் இந் நாட்டு மன்னர்போல நன்மையெய்துவர் என்னும் கருத்தால், "தனி யன்று; பொது" என்றனர். "தத்தமக்குற்ற அரசெனத் தழைக்கின்ற மனத்தார்" (1474) என்றதும் காண்க. மக்கள்பகையைத் தெறுவதே யன்றித் தேவர்பகையும் தெறத்தக்க வீரத்தோற்றங் கண்டு கூறிய வர்கள் எதிர்காலவுணர்வுடன் கூறினராவர் என்பது இராவணவதத்தால் அறியலாம். இராமனுக்கு ஏவல் செய்யும் வாய்ப்புத் தவத்தாலன்றி வாராது என்னுங் கருத்தும் அத்தவம் இன்னதெனத் தெரியின் தாமும் அது செய்து அவனுக்கு ஏவல் செய்யும் வாய்ப்பைப் பெறலாம் என்ற குறிப்பும் தோன்ற 'ஏவல் செயு மன்னர் தவம் யாவது கொல்' என்றார். "சீதை யெத்தவம் செய்தனளோ வென்றுள்" (1171) என்றது இங்கு ஒப்புநோக்கத்தகும். (102)

1682. ஆண்டினைய ராயினைய கூறவடல் வீரன்
தூண்டுபுர விப்பொருவில் சுந்தர மணித்தேர்
நீண்டகொடி மாடநிரை வீதிநிறை யப்போய்ப்
பூண்டபுகழ் மன்னனுறை கோயில்புக லோடும்.

ஆண்டு இனையராய் இனைய கூற, அடல் வீரன்,
தூண்டு புரவிப் பொரு இல் சுந்தர மணித் தேர்
நீண்ட கொடி மாட நிரை வீதி நிறையப் போய்ப்,
பூண்ட புகழ் மன்னன் உறை கோயில் புகலோடும்.

பொ :—அவ்விடத்து நகரமக்கள் இத்தன்மையராய் இத்தகைய சொற்களைச் சொல்லாநிற்க, வெற்றிவீரனாகிய இராமன் சுமந்திரனால் தூண்டப்பட்ட குதிரைகள் பூட்டிய ஒப்பற்ற அழகிய மணிகள்கட்டியுள்ள தேரில் நீண்ட கொடிகளையுடைய மாடங்களின் வரிசையையுடைய தெரு நிறைவு எய்துமாறு சென்று புகழாகிய அணிகலனைப் பூண்ட தயரதன் தங்கும் அரண்மனையில் புகுந்த அளவில்.

கு :—இனைய, குறிப்புப் பெயர். கொடி கட்டிய மாடம் என்க. நிரை - வரிசை. மன்னர் புடைசூழத் தேரில் இராமபிரான் சென்றபோது வீதி நிறைவு எய்தியதாகக் காணப்பட்டது. புகழ் பூண்ட என்றமையால், புகழாகிய அணி எனக் குறிப்புருவகமாக்கிக் கூறினார் என்பது அறிக. மன்னன் - தயரதன். (103)

" இதன்பின் ஒரு பிரதியில், 'மன்பதை மகிழ்ச்சிப் படலம் முற்றும்' என்ற தொடர் காணப்படுகின்றது " என்று 45-ல் உள்ளது.

அரண்மனையில் அரசனைக் காணாமை

1683. ஆங்குவந் தடைந்த வண்ண
★ லாசையின் கவரி வீசப்
பூங்குழல் மகளி ராடும்
புதுக்களி யாட்ட நோக்கி
வீங்கிருங் காதல் காட்டி
விரிமுகக் கமல பீடத்
தோங்கிய மகுடஞ் சூடி
யுவகைவீற் றிருப்பக் காணான்,

ஆங்கு வந்து அடைந்த அண்ணல், ஆசையின் கவரி வீசப்,
பூங்குழல் மகளிர் ஆடும் புதுக் களி ஆட்டம் நோக்கி,
வீங்கு இரும் காதல் காட்டி, விரி முகக் கமல பீடத்து
ஓங்கிய மகுடம் சூடி, உவகை வீற்றிருப்பக் காணான்.

பொ:—அவ்வரண்மனையிடத்து வந்துசேர்ந்த இராமன், இரு புறமும் கவரி வீசாநிற்க, மலர் அணிந்த கூந்தலையுடைய பெண்டிர் ஆடுகின்ற புதிய களிப்புமிக்க ஆடலைப் பார்த்துக்கொண்டு, ஆடலில் மிகப் பெரிய விருப்பம் தனக்கு உண்டு என்பதைத் தலையசைத்தல் முதலியவற்றால் காட்டிக் கொண்டு, சிங்கம் சுமந்த தாமரைத் தவிசில் உயர்ந்த மணிமுடி சூடிக்கொண்டு மகிழ்ச்சியுருவாய்த் தந்தை வீற்றிருப்பதைக் காணாதவனாகி.

கு:—எய்தானைப் புக்கான் என அடுத்த செய்யுளில் முடியும்; குளகம். ஆசை – திசை; இங்கு இருபுறங்களை யுணர்த்திற்று. அரண் மனையில் தயரதனிருந்திருந்தால் அவனிருக்கும் நிலையைக் கற்பனை செய்தவாறு. வீங்கிருங்காதல் காட்டுதல் துறவு பூணும் நிலையிலுள்ள தயரதற்குப் பொருந்தாமை யறிக. விரிமுகம் - சிங்கம்; விரிந்த முகமுடைமையால் வந்த பெயர். சிங்கத்தையுணர்த்தும் பஞ்சானனம் என்ற வட சொல்லிற்குப் பொருள் 'விரிமுகம்' என்பதே ஆகலின் அப்பெயரால் குறித்தார். சிங்கத்தால் சுமக்கப் பெற்றுத் தாமரை மலர் போன்ற அமைப்புடைய ஆசனம் என்பது தோன்ற "விரிமுகக் கமல பீடம்" என்றார். தயரதனுடைய மகிழ்ச்சி மிகுதியைப் புலப்படுத்த வேண்டி 'உவகை வீற்றிருப்ப' எனக் குணியைக் குணமாக்கிக் கூறினர். கவரிவீச, நோக்கி, காட்டி, சூடி, பீடத்து வீற்றிருப்பக் காணான் என்று இயைக்க. காணான், முற்றெச்சம். 'சிற்றவை தானுமாங்கே கொணர்கெனச் செப்பினள்' எனச் சுமந்திரன் சொல்லக் கேட்ட இராமன், தயரதனுடன் அரண்மனையில் அவள் இருப்பதாக எண்ணினான் ஆகலின் மன்னன் கோயிலில் புகுந்தான் எனவும், அங்குத் தயரதன் வீற்றிருப்பக் காணாமையால் அடையாதவனாய்ச் சிற்றவை கோயில் புக்கான் எனவும் கொள்க. (104)

ஒரு பிரதியில் இச்செய்யுள் முதல் 1723-ஆம் செய்யுள் வரையுள்ள பகுதி 'விடைபெறு படலம்' என்ற தலைப்பின் கீழ்க் காணப்படுவதாக 45-ல் உள்ளது.

## இராமன் கைகேயியின் கோயில் புகுதல்

1684. வேத்தவை முனிவ ரோடு
விருப்பொடு களிக்கு மெய்ம்மை
ஏத்தவை யிசைக்குஞ் செம்பொன்
மண்டப மினிதி னெய்தான்
ஓத்தவை யுலகத் தெங்கு
முள்ளவை யுணர்ந்தா ருள்ளம்
பூத்தவை வடிவை யொப்பான்
சிற்றவை கோயில் புக்கான்.

வேத்து அவை முனிவரோடு
விருப்பொடு களிக்கும், மெய்ம்மை
ஏத்து அவை இசைக்கும், செம்பொன்
மண்டபம் இனிதின் எய்தான்
ஓத்து அவை உலகத்து எங்கும்
உள்ளவை உணர்ந்தார் உள்ளம்
பூத்தவை வடிவை ஒப்பான்
சிற்றவை கோயில் புக்கான்.

பொ:—அரசரவை முனிவர்குழுவோடு விருப்புடன் சேர்ந்து களிக்கும் இயல்புடையதும் உண்மைப் புகழ்களையே சொல்லுதற்குரியதும் ஆகிய செம்பொன்னால் இயன்ற மண்டபத்தை இனிதே அடையாதவனாய், உலகத்து எங்கும் உள்ளனவாகிய ஞான நூல்களையெல்லாம் உணர்ந்த ஞானிகளின் உள்ளத்தில் தோன்றிய வடிவங்களை உடன்பட்டு மேற்கொள்கின்ற இராமன் சிற்றவையின் கோயிலில் புகுந்தான்.

கு:—அரசர், முனிவரோடு கலந்துபழகும்வாய்ப்பு முடிபுனைவிழாவில் பெற்றமையால் விருப்பொடு களிப்பாராயினர். மெய்ம்மை ஏத்து-உண்மைப் புகழ்ச்சி. அவை பின்னீரிடத்தும் பகுதிப் பொருள் விகுதி. களிக்கும் மண்டபம், இசைக்கும் மண்டபம் என்க. இது அரண்மனையின் உட்பகுதியில் உள்ளது. எய்தான், முற்றெச்சம். ஓத்து-ஞான நூல். உணர்ந்தார் - ஞானிகள். அவர்கள் உள்ளம் விரும்பிய வடிவே தனக்கு வடிவாகக்கொள்பவன் இராமன் என்பது புலப்பட, 'உணர்ந்தாருள்ளம் பூத்தவை வடிவை யொப்பான்' என்றார். "தமருகந்த தெவ்வுருவம் அவ்வுருவந்தானே" (இயற்பா 1-44) என்பது இங்கு ஒப்புநோக்கத் தகும். பூத்தவையாகிய வடிவம் என்க. இனி, 'பூத்த ஐவடிவை யொப்பான்' எனக்கொண்டு, 'பரம், வியூகம், விபவம், அந்தர்யாமி, அர்ச்சை என்ற ஐந்து வடிவங்களையும் ஒருதன்மையாகக்

கருதி இருக்கின்றவன்' என்று பொருள்கொள்ளலுமாம். உயர்வு தாழ்வு கருதாமல் அவ் வைந்துநிலையிலும் ஒப்ப இருப்பவன் எனவே தயரதன் கோயிலையும் கைகேயிகோயிலையும் ஒப்பக் கருதும் அவன் பெருந்தன்மை புலப்படும். (105)

### மக்கள் பேச்சு

1685. புக்கவன் றன்னை நோக்கிப்
புரவலர் முனிவர் யாரும்
தக்கதே நினைந்தான் ருந்தை
தாமரைச் சரணஞ் சூடித்
திக்கினை நிமிர்த்த் கோலச்
செல்வனே செம்பொற் சோதி
மிக்குயர் மகுடஞ் சூட்டச்
சூடுதல் விழுமி தென்றார்.

புக்கவன்தன்னை நோக்கிப் புரவலர், முனிவர் யாரும்
'தக்கதே நினைந்தான்; தாதை தாமரைச் சரணம் சூடித்
திக்கினை நிமிர்த்த கோல் அச் செல்வனே செம் பொன் சோதி
மிக்கு உயர் மகுடம் சூட்டச் சூடுதல் விழுமிது' என்றார்.

பொ:—புகுந்த இராமனைப் பார்த்து மன்னரும் முனிவரும் மற்றவர்களும், "தகுதியான செயலையே இராமன் நினைந்தான்; தந்தையின் தாமரைமலர்போன்ற பாதங்களைத் தலையிற் சூடி வணங்கிப், பத்துத் திக்கிலும் உள்ள கொடுமைகளைப் போக்கிச் செம்மையாக்கிய செங்கோலையுடைய அத்தயரதனே செம்பொன்னால் இயன்றதாய் ஒளி மிகுந்து உயர்ந்த முடியைச் சூட்டத் தான் சூடிக்கொள்ளுதலே சிறந்தது" என்று கூறினார்கள்.

கு:—புக்கவன், வினையாலணையும் பெயர். புரவலர், உலகம் காத்தலில் வல்ல மன்னர். யாரும் என்றது, மற்றுள்ளோரை யெல்லாம் எஞ்சாமல் உணர்த்திற்று. உம்மை, முற்றுமை. தக்கது என்றது, தந்தையை முன் வணங்குதலை. தயரதன் என்ற பெயர்க்காரணம் தோன்றத் "திக்கினை நிமிர்த்த கோல் அச்செல்வனே" என்றார். செல்வனே என்புழி, ஏகாரம் பிரிநிலை. கோல் அச்செல்வனே சூட்டச் சூடுதல் விழுமிது என்றது, அறுபதினாயிரம் ஆண்டுகள் ஆண்டு கைவந்தவன் கையில் சூட்டப்படுதலால் அவன்போலவே திக்கினை நிமிர்த்து நெடுங்காலம் ஆள்வரன் என்பது கருதி. (106)

## இராமன்முன் கைகேயி வருதல்

1686. ஆயன நிகழும் வேலை
யண்ணலு மயர்ந்து தேருத்
தூயவ னிருந்த சூழ
றுருவினன் வருத னோக்கி
நாயக னுரையான் வாயா
னுனிது பகர்வே னென்னுத்
தாயென நினைவான் முன்னே
கூற்றெனத் தமியள் வந்தாள்.

ஆயன நிகழும் வேலை, அண்ணலும் அயர்ந்து தேருத், தூயவன் இருந்த சூழல் துருவினன் வருதல் நோக்கி, 'நாயகன் உரையான் வாயால், நான் இது பகர்வேன்' என்னுத் தாய் என நினைவான் முன்னே கூற்று எனத் தமியள் வந்தாள்.

பொ :—அத்தன்மையான சொற்கள் பேசப்படும் அமயத்தில் இராமனும், (தந்தையை வழக்கமான இடத்தில் இருக்கக் காணாமை யால்) மனம் சோர்ந்து பின் தெளிந்து, தூயவனாகிய தயரதன் இருக்கும் இடம் எதுவோ எனத் தேடிக்கொண்டுவருதலைக் கைகேசி பார்த்து, "நாயகனாகிய தயரதன் வாயால் சொல்லமாட்டான்; நானே இதைச் சொல்லுகின்றேன்" என்று தன்னைத் தாய் என்று எண்ணு கின்ற இராமனுக்கு முன் எமன்போலத் தனியளாய் வந்தாள்.

கு :—வேலை - வேளை. பழகிய இடத்தில் காணாமையால் அயர்ச்சி யும் வேறிடத்தில் காணலாம் என்ற துணிவால் தெளிவும் இராம னுக்கு நிகழ்ந்தன. வாய்மையிற் சிறந்தவன் ஆதலின் தயரதன் தூயவன் எனப்பட்டான். "அகந் தூய்மை வாய்மையாற் காணப் படும்" (திருக்குறள்–298) என்பதால் தூய்மைக்குக் காரணம் வாய்மை யாதல் அறியலாம். தேரு-தேறி; செய்யாவென்னும் வாய்பாட்டு வினையெச்சம். தேருத் தூயவன் என இயைத்து ஈறுகெட்ட எதிர் மறைப் பெயரெச்சமாக்கி, மூர்ச்சையுற்றுத் தெளியாத தயரதன் என்று பொருள் கூறலுமாம். துருவினன், முற்றெச்சம். துருவுதல் - தேடுதல். வாயால் உரையான் என்றது, இனிய உரையே பேசிப் பழகிய வாயால் இன்னா உரை கூறான் என அவன் அன்புடைமையைப் புலப்படுத்தியவாறு. இது என்றது, பரதன் நாடு ஆள இராமன் காடு ஆளச் செய்தலை. தாய் என்று அன்புகாட்டும் இராமன் எதிரே எமன் என வன்புகாட்டத் தனியே வந்தாள் என்க. உயிர் ஈபவள் தாயாதலையும் உயிர்வாங்குபவன் கூற்றுவன் ஆதலை யும் நினைக்க. உயிரையும் உடம்பையும் கூறுபடுத்துப் பிரிப்பவன்

கூற்றுவன். கைகேயி தயரதன் உயிர் பிரிதற்குக் காரணமாக இருத்தலாலும் உயிர்போன்ற இராமனை உடம்பனைய தயரதனிடத்தில் பிரிக்கின்ற காரணத்தாலும் 'கூற்றென...வந்தாள்' என்றார். இராமனை வரவேற்கத் தயரதனோடு வாராமல் தனித்து வந்தமையால், 'தமியள் வந்தாள்' என்றார். கொடுமையில் தனக்கு ஒப்பாரின்மையின் தனித்தன்மையோடு வந்தாள் என்றலுமாம். தாயெனநினைவான் என்பதற்கு, 'உலகத்தவரால் தாயெனநினையப்படுபவனாகிய இராமன்' எனலுமாம். (107)

### இராமன் கைகேயியை வணங்கி நிற்றல்

1687. வந்தவ டன்னைச் சென்னி
மண்ணுற வணங்கி வாய்த்த
சிந்துரப் பவளச் செவ்வாய்
செங்கையிற் புதைத்து மற்றைச்
சுந்தரத் தடக்கை தானை
மடக்குறத் துவண்டு நின்றான்
அந்திவந் தடைந்த தாயைக்
கண்டவான் கன்றி னன்னான்.

வந்தவள் தன்னைச் சென்னி
மண் உற வணங்கி, வாய்த்த
சிந்துரப் பவளச் செவ்வாய்
செங்கையில் புதைத்து, மற்றைச்
சுந்தரத் தடக்கை தானை
மடக்குறத், துவண்டு நின்றான்;
அந்தி வந்து அடைந்த தாயைக்
கண்ட ஆன் கன்றின் அன்னான்.

பொ :—மாலையில் வந்துசேர்ந்த தாய்ப்பசுவைக் கண்ட பசுவின் கன்று போன்ற அன்புள்ளமுடைய இராமன், வந்த கைகேயியைத் தலை தரையில் பொருந்த வணங்கித் தனக்குச் சிறப்பாக வாய்த்துள்ள சிந்துரத்தையும் பவழத்தையும் ஒத்துச் சிவந்த வாயை ஒரு கையால் மூடிக்கொண்டு மற்றைய அழகிய பெரிய கை தானையை மடக்கா நிற்க வணக்கத்துடன் நின்றான்.

கு :—வந்தவள், வினையாலணையும் பெயர். பிறர்க்கில்லாத செவ்வாய் இராமனுக்கு இருத்தலின், 'வாய்த்த செவ்வாய்' என்றார். சிந்துர

மும் பவளமும் செவ்வாய்க்கு உவமை. வாய்புதைத்தலும் தானே மடக்கலும் நிமிர்ந்து நில்லாமல் வளைந்து நிற்றலும் அடக்கத்திற்கு அறிகுறி. உடுக்கை யிழந்தவன் கைபோல், பழக்கத்தால் கைதானே சென்று தானே மடக்கிற்று என்பது தோன்ற, 'கைமடக்குற' எனக் கையின் வினையாகக் கூறினர். துவளுதல், நிமிர்ந்துநில்லாது வளைந்து தளர்வு தோன்ற நிற்றல். அந்தி - மாலை. விடுநிலமருங்கிற் படுபுல் லாரச் சென்ற பசுக்கள் வருங்காலம் அதுவாகலின், 'அந்தி வந்தடைந்த தாயை' என்றார். காலை போய் மாலை வரும் பசுவைப் பகல் முழுதும் பிரிந்திருந்த கன்று கண்டு மகிழ்ச்சி மீக்கூர்தல் இயல்பு. ஆயிரமவுலியான் கோயிலில் நோன்பு மேற்கொண்டமையால் காணாதிருந்த தாயை இன்று கண்டு இராமன் கொண்ட மகிழ்ச்சிக்குக் கன்றின்மகிழ்ச்சி பொருந்திய உவமையாதல் காண்க. தாயுள்ள இடத்திற்கு இராமன் செல்லுமுன் கைகேயியே இராமன் உள்ள இடத்தில் வருதலின் அந்திவந்தடைந்த தாய் உவமையாயிற்று. (108)

## கைகேயி கூற்று

1688. நின்றவன் றன்னை நோக்கி
யிரும்பினு லியன்ற நெஞ்சிற்
கொன்றுழல் கூற்ற மென்னும்
பெயரின்றிக் கொடுமை பூண்டாள்
இன்றெனக் குணர்த்த லாவ
தேயதே யென்னி னுகும்
ஒன்றுனக் குந்தை மைந்த
வுரைத்ததோ ருரையுண் டென்றுள்.

நின்றவன் தன்னை நோக்கி
இரும்பினல் இயன்ற நெஞ்சின்
கொன்று உழல் கூற்றம் என்னும்
பெயர் இன்றிக் கொடுமை பூண்டாள்,
'இன்று எனக்கு உணர்த்தல் ஆவது
ஏயதே என்னின் ஆகும்;
ஒன்று உனக்கு உந்தை, மைந்த!
உரைத்தது ஓர் உரை உண்டு' என்றுள்.

பொ :—நின்ற இராமனைப் பார்த்து இரும்பினல் இயன்றது போன்ற நெஞ்சினேடு, உயிர்களைக் கொன்று திரிகின்ற கூற்றுவன் என்ற பெயர் இல்லாமல் அவனுடைய கொடுமையைமட்டும் உடையவளாகிய

கைகேயி, 'மைந்த! உன் தந்தை உனக்கு உரைத்ததாகிய ஒப்பற்ற வார்த்தை ஒன்று உண்டு; இப்பொழுது அதை உனக்கு உணர்த்துவது எனக்குப் பொருந்தும் என்றால் யான் சொல்லுதல் கூடும்' என்றாள்.

கு:—நின்றவன், வினையாலணையும் பெயர். நெஞ்சின் வன்மை புலப்பட 'இரும்பினாலியன்ற நெஞ்சு' என்றார். "இரும்புதரு மனத்தேனை" (திருவா-544) என்றதும் காண்க. நெஞ்சினையும் கொடுமையையும் உடையவள் என்க. கொலைத் தொழில் செய்யும் கூற்றத்தின் கொடுமையைமட்டும் மேற்கொண்டு அவன் பெயரை விலக்கி விட்டாள் என்றது, பெண்பாலாய்ப் பெயர் வேறு பெற்றிருத்தலின். 'பெண்டிரிற் கூற்ற மன்னாள்' (1662) என்றதும் காண்க. 'தாய் சொல் ஏற்கத்தக்கது' என்று அவன் கொள்ளவேண்டி மைந்த என் முறைப் பெயரால் அழைத்தாள்; மைந்தன் என்ற எண்ணம் அவளுக்கு உண்மையாக இருப்பின் இராமனைக் காடுபுகுத்தாள் அன்றே? உந்தை - உன் தந்தை. தான் சொல்லும் கருத்து, கொடுமையானதாகலின் அதை விரைந்துகூறாது காலம் தாழ்த்தவேண்டிப் பலசொல் இடைப் பெய்து பேசும் திறம் பின்னிரண்டடிகளில் காணலாம். 'ஏயதே' என்பதற்குத் 'தயரதன் ஏவியது' என்றும் பொருள் கூறுவர். (109)

### இராமன் கூறுதல்

**1689.** எந்தையே யேவ நீரே
யுரைசெய வியைவ துண்டேல்
உய்ந்தன னடியே னென்னிற்
பிறந்தவ ருளரோ வாழி
வந்ததென் றவத்தி னாய
வருபயன் மற்றொன் றுண்டோ
தந்தையுந் தாயு நீரே
தலைநின்றேன் பணிமி னென்றான்.

"எந்தையே ஏவ, நீரே
உரைசெய இயைவது உண்டேல்,
உய்ந்தனன் அடியேன்; என்னில்
பிறந்தவர் உளரோ? வாழி!
வந்தது என் தவத்தின் ஆய
வரு பயன் மற்று ஒன்று உண்டோ?
தந்தையும் தாயும் நீரே;
தலைநின்றேன் பணிமின்!" என்றான்.

பொ :—'என் தந்தையே கட்டளையிடத் தாயாகிய நீரே அதை எனக்குச் சொல்லுமாறு வாய்த்தது ஆயின், அடியேன் ஈடேறி விட்டேன்; என்னைப் போலப் பிறந்த பயன் எய்தினவர் இவ்வுலகில் உளரோ? இலர்; என் முன்னைத் தவத்தினுல் வரக்கடவதாய பயன் வந்துவிட்டது; இனி வரக்கடவ பயன் வேறென்று உண்டோ? இல்லை. என் தந்தையும் தாயும் நீரே ஆவீர்; உங்கள் சொல்லைத் தலைமேற் கொண்டுநின்றேன்; சொல்லுங்கள்!' என்றான் இராமன்.

கு :—'நீர்' என்றது உயர்த்தற்கண்வந்த பன்மைச்சொல். தந்தை பணியும் தாய்பணியும் ஒருங்குசெய்யும் வாய்ப்புப் பெறல் அரிதாகலின் 'உய்ந்தனன்' என்றான். பெற்றோர் ஏவியபணி புரிதலே பிறவிப் பயன் ஆதலின் அதைப் பெற்ற இராமன் 'என்னிற் பிறந்தவருளரோ' என்றான். வாழி, முன்னிலையசை. இந்த வாய்ப்பு வாழ்வதாக' எனினுமாம். 'தவத்தினுய பயன்' எனவும் 'வருபயன்' எனவும் இரண்டாக்குக. 'பயன்' இடைநிலைவிளக்கு. பெற்றோர் சொல் பணி செய்தலே தவப்பயன் ஆதலின் இப்பயனுக்கு மேலாக வரும் பயன் இல்லை என்பது கருத்து. தந்தையின் சொல்லைத் தந்தை நிலையில் இருந்து சொல்வதால் தந்தையும் ஆயினுள் கைகேயி. விரைவுபற்றி 'நிற்பேன்', என்னுது நின்றேன் என இறந்த காலத்தால் கூறினுன். தலைநிற்றல்-தலைமேற்கொண்டுநிற்றல். (110)

## கைகேயி கட்டளை இதுவெனல்

1630. ஆழிசூ ழுலக மெல்லாம்
பரதனே யாள நீபோய்த்
தாழிருஞ் சடைக டாங்கித்
தாங்கருந் தவமேற் கொண்டு
பூழிவெங் கான நண்ணிப்
புண்ணியத் துறைக ளாடி
ஏழிரண் டாண்டின் வாவென்
றியம்பின னரச னென்றாள்.

"'ஆழி சூழ் உலகம் எல்லாம்
பரதனே ஆள, நீ போய்த்
தாழ் இரும் சடைகள் தாங்கித்,
தாங்கருந்தவம் மேற்கொண்டு,

பூழி வெம் கானம் நண்ணிப்,
புண்ணியத் துறைகள் ஆடி,
ஏழ் இரண்டு ஆண்டின் வா' என்று
இயம்பினன் அரசன்'' என்றாள்.

பொ :—"'கடல் சூழ்ந்த உலகமுழுவதையும் பரதனே ஆண்டு கொண்டிருக்க, நீ சென்று நீண்ட பெரிய சடைகளைத் தாங்கிக் கொண்டு பிறரால் தாங்குதற்கரிய தவவேடத்தை மேற்கொண்டு புழுதியை யுடைய விரும்பத்தக்க கானகத்தை அடைந்து அங்குள்ள புண்ணிய தீர்த்தங்களில் நீராடி மகிழ்ந்திருந்து பதினான்கு ஆண்டிற்குப் பின் இங்குத் திரும்பிவா' என்று சொன்னான் அரசன்" என்று சொன்னாள்.

கு :—உலகம் என்றது இங்குத் தயரதன் ஆட்சிக்குட்பட்ட இராச்சியத்தை. 'பரதனே' என்புழி ஏகாரம் பிரிநிலை ; பிறர்க்குப் பொதுவின்றி ஆள என்பது கருத்து. தாழ்தல் - புறத்தே நீண்டு தொங்குதல். சடைகள் தாங்கி என்றது, தவக்கோலத்திற்காகச் சடையை நீட்ட வேண்டும் என்பது கருதி. தவவேடம் தாழ்சடையுடையதாகவே இன்றும் கருதப்படுகின்றது. பண்டும், இல்வாழ்க்கையில் மகிழ்ந் திருந்த ஒருவன் தவம் மேற்கொண்டதைக் கூறுங்கால், "மகளிர், இழை நிலை நெகிழ்த்த மள்ளற் கண்டிகும்......புறந்தாழ் புரிசடை புலர்த்து வோனே" (புறநா-251) எனத் தாழ்சடையைச் சிறப்பாக எடுத்துக் கூறியிருத்தல் காண்க. தவத்தை மேற்கொள்ளத்தக்க ஆற்றலுடை யவன் நீயே என்பது தோன்றத் 'தாங்கருந்தவம் மேற்கொண்டு" என்றார். 'தாங்கித் தாங்கரும்' என்ற முரண் தொடை காண்க. நடத்தற்கு இனிமையான வழி என்பாள், 'பூழிவெங்கானம்' என்றாள். "வெம்மை" இங்கு விருப்பம் என்னும் பொருளது. 'வெம்மை வேண்டல்' (தொல்-சொல்-334) என்றது காண்க. காட்டிற்குப் போக உடன்படுத்து கின்றவள் 'கொடியகானம்' எனல் பொருந்தாமை யறிக. தம்மிடத்து மூழ்கினார்க்குப் புண்ணியப் பயனையுண்டாக்குகின்ற நீர்த்துறைகளையே 'புண்ணியத்துறை' என்றார். ஆடுதல் - மூழ்குதல். இராமன் நீராடிப் புண்ணியப்பயன் பெறவேண்டும் என்ற எண்ணத்தால், காட்டிற்கு அனுப்புவதாக எண்ணுமாறு இங்ஙனம் கூறினாள். பதினான்கு என்னாது 'ஏழிரண்டு ஆண்டு' என்றது, காலம் குறைந்து தோன்றுதற்கு. இங்ஙனம் கூறும் மரபு, முப்பது காவதத்தை, "ஆறைங்காதம் நம் மகனாட்டும்பர்" (சிலப்–நாடுகாண்-42) எனக் குறைவாகத் தோன்று மாறு கண்ணகிக்குக் கோவலன் கூறியதாலும் உணரலாம். தன் கருத்தேயாயினும் அரசன் கொடுத்த வரத்தின்படி கூறுகின்றாள் ஆதலின் தன் கட்டளை அன்று என்பாள்,'இயம்பினன் அரசன்' என்றாள். தவறாது செய்ய வேண்டிய கட்டளை என்பாள் தந்தை யென்னாது, "அரசன்" என்றாள். (111)

## கவிக் கூற்று (1691-1692)

1691. இப்பொழு தெம்ம ளுேரா
லியம்புதற் கெளிதே யாரும்
செப்பருங் குணத்தி ராமன்
றிருமுகச் செவ்வி நோக்கில்
ஒப்பதே முன்பு பின்பவ்
வாசக முணரக் கேட்ட
அப்பொழு தலர்ந்த செந்தா
மரையினே வென்ற தம்மா.

இப்பொழுது எம் அனேரால்
இயம்புதற்கு எளிதே! யாரும்
செப்ப(அ)ரும் குணத்து இராமன்
திருமுகச் செவ்வி நோக்கில்
ஒப்பதே முன்பு; பின்பு அவ்
வாசகம் உணரக் கேட்ட
அப்பொழுது அலர்ந்த செந்தா
மரையினே வென்றது அம்மா!

பொ:—எத்தகையறிஞரும் சொல்லுதற்கு அரிய பெருங்குணங்களையுடைய இராமனுடைய திருமுகத்தின் அழகை இப்பொழுது நோக்கினுல் எம் போன்றவரால் புகழ்ந்து சொல்லுதற்கு எளியதோ? அன்று; முன்பு அவன் முகம், அப்பொழுது மலர்ந்த செந்தாமரையினே ஒப்பதே ஆம்; அந்தக் கைகேயியின் வாசகத்தை நன்கு கேட்ட பின்பு அச்செந்தாமரை மலரை வென்றது; என்னே வியப்பு!

கு:—இப்பொழுது நோக்கில் என்று இயைக்க. யாரும் என்புழி உம்மை உயர்வுசிறப்பு. குணத்தின்சிறப்பிற்கு ஏற்றவாறே முக அழகும் அமைவது இயல்பு என்பது தோன்ற, "செப்பருங் குணத் திராமன் திருமுகச் செவ்வி" என்ருர். இதனல் அவன் குணக்கடல் என் பதும் புலனும். செவ்வி - அழகு. எளிதே என்புழி ஏகாரம் எதிர்மறைப் பொருளது. 'சிற்றன்னேயின்சொல் கேட்குமுன்பு என்றும் கேட்டபின்பு என்றும் இயைக்க. போது, அலர்ந்தவுடன் பேரழகுடையதாதலும் பின் காலம் கழியக் கழிய அம்மலரின் அழகு குறைந்துகொண்டே வருதலும் இயல்பு. சிற்றன்னேயின்சொல் கேட்குமுன்பு இராமன் முகத்திற்கு ஒப்பாவது அப்பொழுது மலர்ந்த புதுமலரே. ஒப்பதே - ஒப்பதாகிய முகமே என வினையாலணையும்பெயராக்கலுமொன்று. 'எம்மனேரால் இயம்புதற் கெளிதே' என்றது தம் தாழ்வு தோன்ற

அவையடக்கமாகக் கூறப்பட்டது. இதனால் இராமன் திருமுகச் செவ்வி பெருமையுறுகின்றது. 'அம்மா' வியப்பிடைச்சொல்; உரையசையும் ஆம். நாடாளுதலை விடுத்துக் காடேகச் சொல்லுங்கால் துன்புறுதலே மக்கள் இயற்கையாகும்; இராமனோ இதற்கு மாறாக முன்னையினும் மகிழ்ச்சியினால் மிகுதியாக முகமலர்ச்சி கொண்டான் என்பது கருத்து. அவன் மகிழ்ச்சிக்குக் காரணம் வரும் செய்யுளில் விளக்கப்படுகின்றது (112)

1692. தெருளுடை மனத்து மன்ன
னேவலிற் றிறம்ப லஞ்சி
இருளுடை யுலகந் தாங்கு
மின்னலுக் கியைந்து நின்றான்
உருளுடைச் சகடம் பூட்ட
வுடையவ னுய்த்த காரே
றருளுடை யொருவ னீக்க
வப்பர மகன்ற தொத்தான்.

தெருள் உடை மனத்து மன்னன்
ஏவலில் திறம்பல் அஞ்சி
இருள் உடை உலகம் தாங்கும்
இன்னலுக்கு இயைந்து நின்றான்,
உருள் உடைச் சகடம் பூட்ட
உடையவன் உய்த்த கார் ஏறு
அருள் உடை ஒருவன் நீக்க
அப்பரம் அகன்றது ஒத்தான்.

பொ:—தெளிவுள்ள மனத்தையுடைய அரசன் கட்டளைக்கு மாறுபட அஞ்சி, அறியாமையாகிய இருளையுடைய உலகத்தைக் காக்கின்றதாகிய துன்பமிக்க பதவிக்கு உடன்பட்டவனாகிய இராமன், சக்கரத்தையுடைய வண்டியில் பூட்ட வேண்டித் தலைவனால் செலுத்தப் பெற்ற கரிய எருது, இடையில் வந்த அருளாளன் ஒருவன் அவ்வண்டியில் தன்னைப் பூட்டாமல் நீக்குதலால் அப்பாரம் நீங்கப் பெற்றதை ஒத்த மகிழ்ச்சியுடையவனானான்.

கு:—திறம்புதல் - மாறுபடுதல். தெருள் - அறிவினாலாய தெளிவு. அஞ்சுதற்குக் காரணம், மன்னன் ஏவல் என்பதுமட்டும் அன்றித் தெருளுடை மனத்தன் ஏவல் என்பதும் ஆம். "யானே சொல்லக் கொள்ள இசைந்தான்." (1610) எனத் தயரதனே கூறியிருத்தல்

காண்க. தெளிவுடைய உலகமாயின் காப்பது எளிது; அறியாமை யுடைய உலகமாதலின் இயல்பாக நிகழும் நிகழ்ச்சிக்கும் மன்னனே காரணமாவன் என அரசனைத் தூற்றும் என்பது தோன்ற, 'இருளுடை யுலகந்தாங்கும் இன்னல்' என்றார். "மாரி பொய்ப்பினும் வாரி குன்றினும் இயற்கையல்லன செயற்கையில் தோன்றினும், காவலர்ப் பழிக்குமிக் கண்ணகன் ஞாலம்" (புறநா-35) என்பதும், "மன்பதை காக்கும் நன்குடிப்பிறத்தல் துன்பமல்லது தொழுதகவில்லை" (சிலப்-காட்சி-103, 104) என்பதும் இங்கு நினைக்க. 'இருளுடையுலகம்' என்ப தற்குத் தெருளுடையாரையும் மருளப் பண்ணும் உலகம் என்று கூறலு மாம். பொறிகட் கிருளீயும் ஞாலம்" (பு-வெ-230) எனவும், "மயக்கிய பட்படாடவைகும் பயன் ஞால நீள் வலை" (பு-வெ-188) எனவும் ஞாலம் மயக்கத்தைத் தருவதாகக் கூறியிருத்தல் காண்க. அஞ்சி இயைந்து நின்றான் என்க. நின்றான், வினையாலணையும் பெயர். உருள்-சக்கரம். சகடம்-வண்டி. உடையவன் என்றது எருதுடையவனை. ஏறு என்னாது 'காரேறு' என்றார், நிறத்தானும் இராமனுக்கு உவமை யாதல் வேண்டி. காரேறு எருமையுமாம். முடி சூட மன்னன் ஆணைப்படி செல்லும் இராமனுக்குச் சகடம் பூட்ட உடையவன் உய்த்த காரேறு உவமை; கைகேயி இராமனை நாடாளாமல் காடேகச் செய்தமைக்கு அருளுடை ஒருவன் விலக்குதல் உவமை. வண்டியின் பாரத்தை இழுத்த லில் நின்று தப்பி மகிழ்ந்த ஏறு, அரசபாரம் நீங்கப் பெற்று மகிழ்ந்த இராமனுக்கு உவமை. மேல் அப்பொழுதலர்ந்த செந்தாமரை மலரும் தோல்வியுறும்படி முகம் மலர்ச்சியுற்றமைக்குக் காரணம் கூறியவாறு. "அருந்துயர்ப் பெரும்பரம் அரசன் வினையின் என்வயின் வைத்தனன் எனக் கொள வேண்டா" (1467) என்புழியும் அரசைப் "பெரும்பரம்" எனவே குறித்திருத்தல் காண்க. 'சகடம் பூண்ட' எனவும், 'அப்பிணி' எனவும் பாடங் கொண்டு ஏற்ப உரைத்தலும் உண்டு. (113)

## இராமன் விடைபெறுதல் (1693-1694)

**1693.** மன்னவன் பணியன் றாகி
னும்பணி மறுப்ப னோவென்
பின்னவன் பெற்ற செல்வ
மடியனேன் பெற்ற தன்றோ
என்னினி யுறுதி யப்பா
லிப்பணி தலைமேற் கொண்டேன்
மின்னொளிர் கான மின்றே
போகின்றேன் விடையுங் கொண்டேன்.

'மன்னவன்பணியன்ருகில்
நும் பணி மறுப்பனோ? என்
பின்னவன் பெற்ற செல்வம்
அடியனேன் பெற்றது அன்ரோ?
என் இனி உறுதி அப்பால்?
இப்பணி தலைமேல் கொண்டேன்;
மின் ஒளிர் கானம் இன்றே
போகின்றேன்; விடையும் கொண்டேன்.'

பொ:—'அரசன் கட்டளை அன்ருயினும், நும்கட்டளையைச் செய்யாமல் மறுத்துவிடுவேனோ? என் தம்பி பெற்ற செல்வம் யான் பெற்றதுபோன்றதன்ரோ? (தாயாகிய தங்கள் பணியைச் செய்வதைக் காட்டிலும்) எனக்கு உறுதி தரும் செயல் வேறு இனி யாதுளது? இந்தப் பணியைத் தலைமேற் கொண்டேன்; மின்னல் போன்று வெயில் ஒளி விளங்கும் காட்டிற்கு இப்பொழுதே போகின்றேன்; நும்மிடம் விடையும் பெற்றுக்கொண்டேன்'.

கு:—அடுத்த செய்யுளில் முடிவுறும்; குளகம். மேல் கைகேயி தன்சொல்லாகச் சொல்லாது 'இயம்பினன் அரசன்' என்று கூறியது நினைந்து 'மன்னவன் பணியன்ருகில் நும்பணி மறுப்பனோ' என்ருன். ஆகிலும் எனல் வேண்டும் உம்மை விகாரத்தால் தொக்கது. பின்னவன்-பரதன். தாயின் சொல்லை ஏற்று நடத்தலைக் காட்டிலும் ஒருவற்கு உறுதி தரும் செயல் பிறிதில்லை என்பது புலப்பட, "என்னினியுறுதி அப்பால்" என்ருன். மேகங்கள் பசுமை மிக்க காடுகளில் தங்குதல் இயல்பாதலின், 'மின் ஒளிர் கானம்' என்ருன் எனினும் ஆம். அறியாமையுடைய மக்கள் வாழ்வதாலும் மயக்கத்தைத் தருவதாலும் நாட்டை முன் இருளுடையுலகம்' என்றதற்கேற்ப, ஞான ஒளியுடைய முனிவர்கள் வாழ்விடம் ஆதலாலும் தனக்கு ஞான ஒளியை விளக்குவது என்ற கருத்தாலும் 'மின்னொளிர் கானம்' என்று கூறி நாட்டுவாழ்க்கையினும் காட்டு வாழ்க்கை சிறப்புடையது என்பதைக் குறிப்பிட்டவாறுமாம். இன்றே-இப்பொழுதே. கைகேயி விடைதருங்காறும் காலம் தாழ்த்தாது விரைதல் தோன்ற 'விடையும் கொண்டேன்' என்ருன். (114)

## இராமன் கோசலைபால் செல்லுதல் (1694-1695)

**1694.** என்றுகொண் டினைய கூறி
யடியிணை யிறைஞ்சி மீட்டும்
தன்றுணைத் தாதை பாத
மத்திசை நோக்கித் தாழ்ந்து

பொன்றிணி போதி னாளும்
பூமியும் புலம்பி நையக்
குன்றினு முயர்ந்த தோளான்
கோசலை கோயில் புக்கான்.

என்று கொண்டு இனைய கூறி, அடியிணை இறைஞ்சி மீட்டும்,
தன் துணைத் தாதை பாதம் அத்திசை நோக்கித் தாழ்ந்து,
பொன் திணி போதினாளும் பூமியும் புலம்பி நையக்,
குன்றினும் உயர்ந்த தோளான் கோசலை கோயில் புக்கான்.

பொ :—என்று இத்தன்மையான சொற்களைச் சொல்லிக் கைகேயியின் திருவடிகளை மீண்டும் வணங்கித் தந்தையாரின் இரண்டு திருவடிகளையும் அவரிருக்கும் திக்கு நோக்கிப் பணிந்து, அழகு நிறைந்த தாமரை மலரிலிருக்கின்ற திருமகளும் பூமியும் தனிமையுற்று வருந்தக் குன்றினும் உயர்ந்த தோள்களையுடைய இராமன், கோசலையின் மாளிகையில் புகுந்தான்.

கு :—கொண்டு - அசை. இனைய என்றது மேலைச் செய்யுளில் குறித்தவற்றை. 'துணைப்பாதம்' என்று இயைக்க. தயரதனைக் காண முடியாமையின் திசை நோக்கித் தாழ்ந்தான். தாழ்ந்து - வணங்கி. பொன் - அழகு. போதினாள் என்றது அரசச் செல்வத்தை ; 'இராச லட்சுமி' எனப்படுதலின் போதினாள் என்றார். அரசச் செல்வமும் நிலமும் இராமனைத் துணையாகப் பெற இருந்து ஏமாற்றம் அடைந்தமையால் தனிமையுற்று வருந்தியதை உணர்த்தப் 'புலம்பி நைய' என்றார். 'புலம்பே தனிமை' (தொல்-சொல்-உரி) என்றது காண்க. அரச பாரம் நீங்கினமைக்கு உளம்போல உடலும் பூரித்தமை தோன்றக் 'குன்றினுமுயர்ந்த தோளான்' என்றார். காடு புகுந்தால் போர்க்குக் குறைவில்லை என்ற எண்ணத்தால் வீங்கிய தோளன் என்பது தோன்ற அங்ஙனம் கூறினர் எனலுமாம். (115)

இச்செய்யுள் நகர் நீங்கு படலத்தில் இருத்தலினும், இப் படலத்தில் இருத்தற்குரிய பொருத்தம் மிகவுண்டு ; சில சுவடிகளிலும் இப் படலத்தின் இறுதிச் செய்யுளாக வரையப்பட்டுளது. ஆதலால், இங்குச் சேர்க்கப்பட்டது.

கைகேயி சூழ்வினைப் படலம் முற்றிற்று.

---

# 4. நகர் நீங்கு படலம்

இராமன் காடு புகவேண்டி அயோத்திநகரத்தில்நின்று நீங்கியதைத் தெரிவிக்கும் பகுதியாதலின் இப்பகுதி நகர்நீங்குபடலம் எனப் பெயர் பெறுகின்றது.

தன் கோயில் புகுந்த இராமனைக் கண்ட கோசலை, முடிபுனை விழாவிற்குரிய அடையாளம் ஏதும் இன்றி அவன் வந்தமை யுணர்ந்து, "முடிபுனைதற்கு இடையூறு உண்டோ" என வினவ, இராமன், 'நின் மகன் பரதன் முடிசூடுகின்றான்' என்றானாகக் கோசலை, 'முறைமை யன்று என்பது தவிரப் பரதன் முடிசூடுதற்குரிய தகுதியில் நின்னி னும் சிறந்தவன் ஆவான். நின் தம்பிக்கு அரசு கொடுத்துவிட்டு அவனோடு நீ ஒற்றுமையாக வாழ்க' என்று கூறுகின்றாள். அது கேட்ட இராமன், 'என் தந்தை என்னை நல்வழி செலுத்த எண்ணி ஏவியது ஒன்று உண்டு. அது, பதினான்கு ஆண்டுகள் தவமுனிவரோடு காட்டில் தங்கி வரல்வேண்டும் என்பதாகும்' என்று கூறக் கோசலை கேட்டு வாட்டமுறுகின்றாள்; துடிக்கின்றாள்; துன்பத்தால் பல சொல்லிப் புலம்புகின்றாள். வருந்திப் புலம்பும் அன்னையை இராமன் தேற்றி மன்னனைப் பொய்யன் ஆக்க விரும்புகின்றாயோ? எந்தையை வாய்மை தவறாதவனாக்குவதைக் காட்டிலும் யான் பிறந்ததால் ஆய பேறு வேறு யாதுளது? தந்தையின் ஏவலை யான் மறுத்தல் ஒல்லுமோ? என்கின்றான். கோசலை வனத்திற்குத் தன்னையும் உடன் அழைத்துச் செல்லுமாறு வேண்டுகின்றாள். இராமன், "என் தம்பிக்கு முடிசூட்டிய பின் மன்னவன் தவம் செய்யக் காடு புகுங்கால் உடன் சென்று நோன்புகள் மேற்கொள்ளலாம்; இப்பொழுது என் பிரிவால் வருந்தும் எந்தையை ஆற்றி இருங்கள்; பதினான்கு ஆண்டுகளையும் பதினான்கு நாட்களாக எண்ணிக் கழித்து வருகின்றேன்" என்று ஆறுதல் கூறியும், அமையாதவளாய்க் கோசலை, தன் கணவன்பால் முறையிட்டு இராமனை வனம் புகாமல் தடுப்பேன் என்று போகின்றாள்.

இராமனும் இவ்வன்னையின் சோகத்தை மாற்றும் ஆற்றல் உள்ளவள் சிற்றன்னையே யென்று துணிந்து சுமித்திரையின் மாளிகைக்குப் போகின்றான்.

போன கோசலை தயரதமன்னன் மூச்சற்று இருப்பதைக் கண்டு திடுக்கிட்டுப் பலகூறிப் புலம்ப, அவள் அழுகையொலியை முடிபுனைவிழா மண்டபத்திருந்த மன்னர் முதலியோர் கேட்டு அதன் காரணத்தை அறிந்துவருமாறு வசிட்டமுனிவனை வேண்டுகின்றார்கள். அம்முனிவ

னும், அவர் வேண்டுகோளின்படி கைகேயியின் மாளிகைக்குச் சென்று செய்தியுணர்ந்து, தயரதன் தெளிதற்குரிய செயல்கள் பல செய்து தெளிவிக்கத் தெளிந்த அம்மன்னவனுக்கு ஆறுதல் கூறி, கைகேயிக்கும் அறிவுரைகள் பல சொல்லுகின்றான். சொல்லியும் அவள் மனநிலை மாறாமை கண்டு, தயரதனே, நல்லவும் இனியவுமாய சொற்களைச் சொல்லி வேண்டவும் அவள் இரங்காமை கண்டு வெகுண்டு, “நீ என் தாரம் அல்லள்; நின் மகனும் எனக்கு மகன் அல்லன்; என் உரிமைக்கும் ஆகான்” என்று கூறிவிட்டுக் கோசலை வந்துள்ளதை யுணர்ந்து மயங்கி வீழ்கின்றான். கோசலை செய்த உபசாரங்களால் தேறிய மன்னன், தான் முன்னொருகாலத்து முனிவன்மகனைக் கொல்ல நேர்ந்தமையால் சாபம் பெற்ற வரலாற்றைக் கூறி இராமன் வனம் புகுவதும் என்னுயிர் வானம் புகுவதும் தப்பாது என்கின்றான். அதைக் கேட்ட கோசலை கலங்குகின்றாள். வசிட்டன் போய் அவையில் உள்ளோர்க்கு நடந்ததை அறிவிக்கின்றான். அம்முனிவன் கூறிய செய்தி நகரம் எங்கும் பரவுகின்றது. மக்கள் எல்லாம் புலம்புகின்றனர். அஃறிணை உயிர்களும் பெருவருத்தம் உறுகின்றன.

இச்செய்தி அறிந்த இலக்குவன், கடுங்கோபங்கொண்டு வில் ஏந்திய கையுடன் வந்து நகர்நடுவில் நின்று நாண் ஒலி செய்துகொண்டு, “இராமன் முடிபுனைவிழாவைத் தடுப்பவர் யாவரேனும் ஒழித்து விடுகின்றேன்” என்று கூறிக்கொண்டு திரிகின்றான். சுமித்திரை மாளிகையில் இருந்த இராமன், இலக்குவன் நாணொலி கேட்டு வந்து அவ் இலக்குவனைப் பார்த்துப் போர்க் கோலத்திற்கு உரிய காரணம் யாது? என வினவி, விதியால் விளைந்த வினைக்குப் பிறரை வெகுண்டு பயன் இல்லை என்பதைத் தெளிவிக்கின்றான். மீண்டும் இலக்குவன், “விதிக்கும் விதியாகும் என் வில் தொழில் காண்டி” என வீரம்பேச, இராமன், சிறிது சினந்து, என் தந்தையின் சொல்லை மறுப்பது எனக்கு முறையன்று; ஆனல், என் சொல்லை நீ மறுப்பதால் உனக்கு என்ன குற்றமுண்டு” என்ன, இலக்குவன் சினம் தணிகின்றான். பின் அவனுடன் இராமன் சுமித்திரையை அடைந்து தண்டகவனம் செல்லும் தன்பொருட்டு மிக வருந்தும் அச்சிற்றன்னையைத் தேற்றுகின்றான். அப்பொழுது கைகேசி பணிப் பெண்டிர் மூலம் வரவிடுத்த மரவுரியை வாங்கிக்கொண்டு இலக்குவன், தன் தாயைப் பணிந்துநிற்கச் சுமித்திரை, “இலக்குவ! அவ்வனம் இவ்வயோத்தி எனவும் இராமனும் சீதையும் இனி நின் தந்தையும் தாயுமாவர் எனவும் கொள்க; இராமனுக்கு அடியவன்போலப் பணி செய்க; அவன் இந்நகர்க்கு வரின் நீயும் வருக; இன்றேல் அவனுக்கு முன் முடிக. இனி ஒரு கணம் இங்கு நிற்பதும் குற்றமாகும்” என்று செவியறிவுறுத்தி விடைகொடுக்கின்றாள். அவளைத் தொழுது மீண்டபின் இராமன், தன்னைப்போலவே இலக்குவன் மரவுரி தரித்துள்ளதைப்

பார்த்து, "என்னைப் பிரிந்து வருந்தும் தாய் தந்தையர்க்கு ஆறுதல் கூற நீ நகரில் இருப்பதே தக்கது" என்று தம்பிக்குக்கூற, அவன் அச் சொல்லைப் பொருது கண்ணீர் சொரிந்து, "நானும் சீதையும் நீ இருப்ப தால் அன்றோ இருக்கின்றோம், நின்னைப் பிரிந்து ஒரு கணமும் தரியேம்; அருள்க" என வேண்ட, இராமன், பிறிது புகலாது உடன்படுகின்றான். அப்பொழுது அங்கு வசிட்ட முனிவன் வந்து மரவுரி தரித்துள்ள அவ் விருவர்கோலத்தையும் கண்டு மனம் நைந்து இராமனை நோக்கி, "நீ காடு சென்றால் மன்னன் உயிர் வாழான்" என்று கூறித் தடுக்க, இராமன், தான் காடு செல்வதே தக்கது என்பதைப் பல காரணங் காட்டி நிறுவ, முனிவன் ஒன்றும் கூற இயலாதவனாகின்றான்.

பின் இராமன் சீதையின் மாளிகைக்குப் போகின்றான். அவனைக் கண்ட எல்லா உயிர்களும் துன்பக்கடலுள் ஆழ்கின்றன. மக்கள் பலசொல்லிப் புலம்புகின்றனர். மரவுரிதரித்துச்செல்லும் இராம இலக்குவரைப் பின்பற்றி அறுபதினாயிரம் தாய்மாரும் அந்தணர் அரசர் முதலியோரும் அழுதுகொண்டுசெல்கின்றனர். அத்துன்பச் சூழலுக்கு இடையில் இராமன் மரவுரி தரித்துவருதலைக் கண்டு சீதை திடுக் கிட்டு இது என்னை? என்று வினவுகின்றாள். இராமன், 'என் தம்பி பரதன் அரசு புரிவான்; யான் என் தந்தை பணியை மேற்கொண்டு காட்டில் தங்கி வருவேன்; வருந்தாது இரு' என்கின்றான். தன் கணவன் அரசுதுறந்து காடுபுகுவதற்குச் சீதை வருந்தவில்லை; 'வருந்தாது இரு' என்று கணவன் கூறிய சொல் தன் செவியைச் சுடுதலால் பொருது, "தந்தை பணியைச் செய்வது தக்கதே; என்னை வருந்தாதிரு" என்றது ஏன்? என்று மனம் நைந்து கேட்க, இராமன் "நின் பாதமலர்கள் வெப்ப மிக்க கல்வழியில் நடக்கும் வன்மை யுடையன அல்லவே" என்றானாக, சீதை, "நின் பிரிவினுஞ் சுடுமோ பெருங்காடு" என்று கலங்கிக்கூறப் பதில் ஒன்றும் கூற இயலாது இராமன், என் செய்வது என எண்ணுகின்றபோது, சீதை வீட்டில் விரைந்துநுழைந்து மரவுரிதரித்துவந்து இராமன்கையைப் பற் றிக்கொண்டு நிற்கின்றாள். அவள் நிலைகண்ட இராமன், "பின் விளைவை யெண்ணாமல் உடன்வரத் துணிந்துவிட்டாய்; எனக்கு எல்லையற்ற இடர்விளைப்பாய்" எனக் கூறச் சீதை, பொருது, "யான் உடன் வருவது ஒன்றுதான் நினக்குத் துன்பம்; என்னைத் துறந்த பின் எல்லாம் இன்பமே போலும்" என வருந்திக்கூற, இராமன், ஒன் றும் கூறாது உடன்பட்டுப் புறப்படுகின்றான். இலக்குவனும் சீதையும் இராமனும் மரவுரி தரித்துத் தெருவழியே செல்லக்கண்ட மக்கள் படும் துன்பத்திற்கு அளவில்லை. இராமன், தந்தையின் மாளிகை அடைந்த வுடன் தன்னொடு வந்த தாய்மாரை வணங்கி, "மன்னவனைத் தேற் றிக்கொண்டிருங்கள்" என்று சொல்லிவிட்டுச் சீதையோடும் இலக்குவ

னேடும் ஒரு தேரில் ஏறிக்கொண்டு போனுன் என்பது இப்படலத்தின் சுருக்கம்.

## கம்பர் வான்மீகத்தோடு வேறுபடும் இடங்கள்

1. இராமன் கைகேயியின் சொற்படி வனம்புக இசைந்து கோசலை யிடம் சொல்லிச் செல்லப் போகும்போது இலக்குவனும் உடன் சென்ற தாக வான்மீகி கூறியுள்ளார். கம்பர் அவ்வாறு கூருது இராமன் தமியனுய்க் கோசலையிடம் சென்றதாகக் கூறியுள்ளார். இராமனை என்றும் பிரியாத இலக்குவனை இங்குப் பிரித்தது, அவன் சீற்றத்திற்கும் மாற்றத்திற்கும் இடந்தரவேண்டும் என்ற கருத்தால் போலும். இலக் குவன் இராமனுடன் இருந்திருந்தால் அவன் தன் எண்ணங்களையும் முழுச் சீற்றத்தையும் வெளிப்படுத்த இயலாதன்றே!

2. இராமன், தான் காடுபுக நேர்ந்ததையும் பரதன் முடிசூடு வான் என்பதையும் கோசலை வினவாமலே தானே கூறியதாக வான் மீகி கூறியுள்ளார். கம்பர் அதைச் சிறிது மாற்றி, இராமன் மணி முடி கவித்து வருவான் என்று எண்ணியிருந்த கோசலை முடி கவியாது வந்த இராமனைக் கண்டவுடன், "இடையூறுண்டோ நெடுமுடி புனை தற்கு" என்று வினவியதாகவும் 'பரதனே முடிசூடுகின்ருன்' என இராமன் விடை கூறியதாகவும் அமைத்துள்ளார். மேலும் இராமன், தான் வனம்புகும் நிகழ்ச்சியை உடனே தெரிவிக்காமல், கோசலை, பரதன் முடிசூடுவது பற்றிய தன் கருத்தைப் புலப்படுத்தி, 'அவனெடு ஒன்றி வாழ்க' என வாழ்த்தியபின், சிறிது சிறிதாகப் படிப்படியாக, மிக இனிமையாகப் புலப்படுத்துவதாகக் கம்பர் அமைத்தது, சாலச் சிறந்ததாக விளங்குகின்றது. கோசலையின் பெருங்குணமும் இராம னுடைய நுண்ணறிவோடு கூடிய பெருந்தன்மையும் இங்கு நன்கு புலப்படுகின்றன. கம்பரின் இந்த மாற்றம் காவிய நயந் தேர்வாற்குத் தேனுய் இன்னமுதமுமாய்த் தித்திக்கும் தன்மையதாக வுள்ளது.

3. 'அரசன் ஆணைப்படி வனம்புகுகின்றேன்' என்று இராமன் கூறிய பொழுது கோசலை, 'யான் நீ வனம்புக வேண்டாம்' என்கின் றேன்; தாயாகிய என்சொல்லை மட்டும் நீ மீறிச் செல்லலாமா? என்று கேட்டதாக வான்மீகி கூறியுள்ளார். இச்சொல்லால் கோசலை இராமன் பால் வைத்த பேரன்பு புலப்படுகின்றதாயினும் தன்கணவன் சொல் லுக்கு மாறுபடுகின்ருள் என்ற மாசு தோன்றுகின்றது. அம்மாசு நீங்கக் கம்பர்,

"ஆகில் ஐய! அரசன்தன் ஆணையால்
ஏகல் என்பது யானும் உரைக்கலேன்"

என்று கோசலை கூறியதாக அமைத்துள்ளார். இதனால் கோசலைக்கு இராமன்பால் உள்ள அன்பும் கணவன்பால் உள்ள மதிப்பும் குன்றாமல் நின்று திகழ்தல் காணலாம்.

4. இராமன் வனம்புக்கான் என்ற செய்தியைச் சுமந்திரன் வந்து சொன்ன பின் தயரதன், தான் இளமைக்காலத்து யானை வேட்டைக்குச் சென்று, ஆற்றில் நீர் முகந்து கொண்டிருந்த முனி குமாரனை யானை என மயங்கி அம்பெய்து கொன்றதும் அதனையறிந்த அவன் பெற்றோர் சாபமீந்ததும் ஆகிய வரலாற்றைக் கோசலைக்குக் கூறியதாக வான்மீகி கூறுகின்றார். கம்பர், இதனை மாற்றி இராமன் வனம்புகுமுன்னரே தயரதன் கோசலைக்கு இவ்வரலாற்றைக் கூறியதாக அமைத்துள்ளார். இராமன் வனம்புக்க செய்தி கேட்ட பின்னும் தயரதன் உயிருடன் இருந்து இவ்வரலாற்றையெல்லாம் நினைவு கூர்ந்து சொன்னான் என்பதைக் காட்டிலும், இவ்வரலாற்றைத் தயரதன் முன்னரே கூறினான் என்றும், சுமந்திரன் வந்து, 'இராமன் காட்டிற்குப் போனான்' என்று சொன்ன போழ்தத்தே 'ஆவிபோனான்' என்றும் கம்பர் மாற்றி அமைத்தது சிறப்புடையதாய்த் தயரதனுடைய பிரிவாற்றாமையை நன்குபுலப்படுத்துவதாய் அமைந்துள்ளமை காண்க.

5. தயரதனுக்கு முந்நூற்றைம்பதின்மர் மனைவியர் இருந்தனர்என வான்மீகி கூறியிருக்கவும் கம்பர், அறுபதினாயிரம் மனைவியர் இருந்ததாகக் கூறியுள்ளார். இது புனைந்துரையே ஆயினும் மகா சக்கரவர்த்திகளுக்கு எல்லாம் பல்லாயிரமாக அமைந்திருக்கவேண்டும் என்பது பற்றிக் கூறியது என்பதை உளங்கொளல் வேண்டும். அமைச்சர் அறுபதினாயிரர்; அறுபதினாயிரம் ஆண்டு கூறியதும் இம்மரபுபற்றியேயாம். பெருங்கதையில் பிரச்சோதனனுக்கு நாடு, மனைவி, அமைச்சர், ஏவலர் முதலிய எல்லாம் பதினறு ஆயிரமாகக் கூறியிருத்தலை (2-4-6) நினைக்க.

6. இராமனுடன் செல்லும் சீதை மரவுரிதரித்துச் சென்றதாக வான்மீகி கூறாதிருக்கவும் கம்பர் "புனையுஞ் சீரை துணிந்து புனைந்தனள்" எனக் கூறியுள்ளார். கணவன் மரவுரிதரித்திருக்கும்போது மனைவியும் மரவுரிதரிப்பதுதான் கற்புடைமைக்கு அழகு என்ற கருத்தால் கூறியதாகக் கொள்ளவேண்டும்.

7. இராமன் வனம் புகும்போது அந்தணர்க்குக் கோதானம் செய்துவிட்டுச் சென்றதாக வான்மீகி கூறியுள்ளார். கம்பர் அந்நிகழ்ச்சியை இங்குக் கூறவில்லை; ஆயினும், சுந்தர காண்டத்தில்,

"பரித்த செல்வம் ஒழியப் படருநாள்
அருத்தி வேதியர்க்கு ஆன்குலம் ஈந்து அவர்
கருத்தின் ஆசைக் கரையின்மை கண்டு இறை
சிரித்த செய்கை நினைந்து அழும் செய்கையாள்"

எனச் சீதை நினைந்து அழுததாகப் பின்னர்ச் சுவை நலம் தோன்றக் கூறியுள்ளமை காணலாம். இவ்வாறே கம்பர் முதல் நூல்கருத்துக் களைச் சிறந்த குறிக்கோள் கொண்டு மாற்றியுள்ளமையை ஆழ்ந்து கண்டு மகிழலாம்.

## படலப் பொருட் சிறப்பு

கவிச் சக்கரவர்த்தியாம் கம்பர் கவிகள் யாவும் கருத்தாழமும் ஓசையினிமையும் தெளிவும் சொல்லழகும் உடையவே எனினும், கதையில் பங்கு கொள்ளும் உறுப்பினர்கள் பேசுவதையுணர்த்தும் கவிகள், அவற்றில் மிகச் சிறப்புடையனவாய்க் கம்பரின் புலமைத் திறத்தைப் புலப்படுத்திப் படிப்போர் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் தன்மையவாக விளங்குகின்றன. இந் நகர்நீங்குபடலத்தில் வருணனைப் பகுதியினும் உறுப்பினரின் உரையாடல்களே மிக்குள்ளன. அவ்வுரையாடல்களின் கருத்துச்செறிவும் அமையத்திற்கேற்ற அமைப்பும் திறனும் நாம் உளங்கொண்டு போற்றுதற்குரியன. கோசலை பேசுகின்றாள் ; இராமன் பேசுகின்றான் ; இலக்குவன் பேசுகின்றான்; வசிட்டன் பேசுகின்றான்; சீதை பேசுகின்றாள்; பொதுமக்களும் பேசுகின்றார்கள். இவர்களில் இராமனது சொல்லாற்றல் சிறப்பாக அமைந்துளது. 'செல்லும் சொல்வல்லான்' என இராமனுக்குப் பட்டம் சூட்டுகின்றார் கம்பர். அரசப் பட்டத்தைத் துறந்து அடவி செல்லும் இராமனுக்குக் கம்பர்சூட்டும் கவினுறு பட்டம், கருதி இன்புறத்தக்க பெருமையுடையதாக அமைகின்றது.

இராமன் அயோத்தியைவிட்டு நீங்கப்போகின்றான் என்பதைக் கோசலையும் சுமித்திரையும் உணர்கின்றார்கள் ; இலக்குவனும் சீதையும் உணர்கின்றார்கள் ; பொது மக்களும் வசிட்டனும் உணர்கின்றார்கள். உணர்ந்த அளவில் எல்லோரும் துடும் எனத் துன்ப உணர்ச்சி மிக்கவராகின்றார்கள். அவ்வுணர்ச்சியால் ஒவ்வொருவரும் பேசுகின்றார்கள். அவர்கள் பேச்சில் இராமன்பால் அவர்கள் வைத்திருக்கும் பேரன்பு நன்கு புலனாகின்றது. இராமன் அவர்களை நேரில் கண்டு சொல்லிப் பிரிய வேண்டியவனாகின்றான். அவரவர்கள் தகுதிக்கும் அன்பிற்கும் ஏற்ப இராமனைக் காடு புகாமல் தடுக்க முயலுகின்றார்கள். அவர்களில் தலைமையும் முதன்மையும் உடையவள் கோசலை ஆகலின், அவள் உணர்ச்சி மிக்க சொல்லையும் செயலையும் கம்பர் நமக்கு முதற்கண் காட்டுகின்றார். கோசலையின் பேச்சுப் பாலகாண்டத்தில் நிகழவேயில்லை ; அயோத்தியாகாண்டத்து மந்திரப் படலத்திலே தான் அவள் பேச்சை முதல்முதலாகக் கேட்கின்றோம். இராமனுக்கு முடிசூட்டுவதாக மன்னன் முடிவுசெய்துவிட்டான் என்பதைக் கூற வந்த பணிப்பெண்டிரிடம் அவள் பேசும் பேச்சு ; அடுத்தது, ஆயிர மௌலியானாகிய நாராயணனை வணங்கி வரங்கேட்கும் பேச்சு ; அவ்வளவில் அமைகின்றது.

இப்படலத்தில் கோசலையின் தாயன்பும் தயரதன் மனைவியென்ற உரிமையன்பும் புலப்பட விரிவாகப் பேசுகின்றாள். இதற்குப் பின் இவள் பேச்சு ஓரிடத்தில் நிகழ்கின்றது ; அதுவும் சுருங்கிய அளவிலே அமைந்து முடிகின்றது; அது குகனைக் கண்டவழி நிகழ்வது. பின்னர் இவள் தனிப்பேச்சுக்கு இடமே இல்லை.

கோசலை, தன் தவப்புதல்வன் முடிசூட்டிக்கொண்டு அரச கோலத்துடன் வருவான் என்று எதிர்நோக்கியிருக்கின்றாள். ஆனால் அதற்கு மாறாக இராமன், குழைக்கின்ற கவரி இல்லாமல் - பிடிக்கின்ற குடையில்லாமல் - சூட்டிய முடியில்லாமல் தனியனாய் வந்து தன்னை வணங்கக் காண்கின்றாள். நெடுமுடிசூட இடையூறு உண்டோ ? என்று வினவுகின்றாள். இராமன் இங்குக் கூறும் விடை, அவன் உலகியலறிவையும் நூலறிவையும் திறமையையும் புலப்படுத்துவதாக வுள்ளது. இராமன் கூறப்போவது கோசலையை மரணவேதனைக் குள்ளாக்கும் செய்தியாகும். அதை எவ்வாறு சொன்னால் அவள் உள்ளம் துனுக்கம் கொள்ளாமல் இருக்கும் என்பதை எண்ணிச் சொல்லு கின்றான். 'என் தந்தை என்னைப் பதினான்காண்டு காட்டில் வாழு மாறும் பரதன் நாட்டையாளுமாறும் கட்டளையிட்டதாகச் சிற்றன்னை கூறினாள்' எனக் கூறியிருப்பின் கோசலையின் இதயம் பிளந்திருக்கும். இராமன் இவ்விரண்டு கருத்துக்களையும் பின்னர்ச் சொல்லிவிடுகின்றான்; ஆனால், அவன் சொல்லுமுறை மிக்க நயமாகத் துன்பவுணர்ச்சிதோன் றாதவாறு அமைந்துளது. முடிசூட இடையூறு உண்டோ? என்ற கோசலையின் வினவுக்கு நேர்விடையாக, 'உண்டு' என்று சொல்ல வில்லை ; ஆனால் அக்கருத்துத் தோன்ற, 'நின் காதல் திருமகன், பங்க மில்குணத் தெம்பி பரதனே துங்க மாமுடி சூடுகின்றான்' என்று கூறு கின்றான். இத்தொடரில் அமைந்துள்ள கருத்துச்செறிவு நோக்கி யுணர்தற்குரியது.

தன்னைவிடப் பரதன் கோசலைக்குச் சிறந்தவன் என்பது தோன்ற, 'நின் காதல் திருமகன்' என்றும், அரசாளுதற்குரிய குணங்களால் குறை விலாதவன் என்பது தோன்றப் 'பங்கமில் குணத்து' என்றும், தன்னைப் போலவே அரசாளுதற்குரிய உரிமையுடையவன் என்பது தோன்ற, 'எம்பி பரதனே' என்றும், அவன் முடிசூடுதல் உறுதி என்பது தோன்ற, சூடுவான் என்னாது, துங்க மாமுடி சூடுகின்றான் என்றும் கூறிய சொற்றிறன் கண்டு மகிழ்தற்குரியது.

அது கேட்ட கோசலை, துணுக்கமோ கலக்கமோ இன்றி, 'முறைமை யன்றென்பது ஒன்று உண்டு; மும்மையின், நிறை குணத்தவன் நின்னினும் நல்லன்' எனவும், 'மன்னன் ஏவியது அன்று எனுமை மகனே உனக்கு அறன்; நன்று; நும்பிக்கு நானிலம் நீ கொடுத்து ஒன்றி வாழுதி ஊழி பல' எனவும் கூறி வாழ்த்துகின்றாள். இதனால் கோசலையின்

வேற்றுமையற்ற அன்பு புலப்படுவதோடு, இது 'முறைமையன்று என்பது ஒன்றுண்டு' என்று கூறிய அரசியல் அறிவும் நன்கு புலப் படுதல் காண்க. முறைமையன்று என்ற அரசியல் அறிவைக் கீழ்ப்படுத்தி, மன்னன் ஏவியது அன்றெனுமை மகனே உனக்கறன் என்னுமாறு அவள் அறநூலறிவு தூண்டுகின்றது. கோசலையின் அன்பும் அரசியல் அறிவும் அறநூற்கொள்கையும் அவள் சொல்லில் களிநடம்புரிதலைக் காணலாம். கோசலையின் சொல்லால் பரதன் ஆளுதற்கு அவள் இசைவு கிடைத்து விட்டதை உணர்ந்தவுடன் இராமன், மற்றொன்றையும் சொல்லத் தொடங்குகின்றான். வனத்திற்குப் போகச்சொன்னான் தந்தை என உடனே சொல்லவில்லை. தாயின் உள்ளம் துணுக்கம் எய்தாதநிலையில் பல சொற்களால் அடிப்படை அமைத்துக்கொண்டு பேசுகின்றான். 'நாயகன் எனை நன்னெறியுய்ப்பதற்கு ஏயதுண்டு ஓர் பணி' என்கின்றான். அப்பணி மறுக்க முடியாதது என்பது புலப்படத் தந்தை என்னாது நாயகன் என்றும், அப்பணி பிறர் நன்மைக்காக ஏவியதன்று என்பது புலப்பட, எனை நல்நெறியுய்ப்பதற்கு என்றும், பலபணி அன்று என்பது தோன்ற, 'ஓர்பணி' என்றும் கூறிய நயம் நினைந்து காண்பதற் குரியது.

அது கேட்ட கோசலை, 'உரைத்த பணி என்னை ?' என்று விரைந்து வினவுகின்றாள். 'ஆண்டொ ரேழினொ டேழகன் கானிடை, மாண்ட மாதவத்தோருடன் வைகிப்பின், மீண்டு நீவரல் வேண்டும் என்றான்' என இராமன் கூறும் சொற்கள் கருத்துச் செறிவுமிகவுடையன என்பது விளம்ப வேண்டியதில்லை. இவ்வளவு திறமையாக இராமன் சொன்னாலும் அவன் வனம் போக நேர்ந்தது என்ற கருத்துக் கோசலைக்குத் தோன்றாமலில்லை. அதற்கேற்ற துன்ப உணர்ச்சியை அது தராமலும் இல்லை. தாயுள்ளம் ஏங்குகின்றது; இளைக்கின்றது; செய்வது அறியாது திகைக்கின்றது. தாயின் துன்பம் இத்தகையது என்பதை அவள் அரற்றல் தெளிவிக்கின்றது ; அவள் உணர்ச்சி புலப்படுத்து கின்றது. ஆறு செய்யுளில் அதைக் கம்பர் விவரிக்கின்றார். இவள் துன் பத்தை மாற்றி விடைபெறுவது எங்ஙனம்? என எண்ணிப் பின் இராமன் கூறுகின்றான். "சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொல் அச்சொல்லை, வெல்லும் சொல் இன்மை தெரிந்து" (குறள்-645) என்பதற்கேற்ப அவன் சொல் அமைகின்றது. 'பொய்த் திறத்தின னுக்குதியோ ? புகல் ! மெய்த் திறத்து நம் வேந்தனைநீ' என்பதே அவன் சொல். கற்புடைக் கோசலையின் உள்ளம் தன் கணவனைப் பொய்யனாக்க இசையுமோ ? தன் கணவனைக் கள்வன் என்று கொன்ற பாண்டியன்முன் வாதாடிக் கள்வன் அல்லன் என்று நிறுவித் தன் கணவன் பழிதுடைத்த கண்ணகி யின்சால்பு கற்புடை மகளிர்க்கெல்லாம் உண்டன்றோ ? இராமன் காட் டுக்குப் போகவில்லையென்றால் தன் கணவன் சொன்ன சொல் பொய்த் துப் போகும் என்பதை அறிந்து, கோசலை மறுமொழி கூற இயலாமல்

திகைக்கின்ருள். அவள் மனநிலையை முகக்குறிப்பால் அறிந்த இராமன், தன் கருத்து முழுமையும் புலப்படுத்துகின்ருன்.

“ சிறந்த தம்பி திருவுற, எந்தையை
மறந்தும் பொய்யில ஞக்கி, வனத்திடை
உறைந்து தீரும் உறுதி பெற்றேன் இதின்
பிறந்து யான் பெறும் பேறென்ப தியாவதே ”

என்பது அவன் சொல். தந்தையைப் பொய்யிலன் ஆக்குவது மகனுக்கு உரிய சிறந்த பணியன்ருே ? அது போலவே சிறந்த தம்பி அரசச் செல்வத்தை அடையச்செய்வது எத்துணை நல்ல செயல் ! இவை யிரண்டும் செய்யத்தக்க கடப்பாடுடைய செயல்கள். இவற்றைச் செய்வ தற்குத் தான் மேற்கொள்ளவேண்டிய முயற்சி பெரியதன்று ; காட்டில் முனிவரோடு தங்கி மீள்வதாகிய அத்துணையே ! எளிய ஒருசெயலால் இரண்டு பெரிய அறங்களைச் செய்யும் வாய்ப்புக் கிடைத்துளது. இதைச் செய்யவில்லையென்ருல் தான் பிறந்ததால் ஆகிய பேறு இல்லாமல் போகும் என்பதை உணர்த்துகின்ருன் இராமன். அதற்கு மேலும், உலகமே அழியினும் தந்தையின் ஏவலை மறுக்க இயலாது என்பதையும் புலப்படுத்துகின்ருன்.

இராமன் மனவுறுதியைக் கண்ட கோசலை, ‘ஐய, அரசன் தன் ஆணையால் ஏகல் என்பது யானும் உரைக்கிலென் ; சாகலாவுயிர் தாங்கவல்லேனையும், போகின் நின்ெெடும் கொண்டனை போகு’ என்கின்ருள். இச்சொல்லில் மன்னவன்பால் கோசலை வைத்துள்ள நன் மதிப்பும் மகன்பால் கொண்டுள்ள அன்பும் எத்துணைச் சிறப்பாக விளக்கப்படுகின்றன !

வனம் போகக் கோசலையின் உடன்பாடு கிடைத்துவிட்டது. இனி அவள் உடன் வருதலை எளிதில் தவிர்த்துவிடலாம் என்ற நம் பிக்கை இராமனுக்கு உண்டாயது. ‘அன்னையே என்னைப் பிரிந்து இடர்க் கடலில் தங்கியுள்ள மன்னர்மன்னனை வற்புறுத்தித் தேற்ருது என் ேேடு காடுபுகத் துணிகின்ருயா ? கற்புடைப் பெண்டிர்க்குரிய நெறி யையும் பார்ப்பதில்லையோ ! நீ வனம் நண்ணுதற்குரிய காலம் உண்டு, பரதன் அரசன் ஆனபின் நம் மன்னவன் எல்லாவற்றையும் துறந்து தவஞ்செய்ய வனம் நண்ணுவான்; அப்பொழுது உடன் சென்று அரிய நோன்புகளைச் செய்யலாம். யான் வனம் நண்ணுவதுபற்றித் திகைப் படைய வேண்டாம். தேவரும் தவத்திேைலன்ருே உயர்ந்திருக்கின்ருர்கள்; மேலும் நான் வனத்தில் தங்க வேண்டிய காலமும் குறுகியதுதானே ! பத்தும் நாலும் ஆகிய ஆண்டுகள் எனக்குப் பத்தும் நாலுமாகிய நாட்களே அன்ருே ! என்கின்ருன். முனிவரோடு தொடர்புகொள்வதால் நன்மையுண்டு என்பதைக் கோசிகன் தொடர்பால் பெற்ற நன்மைகளைக் கொண்டு உணரலாம் என எடுத்துக்காட்டுடன் விளக்குகின்ருன்.

தந்தையின் பணியைத் தலைமேற்கொண்டு செய்து புகழ்பெற்ற சகரரையும் பரசுராமனையும் எடுத்துக் காட்டித் தானும் அவ்வாறு செய்து புகழ்பெறுவதே நன்று என்று நிறுவுகின்றான். பரசுராமன், தந்தை பணியால் தாயைக் கொல்லுகின்ற பெரும்பாவத்தையுமன்றோ செய்தான்! யான் எந்தை பணியால் செய்ய இருப்பது தவம் செய்தலாகிய பேரறமன்றோ? என்பதை விளங்கவைக்கின்றான். இவ்வாறு இராமன் வகுத்துக் கூறிய சொற்களைக் கேட்ட கோசலை, மேலும் தடை செய்ய இயலாதவளாய், 'எத்திறத்தும் இறக்கும் இந்நாடு' என்பதை உணர்கின்றாள்; ஆயினும் தன் கணவனை வணங்கிக் கேட்டுக்கொண்டால் இராமனைக் காடுபுகாமல் செய்யவுங்கூடும் என்ற நம்பிக்கையோடு தயரதன்பால் செல்லுகின்றாள். இங்கு இராமன் உரையாடலை ஊன்றி நோக்கினால் அவன் சொல்லில் இனிமையும் உண்மையும் மாற்ற இயலாத திண்மையும் நிறைந்திருத்தல் காணலாம்.

## நகரமக்கள் பேச்சு

சென்ற கோசலை தயரதன் நிலையைக் கண்டு அழுத குரல் கேட்டுச் சென்ற வசிட்டன், மீண்டு வந்து, கைகேயியின் வரத்தால் இராமன் காடு புக நேர்ந்ததையும் பரதன் நாடாள்வான் என்பதையும் அவையினர்க்குப் புலப்படுத்துகின்றான். அச்செய்தி விரைவில் நகரில் பரவுகின்றது. அச்செய்தி அறிந்த மக்கள் சோர்ந்து தயரதன்போல் விழுந்து துயருறுகின்றனர். பின்னர்ச் சிலர் தெளிந்து தம் உணர்ச்சிக் கேற்றவாறு பல பல பேசுகின்றனர். நகரமக்களின் துன்பவுணர்ச்சியையும் சொல்லையும் செயலையும் பற்றிக் கம்பர் பத்தொன்பதுசெய்யுளில் விரித்துரைக்கின்றார். நல்லரசனாகிய தயரதன் நாட்டில் மக்கள் எத்துணைப் பேச்சுரிமை பெற்றிருந்தார்கள் என்பதை அவர்களுள் சிலர் பேச்சு நமக்கு அறிவிக்கின்றது.

"ஆதி அரசன் அருங்கேகயன்மகள்மேல்
காதல் முதிரக் கருத்தழிந்தானாமென்பார்"

என்று மக்கள் பேசும் பேச்சுத் தயரதனின் உண்மைநிலை இன்னது என்பதைப் புலப்படுத்துகின்றது. கைகேயியின்மேல் கொண்ட காதல் முதிர்ச்சியால் தயரதன் கருத்து அழிந்து இவ்வாறு வரம் கொடுத்து விட்டான் என்பது உண்மைநிலையை யுணர்த்தியதாகின்றது. அறுபதினாயிரம் ஆண்டுகள் முதிரப்பெற்ற தயரதனுக்குக் காதல் முதிர்ந்தது என்பதும், அக்காதல் முதிர்ச்சியால் கருத்தழிந்து கைகேயியின் சொற்படி தன் சாதற் புதல்வனாகிய இராமனைக் காடுபுகுத்தினான் என்பதும் அத்தயரதனைப் பழித்தும் இழித்தும் கூறுவனவே ஆயினும், நல்ல அரசனாகிய அவன் நாட்டில் மக்களுக்கு அத்துணைப் பேச்சுரிமை இருந்தது என்பதைக் கம்பர் நமக்கு விளக்குகின்றார். தயரதனை

இகழ்ந்ததோடு நில்லாமல் இத்துணை இடர்கட்கும் காரணமாயிருந்த கைகேயியையும் இகழ்கின்றார்கள்.

'தன்மகற்குப் பார்கொள்வான் எள்ளூறிய கருமம் நேர்ந்தாள் இவளென்னுக் கள்ளூறு செவ்வாய்க் கணிகைகாண் கைகேயி உள்ளூறு காதல் இலள்' என்கின்றார் சிலர். தன்மகன் அரசு பெறவேண்டித் தன் கணவனையே கொல்லுகின்றாள் கைகேயி என்பதும், உள்ளூறு காதல் இல்லாதவள் ஆதலின், அவள் கணிகைகாண் என்பதும், கோப் பெருந்தேவியாகிய கைகேயிக்கு இழிவும் பழியும் தருவன என்பதை நோக்கியுணரலாம்.

அதற்குமேலும், தயரதன் கைகேயிக்குக் கொடுத்த வரத்தின்படி இராமன் காடு புக உடன்பட வேண்டியவன் ஆனான் என்பதைக் கேட்ட மக்கள் பேசும் அறநெறி நம்மை வியப்பில் ஆழ்த்திவிடுகின்றது. கைகேயிக்குக் கொடுத்த வரத்தின்படி இராமனைக் காடுபுகுத்தாமலிருந் தால் தயரதனுக்கு வாய்மை தவறுமாயின், முன்னே இராமனுக்குக் கொள்ளெனக் கொடுத்த அரசை அம்முறை பிறழப் பின்னே பரத னுக்குக் கொடுத்தால் தவறாதோ வாய்மை? என்று இகழ்ச்சிக் குறிப் புடன் கேட்கின்றார்கள்.

'என்னே நிருபர் இயற்கை யிருந்தவா
தன்னே ரிலாத தலைமகற்குத் தாரணியை
முன்னே கொடுத்து முறைதிறம்பத் தம்பிக்குப்
பின்னே கொடுத்தால் பிழையாதோ மெய்யென்பார்'

இவ்வினாவிற்கு என்ன விடை கூறுவது? இராமனை வனத்திற்கு அனுப்பி னாலும் தயரதன் பொய்யனே என்பதை மக்கள் நிறுவுகின்றார்கள். எனவே, இராமனைக் காட்டிற்கு அனுப்பாதிருந்து அந்தப் பொய்யன் என்ற பட்டத்தைப் பெற்றிருக்கலாமே! மக்களும் மகிழ்வார்களே என்று நமக்குத் தோன்றுகின்றது. இலக்குவனும் இக்கருத்தையே கூறு கின்றான்.

'என்கட்புலமுன் உனக் கீந்துவைத் தில்லையென்ற
வன்கட்புலந் தாங்கிய மன்னவன்'

என்று தயரதனையும்,

"மெய்யைச் சிதைவித்து நின் மேன்முறை நீத்த நெஞ்சம்
மையிற் கரியாள்"

எனக் கைகேயியையும் அவன் இகழ்ந்து கூறிக் கைகேயி மெய்யைச் சிதைவித்தவள் என்பதையும் தயரதன் அவள் சொற்படி மெய்ம்மை தவறினவன் என்பதையும் விளக்குகின்றான்; எனவே நகரமக்கள்

மனநிலையும் இலக்குவன் மனநிலையும் ஒத்திருப்பதைக் கம்பர் காட்டுகின்ருர் என்பது புலனும். ஆயினும் அக்கருத்து நேரிது அன்று என்பதை இராமனே பின்னர் விளக்குமாறு செய்கின்ருர் கம்பர். இங்கு நாம் அறிய வேண்டுவது நல்லரசனுகிய தயரதன் நாட்டில் மக்கள் தமக்கு நன்று என்று தோன்றியவற்றை அச்சமின்றிச் சொன்னுர்கள் என்பதுமட்டுமே ஆம்.

கம்பர் அல்லரசன் ஆட்சிபற்றியும் பின் கூறுகின்ருர். அங்கு மக்கள் தமக்குத் தோன்றிய நல்லனவற்றைப் பற்றியும் பேசவியலாத நிலை இருந்தது என்பதை விளக்கியுள்ளார். உண்மையாக நிகழ்ந்ததைக் கூறுவதற்கும் அங்கு மக்கள் அஞ்ச வேண்டியிருந்ததாம். சூர்ப்பணகை இலக்குவனல் மூக்கு அரியுண்டது உண்மையாக நிகழ்ந்தது. இதை இராவணன்பால் யாரேனும் சென்று எடுத்துரைப்பாராயின் அவர் நாக்கை அரிந்துவிடுவானும் இராவணன். இதைச் சூர்ப்பணகையே,

"ஆக்கரிய மூக்கு உங்கை அரியுண்டாள் என்ருரை
நாக்கரியும் தயமுகனுர்" (சூர்ப்பணகைப்–125)

என்கின்ருள். தங்கைக்கு நேர்ந்த துன்பத்தை அண்ணனுகிய இராவணனுக்குத் தெரிவிக்க வேண்டும் என்று அவள் சார்பாகப் பரிந்து கூறுவோரையும் கண்ணேட்டமின்றி அவர் நாக்கை அரிவான் இராவணன் என்ருல் அவன் குறைகூறுவோரை என்ன செய்வான் என்பது உய்த்துணரவேண்டியதுதான். அல்லரசன் ஆட்சியில் மக்கள் படும் அல்லல் அத்தகையது, என்பதை நினைவிற் கொண்டு காணின் நல்லரசனுகிய தயரதன் ஆட்சியில் மக்கள் உரிமைபெற்று வாழ்ந்தமை நன்கு பெறப்படும்.

## இலக்குவன்பேச்சு

இலக்குவன் பெயரைப் பாலகாண்டத்துக் கேள்விப்பட்டோம்; அவன் வடிவும் நிறமும் பற்றி அங்கு அறிந்துளோம்; ஆனுல் அவன் பேச்சைக் கேட்கும் வாய்ப்பு இதுகாறும் கிடைக்கவில்லை. இந் நகர் நீங்குபடலத்தில்தான் முதன்முதல் அவன் பேசக் கேட்கின்ருேம். பொது மக்களின் உரையாடலால், கைகேயி வரத்தினுல் பரதன் அரசு பெற்றதும் இராமன் காடுபுகச் செய்ததும் இலக்குவன் கேள்விப்படுகின்ருன். உடனே சினம் மூள்கின்றது. இலக்குவன் சினத்தைப்பற்றியும் சினத்தால் அவன் பேசிய பேச்சுப் பற்றியும் ஒன்பது செய்யுளில் கம்பர் உணர்ச்சி தோன்ற ஒலி அமைப்பிேனுடு விவரிக்கின்ருர். பெண்ணுட்டம் ஒட்டாது இராமனுக்கு முடிசூட்டவேண்டும்; அதற்குத் தடையாக எவர் வரினும் ஒழித்துவிடுகின்றேன் எனப் போர்க்கு ஆயத்தனுய் நாணெலிசெய்துகொண்டு நடுத்தெருவில் திரிகின்ருன் இலக்குவன்.

அவன் நாணொலி கேட்டவுடன் சுமித்திரைக்கு ஆறுதல் கூறிக்கொண்டிருந்த இராமன் விரைந்து வருகின்றான். வரும்போதே மாறுபாடு இல்லாத நல்ல சொற்களைச் சொல்லிக்கொண்டு இலக்குவனை அணுகுகின்றான். அவன் நிறத்திற்கும் தன்மைக்கும் ஏற்றவாறு கம்பர், 'ஆருக்கனலாற்றும் ஓர் அஞ்சனமேக மென்ன' என்று உவமை கூறுகின்றார். இராமனுடைய இனிய சொற்களாகிய மழைத்துளி இலக்குவனுடைய சினமாகிய ஆரு நெருப்பையும் ஆற்றும் ஆற்றலுடையது என்பதை அவ்வுவமையால் அறிவிக்கின்றார்.

"என்னத்த என்னீ யிறையேனும் முனிந்திலாதாய்
சன்னத்த னாகித் தனுவேந்துதற் கேது"

என்று இராமன் இலக்குவனை வினவுகின்றான். இலக்குவன் சினத்திற்குக் காரணம் யாது என்பது இராமனுக்குத் தெரியாததன்று; ஆயினும், தனுவேந்துதற்கேது என்? என்று வினவுகின்றான், அவன் சினம் தணிக்க வேண்டி.

ஆனால் இலக்குவன் தன் சினமிகுதியால் அண்ணன் என்ற எண்ணத்தையே மறந்தவன்போல் விடைகூறுகின்றான். 'வாய்மையைச் சிதையச் செய்து மேல்தொட்டுவந்த முறையையும் நீக்கிய வஞ்ச நெஞ்சினளாகிய கைகேயியின் எதிர் நினக்கு முடிசூட்டவெண்ணி அதைத் தடுப்போர் தேவரேயாயினும் அவர்களைப் பஞ்சினை எரிக்கும் நெருப்புப்போலச் சுடத் துணிந்துவிட்டேன். வலிய வில் என் கையில் இருக்கும்போது தேவரும் என்னை அணுகி விலக்கமாட்டார்கள். விலக்கினாலும் என்னம்பிற்கு இலக்காவார்கள்; ஆதலின் பதினாலு உலகங்களையும் இக்கோசலநாட்டு ஆட்சியோடு இன்று யான் தரக் கொள்க' என்பது அவன் பேச்சு.

இளையவன் சீற்றத்தை உணர்ந்த இராமன் அமைதியான சொற்களால் அவனைப் பாராட்டுகின்றான். நீதியும் நன்னெறியுமே நின் அறிவின்செயலாகுமன்றோ? இப்பொழுது அறம் வருந்திவற்றிட முறையல்லாத சினம் இதுகாறும் விளையாத நின் மனமாகிய நிலத்தில் எவ்வாறு விளைந்தது? என்று கேட்கின்றான். அண்ணனுக்கு வந்த அல்லலைத் துடைக்கத் துடிக்கின்றது இலக்குவனுடைய உரிமை சான்ற உள்ளம்; காரணம் வாய்த்தபோதும் சினம் கூடாதெனத் தணிக்கின்றது இராமனுடைய பெருமை சான்ற உள்ளம்.

இராமன்சொல்லைக் கேட்ட இலக்குவனுக்குச் சிரிப்பு மிகுகின்றது. 'சூரிய குலத்திற்கு உரித்தாய் வருகின்ற அரசு நினது; ஏற்றுக்கொள்' என்று நின்தந்தை சொன்னதால் நீ ஏற்றுக் கொண்ட அரசைப்

பகையால் இழந்து காடுபுகப்போகின்ருய் என்ருல் இனி யான் சினப்பதற்குரிய காலந்தான் யாதோ? என்று வருந்திக் கூறுகின்ருன். தன்பால் கொண்ட உரிமையன்பால் வருந்திக்கூறும் இலக்குவன்பேச்சில் உண்மையுண்டு என்பதை இராமன் அறிவான். ஆனுல் அச்சீற்றம் அறத்தொடுபடாதது என்பது அவன் முடிவு. எனவே, இலக்குவன்சீற்றத்தை மாற்றியேதீரவேண்டும் என்பது அவன் எண்ணம். அரசைக் கொடுத்துப் பின் மாற்றியது தந்தையின் குற்றம் என்பது இலக்குவன் எண்ணம் ஆதலின், அதை மாற்ற வேண்டிக் கூறுகின்ருன். ‘அரசு பின்னுல் துன்பம் தரும் என்பதை நினையாது, தந்தை கொடுத்த அரசைக் கொள்ள இசைந்தது என் குற்றமன்ருே? மன்னவன் குற்றம் யாதுளது? என இராமன் தன்னையே குற்றவாளியாகக் காட்டித் தந்தைமேலுள்ள இலக்குவன் சீற்றத்தை மாற்ற முயலுகின்ருன். தந்தை மேலும் கைகேயி மேலும் பரதன் மேலும் இலக்குவன் சீற்றங்கொண்டது அரசு இராமனுக்கு வாராமல் கைகேயியின் சூழ்ச்சியாலும் தயரதன் தவற்றினுலும் பரதனுக்கு உரித்தாய்விட்டதே என்ற காரணத்தால்தான். எனவே அதற்கு இராமன் அருமையான அமைதி கூறுகின்ருன். ‘ஓராற்றில் தண்ணீர் பெருகவில்லை என்ருல் அது ஆற்றின் பிழையாகுமா? மழை பெய்யாமையால் வெள்ளம் வரவில்லை என்றெண்ணி அமைதியடைவதன்றி ஆற்றைக் குற்றம் கூறுவாருண்டோ? அது போல எனக்கு அரசு வாராமைக்குக் காரணம் விதியின் பிழையாகுமேயன்றி மன்னவன்பிழையோ அன்றி நம்மைப்பெற்று வளர்த்த அன்னையின் பிழையோ அன்றிப் பரதன்பிழையோ அன்று. அங்ஙனமாகவும் நீ அவர்கள்மேல் சினங்கொண்டது எதுபற்றி’? என்பது அவனுடைய ஆற்றல்வாய்ந்த சொல். இங்கு நதி போன்றவன் இராமன்; புனல் போன்றது அரசச்செல்வம்.

இராமன் இங்கு இலக்குவன் மனக்கருத்தோடு கலந்துபேசுகின்ருன். அரசு இழந்த நிலையை விதியின் விளையாட்டாகக்கொண்டு அமைதியடைகின்றது அவனுள்ளம். கைகேயியும் தயரதனும் செய்த சூழ்ச்சியாலும் தவற்றினுலும் அது நிகழ்ந்ததாகக்கொண்டு கொதிக்கின்றது இலக்குவன் உள்ளம். எய்தானை விட்டு அம்பை நோவது போன்றது இலக்குவன் செயல்; எய்தவன் வேறு என்பதை எண்ணி அம்பை நோவாது அமைதியுறுவதுபோன்றது இராமன்செயல். இவ்வரசிழப்பு விதியாலியன்றது என்று கூறும் இராமன் உள்ளத்தில் அவ்வரசபாரம் நீங்கியதால் மகிழ்ந்த மகிழ்ச்சிக்கு மாருகச் சிறிது இரக்கக் குறிப்பும் இருந்தது என்பதை நுண்ணிதின் உணரலாம். அரசிழப்பால் கொதிக்கும் இலக்குவனை அமைதிசெய்யும் முயற்சியில் தனக்கும் அக்குறிப்புண்மை காட்டி, அது விதியின்விளைவு என்று அமைதியுறுதல் தக்கது என்பதைப் புலப்படுத்துகின்ருன் இராமன்.

'விதியின் செயல் இது' என்று கூறுவோர், அச்செயலை மாற்ற இயலாத தம்வருத்தம் தோன்றவே அத்தொடரைக் கையாள்வதை உலகியலிலும் காணலாம். எனவே, 'நதியின்பிழையன்று நறும் புனலின்மை' என எடுத்துக்காட்டி, யான் அரசிழந்து காடுபுகுதற்குக் காரணம் விதியின்பிழையே என்று விளக்குகின்ற இராமன் உள்ளத்தில், தான் காடுபுகநேர்ந்ததுபற்றிய துன்பக்குறிப்பு உண்டு என்பது உணரலாம். இடுக்கண் வருங்கால் நகுகின்ற பண்பினுல் இராமன் முகம் அரசபாரம் நீங்கியதற்காக அப்பொழுதலர்ந்த செந்தாமரையினை வென்று மலர்ச்சியடைந்ததாக முன் கூறினமை இங்கு முரணுமை காணலாம்.

மேலும், சித்திரகூடமலைச்சாரலில் இலக்குவன் செய்தமைத்த பன்ன சாலையின் அழகையும் அமைப்பையும் கண்டு இராமன் தனக்குள் சிந்தித்ததாக வரும்,

> மேவு கானம் மிதிலையர் கோன்மகள்
> பூவின் மெல்லிய பாதமும் போந்தன
> தாவில் எம்பிகை சாலை சமைத்தன
> யாவை யாதும் இலார்க்கு இயையாதவே. (சித்திரகூடப்-52)

என்ற பாடலில் இராமன், தன் மனைவியின் மலரினும் மெல்லிய பாதங்கள் கல்லும் முள்ளும் நிறைந்த காட்டுவழியில் நடக்க நேர்ந்தது பற்றியும், தன் தம்பியின் கை, கூலியாள் கைபோலப் பன்னசாலை அமைக்கநேர்ந்ததுபற்றியும் நினைந்து துன்புற்றமை காணலாம். இங்கு யாதும் இலார் எனத் தன் மனைவியையும் தம்பியையும் குறிப்பிட்டுள்ளமையும் நோக்குக. அதற்குமேலும்,

> 'என்று சிந்தித் திளையவற் பார்த்திரு
> குன்று போலக் குவவிய தோளினுய்!
> என்று கற்றனை நீயிது போலென்ருன்
> துன்று தாமரைக் கண்பனி சோர்கின்ருன். (சித்திரகூடப்-53)

என்ற செய்யுளில் இராமன், இலக்குவன் நிலையை எண்ணிக் கண்ணீர் சொரிந்தமையும் கூறப்படுதல் காணலாம். உள்ளத்தில் துன்பக் குறிப்பு இருப்பினும் உலகியலனுபவத்தாலும் உயர்ந்த பண்புடைமையாலும் அறநெறிச்செல்லவேண்டும் என்ற கடப்பாட்டாலும் இராமன் அத்துன்பத்தைப் புலப்படுத்தாது ஒழுகினுன் என்பதே சாலப் பொருத்தமுடையதாகும். கொண்டவேடத்திற்கு ஏற்ப ஒழுகினமையும் புலப்படும்.

இனி, 'விதியின்பிழை' என்ற இராமன்முடிபைக் கேட்ட இலக்குவன், 'கொதிக்கும் மனம் எங்ஙன மாற்றுவென் கோளிழைத்தாள்

மதிக்கும் மதியாய், முதல் வானவர்க்கும் வலிதாம், விதிக்கும் விதியாகு மென் விற்ருெழில் காண்டி ' என்று தன் மனஇயல்பையும் வில் வலி மையையும் விளக்குகின்ருன். தன் சொல்லையும் மீறிக் கைகேயியைப் பழிக்கும் இலக்குவன் உள்ளத்தையுணர்ந்த இராமன், 'இலக்குவ! மறைபயின்ற நாக்கால் வாய்க்குவந்ததைப் பேசுகின்ருயோ? பெற்ற தாய் தந்தை என்ருல் அவர்மேல் சலித்துக்கொள்வது தகுமா?' என்று கூறுகின்ருன். அவர்கள் பிழையன்று; விதியின் பிழையென்று கூறிய இராமன், இங்கு அவர்கள் பிழையாக இருப்பினும் அதற்காக அவரைச் சினத்தலோ தண்டித்தலோ கூடாது என்பதை விளக்கு கின்ருன். இலக்குவன் அச்சொல்லையும் திறமையாக மறுக்கின்ருன்.

'நற்ருதையுநீ தனிநாயகனீ வயிற்றிற்
பெற்ருயு நீயே பிறரில்லை'

என்று கூறித் தயரதனும் கைகேயியும் தனக்குத் தந்தையும் தாயும் அல்லர் ஆகலின் அவர்களைத் தண்டித்தலால் தனக்குத் தீங்கு இல்லை என்ற தன்முடிவை விளக்கி இலக்குவன், இராமன் கருத்திற்கு உடன் படாதவனுய் உருத்திரன் போலச் சீற்றமிக்கவனுகின்ருன். இனி ஆறுதல் மொழியால் இலக்குவன் சீற்றத்தைத் தணிக்க இயலாது என்பதை உணர்ந்த இராமன், தன் உறுதியான முடிபு இன்னது என்பதை உணர்த்தி இலக்குவன் முயற்சியைப் பயனற்றதாக்குவதே செய்யத்தக்கது என்பதை உணர்ந்து உணர்த்துகின்ருன்.

'வரம் பெற்றவள்தான் இவ்வையம் சரதம் உடையாள்; அவள் என் தனித்தாதை செப்பப் பரதன் பெறுவான்; இனி, யான் படைக் கின்ற செல்வம் விரதம்; இதின் நல்லது வேறு இனி யாவது?' என் பது அவன் வரையறுத்த பேச்சு. இலக்கணத்தில் பொதுவிதியைச் சிறப்புவிதி விலக்கிச் சிறப்புறுவதுபோலத் தயரதன் இராமனுக்கு அரசளிப்பதாக இயல்பாகக் கூறிய சொல்லைக் கைகேயிக்கு 'இராம னுணையாகக் கொடுக்கின்றேன்' என்ற அவன் சத்தியவாக்கு வென்று சிறந்தது. கைகேயி, வரம் இன்னதென்று விளக்காமலே 'பண்டைய இன்று பரிந்தளித்தி' என்று கேட்டபோது, 'உள்ள முவந்தது செய்வ னென்று லோவேன்; வள்ளலிராமன் உன்மைந்தன் ஆணை' என்று இராமன்மேல் ஆணையிட்டுக் கூறியுள்ளமை காண்க. தயரதன் இராம னுக்கு அரசு அளிப்பதாகக் கூறியபொழுது இவ்வாறு ஆணை கூறிக் கொடுக்கவில்லை என்பது நினைதல்வேண்டும். இவ்விரண்டில் எச் சொல் உறுதியானது என்று ஆராயும்போது சத்தியவாக்கோடு கைகேயி பெற்ற வரமே உறுதியானது என்பது தெளிவாகும். சத் தியம் செய்து கொடுத்தவாக்குத் தவறினல் வாய்மையில் தவறின தாகுமேயன்றி மகன்மேல் வைத்த அன்பால் மரபின்படி கூறிய சொல் தவறினல் வாய்மை தவறியது ஆகாது. இயல்பாக ஒருவன்

கூறும் சொல்லினும் 'சத்தியமாகச் சொல்லுகின்றேன்' என்று கூறிச் சொல்லும் சொல் சிறப்பாக மதிக்கப்படுவதை உலகியலில் வைத்துக் காணலாம். இவ்வேறுபாடு தோன்றவே இராமன், 'சரதம் வரம் பெற்றவள்தான் இவ்வையம் உடையாள்' என்பதை உறுதியாகக்கூறி, இலக்குவன், கைகேயி மெய்யைச் சிதைவித்ததாகவும் தயரதன் ஈந்து வைத்து இல்லை என்றதாகவும் கூறிய வாதம் பொருந்தாமை புலப் படுத்தியவாறு காண்க. இலக்குவன்கொள்கை பொருந்தாமை யுணர்த்தவே முன் பொதுமக்கள்கூறிய 'முன்னே இராமனுக்கு அர சைக் கொடுத்துவிட்டுப் பின்னே அதனைப் பரதனுக்குக் கொடுத்தால் பிழையாதோ மெய்' என்ற சொல்லும் பொருந்தாமையுணர்த்திய வாருயிற்று.

சரதம் வரம்பெற்றவள்தான் இவ்வையமுடையாள் எனக் கூட்ட வேண்டும். இச்சொல்லின் உறுதியையும் முறைமையையும் நோக்குக. தன் உறுதியான கொள்கை இன்னதென்பதைத் தெளிவித்த பின் இராமன், இலக்குவன் சினம் தவருனது என்பதை எடுத்துக் காட்டும் முறை சிறப்பாக அமைந்துளது.

'மையல் தோன்ரு நெறிவாழ் துணைத் தம்பியைப் போர் தொலைத்தோ?
சான்ேரர் புகழுந் தவத்தாதையை வாகை கொண்டோ?
ஈன்ருளை வென்ரே? இனி இக்கதம் தீர்வது'

என்கின்ருன். இலக்குவன் சினம் மூண்டது இம்மூவர்மேல்தான்; இம் மூவரும் குற்றமற்றவர்கள் என்பதும் போர்க்குரியர் அல்லர் என்பதும் விளங்குமாறு, 'மையல் தோன்ரு நெறிவாழ் துணைத்தம்பி' எனவும், 'சான்ேரர் புகழும் தவத்தாதை' எனவும், ஈன்ருள் எனவும் சிறப்பித் துக் கூறிய திறம் போற்றற்குரியது. இகழ்ச்சிக் குறிப்புத் தோன்ற இராமன் கூறிய இச்சொல்லிற்கு மறுமொழிகூற இயலாதவனுய் இலக்குவன், 'தெவ்வர் சொல்லும் சொல்லுஞ் சுமந்தேன்; இருதோ ளெனச் சோம்பி ஓங்குங் கல்லுஞ் சுமந்தேன்; கணைப்புட்டிலும் கட்ட மைந்தவில்லும் சுமக்கப் பிறந்தேன் வெகுண்டென்னே?' என நொந்து கூறுகின்ருன். மலைபோன்ற தோளும் கட்டமைந்த வில்லும் கணைப் புட்டிலும் வெறும் சுமையாக அமைந்தனவேயன்றித் தன் அண்ண னுக்கு அல்லல் இழைத்தாரை வெல்லப் பயன்படுத்தமுடியாமையின் 'சுமக்கப் பிறந்தேன்' எனத் தன்னையே இழித்துக் கூறுகின்ருன். இச்சொல்லாலும் இலக்குவன் சினம் தணிந்ததாகத் தோன்றவில்லை. அண்ணன் ஆணையால் சினம் தவிரவேண்டியுளதே என்ற ஏக்கம் அவன் சொல்லில் காணப்படுகின்றது. அதை உணர்ந்த இராமன் தன் சொல் திறமையை வேறுவகையாகப் புலப்படுத்தித் தணிக்கின் ருன். தந்தையின்சொற்படி நடப்பது தன்கடன் ஆனது போலத் தன்சொற்படி நடப்பது தம்பியின்கடன் என்பது இராமன் கருத்து.

இதை வெளிப்படக் கூருமல் குறிப்பாகப் பெறவைக்கும்முறை இலக்கு வனைப் பொறுமைமேற்கொள்ளச் செய்துவிடுகின்றது.

'நன்சொற்கள் தந்து ஆண்டு எனை நாளும் வளர்த்த தாதை
தன்சொற்கடந்து எற்கு அரசாள்வது தக்கதன்ருல்
என்சொற்கடந்தால் உனக்கு யாதுளது ஈனம் ?'

என்பது இராமன் இடித்துக்கூறிய சொல். இதைக்கேட்ட இலக்குவன், சீற்றம் துறந்தான்; எதிர்நின்று தெரிந்து செப்பும் மாற்றம் துறந்தான்; தணிவெய்தி நின்ருன். இராமன், அவனைத் தழுவிக்கொண்டு பின் சுமித்திரை கோயிலை அடைகின்ருன். தண்டக வனத்திற்குச் செல்ல அமைந்த அவர்களைக் கண்டவுடன் சுமித்திரை பெருந்துயருற்றுப் புவியில் புரளுகின்ருள். அவளுக்கு வேண்டிய ஆறுதல் மொழிகளைத் திறப்படக்கூறி விடைபெற்றுக்கொண்டு இலக்குவனேடு புறப்பட்டான்.

புறப்பட்ட இராமன், கைகேயியின் வரத்தால் காடுபுகும் கடமை தனக்குமட்டுந்தானே! அக்கடப்பாடு இலாத இலக்குவனையும் காட்டிற்கு அழைத்துச் சென்று வருத்துவானேன் ? என்ற எண்ணத்தாலோ அல்லது, அவன் அன்பின் அகலத்தைக் காணும் கருத்திஞலோ அவனை நோக்கி ஒன்று கூறுகின்ருன். 'யான் கூறும் உறுதியை மறுக்காமல் கேள். தாயரும் தந்தையும் முன்னை நிலையர் அல்லர்; வெந்துயரில் மூழ்கியுள்ளார்கள் ; என்னையும் பிரிந்து மிகவருந்துவர் ; அவர்கள் வருந்தாவண்ணம் என் பொருட்டு அவர்க்கு உதவியாக நீ இங்கு இரு' என்பது அவன் வேண்டுகோள். எதிர்பாராத இச் சொல்லைக் கேட்ட இலக்குவன், திடுக்கிட்டு விம்முவாஞய்ச் சுருக்கமாகக் கூறுகின்ருன். 'ஈண்டுனக் கடியனேன் பிழைத்தது யாது?' என்பது அவன் கேள்வி. நீருள வெனினுள மீனும் நீலமும்; அதுபோல நானும் சீதையும் ஆருளர் எனினுளம்? என்பது அவன் அடுத்தகேள்வி. தான் யாதும் பிழைசெய்யவில்லை என்பதையும் நீர் இல்வழி இறக்கும் மீன்போல இராமனைப் பிரிந்து உயிர்வாழ இயலாத தன் அன்பின் உறுதியையும் இக்கேள்விகளால் உணர்த்திய இலக்குவன், முடிவாக ஒன்று கேட்கின்ருன்.

'செய்துடைச் செல்வமோ யாதுந் தீர்ந்தெமைக்
கைதுடைத் தேகவும் கடவையோ ஐயா ?'

என்பது அவன் கேள்வி. முன், செல்லுஞ் சொல் வல்ல இராமன் இங்குச் செல்லாச் சொல்லன் ஆகின்ருன். இலக்குவன் அன்புப் பிணிப்போடு கேட்கும் கேள்விக்கு அவன் சொல்வன்மைகாட்டி விடை கூற இயலவில்லை. இலக்குவன் அன்பு என்னும் மூடியால் இராமன் வாயை அடைத்துவிடுகின்ருன். இலக்குவன் அவ்வாறு,

'உரைத்தபின் இராமனென்று உரைக்க நேர்ந்திலன்
வரைத்தடந் தோளினன் வதனம் நோக்கினன்
விரைத்தடந் தாமரைக் கண்ணின் மிக்கநீர்
நிரைத்திடை யிடைவிழ நெடிது நிற்கின்றான்'

அரசச்செல்வத்தை இழந்து அருங்கான் அடையத் துணிவுகொண்டு இடுக்கண் வருங்கால் நகுகின்ற உள்ளத்தவனாக விளங்கும் இராமன், தான்படும் அல்லலைத் தம்பியும் பட வருகின்றானே என்று எண்ணும் போது இலக்குவன் கலக்கத்தோடு அவன் கருத்தும் கலங்குகின்றது. கமலம்போன்ற அவன் கண்கள் நீரைப் பெருக்குகின்றன; செய்வதறியாது நெடிதுநிற்கின்றான். சொல்லால் முன்வென்ற இராமன், அன்பால் இலக்குவனுக்குத் தோற்றுவிடுகின்றான். பின் வசிட்டன் வருகின்றான் ; இராமனைக் காடுபுகாமல் தடுக்கத் தன் நுண்ணறிவு தோன்ற அவன் கூறிய சொற்களை இராமன், தன் நேர்மையும் இனிமையும் நிறைந்த சொற்களால் மறுத்துக் கூறிச்செல்லும் சொல் வல்லான் ஆகின்றான். இராமனும் இலக்குவனும் அம்முனிவனை வணங்கிவிட்டு மலர்ந்த முகத்துடன் அரண்மனைவாயில் வழி நடக்கின்றார்கள். அவர்கள் மரவுரி தரித்துச் செல்வதைக் கண்டு மக்களும் மன்னுயிர்களும் படும் அல்லல் எல்லையில்லாதது. அதனைக் கம்பர் நாற்பத்தேழுசெய்யுட்களால் மனமுருகிக் கூறியுள்ளார்.

## சீதையின் பேச்சு

தெருவழி நடந்த அவ்விருவரும் சீதையின் மாளிகையை அடைகின்றார்கள். தாயரும் அந்தணரும் பிறரும் அழுதுகொண்டு வருவதையும் இராமனும் இலக்குவனும் மரவுரிதரித்திருப்பதையும் கண்டு சீதை திடுக்கிட்டு எழுகின்றாள். எழுந்த சீதையை மாமியர் தழுவி அழுது ஏங்குகின்றார்கள். அவர்கள் துன்பத்திற்குக் காரணம் அறியாத சீதை, இராமனை நோக்கி, 'மன்னனுக்கு ஏதேனும் நேர்ந்ததோ?' என்று வினவுகின்றாள். இராமன் அமைதியாகக் கலக்கமின்றிச் சொல்லுகின்றான். 'என்தம்பி பரதன் அரசுபுரிவான்; யான் தாய்தந்தையர் ஆணையின்படி காடு சென்று மீள்வேன்; நீ இங்கு வருந்தாது இரு' என்பது அவன் சொல். அச்சொல்லே சீதையின் வினாவுக்கு விடையாகவும் அமைந்தது; தன் புறப்பாட்டை உணர்த்தியதாகவும் அமைந்தது. அச்சொல்லைக் கேட்ட சீதை,

நாயகன் வனம் நண்ணலுற்றான் என்றும்
மேய மண்ணிழந்தானென்றும் விம்மலள்
நீவருந்தலை நீங்குவென் யானென்ற
தீய வெஞ்சொல் செவிசுடத் தேம்புவாள்.

தன் கணவன் வனம்புக நேர்ந்தமைக்கு அவள் வருந்தவேண்டும்; அதற்கு மேலாக அவன் பெற்ற அரசை இழந்தமைக்கு வருந்தி யிருக்கவேண்டும்; ஆனல் அவ்விரண்டு துன்பத்தினும் இராமன் அன்பற்ற சொல்லே பெருந்துன்பமாக இருத்தலின் அதற்காகத் தேம்புகின்ருள். இலக்குவன் கூறியபோது தன்னிலையையும் சீதை நிலையையும் ஒன்ருக இணைத்து, 'நானும் சீதையும் ஆருளரெனினுளம் அருளுவாய்' என்று கூறியிருப்பவும், இராமன் இவ்வாறு கூறியது எது பற்றியோ? சீதையின் அன்புறுதியைக் காணும் நோக்கத்தாலோ அல்லது, கைகேயியின் வரத்தால் கான்புகும் கடப்பாடிலாத சீதையை உடன் அழைத்துச்சென்று வருத்த விரும்பாமையாலோ இவ்வாறு கூறிவிட்டான். அவன் சொல் சீதையின் செவிகளைச் சுடுகின்றது. 'தந்தையும் தாயும் ஏயதைச் செய்வது நன்றே! என்னை ஏன் இங்கு இரு என்ருன்?' என்று நினைக்க நினைக்க அவட்கு உயிர் விடுவதுபோன்ற துன்பம் மேலிடுகின்றது. அவள் துன்பத்தை ஆற்ற இராமன், 'நின் அடிமலர்கள் அரக்கின் உருக்குப்போன்று அழலுகின்ற காட்டில் உள்ள கற்களால் தாக்குண்ணுதற்கேற்ற கடுமையுடைய அல்லவே' என்ற காரணத்தால் அங்ஙனம் கூறியதாகக் கூறுகின்ருன். செல்லும்சொல் வல்ல அவன் சொல்லையும் வெல்லும் சொல்லைச் சீதை சொல்லுகின்ருள்.

பரிவிகந்த மனத்தொடு பற்றிலா
தொருவுகின்றனை ; ஊழி அருக்கனும்
எரியுமென்பதியாண்டையது ? ஈண்டு நின்
பிரிவினுஞ்சுடுமோ பெருங்காடென்ருள்.

இரக்கமற்ற மனத்தோடு என்பால் சிறிதும் பற்றில்லாமல் என்னை விட்டுநீங்குகின்ருய் அன்றிக் காடு என்னைச் சுடும் என் பதற்காக அன்று; ஊழியிறுதியில் தோன்றும் சூரியனும் என்னைச் சுடுவான் என்பது எங்கு நிகழத்தக்கது? நின் பிரிவுத்துயர் சுடு வதைக்காட்டிலும் அப்பெருங்காடு சுடுமோ? என்ற வினு இராமனை எண்ணத்தில் ஆழ்த்திவிடுகின்றது; யான் பிரியின் இவள் தரியாள்; இவளைக் கண்ணீர்க்கடலில் இறந்துபடுமாறு விட்டுச்செல்வது தகுமா? என்செய்வது? என எண்ணுகின்ருன்.

இராமன் அமைதியை அறிந்த சீதை, தான் உடன்வர அவன் உடன்பட்டதாக எண்ணி, மனையகம்புகுந்து மரவுரிதரித்து வந்து அவன்கையைப்பற்றிநிற்கின்ருள். புன்னகையோடு நிற்கும் சீதை யைப் பார்த்து இராமன் வெகுண்டு, 'பின்விளைவு எண்ணமல் என் னுடன் வர அமைந்துவிட்டாய்; எனக்கு எல்லையில்லாத அல்லல் தரு வாய்' என்கின்ருன். கேட்டாள் சீதை; சீற்றம் பொங்குகின்றது.

"பெற்ற அரசை இழந்தது துன்பமில்லைபோலும்! காயும் கனியும் தின்று காட்டில் அலைய நேர்ந்தது துன்பமில்லைபோலும்! உனக்கு வந்துள்ள துன்பம் யான் உடன்வருவதாகிய ஒன்று மட்டுமே போலும்; என்னைத் துறந்த பின் நீ அடைவது எல்லாம் இன்பமே போலும்'! என்று தன் அன்புரிமை தோன்றக் கூறுகின்றாள். அவள் அன்பும் அறனும் நிறைந்த பணிமொழிக்கு இராமன் மறுமொழிகூற முடியவில்லை. 'பிறிதோர் மாற்றம் பெருந்தகை பேசலன்' என்று கம்பர் கூறி, செல்லும் சொல்வல்லான் இங்கும் அன்புக்குத் தோற்றதை விளக்குகின்றார்.

இப்படலத்தில் கோசலையும் இலக்குவனும் சுமித்திரையும் வசிட்டனும், சீதையும் தம்மாற்றல் தோன்றப் பேசிய திறங்களும் இராமன் அவ்வவர்நிலைக் கேற்பக் கூறித் தன் கொள்கையை நிறுவிய திறனும், அன்பிற்கு எளியனாய் இலக்குவனுக்கும் சீதைக்கும் விடைகூற இயலாது தோல்வி மேற்கொண்ட பெருந்தன்மையும் நினைந்து நினைந்து வியக்கத்தக்க பெருமையுடையனவாதல் காணலாம்.



# 4. நகர் நீங்கு படலம்

1695. குழைக்கின்ற கவரி யின்றிக்
கொற்றவெண் குடையு மின்றி
இழைக்கின்ற விதிமுன் செல்லத்
தருமம்பின் னிரங்கி யேக
மழைக்குன்ற மனையான் மௌலி
கவித்தனன் வருமென் றென்று
தழைக்கின்ற வுள்ளத் தன்னாண்
முன்னொரு தமியன் சென்றான்.

குழைக்கின்ற கவரி இன்றிக்,
கொற்ற வெண்குடையும் இன்றி,
இழைக்கின்ற விதி முன் செல்லத்,
தருமம் பின் இரங்கி ஏக,
'மழைக்குன்றம் அனையான் மௌலி
கவித்தனன் வரும்' என்று என்று,
தழைக்கின்ற உள்ளத்து அன்னாள்
முன், ஒரு தமியன் சென்றான்.

பொ :—மேகம் மொய்த்த குன்றினை ஒத்த இராமன், முடிசூடி வருவான் என்று பலமுறை எண்ணி மகிழ்கின்ற மனத்தையுடைய கோசலைக்கு முன், இரட்டுகின்ற கவரிஇல்லாமல் வெற்றியுறும் வெண்குடையும் இல்லாமல் நன்மை தீமைகளைச் செய்கின்ற ஊழ் முன் அழைத்துச் செல்லத் தருமம் மனம் வருந்திப் பின் தொடரத் தனியனாகச் சென்றான்.

கு :—கரிய நிறமும் துளக்கமில் தோற்றமும் உடைமை பற்றி இராமனை 'மழைக்குன்ற மனையான்' என்றார். 'என்றென்று' அடுக்கு; பன்மையுணர்த்திற்று. தழைத்தல்-மகிழ்தல்; பூரித்தல். குழைத்தல், ஈண்டு இரட்டுதலையுணர்த்திற்று. கவரி ஆகுபெயராய்ச் சாமரையையுணர்த்திற்று. கூடார்பால் வெய்யதாய்நின்று வெற்றிகொண்ட குடையாதலின் 'கொற்றவெண்குடை' என்றார். அறத்திற்கு அடையாளமாதலின் குடைக்கு வெண்மை உரித்தாயிற்று. 'திருமாலின் அமிசமாக வந்த இராமனும் விதிக்குக் கட்டுப்பட்டே நடந்தான்' என்பது தோற்ற 'விதிமுன் செல்ல' எனவும் தன்னைக் காக்கவந்தவன்பின்

செல்லலே முறையென்று சென்றது என்பது தோற்ற, தருமம் பின் ஏக என்றும் கூறினர். தருமம் இரங்கியது, இராமன் காடுபுகுதல் கண்ட ஏக்கத்தால். தேவசபையில் செய்துகொண்ட முடிபினையே இங்கு 'விதி' என்றார். ஆதலின் அவ்விதிவழி செல்லுதல் இராமன் தெய்வத்தன்மைக்கு இழுக்கின்மை யறிக. இராமன் நடக்கையே அறம் எனப்படும்; ஆதலின் தருமம் பின் சென்றதாகக் கூறினர் எனலுமாம். கவரி இரட்டுவோரும் குடைதாங்குவோரும் இன்றி வருதல் தோன்றத் 'தமியன் சென்றான்' என்றார். 'கவித்தனன்' முற்றெச்சம். மகனை மன்னனைக்காண விழைந்த கோசலை ஏமாற்றத்தால் ஏங்குமாறு இராமன் சென்றான் என்க. (1)

## கோசலையின் வினா

1696. புனைந்திலன் மௌலி குஞ்சி
மஞ்சனப் புனித நீரால்
நனைந்தில னென்கொ லென்னு
மையத்தா ணளின பாதம்
வனைந்தபொற் கழற்கால் வீரன்
வணங்கலுங் குழைந்து வாழ்த்தி
நினைந்ததென் னிடையூ றுண்டோ
நெடுமுடி புனைதற் கென்றாள்.

'புனைந்திலன் மௌலி! குஞ்சி
மஞ்சனப் புனித நீரால்
நனைந்திலன்! என்கொல்?' என்னும்
ஐயத்தாள், நளின பாதம்,
வனைந்த பொன் கழல் கால் வீரன்
வணங்கலும், குழைந்து வாழ்த்தி,
'நினைந்தது என்? இடையூறு உண்டோ
நெடுமுடி புனைதற்கு?' என்றாள்.

பொ :—'முடிபுனையப் பெற்றிலன்; தூய மஞ்சனப் புனலால் குடுமி நனையப்பெற்றிலன்; காரணம் என்னையோ?' என்ற ஐயமுடையவளாகிய கோசலை, தன் தாமரைமலரனைய பாதங்களைப் பொன்னாலியன்ற கழல் அணிந்த கால்களையுடைய இராமன் வணங்குதலும், மனமுருகி வாழ்த்திவிட்டு, '(முடிசூடுமுன் நீ இங்கு வர) நினைந்தது ஏன்? நெடிய முடிபுனைந்துகொள்ளுதற்கு இடையூறு நேர்ந்தது உண்டோ?' என்றாள்.

கு :—குஞ்சி-குடுமி. புனித நீர் என்றது, கங்கையே முதலவாய கன்னியீருன தீர்த்தப்புனலையும் நாலுவாரியின் புனலையும். முடிசூட்டுங் கால் நீராட்டுதல் மரபு. கொல் அசை. 'ஐயத்தாள்' வினையாலணையும் பெயர். நளினம்-தாமரை. பொன் கழல் வனைந்த கால் என்க. 'வணங்கலும்' உம்மீற்று வினையெச்சம். குழைதல்-மனமுருகுதல். 'முடிபுனைந்து வருவான்' என எண்ணியிருந்தவட்குமுன் முடிபுனை யாது இராமன் வருதலின் இங்ஙனம் வினவினுள்; முடிபுனைதற்கு முன் என்பால் ஏதேனும் பெற நினைந்து வந்தாயோ? அல்லது, முடிபுனை தற்கே இடையூறு உண்டாயிற்ருே? என்ற வினு இரண்டனுள் இரண் டாவது வினு உண்மையாதலை உணர்க. 'கழற்கால்வீரன்' என்றது, தாடகை முதலிய அரக்கரைக் கொன்றும் பரசுராமனை வென்றும் எல் லோராலும் அறியப்பட்ட வீரமுடைய இராமனே அரசனுதற் குரியவன் என்னும் குறிப்புணர்த்திற்று. (2)

## 'பரதன் முடிசூடுகின்ருன்' என இராமன் கூறல்

1697. மங்கை யம்மொழி கூறலு மானவன்
★ செங்கை கூப்பிநின் காதற் றிருமகன்
பங்க மில்குணத் தெம்பி பரதனே
துங்க மாமுடி சூடுகின் ருனென்ருன்.

மங்கை அம்மொழி கூறலும் மானவன்,
செங்கை கூப்பி, "நின் காதல் திருமகன்,
பங்கம் இல் குணத்து எம்பி பரதனே
துங்க மா முடி சூடுகின்ருன்" என்ருன்.

பொ :—கோசலை அவ்வார்த்தையைச் சொன்னவுடன் பெருமை யுடைய இராமன், சிவந்த தன் கைகளைக் குவித்து வணக்கம் தெரி வித்துவிட்டு, "நின் காதல்புதல்வனும் குற்றம் அற்ற குணத்தை யுடையவனும் என் தம்பியுமாகிய பரதனே பெருமையுடைய சிறந்த முடியைப் புனையப்போகின்ருன்" என்று கூறினுன்.

கு :—'மங்கை' பருவத்தையுணர்த்தாது 'பெண்டு' என்னுந் துணையாய்நின்றது. மானவன்-மனுகுலத்துப் பிறந்தவன் எனலு மாம். 'யான் முடி சூடிக் கொள்ளவில்லை' என மறைவிடை பகர்தல் முறையன்று என்று அப்பொருள் தோன்ற உறுவதுகூறலாகப் பரதனே முடிசூடுகின்ருன் என்றும், 'அவனும் என்போல் நின் அன்பிற்குரிய மகனே' என்பது தோன்ற, 'நின் காதல் திருமகன்' என்றும், 'முடிசூடுதற்கேற்ற தகுதியும் உரிமையும் நினக்கு நன்மை

செய்யும் இயல்பும் உடையவன்' என்பது தோன்றப் 'பங்கமில் குணத்தெம்பி' என்றும், 'உடன்பிறந்தார் பிறர்க்கும் பொதுவாக்காது ஒருவனே சூடப்போகின்றான்' என்பது தோன்ற, 'பரதனே' என்றும் கூறினான். ஏகாரம் பிரிநிலை. பங்கம்-குற்றம். எக்குற்றமும் அவன் பால் இன்மை தோன்றப் 'பங்கமில் குணம்' கூறினான். துங்கம்—பெருமை; சூரியகுலமன்னரெல்லாம் சூடிய பெருமையுடையதாதல் நினைக்க. (3)

## கோசலை 'முடிசூடப் பரதன் தக்கவனே' எனல்

1698. முறைமை யன்றென்ப
தொன்றுண்டு மும்மையின்
நிறைகு ணத்தவ
னின்னினு நல்லனால்
குறைவி லன்னெனக்
கூறின ளால்வர்க்கும்
மறுவி லன்பினில்
வேற்றுமை மாற்றினாள்.

"முறைமை அன்று என்பது ஒன்று உண்டு; மும்மையின்
நிறை குணத்தவன் நின்னினும் நல்லனால்;
குறைவு இலன்;" எனக் கூறினள், நால்வர்க்கும்
மறு இல் அன்பினில் வேற்றுமை மாற்றினாள்.

பொ :—"(மூத்தவன் இருக்க இளையவன் முடிசூடுதல்) முறையன்று என்பதாகிய ஒரு குறையுண்டு ; (அது பற்றியென் ?) நிறைந்த (குணமுடைய பரதன் நின்னைக் காட்டிலும் மும்மடங்கு நல்லவன்; முடி சூடுதற்கு உரிய தகுதிகளில்) குறைவில்லாதவனே" என்று புதல்வர் நால்வர்க்கும் குற்றமற்ற அன்பு செய்வதில் வேறுபாடு இல்லாதவளாகிய கோசலை கூறினாள்.

கு :—ஒன்று என்றது, ஒரு குறையை; ஆகுபெயர். 'மும்மையின் நல்லன்' என இயைக்க. தான் பெற்ற மகனைக் காட்டிலும் சக்களத்தியின் மகனை நல்லவன் என்று கூறற்கேற்ற நடுவுநிலைமை யுடையவள் என்ற கருத்துத் தோன்ற, "நால்வர்க்கும் மறுவில் அன்பினில் வேற்றுமை மாற்றினாள்" எனக் கோசலைக்குப் பெயர் கூறினார். நால்வர்பாலும் ஒத்த அன்புடையவள் என்பது உணரலாம். இதனால் பரதன் முடிசூடத் தகுதியுடையவனே என்பதைக் கோசலை உடன்பட்டாள் என்பது கருத்து. (4)

## கோசலை 'பரதனோடு ஒன்றி வாழ்க' எனல்

1699. என்று பின்னரு மன்னவ னேவிய
தன்றெ னுமை மகனே யுனக்கறன்
நன்று நும்பிக்கு நானில நீகொடுத்
தொன்றி வாழுதி யூழி பலவென்றாள்.

என்று, பின்னரும், "மன்னவன் ஏவியது
அன்று எனுமை மகனே! உனக்கு அறன்;
நன்று நும்பிக்கு நானிலம் நீ கொடுத்து
ஒன்றி வாழுதி ஊழி பல" என்றாள்.

பொ :—என்று கூறிவிட்டுப் பின்னும், "மகனே! மன்னவன் கட்டளையிட்டதை முறையன்று என மருது ஏற்றுக்கொள்வதே உனக்கு அறமாகும்; உன் தம்பிக்கு நாட்டைக் கொடுத்துவிட்டு அவனோடு ஒற்றுமையுற்றுப் பல ஊழிகாலம் நன்றாக வாழ்க" என்று கூறினாள்.

கு :—'முறைமையன்று என்பது ஒன்று உண்டு' என்று தான் கூறியதைக்கொண்டு இராமன் தந்தையின் கட்டளையை மறுத்து விடுவானோ என்ற எண்ணத்தால், "மன்னவனேவியது அன்றெனுமை... உனக்கு அறன்" என்றாள். "பரதனே முடிசூடுகின்றான்" என்று இராமன் கூறியது கொண்டு, அது தயரதன் கட்டளையாக இருக்கலாம் என்ற ஊகத்தால் கோசலை இவ்வாறு கூறினாள். நன்று ஒன்றி வாழுதி என்று இயைக்க. 'நன்று கொடுத்து' என்று இயைப்பினும் ஆம். 'நல்ல எண்ணத்தோடு கொடுத்து' என்பது பொருளாம். மூத்த மகன் என்ற முறைமையால் உனக்கு மன்னவன் கொடுத்த நானிலத்தை ஏனை மூவரில் மூத்தவனாகிய நின் தம்பி பரதனுக்கு நீ கொடுத்தல் முறையே என்பாள் 'நன்று கொடுத்து' என்றாள். 'நும்பிக்கு நீ கொடுத்து' என்ற சொல்லாற்றலை நினைக்க. ஒன்றுதல், உள்ளத்தால் ஒருவராதல். மன்னவன் கட்டளை மற்றொன்றும் இருக்கலாம் என்பதை உணராது 'ஒன்றிவாழுதி' எனக் கோசலை கூறினாள். இதனால் தன் மகன் அரசனாகவில்லையே என்ற கவலை அவட்கு இல்லை என்பது பெறப் படும். (5)

## இராமன் 'மன்னனேவிய மற்றோர் பணியுண்டு' எனல்

1700. தாயு ரைத்தசொற் கேட்டுத் தழைக்கின்ற
தூய சிந்தையத் தோமில் குணத்தினான்
நாய கன்னெனை நன்னெறி யுய்ப்பதற்
கேய துண்டொர் பணியென் றியம்பினான்.

தாய் உரைத்த சொல் கேட்டுத், தழைக்கின்ற
தூய சிந்தை அத் தோம் இல் குணத்தினுன்,
"நாயகன் எனை நல் நெறி உய்ப்பதற்கு
ஏயது உண்டு ஓர் பணி" என்று இயம்பினுன்.

பொ :—தாய் கூறிய சொல்லைக் கேட்டு மகிழ்கின்ற தூய மனத்தையும் குற்றமற்ற குணத்தையும் உடைய அவ்விராமன். "அரசன் என்னை, நன்னெறி செலுத்தவேண்டும் என்ற எண்ணத்தால் ஏவியதோர் பணியுண்டு" என்று கூறினுன்.

கு :—தன்னைப் போலவே தாயும் தம்பிக்குத் தரையைத் தர இசைந்துவிட்டாளே என்பதால் இராமனுக்கு உள்ளம் தழைத்தது. இராமன் அவா இல்லாதவன் என்பது தோன்றத் தூய சிந்தை கூறினர். "தூஉய்மை யென்பது அவாவின்மை" (364) என்ற வள்ளுவர் வாக்கை நோக்குக. அவா அற்ற மனத்தினன் ஆதலின் 'நும்பிக்கு நானிலம் நீ கொடுத்து' என்ற கோசலையின் சொல்லிற்கு மகிழ்ந்தான். தோம் - குற்றம். பிறர் செய்த குற்றங்களையும் குணமாகக்கொண்டு போற்றுகின்றவன் என்பது தோன்றத் 'தோமில் குணத்தினுன்' என்ருர். நாடாள இருந்த தன்னைக் காடாளச் செய்த குற்றமான செயலையும் தன்னை நன்னெறி செலுத்த உன்னிச் செய்த நற்செயலாக மதித்தற்கு ஏற்புடைமை அப்பெயரால் விளக்கியவாறு. நாயகன் - மன்னவன். 'தந்தை' என்னுது, 'நாயகன்' என்றது மன்னன் பணியாதலின் தவருது செய்தல்வேண்டும் என்னும் கருத்தினது. பணி இன்னதென விவரிக்காமல், 'ஏயதுண்டோர் பணி' என்று கூறியது, அப்பணியின் கடுமைகேட்டுத் தாயுள்ளம் உடையும் என்ற எண்ணத்தாலாகும். (6)

## இராமன் தந்தை பணி இதுவெனல்

1701. ஈண்டு ரைத்த பணியென்னை யென்றவட்
காண்டொ ரேழிரெ டேழகன் கானிடை
மாண்ட மாதவ ரோடுடன் வைகிப்பின்
மீண்டு நீவரல் வேண்டுமென் ருனென்ருன்.

'ஈண்டு உரைத்த பணி என்னை?' என்றவட்கு
"ஆண்டு ஓர் ஏழிரெடு ஏழ் அகன் கான் இடை
மாண்ட மாதவரோடு உடன் வைகிப் பின்
மீண்டு நீ வரல்வேண்டும் என்ருன்" என்ருன்.

பொ :—'இப்பொழுது சொன்ன பணி என்ன?' என்று (விரைவுடன் வினவிய) கோசலைக்கு (விடையாக) 'ஏழினோடு சேர்ந்த ஏழாண்டுகள் இடமகன்ற கானகத்தில் மாட்சிமையுடைய பெருந்தவமுனிவருடன் தங்கியிருந்து பின் நீ மீண்டு வரவேண்டும்' என்று மன்னன் ஏவினான்' என்று இராமன் கூறினான்.

கு :—அரசுதுறத்தலாகிய முதற்பணியினும் பின்கூறும் பணி கடிதாக இருக்குமோ என்ற ஏக்கத்தால் கோசலை, இராமனே சொல்லும் வரை தாழ்த்தாமல், 'உரைத்தபணி என்னை'? என்று விரைந்து கேட்டாள். அன்னைக்குக் குறைந்த காலமாகத் தோற்றவேண்டி ஆண்டு பதினான்கு என்னாமல் 'ஏழினொடேழ்' என்றும், மாதவரோடு வாழ்வது ஆதலின் காட்டு வாழ்க்கை கழிபேருவகையூட்டி உய்யுநெறி காட்டவல்லது என்பது தோன்ற 'கானிடை மாண்டமாதவரோடுடன் வைகி' என்றும், ஆண்டே தங்கிவிடமாட்டேன் என்பான் 'மீண்டு நீவரல் வேண்டு மென்றான்' என்றும் கூறினான். 'அகன்கான்' என்றது, நெருக்கமிக்க நகரவாழ்க்கைபோலாது திரிந்து மகிழ்தற்குரிய இடநிறைவுடையது என்பது உணர்த்திற்று. 'எனை நன்னெறியுய்ப்பதற்கு ஏயதுண்டு' என்று மேற்கூறியதை விளக்கியவாறு. மாண்டமாதவரோடு வைகச் செய்தல் நன்னெறியுய்த்தலே ஆதல் காண்க. மாண்ட–மாட்சிமையுடைய. (7)

## கான்புகல் கேட்ட கோசலைநிலை (1702—1707)

1702. ஆங்கவ் வாசக மென்னு மனல்குழை
தூங்கு தன்செவி யிற்றொட ராமுனம்
ஏங்கி னாளிளைத் தாடிகைத் தாண்மனம்
வீங்கி னாள்விம்மி னாள்விழுந் தாளரோ.

ஆங்கு அவ் வாசகம் என்னும் அனல் குழை
தூங்கு தன் செவியில் தொடராமுனம்,
ஏங்கினாள், இளைத்தாள், திகைத்தாள் மனம்,
வீங்கினாள், விம்மினாள், விழுந்தாள், அரோ.

பொ :—அந்தச் சொல் ஆகிய நெருப்பு, கனங்குழை தொங்கும் தன் காதில் படுதற்குமுன் கோசலை இரக்கமுற்றாள்; இளைப்புற்றாள்; மனம் திகைத்தாள்; துக்கத்தால் முகம் வீங்கப்பெற்றாள்; அழுதாள்; கீழ் விழுந்தாள்.

கு :—ஆங்கு, அரோ; அசைநிலை. சுடுந்தொழில் ஒற்றுமையால் 'வாசகம் என்னும் அனல்' என உருவகஞ்செய்தார். உலகத்து

நெருப்பினும் கொடுமை மிக்கது 'இவ்வாசகமென்னும் அனல்' என்பது தோன்றச் செவியில் தொடராமுனம் வருத்தல் கூறினர்; குழை-காதணி. தூங்குதல்-தொங்குதல். அவ்வாசகம் என்றது, கானிடை வைகி மீண்டுவரல் வேண்டும் என்றதை. அச்சொற்றொடர் முழுதும் சொல்லிமுடிதற்குமுன்னரே விம்மிவிழுந்தாள் என்பது கோசலையின் வருத்தமிகுதியுணர்த்திற்று. ஏங்குதல்-இரங்குதல். இளைத்தல் - துன்பம் பொறுக்கமாட்டாது மெலிதல். திகைத்தல்-செய்வதறியாது மயங்குதல். துக்கம் மிக்கபொழுது முகம் வீங்குதல் இயல்பு. விம்முதல்-தேம்பியழுதல். அரோ என்னும் அசைநிலை, துன்பமிகுதியுணர்த்தத் துணையாய்நின்றது. (8)

1703. வஞ்ச மோமக னேயுனை மாநிலம்
தஞ்ச மாகநீ தாங்கென்ற வாசகம்
நஞ்ச மோவினி நானுயிர் வாழ்வெனோ
அஞ்சு மஞ்சுமென் னாருயி ரஞ்சுமால்.

" வஞ்சமோ, மகனே! உனை 'மாநிலம்
தஞ்சமாக நீ தாங்கு' என்ற வாசகம்?
நஞ்சமோ? இனி நான் உயிர் வாழ்வெனோ?
அஞ்சும் அஞ்சும்! என் ஆருயிர் அஞ்சுமால்!"

பொ:—மகனே! மன்னன் உன்னை (அழைத்து) 'நீ இந்நாட்டைப் பற்றுக்கோடாக இருந்து தாங்கு' என்று சொல்லிய சொல், வஞ்சகச் சொல்லோ? அல்லது எனக்கு நஞ்சாகச் சொன்ன சொல்லோ? இச் சொல் கேட்டபின்னரும் நான் உயிர்வாழ்ந்திருப்பேனோ? என் உடம்பாக நின்ற ஐந்துபூதங்களும் அஞ்சுகின்றன; என் அரிய உயிரும் அஞ்சுகின்றது.

கு:—மாநிலம் தாங்கென்று சொல்லிப் பின் வாங்கலின் அச்சொல் வஞ்சகச் சொல்லாதல் வேண்டும் என்பது கருத்து. அச்சொல் இவள் உயிரை மாய்த்தலின், 'நஞ்சமோ' என்றாள். ஐந்தும் என்பது 'அஞ்சும்' எனப் போலியாய்வந்தது. உயிரஞ்சுங்கால் உயிரோடு தொடர்புடைய உடம்பும் அஞ்சுதல் இயல்பாதலின் உடம்பாய்க் கலந்துநின்ற ஐம்பூதங்களும் அஞ்சுதல் கூறினாள். விரைவுதோன்ற அஞ்சும் என்ற சொல் மும்முறை அடுக்கிற்று என்றலும் ஒன்று. ஆல் அசை. தஞ்சம்-பற்றுக்கோடு; ஆதரவு. மாநிலம் தாங்குதலாவது, அரசாளுதல். வாழ்வெனோ? என்ற வினா வாழாமையுணர்த்திற்று; வாழாமைக்குக் காரணம் அச்சொல் கேட்டு உடம்பும் உயிரும் அஞ்சுதலே என்பது விளக்கியவாறு. (9)

1704. கையைக் கையி னெரிக்குந்தன் காதலன்
வைகு மாலிலை யன்ன வயிற்றினைப்
பெய்வ ளைத்தளி ராற்பிசை யும்புகை
வெய்து யிர்க்கும் விழுங்கும் புழுங்குமால்.

கையைக் கையின் நெரிக்கும்; தன் காதலன்
வைகும் ஆல் இலை அன்ன வயிற்றினைப்
பெய் வளைத் தளிரால் பிசையும்; புகை
வெய்து உயிர்க்கும்; விழுங்கும்; புழுங்குமால்.

பொ :—கோசலை மேலும் தன்கையை மற்றொரு கையால் நெரிப்பாள்; தன் அன்புறு புதல்வன் தங்கியிருந்த ஆலிலை போன்ற வயிற்றினை வளைபெய்த தளிர்போன்ற கைகளால் பிசைவாள்; புகைபோல வெப்பமாகப் பெருமூச்சுவிடுவாள்; உமிழ்நீரைக்கூட்டி விழுங்குவாள்; பின் உள்ளம் புழுங்குவாள்.

கு :—துன்பத்தில் கைந்நெரித்தல் பெண்டிர் இயல்பு. வயிறு ஆலிலைபோன்றிருத்தல் பெண்டிர்க்கு அழகு. காதலன்-காதற்புதல்வன். வைகும் வயிறு என்க. புதல்வன் பிரிவிற்கு அஞ்சி அவனையீன்ற வயிறு குழம்புதலின் அதனைக் கையாற் பிசைந்தாள் ஆறுதலாக. ஊழி வெள்ளத்தில் ஆலிலையில் பள்ளிகொள்பவன், இவள் வயிற்றில் தங்குதலின் அவ்வாலிலைபோன்று பெருமையுடைய வயிறு எனப் பொருள்கூறலுமாம். இப்பொருட்கு வைகுதலை ஆலிலைக்கு அடையாக்குக. தளிர் என்றது கைகளை; உவமை ஆகுபெயர். "வளைகள் காந்தளில் பெய்தன அனைய கை" (சித்திரகூடப்–29) என்றது நினைக்க. புகைபோல் உயிர்க்கும் என உவமவுருபு விரிக்க. துன்பத்தால் வறட்சி தோன்றுதலின் உமிழ்நீர்கூட்டி விழுங்கல் வேண்டிற்று. உளம்புழுங்குதல்-மனம்வேதல். ஆல் அசை. (10)

1705. நன்று மன்னன் கருணை யெனுநகும்
நின்ற மைந்தனை நோக்கி நெடுஞ்சுரத்
தென்று போவ தெனவெழு மின்னுயிர்
பொன்றும் போதுற்ற துற்றது போலுமே.

'நன்று மன்னன் கருணை!' எனு நகும்;
நின்ற மைந்தனை நோக்கி, 'நெடுஞ்சுரத்து
என்று போவது?' என எழும்; இன் உயிர்
பொன்றும்போது உற்றது உற்றது போலுமே.

பொ :—"நன்ருக இருக்கின்றது அரசனுடைய அருள்!" என்று கூறிச் சிரிப்பாள்; தன்னருகில் நின்றுகொண்டிருக்கின்ற மகனைப் பார்த்து, "நீண்ட காட்டிற்கு என்றைக்குப் போவது"? என்று கேட்டுக் கொண்டே எழுவாள்; இனிய உயிர் நீங்கும்போது உறும் துன்பம் எல்லாம் இப்பொழுது அடைந்தாற்போன்றவளாய் வருந்துவாள்.

கு :—நன்றல்லாத காடுபுகுத்தலை 'நன்று' என்று குறிப்பால் இகழ்ந்தவாறு; கற்கறித்து, 'நன்கட்டாய்' என்புழிப்போல. 'நகுதல்' எள்ளல் காரணமாகத் தோன்றியது. மைந்தன் என்னும் முறைபற்றிய சிறப்பு அன்பு இல்லையேனும் தன்கீழ்வாழ் குடிமகன் என்ற பொதுவன்பு இருப்பினும் இக்கொடுமை நிகழாது என்பது புலப்படுத்த வேண்டித் தந்தை என்னது, 'மன்னன்' என்ருள். தாயன்பிற்கு வனம் என்ற பொதுச்சொல்லே 'நெடிய கொடிய பாலை வனம்' என்று பொருள் தோற்றுவித்தலின், 'நெடுஞ்சுரம்' என்ருள். சுரம்-பாலைவனம். என்றுபோவது என எழுதற்குக் காரணம் தானும் உடன்போகும் எண்ணத்தாலாகும். விழுந்தாளரோ (1702) என்றது தொடங்கிக், கிடந்தாங்கே கூறினுள் ஆதலின் இங்கு 'எழும்' என்ருர். 'உற்றது' முன்னது, காலவழுவமைதி. (11)

1706. அன்பி ழைத்த மனத்தர சற்குநீ
என்பி ழைத்தனை யென்றுநின் றேங்குமால்
முன்பி ழைத்த வறுமையின் முற்றிஞேர்
பொன்பி ழைக்கப் பொதிந்தனர் போலவே.

'அன்பு இழைத்த மனத்து அரசற்கு நீ,
என் பிழைத்தனை ?' என்று நின்று ஏங்குமால் ;
முன்பு இழைத்த வறுமையின் முற்றிஞேர்
பொன் பிழைக்கப் பொதிந்தனர் போலவே.

பொ :—'நின்னிடத்து அன்பு செய்து பழகிய மனத்தையுடைய மன்னவனிடத்தில் நீ என்னபிழை செய்தாய்?' என்று கேட்டு நின்று கொண்டே முற்பிறவியில் புண்ணியஞ் செய்யத்தவறினமையால் ஆக்கிக் கொண்ட வறுமையின் முதிர்ந்தவர்கள், இடையில் கிடைத்த பொன்னை நழுவி வீழும்படி துணியில் முடிந்தவர்போல வருந்துவாள்.

கு :—இதுகாறும் ஏனைப்புதல்வரினும் இராமன்பால் பேரன்பு காட்டி வந்த தயரதன்பால் இக்கொடுமை நிகழுமோ? எனவும் இராமன்தான் காடுபுகுத்தற்குரிய தவறு ஏதேனும் செய்திருக்கலாமோ? எனவும் நிகழும் ஐயத்தால், "அன்பிழைத்த மனத்தரசற்கு நீ என்பிழைத்தனை"

என்று வினவுகின்றுள். குற்றம் சிறிதும் செய்தறியாதவன் இராமன் என்ற எண்ணத்தாலும் இங்ஙனம் வினவலாம். முற்பிறவியில் புண்ணியம் செய்யாமையால் வறுமை வருதல் உண்டு என்பதை: "இலர் பலர் ஆகிய காரணம் நோற்பார் சிலர் பலர் நோலாதவர்" (குறள்-270) என்றதால் அறியலாம். வறுமையின் முற்றுதலாவது, வறுமைக்கு வரம்பாக நிற்றல். வறுமையால் வாடியவர் இடையில் பொன்னைப் பெற்றும் அதை நன்கு பொதிந்துகொள்ளாமல் நழுவிவிழுமாறு பொதிந்துவைத்தமையால் அப்பொன்னை இழந்து வருந்துமாறுபோலக் கோசலை மகப்பேற்ருல் வறுமையெய்தியிருந்து, பின் வேள்விசெய்து அரிதிற்பெற்ற இராமனை நன்கு வைத்துக் காக்க இயலாமையால் காட்டிற்கு அனுப்பநேர்ந்தமை கருதி வருந்தினுள் என்று இவ்வுவமையை விரித்துரைக்க. பொன் நன்கு பொதிந்து வைத்தற்குரிய அருமையுடையது என்பதை: "வைப்பர், பொறுத்தாரைப் பொன்போல் பொதிந்து" (குறள்-155) என்பதால் அறிக. பொன் பிழைக்கப் பொதிதலாவது, பராக்கால் நழுவி வீழுமாறு முடிதல். "பொன்னைப் பெற்றும் தப்ப முடிந்தேன் பொறியற்றேன்" (உத்தரகாண்டம்-14-9) என்பதால் அது இனிது விளங்கும். வறுமையின் முற்றினுேர் பொன் பிழைக்கப் பொதிந்தனர்போல ஏங்கும் என்பதற்கு 'மிக்க வறுமையுடையவர் (ஆபத்து வருங்காலத்து உதவுமென்று) பொன்னை யிடந்தெரியாமல் புதைத்துவைத்துவிட்டு (ஆபத்து வந்தபோது) வருந்துமாறு போல வருந்துவாள்' என்று பொருள் கூறலும் ஆம். (12)

**1707.** அறமெ னக்கிலை யோவெனு மாவிநைந்
திறவ டுத்ததென் றெய்வதங் காளெனும்
பிறவு ரைப்பதென் கன்று பிரிந்துழிக்
கறவை யொப்பக் கரைந்து கலங்கினுள்.

'அறம் எனக்கு இலையோ?' எனும்; 'ஆவி நைந்து
இற அடுத்தது என்? தெய்வதங்காள்!' எனும்;
பிற உரைப்பது என்? கன்று பிரிந்துழிக்
கறவை ஒப்பக் கரைந்து, கலங்கினுள்.

பொ.—'தெய்வங்களே! யான் செய்த அறம் எனக்குப் பயன் அளிப்பதில்லையோ?' என்பாள்; '(அறம் எனக்குத் துணையாகுமாயின்) உயிர் தேய்ந்து அழியுமாறு கடுந்துன்பம் வந்து அடுத்தது எக்காரணம் பற்றியோ?' என்பாள்; அவள் துன்பத்திற்குப் பிற உவமை கூறிப் பயனென்? கன்று பிரியும்போது பசு துன்புறுவதுபோல மனம் உருகி வருந்தினுள் (என்று கூறலே சாலும்).

கு :—ஒருவர் செய்யும் அறம் பாவங்கட்குத் தெய்வமே பெருஞ் சான்று ஆகலின், தெய்வங்களே விளித்து வினவுகின்ருள். பிறந்த நாள் தொட்டு அறமே செய்து பழகிய கோசலே, இன்று பாவப்பயனுய பெருந்துன்பம் வந்து அடுத்துளது கண்டு அறம் எனக்கு இலேயோ ? எனவும், ஆவி நைந்து இற அடுத்தது என்? எனவும் வினவுகின்ருள். ஆவிநைந்திற அடுத்த பழவினேயாதோ ? எனப் பொருள் கூறலுமாம். "இம்மைச் செய்தது யானறி நல்வினே உம்மைப் பயன்கொல் ஒரு தனி யுழந்தித் திருத்தகு மாமணிக் கொழுந்துடன் போந்தது" (சிலப்-15-91) எனக் கோவலனுக்கு உற்ற துன்பங்கண்டு மாடல மறையோன் பழவினேயாதென ஆராய்ந்தவாறும் காண்க. 'பிறவுரைப்பது என்' என்பதற்கு, "அவள் கூறிய பிற வார்த்தைகளேயெல்லாம் இங்குச் சொல்வதால் பயன் என்" என்று கூறலுமாம். உலகத்துயிர்களுள் பசுவே தன்கன்றின்பால் அன்பு காட்டுவதில் தலேயாயது ஆகலின் அது கூறலே சாலும் என்ற கருத்தால், 'கன்று பிரிந்துழிக் கறவைஒப்ப' என உவமை கூறினர். வேண்டும் சொற்கள் இசையெச்சமாய் வருவிக் கப்பட்டன. "கன்று பிரி காராவின் துயருடைய கொடி" (குகப்-66) எனப் பின்னும் கோசலே கூறப்படுதல் காண்க. கறவை - பசு ; கறக்கப் படுவது என்னும் காரணம் பற்றிவந்த பெயர். பிரிவுழி என்னுது, பிரிந்துழி என இறந்தகாலத்தாற் கூறியது, தெளிவுபற்றிவந்த காலவழுவமைதி. (13)

## இராமன் கோசலேயைத் தேற்றுதல் (1708—1711)

**1708.** இத்தி றத்தி னிடருறு வாடனேக்
கைத்த லத்தி னெடுத்தருங் கற்பினுேய்
பொய்த்தி றத்தின ஞக்குதி யோபுகல்
மெய்த்தி றத்துநம் வேந்தனே நீயென்ருன்.

இத்திறத்தின் இடர் உறுவாள்தனேக்
கைத்தலத்தின் எடுத்து, 'அருங் கற்பினுேய்!
பொய்த் திறத்தினன் ஆக்குதியோ? புகல்;
மெய்த்திறத்து நம் வேந்தனே நீ' என்ருன்.

பொ :—இவ்வாறு துன்புறுகின்ற கோசலேயைக் கையால் எடுத்து இருத்தி, 'அரிய கற்பினேயுடைய அன்னேயே! நீ மெய்பேசும் திறமுடைய நம் வேந்தனேப் பொய் பேசும் திறமுடையவனுக ஆக்க எண்ணுகின்ருயோ? சொல்!' என்று இராமன் கூறினன்.

கு :—உயிரினுஞ் சிறந்த அருமையுடைமை பற்றி 'அருங் கற்பு' எனச் சிறப்பித்தார். 'கொண்டானிற் சிறந்த தெய்வம் இன்று'

எனவும் 'அவனை இவ்வாறு வழிபடுக' எனவும் இருமுதுகுரவரும் கற்பித்தவாறும், உலகிய லொழுக்கம் முதலியவற்றைக் கணவன் கற்பித்தவாறும் ஒருத்தி ஒழுகும் ஒழுக்கமே கற்பு எனப்படும். மாதர் தம் கற்பினால் மணாளர்க்கு உயர்ச்சியுண்டாக்குவதே முறையன்றித் தாழ்வுண்டாக்குவதன்று என்று புலப்படுத்தவேண்டிக் 'கற்பினோய்... நம் வேந்தனைப் பொய்த் திறத்தினன் ஆக்குதியோ' என்று விளித்து வினவினான். தன்னைக் காடுபுகாமல் தடுக்க நினைப்பது, தயரதனைப் பொய்யனாக்குவதே என்பது கருத்து. தயரதன் கைகேயிக்குக் கொடுத்த வரம் பொய்யாகாமல் காடுபுகுதலே செய்யத்தகுவது ஆதலின் எனக்கு விடைகொடுத்து அனுப்புக என்றானாயிற்று. (14)

**1709.** பொற்பு றுத்தன மெய்ம்மை பொதிந்தன
சொற்பொ றுத்தற் குரியன சொல்லினான்
கற்பு றுத்திய கற்புடை யாடனை
வற்பு றுத்தி மனங்கொளத் தேற்றுவான்.

பொற்பு உறுத்தன, மெய்ம்மை பொதிந்தன,
சொல் பொறுத்தற்கு உரியன, சொல்லினான்;
கற்பு உறுத்திய கற்பு உடையாள் தனை
வற்புறுத்தி மனம் கொளத் தேற்றுவான்.

பொ :—கற்பு இத்தகையது என்று நிலைநிறுத்திக் காட்டிய கற்புடையவளாகிய கோசலையை வற்புறுத்தி அவள் மனம் கொள்ளும்படி தெளிவிக்கும் பொருட்டு, அழகு மிக்கனவும் மெய்ம்மை நிறைந்தனவும், அவள் துன்பம் ஆற்றுதற்கு உரியனவும் ஆய சொற்களைச் சொன்னான்.

கு:—கற்புடை மகளிர்க்கு எடுத்துக்காட்டாக விளங்குபவள் கோசலை என்பது தோன்ற, 'கற்புறுத்திய கற்புடையாள்' என்றார். 'சீலமின்ன தென்று அருந்ததிக்கு அருளிய திருவே' (சித்திரகூடப்-16) என்பதும் இங்கு நினைக்கத்தகும். சொல்லிற்கு அழகாவது, இனிமையும் ஆழமும் உடைமை. கேட்டற்கு இனியவாயினும் மெய்ம்மை யில்லாதனவும் தகுதியற்றனவும் ஆய சொற்கள் கொள்ளத்தக்கன அல்லவாதலின், இனிமையும் மெய்ம்மையும் தகுதியும் உடைய சொற்களையே இராமன் கூறினான் என்க. பொறுத்தற்கு உரியன சொல் சொல்லினான் என மாற்றுக. பொறுத்தலாவது கோசலை துன்பத்தை ஆற்றியிருத்தல். 'சொற்புறுத்தற்குரியன' என்ற பாடம் இத்துணைச் சிறப்பின தன்மை காணலாம். (15)

1710. சிறந்த தம்பி திருவுற வெந்தையை
மறந்தும் பொய்யில ஞக்கி வனத்திடை
உறைந்து தீரு முறுதிபெற் றேனிதிற்
பிறந்தி யான்பெறும் பேறென்ப தியாவதோ.

'சிறந்த தம்பி திரு உற, எந்தையை
மறந்தும் பொய் இலன் ஆக்கி, வனத்து இடை
உறைந்து தீரும் உறுதி பெற்றேன்; இதின்,
பிறந்து யான் பெறும் பேறு என்பது யாவதோ?"

பொ :—'(குணங்களால் என்னினும்) சிறந்த தம்பி பரதன் அரச செல்வத்தை அடையச்செய்து, என் தந்தையை மறந்தும் பொய் கூருதவ ஞகச் செய்து காட்டில் தங்கியிருந்து வரும் உறுதியைப் பெற்றுவிட் டேன்; யான் மனிதனுகப் பிறந்து பெறுகின்ற பேறு இதைக் காட்டிலும் சிறந்தது யாதுளது? (யாதுமில்லை.)'

கு :—இராமன், இதனுல் வனம்புகுதலால் வரும் நன்மையுணர்த் தினுன். கோசலை, முன், "மும்மையின் நிறைகுணத்தவன் நின்னினும் நல்லனுல்" (1698) என்று கூறியதையே வற்புறுத்தி, "சிறந்த தம்பி" என்ருன். திரு - அரச செல்வம். 'திருவுற ஆக்கி' என மேலும் கூட்டுக. இராமன் வனம்புகாதவழித் தம்பி திருவுறுதலும் தந்தை பொய்யிலனுதலும் கூடாமையின் வனத்திடை உறைந்து தீரும் உறுதியை மனத்திடைக் கொண்டான். தீர்தல் - நீங்குதல்; ஆவது நகர்க்குத் திரும்புதல். உறைந்து தீரும் என்புழி, தீரும் துணைவினை எனக் கொண்டு ஒரு சொல் ஆக்கலுமொன்று. தம்பிக்கும் தந்தைக்கும் உதவி உயர்த்தித் தானும் தவஞ் செய்து உய்வதைக் காட்டிலும் உயர்ந்த செயல் பிறிதின்மையின், 'பிறந்து யான் பெறும் பேறென்ப தியா வதோ' என்ருன். இவ்வடியே பின்வருதலும் (3-3-19) காண்க. 'என்னினி உறுதியப்பால்' (1693) என்றதும் காண்க. இதின் யாவதோ என்று இயைக்க. வனத்திற்குச் சென்ருலன்றித் தன் திருவவதாரப் பயன் நிரம்பாமை நோக்கி, 'பிறந்து யான் பெறும் பேறென்பதியாவதோ' என்பது, இராமன் உண்மையை வெளிப்படுத் தியதாகக் கொள்ளவைத்துள்ள திறமும் மெய்ம்மை பொதிந்தனவாத லும் காண்க. (16)

1711. விண்ணு மண்ணுமிவ் வேலையு மற்றும்வே
றெண்ணும் பூத மெலாமிறந் தேகினும்
அண்ண லேவன் மறுக்க வடியனேற்
கொண்ணு மோவிதற் குள்ளழி யேலென்ருன்.

'விண்ணும், மண்ணும், இவ் வேலையும், மற்றும் வேறு
எண்ணும் பூதம் எலாம் இறந்து ஏகினும்,
அண்ணல் ஏவல் மறுக்க அடியனேற்கு
ஒண்ணுமோ? இதற்கு உள் அழியேல்!' என்றான்.

பொ :—' இந்த ஆகாயமும், பூமியும், நீரும், மற்றும் எண்ணுகின்ற வேறு பூதங்களாகிய காற்றும் தீயும் ஆகிய எல்லாமும் அழிந்தொழியினும் பெருமையுடைய தந்தையின் கட்டளையை மறுத்தல் அடியேனாகிய எனக்குப்பொருந்துமோ? (பொருந்தாதுகாண்.) இதற்கு மனம் வருந்தாதே' என்று கூறினான்.

கு :—உடம்பாய்க் கலந்தும் உடம்பிற்கு ஆதாரமாகியும் தனக்கு உதவுகின்ற ஐம்பெரும்பூதங்களும் அழிந்து ஒழிவதாயினும். தன் பிறப்பிற்குக் காரணமாயிருந்த தந்தையின் கட்டளையை மருது செய்யும் கடப்பாடுடையேன் என்பதை விளக்கினான் இராமன். வேலை - கடல்; இங்கு, நீர் என்னும் துணையாய்நின்றது. வேறு பூதம் என்க. பூதங்கள் இறந்தேகலாவது, மண் நீரினும், நீர் நெருப்பினும், நெருப்புக் காற்றிலும், காற்று ஆகாயத்திலும், ஆகாயம் மாயையிலும் ஒடுங்குதல். அண்ணல் பெருமையுடைய தயரதன். உலக அழிவும் தந்தை பணியும் மாறுபட்டவழி உலக அழிவைப் பொருட்படுத்தாது தந்தை பணி செய்வேன் எனத் தன் உறுதியைத் தெரிவித்தலின் ஏகினும் என்ற உம்மை எதிர்மறையாய் ஏகாமையுணர்த்திற்று; பால்புளிப்பினும் என்புழிப் போல. இகரச்சுட்டினை முன்னர்க் கூட்டி யுரைக்க. இதற்கு - தந்தை பணிசெய்தலாகிய இதற்கு. நீ உள்ளழிவதால் யான் ஏற்றுக் கொண்ட பணியை விடல் இயலாதே என்பான், 'இதற்கு உள்ளழியேல்' என்றான். (17)

## கோசலையும் 'வனத்திற்கு வருவேன்' எனல்

1712. ஆகி னைய வரசன்ற னாணையால்
ஏக லென்பதி யானு முரைக்கலேன்
சாக லாவுயிர் தாங்கவல் லேனையும்
போகி னின்னொடுங் கொண்டனை போகென்றாள்.

"ஆகின், ஐய! 'அரசன்தன் ஆணையால்
ஏகல்' என்பது யானும் உரைக்கலேன்;
சாகலா உயிர் தாங்க வல்லேனையும்,
போகின், நின்னொடும் கொண்டனை போகு" என்றாள்.

பொ :—“ ஐயனே ! ‘ அரசனுடைய ஆணையின்படி ஏகவேண்டாம்’ என யானும் சொல்லவில்லை; ஆனால், நீ போனால், உடம்பை விட்டு நீங்காத உயிரைத் தாங்க வல்ல என்னையும் நின்னோடு அழைத்துக் கொண்டு போவாயாக ” என்றாள்.

கு :—ஏகல், அல்லீற்று எதிர்மறைவியங்கோள். ‘மகனெனல்’ (குறள் - 196) என்புழிப்போல. யானும் என்புழி உம்மை இறந்தது தழீஇயது. உன்பிரிவுணர்ந்தவுடன் உயிர்விட வேண்டியிருக்க அது செய்யாத வன்மையுடையேன் என்பாள், உயிர் தாங்க வல்லேனையும் என்றாள். அடியிற் கட்டிய வாழ்நாள் முடிந்துழியன்றிப் போகாத உயிர் என்பாள், ‘ சாகலாவுயிர் ’ என்றாள். ‘ கொண்டனை ’ முற்றெச்சம். ஆகில் போகில் வல்லேனையும் கொண்டுபோகு என்று இயைக்க. (18)

## இராமன் மறுமொழி (1713—1719)

1713. என்னை நீங்கி யிடர்க்கடல் வைகுறும்
மன்னர் மன்னனை வற்புறுத் தாதுடன்
துன்னு கானந் தொடரத் துணிவதோ
அன்னை யேயறம் பார்க்கிலை யாமென்றான்.

‘என்னை நீங்கி இடர்க்கடல் வைகுறும்
மன்னர்மன்னனை வற்புறுத்தாது, உடன்
துன்னு கானம் தொடரத் துணிவதோ ?
அன்னையே ! அறம் பார்க்கிலையாம்’ என்றான்.

பொ :—‘ என்னைப் பிரிந்தமையால் துன்பக் கடலில் தங்கும் அரசர்க்கு அரசனாகிய என் தந்தையை ‘ வருந்தற்க ’ என வற்புறுத்தாது, மரங்கள் நெருங்கிய காட்டிற்கு என்னுடன் பின் தொடரத் துணிவது பொருந்துமோ ? தாயே ! தருமத்தைப் பாராய்போலும் ?’ என்றான்.

கு :—இடர்க்கடல், உருவகம். பிரிவுத்துயரின் மிகுதி தோன்ற இங்ஙனம் உருவகித்தார். ‘ உடன் தொடர ’ என்று இயைக்க. துணிவதோ என்புழி ஓகாரம் எதிர்மறை; துணிதலாகாது என்பது கருத்து. அறம் என்றது கற்பறத்தை. கணவன் நோவில் நொந்து சாவில் சாதலே கற்புடைப் பெண்டிர் நற்பண்பு ஆதலின், அது செய்யாது உடன்வரத் துணிந்த கோசலையை ‘அறம் பார்க்கிலையாம் ’ என்றான். வைகுறும் - தங்கும். (19)

1714. வரிவி லெம்பியிம் மண்ணர சாயவற்
குரிமை மாநில முற்றபின் கொற்றவன்
திருவி னீங்கித் தவஞ்செயு நாளுடன்
அருமை நோன்புக ளாற்றுதி யாமன்றே.

'வரி வில் எம்பி இம்மண் அரசாய், அவற்கு
உரிமை மாநிலம் உற்றபின், கொற்றவன்,
திருவின் நீங்கித் தவம் செயும் நாள், உடன்
அருமை நோன்புகள் ஆற்றுதி ஆம் அன்றே'.

பொ :—கட்டு அமைந்த வில்லையுடைய என் தம்பி இந்நாட்டிற்கு அரசனாய் அவனுக்கு உரிமையாக இந்த நாடு பொருந்தியபின் மன்னவன் அரச செல்வத்திலிருந்து விலகிக் காட்டில் தவம் செயும் நாளில் அவருடன் அரிய நோன்புகளை நோற்பாயாக; அதுவே தக்கதாம்.

கு :—தன்னாட்டைப் பிறர் வௌவாது காக்கும் வலியுடையன் பரதன் என்பது தோன்ற, 'வரிவில் எம்பி' என்றான். மன்னனாய்ப் பரதன் மணிமுடி சூடினும் மாநிலம் அவனுக்கு உரிமையுடையது என நாட்டுமக்கள் நினைக்க நாள்பல செல்லுமாதலின், 'அரசானபின்' என்று ஒழியாது அவற்குரிமை மாநிலம் உற்றபின்' என்றான். தொய்யன் மாநிலச் சுமையுறு சிறைதுறந்தினியான், உய்யலாவதோர் நெறிபுக உதவிட வேண்டும்" (1460) எனத் தன்னைத் தந்தை முன் கேட்டமையால் அவன் அரசு துறந்து வனம்புக்குத் தவம் செய்யுங் கருத்தினன் என்பதை யுணர்ந்தவன் இராமன்; எனவே, கொற்றவன் திருவினீங்கித் தவஞ் செயுநாள் உடன் சென்று நோன்பியற்றச் சொல்லுகின்றான். தவம் என்றது வானப்பிரத்த நிலையை. இந்நிலையில் மனைவி பணிசெயத் தவஞ்செய்தல் மரபு ஆகும். மேற்பாட்டில் தன்னுடன் வனம் வரலாகாது என்றவன் இப்பாட்டில் கோசலை வனம் புகுதற்குரிய காலம் உணர்த்தியவாறு. இதைக் கேட்டும் கோசலை மனம் அமைதியுறாது திகைப்பது கண்டு மேலும் கூறுகின்றான். (20)

1715. சித்த நீதிகைக் கின்றதென் தேவரும்
ஒத்த மாதவஞ் செய்துயர்ந் தாரன்றே
எத்த னைக்குள வாண்டுக ளீண்டவை
பத்து நாலும் பகலல வோவென்றான்.

'சித்தம் நீ திகைக்கின்றது என்? தேவரும்
ஒத்த மா தவம் செய்து உயர்ந்தாரன்றே?
எத்தனைக்கு உள ஆண்டுகள்? ஈண்டு அவை
பத்தும் நாலும் பகல் அலவோ?' என்றான்.

பொ :—'இந்திரன் முதலிய தேவரும் தம் உடல்நிலைக்கொத்த பெருந்தவம் செய்து உயர்ந்தவர்களன்றோ? (யான் வனத்தில் தங்குமாறு எந்தை ஏவிய) ஆண்டுகள் எத்தனை உள்ளன? இங்கு அவ்வாண்டுகள் பத்தும் நாலுமாகிய நாட்களே அன்றோ? அங்ஙனமாகவும் நீ சிந்தை திகைப்பது எதற்கு?'

கு :—காட்டில் தங்கும் நாளது சின்மையும் தவத்தது நன்மையும் கூறி மனம் வருந்தற்க எனத் தேற்றியவாறு. இந்திரன் முதலிய இறையவர் பதங்களும் தவத்தால் வந்தவாகலின் யானும் தவஞ் செய்து உயர்ச்சிபெறலாமன்றோ? என்று தவத்தால் உயர்ந்தாரை எடுத்துக் காட்டியவாறு. குறைந்து தோன்றுமாறு பத்தும் நாலும் எனவும் 'பகல் அலவோ' எனவும் கூறினன். ஓராண்டு ஒருநாள்போல எளிதாகக் கழியும் என்ற கருத்தால் 'பத்தும் நாலும் பகல்' என்றான். மனிதயாண்டு ஒன்று தேவர்க்கு ஒருநாள் என்னும் நூன்முறை பற்றி நுவன்றதாகவும் கொள்ளலாம். குறுகிய காலத்தில் பெரும்பயன்பெற யான் செல்லுதற்கு மகிழவேண்டிய நீ, சித்தம் திகைப்பது பொருந்தாது என்றவாறு. (21)

**1716.** முன்னர்க் கோசிக னென்னு முனிவரன்
தன்ன ருட்டலை தாங்கிய விஞ்சையும்
பின்ன ரெய்திய பேறும் பிழைத்தவோ
இன்ன நன்றவர்க் கேயின செய்தலே.

'முன்னர்க் கோசிகன் என்னும் முனிவரன்
தன் அருள் தலை தாங்கிய விஞ்சையும்
பின்னர் எய்திய பேறும், பிழைத்தவோ?
இன்னம் நன்று, அவர்க்கு ஏயின செய்தலே.'

பொ :—'முன்பு விசுவாமித்திரன் என்னும் முனிவனுடைய அருளால் பெற்ற வித்தைகளும் அம்முனிவன் தொடர்பால் பின்பு அடைந்த பேறும் தவறு உடையனவோ? (நல்லனவாக அன்றோ அமைந்தன) இன்னும் அம்முனிவனைப் போன்றார்க்குப் பொருந்திய பணிகளைச் செய்தல் நல்லதேயாகும்.'

கு :—வன்முறை முனிவர்பணி செய்வதாலும் பெரும்பயன் உண்டு என்பதைத் தன் இளமைநிகழ்ச்சிகொண்டு நிறுவிக் கோசலையைத் தேற்றியவாறு. விசுவாமித்திரனுல் பெற்ற விஞ்சை, பலை, அதிபலை என்னும் மந்திரங்கள். "நான்முகன், ஆக்கிய விஞ்சைகளிரண்டு மவ்வழி ஊக்கினன்" (359) என முன்னர்க் கூறியுள்ளமை காண்க. 'பின்னரெய்திய பேறு' என்றது, சீதையை மனைவியாகப் பெற்றதை. 'அருள்தலை' என்புழித் 'தலை' என்ற ஏழனுருபு ஏதுப்பொருளில் வந்தது. பிழைத்தவோ என்புழி, 'பிழைத்த' என்றது, உடைமைப் பொருளில் வந்த குறிப்புவினைமுற்று; பிழையுடையவோ? என்பது பொருள். அவர்க்கு—அம்முனிவன் போன்ருர்க்கு. ஒருமுனிவனுக்குச் செய்த பணியால் விஞ்சையும் பேறும் பெற்றேமாதலின் இன்னும் முனிவர் பலர்க்குப் பணிசெய்தால் நன்மை மிகப்பெறலாம் என்பது கருத்து. வனம்புக்குழித் தன்பால் அபயம் என்றடைந்த தண்டகவனத்து முனிவர்க்கு "அறந்தவா நெறியந்தணர் தன்மையை, மறந்த புல்லர் வலிதொலையே னெனின், இறந்து போகினு நன்றிது வல்லது, பிறந்து யான் பெறும் பேறென்ப தியாவதோ" (3-3-19) என்றும், 'ஆரறத்தினெ டன்றி நின்ரு ரவர், வேரறுப்பன் வெருவன்மி னீர்' (3-3-22) என்றும், அபயம் அளித்ததும் அங்கதனைத் தூதனுப்பங்கால் மறுக்கும் இலக்குவன், "அன்னவன் தனக்கு மாதை விடிலுயி ரருளுவாயேல்......முன்னஞ் சூளுறவு என்னும்" (6-13-6) என நினைவு கூர்ந்து கூறுதலும் நோக்கின் இராமன் இங்குக்கூறிய முனிவர் பணியை வாழ்வின் குறிக்கோளாகக் கொண்டமையும் அவரைக்காக்க அரக்கரை அழித்தமையும் அறியலாம். 'இன்னநன்றவர்க்கேயின செய்தலே' என்பதற்கேற்ப அகத்தியரைப் பணிந்து (3-3-55,56) முழுமுதல்வனுகிய சிவபிரானின் வில்லும் அம்புப் புட்டிலும் வாளும் முப்புரம் எரித்த கணையும் பெற்றமை காண்க. இதனல் இராமன் தன் உண்மைத்தன்மையும் சிறிது புலப்படுத்தினுன் என்பது நோக்கியறிக. (22)

1717. மாத வர்க்கு வழிபா டிழைத்தரும்
போத முற்றிப் பொருவரு விஞ்சைகள்
ஏத மற்றன தாங்கி யிமையவர்
காதல் பெற்றிந் நகர்வரக் காண்டியால்.

'மாதவர்க்கு வழிபாடு இழைத்து, அரும்
போதம் முற்றிப், பொரு அரு விஞ்சைகள்
ஏதம் அற்றன தாங்கி, இமையவர்
காதல் பெற்று, இந்நகர் வரக் காண்டியால்.'

பொ :—'பெருந்தவ முனிவர்கட்கு வழிபாடுசெய்து அவர் அருளால் அரிய ஞானம் நிரம்பப்பெற்றும், குற்றம் அற்றனவாய் ஒப்பற்ற வித்தைகள் பலவற்றைப் பெற்றும், தேவர்களுடைய அன்பினைப் பெற்றும் இந்த அயோத்திநகர்க்கு யான் வரக் காண்பாயாக.

கு :—'அரும்போதம்' என்றது, பெறுதற்கரிய வீடுதரும் ஞானத்தை. விஞ்சை-மந்திரம். பொருவரு விஞ்சைகளும், ஏதமற்றனவும் தாங்கி என விரித்து விஞ்சைகளும் குற்றமற்ற படைக்கலங்களும் தாங்கி எனப் பொருள்கூறலும் ஆம். இராமபிரான் வனம்புக்க பின்னர், தண்டக வனத்து முனிவரைப் பணிந்ததும், பின் அவர் சொல்வழியே அகத்திய முனிவரைப் பணிந்ததும், அம்முனிவரன் அருளால் முழுமுதல் வணுகிய சிவபிரானின் வில்லும் வாளும் கணையும் பெற்றமையும், ஆரணிய காண்டம் அகத்தியப் படலத்தால் அறியலாம். அப்படைக்கலங் கொண்டு அரக்கரைக் கொன்றமையால் இமையவர் காதல் பெறுகின்றமையும் காண்க. காண்டி முன்னிலைவினைமுற்று. ஆல்-அசை. (23)

**1718.** மகர வேலைமண் டொட்டவண் டாடுதார்ச்
சகரர் தாதை பணிதலை நின்றுதம்
புகரில் யாக்கையி னின்னுயிர் போக்கிய
நிகரின் மாப்புகழ் நின்றதன் றேவெனு.

'மகர வேலை மண் தொட்ட வண்டு ஆடு தார்ச்
சகரர், தாதை பணி தலைநின்று, தம்
புகர் இல் யாக்கையின் இன் உயிர் போக்கிய
நிகர் இல் மாப் புகழ் நின்றது அன்றே ?' எனு.

பொ —'சுருமீன்களையுடைய பெருங்கடல் ஆகுமாறு மண்ணைத் தோண்டி எடுத்த, வண்டுகள் மொய்க்கும் மாலையை அணிந்த சகரர்கள், தம்முடைய தந்தை ஏவிய பணியைத் தலைமேற்கொண்டுநின்று தம்முடைய குற்றம் அற்ற உடம்பில் உள்ள இனிய உயிரை விடுத்த ஒப்பிலாத பெரும்புகழ், இவ்வுலகில் நிலைபெற்றுவிட்டது அன்றோ?' என்றுகூறி.

கு :—'என்ருன்' என்று அடுத்த செய்யுளில் முடியும். 'கடல்வாழ் சுறவு' (தொல்–பொருள்–595)எனப்படுதலின் 'மகரவேலை' என்ருர். சகரர்–சகரபுத்திரர். பரிவேள்விக்குரிய குதிரை காணுமையின் தேடிக்கொணரச் சொல்லிய தந்தையின் கட்டளையைத் தலைமேற் கொண்டு மண்ணுலகினும் விண்ணுலகினும் அக்குதிரை காணப்படாமையின் மண்ணைத் தோண்டிச் சென்ற சகரர்கள் கபிலமுனிவர் ஆசிரமத்தில் (இந்திரனல் கட்டப்பட்ட) குதிரை இருக்கக்கண்டு அம்முனிவரை இழித்துக் கூறி

ஆரவாரித்தார்களாக, அம்முனிவர் வெகுண்டு நோக்க அவர் சாம்பரா யினர் என்பது கதை (510-520). "சகரர் தொட்டலால் சாகரமெனப் பெயர் தழைப்ப, மகரவாரிதி சிறந்தது" என்றது இங்கு நினைக்கத்தகும். இதனால் உயிரைக் கொடுத்தும் தந்தை பணி நின்று முந்து புகழ் பெற்ற தன் குலமுதல்வரைக் காட்டி அப்பணியின் உயர்வும் பயனும் உணர்த்தியவாறு. (24)

**1719.** மான்ம றிக்கரத் தான்மழு வேந்துவான்
தான்ம றுத்திலன் றாதைசொற் றாயையே
ஊன றக்குறைத் தானுர வோனருள்
யான்ம றுப்பதென் றெண்ணுவ தோவென்றான்.

'மான்மறிக் கரத்தான் மழு ஏந்துவான்,
தான் மறுத்திலன் தாதை சொல், தாயையே
ஊன் அறக் குறைத்தான்; உரவோன் அருள்
யான் மறுப்பது என்று எண்ணுவதோ?' என்றான்.

பொ :—'மான் கன்றை யேந்திய கையினன் ஆகிய சிவபிரானுக் குரிய மழுப்படையைத் தாங்கியுள்ள பரசுராமன்தானும் தந்தை சொல்லை மறுக்காதவனாய்த் தாயையே உடம்பு அற்றொழியுமாறு தலையை வெட்டினான்; அங்ஙனமாகவும், அறிவின்மிக்க என் தந்தை யின் அருள் ஏவலை யான் மறுக்கலாம் என நீர் எண்ணுதலும் கூடுமோ?' என்று கூறினான்.

கு :—அழித்தற்குரிய மழுவேந்தியவனும் கைக்கொண்டு ஒழுகிய பேரறம் என்பது தோன்ற, "மான்மறிக் கரத்தான் மழுவேந்து வான்" என்றார். மழுவேந்தியவன்–பரசுராமன். தாதை–யமதக்கினி. தாய்-ரேணுகை. ஊன்-உடம்பு. தான்-அசை. 'மறுத்திலன்' முற்றெச் சம்; மறுத்திலனாய்க் குறைத்தான் என்க. தாயைக் கொல்லுமாறு ஏவிய தந்தையின் ஏவலையும் பரசுராமன் தவறாமல் செய்தானாக, யான் கானகம் சென்று அருள் நெறி ஒழுகச்செய்த தந்தையின் அருள் ஏவலை மறுத்தல் தகுமோ? என்பது கருத்து. 'அருள்' என்றது அருள் ஏவலை. உரவோன்–அறிவுமிக்கவன். எனக்கு நன்மைபயக்கும் நெறி யாதென ஆராய்ந்து கூறிய ஏவல் என்பது புலப்பட, 'உரவோ னருள்' என்றான். தயரதன் ஏவல் அருள் ஏவல் எனவே யமதக்கினி பரசுராமனுக்கு இட்ட கட்டளை அன்னதன்று என்பது பெறப்படும். பரசுராமன் வில்வலிக்குத் தாழாத யான், தாதைபணி செய்வதில் அவ னுக்குத் தாழ்தல் தகுமோ எனத் தம் குலப்பகை காட்டித் தன் தகைமை நாட்டியவாறு. (25)

## கோசலை சிந்தனை

1720. இத்தி றத்த வெனைப்பல வாசகம்
உய்த்து ரைத்த மகனுரை யுட்கொளா
எத்தி றத்து மிறக்குமிந் நாடெனு
மெய்த்தி றத்து விளங்கிழை யுன்னுவாள்.

இத்திறத்த எனைப் பல வாசகம்
உய்த்து உரைத்த மகன் உரை உட்கொளா,
'எத்திறத்தும் இறக்கும் இந்நாடு' எனு,
மெய்த் திறத்து விளங்கு இழை உன்னுவாள்.

பொ :—இவ்வகையான எத்துணையோ பல வார்த்தைகளையும் ஆராய்ந்து சொன்ன இராமனுடைய சொற்களை உளங்கொண்டு, 'இனி எப்படியும் இவன் இந்நாட்டை விட்டு நீங்குவான்' என்று உணர்ந்து, (இவனைப் போகாமல் தடுத்தற்குரிய உபாயம் யாதென்று) உண்மைத் தன்மையுடைய கோசலை சிந்திக்கலானுள்.

கு :—விளங்கு இழை-விளக்கமான அணிகலனை அணிந்த கோசலை. வினைத்தொகைநிலைக்களத்துப் பிறந்த அன்மொழித்தொகை. 'உய்த்து' என்பதற்கு எடுத்துக் காட்டுகளை இடையிடையே செலுத்தி எனப் பொருள்கூறலுமாம். கொளா-கொண்டு. 'செய்யா' என்னும் வாய்பாடு. இறத்தல்-கடத்தல். வேண்டுஞ் சொற்கள் இசையெச்சமாக வருவிக்கப்பட்டன. வஞ்சக நெஞ்சினள் அல்லள் என்பது தோன்ற, 'மெய்த்திறத்து விளங்கிழை' என்ருர். இராமன் வார்த்தையிலுள்ள உறுதிகண்டு அவனைத் தடுக்க இயலாது என்பது அறிந்த கோசலை வேறு வகையில் அவனைத் தடுப்பதற்கு வழிநாடினுள் என்றவாறு. (26)

## கோசலை தயரதனிடம் போதல்

1721. அவனி காவல் பரதன தாகுக
இவனிஞ் ஞால மிறந்திருங் கானிடைத்
தவனி லாவகை காப்பென் றகைவிலாப்
புவனி நாதற் றொழுதென்று போயினுள்.

'அவனி காவல் பரதனது ஆகுக;
இவன் இஞ் ஞாலம் இறந்து இருங்கானிடைத்
தவன் நிலாவகை காப்பென், தகைவு இலாப்
புவனி நாதன் தொழுது' என்று போயினுள்.

பொ :—'உலகம் காக்கும் அரசியல் பரதனுடையதே ஆகுக; இவ்விராமன் இந்நாட்டைக் கடந்துசென்று பெரிய காட்டின் நடுவே தவத்தில் நில்லாதபடி எவராலும் தடுக்க இயலாத தயரதசக்கரவர்த்தியைத்தொழுது காப்பேன்' என்று முடிவுசெய்துகொண்டு அரசனிடம் போனாள்.

கு.—"மண்ணே கொண்ணீ மற்றைய தொன்றும் மற" என்ற மன்னவன் சொல்லோடு அவன் மனங்கலந்த கோசலையின் இச் சொல்லுக்குள்ள ஒற்றுமை காண்க. தவன் – தவம். தகைவு – தடுத்தல். 'தொழுது காப்பென்' என்று இயைக்க. காத்தல்-தடுத்தல். தந்தைபணியைத் தட்டாதுசெய்பவன் இராமன் ஆதலின், தயரதனைத் தொழுது காடுபுகா வரம் வேண்டிப் பெற்றுத் தடுத்துவிடலாம் என்று துணிந்தாள் என்பது கருத்து. (27)

## இராமன் சுமித்திரைமாளிகைக்குப் போதல்

1722. போகின் றாளைத் தொழுது புரவலன்
ஆக மற்றிவ டன்னையு மாற்றியிச்
சோகந் தீர்ப்பவ ளென்று சுமித்திரை
மேகந் தோய்தனிக் கோயிலை மேயினான்.

போகின்றாளைத் தொழுது, புரவலன்,
'ஆக; மற்றிவள் தன்னையும் ஆற்றி, இச்
சோகம் தீர்ப்பவள்' என்று சுமித்திரை
மேகம் தோய் தனிக் கோயிலை மேயினான்.

பொ :—இராமன், தயரதன்பால் போகின்ற கோசலையைத் தொழுதுவிட்டு, 'இவள் போவாளாக; இவ்வன்னையாரையும் ஆறுதல் செய்து இச்சோகத்தைத் தீர்த்தற்குரிய தன்மையுடையவள் சுமித்திரையே என்று அவளுடைய முகில்தவழுமாறு உயர்ந்த ஒப்பற்ற மாளிகையை அடைந்தான்.

கு :—புரவலன் - இராமன்; காக்கும் தன்மையுடையவன் என்ற காரணம்பற்றி வந்தது. 'இச்சோகம்' என்புழிச் சுட்டு நெஞ்சறிசுட்டு. சோகம் - பிரிவுவருத்தம். தன்னையும் என்புழி உம்மை இறந்தது தழீஇயது. சுமித்திரை தன் துயரை ஆற்றிக்கொள்வதோடு கோசலையின் துயரையும் ஆற்றும் ஆற்றல் மிக்கவள் என்பது இதனால் அறியலாம். நெஞ்சழிந்து வருந்தும் கோசலையையும் ஆற்றி, என உயர்வு சிறப்பும்மை ஆக்கலுமாம். கோயிலின் உயர்வு புலப்படவேண்டி மேகம் தோய்தல் கூறினர். புரவலன் தொழுது, (இவள் போவாள்)

ஆக; இவள் தன்னையும் ஆற்றி இச்சோகம் தீர்ப்பவள் என்று சுமித்திரை கோயிலை மேயினான் என்று இயையும். புரவலன் என்பதற்குத் தயரதன் என்று பொருள் கொண்டு அவன் ஆகம் தன்னையும் இவள் தன்னையும் ஆற்றி இச்சோகம் தீர்ப்பவள் என்று சுமித்திரை கோயிலை மேயினான் என இயைத்துப் பொருள் கூறலுமாம். இப்பொருட்கு இராமன் தோன்றா எழுவாய். (28)

### தயரதனைக் கண்ட கோசலையின் நிலை

1723. நடந்த கோசலை கேகய நாட்டிறை
மடந்தை கோயிலை யெய்தினண் மன்னவன்
கிடந்த பார்மிசை வீழ்ந்தனள் கெட்டுயிர்
உடைந்த போழ்தி னுடல்விழுந் தென்னவே.

நடந்த கோசலை, கேகயநாட்டு இறை
மடந்தை கோயிலை எய்தினள்; மன்னவன்
கிடந்த பார்மிசை வீழ்ந்தனள், கெட்டு உயிர்
உடைந்த போழ்தின் உடல் விழுந்தென்னவே.

பொ :—போன கோசலை, கேகயத்தரசன்மகளாகிய கைகேயியின் மாளிகையை அடைந்து, தயரத மன்னவன் மூச்சற்று வீழ்ந்து கிடந்த தரையில், உயிர் நீங்கியபோது உடல் கெட்டு விழுந்ததுபோல வீழ்ந்தாள்.

கு :—இறை-அரசன். 'மடந்தை' என்றது மகள் என்னும் பொருளது. தயரதன் உயிரும் கோசலை உடம்புமாக அன்புற்றிருந்தனர் என்பது தோன்ற இங்ஙனம் உவமை கூறினார். இவ்வுவமையால் கோசலை மூச்சற்று வீழ்ந்தாள் என்பது பெறப்படும். கணவன், மனைவிக்கு உயிர் போன்றவன் என்பதை, "இன்னுயிரன்னாற்கு எனைத் தொன்றுந் தீதின்மை என்னுயிர் காட்டாதோ மற்று'' (கலி-14[3]) என்று ஒரு தலைவி கூறுமாற்றான் உணரலாம். 'விழுந்தது' என்பது, 'விழுந்து' என விகாரப்பட்டது. (29)

இப்பாடலின் பின் ஒரு சுவடியில்,

1723 (a) விழுந்து பார்மிசை வெய்துயிர்த் தாவி சோர்ந்
தெழுந்தென் னையக னேதுய ரேதெனத்
தெளிந்தி லேனிது செப்புதி நீயென
அழுந்தி னாள்பின் னரற்றத் தொடங்கினாள்.

என்ற பாடலும் அதன்கீழ் 'விடைபெறு படலம் முற்றும்' என்ற தொடரும் காணப்படுவதாகவும் மேல், 'சாபவசனப்படலம்' தொடங்குவதாகவும் 45-ல் உள்ளது.

## கோசலை அரற்றல் (1724—1727)

1724. பிறியார் பிரிவே தென்னும்
★ பெரியோய் தகவோ வென்னும்
நெறியோ வடியே நிலைநீ
நினையா நினைவே தென்னும்
வறியோர் தனமே யென்னுந்
தமியேன் வலியே யென்னும்
அறிவோ வினையோ வென்னு
மரசே யரசே யென்னும்.

'பிறியார் பிரிவு ஏது?' என்னும்;
'பெரியோய்! தகவோ?' என்னும்;
'நெறியோ? அடியேம் நிலை நீ
நினையா நினைவு ஏது?' என்னும்;
'வறியோர் தனமே!' என்னும்;
'தமியேன் வலியே!' என்னும்;
'அறிவோ? வினையோ?' என்னும்;
'அரசே! அரசே!' என்னும்.

பொ:—'என்றும் பிரியாத இராமனும் நீயும் இன்று பிரிதற்குக் காரணம் யாது?' என்பாள்; 'பெரியோனே! அவ்வாறு இராமனைக் காட்டிற்கு அனுப்புவது தந்தைக்குத் தகுதியான செயலோ? அல்லது, மன்னர்க்கேற்ற நெறியோ?' என்பாள்; 'அவ்வாறு இராமன் பிரிந்தால் அடியேங்களுடைய நிலை யாதாகும் என்பதை நீ நினையாத வன்னெஞ்சம் நினக்கு எப்படி உண்டாயிற்று?' என்பாள்; 'செல்வம் அற்ற ஏழைகட்குச் செல்வமாக இருப்பவனே!' என்பாள்; 'தனியேனுடைய வலியாக உள்ளவனே!' என்பாள்; 'இவ்வாறு இராமனை அனுப்புவது நின் அறிவுகொண்டு ஆராய்ந்து செய்ததா? அல்லது பிறர் செய்த சூழ்வினையால் நிகழ்ந்ததா?' என்பாள்; 'அரசே! அரசே!' என்று கதறுவாள்.

கு:—எதுகைநோக்கிப் பிரியார், பிறியார் ஆயிற்று. இதுகாறும் பிரியாதிருந்த இராமனும் நீயும் பிரிவதற்குக் காரணம் என்னை? என்றது, இராமன் செய்த தவறுண்டோ? என்ற கருத்தால் தயரதனை வினவியது. "அன்பிழைத்த மனத்தரசற்கு நீ என்பிழைத்தனை" (1707) என்று முன் இராமனை வினவியதும் காண்க. 'தகவோ? நெறியோ? என்னும்' என மாறுக. நினைவு என்றது இங்கு மனத்தை. வறியோர்க்கும் தனமாவாய் நீயாதலின் இப்பொழுது நாடிழந்து

வறியோராய்க் காடு புகும் இராம இலக்குவர்க்குச் செல்வமாயிருந்து அவர் செலவைத் தவிர்ப்பாயாக எனவும், இராமனைப் பிரிந்த தனியனேனுடைய வலி நீயேயாதலின் அவ்வலிகாட்டி, பிரியும் இராமனைப் பிரியாது நிறுத்தி என் தனிமை தீர்ப்பாயாக எனவும் பொருள் விரிக்க. சூழ்வினையோ என்பது, 'வினையோ' எனச் சுருக்கிக் கூறப்பட்டது. வினா இரண்டில் பின்னது உண்மையானதாக வைப்பது கம்பர் இயல்பு ஆதலும், இராமன் காட்டிற்குப் போவது கைகேயியின் சூழ்வினையால் நிகழ்ந்தது ஆதலும் இங்கு நினைக்க. தயரதன், கைகேயியை "நீ திசைத்த துண்டோ? பொய்ந் நிலையோர்கள் புணர்த்த வஞ்சமுண்டோ?'' (1601) என்ற வினாக்களுள் பின்னை வினா மெய்ம்மையாதலை இங்கு நினைக்க. (30)

**1725.** இருளற் றிடவுற் றொளிரு
மிரவிக் கெதிருந் திகிரி
உருளத் தனியுய்த் தொருகோ
னடவிக் கடைகா ணுலகம்
பொருளற் றிடமுற் றுறுமப்
பகலிற் புகுதற் கென்றோ
அருளக் கருதிற் றிதுவோ
வரசர்க் கரசே யென்னும்.

'இருள் அற்றிட உற்று ஒளிரும்
இரவிக்கு எதிரும் திகிரி
உருளத் தனி உய்த்து, ஒரு கோல்
நடவிக், கடைகாண் உலகம்
பொருள் அற்றிட முற்றுறும் அப்
பகலில் புகுதற்கு என்றோ?
அருளக் கருதிற்று இதுவோ!
அரசர்க்கு அரசே!' என்னும்.

பொ :—'அரசர்கட்கெல்லாம் தலைமையரசே! இருள் ஒழியும்படி மிகுதியாக ஒளி வீசுகின்ற சூரியனுக்கு நிகராகும் ஆணைச் சக்கரம் விண்ணில் தனித்துச் சுழலுமாறு செலுத்தி ஒரே செங்கோலை நடாத்திவந்து நீ இவ்வுலகத்தை இராமனுக்குக் கொடுத்தருளக் கருதியது, அவ்வுலகம், எப்பொருளும் இல்லாது ஒழிய முடிதற்குரிய-ஊழிக்கடையாகிய அக்காலத்துப்படும் துன்பத்தில் புகவேண்டும் என்ற எண்ணத்தால் தானோ? அந்தோ' என்று கூறுவாள்.

கு :—திகிரியுய்த்து ஒருகோல் நடவி இது அருளக் கருதிற்று, உலகம் கடைகாண் அப்பகலில் புகுதற்கு என்றோ? என இயைக்க. "இராமனுக்கு அரசு அளித்தது இவ்வுலகத்தைப் பெருந் துன்பத்தில் ஆழ்த்தவோ" என்பது கோசலையின் வினா. இராமனுக்கு முடிசூட்ட எண்ணி ஏற்பாடு செய்தமையால் அவ்விராமன் வனம்புகும் நிலை ஏற்பட்டது; அவன் வனம்புகுவதால் உலகம் இறுதியெய்துவது போன்ற பெருந்துயர் அடையும் என்பது கருத்து. தயரதன் ஆணைச் சக்கரத்திற்குச் சூரியன் உவமை. "வென்றியந்திகிரிவெம் பரிதியா மென, ஒன்றென உலகிடை யுலவி மீமிசை, நின்று நின்றுயிர் தொறும் நெடிது காக்குமே" (178) என்றார் முன்னும். இதனால் உலகிற்கு ஒன்றாதலும், மீமிசையுலவுதலும், உயிர்தொறும் நின்று நெடிதுகாத்தலும் அவ்விரண்டிற்கும் உண்மை பெற்றாம். "இருளற்றிடவுற்றொளிரும் இரவி என்ற உவமையடையைப் பொருளுக்கும் கூட்டிப் பகையிருள் அறக் காயும் ஆணைச்சக்கரம் என்க. "திகிரி உருளத் தனியுய்த்து, ஒருகோல் நடவி" என்றமையால் இவ்வுலக முழுமையும் சூரியகுலத்திற்கே வழிவழி உரிமையாய்வந்தமை புலப் படுத்தியவாறு. எதிரும், உவமையுருபு. ஓ இரக்கக்குறிப்புணர்த்தும் இடைச்சொல். (31)

1726. திரையார் கடல்சூ ழுலகின்
றவமே திருவின் றிருவே
நிரையார் கலையின் கடலே
நெறியார் மறையின் னிலையே
கரையா வயர்வே னெனைநீ
கருணா லயனே யென்னென்
றுரையா விதுதா னழகோ
வுலகே ழுடையா யென்னும்.

'திரையார் கடல்சூழ் உலகின்
தவமே! திருவின் திருவே!
நிரையார் கலையின் கடலே!
நெறியார் மறையின் நிலையே!
கரையா அயர்வேன் எனை, நீ,
கருணாலயனே! என்? என்று
உரையா இதுதான் அழகோ?
உலகு ஏழ் உடையாய்!' என்னும்.

பொ :—‘ அலைகள் நிறைந்த கடல்சூழ்ந்த உலகின் தவமாக இருப்பவனே ! திருவுக்கும் திருவாக விளங்குபவனே ! வரிசையாகப் பொருந்திய கலைகளின் கடலாக விளங்குபவனே ! நல்லநெறிகள் நிறைந்துள்ள வேதங்கள் தங்கும் நிலையமாக இருப்பவனே ! கருணைக்கு இருப்பிடமானவனே ! ஏழுலகங்களையும் உரிமைப்பொருளாக உடையவனே ! மனமுருகிச் சோர்கின்ற என்னை நீ, என்? என்று கேளாத இத்தன்மை நினக்கு அழகுதானோ ’ என்பாள்.

கு :—உலகவர்க்குத் தவம் நன்மைதருவதுபோலத் தயரதன் அவர்க்கு நன்மைபயத்தலின், ‘உலகின்றவமே ’ என்றாள். ” தவமொக்கும் நலம் பயப்பின் ” (171) என்றார் முன்னும். அரசச் செல்வமும் இவனால் சிறப்பு எய்தியது ஆகலின், ‘ திருவின் திருவே ’ என்றாள். நீரால் நிறைந்த கடல்போலக் கலை பலவற்றால் நிறைவெய்தியவன் என்பாள், ‘ கலையின் கடலே ’ என்றாள். “ எண்ணில் நுண் ணூல் ஆய்ந்தே கடந்தான் அறிவென்னும் அளக்கர் ” (172) என்றதும் காண்க. பிறர் துன்பங்கண்டு பொறாத இரக்கமே கருணையெனப்படும் ; கருணைக்கே இருப்பிடமாகும் நீ அயர்கின்ற என்னை என் ? என்றும் கேளாதிருப்பது அழகாகாது என்பது கருத்து. மனைவி என்ற உரிமையால் கேளாவிடினும், உன் ஆட்சியில் இருக்கும் ஒரு பெண்டு என்ற எண்ணத்தாலேனும் கேட்கலாம் என்னும் கருத்துப்பட ‘உலகேழ் உடையாய் !’ என்றாள். (32)

**1727.** மின்னின் றனைய மேனி
வெறிதாய் விடநின் றதுபோல்
உன்னுந் தகைமைக் கடையா
வுறுநோ யுறுகின் றுணரான்
என்னென் றுரையா னென்னே
யிதுதான் யாதென் றறியேன்
மன்னன் றகைமை காண
வாராய் மகனே யென்னும்.

‘மின் நின்று அனைய மேனி
வெறிதாய்விட நின்றது போல்,
உன்னும் தகைமைக்கு அடையா
உறுநோய் உறுகின்று உணரான் ;
என் ? என்று உரையான் ; என்னே !
இதுதான் யாது ? என்று அறியேன் ;
மன்னன் தகைமை காண
வாராய், மகனே !’ என்னும்.

பொ :—' மின்னல் நின்றாற் போன்ற ஒளிவாய்ந்த மேனி உயிரின்றி வெறிதாகநின்றதுபோல் ஆக, 'நினைப்பதற்கு இயலாத மிக்க நோயைத் தான் உறுகின்றதையும் உணராமலிருக்கின்றான்; என்னை என்று ஒரு சொல் சொல்லவும் கில்லான் ; இஃதென்னே வியப்பு ! இதற்குக் காரணம் தான் யாது ? என்பதை அறியேன் ; மகனே ! மன்னன் தன்மையைக் காண்பதற்கு வருவாயாக ' என்கின்றாள்.

கு :—மின்னலுக்கு நிலைபேறு இன்மையின், இல்பொருளுவமை யாக, 'மின்னின்றனைய மேனி' என்றாள். இதனால் தயரதனுடைய மேனி ஒளிமிக்கது என்பது விளக்கப்பட்டவாறு. "தெய்வமேனி படைத்த சேயொளிபோன் மழுங்கின தீபமே" (1642) என்றதும் காண்க. உயிர் நீங்க நின்ற உடல்போல் என்பாள், வெறிதாய்விட நின்றதுபோல் என்றாள். நின்றது போல் உணரான் என்று இயைக்க. உயிர்நீங்கினவர்போல் உணராதவனானான் என்பது கருத்து. மன்னன் இறந்துவிட்டான் என்ற கருத்தால் இவ்வாறு இராமனை அழைக்கின்றாள். (33)

### வசிட்டன் வருகை

**1728.** இவ்வா றழுவா ளிரியற்
குரல்சென் றிசையா முன்னம்
ஒவ்வா தொவ்வா தென்னா
வொளிவா ணிருபர் முனிவ
அவ்வா றறிவா யென்ன
வந்தான் முனிவன் னவனும்
வெவ்வா ளரசன் னிலைகண்
டென்னும் விளைவென் றுன்னா.

இவ்வாறு அழுவாள் இரியல்
குரல் சென்று இசையாமுன்னம்,
'ஒவ்வாது ! ஒவ்வாது !' என்னா,
ஒளி வாள் நிருபர், 'முனிவ !
அவ்வாறு அறிவாய்' என்ன,
வந்தான் முனிவன் ; அவனும்,
வெவ்வாள் அரசன் நிலை கண்டு,
'என்னும் விளைவு ?' என்று உன்னா.

பொ :—இவ்வாறு அழுகின்ற கோசலையின் அழுகுரல் சென்று மண்டபத்தில் ஒலிப்பதற்குமுன்னமே, அங்கு இருந்த ஒளிவாய்ந்த வாளினை யேந்திய அரசர்கள், '(இம் மங்கலநிகழ்ச்சிக்குரிய அமையத்திற்கு) ஒவ்வாது! ஒவ்வாது!' என்று தம்முள் கூறிக்கொண்டு, ' முனிவ! அவ்வழுகைக்குரிய காரணம் யாதென்று அறிவாயாக ' என்று வேண்டிக்கொள்ள வசிட்டமுனிவன் தயரதன் உள்ள இடத்திற்கு வந்தான்; வந்த அவனும் கொடிய வாளையுடைய தயரதன் நிலைமையைக் கண்டு, 'மேல் விளைவு என்ன ஆகும்!' என்பது பற்றி ஆராய்ந்து.

கு :—உன்னு என்பது அடுத்த செய்யுளில் முடியும். இரியற் குரல் - அழுகுரல். ' விரைந்து பரவும் உரத்த குரல் ' எனலுமாம். இசைத்தவுடன் என்பார், விரைவு தோன்ற, ' இசையாமுன்னம் ' என்றார். முடிபுனைவிழாவை எதிர்பார்த்து மகிழ்ச்சியுடன் இருந்தவர் காதில் அழுகைக்குரல்படவே, ஒவ்வாது ஒவ்வாது என்றார்; அடுக்கு. அவ்வழுகைக்குக் காரணம் அறிவாய் என்பது அம்மன்னர் வேண்டுகோள். ' அரசன் நிலை ' என்றது, மூச்சற்ற நிலையை. (34)

### வசிட்டன் நினைவு

1729. இறந்தா னல்லன் னரச
　　னிறவா தொழிவா னல்லன்
மறந்தா னுணர்வென் றுன்னு
　　வன்கே கயர்கோன் மங்கை
துறந்தா டுயரந் தன்னைத்
　　துறவா தொழிவா ளிவளே
பிறந்தார் பெயருந் தன்மை
　　பிறரா லறிதற் கெளிதோ.

' இறந்தான் அல்லன் அரசன் ;
　　இறவாது ஒழிவான் அல்லன் ;
மறந்தான் உணர்வு ' என்று உன்னு,
　　வன் கேகயர் கோன் மங்கை,
துறந்தாள் துயரம் தன்னை ;
　　துறவாது ஒழிவாள் இவளே ;
பிறந்தார் பெயரும் தன்மை
　　பிறரால் அறிதற்கு எளிதோ ?'

24

பொ :—'அரசன் இறக்கவில்லை ; ஆனால் இறக்காமல் இருக்கவு மாட்டான் ; உணர்வு மறந்து இருக்கின்றான் ; அவ்வளவே' என்று முனிவன் துணிந்து பின் 'வன்னெஞ்சுடைய கேகயத்தரசன் மகள் துயரத்தைத் துறந்து இருக்கின்றாள்; இக்கோசலையோ துயரத்தை விடாது மனம் அழிகின்றாள்; மக்களாகப் பிறந்தவர்கள் மனம் மாறும் தன்மை பிறரால் அறிந்து கொள்ள எளிதாகுமோ ? (ஆகாது)

கு :—எளிதோ என்று என மேல் இயையும். 'இப்பொழுது இறந்திலன் ஆயினும் இன்னும் சிறிதுநேரத்தில் இறப்பான்' என்று தயரதன் முகக் குறிப்பைக் கண்டு முனிவன் துணிந்தான். மன்னவன் மனைவியர் இருவரும் அவற்கு உயிரனையராய் இருந்தும் அவன் துயர்கண்டு ஒருத்தி வருந்தாதிருக்க, மற்றொருத்தி வருந்தா நிற்கக் கண்ட முனிவன் அவர் மாறுபாட்டிற்குக் காரணம் காண இயலாமையின் "பிறந்தார் பெயருந்தன்மை பிறரால் அறிதற்கெளிதோ" என்றான். இனித் துயரந் தன்னைத் துறவாது மனமழிதற்குரிய அன்பினள் இக்கைகேயியே என்று பொருளுரைத்து, அன்ன அன்பினளாக இதுகாறும் ஒழுகியவள் இப்பொழுது மன்னன் துயர் நிலைகண்டும் துயரம் துறந்தாள் ஆதலின் பிறந்தவர் மனமாற்றம் அடையும் தன்மைக்குக் காரணம் பிறரறிய இயலாது என வசிட்டன் எண்ணினன் என்று முடித்தலும் ஆம். (35)

## கைகேயி கூறல்

1730. என்னு வுன்னு முனிவ
 னிடரா லழுவா டுயரம்
சொன்னு ளாகா ளெனமுன்
 றொழுகே கயர்கோன் மகளை
அன்னு யுரையா யரச
 னயர்வா னிலையென் னென்னத்
தன்னு னிகழ்ந்த தன்மை
 தானே தெரியச் சொன்னாள்.

என்னு உன்னு, முனிவன்,
 இடரால் அழுவாள் துயரம்
சொன்னாள் ஆகாள், என, முன்
 தொழு கேகயர்கோன் மகளை,

'அன்னாய்! உரையாய், அரசன்
அயர்வான் நிலை என்?' என்னத்,
தன்னால் நிகழ்ந்த தன்மை
தானே தெரியச் சொன்னாள்.

பொ :—என்று நினைந்து வசிட்டமுனிவன், துன்பத்தால் அழுது கொண்டிருக்கும் கோசலை துயரத்திற்குரிய காரணத்தைச் சொல்லு பவள் ஆகமாட்டாள் என்று எண்ணித் தன்முன் வந்து தொழுகின்ற கேகயத்து அரசன்மகளைப் பார்த்து, 'அன்னாய்! அரசன் அயர்ந்து கிடக்கும் நிலைக்குக் காரணம் என்னை? உரையாய்' என்று கேட்கக் கைகேயி, தன்னால் நிகழ்ந்த தன்மையைத் தானே தெரியுமாறு சொன்னாள்.

கு :—'சொல்லுவாளாகாள்' என்பது சொன்னாளாகாள்' எனக் காலவழுவமைதியாக வந்தது. துயர்க்காரணத்தைத் துயரம் என்றது ஆகுபெயர். மன்னவன்மனைவியாதலின் 'அன்னாய்' என்று விளித்தார். அயர்வான் – அயர்வதற்கு. அயர்வானாகிய 'அரசன் நிலைக்குக் காரணம் என் உரையாய் என்றியைத்தலும் ஆம். அரசன் அயர்வு தன்னால் நிகழ்ந்த தன்மையே என்பதைத் தானே விளக்கிக் கூறினாள் என்க. (36)

வசிட்டன் மன்னனைத் தேற்றுதல்

1731. சொற்றாள் சொல்லா முன்னஞ்
சுடர்வா ளரசற் கரசைப்
பொற்றா மரைபோற் கையாற்
பொடிசூழ் படிநின் றெழுவிக்
கற்றா யயரே லவளே
தருநின் காதற் கரசை
எற்றே செயலின் றொழிநீ
யென்றென் றிரவா நின்றான்.

சொற்றாள் சொல்லாமுன்னம்,
சுடர் வாள் அரசற்கு அரசைப்
பொற்றாமரை போல் கையால்
பொடி சூழ் படிநின்று எழுவிக்,
"கற்றாய்! அயரேல்; அவளே
தரும் நின் காதற்கு அரசை;
எற்றே செயல்? இன்று ஒழி நீ"
என்று என்று, இரவாநின்றான்.

போ :—அவ்வாறு சொன்ன கைகேயி சொல்லிமுடிப்பதற்கு முன்னமே ஒளிமிக்க வாளையுடைய சக்கரவர்த்தியைத் தன் பொற்ருமரைபோன்றகையால் புழுதி நிறைந்த தரையில் நின்று எழுப்பி, “ கலைமுழுதும் கற்றவனே ! வருந்தாதே ; நின் காதற் புதல்வனுக்கு அரசை அவளே தருவாள் ; எத்தன்மைத்து நின் செயல் ? துன்புறும் செயலை இப்பொழுதே விடு'' என்று பன்முறை கூறி இரந்துகேட்டுக் கொண்டிருந்தான்.

கு :—சொற்ருள் வினையாலணையும்பெயர். வசிட்டன் கை பொன்னிறமுள்ள மென்கையாதலின் பொற்ருமரையை உவமை கூறினர். இரவு முழுதும் மன்னன் புரண்டு வருந்திய இடமாதலாலும் பணியாளர் தூய்மை செய்ய இயலாமையாலும் புழுதிமிக்க தரையாயிற்று. கற்ருர் முன் கழிவிரக்கம் தோன்றல் ஆகாது என்ற குறிப்புத் தோன்றக் கற்ருய் என்ருர். முதல் அடியில் சொற்ருமுன்னம் என்ற பாடம் பலரால் கொள்ளப்பட்டது. இரத்தல், இங்கு வேண்டிக்கொள்ளுதல். (37)

## தயரதன் மயக்கம் தெளிதல்

1732. சீதப் பனிநீ ரளவித்
திண்கா லுக்க மென் கால்
போதத் தளவே தவழ்வித்
தின்சொற் புகலா நின்ருன்
ஓதக் கடனஞ் சனையா
ளுரைநஞ் சொருவா றவியக்
காதற் புதல்வன் பெயரே
புகல்வா னுயிருங் கண்டான்.

சீதப் பனிநீர் அளவித்
திண் கால் உக்கம் மென் கால்
போதத்து அளவே தவழ்வித்து,
இன் சொல் புகலாநின்ருன் ;
ஓதக் கடல் நஞ்சு அனையாள்
உரை நஞ்சு ஒருவாறு அவியக்,
காதல் புதல்வன் பெயரே
புகல்வான் உயிரும் கண்டான்.

போ :—மிகக் குளிர்ந்த பனிநீர் தெளித்துத் திண்ணிய பிடியையுடைய விசிறியின் குளிர்ந்த காற்றினை அத்தயரதனுக்கு உணர்வு உண்டாகும் வரையில் தவழச்செய்து இனிய சொல்லைச் சொல்லிக்

கொண்டிருந்த வசிட்டன், அலைகடல் நஞ்சினை யொத்த கைகேயியின் சொல்லாகிய நஞ்சு ஒருவாறு தணியக் காதற்புதல்வன் பெயராகிய இராம என்ற சொல்லையே சொல்லுகின்ற தயரதன் உயிருடைய னுதலையும் பார்த்தான்.

கு :—வசிட்ட முனிவன், பனிநீர் தெளித்தும் விசிறியால் விசிறியும் இன்மொழி கூறியும் ஆற்றுவித்தமையால் தயரதன் உணர்ச்சியுற்று இராம என்று சொல்லிக்கொண்டு கண்மலர்ந்தான் ஆதலின் 'புதல்வன் பெயரே புகல்வான் உயிருங்கண்டான்' என்றார். உக்கம் - விசிறி ; திண்கால் என்றது உறுதியான கைப்பிடியை. அறிவு மயக்கம் நீங்கி உணர்வுபெறும் வரை விசிறியால் வீசினன் என்பார், போதத் தளவே தவழ்வித்து என்றார். புகலாநின்றான், வினையாலணையும் பெயர். நின்றான், கண்டான் என்க. ஓதக்கடல் நஞ்சு, ஆலகாலவிடம். நஞ்சனையாள் சொல் ஆதலின் அதுவும் நஞ்சாயிற்று. 'உரை நஞ்சு' உருவகம். மந்திரப்புனலால் தணியும் நஞ்சுபோல வசிட்டன் பனி நீரளவி விசிறிக்கொண்டு சொல்லும் இன்சொலாகிய மந்திரத்தால் அவள் உரை நஞ்சு ஒருவாறு தணிந்தது என்க. முழுதும் தணிந்திலது என்பது புலப்படவேண்டி 'ஒருவாறவிய' என்றார். (38)

## வசிட்டன் 'வருந்தேல்' எனல்

**1733.** காணு வையா வினிநீ
யொழிவாய் கழிபே ரவலம்
ஆணு யகனே யினிநா
டாள்வா னிடையூ றுளதோ
மாணு வுரையா டானே
தருமா மழையே யனையான்
பூணு தொழிவா னெனில்யா
முளமோ பொன்றே லென்றான்.

காணு, 'ஐயா ! இனி நீ
ஒழிவாய் கழி பேர் அவலம்
ஆண் நாயகனே இனிநாடு
ஆள்வான் ; இடையூறு உளதோ ?
மாணு உரையாள் தானே
தரும் ; மா மழையே அனையான்
பூணுது ஒழிவான் எனில் யாம்
உளமோ ? பொன்றேல்' என்றான்.

பொ :—அவ்வாறு கண்டு, "ஐயா, இனி நீ மிக்க பெருந் துன் பத்தை ஒழித்துவிடு; ஆண்மக்களுள் தலைசிறந்தவனாகிய இராமனே இனி நாடு ஆள்வதற்கு இடையூறு உண்டோ? இல்லை; மாட்சிமை யில்லாத சொல்லையுடைய கைகேயி நாம்கூறுமுன்னம் தானே அர சைத் தருவாள் இராமனுக்கு; கரிய மேகம்போன்ற அவ்விராமன் முடி புனையாமல் நீங்குவான் என்றால் யாம் இருப்போமோ? இதற்காக நீ மனம் வருந்தாதே" என்றான்.

கு :—'ஆண் நாயகன்' என்றது, புருடோத்தமன் என்னும் பொருளது. 'உளதோ' என்ற ஓகாரம் எதிர்மறைப் பொருளது. இராமன் நாடாள்வதற்கு இடையூறு இல்லை என்றதற்குக் காரணம், கைகேயி தானே அரசைத்தருவாள் என்ற உறுதியேயாகும். இவள் தந்தாலும் இராமன் ஏலாது நீங்கின் என் செய்வது என்ற ஐயத்தை வருவித்துக்கொண்டு 'பூணுதொழிவானெனில் யாமுளமோ' என்றான். 'ஐயா! நீ யொழிவாய்' என்ற சொல் அமங்கலமாய் எதிரது நோக்கி அமைந்துள்ள அருமை காண்க. கழி-மிகுதி. 'மாணு உரையாள்' என்றது, மாண்டமனமுடையாள் என்னும் கருத்தைத் தோற்றுவித் தல் காண்க. மனம் நல்லளாதலின், தானே தரும் என்பது வசிட்டன் கருத்து. தீநெறிச் சென்றாரை நல்வழிப்படுத்தும் சொல்முறை இது வாதலின் இங்ஙனம் கைகேயியை வசிட்டன் புகழ்ந்து கூறுகின்றான். 'இனி' மாணுதன உரையாதவளாய்த் தானே தரும் எனப் பொருள் கூறலும் ஆம். இப்பொருட்கு, 'உரையாள்' முற்றெச்சம். இனி 'தழைத்த காடு நோக்கிச் செல்லும் மேகம்போல இராமனும் காடு நோக்கிச் செல் லும் இயல்புடையவன்' என்பது புலப்பட 'மாமழையே யனையான்' என்றான். 'யாமுளமோ' என்றதற்குப் பொன்றுவோம், என்று கூறின், இராமன் முடிபுனையாது காடு புகும்போது வசிட்டன் பொன்றுதல் வேண்டும். அஃதின்மையின் அப்பொருள் பொருந்தாமை காண்க. (39)

## தயரதன் வசிட்டனை வேண்டுதல்

1734. என்றம் முனிவன் றன்னை
நினையா வினையே னினியான்
பொன்றும் மளவி லவனைப்
புனைமா மகுடம் புனைவித்

தொன்றும் வனமென் றுன்னு
வண்ணஞ் செய்தென் னுரையும்
குன்றும் பழிபூ ணுமற்
காவாய் கோவே யென்ருன்.

என்ற(ம்) முனிவன்தன்னை
நினையா வினையேன் இனி யான்
பொன்றும் அளவில், அவனைப்
புனை மா மகுடம் புனைவித்து,
ஒன்றும் வனம் என்று உன்னு
வண்ணம் செய்து, என் உரையும்
குன்றும் பழி பூணுமல்
காவாய், கோவே!' என்ருன்.

பொ:—என்ற முனிவனை நோக்கித் தயரதன் 'என் தலைவா! இங்ஙனம் நிகழலாம் என எதிர்காலநிகழ்ச்சியை நினையாத தீவினையையுடைய யான் இனி இறந்து படும் அளவிற்குள், அப்பரதனை அலங்கரிக்கப் பெற்ற சிறந்த முடிபுனையச்செய்து, இராமன் வனம் நண்ணுவான் என்று நினையாதவண்ணம் செய்துவிட்டு, கைகேயிக்குக் கூறிய என் சொல்லும் இழிந்த பழியையடையாதபடி காப்பாற்றுக' என்ருன்.

கு:—என்றம்முனி என்புழி, மகரம் எதுகை நோக்கி விரித்தல் விகாரமாயிற்று. எண்ணிச் செய்யவேண்டிய செயலை எண்ணுது செய்த தன்பிழையை எண்ணி, 'நினையாவினையேன்' என்ருன். வசிட்டன் குருவாதலின், 'கோவே' என்று விளித்தான் தயரதன். குன்றுதல் பழிக்கு அடை. உரையும் பழிபூணுமல் காக்க என்றது, தயரதனுக்கு வாய்மையிலுள்ள பற்றை விளக்குதல் காண்க. அவனை என்றது 'சேய்மையிலுள்ள பரதனை'. பரதனுக்குப் பட்டம்கட்டிவிட்டு இராமனை வனம்புகாமல் செய்தால் போதும் என்பதே தயரதன் எண்ணம். "மண்ணே கொள் நீ மற்றைய தொன்றும் மற" (1611) எனவும், "நின்மகன் ஆள்வான் நீயினிதாள்வாய் நிலமெல்லாம்...... என்மகன்......இந்த நாடிறவாமை நய" (1615) என மேல் வேண்டியதால் இது புலனும். இவ்வாறு கைகேயிபால் கூறிய உரை பழிபூணுதிருக்கவேண்டுமாயின் பரதனுக்கு முடிபுனைதல் இன்றியமையாதது ஆதல் காண்க. அவன் என்றது இராமனையாயின் அவனுக்கு முடிபுனைவித்தலே வனம்புகாவண்ணம் செய்தலாம்; ஆகலின் அதனை மீண்டும் கூறுதல் வேண்டாமை யறிக. மேலும், இராமனுக்கும் முடிபுனைதல்வேண்டும், தயரதன் உரையும் பழிபடல் ஆகாமல் காத்தல்

வேண்டும் என்று வசிட்டனைவேண்டுதல் உடனில்லாத இருளையும் ஒளியையும் உடனிற்கச்செய்க என்றாற் போன்று பொருந்தாக் கூற்றாய்ப் போதல் காண்க. வரும் செய்யுளில். "இனியுன்புதல்வற் கரசும்,...உதவி" என வசிட்டன் கைகேயிக்குக் கூறுவதாலும் இங்கு 'அவனை' என்றது, பரதனையே என்பது உறுதியாதல் காண்க. அரசன் கருத்து அன்னதாதல் வசிட்டன் அறிந்தே கைகேயிக்குக் கூறியுள்ளமை தெளிக. (40)

## வசிட்டன் கைகேயியை வேண்டுதல்

**1735.** முனியும் முனியுஞ் செய்கைக்
கொடியாண் முகமே முன்னி
இனியுன் புதல்வற் கரசு
மேனை யோர்க்கின் னுயிரும்
மனுவின் வழிநின் கணவற்
குயிரு முதவி வசைதீர்
புனிதம் மருவும் புகழே
புனையாய் பொன்னே யென்றான்.

முனியும், முனியும் செய்கைக்
கொடியாள் முகமே முன்னி,
'இனி, உன் புதல்வற்கு அரசும்,
ஏனையோர்க்கு இன் உயிரும்,
மனுவின் வழி நின் கணவற்கு
உயிரும் உதவி, வசை தீர்
புனிதம் மருவும் புகழே
புனையாய் பொன்னே!' என்றான்.

பொ:—தயரதன் கருத்தறிந்த வசிட்ட முனிவனும், யாவரும் வெறுக்கும் செய்கையையுடைய கொடியவளாகிய கைகேயியின் முகத்தையே நோக்கி, 'இலக்குமிபோன்றவளே! இப்பொழுது உன் புதல்வன் பரதனுக்கு அரசையும் ஏனையோர்க்கு இனிய உயிரையும் மனுவின் வழிவந்த நின் கணவனுக்கு உயிரையும் உதவி, பழிநீங்கிய தூய்மை பொருந்திய புகழையே பூண்பாயாக' என்று வேண்டினான்.

கு:—முகக் குறிப்பால் அவள் இசையாள் என்பதுணர்ந்தும் வசிட்டன் அவளை வேண்டினான் என்பது தோன்றக் "கொடியாள் முகமே முன்னி" என்றார். முன்னுதல், இங்கு நோக்குதல். கைகேயி

விரும்பும் பரதனுக்கு அரசு கொடுத்தலை வெளிப்படையாகவும் அவள் வெறுக்கும் இராமன் வனம்புகாமையைக் குறிப்பாகவும் உணர்த்திய வாறு. ஏனையோர்க்கின்னுயிரும் நின்கணவற்கு உயிரும் உதவி என்றது, இராமனை வனம்புகாவண்ணம் செய்து என்னும் கருத்தினது. இராமன் வனம்புகுந்தால் நாட்டு மக்களும் தயரதனும் உயிரிழப்பர்; அவர்க்கு உயிர் உதவவேண்டுமானல் இராமன் இந்நாடிறவாமை நல்க வேண்டும் என்பது பெறப்படுதல் காண்க. மக்கட்கு இராமன் உயிர் என்பதை, "கற்றவர் கற்றிலாதவரும்......உயிரினுமவனையே உவப்பார்" (1438) என்றதாலும், தயரதனுக்கு இராமன் உயிர் என்பதை 'என்மகன் என்கண் என்னுயிர்' (1615) என்றதாலும் உணரலாம். உலக மக்கள் பலருக்கும் உயிர் உதவும் பேருதவியாதலின் அவ்வுதவியால் வரும்புகழை வசைதீர்புகழ் எனவும் கணவற்கு உயிருத வும் புகழாதலின், 'புனிதம் மருவும் புகழ்' எனவும் சிறப்பித்தார். புகழை அணியென்னும் கருத்தால் புனைதல் கூறினர். புனைதற்குரிய தகுதியுண்மை தோன்றப் பொன்னே என்றார். (41)

### கைகேயியின் மறுமொழி

**1736.** மொய்ம்மாண் வினைவே ரறவென்
றொழிவான் மொழியா முன்னம்
விம்மா வழுவா ளரசன்
மெய்யிற் றிரிவா னென்னில்
இம்மா வுலகத் துயிரோ
டினிவாழ் வுகவே னென்சொல்
பொய்ம்மா ணுமற் கின்றே
பொன்று தொழியே னென்றாள்.

மொய் மாண் வினை வேர் அற வென்று
ஒழிவான் மொழியாமுன்னம்,
விம்மா அழுவாள், 'அரசன்
மெய்யில் திரிவான் என்னில்,
இம் மா உலகத்து உயிரோடு
இனி வாழ்வு உகவேன்; என்சொல்
பொய் மாணுமற்கு இன்றே
பொன்றுது ஒழியேன்' என்றாள்.

பொ:—வலிமையாற் சிறந்த நல்வினை தீவினை என்னும் இருவினை களும்வேரோடு அற வென்றவனாகிய வசிட்டன் இவ்வாறு சொல்வதற்கு

முன்னமே' விம்மி விம்மி அழுகின்ற கைகேயி, 'அரசன் மெய்ம்மையில் மாறுபடுவான் ஆனல், அவன் ஆட்சிக்குட்பட்ட இந்தப் பெரிய உலகத்தில் இனி, உயிரோடு வாழ்தலை யான் விரும்பேன் ; என் சொல் பொய்யாகாமல் இருத்தற்கு அறிகுறியாக இப்பொழுதே இறக்காமல் இருக்க மாட்டேன் ' என்ருள்.

கு :—காம வெகுளி மயக்கம் என்னும் முக்குற்றமும் கடிந்த காட்சி யினுல் அக்குற்றங்களின் காரியமாகிய இருவினையும் செய்யாமல், வேண்டுதல் வேண்டாமை யின்றி உலக நன்மை நோக்கி எச்செயலும் செய்யும் இயல்பினன் வசிட்டன் என்பது புலப்பட 'வினைவேரற வென்றெழிவான்' என்ருர். இத்தகைய பெரியோன் சொல் உலக நன்மை நோக்கியது என்பதை உணரும் அறிவு மதுகையின்றி அழுது மறுக்கின்ருளே என்ற இரக்கம் தோன்ற அது அமைந்துள்ளமை காண்க. பரதனுக்குப் பாரளித்தலைக் காட்டிலும் இராமனை வனம்புகுத்து வதில் கைகேயி ஊக்கம் மிகவுடையளாதலின் பின்னது கைகூடாமல் போகின்றதே என்ற ஏக்கத்தால் அழுவாளாயினள். மன்னன் வாய்மையில் மாறுபடலாகாது என்ற கருத்தால்தான் இராமனை வனம்புகச் செய்கின்றேன் என்ற கருத்துத் தோன்ற "அரசன் மெய்யிற் றிரிவானெனில்......வாழ்வுகவேன்" என்கின்ருள். மன்னன் வாய்மை யில் திரிதலாவது, இருவரத்தில் ஒன்றை உடன்பட்டு ஒன்றை விடுமாறு வற்புறுத்துவது. வாய்மையில்லா மன்னவனுட்சியிலிருப்பதை விட மாய்வதே தூய்மையுடைய செயல் என்பது அவள் கருத்து. (42)

## முனிவன் முனிந்து மொழிதல் (1737-1739)

**1737.** கொழுநன் றுஞ்சும் மெனவுங்
கொள்ளா துலகம் மெனவும்
பழிநின் றுயரும் மெனவும்
பாவம் முளதா மெனவும்
ஒழிகின் றிலையன் றியுமொன்
றுணர்கின் றிலையா னிமேல்
மொழிகின் றனவென் னென்ன
முனியும் முறையன் றென்பான்.

'கொழுநன் துஞ்சும் எனவும்,
கொள்ளாது உலகம் எனவும்,
பழி நின்று உயரும் எனவும்,
பாவம் உளதாம் எனவும்,

ஒழிகின்றிலை ; அன்றியும் ஒன்று
உணர்கின்றிலை ; யான் இனிமேல்
மொழிகின்றன என் ?' என்று
முனியும் 'முறை அன்று' என்பான்.

பொ :—வசிட்டமுனிவனும் '(இராமனை வனம் புகுத்துவதால்) கணவன் இறந்துபடுவான் என்றும் உலகம் அதனை ஏற்றுக்கொள்ளாது என்றும் அதனால் பழிமொழி நிலைபெற்று வளரும் என்றும் பாவம் உண்டாகும் என்றும் எண்ணி அத் தீயசெயலை விடுகின்றாயில்லை; அதுவே அன்றிப் பிறர் சொல்லுவது ஒன்றையும் உணர்கின்றாயில்லை; இப்படிப்பட்ட உனக்கு யான் இனிமேல் சொல்ல வேண்டுவன என்ன இருக்கின்றன ?' என்று கூறிவிட்டு அவள் செயல் முறை அன்று என்று விவரிக்கலானான்.

கு :—கூறிய நான்கில் ஒவ்வொன்றே நின் வன்செயலை விடுவதற்குப் போதியதாகவும் அந்நான்கு காரணம் கூடியவழியும் அதனை விட்டொழித்திலை என்பது கருத்து. கொழுநன் வாழ வரங்கிடத்தல் பெண்டிர் இயல்பாகவும், கொழுநன் துஞ்ச வரம்பெறுதல் கூடாது என்றவாறு. இராமனை வனத்திற்கு அனுப்புவதால், நீ கணவனை யிழந்து கழிகல மகளாகி ஊருடன் பகைத்துப் பெரும்பழி வளர்த்துக் கொடும் பாவியாய் இழிதகவு எய்தப்போகின்றாய் என்பதை விளக்கியவாறு. உணர்ச்சி வாயில் உணர்வோர் வலித்து ஆகலின் 'ஒன்று உணர்கின்றிலை; யான் இனிமேல் மொழிகின்றன என்?' என்றான். உணராதார்க்கு உரைப்பதில் பயனில்லை என்பது கருத்து. (43)

**1738.** கண்ணோ டாதே கணவ
னுயிரோ டிடர்கா ணுதே
புண்ணோ டோடுங் கனலோ
விடமோ வென்னப் புகல்வாய்
பெண்ணோ தீயோ மாயாப்
பேயோ கொடியாய் நீயிம்
மண்ணோ டுன்னோ டென்னும்
வசையோ வலிதே யென்றான்.

கண் ஓடாதே, கணவன்
உயிர் ஓடு இடர் காணாதே,
புண்ணோடு ஓடும் கனலோ
விடமோ என்னப் புகல்வாய் !

பெண்ணோ? தீயோ? மாயாப்
பேயோ? கொடியாய்! நீ; இம்
மண்ணோடு உன்னோடு என் ஆம்?
வசையோ வலிதே' என்றான்.

பொ :—'கண்ணோட்டம் செய்யாமல், கணவன் உயிர் ஓடும் நிலையில் உள்ள பேரிடரையும் நோக்காமல், புண்ணில் நுழையும் நெருப்போ அல்லது நஞ்சோ என்று எண்ணுமாறு வலிதாகப் பேசுகின்றவளே! நீ பெண்ணோ? சேர்ந்தாரைக் கொல்லும் நெருப்போ? விடாப் பிடியுள்ள பேயோ? கொடியவளே! இனித் தயரதனுக்கு இம்மண்ணோடும் உன்னோடும் என்ன உறவு உண்டு? இவ்வரத்தால் பெற்ற பழியோ வலியது ஆகும்' என்று கூறினான்.

கு :—கண்ணோட்டமாவது, தன்னோடு பயின்றாரைக் கண்டால் அவர் கூறியன மறுக்க மாட்டாமை. அக்கண்ணோட்டம் கைகேயியினிடம் இருப்பின் தன் சொல்லை மறாது ஏற்றுக்கொள்வாள் ஆதலின் 'கண்ணோடாதே' என்றும் கணவன் உயிர் போன்ற இராமன் பிரியின் கணவன் உயிர் ஓடுமே என்றும் அதனால் தனக்குப் பேரிடர் வருமே என்றும் நோக்கியிருப்பின் இராமனைக் காட்டிற்கு அனுப்ப விரும்பமாட்டாள் ஆதலின் 'கணவனுயிர் ஓடு இடர் காணாதே என்றும் கூறினான். 'புண்ணோடு' என்புழி 'ஒடு' ஏழாவதன்பொருளில் வந்தது, 'புண்ணிலாம் பெரும் புழையில் கனல் நுழைந்தால் என' (328) என முன்னும் விரும்பாத சொல்லுக்கு உவமை கூறியிருத்தல் காண்க. கைகேயியின்சொல் புண்ணில் நுழையும் நெருப்புப் போலவும் நஞ்சு போலவும் துன்பம் செய்கின்றது என்க. சேர்ந்த தயரதனைக் கொல்லுதலால் 'நெருப்போ' என்றும், விடாப்பிடியளாக இருத்தலின் 'மாயாப்பேயோ' என்றும் கூறினான். மாய்தல் மறைதல் ஆதலின் வெளிப்பட்டு வருத்தும் பேயோ எனலும் ஆம். நீ வரத்தால் பெற்ற மண்ணால் உனக்கு என்ன பயன் உண்டாம்? அதனால் பழிதான் வலிதாயிற்று; என்று கூறலுமாம். இப்பொருட்கு ஒடு இரண்டனுள் முன்னது கருவிப் பொருளது: பின்னது நான்காவதன் பொருளில் வந்தது எனக் கொளல் வேண்டும். (44)

**1739.** வாயான் மன்னன் மகனை
வனமே கென்னா முன்னம்
நீயோ சொன்னா யவனே
நிமிர்கா னிடைவன் னெறியிற்

போயோ புகலோ தவிரான்
புகழோ டுயிரைச் சுடுவெந்
தீயோய் நின்போற் றீயோ
ருளரோ செயலென் னென்றான்.

'வாயால் மன்னன் மகனை
வனம் ஏகு என்னா முன்னம்,
நீயோ சொன்னாய்; அவனோ
நிமிர்கான் இடை வல் நெறியில்
போயோ புகலோ தவிரான்;
புகழோடு உயிரைச் சுடு வெந்
தீயோய்! நின்போல் தீயோர்
உளரோ? செயல் என்!' என்றான்.

போ :—'மன்னன் தன் வாயால் இராமனை வனத்திற்குச் செல் என்று சொல்லுவதற்கு முன்னரே நீயோ, 'தந்தையின் ஏவல்' என்று சொல்லிவிட்டாய்; அவ்விராமனோ, உயர்ந்த மரங்களையுடைய காட்டுக்கிடையேயுள்ள வன்மையான வழியில் போய்ப்புகுதலைத் தவிரமாட்டான்; மன்னவன் புகழோடு உயிரையும் சுடுகின்ற கொடிய தீயனையாளே! நின்னைப் போன்ற தீயவர்களும் இவ்வுலகத்துளரோ? நின் செயல்தான் என்னே!' என்று கூறினான்.

கு :—தயரதன் கேட்டது தருவதாக ஒப்புக்கொண்டதன்றி இராமன் வனம் புகவேண்டும் என்றிலன் என்பது புலப்படுத்த, 'வாயால்' என வேண்டாது கூறினார். தீயசொல் பயின்றறியாதது என்று புலப்படுத்த அங்ஙனம் கூறினார் எனினும் ஆம். நிமிர்தல் பரத்தலையுணர்த்திற்று எனினுமாம். விரல் நுதி சிதைக்கும் பரல் நிறை வழி என்பார் 'வன்னெறி' என்றார். நீயோ என்புழி ஓகாரம் பிரிநிலை. அவனோ-புகலோ தவிரான் என்புழி ஓகாரம் தேற்றப் பொருளன. 'போயோ' என்புழி, ஓகாரம் அசை. தயரதன் புகழோடு உயிரை என வருவிக்க. அருவாய புகழையும் உயிரையும் சுடுகின்ற தீயாதலின், 'வெந்தீ' என்றார். உலகத் தீயோடு வேற்றுமை யுண்மை புலப்படுத்தலின் இது வேற்றுமையணி. 'உளரோ' என்புழி, ஓகாரம் எதிர்மறைப்பொருளது. (45)

## தயரதன் கைகேயியை நோதல் (1740-1742)

1740. தாவின் முனிவன் புகலத்
தளரா நின்ற மன்னன்
நாவின் னஞ்ச முடைய
நங்கை தன்னை நோக்கிப்
பாவி நீயே வெங்கான்
படர்வா யென்றென் னுயிரை
ஏவி னாயோ வவனு
மேகி னானோ வென்றான்.

தாவு இல் முனிவன் புகலத்,
தளராநின்ற மன்னன்,
நாவில் நஞ்சம் உடைய
நங்கை தன்னை நோக்கிப்,
'பாவி நீயே வெம் கான்
படர்வாய் என்று என் உயிரை
ஏவினாயோ? அவனும்
ஏகினானோ?' என்றான்.

பொ :—குற்றம் அற்ற வசிட்ட முனிவன் அவ்வாறு கைகேயியை நோக்கி ஏசக்கேட்டு, (இராமன் புறப்பட்டுவிட்டானே என்ற ஐயத்தால்) தளர்ச்சியுறுகின்ற தயரதன், நாவில் நஞ்சுடைய கைகேயியைப் பார்த்து, 'பாவி! என் உயிர் போன்ற இராமனைக் கொடுமை மிக்க காட்டிற்குச் செல்க என்று நீயே ஏவிவிட்டாயோ? அவனும் சென்று விட்டானோ?' என்று கேட்டான்.

கு :—நம்பத்தக்கசொல் என்பது தோன்றத் "தாவின் முனிவன் புகல" என்றார். கைகேயி இராமனையழைத்துக் காட்டிற்குப் போக்கியதை மூச்சற்றிருந்த மன்னன் உணர்ந்திலனாதலின் வசிட்டன் சொல்லால் உணர்ந்து இவ்வாறு கூறினான். நாவால் கேட்ட வரங்காரணமாகத் தன்னை மாய்க்கும் தன்மை நோக்கி நாவில் நஞ்சமுடைய என்றான். 'நாவம்பாலென் னாருயிருண்டாய்' (1621) என்றான் முன்னும். பல்லில் நஞ்சுள்ள பாம்புக்கும் இவளுக்குமுள்ள வேற்றுமை தோன்ற, நாவில் நஞ்சமுடைமை கூறினான். இராமனைக் காட்டிற்கனுப்பிக் கணவனுயிரை மாய்த்து உலக மக்களைத் துயர்க்கடலிலாழ்த்தும் பெரும்பாவ முடைமையின் கைகேயியைப் 'பாவி' என்றான். உயிர் போன்றானை 'உயிர்' என ஆகுபெயரால் கூறினான். (46)

**1741.** கண்டே னெஞ்சங் கனிவாய்க்
கனிவாய் விடநா னெடுநாள்
உண்டே னதனு னீயென்
னுயிரை முதலோ டுண்டாய்
பண்டே யெரிமுன் னுன்னைப்
பாவீ தேவி யாகக்
கொண்டே னல்லேன் வேறோர்
கூற்றந் தேடிக் கொண்டேன்.

'கண்டேன் நெஞ்சம்; கனிவு ஆய்க்
கனி வாய் விடம் நான் நெடுநாள்
உண்டேன்; அதனால், நீ என்
உயிரை முதலோடு உண்டாய்;
பண்டே எரி முன் உன்னைப்,
பாவீ! தேவி ஆகக்
கொண்டேன் அல்லேன், வேறு ஓர்
கூற்றம் தேடிக் கொண்டேன்.'

பொ: —'நின் மனநிலையைக் கண்டுகொண்டேன்; நின் கொவ்வைக் கனிபோன்றவாயில் உள்ள நஞ்சினைக் காதல் உள்ளம் முதிரப்பெற்றவனாய் நெடுநாளாக உண்டேன்; அவ்வாறு உண்டமையால் நீ என்னுயிரை அடியோடு உண்டுவிட்டாய்; ஏ பாவீ! முன்னரே ஓமத்தீ முன்னர் உன்னை மனைவியாகக் கொள்ளவில்லை; என்னுயிருண்ண வேறோர் எமனையே தேடிக்கொண்டேன் ஆனேன்.'

கு :—நெஞ்சம் காட்சிக்குரியதன்று; செயலால் அவள் நெஞ்சின் தன்மை அறியப்பட்டது என்பான், 'கண்டேன் நெஞ்சம்' என்றான். கனிவு–முதிர்ச்சி. 'கனிவாய்விடம் உண்டேன்' என்றது அவள் வாலெயிறு ஊறிய நீர் பருகியதை. வாயமுதத்தை விடம் என்றது, கொல்லுந் தொழில் நோக்கி. அங்கி சான்றாக அவளை மனைவியாகக் கைப்பற்றிய தன்னைக் கொல்லுதல் கண்டு, 'பண்டே கூற்றம் தேடிக் கொண்டேன்' என்றான். தேவியாயின் கொல்லாள் என்பது கருத்து. சாற்றுநாள் அற்றது எண்ணித் தருமம் பார்த்து எல்லாவுயிரையும் விண்ணேற்றுகின்ற கூற்றுவனிருக்கப் புதிய எமனைத் தேடிக் கொண்டேன் என்பான், 'வேறோர்கூற்றம்' என்றான். "கொன்றுழல் கூற்றம் என்னும் பெயரின்றிக் கொடுமை பூண்டாள்" (1688) என்றதும் இக்கருத்தினதாதல் காண்க. 'தேவி ஆகக் கொண்டேன் அல்லேன்' என்றது அவநுதி அணியின்பாற்படும்; உண்மையை மறுத்துரைத்தலின். விடமுண்டாருயிரை அவ்விடம்

உண்பது இயல்பு என்றவாறு. உண்ணப் படுதற்குரியதல்லாத உயிரை உண்டதாகக் கூறியது இலக்கணை. வாய்விடத்தை அமுதென்று நயந்து நெடுநாள் உண்ட என்கண் தவறன்றி நின்கண் தவறில்லை என்பதும், கூற்றந் தேடிக் கொண்ட யானே தவறுடையேன் என்பதும் கருத்தாகக் கொள்க. (47)

**1742.** விழிக்குங் கண்வே றில்லா
வெங்கா னென்கான் முளையைச்
சுழிக்கும் வினையா லேகச்
சூழ்வா யென்னைப் போழ்வாய்
பழிக்கு நாணாய் மாணாப்
பாவி யினியென் பலவுன்
கழுத்தின் ணாணுன் மகற்குக்
காப்பின் ணாணா மென்றான்.

'விழிக்கும் கண் வேறு இல்லா
வெம் கான் என் கான்முளையைச்
சுழிக்கும் வினையால் ஏகச்
சூழ்வாய், என்னைப் போழ்வாய்;
பழிக்கும் நாணாய், மாணாப்
பாவி! இனி என் பல? உன்
கழுத்தின் நாண் உன் மகற்குக்
காப்பின் நாண் ஆம்;' என்றான்.

பொ :—'எனக்குத் தன்னையன்றி விழித்துப் பார்க்கும் கண் வேறு இல்லாத என்னுடைய மகனை வஞ்சகச் செய்கையால் கொடிய காட்டிற்கு ஏகுமாறு செய்பவளே! அச் செய்கையால் என்னைப் பிளந்து கொல்கின்றவளே ஆவாய்; அதனால் வரும் பழிக்கும் நாணாதவளாக இருக்கின்றாய்; மாட்சிமையடைய இயலாத பாவீ! இனிப் பல சொல்லி என்பயன்? உன் கழுத்திலுள்ள மங்கல நாண் உன்மகனுக்கு முடிசூட்டுங்கால் காப்புக் கயிறாக ஆகும்' என்று கூறினான்.

கு :—தயரதனுக்கு இராமனே கண்ணாக இருக்கின்றான் என்பதை எதிர்மறைமுகத்தால் கூறியவாறு. "கண் வேறில்லா என்" எனவியையும், "என்மகன் என்கண்" (1615) என்பதை விளக்கியவாறு. "விழிக்குங் கண்ணிலேன் நின்கண் மற்றல்லால் வேறொருவரோடென் மனம் பற்றாது" (பெரியாழ்வார்-5-1-2) என்பது ஒப்பு நோக்கத்தகும். சுழிக்கும் வினை-சூழ்வினை; வஞ்சகச் செயல். இராமனைப்

பிரிப்பது தயரதன் உயிரைப் பிரிப்பதே யாதலின், 'என்னைப் போழ்வாய்' என்றான். போழ்தல்–பிளத்தல்; கொல்லுதல். கணவனைக் கொல்லுதற்கு அஞ்சாமையே யன்றி அதனால் வரும் பழிக்கும் நாணாய் என உம்மை இறந்தது தழீஇயது. பாவம் செய்தவர்கள் பிறகு திருந்தி மாண்பு எய்தலும் உண்டு; இவளோ எக் காலத்தும் மாண்பு அடையாமைக்கு ஏதுவாகிய பெரும்பாவத்தைச் செய்கின்றவள் என்பான், 'மாணாப்பாவி' என்றான். "மாணாமாட்சிய மாண்டன பலவே" (பதிற்றுப்-19) என்ற பகுதி இங்கு நோக்கத்தகும். கழுத்தின் நாண் என்றது மங்கல சூத்திரத்தை; முடிசூடுங்கால் பரதன் கையில் காப்பு நாணாக அவள் கழுத்தின் நாண் உதவும் என்றது, பரதன் முடிசூடுமுன் தான் இறந்துபடுவதும் அதனால் கைகேயியின் தாலி பெருகுவதும் குறிப்பால் உணர்த்தியவாறு. (48)

### தயரதன் வசிட்டனிடம் கூறல்

**1743.** இன்னே பலவும் பகர்வா
னிரங்கா தாளை நோக்கிச்
சொன்னே னின்றே யிவளென்
றார மல்ல டுறந்தேன்
மன்னே யாவான் வருமப்
பரதன் றனையும் மகனென்
றுன்னேன் முனிவா வவனெ
னுரிமைக் காகா னென்றான்.

இன்னே பலவும் பகர்வான்,
இரங்காதாளை நோக்கிச்
'சொன்னேன்; இன்றே இவள் என்
தாரம் அல்லள், துறந்தேன்;
மன்னே ஆவான் வரும் அப்
பரதன்தனையும் மகன் என்று
உன்னேன், முனிவா! அவன் என்
உரிமைக்கு ஆகான்' என்றான்.

பொ:—இவ்வாறே பலவற்றையும் சொல்லுகின்ற தயரதன், தன் சொல்லுக்கு இரங்காத வன்னெஞ்சக் கைகேயியைச் சுட்டிக்காட்டி, 'முனிவா! இவள் என் மனைவி அல்லள்; இப்பொழுதே துறந்து விட்டேன்; அரசனாதற்கு வரும் அந்தப் பரதனையும் என்மகன் என்று நினைக்கமாட்டேன்; அவன் என் இறுதிக்கடன்செய்யும் உரிமை

யுடையவன் ஆகான்; இப்பொழுதே சொல்லிவிட்டேன்' என்று சொன்னான்.

கு :—இரங்காதாள், வினையாலணையும் பெயர். நோக்குதல், இங்குச் 'சுட்டுதல்' என்னும் பொருளது. 'இன்றே துறந்தேன்' என்க. இராமனைக் காட்டிற்கு அனுப்பித் தன்னைக் கொல்லத் துணிந்த பெரும் பாவியாதலின் கைகேயியைத் தாரமல்லள் எனத் துறந்த தயரதன், அப்பாவியின் வயிற்றில் பிறந்து அவள் சூழ்வினைக்கு உடன்பட்டவன் பரதன் என்ற எண்ணத்தால் 'பரதனையும் மகன் என்று உன்னேன்' என்றும் உரிமைக்கு ஆகான் என்றும் வெறுத்துக் கூறினான். வசிட்டனே குலகுருவாதலின் அவனை விளித்துக் கூறினான்; மேல் தவறு நிகழாமல் காக்கவேண்டி. 'இன்னே சொன்னேன்' என்று இயைக்க. (49)

## கோசலையின் நிலை (1744-1745)

1744. என்னைக் கண்டும் மேகா
வண்ணம் மிடையூ றுடையான்
உன்னைக் கண்டும் மிலனோ
வென்றா னுயர்கோ சலையைப்
பின்னைக் கண்டா னனையான்
பிரியக் கண்ட துயரம்
தன்னைக் கண்டே தவிர்வா
டளர்வா னிலையிற் றளர்வாள்.

'என்னைக் கண்டும் ஏகா
வண்ணம் இடையூறு உடையான்
உன்னைக் கண்டும் இலனோ?'
என்றான், உயர் கோசலையை;
பின்னைக் கண்தான் அனையான்
பிரியக் கண்ட துயரம்
தன்னைக் கண்டே தவிர்வாள்
தளர்வான் நிலையில் தளர்வாள்.

பொ :—உயர்ந்த பண்புள்ள கோசலையை நோக்கி, 'என்னைப் பார்த்தும் போகாதபடி (கைகேயியால்) இடையூறு உடையவனாகிய இராமன், நின்னையும் பார்க்கவில்லையோ?' என்றான்; பின்பு அவள், தன் கண் போன்ற இராமன் பிரிந்து வனஞ்செல்லக் கண்ட துயரத்தை,

தயரதன் நிலைமை கண்டபின் நீங்கினவளாய்த் தளர்ச்சியுற்ற அவன் நிலைக்கு மனம் தளர்பவள் ஆனாள்.

கு:—என்னிடம் சொல்லிச் செல்லாவிடினும் கண்டு செல்லவும் இயலாதபடி இடையூறு உடையவன் என்று பொருள்படுதலின் கண்டும் என்பது இழிவுசிறப்பும்மை. கைகேயி ஆங்கிருத்தலின் அவள் பெயர் கூருது 'இடையூறுடையான்' என்று மட்டும் கூறியொழிந்தார். தயரதனை இராமன் காணுது சென்றமைக்குக் கைகேயியே காரணம் என்பதை: "தூயவனிருந்த சூழல் துருவினன் வருதல் நோக்கி, நாயகன் உரையான் வாயால் நானிது பகர்வேன் என்னுத் தாயென நினைவான் முன்னே கூற்றெனத் தமியள்வந்தாள்" (1686) என்றதாலுணரலாம். 'உன்னையும் கண்டிலனே' என உம்மையைப் பிரித்துக் கூட்டுக. மூத்தமனைவியாதலாலும் இராமனை யீன்ற ஏற்றமுடைமையாலும் 'உயர் கோசலை' எனச் சிறப்பித்தார். வாளேறு படத் தேளேறு மாய்ந்தாற் போல மணாளன் பெரும்பிறிதுறும் துயரம் கண்டவுடன் மகன் பிரியக் கண்ட துயரம் தவிர்ந்தாள்; தயரதன் நிலைக்குத் தளர்ந்தாள் என்க. தன்னை - தயரதனை. தளர்வான் - தளர்ச்சியுறும் தயரதன். 'நிலைக்கு' என உருபுமயக்கமாக்குக. (50)

**1745.** மாற்றாள் செயலா மென்றுங்
கணவன் வரமீந் துள்ளம்
ஆற்றா தயர்ந்தா னென்று
மறிந்தா ளவளு மவனைத்
தேற்றா நின்றாண் மகனைத்
திரிவா னென்றா ளரசன்
தோற்றான் மெய்யென் றுலகஞ்
சொல்லும் பழிக்குஞ் சோர்வாள்.

மாற்றாள் செயல் ஆம் என்றும்,
கணவன் வரம் ஈந்து உள்ளம்
ஆற்றாது அயர்ந்தான் என்றும்
அறிந்தாள்; அவளும் அவனைத்
தேற்றா நின்றாள்; மகனைத்
திரிவான் என்றாள்; அரசன்
'தோற்றான் மெய்' என்று உலகம்
சொல்லும் பழிக்கும் சோர்வாள்.

பொ :—இராமனை வனம்புக ஏவியது மாற்றவளாகிய கைகேயி யின் செயல் ஆகும் எனவும், கணவன் அவளுக்கு வரம் கொடுத்து விட்டுப் பின் உண்மை அறிந்து இராமன் பிரிவிற்கு ஆற்றாதவனாய் அயர்ச்சியுற்றான் எனவும், அறிந்து கொண்டவளாகிய கோசலையும் அத்தயரதனைத் தேற்றுவதற்குத் தொடங்கினாள்; தன்மகனாகிய இராமன் வனத்தில் நின்று திரும்புவான் என்று கூறினாள்; அவன் வனம் புகாது திரும்பினால் உலகத்தோர், 'அரசன் வாய்மைக்குத் தோற்று விட்டான்' என்று சொல்லும் பழிச்சொல் வருமே என்பதற்காகவும் சோர்வாள் ஆனாள்.

கு :—மாற்றாள்-சக்களத்தி. இராமன் திரும்பினால் அரசன் வாய்மையில் தவறினவன் என்று உலகம் பழிக்குமே என மனம் தளர்ந்தாள் கோசலை. "பொய்த் திறத்தின னுக்குதியோ புகல், மெய்த் திறத்து நம் வேந்தனை நீ" (1708) என முன்னர் இராமன் கூறியதும் காண்க. (51)

### கோசலையின் கூற்று

1746. தள்ளா நிலைசான் மெய்ம்மை
தழுவா வழுவா வகைநின்
றெள்ளா நிலைகூர் பெருமைக்
கிழிவா மென்றா லுரவோய்
விள்ளா நிலைசே ரன்பான்
மகன்மேன் மெலியி னுலகம்
கொள்ளா தன்றோ வென்றாள்
கணவன் குறையக் குறைவாள்.

'தள்ளா நிலைசால் மெய்ம்மை
தழுவா வழுவா வகை நின்று
எள்ளா நிலைகூர் பெருமைக்கு
இழிவாம் என்றால், உரவோய்!
விள்ளா நிலைசேர் அன்பால்
மகன்மேல் மெலியின், உலகம்
கொள்ளாது அன்றோ?' என்றாள்,
கணவன் குறையக் குறைவாள்.

பொ :—கணவன் மெலிய மெலிகின்ற கோசலை, அறிவிற் சிறந்தோய்! தவறத் தகாத தன்மையிற் சிறந்த வாய்மையைத் தழுவி அதில்

வழுவாத வண்ணம் இதுகாறும் நின்றதால் பிறர் இகழாத நிலையினை யுடையதாய்ச் சிறந்த நின் பெருமைக்கு, இராமனை வனம்புகாது தடுத்தல் இழிவாகும் என்றால், பிரிகின்ற மகன்மேலுள்ள பிரியாத நிலைமையுடைய பேரன்பால் வருந்தினால், உலகம் அச் செயலை நன்று என்று ஏற்றுக்கொள்ளாது அன்றோ?" என்று கூறினாள்.

கு :—வாய்மையின் நல்ல பிற இல்லை யாதலின், "தள்ளா நிலை சால்மெய்ம்மை" என்றாள். தழுவா, தழுவி. நிற்ப என்பது 'நின்று' எனத் திரிந்துநின்றது; 'வானின்றுலகம்' (குறள்-11) என்புழிப் போல. நிற்றலால் உளதாய பெருமை என்க. வாயால் இராமன் வனம்புக வரத்தைக் கொடுத்துவிட்டு, மனத்தால் அவன் போகலாகாதே என எண்ணி வருந்தினால், மனத்தொடு வாய்மை மொழிந்ததாகாது ஆகலின், 'உலகம் கொள்ளாதன்றோ' என்றாள். வாய்மையைக் காக்க வருந்தலாகாது என்று சொல்லும் கோசலையும் தயரதன் போல வருந்துகின்றவளே என்பார், "கணவன் குறையக் குறைவாள்" என்றார். குறைதல்-மெலிதல். தயரதன் மெலிதல் இராமன் பிரிவிற்கு என்றும், கோசலை மெலிதல் தயரதன் மெலிவிற்கு என்றும் வேறுபாடு காண்க. 'மகன்மேல் அன்பால் மெலியின்' என மாறுக. உலகம் என்றது உயர்ந்தோரை. இதனால், ஈன்ற மகனைக் காடுபுகுத்தியும் கொண்ட கணவன் சான்றாண்மை காக்கும் கோசலையின் மாண்பு உணரலாம். (52)

### கவிக்கூற்று

1747. போவா தொழியா னென்னாள்
புதல்வ னகலக் கணவன்
சாவா தொழியா னென்றென்
றுள்ளந் தள்ளூற் றயர்வாள்
காவா யென்றாண் மகனைக்
கணவன் புகழுக் கழிவாள்
ஆவா வுயர்கோ சலையா
மன்ன மென்னுற் றனளே.

'போவாது ஒழியான்' என்னாள்;
புதல்வன் அகலக் கணவன்
சாவாது ஒழியான் என்று என்று
உள்ளம் தள்ளூற்று அயர்வாள்,

'காவாய்' என்றுள் மகனைக்,
கணவன் புகழுக்கு அழிவாள்;
ஆ! ஆ! உயர் கோசலையாம்
அன்னம் என் உற்றனளே!

போ:—தன் புதல்வனுகிய இராமன் பிரிந்தவுடன் கணவனுகிய தயரதன் சாகாமல் இருக்கமாட்டான் என்று என்று எண்ணி மனந் தளர்கின்றவள் ஆதலின் 'இராமன் காட்டிற்குப் போகாதிரான்' என்பதைச் சொல்ல இயலாதவளானுள்; இராமனை விளித்து 'நின் தந்தையைக் காப்பாயாக' என்று சொன்னுள்; சொன்னவள் தன்கணவன் புகழுக்கு இழுக்கு வருமோ என்று எண்ணி மனம் அழிவாள்; ஐயோ! உயர்ந்த பண்புள்ள அன்னம்போல்வாளாகிய கோசலை எத்தகைய துன்பந்தான் அடைந்தாள்!

கு:—ஒருபால் கணவனுயிர்க்கும் மற்றொருபால் அவன் புகழுக்கும் ஆகக் கருத்து அழிய வேண்டியிருத்தலின், 'ஆ ஆ என்னுற்றனள்' என இரங்கிக் கூறினர். (53)

45-ஆம் பிரதியில் இப்பாடலின் பின்,

1747 (a) "அன்னு ளின்ன பன்னி யழியத் துயரான் மன்னர்
மன்னு னவனும் மிடரின் மயங்கி மைந்தா மைந்தா
முன்னே வனமே கிடனீ முறையோ முதல்வா முறையோ
என்னே யான்செய் குறைதா னென்றே யிரங்கி மொழிவாள்"

என்ற பாடல் ஒருபிரதியில் காணப்படுவதாக உள்ளது.

## தயரதன் புலம்பல் 1748—1759

1748. உணர்வா னனையா ளுரையா
லுயர்ந்தா னுரைசால் குமரன்
புணரா நிலமே வனமே
போவா னேயா மென்னு
இணரார் தருதா ரரச
னிடரா லயர்வான் வினையேன்
துணைவா துணைவா வென்றுன்
றேன்று றேன்று யென்றுன்.

உணர்வான் அனையாள் உரையால்,
'உயர்ந்தான் உரைசால் குமரன்
புணரான் நிலமே வனமே
போவானே ஆம்' என்று;
இணர் ஆர்தரு தார் அரசன்
இடரால் அயர்வான், 'வினையேன்
துணைவா! துணைவா!' என்றான்;
'தோன்றல்! தோன்றாய்' என்றான்.

பொ:—பூங்கொத்துக்கள் நிறைந்த மாலையணிந்த தயரதன், அந்தக் கோசலையின் சொல்லால், உயர்ந்த பண்புள்ளவனும் புகழ் மிக்கவனுமாகிய இராமன், அயோத்திநகரத்தில் பொருந்தி இரான்; வனத்திற்குப் போவானே ஆம் என்று உணர்ந்தவனாய்த் துன்பத்தால் சோர்கின்றவன், 'தீவினையுடைய எனக்குத் துணைவனே! துணையாக வருக' என்று அரற்றினான்; 'என் தோன்றலே! என் முன் தோன்றுவாயாக' என்று கூறினான்.

கு:—நெடியோன் என்பது புலப்பட, 'உயர்ந்தான்' என்றார் எனலுமாம். உரை-புகழ். உரைசால் குமரன் ஆகலின் தந்தையின் புகழ் குன்றுமாறு செய்யான் என்பது புலப்பட அப்பெயரால் கூறினார். நிலம் என்றது இங்கு அயோத்தி நகரத்தை. 'புணரானிலம்' என்பதற்கு முடிசூடிக் கொள்ளமாட்டான் என்று பொருள் கூறுதல் பொருந்தாமை, 'மண்ணே கொள் நீ மற்றைய தொன்றும் மற' என்ற முன்னைச் சொல்லோடு முரணுதல் கண்டு உணரலாம். அனையாள் உரை என்றது, "தள்ளா நிலைசால் மெய்ம்மை......பெருமைக்கு இழிவாம் என்றால் உரவோய்,......அன்பால் மகன்மேல் மெலியின் உலகம் கொள்ளாதன்றே" (1746) என்ற சொல்லை. இச்சொல்லால் தயரதன் வாய்மைக்கு இழிவு வாராமல் இராமன் வனம்புக்கான் என்பது பெறப்படுதல் காண்க. "துணைவா துணைவா" என்பது மடக்கணி. (54)

ஒரு பிரதியில் இப்பாடல் பின்வருமாறு உள்ளதாக 45-ஆம் பிரதி கூறுகின்றது.

1748.(a) "உணர்வே துமிலா ளுரையா லுயர்சால் குமரன் னெடுநாள்
புணரா னிலமா வனமே போவா னேயா மென்னில்
இணரே பொலிதார் நிருபா விடரா லயர்வா யிதுவும்
துணையோ துணைவா வென்றாள் துயரேல் துயரேல் என்றாள்.

1749. கண்ணுங் நீரா யுயிரும்
மொழுகக் கழியா நின்றேன்
எண்ணுங் நீர்நான் மறையோ
ரெரிமுன் னின்மேற் சொரிய
மண்ணுங் நீராய் வந்த
புனலே மகனே வினையேற்
குண்ணுங் நீரா யுதவி
யுயர்கா னடைவா யென்றான்.

'கண்ணும் நீராய் உயிரும்
ஒழுகக் கழியாநின்றேன்,
எண்ணும் நீர் நான்மறையோர்,
எரிமுன், நின்மேல் சொரிய
மண்ணும் நீராய் வந்த
புனலே, மகனே! வினையேற்கு
உண்ணும் நீராய் உதவி
உயர் கான் அடைவாய்' என்றான்.

பொ:—'மகனே! கண்ணிரண்டிலும் நீர் மிக ஒழுகாநிற்க உயிரும் கழியும் நிலையில் நிற்கின்றேன்; மதிக்கத்தக்க தன்மையினையுடைய நான்கு வேதங்களிலும் வல்ல அந்தணர், ஓமத்தீமுன்னர் நின் மேனிமேல் சொரிய நீ ஆடுதற்குரிய மங்கலப் புனலாகக் கங்கை முதலிய ஆறுகளிலிருந்து கொடுவந்த தூய நீரைத் தீவினையுடைய எனக்கு இறுதிக் கடனில் உண்ணும் நீராகக் கொடுத்துவிட்டுப் பின்னர் உயர்ந்த காட்டை அடைவாயாக' என்று கூறினான்.

கு:—இராமனை முன்னிற்பவனாகக் கற்பனைசெய்துகொண்டு தயரதன் இங்ஙனம் கூறுகிறான். கண்ணும் நீராய் ஒழுக, உயிரும் கழியா நின்றேன் என நிரல் நிறையாக இயைக்க. முடிபுனைவிழாவில் நினக்கு ஆட்டுதற்கு வந்த மங்கலப் புனலை அவ்விழாத் தடைப்பட்டமையால் எனக்கு நீர்க்கடன் செய்தற்குரிய புனலாக உதவி உயர்கான் அடைவாய் என்றது. எனக்கு நீர்க்கடன் செய்தபின் காட்டிற்குச் செல்க என்னும் கருத்தினது. உண்ணும் நீராய் உதவி என்பதற்கு, உயிர் போகுங்கால் பருகும்நீராய் உதவி என்று பொருள் கொள்ளலும் ஆம். எண்ணும் நீர் - மதிக்கும் தன்மை. மண்ணுதல் – கழுவுதல்; இங்கு முழுக்காட்டுதலை யுணர்த்திற்று. கங்கை முதலான புண்ணிய நதிகளிலிருந்து கொணர்ந்த தண்ணிய புனலால் நின்னை மண்ணி மணிமுடி சூட்டிக் காணும் நல்வினை இலாதேன் என்னும் கருத்துப் புலப்பட, 'வினையேன்' என்றான். புதல்வர் கொடுக்கும் எள் நீர் முதலியன

"உடம்பினின்றும் பிரிந்த உயிர்கட்கு உணவாகும் என்பது நூற் கொள்கை. (55)

1750. படைமா ணரசைப் பலகாற்
பகுவாய் மழுவா லெறிவான்
மிடைமா வலிதா னனையான்
வில்லா லடுமா வல்லாய்
உடைமா மகுடம் புனையென்
றுரையா வுடனே கொடியேன்
சடைமா மகுடம் புனையத்
தந்தே னந்தோ வென்றான்.

'படை மாண் அரசைப் பலகால்
பகுவாய் மழுவால் எறிவான்,
மிடை மா வலிதான், அனையான்
வில்லால் அடுமா வல்லாய்!
"உடை மா மகுடம் புனை" என்று
உரையா, உடனே கொடியேன்,
சடை மா மகுடம் புனையத்
தந்தேன், அந்தோ!' என்றான்.

பொ:—'படைக்கலங்களால் மாட்சிமை பெற்ற அரசர்களை இருபத் தொரு தலைமுறை, பிளக்கின்ற கூரிய வாயினையுடைய மழுவாயுதத்தால் எறிந்த பரசுராமனது செறிந்த மிக்க வலிமையை, அவனுடைய வில்லால் அழிக்கும் நெறியில் வல்லவனே! "உனக்கு உரிமையுடைய தாகிய பெரிய முடியைப் புனைவாயாக" என்று முன்னர் உரைத்துவிட்டு, உடனே கொடியேனாகிய யான், சடைமுடி புனையத் தந்துவிட்டேனே, ஐயோ!' என்று அரற்றினான்.

கு:—வில் முதலிய படைகளால் மாட்சிமை பெற்றிருந்தும் மன்ன ரெல்லாம் பரசுராமன் மழுவுக்கு ஆற்றாது தோற்றனர் என்று அவன் ஆற்றல் தோற்றப் 'படை மாணரசை' எனச் சிறப்பித்தார். படை என்றது 'நால்வகைப் படை' எனலுமாம். 'பலகால்' என்றது மூவேழ்தலை முறையை. பரசுராமனை அன்று இராமன் வெல்லாது விடுத்திருப்பின் தயரதன் அரசு பரசுராமனுடையதாயிருக்கும்; அவ்வாறு அவன் பெருவண்ணம் வென்றவன் இராமனே ஆதலின் முறைப்படி அயோத்தி யரசுக்கு உரிமையுள்ளவன் அவ்விராமனே என்பது தோன்ற 'உடை மாமகுடம்' என்று கூறினான். 'மூவெழு முறைமையெங் குலங்கண் முற்

றுறப் பூவெழுமழுவினுற் பொருது போக்கிய, சேவகன் சேவகஞ் செகுத்த சேவகற் காவதிவ் வுலக மீது அறன்" (1475) என்று தயரதனுக்கு மன்னர் கூறியதும் இங்கு நினைக்க. தயரதன் கொடாத முன்னரே இராமன், பரசுராமனை வென்றமையால் அரசுடையனுனன் என்பது கருத்து. கைகேயியின் வரத்திற்கு உடம்பட்டமையால் தயரதன், இரா மன் சடைமுடி புனையச் செய்தவனே ஆகின்றமையால் தன் செயலாகக் கூறினன். அந்தோ – இரக்கக்குறிப்பு. உரையா – உரைத்து; செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம். (56)

**1751.** கறுத்தா யுருவம் மனமுங்
கண்ணுங் கையுஞ் செய்ய
பொறுத்தாய் பொறையே யிறைவன்
புரமூன் றெரித்த போர்வில்
இறுத்தாய் தமியே னென்னு
தென்னை யிம்மூப் பிடையே
வெறுத்தா யினிநான் வாழுள்
வேண்டேன் வேண்டே னென்றுன்.

'கறுத்தாய் உருவம்! மனமும்
கண்ணும் கையும் செய்ய
பொறுத்தாய்! பொறையே! இறைவன்
புரம் மூன்று எரித்த போர் வில்
இறுத்தாய்! தமியேன் என்னுது
என்னை இம் மூப்பிடையே
வெறுத்தாய்; இனி நான், வாழ்நாள்
வேண்டேன், வேண்டேன்' என்றுன்.

பொ :—'கரிய உருவினனே! மனமும் கண்ணும் கையும் செம்மை யுடையவாகப் பெற்றுள்ளவனே! பொறுமையின் வடிவமானவனே! முப்புரம் எரித்த சிவனது போர் செய்தற்கு உரியவில்லை ஒடித்தவனே! யான் தனியாக உள்ளேன் என்று எண்ணுது என்னை இந்த முது மைக்கு இடையில் வெறுத்துவிட்டாய்; இனி நான் இவ் வுடம்போடு வாழும் நாளை விரும்பேன்; விரும்பேன்' என்று கூறினன்.

கு :—மனம் செம்மை யுடையதாகவும் கண்ணும் கையும் செந்நிறமுடையனவாகவும் தாங்கினுய் எனப் பொருள் கொள்ள வேண்டுதலின் 'செய்ய' என்றது இரட்டுறமொழிதல். மனத்திற்குச் செம்மை கோட்டமின்மை. "கண்ணும், திருவடியும் கையும் திருவாயும்

செய்ய கரியவனே'' (சிலப். ஆய்ச்சியர்குரவை) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். இது, இராமன் அழகில் ஈடுபட்டுக் கூறியது. 'வில்லிறுத் தாய்' என்றது, சீதையின் மணங்கண்டதை நினைந்து கூறியது. பொறுத் தல்-தாங்குதல். பொறை-பொறுமை. புரமூன்று எரித்த இறைவன் என மாற்றுக. இறுத்தல்-ஒடித்தல். தயரதன் இராமனையன்றி வேறு துணை யில்லாதவன் ஆதலின் அவன் பிரிந்த நிலையில் தமியன் ஆனான். பொறுமையிற் சிறந்த நீ நின் தந்தையாகிய என்னை இம் முதுமைப் பருவத்தில் வெறுத்துப் பிரிதல் பொருத்தமன்று என்பது கருத்து. என் கண்ணாகவும் உயிராகவும் இருந்த நீ பிரிந்த பின், யான் உடம்போடு வாழும் நாளை விரும்பேன் என வெறுப்புத் தோன்றக் கூறியவாறு. 'வேண்டேன் வேண்டேன்' என்ற அடுக்கு வெறுப்புமிகுதியை யுணர்த்திற்று. இம்மூப்பு என்று தன்னுடம்பைச் சுட்டிக்காட்டியதாகக் கொள்க. (57)

**1752.** பொன்னின் முன்னம் மொளிரும்
பொன்னே புகழின் புகழே
மின்னின் மின்னும் வரிவிற்
குமரா மெய்யின் மெய்யே
என்னின் முன்னம் வனநீ
யடைதற் கெளியே னல்லேன்
உன்னின் முன்னம் புகுவே
னுயர்வா னகம்யா னென்றான்.

'பொன்னின் முன்னம் ஒளிரும்
பொன்னே! புகழின் புகழே!
மின்னின் மின்னும் வரி வில்
குமரா! மெய்யின் மெய்யே!
என்னின் முன்னம் வனம் நீ
அடைதற்கு எளியேன் அல்லேன்;
உன்னின் முன்னம் புகுவேன்
உயர் வானகம் யான்' என்றான்.

பொ :—'பொன்னினும் மிக்கு ஒளி வீசும் சிறந்த பொன் போன்ற வனே! புகழ்க்குப் புகழ் போன்றவனே! மின்னலைப் போல் மின்னு கின்ற கட்டமைந்த வில்லையுடைய மைந்தனே! உண்மையின் வடிவ மானவனே! எனக்கு முன் நீ காடு புகுதற்கு யான் அவ்வளவு எளியன் அல்லேன்; உனக்குமுன் யான் உயர்ந்த வானகத்தில் புகுவேன்' என்று கூறினான்.

கு :—புகழும் இராமனால் சிறப்புப் பெற்றது என்பார், 'புகழின் புகழே' என்றார். மேகமனைய இராமன் மேனியைச் சேர்ந்து ஒளிவீசும் வில் மின்னலைப் போல் விளங்கி ஒளி வீசிற்று என்பது கருத்து. 'குமரன்' என்றது 'மைந்தன்' என்னும் பொருளது. வாய்மையைச் சிறப்பறமாகக் கொண்டு ஒழுகுகின்றமை புலப்பட 'மெய்யின் மெய்யே' என்றான். தந்தை வாய்மைக்கு இழுக்கு நேராவண்ணம் காடுபுகும் சிறப்பு நோக்கி அங்ஙனம் கூறினான் எனலும் ஆம். இராமனைப் பரம்பொருளாக எண்ணி, மெய்யுணர்விற்குமட்டும் எட்டுகின்ற மெய்ப்பொருளே! என விளித்தான் எனலும் ஆம். நீ வனம் புகுமுன் யான் வானம் புகுவேன் என்ற சொல்லமைப்பும், குமரன் அண்மையில் உள்ள வனம் புகுமுன் முதியேன் சேய்மையிலுள்ள வானம் புகுவேன் என்ற கருத்தமைப்பும் காண்க. எனக்குமுன், உனக்குமுன் என உருபு மயக்கமாக்குக. வாய்மை காரணமாக வனம் புகும் இராமனுக்குமுன் அன்பு காரணமாகத் தயரதன் வானம் புகுதல் எளிதினும் கடிதினும் ஆம் என்பது புலப்படுத்தியவாறு. "கானகமே மிக விரும்பி நீ துறந்த வளநகரைத் துறந்து நானும் வானகமே மிக விரும்பிப் போகின்றேன்" (பெருமாள் திருமொழி-9-10) என்றதும் காண்க. (58)

**1753.** நெகுதற் கொத்த நெஞ்சு
நேயத் தாலே யாவி
உகுதற் கொத்த வுடலு
முடையே னுன்போ லல்லேன்
தகுதற் கொத்த சனகன்
றையல் கையைப் பற்றிப்
புகுதக் கண்ட கண்ணாற்
போகக் காணே னென்றான்.

'நெகுதற்கு ஒத்த நெஞ்சும், நேயத்தாலே ஆவி
உகுதற்கு ஒத்த உடலும் உடையேன், உன்போல் அல்லேன்;
தகுதற்கு ஒத்த சனகன் தையல் கையைப் பற்றிப்
புகுதக் கண்ட கண்ணால் போகக் காணேன்' என்றான்.

பொ :—'அன்பினால் நெகிழ்ந்து உருகுதற்கு ஏற்ற உள்ளமும், உயிர் விடுதற்கு ஏற்ற உடம்பும் உடையவன் யான்; உன்னைப் போல வன்னெஞ்சமும் வல்லுடம்பும் உடையேன் அல்லேன்; நீ நின் தகுதிக்கு ஒத்த சனகன் மகளாகிய சானகியின் கையைப் பற்றிக்கொண்டு இவ் வரண்மனையில் புகுந்ததைக் கண்ட கண்களால் நீ அச்சானகியுடன் போதலைக் காணமாட்டேன்' (போதற்குமுன் யான் சாவேன்) என்றான்.

கு .—'நேயத்தாலே' என்பது, முன்னும் இயைந்து இடைநிலை விளக்காய் நின்றது. நெகுதல்-நெகிழ்தல்; கசிதல். வன்னெஞ்சிற்கு அன்பால் உருகுதல் இல்லை; வன்னெஞ்சர்களின் வல்லுடம்பிற்கும் அன்பால் உயிர்விடுதல் இல்லை என்பது கருத்து. தயரதன் இராமன் பிரிவு பொருத அன்பினல் உள்ளம் உருகி உடல் மெலிந்து உயிர் விடுவான் என்பது கூறியவாறு. இராமன் தன் துயர் நோக்காது பிரியும் வன்கண்மையை நினைந்து, 'உன்போல் அல்லேன்' என்ருன். 'பெற்ற மனம் பித்து ; பிள்ளை மனம் கல்லு' என்ற பழமொழியும் ஈண்டு நினைக்க. தகுதல்-தகுதி; தகுதிக்கு ஒத்தலாவது, 'பிறப்பு, குடிமை, ஆண்மை, ஆண்டு, அழகு, அன்பு, நிறை, அருள், அறிவு, செல்வம் என்பனவற்ருல் ஒத்தல். சானகியின் கையைப்பற்றி மணக்கோலத்துடன் மனையில் புகுந்தது இன்பக் காட்சியாதலாலும் தவக்கோலத்துடன் வனத்திற்குப் போவது துன்பக் காட்சியாதலாலும், 'புகுதக் கண்ட கண்ணுல் போகக் காணேன்' என்ருன். 'நீ போதற்கு முன் யான் சாவேன்' என்பது எச்சமாக வருவிக்க. (59)

**1754.** எற்றே பகர்வே னினியா
னென்னே யுன்னிற் பிரிய
வற்றே யுலக மெனினும்
வானே வருந்தா தெனினும்
பொற்றே ரரசே தமியேன்
புகழே யுயிரே யுன்னைப்
பெற்றே னருமை யறிவேன்
பிழையேன் பிழையேன் என்ருன்.

"எற்றே பகர்வேன் இனி யான்?
என்னே! உன்னில் பிரிய
வற்றே உலகம் எனினும்,
வானே வருந்தாது எனினும்,
பொன் தேர் அரசே! தமியேன்
புகழே! உயிரே! உன்னைப்
பெற்றேன் அருமை அறிவேன்;
பிழையேன், பிழையேன்;" என்ருன்.

போ :—'பொன்னுல் இயன்ற தேர் ஏறுதற்குரிய அரசனே! துணையிலாத எனக்குப் புகழ் விளைப்பவனே! என் உயிராக இருப்பவனே! எனக்கு நேர்ந்த துன்பந்தான் என்னே? இனி யான் என்ன சொல்வேன்? இவ்வுலகம் உன்னைப் பிரிந்திருக்க வல்லது என்ருலும், வா

னுலகம் உன் பிரிவிற்கு வருந்தாது என்றாலும், உன்னைப் பெற்ற யான் தான் பிள்ளையாகிய உன் அருமையை அறிவேன்; எனவே, யான் பிழைத்திருக்கமாட்டேன்; பிழைத்திருக்கமாட்டேன்;' என்று அரற்றினான்.

கு :—உன்னில் - உன்னை; உருபுமயக்கம். உலகம், வான் என்பன ஆகுபெயராய் மக்களையும் தேவரையும் உணர்த்தின. நமக்கு வாய்த்த நல்ல உயிரனைய வேந்தனைப் பிரிய நேர்ந்ததே என வருந்தற்குரியார் மண்ணுலக மக்களே ஆதலின் அவரை முற் கூறினான். தமக்குச் சிறப்பும் பூசனையும் செல்லுமாறு செங்கோல் செலுத்தவல்ல நல்லரசன் முடிசூடாமல் கானகம் செல்வது வானோர் வருந்தற்குரிய நிகழ்ச்சியாதலின் 'வானே வருந்தாதெனினும்' என்றான். தயரதன் தன் மனத்தாலும் வாக்காலும் இராமனை அரசன் ஆக்கினான் ஆதலின், அரசே! என்று விளித்தான். வாய்மையில் வழுவாது காத்துத் தன்புகழை வளர்ப்பவன் ஆதலின், இராமனைப் 'புகழே' என்று விளித்தான். உயிரனையானை உயிர் என்றது ஆகு பெயர். மண்ணவரும் விண்ணவரும் வருந்தாவழியும் தான் பிழைத்திராமைக்குக் காரணம் கூறுவானாய், "உன்னைப் பெற்றேன் அருமை யறிவேன்" என்றான். "பெற்றவர்க்கே தெரியும் பிள்ளை யருமை" என்னும் பழமொழியும் காண்க. "பிழையேன், பிழையேன்" என்றது அடுக்கு. அதை மடக்கெனக் கொண்டு, "கைகேயிக்குவரம் கொடுத்துப் பிழை செய்த யான் பிழைத்திருக்க மாட்டேன்" எனப் பொருள் கொள்ளுதலும் ஆம். (60)

**1755.** அள்ளற் பள்ளப் புனல்சூ
 ழகன்மா நிலமும் மரசும்
கொள்ளக் குறையா நிதியின்
 குவையும் முதலா மெவையும்
கள்ளக் கைகே சிக்கே
 யுதவிப் புகழ்கைக் கொண்ட
வள்ளற் றனமென் னுயிரை
 மாய்க்கு மாய்க்கு மென்றான்.

'அள்ளல் பள்ளப் புனல் சூழ் அகல் மாநிலமும், அரசும், கொள்ளக் குறையா நிதியின் குவையும் முதலாம் எவையும், கள்ளக் கைகேசிக்கே உதவிப், புகழ் கைக் கொண்ட வள்ளல்தனம், என் உயிரை மாய்க்கும்! மாய்க்கும்!' என்றான்.

பொ :—'சேற்றையுடையதாய் ஆழ்ந்துள்ள கடல் நீரால் சூழப் பட்ட அகலமான பெரிய பூமியும், அரசும், (இரவலர்) கொள்ளக் கொள்ளக் குறையாத செல்வக் குவியலும் முதலாகிய எல்லாவற்றை யும் வஞ்சனையுடைய கைகேசிக்கே கொடுத்துவிட்டுப் புகழைப் பெற் றுக்கொண்ட உன் வள்ளல்தன்மை என்னுடைய உயிரைக் கொல் லும் கொல்லும்!' என்று கூறினன்.

கு :—அள்ளற் பள்ளப் புனல் என்பது இங்கு ஆழ்ந்த கடலை உணர்த்திற்று. 'அள்ளற் பள்ளத் தகன் சோணாட்டு' (யாப். காரிகை) என்ற பழம்பாட்டும் இங்கு நினைக்கத்தகும். அள்ளல் - சேறு. பள்ளம் - ஆழம்; ஆளுதற்குரிய நிலப்பரப்பு, அதை ஆளும் அரசுரிமை, ஆளு தற்குத் துணைக் காரணமாய் உள்ள செல்வம் ஆகிய மூன்றையும் சிறப்பு நோக்கி எண்ணினர். "பாடுநர், கொளக் கொளக் குறையாச் செல்வத்து" (பதிற்றுப்—82) என்பது போலக் 'கொள்ளக் குறையா நிதி' என்றார். மாய்க்கும் மாய்க்கும் என்ற அடுக்கு உறுதியை யுணர்த்தியது. (61)

**1756.** ஒலியார் கடல்சூ ழுலகத்
துயர்வா னிடைநா கரினும்
பொலியா நின்றா ருன்னைப்
போல்வா ருளரோ பொன்னே
வலியா ருடையா ரென்றான்
மழுவா ளுடையான் வரவும்
சலியா நிலையா யென்றாற்
றவிர்வா ருளரோ வென்றான்.

'ஒலி ஆர் கடல் சூழ் உலகத்து,
உயர் வான் இடை, நாகரினும்,
பொலியாநின்றார் உன்னைப்
போல்வார் உளரோ ? பொன்னே !
வலி யார் உடையார் ?' என்றான்
மழுவாள் உடையான் வரவும்
சலியா நிலையாய் என்றால்,
'தவிர்வார் உளரோ ?' என்றான்.

பொ :—'ஒலிநிறைந்த கடலால் சூழப்பட்ட இம் மண்ணுலகத்தவ ரிலும் உயர்ந்த [வான் உலகத்தவரிலும் பாதலத்தவரிலும் விளங்கா நின்றவர்களுள் உன்னைப் போன்றவர்கள் இருக்கின்றார்களோ?

பொன்னைப் போன்று போற்றத் தக்கவனே! என்னைப் போல் வலி யுடையவர்கள் யாருளர்?' என்றுணகிப் பரசுராமன் வரவும், அவனைக் கண்டு நடுங்காதுநின்று வென்ற நிலைமையுடையாய் என்றால் அத்தகு சிறப்புடைய உன்னைப் பிரிந்தும் நாட்டு வாழ்வில் தங்குபவரும் உளரோ? (இலர்)' என்று கூறினன்.

கு :—பொன் தன்னைவிட்டு நீங்காது போற்றுதற்கு உரித்தாதல் போல இராமனும் தன்னைவிட்டு நீங்காது போற்றுதற்குரிய அருமை யும் பெருமையும் உடையவன் என்பது புலப்படப் 'பொன்னே' என் றான். பொன் இல்வழி இவ்வுலகத்து இன்பம் இல்லையாதல் போல இராமன் இல்வழியும் இன்பமில்லை என்ற கருத்தும் காணலாம். 'தன் குலப்பகை மாய்த்து வாழவைத்த வீரனைப் பிரிந்தும் வாழ்வா ருளரோ' எனப் பொதுவகையாற் கூறித் தான் வாழாமையை உறுதிப்படுத்திய வாறு. 'வலி யார் உடையார்?' என்றுணகி மழுவாளுடையான் வரவும் சலியா நிலையாய் என்றால் தவிர்வாருளரோ? என்றான்; என இயைக்க. (62)

**1757.** கேட்டே யிருந்தே னெனினுங்
கிளர்வா னின்றே யடைய
மாட்டே னாகி லன்றோ
வன்க ணென்கண் மைந்தா
காட்டே யுறைவாய் நீயிக்
கைகே சியையுங் கண்டிந்
நாட்டே யுறைவே னென்றா
னன்றென் றன்மை யென்றான்.

'கேட்டே இருந்தேன் எனினும், கிளர் வான் இன்றே அடைய
மாட்டேன் ஆகில் அன்றோ, வன்கண் என்கண்? மைந்தா!
காட்டே உறைவாய் நீ, இக் கைகேசியையும் கண்டு இந்
நாட்டே உறைவேன் என்றால், நன்று என் தன்மை!' என்றான்.

பொ :—'மைந்தா! நீ காடு புகப் போகின்றாய் என்பதைக் கேள் விப்பட்டும் உயிரோடு இருந்தேன் எனினும், விளக்கம் உடைய விண் ணுலகத்தை இன்றைக்கே அடையமாட்டேனாகில்அல்லவோ என்கண் வன்கண்மையுளதாகும்? நீ காட்டில் தங்கியிருக்க, உன்னைக் காணாமை யோடு உன்னைக் காட்டிற்கு அனுப்பிய இந்தக் கைகேயியையும் கண்ணாற் கண்டு கொண்டு இந்த நாட்டில் தங்கியிருப்பேன் என்றால் என்தன்மை அழகிது!' என்றான்.

கு :—கேட்டற்குச் செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. இன்றே வானடையப் போகின்றேன் ஆதலின் என்கண்கள் வன் கண்கள் அல்ல மென்கண்களே ஆம் என்றவாறு. 'வன்கண்மை யுடையேன் என்னும் குற்றம் என்னிடத்ததாகும்' என்றும் பொருள் கூறலாம். இராமனைப் பிரிந்த வருத்தமும், கைகேயியைக் கண்டு கொண்டிருக்க வேண்டுமே என்ற வருத்தமும் தயரதன் இறப்பிற்குக் காரணம் ஆயின என்பது இக்கூற்ருல் பெறப்படும். 'நன்று என் தன்மை' என்றது இகழ்ச்சிக் குறிப்பு; கற்கறித்து, நன்கட்டாய் என்புழிப்போல. என்தன்மை இகழப்படுவதாகும் என்பது கருத்து. 'இந்நாட்டே யுறையேன், விண்ணுட்டே யுறைவேன்' என்ருனுயிற்று. (63)

1758. மெய்யார் தவமே செய்துன்
மிடன்மார் பரிதிற் பெற்ற
செய்யா ளென்னும் பொன்னு
நிலமா தென்னுந் திருவும்
உய்யா ருய்யார் கெடுவே
னுன்னைப் பிரியின் வினையேன்
ஐயா கைகே சியைநே
ராகே ேனா னென்ருன்.

'மெய் ஆர் தவமே செய்து, உன்
மிடல் மார்பு அரிதில் பெற்ற
செய்யாள் என்னும் பொன்னும்,
நிலமாது என்னும் திருவும்
உய்யார்! உய்யார்! கெடுவேன்!
உன்னைப் பிரியின் வினையேன்'
ஐயா! கைகேசியை நேர்
ஆகேனே நான்?' என்ருன்.

பொ :—'ஐயா! மெய்ம்மை பொருந்திய தவம் செய்து உன் வலிமையுடைய மார்பினை அருமையாகப் பெற்ற திருமகள் என்ற பிராட்டியும், பூமிதேவி என்ற பிராட்டியும், நின்னைப் பிரிந்து உய்ந் திருக்கமாட்டார்கள்; தீவினையேனுகிய யான் உன்னைப் பிரிந்தும் உயி ரோடு இருந்தால் நான் கைகேயியை ஒத்தவன் ஆகமாட்டேனே?' என்று கூறினன்.

கு :—திருமகளும் நிலமகளும் இராமனைத் தலைவனுகப் பெறத் தவஞ் செய்தார்கள் என்பதை: "நிவப்புறு நிலனெனு நிரம்பு நங்கை

யும், சிவப்புறு மலர்மிசைச் சிறந்த செல்வியும் உவப்புறு கணவனை யுயிரினெய்திய தவப்பயன்" (1428) என்று முன்னர்க் கூறிய தாலு முணரலாம். இராமன் பிரியப் போகின்ருன் என்று அவ்விரு வரும் வருந்தி நைந்தார்கள் என்பதை: 'பொன்றிணி போதினளும் பூமியும் புலம்பி நையக் குன்றினு முயர்ந்த தோளான் கோசலை கோயில் புக்கான்' என்பதால் அறியலாம். இராமன் கானகம் புகுவாஞ யின் அவ்விருவரும் உய்யார் என்பது இங்கு உணர்த்தப்பட்டது. அடுக்குத் துணிவுணர்த்திற்று. வாழ்வு எய்தற்குரிய செய்யவளும் நில மகளும் நின்பிரிவால் உய்யாரானபோது, கெட்டொழிதற்குரிய மூப் பிணையுடைய யான் நின்பிரிவால் இறவாது வாழ்ந்திருந்தால் கைகேயிக்கும் எனக்கும் வேறுபாடில்லை என்பதை யுணர்த்தியவாறு. "நெடுஞ்சிறை மீட்கலானெனிற், பராவரும் பழியொடு பாவம் பற்றுதற் கிராவணனல்லனே இராமன்" (சுந்தர - 680) என்பது ஒப்பு நோக்கத்தகும். மகனை 'ஐயா' என்றது அன்புபற்றி. செய்யாள் என்றது அரசச் செல்வத்தை; நிலமாது என்றது நாட்டை. இவ் விரண்டும் உருவகம். பெண்களாக உருவகஞ் செய்ததற்கேற்பத் தவஞ் செய்து மார்பு அரிதிற் பெற்றதாகவும் கூறினர். சீதேவி பூதேவி என்ற இருபிராட்டியர் திருமாலின் மார்பில் உறைவர் என்பதும் இங்கு நினைக்கத் தகும். (64)

**1759.** பூணு ரணியும் முடியும்
பொன்னு சனமுங் குடையும்
சேணுர் மார்புந் திருவுந்
தெரியக் காணக் கடவேன்
மாணு மரவற் கலையு
மானின் ருேலும் மவைநான்
காணு தொழிந்தே னென்ருு
னன்றென் கரும மென்ருன்.

'பூண் ஆர் அணியும், முடியும், பொன் ஆசனமும், குடையும்,
சேண் ஆர் மார்பும், திருவும், தெரியக் காணக் கடவேன்,
மாணு மரவற்கலையும், மானின் தோலும், அவை நான்
காணுது ஒழிந்தேன் என்ருல் நன்று என் கருமம்' என்ருன்.

பொ :—'பூண்பதற்கு உரிய அரிய அணிகலன்களும் மணிமுடியும் பொன்னல் இயன்ற அரியணையும் வெண்குடையும் அகன்ற மார்பும் அம்மார்பில் விளங்கும் திருமகளும் மருவிய இராமன் கோலத்தைக் காண்டற்குரிய யான், மாட்சிமை இல்லாத மரவுரியும் மானின் தோலும்

அவன் பூண அவற்றைக் காணுது இறந்தொழிந்தேனுயின் என்வினை நல்வினையாகும்' என்று கூறினுன்.

கு :—மரவுரியின் வல்லியல்பு தோன்ற 'மரவற்கலை' என்ருர். மரப் பட்டையால் இயன்ற வலிய ஆடை என்பது பொருள். மரவுரி இடையில் உடுப்பது; மான்தோல், மார்பை மறைக்க அணிவது. "மானின் உரிவை தைஇய ஊன் கெடு மார்பின்" (முருகாற்றுப்-128) என்றது காண்க. "மென்தோல் மார்பின் முனி" எனப் பின்வரல் காண்க. மரவுரியும் மான்தோலும் பற்றற்ற முனிவர் அணிதற்குரியவாகலின் அவற்றை மன்னனுய் மணிமுடி சூடுதற்குரியோன் அணிவதைப் பார்க்கப் பொருது இங்ஙனம் கூறினுன் தயரதன். மன்னர் கோலத்துடன் இராமனைக் காணும் நல்வினை இலனுயினும், மரவுரியும் மான்தோலும் அவன் அணியக் காணுது இறந்தால் நல்வினைசெய்தவனுவேன் என்ருன். (65)

## வசிட்டன் மொழிதல்

1760. ஒன்ருே டொன்ருென் ருெவ்வா
வுரைதந் தரசன் னுயிரும்
சென்ரு னின்ருே டென்னுந்
தன்மை யெய்தித் தேய்ந்தான்
மென்ருேன் மார்பின் முனிவன்
வேந்தே யயரே லவனை
இன்றே காத வண்ணந்
தகைவென் னுலகோ டென்ளு.

ஒன்ருேடு ஒன்று ஒன்று ஒவ்வா
உரைதந்து, 'அரசன், உயிரும்
சென்ருன் இன்ருேடு' என்னும்
தன்மை எய்தித் தேய்ந்தான்;
மென்தோல் மார்பின் முனிவன்,
'வேந்தே! அயரேல்; அவனை
இன்று ஏகாத வண்ணம்
தகைவென் உலகோடு' என்ளு.

பொ :—ஒன்ருேடு ஒன்று இயைபு இல்லாத சொற்களைப் பேசிக்கொண்டே 'தயரதன் இன்ருேடு உயிர் நீங்கினுன்' என்று சொல்லத்தக்க தன்மை அடைந்து மெலிவுற்ருன்; மென்மையான

மான்தோல் அணிந்த மார்பினையுடைய வசிட்டன், 'தயரத வேந்தனே! வருந்தாதே; அவ்விராமனை இன்று போகாதபடி நாட்டு மக்களோடு தடுப்பேன்' என்று.

கு :—வருத்த மிகுதியால் அரற்றுவன ஆதலின் சொற்கள் இயைபிலவாயின. 'அரசன் உயிரும் சென்றுன்' என்புழி உயிரும் எழுவாயாய்நின்றே சென்றுன் என்றதோடு இயைந்தது. தேய்தல்-வலிமை நுணுகுதல்; மெலிதல். அரசன் அயர்ச்சியைக் கண்ணுற் கண்டு கொண்டிருத்தலின் 'அயரேல்' என்றுன். அயர்ச்சிக்குக் காரணம் இராமன் நாடுவிட்டுக் காடுபுகுவான் என்பதே ஆகலின், 'அவனைத் தகைவென்' என்றுன். உலகு என்றது, ஆகுபெயராய் நாட்டு மக்களை யுணர்த்திற்று. என்ன என்பது செய்யாவென்னும் வாய்பாட்டு வினையெச்சம்; அது, சொல்லுமளவில் என வருஞ்செய்யுளோடு இயையும். (66)

## தயரதன் நிலை

1761. முனிவன் சொல்லு மளவின்
முடியுங் கொல்லென் றரசன்
தனிநின் றுழறன் னுயிரைச்
சிறிதே தகைவா னிந்தப்
புனிதன் போனு லிவனுற்
போகா தொழிவா னென்னு
மனிதன் வடிவங் கொண்ட
மனுவுந் தன்னை மறந்தான்.

முனிவன் சொல்லும் அளவில்,
'முடியுங் கொல்!' என்று, அரசன்,
தனி நின்று உழல் தன் உயிரைச்
சிறிதே தகைவான், 'இந்தப்
புனிதன் போனுல் இவனுல்
போகாது ஒழிவான்' என்னு;
மனிதன் வடிவம் கொண்ட
மனுவும் தன்னை மறந்தான்.

பொ :—வசிட்டமுனிவன் சொல்லும்பொழுது, 'இந்தத் தூயவனுகிய வசிட்டன் போனுல் இவனுல் இராமன் வனம் போகாமல் நிற்பான்;' என்று கருதி, அரசனும், மனிதன் வடிவம் கொண்ட மனுநீதி போல்பவனும் ஆகிய தய்ரதன், முடிவுறும் போலும் என்னுமாறு தனியே

நின்று வருந்துகின்ற தன்னுடைய உயிரைச் சிறிது போழ்து தடுத்து நிறுத்துவானுய்ப் பின்னர்த் தன்னை மறந்தவன் ஆனுன்.

கு :—என்று என்பதை என என்று திரிக்க. முடியும் கொல் என்ன நின்று உழல் உயிர் என்க. தவத்தால் வசிட்டன் மனமொழி மெய்கள் தூய்மை பெற்றவனுதலின் அவனைப் 'புனிதன்' என்ருர். தனக்கு மறையோதுவித்த குரு மொழிக்கு மறுமொழி சொல்லாது இராமன் ஏற்றுக் கொள்வான் என்பது கருதி, இவனுல் 'போகாது ஒழிவான்' என்றுன். அவன் மகிழ்ச்சி, போகும் உயிரைச் சிறிது போழ்து தடுத்து நிறுத்தியது என்க. 'மனு' என்றது மனுவின் அறநூலை. மனுவறமே மனித வடிவு கொண்டால் ஒத்த நேர்மை யுடையவன் என்பது கருத்து. மேல், 'நல்லற மூர்த்தி யன்னுன்' (168) என்றதும் இக்கருத்தானே ஆம். வைவச்சுத மனுவைக் கூறினதாகக் கொள்ளின் 'மனிதன் வடிவங் கொண்ட' என்ற அடை பொருந்துமாறில்லை; அம்மனுவும் மனிதனே ஆதலின். தகைவான், முற்றெச்சம். உயிரைச் சிறிது தகைந்தவன், பின்பு மாட்டாதவனுய் உணர்வு இழந்தான் என்க. இராமனுகிய துணைவன் இன்மையால் தனி நின்று உழல்வதாகக் கூறினுர்.(67)

## கோசலை அரற்றல்

1762. மறந்தா னினைவு முயிரும்
மன்ன னென்ன மறுகா
இறந்தான் கொல்லோ வரச
னென்னு விடருற் றழிவாள்
துறந்தான் மகன்முன் னெனையுந்
துறந்தாய் நீயுந் துணைவா
அறந்தா னிதுவோ வையா
வரசர்க் கரசே யென்றுள்.

'மறந்தான் நினைவும் உயிரும்
மன்னன்' என்ன மறுகா,
'இறந்தான் கொல்லோ அரசன் ?'
என்னு, இடர் உற்று அழிவாள்
'துறந்தான் மகன் முன் எனையும்,
துறந்தாய் நீயும், துணைவா !
அறந்தான் இதுவோ ஐயா !
அரசர்க்கு அரசே !' என்றுள்.

போ :—'மன்னன் நினைவும் உயிரும் மறந்தான்' என்று மனங் கலங்கி, 'அரசன் இறந்தான் போலும்' என்று துன்புற்றுச் சிந்தை அழிகின்ற கோசலை, "முன்னே மகனும் என்னைக் கைவிட்டான்; துணைவா! நீயும் என்னைக் கைவிட்டாய்; அரசர்க்கரசே! ஐயா! அறம் என்பது இதுதானோ" என்றாள்.

கு :—உயிர் மறத்தல் - ஓய்தல். மறுகா-கலங்கி. என்னு-என்று. வாழ்க்கைத் துணை என்பது கருதித் 'துணைவா' என்றாள். மகனைப் பிரிந்து வருந்தும் மனைவியின் துயர்கண்டு ஆறுதல் கூறாது இறக்கின்றான் என்ற கருத்தால் அறந்தான் இதுவோ என்று கூறினாள். (68)

1763. மெய்யின் மெய்யே யுலகின்
வேந்தர்க் கெல்லாம் வேந்தே
உய்யும் வகைநின் னுயிரை
யோம்பா திங்ஙன் றேம்பின்
வையம் முழுதும் துயரான்
மறுகும் முனிவன் னுடனம்
ஐயன் வரினும் வருமா
லயரே லரசே யென்றாள்.

° மெய்யின் மெய்யே! உலகின் வேந்தர்க்கெல்லாம் வேந்தே!
உய்யும் வகை நின் உயிரை ஓம்பாது இங்ஙன் தேம்பின்,
வையம் முழுதும் துயரால் மறுகும்; முனிவனுடன் நம்
ஐயன் வரினும் வருமால்; அயரேல், அரசே!' என்றாள்.

போ :—'உண்மையின் வடிவமே! உலகில் உள்ள வேந்தர்கட் கெல்லாம் பெருவேந்தே! நாங்கள் எல்லாம் உய்ந்திருக்கும்படி நின் னுடைய உயிரைப் பாதுகாத்துக்கொள்ளாமல் இவ்வாறு வருந்தினால் நின்னைக்கண்டு உலகம் முழுவதும் துன்பத்தால் கலங்கும்; நம் ஐயன் ஆகிய இராமன் முனிவனோடு வந்தாலும் வரலாம்; ஆதலால் அரசே! வருந்தாதே' என்று கூறினாள்.

கு :—ஐயன் வருகையைக் காணவேண்டி வருந்தி உயிர் விடாதிருக்க வேண்டும் என்பது கருத்து. தேம்புதல்-வருந்துதல். அர சன் தேம்பும் நிலையை நேரே காட்டி, 'இங்ஙன் தேம்பின்' என்றாள். வையத்து மன்னுயிர்க்கு உடலன்னவன் மன்னவன் ஆதலின், வையம் முழுதும் மறுகும் என்றாள். (69)

## தயரதன் மொழிதல் (1764-1765)

1764. என்றென் றரசன் மெய்யு
மிருதா ளிணையும் முகமும்
தன்றன் செய்ய கையாற்
றைவந் திடுகோ சலையை
ஒன்றுந் தெரியா மம்ம
ருள்ளத் தரசன் மெள்ள
வன்றிண் சிலைநங் குரிசில்
வருமே வருமே யென்றான்.

என்று என்று, அரசன் மெய்யும், இரு தாள் இணையும், முகமும்
தன் தன் செய்ய கையால் தைவந்திடு கோசலையை,
ஒன்றும் தெரியா மம்மர் உள்ளத்து அரசன், மெள்ள,
'வன் திண் சிலை நம் குரிசில் வருமே? வருமே?' என்றான்.

பொ :—என்று கூறிக் கொண்டு அரசனுடைய உடம்பையும் பெரிய இரண்டு கால்களையும் முகத்தையும் தன்னுடைய சிவந்த கையால் தடவிக் கொடுக்கின்ற கோசலையைப் பார்த்து ஒன்றும் தெளிவில்லாத மயக்க மிக்க மனத்தையுடைய மன்னன், 'வலிய திண்மையுள்ள வில்லையுடைய நம் இராமன் வருவானோ? வருவானோ?' என்று மெல்ல வினவினான்.

கு :—வெப்பம் உளதோ என்று உடம்பையும் அடியையும் முகத்தையும் தொட்டுப் பார்த்தலைப் புலப்படுத்தக் கையால் தைவரல் கூறினர்; உயிர் உடம்பில் உளது என்பது அறிதற்கு வெப்பமுடைமை காரணமாதலின். குரிசில்-ஆண்மகன்; இராமன். பரசுராமனை வென்ற வில்வென்றியே தயரதன் மனத்தில் பதிந்திருத்தலின்' வன்திண் சிலை நம் குரிசில்' என்றான். திண்மை-கனம். வன்மை மிக்க தன் வில் போன்ற வன்னெஞ்சன் ஆதலின் வாரான் என்னும் கருத்துத் தோன்ற அங்ஙனம் கூறினன் எனலுமாம். அடுக்கு ஆர்வ மிகுதியை யுணர்த்திற்று. உயிர் ஒய்ந்த நிலையில் இருத்தலின் மெல்லிய குரலில் சொல்லினான் என்க. கோசலையின் செய்கை பையப்பட்டவுடன் நையுமரசன் உய்வுபெற்று எழுந்தான் என்க. (70)

1765. வன்மா யக்கை கேசி
வாக்கா லென்ற னுயிரை
முன்மாய் விப்பத் துணிந்தா
ளென்றுங் கூனி மொழியால்

தன்மா மகனுந் தானுந்
தரணி பெறுமா றுன்னி
என்மா மகனைக் கானே
கென்று ளென்று ளென்றான்.

'வல் மாயக் கைகேசி, வாக்கால், என் தன் உயிரை
முன் மாய்விப்பத் துணிந்தாள்; என்றும், கூனி மொழியால்
தன் மா மகனும் தானும் தரணி பெறுமாறு உன்னி
என் மா மகனைக் கான் ஏகு என்றாள் என்றாள்;' என்றான்.

போ:—வலிய வஞ்சனையுடைய கைகேயி, தன் சொல்லால் என் உயிரை முதலில் மாய்த்துவிடத் துணிந்துவிட்டாள், ஆதலால், கூனியின் சொல்லால் தன் சிறந்த மகனும் தானும் என்றும் தரணி உரிமையைப் பெறும் நெறியால் எண்ணி 'என்னுடைய சிறந்த மகனுகிய இராமனைக் " காட்டிற்குப் போ " என்று சொல்லி விட்டாள், சொல்லி விட்டாள்' என்று கூறினன்.

கு:—மாயம்-வஞ்சனை. வஞ்சனையில் பயிற்சிவன்மை தோன்ற 'வன்மாயம்' என்றார். " நாவம்பால் என்னுருயிர் உண்டாய்'' (1621) என்றதற்கேற்ப இங்கும் 'வாக்கால்' என்றார். கைகேயியின் மனமாற்றத்திற்குக் கூனியே காரணம் என்பதைத் தயரதன் தன் நுண்ணறிவால் எண்ணியறிந்தான் ஆகலின், 'கூனி மொழியால்' என்றான். 'என்றாள் எறும்பின் கதையாள்' எனச் சில ஏடுகளில் காணப்படுகின்றது. இப்பாடத்தில் குறித்த வரலாறு: கைகேயியின் தந்தை எறும்பு, ஈ முதலிய சிற்றுயிர்களின் மொழியையும் உணர்ந்தவன் ஆதலால் ஒருநாள் தன் கட்டிலின் கீழ்ச் சென்று கொண்டிருந்த ஓரெறும்பின் சொல்லைக் கேட்டு வியந்து சிரித்தானாக, அவன் மனைவி தன்னை எள்ளிநகை செய்ததாக எண்ணி வெகுண்டு நகைத்ததற்குக் காரணம் கூறுக என வற்புறுத்தினள்; அசுவபதியாகிய அம்மன்னன், இதன் காரணத்தைச் சொன்னால் எனக்கு மரணம்நேரும்என்றான்; நீ செத்தாலும் கவலையில்லை, சிரித்த காரணம் தெரிந்தால்தான் எனக்கு மன நிறைவு ஏற்படும் என்றாள். அது கேட்ட அம்மன்னன் அவளை வனத்திற்குத் துரத்திவிட்டு நலமாக வாழ்ந்தான் என்பது. (71)

சாபவரலாறு கூறத் தொடங்குதல்

**1766.** பொன்னார் வலயத் தோளான்
காணு புகுத றவிரான்
என்னா ருயிரோ வகலா
தொழியா திதுகோ சலைகேள்

முன்னு ளொருமா முனிவன்
　　மொழியுஞ் சாபம் முளதென்
றந்நா ளுற்ற தெல்லா
　　மவளுக் கரசன் னறைவான்.

'பொன் ஆர் வலயத் தோளான் கானே புகுதல் தவிரான்; என் ஆருயிரோ அகலாதொழிபாது; இது, கோசலை! கேள்; முன்னுள் ஒரு மா முனிவன் மொழியும் சாபம் உளது' என்று அந்நாள் உற்றது எல்லாம், அவளுக்கு, அரசன் அறைவான்.

பொ:—'பொன்னுல் இயன்ற வளை அணிந்த தோளையுடைய இராமன் காட்டிற்குப் போகாதொழியான்; எனது அரிய உயிரோ என்னுடம்பை விடுத்து நீங்காதிராது; கோசலை! இதைக் கேட்பாயாக; பண்டு ஒருநாள் ஒரு சிறந்த முனிவன் சொல்லிய சாபம் உளது' என்று, அந்த நாளில் நேர்ந்த நிகழ்ச்சிகள் எல்லாவற்றையும் தயரதன் அந்தக் கோசலைக்குச் சொல்லுவான் ஆனன்.

கு:—தவிர்தல்-நீங்குதல். உயிர் நீங்குதல் உறுதி என்பதை வற்புறுத்த, 'அகலாது ஒழியாது' என இரு எதிர்மறைகளால் கூறினர். வலயம்-தோள்வளை. உயிர் அகலாதொழியாது என்று கூறுதற்குக் காரணம் முனிவன் சாபமே என்பது உணர்த்தியவாறு. சாபம்-வெகுண்டு கூறிய மொழி. முனிவன் என்றது, சலபோசனனை. (72)

## சாப வரலாறு (1767-1782)

1767. வெய்ய கானத் திடையே
　　வேட்டை வேட்கை மிகவே
ஐய சென்று கரியோ
　　டரிக டுருவித் திரிவேன்
கையிற் சிலையுங் கணையுங்
　　கொடுகார் மிருகம் வருமோர்
செய்ய நதியின் கரைவாய்ச்
　　சென்றே மறைய நின்றேன்.

'வெய்ய கானத்திடையே, வேட்டை வேட்கை மிகவே
ஐய, சென்று, கரியோடு அரிகள் துருவித் திரிவேன்;
கையிற் சிலையும் கணையும் கொடு கார் மிருகம் வரும் ஓர்
செய்ய நதியின் கரைவாய்ச் சென்றே மறைய நின்றேன்.

பொ :—வேட்டையாடும் விருப்பம் மிக்கதால் கொடிய காட்டுக் கிடையே சென்று வியக்கத்தக்க யானைகளோடு சிங்கங்களையும் தேடித் திரிகின்ற யான், கையில் வில்லும் அம்பும் எடுத்துக் கொண்டு யானைகள் மிகுதியாக வருகின்ற ஒரு செம்மையான ஆற்றங் கரை யிடத்துச் சென்று மறைந்துநின்றேன்.

கு:—ஐ-வியப்பு; ஐய-இடைச்சொல் அடியாகப் பிறந்த குறிப்புப் பெயரெச்சம். வியக்கத்தக்க யானை என்க. அரி-சிங்கம். துருவுதல்-தேடுதல். கார்மிருகம் என்றது, யானையை. செய்யநதி, நீர்வளத்தால் செம்மை நலமுடைய ஆறு. செம்புலப் பெயல் நீர் நிறைந்து செந்நிற மாகத் தோன்றும் நதி எனலும் ஆம். நேர் நின்றவழி யானை புகாது பெயருமாதலின் மறைய நிற்க வேண்டியது ஆயிற்று. திரிவேன், பெயர். 'திரிவேனாகிய யான் நின்றேன்' என்க. யானையை அம்பால் கொல் லும் எண்ணத்தோடு நின்றமை புலப்படுத்தியவாறு. நாட்டிலுள்ள பயிர் கட்கும் உயிர்கட்கும் தீங்கு செய்யும் விலங்குகளைக் கொல்லுதல் மன்ன னுக்கு மாண்புறுகடமையாதலின் தயரதனுக்கு வேட்டைவேட்கை மிகுவதாயிற்று. (73)

**1768.** ஒருமா முனிவன் மனையோ
டொளியொன் றிலவாய் நயனம்
தருமா மகவே துணையாய்த்
தவமே புரிபோழ் தினின்வாய்
அருமா மகனே புனல்கொண்
டகல்வான் வருமா றறியேன்
பொருமா கணைவிட் டிடலும்
புவிமீ தலறிப் புரள.

'ஒரு மா முனிவன் மனையோடு
ஒளி ஒன்று இலவாய் நயனம்
தரு மா மகவே துணையாய்த்
தவமே புரி போழ்தினின்வாய்
அரு மா மகனே புனல்கொண்டு
அகல்வான் வருமாறு அறியேன்
பொரு மா கணை விட்டிடலும்
புவிமீது அலறிப் புரள.'

பொ :—சலபோசனன் என்னும் ஒரு சிறந்த முனிவனும் அவன் மனைவியும் கண்கள் ஒளி பொருந்துதல் இல்லாமையால் தாம்பெற்ற

சிறந்த மகனையே துணையெனக்கொண்டு தவம் செய்யும்பொழுது அவர்களுடைய அரிய சிறந்த புதல்வனே தண்ணீர் கொண்டு செல்வதற்காக வருவதைக் கண்ணால் பாராமல் (ஒலி வழியே சென்று) தாக்குகின்ற சிறந்த அம்பினை விடவும் அம்மகன் தரைமீது வீழ்ந்து அலறிக்கொண்டு புரளாநிற்க.

கு :—போழ்தினின்வாய், காலம் இடமாயிற்று. 'ஒளி ஒன்றில வாய்' என்புழி ஒன்றுதல்-பொருந்துதல். அகல்வான் என்புழி, 'வான்' வினையெச்ச விகுதி. ஒலி கேட்ட அளவில் அம்பெய்து கொல்லும் 'சத்தவேதி' என்ற வித்தையை யுணர்ந்தவன் தயரதன் ஆதலின், 'வருமாறு அறியேன் கணைவிட்டிடலும்' என்றான். பொருதல்-தாக்குதல்-விட்டிடலும் என்புழி இடல் துணைவினை. ஆய் இரண்டையும் ஆக எனத் திரிக்க. (74)

**1769.** புக்குப் பெருநீர் நுகரும்
பொருபோ தகமென் றொலிமேல்
கைக்கட் கணைசென் றதலாற்
கண்ணிற் றெரியக் காணேன்
அக்கைக் கரியின் குரலே
யன்றீ தென்ன வெருவா
மக்கட் குரலென் றயர்வேன்
மனநொந் தவண்வந் தனெனால்.

'புக்குப் பெரு நீர் நுகரும்
பொரு போதகம் என்று, ஒலிமேல்
கைக்கண் கணை சென்றது அலால்,
கண்ணில் தெரியக் காணேன்;
அக் கைக் கரியின் குரலே
அன்று, ஈது என்ன வெருவா,
மக்கள் குரல் என்று அயர்வேன்,
மனம் நொந்து அவண் வந்தனெனால்.

போ :—'ஆற்றில் புகுந்து மிக்க தண்ணீரைக் குடிக்கின்ற போர்செய்யும் யானையின் ஒலிதான் என்று மயங்கி அவ்வொலிவந்த வழியாகக் கையிலிருந்த அம்பு சென்றதேயன்றி அந்த யானையின் வடிவத்தைக் கண்ணால் தெரியக் கண்டேனில்லை; அலறிய இக் குரல் அந்தத் துதிக்கையையுடைய யானையின் குரலே அன்று; மக்கள் குரலாக இருக்கின்றதே என்று அஞ்சிச் சோர்கின்ற யான் மனம் நொந்து அக்குரல் வந்த இடத்திற்குச் சென்றேன்.'

கு :—குறுகிய வாயையுடைய குடத்தில் நீர் முகக்கும்பொழுது எழுகின்ற ஒலிக்கும், யானை நீருண்ணும்பொழுது எழுகின்ற ஒலிக்கும் ஒற்றுமையுண்மையின் தயரதன் மயங்க நேர்ந்தது. சத்த வேதி யறிந்தமை தோன்ற ஒலிமேல் கணைசென்றமை கூறினர். அவன் அழு குரல், மகன் என்பதைக் காட்டிற்று ஆகலின் 'கரியின் குரலே அன்று' எனவும் மக்கள் குரல் எனவும் துணிந்து அயர்ந்தான். வெருவா- அஞ்சி. செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம். 'அவண் சென்றனென்' என்றது. 'அவண்வந்தனென்' என்றது இடவழு வமைதி. பொருதல் யானைக்கு அடை. கொல்லுதற்குரியது என் பதைக் குறிப்பிட்டவாறு. (75)

1770. கையுங் கடனுந் நெகிழக்
கணையோ டுருள்வோற் காணு
வெய்ய தனுவு மனனும்
வெறிதே கிடவே வீழா
ஐயன் னிதான் யாவ
னந்தோ வருள்கென் றயரப்
பொய்யொன் றறியா மைந்தன்
கேணீ யென்னப் புகல்வான்.

"கையும், கடனும், நெகிழக்,
கணையோடு உருள்வோற் காணு,
வெய்ய தனுவும், மனனும்,
வெறிது ஏகிடவே, வீழா,
'ஐயன்! நீதான் யாவன்?
அந்தோ! அருள்க' என்று அயரப்
பொய் ஒன்று அறியா மைந்தன்
'கேள் நீ' என்னப் புகல்வான்."

பொ :—"கையும் அதுபற்றிய குடமும் நெகிழ்ந்து வேறு ஆக உடம்பில் தைத்த அம்போடு உருள்கின்றவனைக் கண்டு என் கொடிய வில்லும், ஆராயாது அம்பு எய்யச்செய்த என்மனமும் பயனற்றதாக வும் உணர்வற்றதாகவும் போக, மண்மேல் வீழ்ந்து, 'ஐயனே! நீதான் யாவன்? ஐயோ சொல்லி அருள்க' என்று யான் சோர்வு அடையப் பொய் சிறிதும் பேசியறியாத அந்தமைந்தன், 'நீ கேள்' என்று தொடங்கிச் சொல்வான் ஆனன்."

கு :—கடன்-குடம். கையில் இருந்து குடம் நெகிழ்ந்து நீரில் வீழ மைந்தன் உருண்டான்; உருள்கின்றவனைக் கண்ட மன்னனும் கையில் இருந்த வில் நெகிழ்ந்து வீழ, மனம் உணர்வற்றதாக, மண் மேல் வீழ்ந்தான் என்க. அவன்மேல் அம்பெய்தற்குக் கருவியானது பற்றி 'வெய்ய தனு' என்று இகழ்ந்தவாறு. மகனென்று அறியாது யானையென்று நம்பச் செய்தது சத்த வேதியில் பழகிய மனமே ஆகவின் அது, மகன் என்பது அறிந்தவுடன் உணர்விழந்தது என்பார், மனனும் வெறிது ஏகிட என்றார். தனு வெறிது ஏகுதல் என்றது பயனின்றிக் கையில் நின்றும் நழுவி விழுதல். முனிவன் மகனை ஐயன் என்றது அன்புபற்றி. 'யாவன்' என்ற வினா இன்னான் என உணரும் விழைவை உணர்த்திநின்றது. பருவத்தால் இளையன் ஆயினும் வேடத்தால் முனிவன் ஆதல் நோக்கிச் சொல் என்னாது, 'அருள்க' என்று வேண்டினான். அந்தோ இரக்கமுணர்த்திற்று. அயர்தல்-சோர்தல். (76)

இப்பாடலுக்குப் பின் இரண்டு பாடல்கள் அச்சுப்புத்தகங்களில் காணப்படுகின்றன. அவற்றுள் முதற்பாடல் 14 ஏட்டுச் சுவடிகளிலும் இரண்டாம் பாடல் 22 ஏட்டுச் சுவடிகளிலும் இல்லை; மேலும் சொல்லும் பொருளும் பொருத்த முடையனவாகக் காணப்படவில்லை. ஆதலால் அவ்விரண்டும் இடைச்செருகலாகும். அவை பின் வருவன :—

1770 (a) சேலா கியமா முதல்வன் றிருவுந் தியினீண் மலரின்
மேலா கியநான் முகனுல் வேதங் களின்மா முறையின்
பாலா கியயோ னிகளிற் பலவாம் வருணந் தருவான்
நாலா கியதாம் வருணந் தனின்முன் னெமைநல் கினனால்.

1770 (b) அந்நான் மறையோன் வழியி லருள்கா சிபனன் மைந்தன்
மின்னார் புரிநூன் மார்பன் விருத்தே சனன்மெய்ப் புதல்வன்
நன்னான் மறைநூ றெரியு நாவான் சலபோ சனெனச்
சொன்னான் முனிவன் தருசு ரோச னன்யான் என்றான்.

**1771.** இருகண் களுமின் றியாய்க்கு
மெந்தைக் கும்மிங் கவர்கள்
பருகும் புனல்கொண் டகல்வான்
படர்ந்தேன் பழுதா யினதால்
இருகுன் றனைய புயத்தா
யிபமென் றுணரா தெய்தாய்
உருகுந் துயரந் தவிர்நீ
யூழின் செயலீ தென்றே.

"'இரு கண்களும் இன்று யாய்க்கும்
எந்தைக்கும்; இங்கு அவர்கள்
பருகும் புனல் கொண்டு அகல்வான்
படர்ந்தேன், பழுது ஆயினதால்;
இரு குன்று அனைய புயத்தாய்!
இபம் என்று உணராது எய்தாய்;
உருகும் துயரம் தவிர் நீ;
ஊழின் செயல் ஈது என்றே.'"

பொ:—"'என் தாய்க்கும் தந்தைக்கும் இருகண்களும் இல்லை; அவர்கள் தாகந் தணியப் பருகுதற்கு உரிய தண்ணீர் கொண்டு போக வேண்டி இங்குவந்தேன்; அந்த எண்ணம் ஈடேருமல் பழுதாய்விட்டது; இரண்டு குன்றுபோன்ற தோள்களையுடையவனே! மனிதன் என்று உணராமல் யானை என்று எண்ணி அம்பு எய்தாய்; ஆதலால் உன் பால் தவறு இல்லை; இது ஊழ்வினையின் செயல் ஆகும் எனத் துணிந்து, என் மரணத்திற்காக மனமுருகும் துன்பத்தை நீ விடுக.'"

கு:—யாய்க்கும் எந்தைக்கும் இருகண்களும் இன்று என மாற்றி முற்றுக்குக. யகரம்வரக் குற்றியலுகரம் இகரம் ஆயிற்று. யாய், எந்தை என்பன தாய் தந்தையரைக் குறிக்கும் தன்மையிடத்து முறைப் பெயர். "யாயும் ஞாயும் யாராகியரோ? எந்தையும் நுந்தையும் எம் முறைக் கேளிர்?" (குறுந்-40.) என்புழிக் காண்க. இங்குப் படர்ந் தேன் என்று இயைக்க. படர்தல்-வருதல். அகல்வான்-போதற்கு. வில்லை வளைத்துக் குறிதப்பாமல் அம்பு எய்தற்கு உரிய குன்று அனைய புயம் இருந்தும், குறியாய் உள்ள உயிர் இன்னது என்று ஆராயும் மன அமைதி இல்லாதவன் என்ற கருத்தை மூன்ரும் அடி தோற்று வித்தல் காண்க. இபம்-யானை. 'உணராது இபம் என்று எய்தாய்' என்க. தயரதன் வேண்டும் என்று தன்னைக் கொல்லவில்லை என் பதை அவன் படும் துன்பத்தால் அறிந்தானுகலின் இபம் என்று மயங்கி எய்தமை யுணர்ந்து, அம்மயக்கவுணர்விற்குக் காரணம் தன் அல்லூழே என்பது துணிந்து, சிறுவன் தயரதனுக்கு ஆறுதல் கூறு கின்ருன். 'என்றே தவிர்' என்க. உருகுந்துயரமாவது, தன்னுல் அவன் உயிர் இழக்கநேர்ந்ததே என்று உள்ளமும் உடம்பும் நீராய் உருகி வருந்துதல். (77)

**1772.** உண்ணீர் வேட்கை மிகவே
யுயங்கு மெந்தைக் கொருநீ
தண்ணீர் கொடுபோ யளித்தென்
சாவு முரைத்தும் புதல்வன்

விண்மீ தடைவான் தொழுதா
னெனவு மவர்பால் விளம்பென்
றெண்ணீர் மையினுன் விண்ணோ
ரெதிர்கொண் டிடவே கினனுல்.

"'உண் நீர்வேட்கை மிகவே
உயங்கும் எந்தைக்கு, ஒரு நீ
தண்ணீர் கொடுபோய் அளித்து, என்
சாவும் உரைத்து, "உம் புதல்வன்
விண்மீது அடைவான் தொழுதான்;
எனவும் அவர்பால் விளம்பு' என்று
எண் நீர்மையினுன், விண்ணோர்
எதிர்கொண்டிட, ஏகினன் ; ஆல்."

பொ :—"உண்ணுதற்கு உரிய நீரில் விருப்பம் மிகுதலால் வருந்தும் என் தந்தைக்கு ஒப்பற்ற நீ தண்ணீர் கொண்டு போய்க் கொடுத்து என் சாவையும் சொல்லி உம்முடைய புதல்வன், விண்ணுலகம் அடைகின்றவன் உங்களைத் தொழுதான் எனவும் அவர்களுக்குச் சொல்," என்று சொல்லிவிட்டு யாவரும் மதிக்கத்தக்க பண்புகளையுடைய அம்மைந்தன் தேவர்கள் எதிர்கொள்ள விண்ணுலகம் சென்றுன்.

கு :—உண்ணீர் வேட்கை – தாகம். உயங்குதல் – வருந்துதல். யாய்க்கும் என்பது இனம் பற்றிக் கொள்ளப்படும். தான் செய்த தவற்றிற்கு இரங்கும் இயல்பு தயரதன்பால் கண்டமையின் அவனை, 'ஒரு நீ' எனச் சிறப்பித்தான். சாவும் என்ற உம்மை எதிரது தழீஇயது. விண்மீது அடைவானுகிய உம் புதல்வன் என மாற்றி உரைப்பினும் ஆம். அல்லது நீக்கி நல்லது செய்த நன்னெஞ்சினன் ஆகலின் விண்மீது அடைவானுகத் தன்னைக் கூறுகின்றுன். அக்கூற்றுப் பொய்யாகாமல் தயரதன் காண விண்ணோர் எதிர்கொள்ள விண்ணுலகம் புக்கான். நல்வினை செய்தோர் கொலையுண்டவழியும் நல்லுலகம் சேர்வர் என்பதை இந்நிகழ்ச்சியால் அறியலாம். கொலையுண்ட கோவலன் விண்ணுலகம் புக்க நிகழ்ச்சியை :- "ஆயிழையாள், தன் கணவன், தொழுதகைய திருந்தடியைத் துணைவளைக் கையாற் பற்றப் பழுதொழிந் தெழுந்திருந்தான் பல்லமரர் குழாத்துளான், எழுதெழில் மலருண்கண்! இருந்தைக்க; எனப்போனுன்" (சிலப். ஊர்சூழ்வரி-64-67) என இளங்கோவடிகளும் கூறுதல் காண்க. எண்ணுதல், உயர்ந்தோன் என மதித்தல். நீர்மை–பண்பு. நீர்மையுடைமையால் விண்ணோர் எதிர்கொண்டிட ஏகினன் என ஏதுப் பொருட்டாச்கலும் ஆம்,

உடம்பைப் பிரியுங்கால் முன்னறிதெய்வங்களாய தாய்தந்தையர்க்குச் செலுத்திய வணக்கமே எண்ணத்தக்க நீர்மையாய் விண்ணோர் எதிர்கொளக் காரணம் ஆயிற்று என்க. (78).

1773. மைந்தன் வரவே நோக்கும்
வளமா தவன்பான் மகவோ
டந்தண் புனல்கொண் டணுக
வையா விதுபோ தளவாய்
வந்திங் கணுகா யென்னே
வந்த தென்றே நொந்தேம்
சந்தங் கமழுந் தோளாய்
தழுவிக் கொளவா வெனவே.

"மைந்தன் வரவே நோக்கும்
வள மாதவன்பால், மகவோடு
அம் தண் புனல் கொண்டு அணுக,
'ஐயா! இதுபோது அளவாய்
வந்து இங்கு அணுகாய்; என்னே
வந்தது? என்றே நொந்தேம்;
சந்தம் கமழும் தோளாய்!
தழுவிக்கொள வா' எனவே."

பொ :—"தன்புதல்வன் வரவையே எதிர் நோக்கியுள்ள வளமிக்க பெருந்தவ முனிவனிடத்தில் தயரதன், அப்புதல்வனோடு சுவைமிக்க குளிர்ந்த நீரையும் கொண்டு நெருங்க, அம்முனிவன், 'ஐயா! இவ்வளவு நேரமாக நீ இங்கு வந்து அடையவில்லை; ஆதலால், உனக்கு என்ன நேர்ந்ததோ' என்றே எண்ணி வருந்தினேம்; சந்தனமணம் கமழும் தோளை உடையவனே! யான் தழுவிக் கொள்ள நீ நெருங்கி வா' என்றுகூற."

கு :—வரவே என்புழி ஏகாரம் பிரிநிலை; கண்ணிரண்டும் இல்லாத முனிவன் 'நோக்கும்' என்றது மனத்தால் நோக்குதலை; இதனை நோக்கல் நோக்கம் என்பர் தொல்காப்பியர். செவியாலும் மூக்காலும் நடக்கும் ஓசையையும் உடம்பின் மணத்தையும் நோக்கிக் கொண்டிருந்தான் என்றலும் ஆம். தயரதன் பூசிப்புலர்ந்த சந்தனத்தோடு வந்தமையை மணத்தால் அறிந்து தன் மகனை சந்தனம் பூசிக் கொண்டு வருகின்றான் என எண்ணிச் 'சந்தங் கமழும் தோளாய்' என விளித்தவாறும் காண்க. நீருக்கு அழகு சுவையே. ஆதலின்

சுவைமிக்க தண்ணீரை 'அந்தண் புனல்' என்றார். அம்-அழகு; இங்குச் சுவையை யுணர்த்திற்று. அந்த மைந்தன் இறந்ததும் அவ்வுடம்பை அவன் பெற்றோர்க்குக் காட்ட எண்ணி முதுகில் சுமந்து கொண்டு கையில் தாங்கிய நீர்க் குடத்துடன் தயரதன் வந்தான் என்க. என் நோ வந்தது எனப் பிரித்து, என்ன நோய் வந்தது? என்றும் பொருள் கொள்ளலாம். என்னோ வந்தது என்று அப்பெற்றோர் அஞ்சியதே அணங்காகி முடிவுற்றமை நோக்கத்தகும். தானே சென்று தழுவக் கண் இல்லாமையால் தழுவிக்கொள வா என்று அழைத்தான் முனிவரன் என்க. (79)

1774. ஐயா யானோ ரரச
னயோத்தி நகரத் துள்ளேன்
மையார் களபந் துருவி
மறைந்தே வதிந்தே னிருள்வாய்ப்
பொய்யா வாய்மைப் புதல்வன்
புனன்மொ ண்டிடுமோ தையின்மேல்
கையார் கணைசென் றதலாற்
கண்ணிற் றெரியக் காணேன்.

'ஐயா! யான் ஓர் அரசன்;
அயோத்திநகரத்து உள்ளேன்;
மை ஆர் களபம் துருவி,
மறைந்தே வதிந்தேன் இருள்வாய்;
பொய்யா வாய்மைப் புதல்வன்
புனல் மொண்டிடும் ஓதையின்மேல்
கை ஆர் கணை சென்றது அலால்,
கண்ணில் தெரியக் காணேன்.'

பொ :—(தயரதன்) 'ஐயா! யான் ஒரு மன்னன்; அயோத்தி நகரத்தில் இருப்பவன்; கரிய யானைகளை வேட்டையாடத் தேடி இருளில் மறைந்து இருந்தேன்; அப்பொழுது பொய்க்காமல் மெய்யே பேசும் நும் புதல்வன் நீர் முகக்கின்ற ஓசையின்மேல் என் கையில் இருந்த அம்பு சென்றதே அல்லாமல் இலக்கான பொருள் இது எனக் கண்ணில் தெளிவாகக் கண்டிலேன்.'

கு :—மை-கருமை. களபம்-யானைக் கன்று. ஓதை-ஓசை. செவிப் புலனால் அறிந்ததன்றிக் கட்புலனால் காணாமைக்கு இருளும் மறைந்

திருந்ததும் காரணங்கள் ஆம். கண்ணால் காணுமிடத்தில் இருந்தால் யானை நீர்த்துறைக்கு வாராது பெயரும் என்ற எண்ணத்தால் மறைந் திருந்தான் என்க. (80)

**1775.** வீட்டுண் டலறுங் குரலால்
வேழக் குரலன் றெனவே
ஓட்டந் தெதிரா நீயா
ரெனவுற் றவெலா முரையா
வாட்டந் தருநெஞ் சினனாய்
நின்றான் வணங்கா வானோர்
ஈட்ட மெதிர்வந் திடவே
யிறந்தே கினன்விண் ணிடையே.

"வீட்டுண்டு அலறும் குரலால்,
வேழக்குரல் அன்று எனவே
ஓட்டந்து எதிரா, 'நீ யார்?'
என, உற்ற எலாம் உரையா
வாட்டம் தரும் நெஞ்சினனாய்,
நின்றான் வணங்கா; வானோர்
ஈட்டம் எதிர் வந்திடவே,
இறந்து ஏகினன் விண்ணிடையே."

பொ :—அம்பினால் கொலையுண்டு அலறுகின்ற குரலால் யானையின் குரல் அன்று என்று அறிந்து, ஓடி அவனை நேரே கண்டு, நீ யார்? என்று கேட்க, அவன் அங்கு அடைந்ததற்குரிய காரணங்களையெல்லாம் சொல்லி, (வந்த பணி பழுதுபட்டமைக்காக) வாடிய நெஞ்சினனாய் நும்மை வணங்கிநின்றான்; தேவர்கள் கூட்டம் எதிர்கொள இம்மண்ணுல கைக் கடந்து விண்ணுலகத்திற்குச் சென்றான்.

கு.—வீட்டல்-கொல்லல். ஓட்டந்து என்பது, ஓட்டம் தந்து என்பதன் சிதைவு. உற்றவெலாம் என்றது பெற்றோர் கண் அற்றோர் என்பதும், அவர்கள் நீர் வேட்கையால் பெரிதும் வருந்தினர் என்பதும், அவர் தாகம் தீர்க்க நீர்க்கு வந்தான் என்பதும் ஆம். அவர் தாகம் போக்க முடியாமையின் வாட்டம் தருநெஞ்சினன் ஆனான் என்க. வணங்கியது பெற்றோரை. அவ்வணக்கத்தின் பயனாக விண்ணோர் எதிர்கொள விண் ணுலகம் சென்றான் என்பது கருத்து. வணங்கி நின்றான் என்க. வணங்கா என்பது, செய்யாவென்னும் வாய்பாட்டு வினையெச்சம். (81)

1776. அறுத்தாய் கணையா லெனவே
யடியேன் றன்னை யையா
கறுத்தே யருளா யானே
கண்ணிற் கண்டே னல்லேன்
மறுத்தா னில்லான் வனமொண்
டிடுமோ தையினெய் ததலால்
பொறுத்தே யருள்வா யென்னு
விருதாள் சென்னி புனைந்தேன்.

"'அறுத்தாய் கணையால் எனவே,
அடியேன் தன்னை, ஐயா!
கறுத்தே அருளாய்; யானே
கண்ணில் கண்டேனல்லேன்,
மறுத்தான் இல்லான் வனம் மொண்டிடும்
ஓதையின் எய்தது அலால்;
பொறுத்தே அருள்வாய்' என்னு
இருதாள் சென்னி புனைந்தேன்."

பொ:—"ஐயா! கணையால் என் மகனை எய்து கொன்றாய் என்று, அடியேனைக் கோபித்தருளாய்; குற்றமற்ற நும் மகன் நீர் மொண்டிடும் ஓசையினை நோக்கி எய்ததே அன்றி, யான் அம்மகனைக் கண்ணால் கண்டிலேன்; அறியாது செய்த என் குற்றத்தைப் பொறுத்தருள்க" என்று அம்முனிவரின் இரண்டு தாள்களையும் தலையில் புனைந்து கொண்டேன்."

கு:—அறுத்தல், இங்கு எய்தலை யுணர்த்திற்று. அறிந்து செய்த குற்றமன்று ஆகலின், 'கறுத்தே அருளாய்' எனவும் 'பொறுத்தே யருள்வாய்' எனவும் வேண்டிக்கொண்டான். முனிவனை வேண்டு கிறான் ஆகலின் கறுத்தேயருளாய் என அருளலைக் கூட்டினான். யான் பகைமை கொள்ளற்குரிய காரணம் அவன்பால் இல்லை என்பது தோன்ற, 'மறுத்தான் இல்லான்' என்றான். வனம் – நீர். 'ஓதையின் எய்ததலால் கண்டேனல்லேன்' என்று இயைக்க. தாள் சென்னி புனைதல் – தாள்மேல் தலையுறப் பணிதல். (82)

1777. வீழ்ந்தா ரயர்ந்தார் புரண்டார்
விழிபோ யிற்றின் றென்றார்
ஆழ்ந்தார் துன்பக் கடலு
ளையா வையா வென்றார்

போழ்ந்தாய் நெஞ்சை யென்றார்
பொன்னு டதனிற் போய்நீ
வாழ்ந்தே யிருப்பத் தரியேம்
வந்தேம் வந்தே மினியே.

" வீழ்ந்தார் ; அயர்ந்தார் ; புரண்டார் ;
' விழி போயிற்று இன்று ' என்றார் ;
ஆழ்ந்தார் துன்பக் கடலுள் ;
' ஐயா ! ஐயா !' என்றார் ;
'போழ்ந்தாய் நெஞ்சை ' என்றார் ;
' பொன்னுடதனில் போய் நீ
வாழ்ந்தே இருப்பத் தரியேம் ;
வந்தேம் ! வந்தேம் இனியே !' "

பொ :—" யான் கூறியதைக் கேட்டவுடன் தரையில் வீழ்ந்தார்கள்; தம்மை மறந்தார்கள்; பிறகு தரையில் புரண்டார்கள்; ' இன்றே எங்கள் விழி போய்விட்டது ' என்றார்கள்; துன்பமாகிய கடலுள் ஆழ்ந்துவிட்டார் கள்; பிறகு ' ஐயா! ஐயா!' என்று விளித்து அரற்றினார்கள்; 'எங்கள் இதயத்தைப் பிளந்துவிட்டாய்' என்றார்கள்; ' நீ போய்ப் பொன் னுலகில் வாழ்ந்திருப்ப நாங்கள் இந்த மண்ணுலகில் பொறுத்திருக்க மாட்டோம்; இப்பொழுதே வந்தோம் ! வந்தோம் !"

கு :—தம்மகன் மரணத்தைக் கேட்டவுடன் திடுக்கிட்டு வீழ்தலும், அப்படியே மூச்சற்று இருத்தலும், பின் உணர்வு சிறிது வந்து தரையில் புரளுதலும், பின்னர் வாயால் சில சொல்லுதலும், மீண்டும் பெருந் துன்பத்தால் வாய் பேசாது பொருமுதலும், பிறகு வாய் திறந்து இறந்தாரை அன்பு தோன்ற விளித்துச் சில கூறுதலும், துன்பமுற் றோரின் பல படிமுறைகளாய் அமைந்திருத்தல் காண்க. தமக்குக் கண் ணில்லாத போதும் தம்மகனையே கண்ணாகக் கொண்டிருந்தமை தோன்ற, அவன் இறந்த நிலையில் ' இன்று விழி போயிற்று ' என்றார். துன்பக் கடலுள் ஆழ்தலாவது, துன்பத்தை மனத்துக் காக்கி வாய் பேசாது அமைதியாகக் கலக்கமடைதல். நெஞ்சு – இதயம். மகன் மரணச் செய்தி யால் அவர் இதயம் பிளந்த உண்மையைக் கூறினார்கள்; இதயம் பிளந்தமையால்தான் ' வந்தேம் ! வந்தேம் !' என்றார்கள். அடுக்கு விரைவுணர்த்திற்று. யாங்கள் மண்ணுலகத்தராகவிட்டு நீமட்டும் பொன்னுலகத்து வாழ்வதை நாங்கள் பொறுத்திருக்க இயலாது என்பது கருத்து. இனி – இப்பொழுது. தரியேம் – பொறுத்திரேம். (83)

1778. என்றென் றயருந் தவரை
யிருதாள் வணங்கி யானே
இன்றும் புதல்வ னினிநீ
ரேவும் பணிசெய் திடுவேன்
ஒன்றுந் தளர்வுற் றயரீ
ரொழிமி னிடரென் றிடலும்
வன்றிண் சிலையாய் கேண்மோ
வெனவே யொருசொல் வகுத்தான்.

"என்று என்று அயரும் தவரை
இரு தாள் வணங்கி, 'யானே
இன்று உம் புதல்வன்; இனி நீர்
ஏவும் பணி செய்திடுவேன்;
ஒன்றும் தளர்வுற்று அயரீர்;
ஒழிமின் இடர்!' என்றிடலும்
'வன் திண் சிலையாய்! கேண்மோ!'
எனவே, ஒருசொல் வகுத்தான்."

போ:—"என்று பல கூறிச் சோரும் தவமுதியரின் இரண்டு பாதங்களையும் பணிந்து 'இன்று தொடங்கி உம் புதல்வன் யானே ஆவேன்; இனி, நீர் ஏவுகின்ற பணிகளையெல்லாம் செய்திடுவேன்; சிறிதும் மனம் தளர்ந்து வருந்தாதீர்கள்; துன்பத்தை விடுங்கள்' என்று யான் கூறலும், அம்முனிவன் 'வலிய திண்ணிய வில்லையுடையவனே! கேள்' என்று ஒரு சொல் சொல்லலானான்.

கு:—முனிவனையும் முனி பன்னியையும் குறிக்கத் 'தவரை' என்றார். நும்மகனைக் கொன்ற யான், இனி நும்மகனாக நுமக்குப் பணி செய்வேன் என்று தன் பிழைக்கு உய்தி நாடிக் கூறினான் என்க. தன் மகனைக் கொன்ற அம்பு விடுதற்குக் கருவியாயிருந்த வில்லையேந்தி யிருப்பான் மன்னன் என்று ஊகித்து, 'வன் திண் சிலையாய்!' என்று விளித்தான் முனிவன். திண்மை–கனம். மோ முன்னிலையசை. ஒரு சொல் என்றது, ஒரு கருத்தை. வகுத்தான் - வகைப்படுத்திக் கூறினான். (84)

1779. கண்ணுண் மணிபோன் மகவை
யிழந்து முயிர்கா தலியா
உண்ண வெண்ணி யிருந்தா
லுலகோ ரென்னென் றுரைப்பார்

விண்ணின் றலைசே ருதும்யா
மெம்போல் விடலை பிரியப்
பண்ணும் பரிமா வுடையா
யடைவாய் படர்வா னென்னு.

"'கண்ணுள் மணி போல் மகவை
இழந்தும் உயிர் காதலியா
உண்ண எண்ணி இருந்தால்,
உலகோர் என் என்று உரைப்பார் ?
விண்ணின்தலை சேருதும் யாம் ;
எம்போல் விடலை பிரியப்
பண்ணும் பரிமா உடையாய் !
அடைவாய் படர்வான் !' என்னு "

போ :—"'கண்ணில் கருமணி போன்ற மகனை இழந்துவிட்டபின்னும் உயிர்வாழ்தலை விரும்பிச் சுவையான உணவை உண்ண எண்ணி இறவாது இருந்தால் உலகத்தவர் எம் மனநிலைபற்றி என்ன சொல்வார்கள் ? (மகன் மேல் அன்பில்லாத வன்னெஞ்சர் என்று அன்றோ இகழ்வார்கள் ?) ஆதலால் யாங்கள் விண்ணுலகம் நண்ணுகின்றோம்; அலங்கரிக்கப் பெற்ற குதிரையுடையவனே ! எம்மைப் போல நீயும் மகன்பிரிய விண்ணுலகத்தை அடைவாயாக !' என்று."

கு:—கண்ணிழந்த நிலையில் மகனையே கண்ணாகக்கொண்டு கண்ட நிலைமையன் ஆதலின் கண்ணுள் மணியைத் தன்மகனுக்கு உவமை கூறினன்; காண்பது அக்கருமணியே ஆதலின். மகன் இறந்தபின் வாழ்வது உணவின்மேலுள்ள விருப்பத்தாலன்றிப் பிறிதின்மையின் 'உண்ண எண்ணி இருந்தால்' என்றும், உலகோர், வன்னெஞ்சக் கள்வன், மனவலியன் என இகழ்வார் என்பது தோன்ற 'உலகோர் என்னென்றுரைப்பார்?' என்றும் கூறினன். தலை-இடம். வேட்டைக்கு வந்த மன்னன் குதிரையேறி வந்திருப்பான் என்ற எண்ணத்தால், 'பரிமா உடையாய்' என்று விளித்தான். படர்வான் - விரிந்த விண்ணுலகம். பண்ணுதல் - அலங்கரித்தல். 'யானே இன்று உம்புதல்வன்; ஒழிமின் இடர்' என்ற தயரதனுக்கு மறுமொழி கூறியவாறு. (85)

1780. தாவா தொளிருங் குடையாய்
தவறிங் கிதுநின் சரணம்
காவா யென்று யதனுற்
கடிய சாபங் கருதேம்

ஏவா மகவைப் பிரிந்தின்
றெம்போ லிடருற் றனைநீ
போவா யகல்வா னென்னுப்
பொன்னுட் டிடைபோ யினரால்.

"'தாவாது ஒளிரும் குடையாய்!
தவறு இங்கு இது நின்சரணம்
காவாய்' என்றாய்; அதனால்,
கடிய சாபம் கருதேம்;
'ஏவா மகவைப் பிரிந்து இன்று
எம்போல் இடர் உற்றனைநீ
போவாய் அகல்வான்' என்னுப்
பொன்னுட்டிடை போயினரால்."

பொ:—"என்றும் அழியாது, தன்னை அடைந்தாரைக் காத்து நிழல் செய்து விளங்குகின்ற குடையையுடையவனே! 'இங்கு யான் அம் பெய்த இது தவறு; நின் அடைக்கலம் யான்; என்னைக் காப்பாற்றுவா யாக' என்று வேண்டிக்கொண்டாய்; அதனால், நினக்குக் கடுமையான சாபம் கொடுக்கக் கருதமாட்டோம்; ஏவுவதற்கு முன்னமே குறிப்பறிந்து பணி செய்தற்குரிய மகனைப் பிரிந்து, இன்று எங்களைப்போல் நீ துன்ப முற்று விரிவான விண்ணுலகத்திற்குப் போவாயாக'" என்று சாபம் கொடுத்துவிட்டுப் பொன்னுலகத்திற்குப் போய்விட்டார்கள்.

கு:—கூடினார்பால் நிழலாய் விளங்கும் குடையை உடையான் என்பார், 'தாவாது ஒளிரும் குடையாய்' என்றார். ஒற்றை வெண் கொற்றக் குடையுடைய ஒரு வேந்தன் 'சரணம் காவாய்' என்ற பின்னர்க் கடிய சாபம் கொடுத்தல் அறன் அன்று என்பது கருத்து. கடிய சாப மாவது, 'எம் மகனைக் கொன்ற நீ, எம்முன் இறக்க' என்றோ, எம்மகன் இறப்புக் கேட்டு இறக்கும் எம்மைப்போல நின்மகன் இறப்புக் கேட்டு நீ இறக்க என்றோ கூறுவது. ஏவா மகவு-ஏவாமுன் குறிப்பறிந்து செய் யும் மகன். ஏவா மக்கள் மூவா மருந்து (கொன்றை வேந்தன்) என்றது காண்க. இராமன், தந்தை ஏவாமுன் கருத்தறிந்து பிரிவான் என்பது குறிப்பு. ஏவா என்பதைச் செய்யாவென்னும் வினையெச்சமாக்கி 'நீயே நின்மகனைப் போமாறு ஏவுதலால் பிரிந்து' எனப் பொருள்கூறலுமாம். இங்கு எம்போல் என்றது, இடர் உறு தற்கும் இறத்தற்கும் ஒக்குமேயன்றி மகனையிழந்த நிலைக்கு ஒவ்வாது என்று விளக்கியவாறு. மனைவியாரையும் உளப்படுத்திக் 'கருதேம்' எனவும், 'எம்போல்' எனவும் முனிவனே கூறினன் என்பதும் பொன்னுடு போயது இருவருமே என்பதும் அறிக. (86)

1781. சிந்தை தளர்வுற் றயர்தல்
சிறிதும் மிலனா யின்சொல்
மைந்த னுளனென் றதனால்
மகிழ்வோ டிவண்வந் தனெனால்
அந்த முனிசொற் றமையு
மண்ணல் வனமே குதலும்
என்ற னுயிர்வீ குதலு
மிறையுந் தவறா வென்றான்.

'சிந்தை தளர்வுற்று அயர்தல்
சிறிதும் இலனாய், இன்சொல்
மைந்தன் உளன் என்றதனால்
மகிழ்வோடு இவண் வந்தனெனால் ;
அந்த முனி சொற்றமையும்,
அண்ணல் வனம் ஏகுதலும்,
என்றன் உயிர் வீகுதலும்,
இறையும் தவறா' என்றான்.

பொ :—"அவர் சாபத்தைக் கேட்டு மனம் தளர்ந்து சோர்தல் சிறிதும் இன்றி அந்தச் சாபத்தால் மைந்தன் உளன் என்பது பெறப்படுதலால் மகிழ்ச்சியோடு இங்கு வந்தேன் ; அந்த முனி சொன்னமையும் அச் சொல்லின்படி தோன்றிய நம் மைந்தன் காட்டிற்குப் போதலும் அவன் பிரிவுத் துயரால் என் உயிர் உடம்பைவிட்டு நீங்குதலும் சிறிதும் தவறமாட்டா" என்று கூறினான்.

கு :—மைந்தனிலாது வருந்தும் எனக்கு, 'மகவைப் பிரிந்து' என்ற அவர் சாபச்சொல் மைந்தன் உளன் என்றதை விளக்குதலால் வரமாயிற்று என்னும் மகிழ்ச்சியோடு வந்தேன் என்பது கருத்து. அந்த முனிவன் சொற்படி மைந்தன் உளனாயினன் ஆதலின், அச்சொற்படியே அம்மைந்தன் பிரிதலும் என்னுயிர் நீங்குதலும் சிறிதும் தவறா எனத் துணிய அது காரணமாயிற்று. 'இன்சொல் மைந்தன்' என்றது, குழலினும் யாழினுமினிய மழலைமொழி யுடைமை நினைந்து. அண்ணல் – பெருமையுடையவன் ; இராமன். ஏகுதல் நோக்கி, வீதல் வீகுதல் ஆயிற்று; கு, சாரியை. (87)

1782. இம்மா மொழிதந் தரசன்
னிடருற் றிடுபோழ் தினிலச்
செம்மா மயில்கோ சலேயுந்
திகையா வுணர்வோ வினளால்
மெய்ம்மா நெறியும் விதியின்
விளேவும் தளர்வின் றுணரும்
அம்மா தவனும் விரைவோ
டவலந் தருநெஞ் சினனாய்.

இம் மா மொழி தந்து, அரசன் இடர் உற்றிடு போழ்தினில் அச் செம் மா மயில் கோசலேயும் திகையா உணர்வு ஓவினளால்; மெய்ம் மா நெறியும், விதியின் விளேவும், தளர்வின்று உணரும் அம் மாதவனும், விரைவோடு அவலம் தரு நெஞ்சினன் ஆய்.

பொ :—இந்தச் சிறந்த சொல்லேச் சொல்லிவிட்டு அரசன் துன்புறும்போது, உண்மையாக நடக்க இருக்கும் சிறந்த நெறி இது என்பதையும், அவ்வழிக்குத் துணேயாக அமைந்த விதியின் விளேவையும் ஐயம் திரிபு ஆகிய தளர்ச்சி இல்லாமல் உணர்ந்த அந்தப் பெரிய வசிட்ட முனிவனும் உடனே அவலம் நிறைந்த நெஞ்சினன் ஆக, செம்மைப் பண்புடைய மயில் போன்ற சாயலேயுடைய அக்கோசலேயும் மனம் திகைத்து உணர்வு நீங்கினுள்.

கு :—பின்னர் நிகழவிருப்பதை முன்னறிந்து கூறினமையால் மா மொழி எனச் சிறப்பித்தார். முன் தேவசபையில் முடிவு செய்தபடி இராமன் காட்டிற்குச் செல்வது அவதாரத்தின் உண்மை நோக்கம் என்பதையும், தயரதன், முன் அக்கண்ணில்லா முனிவரிடம் பெற்ற சாப விதி, அவன் மரணமாகிய விளேவைத் தந்தே தீரும் என்பதையும், வசிட்டன் நன்குணர்ந்தவன் ஆதலின். இராமன் வனம் புகுதற்காகவோ தயரதன் இறப்பதற்காகவோ அவன் இரங்க வேண்டுவதில்லே ; அத்தகைய தெளிவுடையோனேயும் அவலம் அடையச்செய்துவிட்டது, தயரதன் சோக நிலே என்பது கருத்து. மெய்ம் மாநெறி என்றது இராமன் வனம்புகுதலே; விதியின் விளேவு என்றது, தயரதன் மரணமடைதலே. ஐயம் திரிபுகளேயே இங்குத் 'தளர்வு' என்ருர் ; அவ்விரண்டும் இருப்பின் முடிவு காண வியலாது மனந்தளரும் இயல்பு நினேந்து. மாதவனும் என்புழி உம்மை உயர்வுசிறப்பு. உணருமாதவனே அவலம் அடையும்போது மெல்லியலாளாகிய கோசலே அவலத்தால் உணர்விழத்தல் சொல்லவேண்டுமோ என்பது தோன்ற 'மயில் கோசலே' என்ருர். கோசலே செந்நிறத்தோடு மென்சாயலுமுடைமையின் 'செம்மாமயில் கோசலே' என்று இல்பொருள் உவமையாகக் கூறினர் எனலுமாம். திகைத்தல் - கலங்கிய

நிலே; உணர்வு ஓவுதல் மூச்சற்றநிலே. நெஞ்சினனுக எனச் செய்து என் எச்சத்தைச் செயவென் எச்சமாகத் திரித்து ஓவினள் என்ற வினே யோடு முடிக்க. அவலம் - அழுகை. உடனே அவலமுற்ருன் என்பார், 'விரைவோடு அவலந்தரு நெஞ்சினனுய்' என்ருர். (88)

## வசிட்டன் அரசவைக்குப் போதல்

**1783.** உரைசெய் பெருமை யுயர்தவத்தோ ரோங்கல்
★ புரைசை மதகளிற்ருன் பொற்கோயின் முன்னர்
முரைச முழங்க முடிசூட்ட மொய்த்தாண்
டரைச ரினிதிருந்த நல்லவையி னுயினுன்.

உரைசெய் பெருமை உயர் தவத்தோர் ஓங்கல்
புரைசை மத களிற்ருன் பொன் கோயில் முன்னர்,
முரைசம் முழங்க, முடி சூட்ட, மொய்த்து ஆண்டு
அரைசர் இனிது இருந்த நல் அவையின் ஆயினுன்.

பொ :—யாவரும் புகழத்தக்க பெருமையுடைய உயர்ந்த தவ முனிவர்க்கெல்லாம் சிறந்த மலேபோன்றவனுகிய அவ் வசிட்டன், கழுத்திடுகயிற்ருேடு கூடிய மதயானேயையுடைய தயரதனது அழகிய அரண்மனேக்கு முன்னர் முரசம் முழங்கா நிற்க, இராமனுக்கு முடிசூட்டும் பொருட்டு அரசர்கள் அங்கு இனிதாக நெருங்கியிருந்த நல்ல அவையில் சேர்ந்தான்.

கு :—தவத்தோர்க்கெல்லாம் சிறந்தவன் வசிட்டன் என்பார். 'உயர்தவத்தோர் ஓங்கல்' என்ருர். ஓங்கல் - மலே. தவக்குன்று என்பது கருத்து. புரைசை-யானேக்கழுத்திடு கயிறு. களிற்ருன் - தயர தன். 'யானேயான்' என்ருர் முன்னும் (1400.) முடிசூட்டும் விழாக் காணவந்த மன்னரை, முடிசூட்ட மொய்த்ததாகக் கூறினுர்; அவர் கருத்தும் சூட்டுவதில் ஒன்றுவதால். மொய்த்தலால் இன்னுமை நேர்ந் தாலும் முடிசூட்டுவிழாக் காணப் போகின்ருேம் என்ற இனிய உள்ளத் தோடு இருத்தலின் மொய்த்து இனிதிருந்த என்ருர். (89)

## முனிவனே மன்னர் வினவல்

**1784.** வந்த முனியை
முகநோக்கி வாள்வேந்தர்
எந்தை புகுதற்
கிடையூறுண் டாயதோ

அந்தமில் சோகத்
தழுதகுர லானென்கொல்
சிந்தை தெளிந்தோய்
தெளிவியெமக் கென்றுரைத்தார்.

வந்த முனியை முகம் நோக்கி வாள் வேந்தர்,
'எந்தை புகுதற்கு இடையூறு உண்டாயதோ?
அந்தம் இல் சோகத்து அழுதகுரல்தான் என்கொல்?
சிந்தை தெளிந்தோய்! தெளிவி' எமக்கு என்று உரைத்தார்.

போ:—வாட்படை தாங்கிய வேந்தர்கள், தம் அவைக்கு வந்த வசிட்ட முனிவன் முகத்தைப் பார்த்து, "தெளிந்த மனமுடையோய்! முடிவில்லாத சோகத்தோடு அழுத குரலுக்குக் காரணம் என்னையோ? எம் தந்தைபோன்ற தயரதமன்னன் இங்கு வருதற்கு இடையூறு ஏதேனும் உண்டாயதோ? எங்கட்குத் தெளியச் சொல்லுவாய்" என்று வேண்டிக்கொண்டனர்.

கு:—எந்தை என்றது தயரதனை. முடிசூட்ட,முன்னரே வரவேண்டிய தயரதன் வாராமையோடு அங்கு அழுகுரலும் கேட்டமையால் இங்ஙனம் வினவினர். அந்தம் - முடிவு. (90)

## வசிட்டன் சொல்லல் (1785-1786)

1785. வேந்தன் பணியினாற்
கைகேசி மெய்ப்புதல்வன்
பாந்தண் மிசைக்கிடந்த
பாரளிப்பா னாயினான்
ஏந்து தடந்தோ
ளிராமன் றிருமடந்தை
காந்த னொருமுறைபோய்க்
காடுறைவா னாயினான்.

'வேந்தன் பணியினால், கைகேசி மெய்ப் புதல்வன்
பாந்தள் மிசைக் கிடந்த பார் அளிப்பான் ஆயினான்;
ஏந்து தடந்தோள் இராமன், திருமடந்தை
காந்தன், ஒருமுறை போய்க் காடு உறைவான் ஆயினான்.'

பொ :—தயரத மன்னன் கட்டளையால், கைகேயியின் மெய்ம்மையான புதல்வனாகிய பரதன், ஆதிசேடன் என்னும் ஆயிரந்தலைப் பாம்பின்மேல் இருந்த பூமியைக் காக்கும் மன்னவன் ஆயினான் ; திருமகளின் கணவனாகிய உயர்ந்த பெரிய தோள்களையுடைய இராமன் தனக்குப் பணித்த ஒரு முறையின்படி சென்று காட்டில் தங்குதற்கு உரியவனானான்.

கு :—இச்செய்யுளும் பின்வரும் பாடலும் ஒரு தொடர். தயரதன் வாயால் கூறவில்லையாயினும், வரம் கொடுப்பதாக வாக்களித்தமையின் 'வேந்தன் பணியினால்' என்றார். முன் கைகேயி " இராமனைப் பயந்த வெற்கு " (1542.) என இராமனை மகனாகக் கூறியது புனைந்துரையே யென்பது புலப்பட வேண்டிப் பரதனைக் 'கைகேசி மெய்ப் புதல்வன்' என்றார். ஆயிரந்தலையால் தாங்கப்படும் பாரைப் பரதன் காப்பது அருமை என்பது தோன்றப் 'பாந்தள் மிசைக்கிடந்த பார்' என்றார். பாந்தள் மிசைக்கிடந்த பாரை ஏந்துதற்கு உரிய பெருமையுடையன் என்பது புலப்பட, 'ஏந்துதடந் தோள் இராமன்' என்றார். திருமகள் கணவனாக உள்ளவன் நகரத்திலிருந்து அரசபோகம் துய்க்காமல் காட்டில் உறைய நேர்ந்தது இரங்கத்தக்கது என்பது புலப்பட, திருமடந்தை காந்தன் காடுறைவான் ஆயினான் என்றார். 'ஒருமுறை' என்பதற்குக் காடுறைதல் காலமுழுமையும் அன்று ; பதினான்காண்டு என்னும், 'ஒரு கால முறை வரையில்' என்பது பொருள். (91)

**1786.** கொண்டாள் வரமிரண்டு
கேகயர்கோன் கொம்பவட்குத்
தண்டாத செங்கோற்
றயரதனுந் தானளித்தான்
ஒண்டார் முகிலைவனம்
போகென் றொருப்படுத்தாள்
எண்டானும் வேறில்லை
யீதடுத்த வாறென்றான்.

" கொண்டாள் வரம் இரண்டு
கேகயர்கோன் கொம்பு ; அவட்குத்
தண்டாத செங்கோல்
தயரதனும் தான் அளித்தான் ;
ஒண் தார் முகிலை 'வனம்
போகு ' என்று ஒருப்படுத்தாள் ;
எண்தானும் வேறு இல்லை ;
ஈது அடுத்தவாறு " என்றான்.

பொ :—"கேகயத்து அரசன் மகளாகிய கைகேயி (முன்னிகழ்ந்த சம்பரன் போரில் செய்த உதவிக்காக,) இரண்டு வரங்களைப் பெற்றுக் கொண்டாள்; அவள் விருப்பத்திற்கு இணங்கி நீங்காத செங்கோன்மையை யுடைய தயரதனும் இப்பொழுது அவ்வரங்களைக் கொடுப்பதாக வாக்களித்தான்; அவ்வரத்தின்படி அக்கைகேயி ஒளிமிக்க மாலையையுடைய மேகவண்ணனாகிய இராமனை 'வனம் போகுக' என்று அவனை உடன்படச் செய்தாள். நாம் எண்ணத்தக்கது வேறு ஒன்றும் இல்லை; இதுதான் அங்கு நேர்ந்துள்ள நிலை" என்று கூறினான். (வசிட்டன்)

கு :—பூங்கொம்பு போன்றவள் கைகேயி ஆதலின் ஆகுபெயரால் அவளைக் 'கொம்பு' என்றார். கணவனுக்குத் தான் பணிந்து மொழியாது தனக்கு அவன் பணிந்து மொழியுமாறு நின்ற தருக்குத் தோன்றக் கொடி என்னாது, கொம்பு என்றார் எனலுமாம். முன்னமே கொடுத்த வரத்தைக் கேட்குங்கால் தப்பாமல் கொடுப்பதே முறை என்னும் கருத்தால் தயரதன் கொடுத்தான் என்பது புலப்படத் 'தண்டாத செங்கோல் தயரதன்' என்று சிறப்பித்தார். முகில்போன்ற வண்ண முடையானை முகில் என்றது உவமையாகுபெயர். ஒருப்படுத்தல் - உடன்படச் செய்தல்; எண் – எண்ணம். (92)

## வசிட்டன்சொல் கேட்ட மக்கள் நிலை (1787-1805)

**1787.** வாரார் முலையாரு மற்றுள்ள மாந்தர்களும்
ஆராத காத லரசர்களு மந்தணரும்
பேராத வாய்மைப் பெரியோ னுரைசெவியில்
சாராத முன்னந் தயரதனைப் போல்வீழ்ந்தார்.

வார் ஆர் முலையாரும், மற்று உள்ள மாந்தர்களும்,
ஆராத காதல் அரசர்களும், அந்தணரும்,
பேராத வாய்மைப் பெரியோன் உரை செவியில்
சாராத முன்னம், தயரதனைப்போல் வீழ்ந்தார்.

பொ —கச்சணிந்த கொங்கையுடைய பெண்டிரும் மற்றுள்ள ஆடவர்களும் இராமனிடத்துத் தணியாத பேரன்பினையுடைய அரசர்களும் அந்தணர்களும் வேறுபடாத மெய்ம்மைபேசுகின்ற பெரியோனாகிய வசிட்டன் சொல்லிய சொல், தம் செவியில்படுதற்குமுன்னரே (இராமன் காடுபுகுவான் என்பது கேட்ட) தயரதனைப் போல் மூச்சற்று மயங்கி வீழ்ந்தார்கள்.

கு :—மாந்தர், ஆடவரைக் குறிக்கும் பலர்பாற் சொல். அரசர், அந்தணர், பிற்கூறப்படுதலின், மற்றுள்ள மாந்தர் என்றது, அவ

ரொழிந்த ஏனை வருணத்து ஆடவரை. எல்லா வருணத்து மகளிரையும் 'வாரார் முலையார்' எனப் பொதுவகையால் குறித்தார். 'ஆராத காதல்' இடைநிலைவிளக்கமாய்நின்று முன்னும் பின்னும் சென்று இயையும். இராமனை எத்தனைமுறை கண்டாலும் மேலும் பார்க்கவேண்டும் என்று தூண்டுகின்ற தணியாத அன்பினையே 'ஆராத காதல்' என்றார். 'இராமன்பால் ஆராதகாதல்' என ஒரு சொல் வருவிக்க. பொய்யோ? என ஐயுறத்தக்க சொல்லன்று என்பது புலப்பட வேண்டி, "பேராத வாய்மைப் பெரியோனுரை" என்றார். பால் புளிப்பினும் பகலிருளினும் நால்வேத நெறி திரியினும் திரிவுபடாத மெய்ம்மையுடையான் என்பார் 'பேராத வாய்மைப் பெரியோன்' என்று சிறப்பித்தார். காலத்தாலும் சீலத்தாலும் அறிவாலும் பெரியோன் வசிட்டன் ஆகலின் அவனைப் 'பெரியோன்' என்றார். கேட்டவுடன் வீழ்ந்தார் என்பார் விரைவு தோன்ற, 'செவியில் சாராத முன்னம்' என்றார். 'ஏய வரங்க ளிரண்டி னொன்றினால் என், சேயரசாள்வது சீதைகேள்வன் ஒன்றால் போய் வனமாள்வது" (1593) எனக் கைகேயி புகலக் கேட்டதும் தயரதன் அராவின் வேகமடங்கிய வேழமென்ன வீழ்ந்தமை கைகேயி சூழ்வினைப்படலத்தா லறியப்பட்டமையின் இங்குத் 'தயரதனைப் போல் வீழ்ந்தார்' என உவமை கூறினர். (93)

**1788.** புண்ணுற்ற தீயிற்
புகையுற் றுயிர்பதைப்ப
மண்ணுற் றயர்ந்து
மறுகிற் றுடம்பெல்லாம்
கண்ணுற்ற வாரி
கடலுற்ற தந்நிலையே
விண்ணுற்ற தெம்மருங்கும்
விட்டமுத பேரோசை.

புண் உற்ற தீயில் புகை உற்று உயிர் பதைப்ப,
மண் உற்று அயர்ந்து மறுகிற்று உடம்பு எல்லாம்;
கண் உற்ற வாரி கடல் உற்றது; அந்நிலையே
விண் உற்றது, எம்மருங்கும் விட்டு அழுத பேரோசை.

பொ :—புண்ணில் நெருப்புப்பட்டதுபோல் வெதும்பி உயிர் துடிக்க உடம்பெல்லாம் சோர்ந்து மண்மேல் விழுந்து புரளலாயிற்று; கண்ணில் வடிந்த கண்ணீர் ஆறுகிக் கடலை அடைந்தது; எல்லாப் பக்கத்திலும் மக்கள் வாய்விட்டு அழுத பெரிய ஓசை அப்பொழுதே விண்ணுலகத்தை அடைந்தது.

கு:—வருத்த மிகுதிக்குப் புண்ணில் தீயுற்றதை உவமை கூறுவதுண்டு. 'புண்ணிலாம் பெரும் புழையில் கனல் நுழைந்தால் என' (328.) என்று கூறியது காண்க. புண் தீயுற்றதின் என மாற்றுக. புகையுறுதல்-வெதும்புதல். 'புகையுற்ற தீ' என மாற்றினும் அமையும். மறுகுறல்-புரளுதல். அங்குத் திரண்டிருந்தோர் அனைவரும் அழுத கண்ணீர் ஆறாய்ப்பெருகிக் கடலில் புகுந்தது என்றது, உயர்வுநவிற்சியணி. "வறந்தென்னை செய்தியோ வானம் சிறந்த என், கண்ணீர்க் கடலால் கனைதுளி வீசாயோ" (கலி-145) எனக் கண்ணீரையே கடலாகக் கூறியிருப்பதும் காண்க. கண்ணீர், கடலில் புகுவதனினும் அழுத பேரோசை விண்ணுறுதல் விரைந்து நிகழ்தலின், 'அந்நிலையே விண்ணுற்றது' என்றார். ஓசை நுண்பூதமாகிய விண்ணிடமாய் ஒலிப்பதாகலின் அழுகின்றபொழுதே அவ்வோசை விண்ணுலகு அடைதல் பொருத்தமாதல் காண்க. (94)

**1789.** மாத ரருங்கலமு
மங்கலமுஞ் சிந்தித்தம்
கோதை புடைபெயரக்
கூற்றனைய கண்சிவப்பப்
பாத மலர்சிவப்பத்
தாம்பதைத்துப் பார்சேர்ந்தார்
ஊதை யெறிய
வொசிபூங் கொடியொப்பார்.

மாதர் அருங்கலமும் மங்கலமும் சிந்தித், தம்
கோதை புடை பெயரக், கூற்று அனைய கண் சிவப்பப்,
பாத மலர் சிவப்பத், தாம் பதைத்துப் பார் சேர்ந்தார்
ஊதை எறிய ஒசி பூங்கொடி ஒப்பார்.

பொ:—பெண்டிர், தம் அரிய அணிகலன்களையும் மங்கல அணியையும் வெறுப்பினால் களைந்து சிந்திவிட்டுத் தம் கூந்தல் அவிழ்ந்தலையவும் எமனைப் போன்ற கொடுமையுடைய தம் கண்கள் சிவக்கவும், தம் பாதமாகிய தாமரைமலர் மேலும் சிவக்கவும் தாம் பதைபதைத்து, வாடைக் காற்று வீசியதால் சாய்ந்து வீழும் பூங்கொடியை ஒப்பாராய்த் தரையில் வீழ்ந்தார்கள்.

கு:—மங்கலம் என்றது மங்கல அணியாகிய தாலியை. இராமன் பிரிந்து வனம் புக்கபின் உடம்பையும் வெறுக்கும் உள்ளத்தரான

மையின் அருங்கலங்களையும் மங்கலத்தையும் வெறுத்துக் களைந்து சிந்தினர் என்க. கோதை-கூந்தல்; மகளிர் துன்பமிகுதியால் அழும்போது கூந்தல் அவிழ்ந்து முதுகுப்புறத்தில் அலைதல் இயல்பு. தம் காதலர் உயிரை வருத்தும் அழகு மிக்க கண் என்பார், 'கூற்றனைய கண்' என்றார். "கூற்றமோ! கண்ணோ! பிணையோ! மடவரல், நோக்கமிம் மூன்று முடைத்து" (குறள்–1085) என்பதும் காண்க. கைகேயியினிடத்துக் கொண்ட வெகுளியாலும் இராமன் பிரிவாலுண்டாகிய அழுகையாலும் கண்கள் சிவந்தன; பதை பதைத்துத் தரையில் உதைத்துக் கொண்டமையால் பாதங்கள் சிவந்தன. வாடைக்காற்றால் பூங்கொடி ஒசிந்து வீழ்தல்போல இராமன் வனம் புகுவான் என்ற துன்பத்தால் மகளிர் சோர்ந்து வீழ்ந்தனர். காற்றால் பூங்கொடி சாய்தற்குமுன் அப்பூங்கொடியில் உள்ள மெல்லிய மலர்கள் எல்லாம் உதிர்ந்து போதலும் வறிதாகிய கொடியே நிலத்தில் சாய்தலும் இயல்பு. அதுபோலப் பெண்டிரும்முன்னர்த் தாம் அணிந்திருந்த அணிகலன்களையும் மலர்மாலைகளையும் சிந்திவிட்டு வீழ்ந்தார்கள் என்று உவமையை விரித்துக்கொள்க. மெல்லிய உள்ளமுடைமையால் இன்பத் துன்ப உணர்ச்சிகளில் எளிதாக விரைவில் ஈடுபடுபவர் மகளிராதலின் அவர் துன்பநிலையை முதற்கண் விரித்தார். ஊதை - வாடைக்காற்று. ஒசிதல் – சாய்தல். (95)

**1790.** ஆவா வரச
னருளிலனே யாமென்பார்
காவா வறத்தையினிக்
கைவிடுவேம் யாமென்பார்
தாவாத மன்னர்
தலைத்தலைவீழ்ந் தேங்கினார்
மாவாதஞ் சாய்த்த
மராமரமே போல்கின்றார்.

'ஆ ஆ! அரசன் அருள் இலனே ஆம்' என்பார்;
'காவா அறத்தை இனிக் கைவிடுவேம் யாம்' என்பார்;
தாவாத மன்னர் தலைத்தலை வீழ்ந்து ஏங்கினார்.
மாவாதம் சாய்த்த மராமரமே போல்கின்றார்.

பொ:—(இராமனைக் காடுபுகச்செய்தமையால்) 'ஐயோ அரசன் அருள் இல்லாதவனே ஆவன்' என்று கூறுவார்களும், 'இனி யாமும் அறத்தைக் காவாமல் கைவிட்டுவிடுவோம்' என்று கூறுவார்களுமாய்க் கெடுதியில்லாத மன்னர்கள், பெருங் காற்று வீசிச் சாய்த்த வெண்

கடம்ப மரங்களைப் போல்கின்றாராய் இடங்கள் தோறும் வீழ்ந்து ஏங்கினார்கள்.

கு: —ஆஆ இரக்கக் குறிப்பு. மன்னர் மன்னனாகிய தயரதனே அருளறம் அற்றவனாகும்போது நாம் மட்டும் அறத்தை விடாது காப்பது எற்றுக்கு? என்னும் கருத்தால் 'அறத்தைக் கைவிடுவோம்' என்றனர் மன்னர். காவாமல் என்னும் எதிர்மறை வினையெச்சம் ஈறுகெட்டு 'காவா' என்று வந்தது. அறத்தை மன்னர் கைவிடுதலாவது, இனி வரப்போகும் மன்னனுக்குக் கீழ்ப்படியாது எதிர்க்கத் துணிதல் போல்வது. தாவாமை-கெடுதியில்லாமை. தாவாத மன்னரையும் அவ்வாறு நினைக்கத் தூண்டியது தயரதன் கொடுத்த வரம் என்னும் கருத்துத் தோன்றுதல் காண்க. தலை-இடம். மெல்லியல் மகளிர் வீழ்தற்கு உவமையாக ஊதை எறிய ஒசி பூங்கொம்பினை உவமை கூறியவர், வன்மையிற் சிறந்த மன்னர் வீழ்தற்கு உவமையாக மாவாதம் சாய்த்த மராமரத்தைக் கூறியிருக்கும் பொருத்தம் காண்க. மாவாதம்-பெருங்காற்று. மராமரம்-வெண்கடம்பு. மகளிரைக் கொடியாகவும் மைந்தரை அக்கொடி படரும் மரமாகவும் கூறும் மரபு இங்கு நினைக்க. கொடி வீழ்தற்கு ஊதையும் மரம் வீழ்தற்கு மாவாதமும் காரணமாகக் கூறியிருக்கும் பொருத்தமும் காண்க. மன்னர், என்பாரும் என்பாருமாய் மராமரமே போல்கின்றாராய் வீழ்ந்து ஏங்கினார் என்று முடிக்க. (96)

1791. கிள்ளையொடு பூவை
யழுத கிளர்மாடத்
துள்ளுறையும் பூசை
யழுத வுருவறியாப்
பிள்ளை யழுத
பெரியோரை யென்சொல்ல
வள்ளல் வனம்புகுவா
னென்றுரைத்த மாற்றத்தால்.

கிள்ளையொடு பூவை அழுத; கிளர் மாடத்து
உள் உறையும் பூசை அழுத; உரு அறியாப்
பிள்ளை அழுத; பெரியோரை என் சொல்ல?
'வள்ளல் வனம்புகுவான்' என்று உரைத்த மாற்றத்தால்.

பொ:—'வள்ளலாகிய இராமன் வனம் புகுவான்' என்று கூறிய சொல்லால் கிளியும் நாகணவாய்ப் பறவையும் அழுதன; உயர்ந்த மாளிகையில் உள்ளிருக்கும் பூனைகளும் அழுதன; இராமன் உருவம் இத்

தகையது என்று அறியாத பிள்ளைகளும் அழுதன என்றால் அவன் பேரழகையறிந்த பெரியோர் அழுதார்கள் என்பது பற்றிச் சொல்லுமாறு என்னுளது ?

கு :—மாற்றத்தால் - சொல்லால்; இராமன் முடிபுனைவான் என்று எதிர்பார்த்தவர்களுக்கு அவன் வனம்புகுவான் என்றது மாறுபாடாகத் தோன்றுதலின் 'மாற்றத்தால்' என்பதற்கு மாறுபட்ட சொல்லால் என்றும் பொருள் விரிக்கலாம். கிளியும் பூவையும் பெண்களால் வளர்க்கப்பட்டு இராமன் புகழைக் கற்றுக் கூறுவன ஆதலின் அவை அழுதன. கிளர்மாடம், இடைநிலை விளக்காய் நின்று முன்னும் இயையும். மாடத்துக் கிள்ளையொடு பூவை அழுத என்க. பெரியோர் இராமனைக் கண்டு பழகியவர்கள் ஆதலின் அவர்கள் அழுதல் இயல்பு என்பது விளக்க, இராமன் உருவறியாது மாளிகைக்குள்ளிருக்கும் சிறு பிள்ளையும் அழுதமை கூறிப் 'பெரியோரை யென் சொல்ல' என்றார். இராமன் உயிர்தொறும் உறையும் ஒருவன் ஆகலின் அவன் பிரிவு எல்லா உயிரையும் அழச் செய்தன என்பது கருத்து. 'சொல்ல என்?' என்ற வினா சொல்ல வேண்டாமையை விளக்கிற்று. (97)

1792. சேதாம்பற் போதனைய
செங்கனிவாய் வெண்டளவப்
போதாம்பற் றோன்றப்
புணர்முலைமேற் பூந்தரள
மாதாம்பற் றென்ன
மழைக்கண்ணீ ராலியுக
நாதாம்பற் றுமழலை
நங்கைமா ரேங்கினார்.

சேதாம்பல் போது அனைய செங்கனி வாய் வெண் தளவப் போது ஆம் பல் தோன்றப், புணர் முலைமேல், பூந்தரள மா தாம்பு அற்று என்ன மழைக் கண்ணீர் ஆலி உக, நாதாம் பற்று மழலை நங்கைமார் ஏங்கினார்.

பொ :—செவ்வாம்பற் போதும் சிவந்த கொவ்வைக் கனியும் போன்ற வாயில் வெண்மையான முல்லை அரும்புபோன்ற பற்கள் தோன்றவும், நெருங்கிய கொங்கைகளின்மேல் அணிந்த பொலிவு வாய்ந்த முத்து மாலையின் சிறந்த கயிறு அற்றமையால் முத்துக்கள் சிந்துவது போலக் குளிர்ந்த கண்களிலிருந்து கண்ணீர்த்துளிகள் சிந்தவும், நாவின்கண் நன்கு பொருந்தாது வெளிவரும் மழலை மொழி பேசும் பெண்டிர் அழுது ஏங்கினர்கள்.

கு :—சேதாம்பல் - செவ்வாம்பல். போது, மலர்ச்சிக்கு முற்பட்ட நிலையில் இருப்பது. பெண்டிரின் குவிந்த வாய்க்குப் பொருந்திய உவமையாக வேண்டிப் போது கூறினர். செவ்வாம்பற்போது நிறத்தாலும் மணத்தாலும் குவிந்த நிலையாலும் மகளிர் வாய்க்கு உவமை. செங்கனி என்றது கொவ்வைக் கனியை. இது நிறத்தால் அவர் வாய் இதழுக்கு உவமையாம். போதனைய வாய்; கனியனைய வாய் என இரண்டு உவமையும் வாயையே நோக்குதலின் அடுத்துவரல் உவமையன்று. ‘துப்புறழ் தொண்டைச் செவ்வாய்’ (சீவக. 150) என்பதும் காண்க. செங்கனிவாய் வெண்தளவம் என்றது முரண்தொடை. தளவப் போது ஆம் பல் என்புழி ஆம் உவமையுருபு. அப்பெண்டிர், “ஒண்ணுதலாயத்தார் ஓராங்குத் திளைப்பினும் முள்நுனை தோன்றாமை முறுவல்கொண் டடக்கித்தம், கண்ணினும் முகத்தினும் நகுபவர்” (கலி - 141) ஆதலின் இங்கு அவர் வாய் திறந்து அழுதமை புலப்படப் பல் வெளித்தோன்றுதலைச் சிறப்பாக எடுத்துக் கூறினர். கண்ணில் பெருகிய நீர்த்துளிகள் மார்பில் வீழ்ந்து பின் கீழே சிந்தும் தோற்றம், மார்பில் அணிந்த முத்துமாலை அற்றமையால் அம்முத்துக்கள் மார்பிலிருந்து சிந்துவன போலக் காணப்படுதலின், ‘முலைமேல் பூந்தரள மாதாம்பு அற்றென்ன’ என உவமை கூறினர். தாம்பு - முத்துக் கோத்த கயிறு. மழை கண்ணிற்கு உவமை. ஆலி - நீர்த்துளி. மழலை, எழுத்து நிரம்பாத மொழி ஆகலின், நா தாம் பற்ற என அதற்கு அடை கொடுத்தார். தாம் - அசை. ‘மாதராருங்கலமும்’ (1789) என்று தொடங்கும் பாடலில் மகளிர் மயங்கி வீழ்ந்தமை கூறியவர் இப்பாடலில் அம்மகளிர் அழுதமை கூறினர். (98)

**1793.** ஆவு மழுதன கன்றழுத வன்றலர்ந்த
பூவு மழுதபுனற் புள்ளழுத கள்ளொழுகும்
காவு மழுத களிறழுத கால்வயப்போர்
மாவு மழுதனவம் மன்னவனை மானவே.

ஆவும் அழுதன; கன்று அழுத; அன்று அலர்ந்த
பூவும் அழுத; புனல் புள் அழுத; கள் ஒழுகும்
காவும் அழுத; களிறு அழுத; கால் வயப் போர்
மாவும் அழுதன; அம் மன்னவனை மானவே.

பொ :—அத்தயரத மன்னன் அழுததைப் போலவே பசுக்களும் அழுதன; அப்பசுக்களின் கன்றுகளும் அழுதன; அப்பொழுது மலர்ந்த பூக்களும் அழுதன; நீர் நிலையில் உள்ள பறவைகளும் அழுதன; தேன் ஒழுகும் மலர்களையுடைய மலர்ச்சோலைகளும் அழுதன; யானைகளும

அழுதன; காலில் வலிமையுடைய, போர் செய்தற்குரிய குதிரைகளும் அழுதன.

கு:—'அழுத' என்பது, அன் சாரியை இன்றி வந்த அகரவீற்றுப் பலவின்பால் வினைமுற்று. ஆ என்ற பால்பகா அஃறிணைப் பெயர் இங்குப் பன்மை யுணர்த்திற்று என்பது 'அழுதன' என்ற வினையால் பெறப்படும். பூவும் காவும் அழுதன என்பது ஓரறிவுயிரும் இராமன் பிரிவை யுணர்ந்து வருந்தின என்பது பெறவைத்தவாறு. ஓரறிவுயிரும் ஆவும் கன்றும் புள்ளும் களிறும் குதிரையும் ஆய ஐயறிவுயிரும் அழுதமை கூறி ஈரறிவுயிரும் மூவறிவுயிரும் நாலறிவுயிரும் அழுதமை இனம்பற்றிக் கொள்ளவைத்தார். எல்லா உயிர்களும் அழுதன என்பதே கருத்து. ஓரறிவுயிர்க்கும் நுண்ணிய ஐம்புல உணர்வு உண்டு என்பது பண்டும் இன்றும் சான்றோர் கண்ட முடிபாகும். வய – வலிமை. காலில் வலிமையுடையதாய் ஓடும் இயல்புடையதும், போர் செய்யும் இயல்புடையதுமாதலின் குதிரை, 'கால்வயப் போர் மா' எனச் சிறப்பிக்கப் பெற்றது. காற்றுப் போன்று ஓடும் மா எனலுமாம். ஆறறிவுடையனும் இராமனுக்குத் தந்தையாம் உறவுடையனுமாய தயரதனைப் போலவே ஓரறிவுயிரும் பிறவும் அழுதன என்பது, இராமன்பால் வைத்த அன்பால் எல்லாவுயிர்களும் ஒப்புமையுடையன என்பதை யுணர்த்திற்று. (99)

1794. ஞானியு முய்கலா னென்னுதே நாயகனைக்
கானியு மென்றுரைத்த கைகேசி யுங்கொடிய
கூனியு மல்லாற் கொடியார் பிறருளரோ
மேனியு மின்றி வெறுநீரே யாயினர்.

ஞானியும் உய்கலான் என்னாதே, நாயகனைக்
'கான் ஈயும்' என்று உரைத்த கைகேசியும், கொடிய
கூனியும் அல்லால் கொடியார் பிறர் உளரோ?
மேனியும் இன்றி, வெறு நீரே ஆயினர்.

பொ:—இராமனைப் பிரிந்து, துறந்த ஞானியும் உய்ந்திருக்கமாட்டான் என்று கருதாது தன் கணவனை நோக்கி 'இராமனுக்குக் காட்டைக் கொடு' என்று சொன்ன கைகேயியும் சொல்வித்த கூனியும் அல்லாமல் கொடியவர்கள் அங்குப் பிறர் இலர் ஆதலின் உடம்பு என்பது ஒன்று இல்லாமல் எல்லாம் வெறும் நீராய் உருகினர்கள்.

கு:—கானியும் என்பது நோக்கி ஏனை மூன்றடிகளிலும் இரண்டாம் எழுத்து நீட்டல்விகாரம் பெற்றன. ஞானியும் உய்கலான் என்றது சாதியொருமை. உம்மை உயர்வு சிறப்பு. இன்பத் துன்பங்களை ஒப்ப

நோக்கும் துறந்த ஞானியையும் இராமன் பிரிவு பெரும் பிறிதுறச் செய்யும் எனின் துறவாத தயரதன், மகன் பிரிவை ஆற்றியிருப்பனோ என்க. “பருவர லின்ப மென்றிரண்டும் ஒக்க நோக்கிய யோகருமருந் துயருழந்தார்” என்பர் பின்னர். நாயகன் என்றது தயரதனை. இராமனுக்குக் கானியும் என ஒரு சொல் வருவிக்க. ஈயும், ஈமின் என்பதன் திரிபாய் வந்தது; முன்னிலை ஏவல். கொடிய கூனி என அடை கொடுத்தது, கைகேயியின் தூயசிந்தையையும் திரித்த கொடுமை மிகுதி பற்றி. உரைத்தது கைகேயியே ஆயினும் உரைப்பித்தது கூனியே யாதலின் கொடுமை கைகேயிக்கன்றிக் கூனிக் குரித்தாக்கினர். உளரோ என்ற வினா இன்மையுணர்த்திநின்றது. துன்பத்தால் உருகாமல் நின்றவர்கள் கூனியும் கைகேயியுமே என்பது விளக்கியவாறு. உருக்க மிகுதியால் வல்லுடம்பும் நெகிழ்ந்து நீராதல் உண்டு என்பதனை, ‘நீரா யுருக்கி யென்னுருயிராய் நின்றானே’ (திருவாசகம் - சிவபுராணம் 69) என்ற திருவாதவூரடிகள் வாக்கால் அறியலாம். (100)

**1795.** தேரு தறிவழிந்தா ரெங்குலப்பார் தேரோட
நீருகிச் சுண்ண நிறைந்த தெருவெல்லாம்
ஆருகி யோடின கண்ணீ ரருநெஞ்சம்
கூருகி யோடாத வித்தனையே குற்றமே.

தேருது அறிவு அழிந்தார் எங்கு உலப்பார்? தேர் ஓட
நீறு ஆகிச், சுண்ணம் நிறைந்த தெரு எல்லாம்,
ஆறு ஆகி ஓடின கண்ணீர்; அரு நெஞ்சம்
கூறு ஆகி ஓடாத இத்தனையே குற்றமே.

பொ :—இராமன் வனம் புகுவதைக் கேட்டவுடன் தெளியாமல் அறிவு அழியப் பெற்றவர்கள் எங்ஙனம் எண்ணில் அடங்குவார்? தேர் ஓடுதலால் துகளாகிப் புழுதி நிறைந்த தெரு எல்லாம் அவர்கள் கண்ணீர் ஆருகிப் பெருகி யோடின; அவர்களுடைய அரிய இதயம் பிளந்து போகாத இவ்வளவே குறை.

கு :—மீண்டும் தெளிவு வராதவாறு அறிவிழந்தார் என்பார் ‘தேருது’ என்றார். உலத்தல், ஈண்டு எண்ணிற் குட்படுதல். தேருது அறிவிழந்தவர் கண்ணீர் ஆருய் ஓடின என்றால் அவரை எங்ஙனம் எண்ண முடியும் என்பது கருத்து. நெஞ்சம் பிளந்தாற் போன்ற துன்பமெல்லாம் எய்தினர் என்பது கருத்து. சந்தனக் குழம்பும் பனிநீரும் தெளிக்கப்பட்ட தெருக்கள், தேர்கள் மிகுதியாக ஓடினமையால் துகள் எழுந்து புழுதியாயின; அப்புழுதியையும் அடக்கிக் கண்ணீர் ஆருகி ஓடின என்க. இங்குப் புழுதியில் ஆறு பெருகியதைக் கூறு

கின்றதுபோலவே ஆறு தேர்களால் புழுதியானமையை மிதிலைக் காட்சியில் (570) " தாறுமாய்......ஓராருய்ச் சேறுமாய்த் தேர்களோடத் துகளுமாய் ஒன்ருேடொன்று மாறு மாருகி வாளா கிடக்கிலா மறுகு" என்றது காண்க. நீறு - துகள். சுண்ணம் - புழுதி. பலர் கண்ணீரும் பல வழியாகப் பெருகி ஓடினமையின், ஓடின எனப் பன்மை கூறினர். (101)

**1796.** மண்செய்த பாவ
முளதென்பார் மாமலர்மேற்
பெண்செய்த பாவ
மதனிற் பெரிதென்பார்
புண்செய்த நெஞ்சை
விதியென்பார் பூதலத்தோர்
கண்செய்த பாவங்
கடலிற் பெரிதென்பார்.

'மண் செய்த பாவம் உளது' என்பார்; 'மாமலர் மேல்
பெண் செய்த பாவம் அதனில் பெரிது' என்பார்;
'புண் செய்த நெஞ்சை, விதி' என்பார்; 'பூதலத்தோர்
கண் செய்த பாவம் கடலில் பெரிது' என்பார்.

பொ :—(இராமன் முடிசூடாமல் காடு புகுதற்கு) 'மண்மகள் செய்த பாவம் உளது' என்பார் சிலர்; 'அம்மண் செய்த பாவத்தினும் சிறந்த தாமரை மலர்மேல் தங்கும் திருமகள் செய்த பாவம் பெரிது என்பார் சிலர்;' 'விதி நம் நெஞ்சைப் புண்செய்தது' என்பார் சிலர்; (இராமன் சடை முடிதாங்கிக் காடுபுகும் துன்பக்காட்சியைக் காணும்படி) 'பூதலத் தோர்' கண் செய்த பாவம் கடலினும் பெரிதாம்' என்பார் சிலர்.

கு :—நாட்டைப் பூதேவியாகவும் அரசச் செல்வத்தைச் சீதேவியாக வும் உருவகம் செய்தல் மரபு. இராமனை மன்னனுகப் பெருவிடினும் மண்மகள் அவன் காட்டில் வாழும்போது அவன் திருவடிகளைத் தாங் கும் பேறேனும் பெற்றிருக்கின்ருள்; செல்வத் திருவிற்கு அப்பேறு தானும் இல்லை; ஆதலின், மாமலர்மேல் பெண் செய்த பாவம் அதனிற் பெரிது என்ருர். கைகேயியின் சூழ்ச்சியால் இராமன் கான் புகுகின் ருன் என்று கூற மனமிலராய் இவ்வாறு கூறி அமைதி யுறுகின்றனர் மக்கள் என்க. விதி நெஞ்சைப் புண் செய்தது எனவே நாம் செய்த பெரும் பாவத்தால் இத்துன்ப நிகழ்ச்சியை நினைந்து புண்ணுகின்றேம் என்பது கருத்தாயிற்று. புண் செய்தது என்பது புண்செய்த என ஈறு கெட்டுநின்றது. (102)

**1797.** ஆளான் பரத னரசென்பா ரையனினி
மீளா னமக்கு விதிகொடிதே காணென்பார்
கோளாகி வந்தவா கொற்றமுடி தானென்பார்
மாளாத நம்மின் மனம்வலியா ராரென்பார்.

'ஆளான் பரதன் அரசு' என்பார்; 'ஐயன் இனி
மீளான் நமக்கு விதி கொடிதே காண்!' என்பார்;
'கோளாகி வந்தவா கொற்ற முடி தான்,' என்பார்;
'மாளாத நம்மின் மனம் வலியார் ஆர்?' என்பார்.

பொ :—(இராமன் காடு புகுந்தாலும்) பரதன் அரசு ஆளான்; (இராமனை அழைத்து வந்து அரசாள்விப்பான்) என்பார் சிலர்; நம் ஐயனாகிய இராமன் இனி யார் அழைத்தாலும் மீளான் என்று கூறுவார் சிலர்; 'அவன் மீளாதிருப்பதும் நம் விதியின் கொடுமையால் தான்' என்பார் சிலர்; 'வெற்றிவாய்ந்த முடிபுனைவிழா உலகிற்கே தீங்கு விளைக்கும் தீக்கோளாக வந்தவாறுதான் என்னே' என்பார் சிலர்; 'இந்தப் பெருந்துன்பம் நிகழக்கண்டும் மாண்டுபோகாத நம்மைக் காட்டிலும் மன வலியுடையவர்கள் யாருளர்' என்பார் சிலர்.

கு :—ஆளான் பரதன் என்றது, பரதன் நற்குணமுடையனாதலின் இராமனை அழைத்துவந்து ஆள்விப்பான் என்னும் நினைவாற் கூறியது. அக்கருத்தை யுணர்ந்தே, 'ஐயனினி மீளான்' என வேறு சிலர் கூறுகின்றனர். இவ்விருதிறத்தார் கூற்றும் உண்மைக் கூற்றே என்பதைப் பின் கிளைகண்டுநீங்கு படலத்தான் அறியலாம். நமக்கு நல்வினையிருப்பின் இராமன் மீளும் எண்ண முடையவன் ஆவான்; நமக்கு விதி கொடிது ஆதலின் அவன் எங்ஙனம் மீள்வான் என்பது கருத்து. இராமனைக் கண்ணால் கண்டுமகிழும் பேறுதானும் இன்றி அவன் வனம்புக நேர்ந்ததற்குக் காரணம் ஆராய்ந்து, முடிசூட்டு விழாவைத் தொடங்கினமையால் கைகேயி வரங்கேட்க நேர்ந்தது; அவள் வரத்தால் இராமன் வனம்புக நேர்ந்தது; நேர்ந்தமையால் அவனைப் பிரிந்து வருந்தும் துன்பம் உலக மக்களுக்கு வந்தது என்பதை யுணர்ந்து, 'கொற்றமுடிதான் கோளாகி வந்தது' என்று கூறினர். கோள், உலகுக்கே தீங்குவிளைக்கும் தூமகேது போன்ற தீக்கோள். கொற்றமுடி என்பது, ஆகுபெயராய் முடிபுனைவிழாவை யுணர்த்திற்று. முடி கோளாகி வந்ததாலும் குறையில்லை; இப்பெரிய துன்பத்தையும் பொறுத்துக்கொண்டு வாழ விரும்பி மாளாது இருக்கின்றோமே அதுதான் குறை என்பார், 'மாளாத நம்மின் மனம் வலியார் ஆர்' என்று தம்மையே பழித்துரைப்பார் ஆயினர் என்க.

(103)

1798. ஆதி யரச னருங்கே கயன்மகண்மேற்
காதன் முதிரக் கருத்தழிந்தா ஞமென்பார்
சீதை மணவாளன் றன்னேடுந் தீக்கானம்
போது மதுவன்றேற் புகுது மெரியென்பார்.

'ஆதி அரசன், அருங் கேகயன் மகள் மேல்
காதல் முதிரக், கருத்து அழிந்தான் ஆம்' என்பார்;
'சீதை மணவாளன் தன்னேடும் தீக்கானம்
போதும்; அது அன்றேல் புகுதும் எரி' என்பார்.

பொ :—'பழைய வேந்தனுகிய தயரதன் அருமையான அழகை யுடைய கைகேயியின் மேல் காதல் முதிர்ந்துபோனமையால் கருத்து அழிந்துவிட்டான் என்று கூறுவார் சிலர்; சீதையின் கணவனுகிய இராமனேடு கொடிய கானத்திற்குப் போவோம்; (அவ்வருளுடைய இராமன் உடன் அழைத்துச் செல்ல மறுத்தலால் அது இயலாதாயின்) தீயில் புகுந்து மாய்வோம்' என்பார் சிலர்.

கு :—சொல்லெச்சங்களாய் வேண்டும் சொற்கள் வருவிக்கப் பட்டன. இராமனுக்கு முடிசூட்ட முடிவு செய்தமையால் புதிய அர சன் அவ்விராமனே என்பது பெறப்பட்டமையால் தயரதனே, 'ஆதி அரசன்' என்ருர். இனி முதுமையுடைய அரசன் என்று பொருள் கொண்டு அம்முதுமையிலும் காதல் முதிரப் பெற்றமை வியப்பு என் பதை விளக்கியவாருகவும் கொள்ளலாம். 'காமமில்லை யெனிற் கடுங் கேடெனும் நாமமில்லை' என முன் கூறியதும் காண்க. இதற்கு முன் பேசியவர்கள் எல்லாம் அரசன் ஆணைக்கு அஞ்சி மண் செய்த பாவம் என் ருற்போல வேறு வேறு கூறினராகத் துணிவுடைய மக்கள் இப் பாடலில் உண்மையைக் கூறினர்கள் என்க. இதனல் மன்னன் தவற்றையும் எடுத்துரைக்கும் பேச்சுரிமையை அயோத்தி நகரத்து மக்கள் பெற்றிருந்தனர் என்பது பெற்ரும். அறந்தெரி திகிரிக்கு வழியடையாகும் கழி காமம் தயரதன் பால் இருத்தலின் இனி அறநெறி இங்கு இல்லை ஆயிற்று; ஆகவே நாம் எல்லாம் நல்லரசனுகிய இராம னேடு காடுபுகுவோம். அதற்கு அவன் அருளுள்ளம் உடன்படவில்லை யாயின் எரிபுகுவோம் என்ருர். அன்புமிக்க இராமனைப் பிரிந்திருப்ப தைக் காட்டிலும் தீப்புகுதல் நன்று என்பது அவரெண்ணம். 'பசைந் தாரிற்றீர்தலிற் றீப்புகுதல் நன்று' (நான்மணிக். 13) என்பது காண்க. அம்மையும் அப்பனுமாய்த் தம்மை அருளொடு காத்தற்குரியவன் என்பது புலப்பட, 'சீதை மணவாளன்' என்ருர். (104)

**1799.** கையா னிலந்தடவிக்
கண்ணீர் மெழுகுவார்
உய்யாள்பொற் கோசலையென்
றோதுவார் வெய்துயிர்ப்பார்
ஐயா விளங்கோவே
யாற்றுதியோ நீயென்பார்
நெய்யா ரழலுற்ற
துற்றாரந் நீணகரார்.

கையால் நிலம் தடவிக்
கண்ணீர் மெழுகுவார் ;
'உய்யாள் பொன் கோசலை' என்று
ஓதுவார், வெய்துயிர்ப்பார் ;
'ஐயா ! இளங்கோவே !
ஆற்றுதியோ நீ ?' என்பார் :
நெய் ஆர் அழல் உற்றது
உற்றார் அந் நீள் நகரார்.

பொ :—(கண் போன்ற இராமன் காடுபுகுவான் என்னும் துன்பத்தால் கண்மயங்கிக்) கையால் நிலத்தைத் தடவிக் கண்ணீரால் மெழுகுவார்; 'இந்தத் துன்பத்தைப் பொறுத்துக் கொண்டு தங்கமான கோசலை பிழைத்திருக்கமாட்டாள்' என்று கூறுவார்; வெப்பமாகப் பெருமூச்சுவிடுவார் ; ஐயனே ! இளவரசே ! இராமன் வனம்புகுவதைக் கண்டு நீ பொறுத்திருப்பாயோ? என்று கூறுவார்; அந்த அயோத்தியாகிய நீண்ட நகரத்திலுள்ள மக்களெல்லாம் நெய்பெய்து வளர்த்த அரிய நெருப்பில் வீழ்ந்தாற்போன்ற துன்பத்தை அடைந்தார்கள்.

கு :—இராமனைக் கண்ணாக எண்ணியிருந்தவர்கள் அவன் பிரிவான் என்பதறிந்தவுடன் துன்பத்தால் கண்ணிருண்டு வழியறியாது கையால் நிலந்தடவவேண்டியவர்களாயினர். நிலம் தடவுங்கால் கண்ணீர் சொரிதலால் மெழுகுவார்போல் தோன்றலின், 'கண்ணீர் மெழுகுவார்' என்றார். "மெழுகு மாப்பி கண் கலுழ்நீரானே" (புறநா-249–14) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். இராமனை யீன்ற வயிறுடையவளாதலின் தன் மகன் பிரிவால் உயிரிழப்பது உறுதி என்ற எண்ணத்தால் 'உய்யாள் கோசலை' என்றனர். உலகுக்கெல்லாம் தாயாய் அன்பு செய்யும் கோசலையின் வருத்தத்தைக் கற்பனை செய்துகொண்டு வெய்துயிர்ப்பாராயினர் என்க. இளங்கோ என்றது இலக்குவனை. நெய்குழலுடன் பிரியாது செல்லும் இழைபோல இராமனுடன் இலக்குவன் பிரியாதுசெல்லுமியல்பினனாகலின்,

'ஆற்றுதியோ' என அவ்விலக்குவனை எதிர்பெய்துகொண்டு ஏங்கு வாராயினர். அம்மக்கள் உறும் துன்பம், எரியும் நெருப்பில் புகுந்தவர் படும் துன்பம் போலும் என்பது கருத்து. கனன்று எரியும் அழல் என்பது தோன்ற, 'நெய்யாரழல்' என்றார். மேல் 'புகுதும் எரி' என்றவர்கள் எரிபுகுமுன் எரி புகுந்தாற் போன்ற துன்பம் அடைந்தார்கள் என்பதை இங்கு விளக்கினர். (105)

**1800.** தள்ளூறு வேறில்லை
தன்மகற்குப் பார்கொள்வான்
எள்ளூ றியகரும
நேர்ந்தா ளிவளென்பார்
கள்ளூறு செவ்வாய்க்
கணிகைகாண் கைகேசி
உள்ளூறு காத
லிலள்போலென் றுள்ளழிந்தார்.

'தள் ஊறு வேறு இல்லை;
தன் மகற்குப் பார் கொள்வான்
எள் ஊறிய கருமம்
நேர்ந்தாள் இவள்' என்பார்;
'கள் ஊறு செவ்வாய்க்
கணிகைகாண் கைகேசி,
உள் ஊறு காதல்
இலள் போல்;' என்று உள் அழிந்தார்.

பொ :—'(இராமன் முடிசூடுதற்குத்) தடையாக உற்றது வேறில்லை; தன் மகனுகிய பரதனுக்கு அரசு பெறல் வேண்டிப் பழித்தல் மிக்க தீக்கருமத்தைச் செய்ய இவள் இசைந்தாள்' என்பார் சிலர். கைகேயி தயரதன் பால் 'உள்ளத்தொடு பொருந்திய காதல் இல்லாதவள்; ஆதலால் கள்ளைச் சுரக்கின்ற சிவந்த வாயினையுடைய வேசியே காண்' என்று சொல்லி மனம் இரங்குவாராயினர் சிலர்.

கு :—எள்ளூறிய கருமம் என்பது, இறந்தார்க்குச் செய்யும் நீர்க்கடன் என்னும் பொருளும் தோன்ற நின்றது. அது எள்ளொடு செய்யப்படுவதாகலின் அப்பெயரால் கூறினர். நேர்தல்–இசைதல். தெளிவுபற்றி, 'நேர்ந்தாள்' என இறந்தகாலத்தால் கூறினர். இவ்வாறு தன் கணவன் வாழ்விழப்பதையும் நினையாத மனநிலை கைகேயிக்கு இருந்தாலன்றி இராமனைக் காடு புகுத்தற்குத் துணியாள்

ஆதலின், உள்ளூறு காதல் இலள் என்றும், அது இல்லாமையால், 'கணிகைகாண்' என்றும் கூறி இகழ்ந்தார்கள். உண்டாரை மயக்கு தலின் 'கள்ளூறு செவ்வாய்' என்றார். கணிகையர், 'அன்பின் விழை யார் பொருள்விழையு மாய்தொடியார்' (குறள்-911) எனப்படு தலின் அவர்க்கு உள்ளூறு காதல் இன்மை பெறப்படும். "பொன் விலைப் பாவையர் மனமும் போல் பசையு மற்றதே" (356)என்றார் முன்னும். போல், அசை. (106)

**1801.** நின்று தவமியற்றித் தான்றீர நேர்ந்ததோ
அன்றி யுலகத்து ளாருயிராய் வாழ்வாரைக்
கொன்று களையக் குறித்த பொருளதுவோ
நன்று வரங்கொடுத்த நாயகற்கு நன்றென்பார்.

'நின்று தவம் இயற்றித் தான் தீர நேர்ந்ததோ ?
அன்றி உலகத்துள் ஆருயிராய் வாழ்வாரைக்
கொன்று களையக் குறித்த பொருளதுவோ ?
நன்று ! வரம் கொடுத்த நாயகற்கு நன்று ' என்பார்.

பொ :—'துறவறத்தில் நிலைபெற்றுத் தவம் செய்து தான் மட்டும் இவ்வுலகைவிட்டு நீங்கிவிட இசைந்ததோ ? அல்லது இவ்வுலகத் துள் தனக்கு அரிய உயிராய் வாழ்கின்ற மக்களையெல்லாம் கொன்று ஒழிக்க எண்ணிய எண்ணமோ ? (கைகேயிக்கு) வரம் கொடுத்த தசரத மன்னன் குறிக்கோள் நன்று! நன்று !' என்பார்.

கு :—தயரதன் வரங்கொடுத்தமையால் தனக்கு மட்டும் கேடு சூழ்ந்து கொள்ளவில்லை; உலகிற்கே கேடுசூழ்ந்தான் என்பது கருத்து. தனக்கு மட்டும் தீங்கிழைத்துக்கொண்டால் அதைப்பற்றிப் பிறர் பேச உரிமையில்லை என்று தள்ளிவிடலாம்; உலகிற்கே தீங்கு பயக்கும்போது அதைச் சிறு செயல் எனத் தள்ள இயலுமா ? என்பது உட்கோள். "சென்று நின்று வாழ் உயிரெலா முறைவதோ ருடம்பு மாயினன்" (177) எனவும், "வைய மன்னுயிராக வம்மன்னுயிர், உய்யத் தாங்கு முடலன்ன மன்னன்" (1512) எனவும் கூறியதற்கேற்ப இங்கும் உலகமக்களை, "ஆருயிராய் வாழ்வார்" என்றார். எல்லா உயிரையும் தன்னுயிர்போல் மன்னன் கருதினும் நமக்கு மன் னன் இவன் என்ற உணர்வு நிகழ்வது மக்கட்கேயாதலின், 'ஆருயி ராய் வாழ்வாரை' என உயர் திணைவாய்பாட்டாற் கூறினர். இராமன் காடுபுக வரங்கொடுத்தமையால் அவனை உயிராக உடைய தயரதன் இறத்தல் போலவே உண்ணும் நீரினும் உயிரினும் அவனையே யுவக் கின்ற மக்களெல்லாம் இறப்பர் என்பது கருத்து. இனி, உடலாயிருக்

கும் மன்னன் இறக்கவே உயிராயிருக்கும் மக்களும் மறைவர் என்றும் கொள்ளலாம். இவ்வரத்தின் விளைவு இங்ஙனம் ஆம் என்றுணராத மன்னன் செயல் இகழத்தக்கது என்பார், 'நன்று நன்று' என்று குறிப்புச் சொல்லால் நவின்றார். (107)

1802. பெற்றுடைய மண்ணவளுக்
ஈந்து பிறந்துலகம்
முற்றுடைய கோவைப்
பிரியாது மொய்த்தீண்டி
உற்றுறைதும் யாரு
முறையவே சின்னாளில்
புற்றுடைய காடெல்லா
நாடாகிப் போமென்பார்.

'பெற்று உடைய மண் அவளுக்கு
ஈந்து, பிறந்து உலகம்
முற்று உடைய கோவைப்
பிரியாது, மொய்த்து ஈண்டி
உற்று உறைதும்; யாரும்
உறையவே, சில் நாளில்,
புற்று உடைய காடு எல்லாம்
நாடு ஆகிப் போம்' என்பார்.

பொ :—'வரத்தால் பெற்றுள்ள மண்ணை அக்கைகேயிக்கே விடுத்து விட்டுத் தயரதனுக்குத் தலைப்பிள்ளையாய்ப் பிறந்தமையால் உலக முழுமைக்கும் உரிமையுடைய இராமனைப் பிரியாமல் அவனைச் சூழ்ந்து நெருங்கி நாமும் வனத்தையடைந்து தங்குவோம்; நாமெல்லாம் தங்குதலால் சில நாளில் புற்றினையுடைய காடு முழுதும் நாடாகிப் போகும்' என்பார் சிலர்.

கு :—கைகேயி வரத்தால் பெற்றது மண்ணேயன்றி அதில் வாழும் மக்கள் அல்லர் என மக்களின் உரிமையை விளக்கியவாறு. இக்கருத்தானே நாடு என்னாது, 'மண்' என்றார். அந்த மண் தானும் வரத்தால் பெற்றதேயன்றி உரிமையால் பெற்றதன்று என்பது தோன்ற, 'பெற்றுடையமண்' என்றார். இராமனுக்கு உலகம் பிறப்புரிமை என்பது தோன்ற, 'பிறந்துலக முற்றுடைய கோவை' என்றார். "முழுவதே பிறந்துலகுடைய மொய்ம்பினேன்" (1882) 'பிறந்து நீயுடைப் பிரிவில் தொல்பதம்' (கிளைகண்டு-101) என்பர் பின்னர். கைகேயி

யின் தீய எண்ணம் நிறைவேருது பாழ்பட எளிய வழியை நாடி இங்ஙனம் இராமனைப் பிரியாது காட்டில் தங்கிக் காட்டை நாடாக மாற்றலாம் என முடிவுசெய்தனர். 'இராமன் போன இடம் அயோத்தி' என்ற பழமொழி இக்கருத்தான் எழுந்ததேயாம். காட்டின் கொடுமை தோன்ற, 'புற்றுடைய காடு' என்ருர். மக்கள் தங்கத்தகாத இடம் என்றவாறு. காடு நாடாகும் எனவே கைகேயி பெற்ற நாடு காடாகும் என்பதும் குறிப்பால் உணர்த்தியவாறு. (108)

**1803.** என்னே நிருப
ணியற்கை யிருந்தவா
தன்னே ரிலாத
தலைமகற்குத் தாரணியை
முன்னே கொடுத்து
முறைதிறம்பத் தம்பிக்குப்
பின்னே கொடுத்தாற்
பிழையாதோ மெய்யென்பார்.

'என்னே நிருபன் இயற்கை இருந்தவா!
தன் நேர் இலாத தலைமகற்குத் தாரணியை
முன்னே கொடுத்து, முறை திறம்பத் தம்பிக்குப்
பின்னே கொடுத்தால் பிழையாதோ மெய்?' என்பார்.

பொ :—'அரசன் இயல்பு இருந்தவாறு என்னே! தனக்கு நிகர் இல்லாத பெருங்குணமுடைய தலைப்பிள்ளையாகிய இராமனுக்கு அரசை முன்னே கொடுத்துவிட்டு, 'மூத்தவற்கு உரித்து அரசு' என்னும் முறை மாறுபட அவன்பின்வந்த தம்பிக்குப் பின்னர் அவ்வரசையே கொடுத்தால் மெய்ம்மைதவறியது ஆகாதோ?' என்பார் சிலர்.

கு :—வரம் கொடுத்திருந்தாலும் உலகிற்குக் கேடு சூழ்வதாக உள்ளமையால் அவ்வரம் கொடுக்க வியலாது எனத் தயரதன் கூறலாகாமைக்குக் காரணம், 'வாய்மை பிறழும்' என்ற நோக்கமேயாகும் என்பதைக் கேள்வியுற்றவர்கள், முன் கொடுத்த வரத்தைக் கொடேன் என்பது வாய்மைக்கு இழுக்காமாயின், முன்னர் இராமனுக்கு அரசைக் கொடுத்துவிட்டுப் பின்னர் அதனை மாற்றிப் பரதனுக்குக் கொடுப்பதால் வாய்மை தவறி விடாதோ? என்று வினவித் தயரதன் இயல்பை எள்ளியவாறு. வரத்தை மறுத்தாலும் கொடுத்தாலும் வாய்மை வழுப்படுதலின் உலக நன்மை நோக்கி மறுத்தேயிருக்கலாம் என்பது கருத்து.

தனக்குவமையில்லாதான் என்று வள்ளுவர் கூறியதை இராமனுக்கு ஏற்றித் 'தன்னேரிலாத தலைமகன்' என்றார்; தனக்குத் தானே உவமமாயினல்லது பிறர் உவமமாகார் என்றவாறு. (109)

1804. கோதை வரிவிற் குமரற் கொடுத்த நில
மாதை யொருவர் புணர்வராம் வஞ்சித்த
பேதை சிறுவனைப் பின்பார்த்து நிற்குமே
சீதை பிரியினுந் தீராத் திருவென்பார்.

'கோதை வரி வில் குமரற் கொடுத்த நில
மாதை ஒருவர் புணர்வராம்? வஞ்சித்த
பேதை சிறுவனைப் பின் பார்த்து நிற்குமே
சீதை பிரியினும் தீராத் திரு?' என்பார்.

பொ :—'நாணோடுங் கூடிக் கட்டமைந்த வில்லை யேந்திய இராமனுக்குக் கொடுத்துவிட்ட நிலமகளை வேறும் ஒருவர் தனக்குரியளாய்க் கருதி அடைவாராம்! சீதை பிரிந்தாலும் இராமனை விட்டு நீங்காத சீதேவி வஞ்சனையால் அரசு பெற்ற பேதையாகிய கைகேயியின் மகனைப் பின்பார்த்து நிற்குமோ?' என்று கூறுவார்.

கு :—பூமியையும் அரசச் செல்வத்தையும் பூதேவி சீதேவியாகிய பெண்டிராக் கொண்டு கூறுவது மரபு ஆதலின் அவ்வுருவகத்திற்கேற்ப இங்குக் கூறுகின்றனர். இராமனுக்கு உரிமையாக அரசைக் கொடுக்க மந்திரிமாரும் மன்னரும் முனிவரும் அறிய முடிவு செய்தமையால் நிலம் இராமனுக்கு முடிசூடாமுன்னரே உரிமையுடையதாயிற்று என்பது கருத்து. திலகவதியார்க்குத் திருமணம் நிகழவில்லையாயினும் பெற்றோர் கொடுக்க உறுதிசெய்திருந்த தலைவன் இறந்தபின் கைம்மைக் கோலம் தாங்கினமை இங்கு நினைக்கத்தகும். இராமனுக்கு உரிமையாக்கிய நிலமகளைப் பரதன் அடைவது முறையன்று என்பதை விளக்கியவாறு. தன் கருத்தை முன்னரே புலப்படுத்தாது வரம் என்று கேட்டு உறுதிசெய்துகொண்டு பின்னர்ப் புலப்படுத்தினமையால் கைகேயியை 'வஞ்சித்த பேதை' என்றும், பேதையின் மகன் ஆதலாலும் இராமனுக்குச் சிறியவன் ஆதலாலும் பரதனைச் 'சிறுவன்' என்றும் கூறினர். நிலமாதைப் பரதன் அடைவது முறையாகாது; சீதேவி பரதன் அருளை எதிர்பார்த்துக் கொண்டு தங்கி யிருக்கமாட்டாள் எனப் பரதனுக்குப் பூமியும் செல்வமும் பொருந்தா என்பதைப் புலப்படுத்தியவாறு. கைகேயியையும் தயரதனையும் மேல் இகழ்ந்தது போலவே இச் செய்யுளால் பரதனையும் மக்கள் இகழ்ந்தவாறு. அழுக்காற்றால் வஞ்சித்த பேதையும் சிறுவனும் உள்ள இடத்தில் சீதேவி தங்கமாட்டாள்

என்றது. "அவ்வித் தழுக்காறுடையானைச் செய்யவள் தவ்வையைக் காட்டிவிடும்" (குறள்-167) என்றது நோக்கி. சீதேவி நீங்குவாள் எனவே மூதேவி அங்குத் தங்குவாள் என்பதும் குறிப்பிட்டவாறு. நிற்குமே என்ற வினு மறுதலையையுணர்த்திற்று. (110)

**1805.** உந்தாது நெய்வார்த் துதவாது காலெறிய
நந்தா விளக்கி னடுங்குகின்ற நங்கைமார்
செந்தா மரைத் தடங்கட் செவ்வி யருணோக்கம்
அந்தோ பிரிதுமோ வாவிதியே யோவென்பார்.

உந்தாது, நெய் வார்த்து உதவாது, கால் எறிய,
நந்தா விளக்கின் நடுங்குகின்ற நங்கைமார்,
'செந் தாமரைத் தடம் கண் செவ்வி அருள் நோக்கம்,
அந்தோ! பிரிதுமோ? ஆ! விதியே! ஓ!' என்பார்.

பொ:—தூண்டாமலும் நெய் பெய்து உதவாமலும் விடப்பட்டுப் பின் காற்று வீசுதலால் நடுங்குகின்ற நந்தா விளக்குப்போல நடுங்குகின்ற பெண்டிர், "இராமபிரானுடைய செந்தாமரை மலர்போன்ற பெரிய கண்களின் அழகிய அருள் நோக்கத்தை, ஐயோ! நாம் பிரிந்து விடப் போகின்ருேமோ? ஆ விதியே! ஓ!' என்று புலம்புவாராயினர்.

கு:—உந்துதல் - தூண்டுதல். விளக்கு நன்ருய் எரிதற்கு நெய்யும் தூண்டுதலும் காற்றில்லாமையும் வேண்டும்; இவை மூன்றும் இல்லையாயின் விளக்கு நடுங்கி ஒளிமழுங்கி அவியும். அவ்விளக்குப் போன்று மகளிரும் நடுங்கி வலி அடங்கிச் சோர்ந்தனர் என்க. 'மனைக்கு விளக்கம் மடவார்' ஆதலின் அவர்க்கு விளக்கை உவமை கூறினர். நந்தா விளக்கு-அவியாமல் எரிகின்ற விளக்கு. வருந்தாதீர் என ஆறுதல் கூறுவாரும், இராமன் பிரியான் என்ற நல்ல சொல்லைச் சொல்வாரும் இன்றி இராமன் பிரிவுத் துயரால் நடுங்குகின்ற மகளிர்க்கு உந்தாது நெய்வார்த்துதவாது காலெறிய நடுங்குகின்ற நந்தா விளக்கினை உவமை கூறியது பொருத்தமாதல் காண்க. இராமபிரானுடைய அருள் நோக்கத்தில் ஈடுபாடுடைய மகளிர் அவன் பிரிவிற்கு வருந்துவதைக் காட்டிலும் அவன் அருள் நோக்கத்தைப் பிரிய நேர்கின்றதே என்பதில் பெருவருத்தம் கொண்டனர் என்க. அவன் அருள்நோக்கத்தைக் கண்டு மகிழும் இவர் தகைமை மிகச் சீரியதாதல் காண்க. இராமனைப் பிரியும் பெருந்துயரால் பிற பிற கூறிய மக்களினும், இப்பெண்டிர் உயர்ந்த பண்பினர் என்பது தோன்ற உரையாடுபவர்களில் இறுதியாக இப்பெண்டிரைக் கூறியுள்ளார். அருள் நோக்கத்தில் பற்றுள்ள இவர்கள் உள்ளமும் அருள்நோக்கமுடையதாய் " நம் கண்

ணன் கண்ணல்ல தில்லையோர் கண்ணே" (திருவாய்மொழி. 2-2-1) என்று தெளிந்த ஞானமுடையதாய் விளங்குகின்றதென்பது உணரலாம். அந்தோ, ஆ, ஓ என்பன இரங்கற் குறிப்புணர்த்தும் இடைச்சொற்கள். அந்நோக்கத்தைப் பிரிதற்கு அவர் தம் விதியே காரணமாதலறிந்து, அதை, 'ஆ விதியே' என விளித்து நீ ஒவு (நீங்கு) என்று கூறியதாகவும் கொள்ளலாம். செவ்வி – அழகு. பிரிதும் – எதிர்கால உளப்பாட்டுத் தன்மைப்பன்மைவினைமுற்று. (111)

## இலக்குவன் சீற்றநிலை (1806—1814)

**1806.** கேட்டா னிளையோன்
★ கிளர்ஞாலம் வரத்தி னாலே
மீட்டா ளளித்தாள்
வனந்தம்முனை வெம்மை முற்றித்
தீட்டாத வேற்கட்
சிறுதாயென யாவ ராலும்
மூட்டாத காலக்
கடைத்தீயென மூண்டெ ழுந்தான்.

கேட்டான் இளையோன்;
'கிளர் ஞாலம் வரத்தினாலே
மீட்டாள்; அளித்தாள்
வனம் தம்முனை; வெம்மை முற்றித்
தீட்டாத வேல் கண்
சிறு தாய்' என, யாவராலும
மூட்டாத காலக்
கடைத்தீ என மூண்டு எழுந்தான்.

பொ:—இலக்குவன், 'கொல்லன் உலையின் வெம்மை நிரம்பித் தீட்டப்படாத வேல் போன்ற கண்களையுடைய சிற்றன்னை, இராமனுக்குரியதாய விளக்கமுடைய நாட்டை, தான் கேட்ட வரத்தினாலே தன் மகன் பரதனுக்கு உரியதாக மீட்டாள்; தம் முன்னவனாகிய இராமனுக்குக் காட்டைக் கொடுத்தாள்' எனக் கேள்வியுற்றான்; யாராலும் மூட்டப்படாததாய் ஊழிக்கடையில் மூண்டெழும் வடவைத் தீப்போலச் சினம் மூண்டு எழுந்தான்.

கு:—கேட்டான்-முற்றெச்சம். கிளர்ஞாலம், இராமன் முடிபுனைவான் என மனம் உவந்த நாடு எனலுமாம். 'வரத்தினாலே அளித்

தாள்' என்றும் இயைக்க. தம்முன்னுக்கு என வேற்றுமை மயக்க மாக்குக. அளித்தல்-அருள் உள்ளத்தோடு கொடுத்தல். இங்கு அளித்தாள் வனம் என்றது, எள்ளல் குறிப்புணர்த்திற்று. வேலினைத் தீட்டுங்கால் கொல்லன் உலைக் களத்தில் நெருப்பிடை வைத்து வெதுப்பித் தீட்டும் இயல்பு தோன்ற 'வெம்மை முற்றித் தீட்டாத' என்றார். இயல்பாகவே கூரிய நோக்கம் கொண்ட கண் என்பது பொருள். 'கடையாமே கூர்த்த கருநெடுங்கண்' (தண்டி) என்பதும் காண்க. தீட்டாத வேற்கண், யாவராலு மூட்டாத கடைத்தீ என்பன இயல்பு விபாவனை யணி. காலக்கடை-ஊழியிறுதி. பேரூழியிறுதியில் வடவைக்கனல் கனன்று எழுந்து உலகையழிக்கும் என்றல் புராணமரபு. சினம் மூண்டு எழுந்தான் என ஒரு சொல் வருவிக்க. 'சினமென்னும் சேர்ந்தாரைக் கொல்லி' (குறள்–306) எனச் சினத்தை நெருப்பாக உருவகம் செய்திருத்தலும் காண்க. சிறு தாய் - அற்பத்தன்மையுள்ள தாய் என வேறுமொரு பொருள் தோற்றி நிற்றல் காண்க. இச்செய்யுளில் இலக்குவன் சினத்தை யுணர்த்தற் கேற்ப வல்லெழுத்துக்கள் பயின்று உணர்வைத் தூண்டுதல் காண்க. பயனிலை முன்னும் எழுவாய் பின்னுமாக, 'கேட்டானிளையோன்' என நிறுத்திச் செயப்படு பொருளை இறுதிக்கண் வைத்துப் படிப்போருள் ளத்தில் புத்துணர்ச்சியை யெழுப்புகின்ற முறை சால இனிதாக வுள்ளது. (112)

**1807.** கண்ணிற் கடைத்தீயுக
நெற்றியிற் கற்றை நாற
விண்ணிற் சுடருஞ்
சுடர்வீய மெய்ந்நீர் விரிப்ப
உண்ணிற்கு முயிர்ப்பெனு
மூதை பிறக்க நின்ற
அண்ணற் பெரியோன்றன
தாதியின் மூர்த்தி யொத்தான்.

கண்ணில் கடைத் தீ உக,
நெற்றியில் கற்றை நாற,
விண்ணில் சுடரும்
சுடர் வீய, மெய் நீர் விரிப்ப,
உள் நிற்கும் உயிர்ப்பு எனும்
ஊதை பிறக்க, நின்ற
அண்ணல் பெரியோன் தனது
ஆதியின் மூர்த்தி ஒத்தான்.

பொ :—கண்ணில் ஊழித்தீப்போன்ற தீப்பொறிகள் சிந்தவும், புருவமயிர்க்கற்றை நெற்றியில் சென்று விளங்கவும், விண்ணில் (விளங்கும்) சூரியனும் ஒழியவும், உடம்பு வியர்நீராகிய வெள்ளத்தை மிகுவிக்கவும், உடம்பினுள் நிற்கின்ற உயிர்ப்பு என்கின்ற சண்டமாருதம் தோன்றவும் பெருமையுடைய பெரியோனாகிய இலக்குவன் தன்னுடைய பழைய உருவமாகிய ஆதிசேடனை ஒப்பவன் ஆனான்.

கு :—இலக்குவன் ஆதிசேடன் அவதாரமாதலின் இங்குச் சினம் பொங்கு நிலையில் அவ்வாதிசேடன் போலத் தோன்றினான் என்றார். "வளையொடு திகிரியும் வடவை தீதர, விளைதரு கடுவுடை விரிகொள் பாயலும் இளைஞர்கள் என அடி பரவ" (பால. 202) என்றதால் ஆதிசேடனே இலக்குவன் ஆனான் என்பது உணரலாம். சினம் பொங்குங்கால் கட்புருவம் மேலெழுந்து நெற்றியின் உச்சியை யடைந்தது என்பார், 'நெற்றியிற் கற்றை நாற' என்றார். "கொழுங்கடைப் புருவம் நெற்றி முற்றச் சென்றன" (பால. 330) என்றது நினைக்க. அண்ணல்–பெருமை. இராமனுக்கு இளையனாய இலக்குவனைப் பெரியோன் என்றது, அவன் பெருமை நோக்கியே என்பது புலப்பட, 'அண்ணற் பெரியோன்' என்றார். ஊதை – காற்று. உக, நாற, வீய, விரிப்ப, பிறக்க என்ற செயவென் எச்சங்கள் காரியப் பொருள. (113)

**1808.** சிங்கக் குருளைக்கிடு
தீஞ்சுவை யூனை நாயின்
வெங்கட் சிறுகுட்டனை
யூட்ட விரும்பி னாளால்
நங்கைக் கறிவின்றிற
நன்றிது நன்றி தென்னாக்
கங்கைக் கிறைவன்
கடகக்கை புடைத்து நக்கான்.

சிங்கக் குருளைக்கு இடு
தீஞ் சுவை ஊனை நாயின்
வெங்கண் சிறு குட்டனை
ஊட்ட விரும்பினாளால்!

நங்கைக்கு அறிவின் திறம்
　　நன்று இது ! நன்று இது !' என்னக்
கங்கைக்கு இறைவன்
　　கடகக்கை புடைத்து நக்கான்.

பொ :—சிங்கக்குட்டிக்கு இடுதற்குரிய இனிய சுவையுடைய ஊனை நாயின் கொடுமையான கண்ணையுடைய இளங்குட்டிக்கு ஊட்ட விரும்பினுள்? நங்கைக்கு அறிவுத்திறன் நன்ருக இருக்கின்றது! நன்ருக இருக்கின்றது ! என்று கங்கைக்குத் தலைவனுகிய இலக்குவன் கடகம் அணிந்த கைகளைத் தட்டிச் சிரித்தான்.

கு :—தீஞ்சுவை யூன்—காயங்களான் இனிய சுவையுடையதாக்கிய ஊன். சிறுகுட்டன்—சிறுகுட்டி. அடுக்கு வெகுளி மிகுதியைப் புலப் படுத்தியது. இது நன்று என மாற்றுக. கங்கையினைக் கொணர்ந்த பகிரதன் வழித்தோன்றலாதலின் இலக்குவனைக் கங்கைக்கு இறைவன் என்ருர். பிறர்மடம் கண்டு பிறந்தது நகை. (114)

**1809.** சுற்ருர்ந்த கச்சிற்
　　சுரிகைபுடை தோன்ற வார்த்து
விற்ருங்கி வாளிப்
　　பெரும்புட்டில் புறத்து வீக்கிப்
பற்ருர்ந்த செம்பொற்
　　கவசம் பனிமேரு வாங்கோர்
புற்ருமென வோங்கிய
　　தோளொடு மார்பு போர்க்க.

சுற்று ஆர்ந்த கச்சில்
　　சுரிகை புடை தோன்ற ஆர்த்து,
வில் தாங்கி, வாளிப்
　　பெரும் புட்டில் புறத்து வீக்கிப்,
பற்று ஆர்ந்த செம் பொன்
　　கவசம், பனி மேரு ஆங்கு ஓர்
புற்று ஆம் என ஓங்கிய
　　தோளொடு மார்பு போர்க்க.

பொ :—வளைத்துக் கட்டப்பட்ட அரைப்பட்டிகையில் உடைவாளி னைப் பக்கத்தே தோன்றுமாறு கட்டி, வில்லை இடதுகையில் தாங்கி, அம்புகளையுடைய பெரிய அம்பருத் தூணியை முதுகின் புறத்தில்

கட்டி, பொடிவைத்துச் செய்த செம்மையான பொன்னலாய கவசம், பனிபடர்ந்த மேருமலை ஒரு புற்று என்று சொல்லுமாறு மிகவுயர்ந்துள்ள தோளையும் மார்பையும் மறைக்கவும்.

கு :—வாளி-அம்பு. அம்புகளின் பன்மைக் கேற்பப் புட்டிலும் பெரிதாக அமைந்தது. பற்று-பற்ருசு; பொடி. அணிகலன் செய்வோர் ஒன்ருேடொன்று இணைக்குங்கால் பொடிவைத்தே சேர்ப்பர். தோளின் பெருமையால் மேருமலையும் சிறிய புற்றுப்போல் தோன்றும் என்றது உயர்வுநவிற்சியணி. "அண்டங்களெல்லா மணுவாக வணுக்க ளெல்லாம் அண்டங்களாகப் பெரிதாய்ச் சிறிதாயினனும்" (பரஞ் - திருவிளை. கடவுள்-6) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். கவசம் அணிந்தான் என்பது தோன்றத் "தோளொடு மார்பு போர்க்க" என்ருர். போர்த்தல் மறைத்தல். இச் செய்யுள் முதல் 1812-ஆம் செய்யுள் முடிய ஒருதொடர். ஆர்த்து வீக்கி, போர்க்க, ஆர்ப்ப, முழங்க, ஒதுங்க (நின்று) என்ருன் என முடிக்க. (115)

**1810.** அடியிற் சுடர்பொற்
கழலார்கலி நாண வார்ப்பப்
பொடியிற் றடவுஞ்
சிறுநாண்பெரும் பூச லோசை
இடியிற் ருெடரக்
கடலேழு மடுத்திஞ் ஞால
முடிவிற் குமுறும்மழை
மும்மையின் மேன்மு ழங்க.

அடியில் சுடர் பொன்
கழல் ஆர்கலி நாண ஆர்ப்பப்
பொடியில் தடவும்
சிறு நாண் பெரும் பூசல் ஓசை
இடியில் தொடரக்,
கடல் ஏழும் மடுத்து, இஞ் ஞாலம்
முடிவில் குமுறும் மழை
மும்மையின் மேல் முழங்க.

பொ :—அடிமேல் கிடந்து ஒளி வீசுகின்ற வீரக்கழல், கடல் ஓசையும் நாணுமாறு மிகுதியாக ஆரவாரித்தலாலும், புழுதிகொண்டு தடவுகின்ற சிறிய வில்நாணில் எழுகின்ற பெரிய ஆரவாரமுள்ள ஓசை, இடிபோலத் தொடர்ந்து ஒலித்தலாலும், அவ்விரண்டு ஒலியும்

சேர்ந்து கடல் ஏழினையும் உண்டு இவ்வுலகம் முடிவுறும் ஊழியிறுதியில் குமுறுகின்ற மேகத்தின் மும்மடங்கு மிகுதியாக முழங்கா நிற்கவும்.

கு :—ஆர்கலி-நிறைந்த ஒலியையுடைய கடல். வில் நாணின் வழவழப்பு நீங்குமாறு புழுதிகொண்டு தடவும் பழக்கம் புலப்படப் 'பொடியிற்றடவும் சிறுநாண்' என்றார். சிறுநாண் பெரும்பூசல் என்ற வழி முரண்தொடை காண்க. 'ஆர்ப்பத், தொடர, இரண்டு ஒலியும் சேர்ந்து மும்மையின்மேன் முழங்க' என முடிக்க. பூசல்-ஆரவாரம். இடி தொடர்ந்து ஒலிக்குமாறு போல நாணொலி தொடர்ந்து ஒலி செய்தது என்க. மடுத்தல்-உண்ணுதல். நீரால் உலகம் அழியும் ஊழியிறுதியில் ஏழுமேகங்களும் ஏழுகடலையும் குடித்து இடித்துப் பெருந்தாரையாகப் பெய்து உலகை அழிக்கும் என்பது புராணமரபு. கழல் ஒலியும் நாணொலியும் சேர்ந்த பேரோசை ஊழியிறுதிமேகத்தினும் மிக்கதாயிற்று என்க. குமுறுதல்-பேரொலி செய்தல். மும்மை–மும்மடங்கு. (116)

**1811.** வானுந் நிலனும் முதலீறில் வரம்பில் பூதம்
மேனின்று கீழ்காறும் விரிந்தன வீழ்வ போலத்
தானுந்தன் றம்முனு மல்லது மும்மை ஞாலத்
தூனும் முயிரும் முடையார்க ளுளைந்தொ துங்க.

வானும் நிலனும் முதல் ஈறு இல் வரம்பு இல் பூதம்
மேல் நின்று கீழ்காறும் விரிந்தன வீழ்வ போலத்,
தானும், தன் தம்முனும் அல்லது, மும்மை ஞாலத்து
ஊனும் உயிரும் உடையார்கள் உளைந்து ஒதுங்க.

பொ .—மேலிருந்து கீழ்வரையில் விரிந்தனவாய் முதலினும் இறுதியினும் வானையும் நிலத்தையும் கொண்டுள்ள அளவுபடாத ஐம்பெரும் பூதங்களும், தம் நிலைமாறி வீழ்வன போலத் தோன்றுதலால், தானும் தன் அண்ணனும் அல்லது மூன்று உலகத்தினும் உடம்பும் உயிரும் சேரப்பெற்றவர்கள் எல்லாம் மனம் வருந்தி ஒதுங்கா நிற்கவும்.

கு :—ஐம் பெரும்பூதங்களில் முதலில் வானும் இறுதியில் நிலனும் இருத்தலின், 'வானும் நிலனும் முதலீறில் வரம்பில்பூதம்' என்றார். 'ஈற்றில்' என்பது ஓசைநோக்கி ஈறில் என விகாரமாயிற்று. ஐம்பூதங்களாவன: வான், வளி, தீ, நீர், மண் என்பன. முதலீறில் என்பதற்குத் 'தோற்ற வொடுக்கங்கள் இல்லாத' என்று பொருள் கொள்ளுதல், தோன்றி யொடுங்கும் பூதங்கட்கு ஏலாமை காண்க. முதலும் இறுதியும்

ஆகிய வானும் நிலனும் எண்ணியபின், 'முதல்' என்பதற்கு 'முதலாய' என்று பொருள் கோடலும் பொருந்தாமை யறிக. வரம்பின்மையாவது அளவிடப் படாமை. மேல்கூறிய வீரக்கழலின் விஞ்சிய ஒலியாலும், வில்நாணின் வல்லொலியாலும், பூதங்கள் ஐந்தும் தலைகீழாய் வீழ்வனபோலத் தோன்றின என்க. போல என்பதற்குப் பின், தோன்ற என ஒருசொல் வருவிக்க. அவ்வொலியால் மனமுளை யாதவர்கள் இராமனும் இலக்குவனுமே என்றது, அவர் கேட்டுப் பயிற்சியுடைமையால் என்க. தம்முன்-அண்ணன். மும்மை ஞாலம் - விண் மண் பாதலம் என்ற மூன்றுலகங்கள். மும்மை என்றது மூன்று என்னும் எண்ணுப் பொருளில் வந்தது; "தெரிமாண்டமிழ் மும்மைத் தென்னம் பொருப்பன்" (பரிபாடல்) என்புழிப் போல. உடையார்கள் என உயர்திணைமேல் வைத்து ஓதினர் சிறப்புப்பற்றி; ஏனையுயிர்களும் கொள்க. 'ஊன்' என்றது உடம்பினை. ஊனும் உயிருமுடையார்கள் என்றது, உடம்பொடு காணப்படும் எல்லா உயிர்களையுமேயாம். உளைதல் - மனம் வருந்தல். (117)

1812. புவிப்பாவை பரங்கெடப்
போரில்வந் தோரை யெல்லாம்
அவிப்பானு மவித்தவ
ராக்கையை யண்ட முற்றக்
குவிப்பானு மெனக்கொரு
கோவினைக் கொற்ற மௌலி
கவிப்பானு நின்றேனிது
காக்குநர் காமி னென்றான்.

புவிப்பாவை பரம் கெடப்,
போரில் வந்தோரை யெல்லாம்
அவிப்பானும் அவித்து அவர்
ஆக்கையை அண்டம் முற்றக்
குவிப்பானும், எனக்கு ஒரு
கோவினைக் கொற்ற மௌலி
கவிப்பானும், நின்றேன்; இது
காக்குநர் காமின்!' என்றான்.

பொ :—'என்னோடு போர் செய்ய வந்தவரையெல்லாம் பூமி தேவிக்குப் பாரம் குறையுமாறு கொல்லுதற்கும், கொன்று அவர்களுடைய உடம்பையெல்லாம் அண்ட முகடு முட்டுமாறு குவிப்பதற்கும், எனக்கு ஒப்பற்ற மன்னனாக விளங்குகின்ற இராமனுக்கு வெற்றி

முடியைக் கவிப்பதற்கும் துணிந்து நின்றேன்; இதைத் தடுக்க வல்லவர் தடுமின்' என்று கூறினன்.

கு:—பரம் - பாரம். அறநெறியில் நிற்கும் தன்னெடு போர்புரிவோர், இசை வேண்டாது, கடுங்கோலராய்க் கண்ணேட்டமிலராய்ச் சான்ருண்மை குன்றினவராதலின் அவர் பொறையை இரு நிலந்தான் தாங்காது நெளியும் என்னும் கருத்தால் "புவிப்பாவை பரம்" என்ருர். "சான்றவர் சான்ருண்மை குன்றின் இருநிலந்தான் தாங்காது மன்னே பொறை" (குறள் - 990) என்றது காண்க. அவித்தல் – கொல்லுதல். அண்ட முற்றக் குவித்தல்–அண்டத்தின் முகட்டை முட்டுமாறு குவித்தல்; இதனல் ஆக்கையின் மிகுதியும் குவியலின் பெருமையும் புலப்படுத்தியவாறு. இராமனைப் பிறர் எல்லாம் கோவாக ஏற்றுக் கொள்ளாவிடினும் எனக்குக் கோ அவனே என்பது தோன்ற 'எனக்கொரு கோவினை' என்ருன். எதிர்த்தவர்களைக் கொன்று குவித்துவிட்டேனும் இராமனுக்கு முடிசூட்ட வேண்டும் என்பது இலக்குவன் எண்ணம். மேல் வீரக்கழல் கட்டி வில்தாங்கி நாணெலி செய்ததெல்லாம் போர் விருப்பத்தை யறிவிப்பனவாதல் காண்க. இது என்றது இராமனுக்கு முடிசூட்டுதலை. (118)

**1813.** விண்ணாட்டவர் மண்ணவர்
விஞ்சையர் நாகர் மற்றும்
எண்ணாட்டவர் யாவரு
நிற்கவொர் மூவ ராகி
மண்ணாட்டுநர் காட்டுநர்
வீட்டுநர் வந்த போதும்
பெண்ணாட்ட மொட்டேனினிப்
பேருல கத்து ளென்ன.

'விண்ணாட்டவர், மண்ணவர்,
விஞ்சையர், நாகர் மற்றும்
எண் நாட்டவர், யாவரும்
நிற்க; ஓர் மூவர் ஆகி,
மண் நாட்டுநர், காட்டுநர்,
வீட்டுநர், வந்தபோதும்
பெண் நாட்டம் ஒட்டேன், இனிப்
பேருலகத்துள்' என்ன.

பொ :—‘ விண்ணுட்டில் உள்ள தேவர்களும் மண்ணுட்டில் உள்ள மனிதர்களும் வித்தியாதரரும் பாதாளத்தில் உள்ள நாகரும் மேலும் எண்ணப்படுகின்ற மற்றை நாட்டில் உள்ளவர்களும் இருக்கட்டும்; ஒப்பற்ற மூவராகி உலகத்தைக் காக்கும் அரியும் அதைப் படைக்கும் அயனும் அதை அழிக்கும் அரனும் என்னைத் தடுக்க வந்தாலும் இனி மேல் இந்தப் பெரிய உலகத்தில் ஒரு பெண்ணின் நோக்கம் நிறைவேற ஒட்டேன்’ என்று கூறி.

கு :—விஞ்சையர் ஆவார் விண்ணினும் மண்ணினும் தங்குதற்குரியராதலின் அவர்க்கு நாடு கூருது விடுத்தார். நாகர்–பாதலத்துள்ளோர். மற்றும் எண் நாட்டவர் என்றது, கோலோகம் முதலிய உலகத்துள்ளாரை. எல்லோர்க்கும் மேலோராகிய மூவர் வந்த போதும் ஒட்டேன் எனக் கூறப்போகின்ருனுதலின், ‘ யாவரும் நிற்க’ என்ருன். எந்நாட்டிற்கும் இறையாக உள்ள மூவரையுமே பொருட்படுத்தாத யான் விண்ணுட்டவர் முதலியோரைப் பொருட்படுத்துவேனே ? என்பது கருத்து. ஒரு கடவுளே தொழிலால் மூவராய்ப் பிரிந்தார் என்பது புலப்பட ‘ ஓர் மூவராகி ’ என்ருன். நாட்டுதல் - காத்தல். காட்டுதல் - படைத்தல். வீட்டுதல் - அழித்தல். நாட்டுதல், நிலைபெறச்செய்தல் என்னும் பொருளதாகலின் காத்தலாயிற்று. கைகேயியின் கருத்துப்படி இராமனைக் காட்டிற்கனுப்ப ஒருப்படேன் என்பான் பொதுவகையால், ‘ பெண்ணுட்டமொட்டேன் ’ என்ருன். ஒட்டேன் - உடன்படேன். பெண்ணறிவென்பது பெரும் பேதைமைத்து என்பது கண்டானுகலின் அங்ஙனம் கூறினன். ‘ இனிப் பேருலகத்துப் பெண்ணுட்டமொட்டேன் ’ என்றது, இனிப் பெண்டிர் கருத்திற்கு உலகத்திலேயே இடந்தரலாகாது என்ற கருத்தாலாகும். என்னு என்பது, திரிகின்ற வேலை என வருஞ் செய்யுளில் முடியும். (119)

**1814.** காலைக் கதிரோ
    னடுவுற்றதோர் வெம்மை காட்டி
ஞாலத்தவர் கோமக
    னங்நக ரத்து நாப்பண்
மாலைச் சிகரத்தனி
    மந்தர மேரு முந்தை
வேலைத் திரிகின்றது
    போற்றிரி கின்ற வேலை.

காலைக் கதிரோன் நடு உற்றது ஓர் வெம்மை காட்டி,
ஞாலத்தவர் கோமகன், அந் நகரத்து நாப்பண்,
மாலைச் சிகரத் தனி மந்தர மேரு முந்தை
வேலைத் திரிகின்றது போல், திரிகின்ற வேலை.

பொ :—காலையில் உதித்த சூரியன் விண்ணின் நடுவில் வந்தது போன்ற ஒப்பற்ற சின வெப்பத்தைக் காட்டி, இவ்வுலகத்தவர்க்கு மன்னவன் மகனுகிய இலக்குவன், அந்த அயோத்திநகரத்து நடுவில், வரிசையான சிகரங்களையுடைய மந்தரமலை முற்காலத்துப் பாற்கடல் நடுவில் தனியே சுழல்கின்றதுபோல் திரிகின்றபொழுது.

கு :—இலக்குவன் சினவெம்மைக்கு விண்ணடுவுற்ற சூரியனின் வெம்மை உவமை. காலையில் தோன்றிய சூரியன் படிப்படியாக வெம்மையில் வளர்ச்சிபெற்று நண்பகலில் வெம்மை முற்றிநிற்றல்போல இலக்குவன், இராமன் காடுபுகுவான், பரதன் நாடு காப்பான் என்பதைக் கேட்டபொழுதிலிருந்து சினவெம்மை வளரப்பெற்றுப் பின் முற்றித் திரிகின்ருன் என்க. நகரத்து நாப்பண் இலக்குவன் தனியே திரிதற்குப் பாற்கடலில் மந்தரமலை தனியே சுழல்வது உவமை. மாலை - வரிசை. மேரு என்பது மலை என்னும் பொதுப்பொருளில் வந்தது. முந்தை என்றது காலத்தை யுணர்த்திற்று. வேலை – பாற்கடல். "மத்து மந்தரம் வாசுகி கடைகயிறு" (பால - 498) என்றது காண்க. தனித் திரிகின்றதுபோல் என இயைக்க. அயோத்திநகரம் பாற்கடல் போலக் கலங்குற, மந்தர மலை கலக்குதல் போல இலக்குவன் கலக்கித் திரிகின்ருன் என்பது கருத்து. நாப்பண் - நடு. இதுகாறும் இராமன் பணியாளன்போல அடங்கி இருந்த இலக்குவன், இப்பொழுது இவ்வுலகாளு மன்னவன் மகன் என்ற எண்ணத்தோடு திரிகின்றமை தோன்ற, 'ஞாலத்தவர் கோமகன்' என்று அவனைச் சிறப்பித்தார். முன், 'கங்கைக் கிறைவன்' என்றதும் இக்கருத்துப் பற்றியேயாம். திரிகின்ற வேலை என்புழி, வேலை, பொழுது என்னும் பொருளது. (120)

## இராமன் நாணெலி கேட்டல்

**1815.** வேற்றுக் கொடியாள்
விளைவித்த வினைக்கு விம்மித்
தேற்றத் தெளியா
தயர்சிற்றவை பாலி ருந்தான்

ஆற்றற் றுணைத்தம்பிதன்
விற்புய லண்ட கோளம்
கீற்றுற் றுடையப்
படுநாணுரு மேறு கேட்டான்.

வேற்றுக் கொடியாள்
விளைவித்த வினைக்கு விம்மித்,
தேற்றத் தெளியாது
அயர் சிற்றவை பால் இருந்தான்,
ஆற்றல் துணைத் தம்பிதன்
வில் புயல், அண்ட கோளம்
கீற்று உற்று உடையப்
படும்நாண் உருமேறு கேட்டான்.

பொ :—மாற்றவளாகிய கொடிய கைகேயி விளைவித்த தீய செயலுக்குத் தேம்பித் தான் தேற்றவும் தெளியாமல் துன்புறுகின்ற சிற்றன்னையாகிய சுமித்திரையினிடத்தில் இருந்த இராமபிரான், ஆற்றல் வாய்ந்த, தனக்குத் துணையாகவுள்ள தம்பியாகிய இலக்குவனுடைய வில்லாகிய மேகத்தில், அண்ட உண்டை கீற்றுக் கீற்றுக உடையுமாறு உண்டான நாணொலியாகிய உருமேற்றைக் கேட்டான்.

ு :—சுமித்திரைக்கு மாற்றவள் கைகேயி யாதலாலும் அவள் செய்த கொடுமை மிக்க செயலாலும் 'வேற்றுக் கொடியாள்' என்றார். அவள் விளைவித்த வினையாவது, நாடாள இருந்தவனைக் காடாளச் செய்தது. விம்முதல்-தேம்புதல். தேற்றுதலாவது, 'தந்தையை மறந்தும் பொய்யிலனுக்கி, மாதவரின் வரங்களைப் பெற்றுப் பதினன்கு ஆண்டுகளைப் பதினன்கு நாட்களாகக் கழித்துவிட்டு விரைவில் வந்து உங்களைக் காண்பேன்' என்றுற் போல்வது. இங்ஙனம் தேற்றவும் சுமித்திரை தெளியாமைக்குக் காரணம் இராமன்பால்வைத்த பேரன்பேயாம். அவள் தெளியாமையின் மேலும் பல சொல்லித் தேற்ற வேண்டி அவள் பக்கலிருந்தான் இராமன் என்க. இருந்தான், வினைப்பெயர்; அது கேட்டான் என்னும் வினைகொண்டது. தம்பியர் பலராயினும் இராமன் நிழல்போல் நீங்காது நிற்பவன் இலக்குவன் ஆதலின், அவனைத் 'துணைத்தம்பி' என்றும், இராமன்போல் ஆற்றலுடையவன் என்பது புலப்பட, 'ஆற்றல் துணைத்தம்பி' என்றும் சிறப்பித்தார். வில்லைப் புயலாகவும் நாண் ஒலியை உருமேறுகவும் உருவகம் செய்தவாறு. கோளம்-உருண்டை. உருண்டை வடிவமுள்ள பொருள் உடையுங்கால் கீற்றுக் கீற்றுக உடையும் இயல்பு தோன்ற 'அண்ட கோளம் கீற்றுற்று உடைய' என்றார். நாண் ஆகுபெயராய் ஒலியை

உணர்த்திற்று. உருமேறு-பேரிடி. நாணொலியே இலக்குவன் வில் நாணொலியென்பதை இராமனுக்கு அறிவித்தது என்க. (121)

## இராமன் வருகை

**1816.** வீருக்கிய பொற்கலன்
வில்லிட வார மின்ன
மாருத் தனிச்சொற்றுளி
மாரி வழங்கி வந்தான்
காருக்க நிமிர்ந்து
புகைந்து கனன்று பொங்கும்
ஆருக்கன லாற்றுமொ
ரஞ்சன மேக மென்ன.

**வீறு ஆக்கிய பொன் கலன் வில் இட, ஆரம் மின்ன,**
**மாருத் தனிச் சொல் துளி மாரி வழங்கி வந்தான்;**
**கால் தாக்க நிமிர்ந்து, புகைந்து, கனன்று, பொங்கும்**
**ஆருக் கனல் ஆற்றும் ஓர் அஞ்சன மேகம் என்ன.**

பொ :—காற்றுத் தாக்குதலால் நிமிர்ந்து புகைந்து கனன்று மேலெழுகின்ற ஆருத பெருநெருப்பை ஆற்றுகின்ற ஒரு மைந்நிற மேகம்போல, பேரழகுடையதாக்கிய பொன்னால் இயன்ற அணி கலன் பலவண்ணமான ஒளிவீசி வானவில்லின் தன்மையைப் புலப் படுத்தவும், முத்தாரம் வெள்ளொளி வீசி மின்னலின் தன்மையைப் புலப்படுத்தவும், கேட்டவர் மாறுபட முடியாத ஒப்பற்ற சொற்களாகிய துளிகளையுடைய மழையைப் பெய்துகொண்டே வந்தான்.

கு :—வீறு-பிறிதொன்றற்கில்லாத சிறப்பு. வில், மின் என்பன இருபொருள் உணர்த்தி உருவகமாயின. வில்-ஒளி; வானவில். மின்-ஒளி; மின்னல். அணியொளியாகிய வானவில்; முத்தின் மின்னொளி யாகிய மின்னல் என்க. மாருத்தனிச்சொல்-கேட்பவர் மாறுகொள்ள இயலாத இனிமையும் உறுதியும் ஆழமும் உடைய ஒப்பற்ற சொல். தனிச் சொல்லைத் துளியாகவும் சொற்றொடர்களை மழையாகவும் உரு வகம் செய்தவாறு. வழங்குதல்-பெய்தல்; பேசுதல். பெய்தலை வழங் குவதாகக் கூறும் மரபுண்டு; 'வானம்வழங்காதெனின்' (திருக்குறள்-19) என்பது காண்க. அஞ்சன வண்ணனாகிய இராமனுக்கு அஞ்சன மேகத்தை உவமையாக்கியதற் கேற்ப, வில்லும் மின்னும் மாரியும் உருவக வாய்பாட்டால் கூறப்பட்டன. அஞ்சனம்-மை. நீருண்ட கரிய மேகத்தை, 'அஞ்சனமேகம்' என்றார். கால்-காற்று. கனல் சிறி

தானபோது பெருங்காற்றால் அவிந்தொழிதலும், அது பெரிதாயபோது அக்காற்றால் பெருகுதலும் இயல்பு. கால் தாக்க நிமிர்ந்தமை கூறிக் கனலின் பெருமை புலப்படுத்தியவாறு. நிமிர்தலும், புகைதலும், கனலுதலும் பொங்குதலும் நெருப்பின்கண் நிகழ்வது காற்றுத்தாக்கு தலால் ஆகும். கைகேயியின் சூழ்வினை என்கின்ற காற்றுத் தாக்கினமையால் இலக்குவனுடைய சினக்கனல் நிமிர்ந்து புகைந்து கனன்று பொங்கி ஆறுததாயிற்று என்பது குறிப்பு. அவ்வாறுச் சினத்தை இன்சொல்லால் ஆற்றிக்கொண்டே இராமன் வந்தான் என்பது கருத்து. (122)

## இராமன் வினவுதல்

1817. மின்னொத்த சீற்றக் கனல்விட்டு
விளங்க நின்ற
பொன்னொத்த மேனிப் புயலொத்த
தடக்கை யானை
என்னத்த வென்னீ யிறையேனும்
முனிவி லாதாய்
சன்னத்த னாகித் தனுவேந்துதற்
கேது வென்றான்.

மின் ஒத்த சீற்றக் கனல் விட்டு விளங்க நின்ற,
பொன் ஒத்த மேனிப், புயல் ஒத்த தடக்கையானை,
'என் அத்த! என், நீ, இறையேனும் முனிவு இலாதாய்,
சன்னத்தன் ஆகித் தனு ஏந்துதற்கு ஏது?' என்றான்.

பொ :—மின்னலை ஒத்த கோபக்கனல் விட்டுவிளங்குமாறு நின்ற பொன்னையொத்த மேனியையும், மேகம் போன்று வரையாது வழங்கும் பெரிய கையையும் உடைய இலக்குவனைப் பார்த்து, 'என் ஐயனே! சிறிதும் கோபம் இல்லாதவனாகிய நீ, போர்க்கு ஆயத்தமாகி வில்லை ஏந்துதற்குக் காரணம் என்ன?' என்று இராமன் வினவினான்.

கு :—ஏது என்? என இயையும். மின்னல் இலக்குவன் சீற்றக் கனலுக்கு உவமை. சீற்றத்தால் கண்கள் கக்கிய கனல், மின்னலைப் போல ஒளி வீசிற்று என்பது கருத்து. இலக்குவன் மேனிக்குப் பொன் உருவால் உவமை. புயல் கைக்குப் பயனால் உவமை. அத்தன்–அப்பன். அன்பு பற்றித் தம்பியை அத்த என்று விளித்தான். இறை–சிறிது. முன்பெல்லாம் சிறிதும் முனிவில்லாத நீ இன்று முனிந்து போர்க்கு ஆயத்தனாய் வில்லேந்தியது

எனக்கு வியப்பாக வுள்ளது என்பான், தனுவேந்துதற்கு ஏது என்? என்றான். சன்னத்தன்-போர் முயற்சியுடையவன்; ஆயத்த மானவன். (123)

## இலக்குவன் விடை (1818—1819)

1818. மெய்யைச் சிதைவித்துநின்
மேன்முறை நீத்த நெஞ்சம்
மையிற் கரியாளெதிர்
நின்னையம் மௌலி சூட்டல்
செய்யக் கருதித்தடை
செய்குநர் தேவ ரேனும்
துய்யைச் சுடுவெங்
கனலிற் சுடுவான் றுணிந்தேன்.

'மெய்யைச் சிதைவித்து, நின்
மேல் முறை நீத்த நெஞ்சம்
மையில் கரியாள் எதிர்,
நின்னை அம் மௌலி சூட்டல்
செய்யக் கருதித், தடை
செய்குநர் தேவ ரேனும்,
துய்யைச் சுடு வெம்
கனலில் சுடுவான் துணிந்தேன்.'

பொ :—'மெய்ம்மையைச் சிதையச் செய்து, நின்னுடைய பழமையான முறைமையையும் நீக்கிய நெஞ்சத்தால் மையினும் கரியவளாகிய கைகேயியின் எதிரில் நின்னை அந்த முடியினைச் சூட்டுமாறு செய்யக் கருதி, அதைத் தடைசெய்பவர் தேவரேயாயினும் பஞ்சுத் துய்யைச் சுடுகின்ற வெவ்விய நெருப்புப்போல அவர்களைச் சுடுவதற்குத் துணிந்துவிட்டேன்; அதனால்தான் வில்லேந்திப் போர்க்கு ஆயத்தம் ஆனேன்.'

கு :—இராமனுக்கு முடிசூட்டுவதாக முன்னர் முடிவுகூறிவிட்டுப் பின் பரதனுக்கு முடிசூட்ட இசைந்தமையின், "மெய்யைச் சிதைவித்து" என்றான். "தன்னேரிலாத தலைமகற்குத் தாரணியை, முன்னே கொடுத்து முறை திறம்பத் தம்பிக்குப் பின்னே கொடுத்தால் பிழையாதோ மெய்" (1804) எனப் பொதுமக்களும் கூறியுள்ளமை காண்க. மேன்முறை என்றது, மூத்தவற்குரித்தரசு என்னும் மனு

முதன் மரபை; நெஞ்சம் கரியாள் என்றது, நெஞ்சத்தால் தீயவள் என்றவாறு. "அகங்குன்றி மூக்கிற்கரியாருடைத்து". (குறள்-277) என்றது காண்க. நெஞ்சில் விஞ்சிய வஞ்சனையால் மேல் முறையை நீக்கினுள் என்பது கருத்து. நின்னை என்றது உருபு மயக்கம். கருதித் துணிந்தேன் என்றியைக்க. தேவரென்றது இங்கு மூவரை. தடைசெய்குநர் பெரியராயினும் எளிதில் வெல்வேன் என்பது தோன்றத் துய்யைக் சுடுவெங்கனலை உவமை கூறினுர். துய்-பஞ்சுத்துய். தேவரேனும் என்புழி உம்மை உயர்வுசிறப்பு. வில்லேந்திச் சன்னத்தனுதற்குக் காரணங் கூறியவாறு. (124)

**1819.** வலக்கார் முகமென் கையதாகவவ்
வானு ளோரும்
விலக்கா ரவர்வந்து விலக்கினு
மென்கை வாளிக்
கிலக்கா வெரிவித்துல கேழிஞெ
டேழு மன்னர்
குலக்காவலு மின்றுனக் கியான்றரக்
கோடி .யென்றுன்.

'வலக் கார்முகம் என் கையது ஆக, அவ்
வான் உளோரும்
விலக்கார்; அவர் வந்து விலக்கினும்,
என் கை வாளிக்கு
இலக்கா எரிவித்து, உலகு ஏழிஞெடு
ஏழும், மன்னர்
குலக்காவலும், இன்று, உனக்கு யான் தரக்
கோடி' என்றுன்.

பொ :—'வலிமையுடைய வில் என் கையில் இருக்கும்பொழுது அந்தத் தேவரும் வந்து என் செயலை விலக்கமாட்டார்கள்; அவர்கள் வந்து விலக்கினும் என் கையம்பிற்கு இலக்கு ஆக எரியுமாறு செய்து உலகம் பதினன்கையும் மன்னர் குலத்திற்குரிய காவல் தொழிலையும் இப்பொழுது யான் கொடுக்கக் கொள்ளுதி' என்று கூறினுன்.

கு :—வானுளோரும் இலக்குவன் வில்லைக்கண்டு அஞ்சி வாரார் என்று அவ்வில்லின் பெருமை புலப்படுத்தியவாறு. வில்லிற்கு அவர் அஞ்சாது விலக்கினும் அவரை என் கணைக்கு இலக்காக்கி அழிப்பேன் என அம்பின் வலிமையும் தன்திறமையும் புலப்படுத்தினுன். காவல்

மன்னர் குலத்திற்கு உரியது ஆதலின், 'மன்னர் குலக் காவல்' என்றான். பதினான்கு உலகமும் அவ்வுலகாளும் அரசும் இன்று யான் தரக் கோடி என்றான் இலக்குவன்; உலகுளோரை யெல்லாம் தான் வென்று தனதாக்கிப் பின் இராமனுக்குக் கொடுக்கலாம் என்னும் கருத்தால். பிறப்புரிமையால் எய்தாத அரசை வென்றிச் சிறப்புரிமையால் இன்றே பெற்றுத் தருவேன் என்றவாறு. தந்தை நினக்குக் கோசலநாட்டு அரசு கொடுத்துப் பின் மாற்றினான் ஆதலின் இன்று அவ்வரசுமட்டுமன்றிப் பதினான்குலகங்களையும் அவற்றை ஆளு முரிமையையும் இப்புண்ணியநாளிலேயே யான் தரக் கொள்ளுதி என்று தன் தலைமை தோன்றக்கூறினான். கோடி-கொள்ளுதி. மேல் செய்யுளில் சன்னத்தனானமைக்குக் காரணங்கூறி இச் செய்யுளில் அப் போரின் பயன் கூறியவாறு. (125)

## இராமன் வினவுதல்

1820. இளையா னிதுகூற விராம
னியைந்த நீதி
வளையாவரு நன்னெறி நின்னறி
வாகு மன்றே
உளையா வறம் வற்றிடவூழ்வழு
வுற்ற சீற்றம்
விளையாத நிலத்துனக் கெங்ஙன்
விளைந்த தென்றான்.

இளையான் இது கூற, இராமன்,
'இயைந்த நீதி
வளையா வரும் நல் நெறி நின் அறிவு
ஆகும் அன்றே?
உளையா அறம் வற்றிட, ஊழ் வழு
உற்ற சீற்றம்,
விளையாத நிலத்து, உனக்கு எங்ஙன்
விளைந்தது?' என்றான்.

பொ :—இலக்குவன் இதைச்சொல்ல இராமன், 'பொருத்தமான நீதி மாறுபடாது வரும் நல்ல நெறியிலேயே நின் அறிவு ஈடுபடும் அன்றோ? அங்ஙன மிருக்க இன்று தருமம் மனம் வருந்தி வற்ற முறை வழுவிய கோபம் விளையா நிலமாகிய உன்கண் எவ்வாறு விளைந்தது?' என்று வினவினான்.

கு :—வளையாது என்பது ஈறுகெட்டுநின்றது. 'நன்னெறியில் செல்லும் நின்னறிவு' என்பான், நன்னெறி நின்னறிவாகும் என்றான். நன்னெறி என்பது நின்னறிவில் தோன்றும் செயலே யாகுமன்றோ? என உரைப்பினுமாம்; இலக்குவன் செல்வதே நன்னெறி என்றவாறு. 'தீய பிறத்தல் அதனால் வரும்' (குறள்-303) என்றதால் அறம் வற்று தலும் முறை வழுவுதலும் சீற்றத்தால் நிகழும் என்பது அறியலாம். 'விளையாத நிலமாகிய உன்கண்' என உருபுமயக்க மாக்குக. நிலத்து என்புழி அத்துச் சாரியை அல்வழியில் வந்தது. சீற்றமாகிய விதை இலக்குவன் மனமாகிய நிலத்தில் விளையாது எனச் சீற்றத்தை உருவகஞ் செய்யாமையால் ஏகதேச உருவகம் ஆம். ஊழ்-முறை. தந்தை தாய் தம்முன் என்ற இவர்கள் மேல் வெகுண்டமையின் 'ஊழ் வழுவுற்ற சீற்றம்' என்றான். இராமனுக்கு இலக்குவன் இளவல் ஆதலின் அவனை 'இளையான்' என்றார். எத்தகைப் பகைக்கும் இளையாதவன் என்ற பொருளும் தோற்றிற்று. (126)

## இலக்குவன் மறுமொழி (1821—1822)

**1821.** நீண்டான துரைத்தலு நித்திலந்
தோன்ற நக்குச்
சேண்டான் றொடர்மாநில நின்னதென்
றுந்தை செப்பப்
பூண்டாய் பகையா லிழந்தேவனம்
போதி யென்றால்
யாண்டோ வடியேற் கினிச்சீற்ற
மடுப்ப தென்றான்.

நீண்டான் அது உரைத்தலும், நித்திலம்
தோன்ற நக்குச்
'சேண் தான் தொடர் மா நிலம் நின்னது என்று
உந்தை செப்பப்
பூண்டாய்; பகையால் இழந்தே வனம்
போதி என்றால்,
யாண்டோ அடியேற்கு இனிச் சீற்றம்
அடுப்பது ?' என்றான்.

பொ :—இராமன் அதைக் கூறிய அளவில், பற்கள் தோன்றச் சிரித்து, 'மிகப் பழங்கால முதல் நம் குலத்துப் பிறந்த மூத்த மக்கட்கே உரியதாய்த் தொடர்ந்துவருகின்ற பெரிய நாடு நின்னுடையது என்று

உன் தந்தை சொல்ல ஏற்றுக்கொண்ட நீ, பகைமையுடையவர்களால் அந்நாட்டை இழந்து காட்டை அடைகின்ருய் என்ருல் அடியேனுக்குக் கோபம் வருவது இனி எப்பொழுதோ? என்று வருந்திக் கூறினுன்.

கு :—இராமன், நெடியோனுன திருமாலின் அவதாரம் ஆதலின், நீண்டான் எனப்பட்டான். நித்திலம் - முத்து; ஆகுபெயராய்ப் பற்களை யுணர்த்தியது. இலக்குவன் இராமனுக்கு முன் பல் தோன்றச் சிரித்தறியான்; அவ்வழக்கிற்கு மாருக இன்று பெரிது சிரித்தான் என்பது தோன்ற, "நித்திலந் தோன்ற நக்கு" என்ருர். 'சேண்' என்றது, காலத்தின் தொன்மையை. சூரிய குலத்திற் பிறந்த மூத்த மக்கட்கே யுரித்தாய்த் தொடர்ந்துவந்தமை யுணர்த்தச் 'சேண்டான் தொடர் மாநிலம்' என்ருன். தான் - அசை. தொடர்தல் - வழிவழி யுரிமையாய் வருதல். தந்தை முன் இராமனுக்குக் கொடுத்த நாட்டைப் பின் வாய்மையும் மரபும் பிறழ்ந்து பரதனுக்குக் கொடுத்தமையால் உண்டான வெறுப்பால் நம் தந்தை என்னுது உந்தை என்ருன். நீயே வேண்டி அரசைப் பூண்டாயல்லை என்பான், 'நின்னது என்று உந்தை செப்பப் பூண்டாய்' என்ருன். பூண்டாய் வினையாலணையும்பெயர். கைகேயியால் என்று பெயர் கூறுதல் நன்றன்று என்று, பகையால் என்ருன். நீயே விரும்பிச் செல்லவில்லை என்பது புலப்படப் 'பகையா லிழந்தே வனம்போதி யென்ருல்' என்ருன். தந்தை வேண்டிக் கொடுத்த நாட்டைப் பகையாயவரால் இழந்து என் தமையனுராகிய நீர் காடு புகுவது கண்டும் எனக்குச் சினம் வரல் ஆகாது என்ருல் வேறு எப்பொழுதுதான் எனக்குக் கோபம் வருவது? என்று வினவி, இராமன் முடி துறந்து வனம் புகச் செய்த செயல், சினவாத ஞானியரையும் சினப்பிக்க வல்லது என்ருல் நின் அடிமையாகிய யான் சினப்பதில் பிழையில்லை என்பது புலப்படுத்தியவாறு. (127)

**1822.** நின்கட் பரிவில்லவர் நீள்வனத்
துன்னே நீக்கப்
புன்கட் பொறியாக்கை பொறுத்துயிர்
போற்று கேனே
என்கட் புலமுன் னுனக்கீந்துவைத்
தில்லை யென்ற
வன்கட் புலந்தாங்கிய மன்னவன்
ருன்கொ லென்ருன்.

"நின்கண் பரிவு இல்லவர் நீள் வனத்து
உன்னை நீக்கப்,
புன்கண் பொறி யாக்கை பொறுத்து, உயிர்
போற்றுகேனோ?
என் கண் புலம் முன் உனக்கு ஈந்துவைத்து
'இல்லை' என்ற
வன்கண்புலம் தாங்கிய மன்னவன்
தான் கொல்?" என்றான்.

பொ:—"நின்பால் அன்பில்லாதவர் உன்னை நீண்ட காட்டிற்குப் போகுமாறு போக்கக் கண்ட புல்லிய கண்ணையுடைய இவ்வுடம்பைத் தாங்கியிருந்து உயிரைப் போற்றிக்கொண்டிருப்பேனோ? அவ்வாறு உயிரைப் போற்றி வாழ என் கண்முன் நாட்டை உனக்குக் கொடுத்து விட்டுப் பின் 'இல்லை' என்று சொன்ன வன்கண்மையுடைய தயரத மன்னனோ யான்?" என்றான்.

கு:—மேல் 'பகைவர்' என்று குறித்தவரையே இங்கு 'நின்கட் பரிவில்லவர்' என்று வேறு சொல்லால் குறித்தவாறு. வனத்தின் பெருமை தோன்ற 'நீள்வனம்' என்றான். நீக்குதலாவது நாட்டின் நீக்கிக் காட்டில் நிறுத்துதல். இராமன் வனம்புகக் கணடு கொண் டிருந்த இழிதகவுடைமையின் 'புன்கண்பொறி' என்றான். நீ வனம் புகாது நிறுத்த முயல்வேன்; முடியாதவழி மாய்வேன் என்பான், "உயிர் போற்றுகேனோ? என்றான். பொறுத்தல் - தாங்குதல். போற்று தல் - காத்தல். தான் கொல் அசைநிலை. யாக்கை, என்பினை நரம்பால் யாக்கப்பட்டது என்ற காரணம் பற்றி உடம்பிற்குப் பெயராயது. தயரதன், இராமனுக்கு அரசு தருவதாக உறுதிகூறியபொழுது இலக்கு வனும் உடன் இருந்தான் ஆதலின், 'என் கட்புலமுன் உனக்கீந்து வைத்து' என்றான். "தூய தம்பியுந் தானுமச் சுமந்திரன் றேர்மேல், போயகங் குளிர் புரவலனிருந்துழிப் புக்கான்" (1456) என இலக்குவனும் இராமனுடன் இருந்தமை முற்கூறியுள்ளமை காண்க. பொறி, புலம் என்பன அறிகருவி யென்னும் பொருளன. வன்கட்புலம்-வன்கண்மை. உடையாரது புன்மையும் வன்மையும் கண்மேலேற்றிப் 'புன்கண்' 'வன்கண்' என்றார். "முன்னீந்து பின்னில்லை யென்னும் வன்கண்மை யுடையான் தயரதன் ஆதலின், அவன் நின்னைப் பிரிந்தும் உயிரைப் போற்றி வாழ்வான்; யான் அவனல்லேன் ஆகலின் உயிர் போற்றேன்" என்று கூறியவாறு. (123)

இப்பாடலுக்குப்பின்; 2, 4, 5, 24, 41, 45, 52 என்ற எண்ணுள்ள ஏடுகளில் பின்வரும் பாடல் காணப்படுகின்றது.

1822 (a) என்றென்று சீற்றத் தினையோனி தியம்பி டாமுன்
கன்றென்று மாவிற் பல யோனியுங் காத்த நேமி
வன்றிண் சிலைக்கை மனுவென்னும் வயங்கு கீர்த்திக்
குன்றென்று தோளான் மருமானிவை கூற லுற்றான்.

இராமன் கூறும் அமைதி 1823, 1824

**1823.** பின்குற்ற மன்னும் பயக்கும்மர
சென்றல் பேணேன்
முன்கொற்ற மன்னன் முடிகொள்கெனக்
கொள்ள மூண்ட
தென்குற்ற மன்றோ விகன்மன்னவன்
குற்றம் யாதோ
மின்குற் றொளிரும் வெயிறீக்கொ
டமைந்த வேலோய்.

"பின் குற்றம் மன்னும் பயக்கும் அரசு
என்றல் பேணேன்,
முன் கொற்ற மன்னன், 'முடி கொள்க' எனக்,
கொள்ள மூண்டது
என் குற்றம் அன்றோ? இகல் மன்னவன்
குற்றம் யாதோ?
மின் குற்று ஒளிரும் வெயில் தீக்கொடு
அமைந்த வேலோய்!"

பொ:—"மின்னலைக் கீழ்ப்படுத்தி ஒளி வீசுகின்றதாய் வெயிலின் தன்மையும் தீயின் தன்மையும் தன்பால் கொண்டு அமைந்துள்ள வேலையுடையவனே! பிற்காலத்துக் குற்றங்களை மிகுதியாகத் தரவல்லது அரசு என்பதைப் பாராது, முன்பு வெற்றி வாய்ந்த அரசன், 'முடி கொள்க' என்று கூறினவுடன் அதைக் கொள்ள முற்பட்டது என் குற்றம் அல்லவோ? வலிமை மிக்க மன்னவன் குற்றம் யாதுளது?"

கு:—மன் - மிகுதி. பேணாமை – நோக்காமை. அரசு குற்றம் மன்னும் பயத்தலை, "மாரி பொய்ப்பினும் வாரி குன்றினும், இயற்கையல்லன செயற்கையில் தோன்றினும், காவலர்ப் பழிக்குமிக் கண்ணகன் ஞாலம்" (புறநா-35) என்பதால் அறியலாம். முன் என்பதற்கு நின்

கண்முன் என்றுரைப்பினுமாம். 'கொள்ளெனக் கொடுத்தல் உயர்ந் தன்று' என்னும் கருத்தால் மன்னவன் கொடுத்தானாகக் "கொள்ளேன் என்றல் அதனினும் உயர்ந்தன்று" என்று யான் மறுத்தது என் குற்றமே என்பது கருத்து. மூண்டது - ஏற்க முற்பட்டது. மன்னனை வன் கண்ணன் எனக் குற்றம் கூறியதை மறுத்தவாறு. வேலோய் என்று விளித்தது, குற்றம் செய்தாரைத் தண்டித்தற்கேற்ற படையுடையோன் என்பது புலப்பட வேண்டி. முடிகொள மூண்ட குற்றம் என்னதே ஆகலின் ஒறுப்பதற்கேற்ற படையுடைய நீ என்னையே ஒறுக்கலாம் என்பது குறிப்பு. (129)

1824. நதியின் பிழையன்று நறும்புன
 லின்மை யற்றே
பதியின் பிழையன்று பயந்து
 நமைப்பு ரந்தாள்
மதியின் பிழையன்று மகன்பிழை
 யன்று மைந்த
விதியின் பிழைநீ யிதற்கென்னை
 வெகுண்ட தென்றான்.

'நதியின் பிழை அன்று நறும் புனல்
 இன்மை; அற்றே,
பதியின் பிழை அன்று; பயந்து
 நமைப் புரந்தாள்
மதியின் பிழை அன்று; மகன் பிழை
 அன்று; மைந்த!
விதியின் பிழை; நீ இதற்கு என்னை
 வெகுண்டது?' என்றான்,

பொ:—'நல்ல நீர் இல்லாமல் வறண்டு போவது (மழையில்லாமையால் நேர்ந்த பிழையே யொழிய) நதியின் பிழையன்று; அதுபோலவே (அன்பிலார்போல என்னை வனம் புகச்செய்தது) மன்னவன் பிழையும் அன்று; நம்மைப் பெற்று வளர்த்த தாயின் மதியால் விளைந்த தவறும் அன்று; அவ்வன்னையின் மகனாகிய பரதன் பிழையும் அன்று; வலிமை யுடையோனே! விதியால் நிகழ்ந்த பிழையாகும்; விதியால் விளைந்த இந்நிகழ்ச்சிக்கு நீ வெகுண்டது என்னையோ?' என்றான்.

கு :—ஆற்றில் வெள்ளமில்லாதது மழை பெய்யாமையால் நிகழ்ந்தது என்று அமைவோமே அன்றி ஆற்றின் பிழையென ஏற்றிச் சீற்றங்

கொள்ளமாட்டோம். அதுபோலவே யான் வனம்புக நேர்ந்தது விதியின் பிழையேயன்றி நீ கூறியதுபோல் பரிவில்லாமல் தந்தையும் தாயும் தம்பியும் செய்த பிழையன்று என இராமன், இலக்குவன் வெகுளிக்குக் காரணம் இன்மையை விளக்கியவாறு; "நின்கட் பரிவில்லவர் நீள்வனத் துன்னை நீக்க" என மேல் இலக்குவன் கூறியது பொருந்தாமை காட்டியவாறு. இது எடுத்துக்காட்டுவமையணி. நம்மைப் பெற்று வளர்த்த தாய் நமக்குத் தீங்கு செய்யாள் என்பது புலப்பட வேண்டிப் 'பயந்து நமைப்புரந்தாள்' என்றான்; என்றது கைகேயியை. மகன் என்றது பரதனை. இவர் மூவரும் இராமன் வனம் புகற்குக் காரணமாவர் என்ற கருத்தை மறுத்தவாறு. எய்தவனை விடுத்து அம்பை நோவது போல் நம் விதியை நினைந்து அமைதியுறாது அம் மூவரையும் வெகுள்வதால் பயனின்று என்பதாம். உவமானத்தில் நறும்புனலின்மை என்றதற் கேற்ப உவமேயத்தில் 'என்பால் அன்பின்மை' என்பது வருவிக்க. அன்பில்லாவாறு செய்தது விதியே என்பது கருத்து. (130)

## இலக்குவன் மறுமொழி

1825. உதிக்கும் முலையுள்ளுறு தீயென
ஊதை பொங்கக்
கொதிக்கும் மனமெங்ஙன மாற்றுவென்
கோளி ழைத்தாள்
மதிக்கும் மதியாய் முதல்வா
னவர்க்கும் வலீஇதாம்
விதிக்கும் விதியாகுமென் விற்றொழில்
காண்டி யென்றான்.

'உதிக்கும் உலையுள் உறு தீ என
ஊதை பொங்கக்
கொதிக்கும் மனம் எங்ஙனம் ஆற்றுவென்?
கோள் இழைத்தாள்
மதிக்கும் மதி ஆய், முதல் வானவர்க்கும்
வலீஇது ஆம்,
விதிக்கும் விதி ஆகும் என் வில் தொழில்
காண்டி! என்றான்.

பொ: —'உலைக்களத்துத் தோன்றும் மிக்க தீயைப் போல மூச்சுக் காற்று வெப்பமாக வெளிவருமாறு கொதிக்கின்ற நெஞ்சினை எப்படி ஆற்றுவேன்? தீமை செய்த கைகேயியின் சூழ்ச்சிக்கும் மேலான

சூழ்ச்சி போல்வதாய் முதன்மை வாய்ந்த மும்மூர்த்திகட்கும் வலியதாய விதிக்கும் விதிபோல்வதாய் உள்ள என் வில் தொழிலைக் காண்பா யாக' என்று கனன்று கூறினான்.

கு :—உலையுள் உதிக்கும் என மாறுக. உலைக்களத்துத் துருத்தி யால் தீ பொங்கி எழுமாறு போல வெப்பமான பெருமூச்சு வெளிவர என்க. ஊதை - காற்று. இங்கு மூச்சுக் காற்றை யுணர்த்தியது. மூச்சுக் காற்றின் வெப்பத்திற்கு மனக் கொதிப்பே காரணமாதல் தோன்ற 'கொதிக்கும் மனம்' என்றான். யான் ஆற்ற முயலினும் முடியவில்லை என்பான் 'எங்ஙனமாற்றுவன்' என்றான். கோள் - தீமை; இடையூறு. மதி-சூழ்ச்சி. கைகேயியின் சூழ்ச்சியைத் தகர்த்தெறியக் கருதுதலின் வில் வீரத்தை 'மதிக்கும் மதியாய்' என்றான். மும்மூர்த்திகளின் வலிமைக் கும் அடங்காதது விதி என்பது கருத்து. வலிதாம் விதி என்க. என் வில்லின் முயற்சியால் ஊழையும் உப்பக்கம் காண்பேன் என்பான் 'விதிக்கும் விதியாகும் என் விற்றொழில்' என்றான். ஊழில் நம்பிக்கை கொண்ட இராமன் ஊழிற் பெருவலி யாவுள என்ற கருத்தினன் ஆக, தன் முயற்சியில் நம்பிக்கை கொண்ட இலக்குவன் தன் விற்றொழில் கைகேயியின் மதிக்கும் மதி போல்வதாய் விதிக்கும் விதிபோல்வதாய் அவள் மதியையும் விதியையும் தகர்த்தெறியும் வலிமையுடையது என்ற கருத்தினனாய்க் கூறினான். 'வலீஇது' என்பது இசை நிறைக்க வந்த உயிரளபெடை. இராமன் முடி சூடுதற்கு இடையூறாக இருந்தவர் களைக் கொன்று குவித்துவிட்டால் இராமனே முடிசூடுமாறு செய்யலாம் என்பது இலக்குவன் நம்பிக்கை. (131)

### இராமன் கூறல்

1826. ஆய்தந்தவ னவ்வுரை கூறலு
மைய னின்றன்
வாய்தந்தன கூறுதியோ மறை
தந்த நாவால்
நீதந்த தன்றே நெறியோர்க
ணிலாத தீன்ற
தாய்தந்தை யென்றா லவர்மேற்
சலிக்கின்ற தென்னே.

ஆய் தந்து, அவன், அவ்வுரை கூறலும்,
'ஐயன், 'நின் தன்
வாய் தந்தன கூறுதியோ மறை
தந்த நாவால்?
நீ தந்தது அன்றே நெறியோர்கண்
இலாதது? ஈன்ற
தாய் தந்தை என்ருல் அவர்மேல்
சலிக்கின்றது என்னே?'.

பொ :—அவ்விலக்குவன் அச்சொல்லேச் சொல்லுதலும் இராம பிரான், ஆராய்ந்து (இலக்குவனே நோக்கி) வேதங்களேப் பயின்ற நாவினுல் வாய்க்கு வந்தனவற்றைக் கூறுகின்ருயோ? இப்பொழுது நீ கூறியது ஒழுக்கம் உடையவர்பால் இல்லாதது அன்ருே? நம்மைப் பெற்ற தாய் தந்தையர் (நம் கருத்திற்கு மாறுபட்டவர்) என்ருல் (நம் நன்மையே நாடும்) அவர்கள் மேல் கோபித்துக் கொள்ளுவது என்னே?" (என்ருன்,)

கு :—அவன் அவ்வுரை கூறலும், ஐயன் ஆய் தந்து நின் மறை தந்த நாவால் வாய்தந்தன கூறுதியோ?...... சலிக்கின்றது என்னே? என்ருன் என்க. மறைதந்தநா - வேதங்களேப் பயின்று கொண்ட நா. தருதல் இங்குக் கொள்ளுதலே உணர்த்திற்று; 'பன்னுடு தந்த பாண்டியன்' என்புழிப்போல. மறை பயின்ற நா மறை நெறிக்கு மாருனவற்றைக் கூறல் இயல்பன்று என்பது தோன்ற அங்ஙனம் கூறினுர். வாய்தந்தன-வாய்க்கு வந்தன. இலாதது அன்றே என மாறுக. நீதந்தது - நீ கூறியது; அது, பெற்ருேரைக் கொல்லுங் கருத்தால் 'என் விற்ருெழில் காண்டி' என்றது. ஒழுக்கமுடையோர் யாரும் இங்ஙனம் கூறுதலும் செய்யார் என்பான், நெறியோர்கண் இலாதது அன்றே என்ருன். தாய் தந்தையர் நம் கருத்திற்கு மாறு பட்டவர் என்ருல் என்று கூற வந்தவன் அச்சொல்லேச் சொல்லவும் மனமிலாது 'தாய் தந்தை என்ருல்' என்ருன். சலித்தல் - கோபித் தல். பெற்ருேர் செயல் நமக்கு மாறுபட்டதாகத் தோன்றினுலும் நம் நன்மையை நாடிச் செய்வதாகவே கொள்ள வேண்டும் என்பது இராமன் கருத்து. என்ருன் என்னும் பயனிலே வருவித்துரைக்க. (132)

## இலக்குவன் மறுமொழி

1827. நற்ரு தையுநீ தனிநா
யகனீ வயிற்றிற்
பெற்ருயு நீயே பிறரில்லே
பிறர்க்கு நல்கக்

கற்ரு யிதுகா ணுதியின்
றெனக் கை மறித்தான்
முற்ரு மதியம் மிலேந்தான்
முனிந்தானே யன்ஞன்.

'நல் தாதையும் நீ ; தனி நாயகன் நீ ; வயிற்றில்
பெற்ருயும் நீயே ; பிறர் இல்லே ; பிறர்க்கு நல்கக்
கற்ருய் ! இது காணுதி இன்று' எனக் கை மறித்தான்,
முற்ரு மதியம் மிலேந்தான் முனிந்தானே அன்ஞன்.

பொ :—இளம்பிறை சூடிய உருத்திரன் கோபித்தாற் போன்று கோபம் மிக்க இலக்குவன், பிறர்க்கு நின் செல்வத்தைக் கொடுக்கக் கற்றவனே! இன்று யான் கூறுகின்ற இதைக் காண்பாயாக; எனக்கு நல்ல தந்தையும் நீ; ஒப்பற்ற கடவுளும் நீ; என்னே வயிற்றில் சுமந்து பெற்ற தாயும் நீயே ! பிறர் இல்லே எனக் கையை மறித்தான்.

கு :—நற்ருதையும் நீ என்றமையால் தயரதன் தீய தாதை என்பது குறிப்பிட்டவாறு. தனிநாயகன் என்றது கடவுளே. இலக்குவன் இராமனேக் கடவுளாகக் கொண்டு ஒழுகியவன் ஆதலின் அக்கருத்தையும் உடன் கூறினன். அரசன் எனலும் ஆம். தாய் தந்தையென்ருல் அவர்மேல் சலிப்பது குற்றம் என்பது இராமன் கருத்தாகலின், அதை மறுக்க, தாயும் தந்தையும் நீயே பிறர் இல்லே; ஆதலின் ,கைகேயி முதலியோரைக் கொல்வதால் தாய் தந்தையரைக் கொன்ற பாவம் எனக்கு எய்தாது என அக்குற்றம் இன்மை விளக்கியவாறு. தயரதன் தனக்குக் கொடுத்த அரசைப் பரதனுக்குக் கொடுக்க இசைந்து கூறினன் இராமன் ஆகலின், அவனேப் 'பிறர்க்கு நல்கக் கற்ருய்!' என விளித்தான். இதைக் கேள் என்பான், 'காணுதி' எனப் பிறிதோர் புலனுக்குரிய சொல்லால் கூறினன். இக்கால வழக்கினும் இது காணலாம். இல்லே யென்போர் அக்கருத்தைச் செய்கையாலும் தெரிவிக்கக் கையசைத்தல் இயல்பு ஆகலின், 'பிறரில்லே யெனக் கைம் மறித்தான்' என்ருர். முற்ருமதி-பிறைமதி. மிலேதல்—சூடுதல். 'மிலேந் தான் முனிந்தானே' என்பது பண்டை நடை. 'முனிந்த உருத் திரனே' என்பது கருத்து. சீற்றத்திற்கு உருத்திரனே உவமை கூறுவதுண்டு என்பதை, "கூற்ரெத் தீயே மாற்றருஞ் சீற்றம்" (புறநா-56) என்பதாலும் அறியலாம். (133)

### இராமன் மொழி 1828, 1829.

**1828.** வரதன் பகர்வான் வரம்பெற்றவ
டானிவ் வையம்
சரதம் முடையாளவ ளென்றனித்
தாதை செப்பப்
பரதன் பெறுவானினி யான்படைக்
கின்ற செல்வம்
விரதம் மிதினல்லது வேறினி
யாவ தென்ருன்.

வரதன் பகர்வான், 'வரம் பெற்றவள் தான் இவ் வையம் சரதம் உடையாள்; அவள், என் தனித் தாதை, செப்பப் பரதன் பெறுவான்; இனி, யான்படைக் கின்ற செல்வம் விரதம்; இதின் நல்லது வேறு இனி யாவது?' என்ருன்.

பொ :—இராமன் சொல்லத் தொடங்கினவனுய், 'வரத்தால் பெற்ற கைகேயிதான் இவ்வுலகத்திற்கு உண்மையாக உரிமை உடையவள்; அவளும் என் ஒப்பற்ற தந்தையும் சொல்லுதலால் பரதன் இவ்வுலகத்தைப் பெறுவான்; இனி யான் பெறுகின்ற செல்வம் தவவிரதம் தான்; இவ்விரதத்தினும் நல்லது இனி வேறு யாதுளது?' என்று கூறினன்.

கு :—தயரதன் தனக்கு அரசு கொடுப்பதாகக் கூறியது கைகேயி வரத்தால் பெற்ருற் போன்ற சிறப்புரிமை யுடையதன்று; மூத்தவனுக்கு உரித்து அரசு என்ற பொதுவிதியைக் கைகேயி வரத்தால் அரசு பெற்றதாகிய சிறப்புவிதி வென்று விட்டது. மேலும் அளவை நூல் முறைப்படி முற்கூறியதிற் பிற்கூறியது சிறப்புடைத்தாகும். இவற்றையெல்லாம் நோக்கியே "வரம் பெற்றவள்தான் இவ்வையம் சரதம் உடையாள்" என்ருன். அவளும் என் தனித்தாதையும் என உம்மை விரிக்க. 'நின்னது என்று உந்தை செப்ப' எனத் தயரதனே இராமனுக்குமட்டும் தந்தையாக இலக்குவன் பிரித்துக் கூறியதையும் நற்ருதையும் நீ எனக் கூறியதையும் உளங்கொண்டு இங்கு, 'என் தனித்தாதை' என்ருன் இராமன். செப்ப-செப்புதலால் எனக் காரணப் பொருளதாக்குக. அயோத்திக்கு அரசனுவதைவிட விரதத்தால் அந்தமில் இன்பத் தரசாள்வேந்தனுதல் சிறப்புடையதாகும் என்ற கருத்தால், 'விரதம் இதினல்லது வேறினி யாவது?' என்ருன். விரதம் இனி மேற்கொண்டு ஒழுக வேண்டியதாகலின் பெறுகின்ற செல்வம் என்னுது, 'படைக்கின்ற செல்வம்' என்ருன். படைத்தல் முன் இல்லதனை உண்டாக்குதல். (134)

1829. ஆன்றான் பகர்வான்
பினுமையவிவ் வைய மையல்
தோன்றா நெறிவாழ்
துணைத்தம்பியைப் போர்தொலைத்தோ
சான்றோர் புகழ்நற்
றனித்தாதையை வாகை கொண்டோ
ஈன்றாளை வென்றோ
வினியிக்கதந் தீர்வ தென்றான்.

ஆன்றான் பகர்வான் பினும், 'ஐய இவ் வையம் மையல் தோன்றா நெறி வாழ் துணைத் தம்பியைப் போர் தொலைத்தோ? சான்றோர் புகழ் நல் தனித் தாதையை வாகை கொண்டோ? ஈன்றாளை வென்றோ? இனி இக் கதம் தீர்வது என்றான்.

போ:—அறிவாலும் பண்பாலும் நிறைவுபெற்றுள்ள இராமன், பின்னும் சொல்லத் தொடங்கியவனாய், "ஐய! இவ்வுலக மயக்கம் தோன்றாத நல்ல நெறியில் வாழ்கின்ற நம் துணையாகவுள்ள தம்பியைப் போரில் தொலைத்த பின்னரோ, சான்றோர் புகழ்கின்ற நற்செயலையுடைய ஒப்பற்ற தந்தையை வெற்றி கொண்டபின்னரோ பெற்ற தாயை வென்ற பின்னரோ, இனி இக்கோபம் நீங்குவது?" என்றான்.

கு:—பரதனையும் தசரதனையும் கைகேயியையும் சிறப்பித்த அடைகளும் பெயரும் அவர்கள் கொல்லுதற்குரிய தீங்கு யாதும் செய்யாமையோடு கொல்லாமைக்குரிய குணங்கள் நிறைந்தவர் என்பதையுணர்த்திநின்றன. மேலும், மறனிழுக்கா மானமுடைய வீரன், "மாறன்மையின் மறம் வாடுமென்று இளையாரையும் எறியான், ஆறன்மையின் முதியாரையும் எறியான்" (சீவகசிந்-மண்-160) ஆதலின் இளையதம்பியையும் முதிய தந்தையையும் முதிய தாயாகிய பெண்டிலையும் வெல்லுதல் மறத்துறையினும் இழுக்காம் என்பதும் பெறவைத்தவாறு. போர்தொலைத்தலும் வாகை கொள்ளுதலும் வெல்லுதலும் கொல்லுதல் என்ற ஒரு பொருளையே யுணர்த்தி நின்றன. வாகை என்றது வென்றோர் சூடும் மாலை; அது இங்கு வெற்றியையுணர்த்தியது. கதம்-கோபம். பட்படாவைகும் பயன்ஞால நீள்வலையுட்படாதவன் என்பார், 'வையமையல் தோன்றா நெறிவாழ் துணைத் தம்பி' என்றார். 'வேள்வி முதலிய நற்செய்கை பல செய்தவனாதலின் நற்றனித்தாதை' எனப்பட்டான் தயரதன். (135)

## இலக்குவன் மொழிதல்

**1830.** செல்லுஞ்சொல் வல்லானெதிர்
தம்பியும் தெவ்வர் சொல்லும்
சொல்லுஞ் சுமங்தேனிரு
தோளெனச் சோம்பி யோங்கும்
கல்லுஞ் சுமங்தேன்
கணைப்புட்டிலுங் கட்ட மைந்த
வில்லுஞ் சுமக்கப்
பிறங்தேன்வெகுண் டென்னை யென்ருன்.

செல்லும் சொல் வல்லான் எதிர்
தம்பியும், "தெவ்வர் சொல்லும்
சொல்லும் சுமந்தேன்; இரு
தோள் எனச் சோம்பி ஓங்கும்
கல்லும் சுமந்தேன்;
கணைப்புட்டிலும், கட்டு அமைந்த
வில்லும் சுமக்கப்
பிறந்தேன்; வெகுண்டு என்னை?" என்ருன்.

பொ :—கேட்டார் மனங்கொளுமாறு திறம்படச் சொல்லும் சொல்லில் வல்லவனுகிய இராமன் எதிர், இலக்குவனும், 'பகைவர் சொல்லும் பழிச் சொற்களையெல்லாம் சுமந்தேன், இரண்டு தோள் என்ற பெயரோடு சோம்பல்கொண்டு உயர்ந்துள்ள மலையும் சுமந்தேன்; அம்புப்புட்டிலும் கட்டு அமைந்த வில்லும் சுமந்துகொண்டிருக்கப் பிறந்தேனுகிய யான் கோபித்து என்ன பயன்?' என்று கூறினன்.

கு :—இலக்குவன் மறுமொழிகூற வியலாமல் ஏற்றுக்கொள்ளுமாறு சொல்லிய சொற்றிறம் புலப்படச் 'செல்லும் சொல்வல்லான்' என்று இராமனைச் சிறப்பித்தார். பகைவர் சொல்லும் சொல்லாவது வல்வில் ஏந்திய இலக்குவன் இருந்தும் இராமனைக் காடுபுகாமல் தடுத்து அரசாளச் செய்யவியலவில்லை என்னும் பழிச்சொல். அப்பழிச் சொல்லின் மிகுதி தோன்றச் 'சுமந்தேன்' என்ருன். கல்-மலை. இருதோள் என்று பெயர் பெற்று மலையாகக் காட்சியளிக்கின்றது என்பது கருத்து. தோளின் பெருமையால் தமையனுக்குப் புவியாட்சியளிக்க இயலாமையால், சோம்பி, என்றும் 'சுமந்தேன்' என்றும் கூறினன். போர் என்ன வீங்குதற்குரியதோள், சோம்புதலால் மலைபோல் வீங்கிச் சுமையாயிற்று என இழித்துக் கூறியவாறு. கணைப்புட்டிலும் வில்லும் வீரன்போல் சுமந்திருந்ததே யன்றி அவற்ருல் பயன் விளைக்க

வில்லை என்பது கருத்து. வில்லையும் கணையையும் செயற்படுத்தப் பிறந்தேனயின் வெகுள உரிமையுண்டு; அவற்றைச் சுமக்கப் பிறந்த யான் வெகுண்டு பயன் இல்லை என்றவாறு. (136)

## இராமன் மறுமொழி

1831. நன்சொற் கடந்தாண் டெனைநாளும்
வளர்த்த தாதை
தன்சொற் கடந்தெற் கரசாள்வது
தக்க தன்றால்
என்சொற் கடந்தா லுனக்கியாதுள
தீன மென்றான்
தென்சொற் கடந்தான் வடசொற்கலைக்
கெல்லை தேர்ந்தான்.

நன் சொற்கள் தந்து ஆண்டு எனை நாளும்
வளர்த்த தாதை
தன் சொல் கடந்து எற்கு அரசு ஆள்வது
தக்கது அன்றால்
என் சொல் கடந்தால் உனக்கு யாதுளது
ஈனம்? என்றான்;
தென் சொல் கடந்தான் வடசொல் கலைக்கு
எல்லை தேர்ந்தான்.

பொ:—தமிழ்மொழியிலுள்ள நூல்களைக் கற்றுத் துறைபோயவனும் வடமொழிக் கலைகளைக் கற்றுக் கரைகண்டவனுமாய இராமன், "நல்ல சொற்களைக் கற்பித்துக் காப்பாற்றி எனை நாள் தோறும் வளர்த்த தந்தையின் சொல்லைக் கடந்து அரசு ஆள்வது எனக்குத் தக்கது அன்று; என்னுடைய சொல்லைக் கடந்து நடந்தால் உனக்கு யாது குற்றம் உண்டாகும்?" என்று கூறினான்.

கு:—நன் சொற்கள் என்றது பொருளாலும் கேள்வியாலும் நல்லவாகிய சொற்களை. நன் சொற்கள் எனவே அச்சொற்களால் புலப்படுத்திய நல்லொழுக்கமும் கற்பித்தமை பெறவைத்தார். 'பதினான்காண்டு காட்டில் இருந்து வருக' எனத் தயரதன் கூறியதாகக் கைகேயி கூறியது கொண்டு, "தாதைதன்சொற்கடந்து எற்கு அரசு ஆள்வது தக்கதன்று" என்று கூறினான். என் தந்தை சொல்லைக்கடந்து அரசு ஆள்வது எனக்குத் தக்கதன்று என்றால், நின் சொல்லின்படி

நினக்குத் தந்தை போல்பவனுகிய என் சொல் கடந்து சினப்பது நினக்குத் தக்கதன்று என்பது தானே விளங்கவும், அவன் சினம் தணியாமைகண்டு, “என்சொற் கடந்தா லுனக் கியாதுள தீனம்” எனக் குறிப்பால் இடித்துரைத்தவாறு. ‘நற்ருதையுநீ’ என முன்னர் இலக்குவன் இராமனைப் பற்றிக் குறிப்பிட்டவாறறிக. தென்சொல்-தமிழ். கடந்தான் எல்லே தேர்ந்தான் என்பன தமிழ் மொழியும் வடமொழியும் நன்குபயின்று தெளிந்தவன் என்பதை யுணர்த்தின. இராமனுக்கு இருமொழிப் புலமையு முண்டு என்பது கருத்து. ஈனம்-குற்றம். தென்சொல்லும் வடசொல்லும் கடந்தாஞயினும் தந்தை சொல்லைக் கடக்க அஞ்சினுன் என்ற சொல்திறம் அமைந்திருத்தல் காண்க. **(137)**

## இலக்குவன் தணிவு

**1832.** சீற்றந் துறந்தா னெதிர்நின்று
தெரிந்து செப்பும்
மாற்றந் துறந்தான் மறைநான்கென
வாங்கல் செல்லா
நாற்றெண் டிரைவேலையி னம்பித
ஞணை யாலே
ஏற்றந் தொடங்காக் கடலிற்
றணிவெய்தி நின்ருன்.

சீற்றம் துறந்தான்; எதிர் நின்று
தெரிந்து செப்பும்
மாற்றம் துறந்தான்; மறை நான்கு என
வாங்கல் செல்லா
நால் தெண் திரை வேலையின் நம்பி தன்
ஆணை யாலே
ஏற்றம் தொடங்காக் கடலில் தணிவு
எய்தி நின்ருன்.

பொ :—நான்கு திசையிலுமுள்ள தெளிவான அலைகளையுடைய கடல் போன்ற வண்ணமுடைய இராமனது, நான்கு வேதங்களின் வாக்குப் போலவே ஏற்றுக் கொள்ளுதற்குப் பின்வாங்க இயலாத ஆணையால் இலக்குவன், கோபத்தை விடுத்து, அவ்விராமன் எதிர் நின்று ஆராய்ந்து சொல்லும் மறுமொழியையும் விடுத்து, இறைவன் ஆணையால் கரைகடக்கத் தொடங்காத கடல் நீர்போல் தணிவு அடைந்து நின்ருன்.

கு :—நம்பிதன் ஆணை; மறைநான் கென வாங்கல் செல்லா ஆணை என இயைக்க. நம்பி, இராமன், கடவுள் என்ற இரு பொருளையும் குறித்துநின்றது, இரட்டுற மொழிதல். கடினமானதாயினும் வேதத்தின் கட்டளையை ஏற்பது போலப் பின்னிடையாது ஏற்கத் தக்க கட்டளை என்பார், "மறைநான்கென வாங்கல் செல்லா நம்பி தன் ஆணை" என்றார். பெரியோர் கட்டளையை வேதமொழியாகக் கொள்ள வேண்டும் என்பதை: "மெய்ய! நின்னுரை வேதமெனக் கொடு செய்கையன்றோ அறஞ் செய்யுமாறு" (408) என்பதால் அறியலாம். "புவிக்கெலாம் வேதமே யன இராமனை" (1542) என இராமனுக்கு வேதத்தை உவமை கூறியதும் இக்கருத்துப்பற்றியேயாம். நான்குதிசையிலும் இருத்தல் பற்றி, 'நாற்றெண்டிரைவேலை' என்றார். வேலையின் நம்பி-கடல் போன்ற கரிய நிறமுடைய நம்பியாகிய இராமன். கடல் ஆகுபெயராய்க் கடல் நீரை யுணர்த்திற்று. கோபம் தணிந்தமைக்கு கரைகடவாக் கடல் உவமமாதலை, "வேந்தன் வேண்டலால் கரையெறியாதலை கடலும் போன்றனன்" (230) என்றமையானும் அறியலாம். 'துறந்தான்' என்பது, ஈரிடத்தும் வினையெச்ச முற்று. (138)

## இராமன் தம்பியைத் தழுவிச் சுமித்திரை கோயிலை அடைதல்

**1833.** அன்னான்றனை யையனு மாதியொ
டந்த மென்று
தன்னாலு மளப்பருந் தானுந்தன்
பாங்கர் நின்ற
பொன்மா னுரியானுந் தழீஇயெனப்
புல்லிப் பின்னைச்
சொன்மாண்புடை யன்னை சுமித்திரை
கோயில் புக்கான்.

அன்னான்தனை ஐயனும் ஆதியொடு
அந்தம் என்று
தன்னாலும் அளப்பருந் தானும் தன்
பாங்கர் நின்ற
பொன் மான் உரியானும் தழீஇ எனப்
புல்லிப் பின்னைச்
சொல் மாண்பு உடை அன்னை சுமித்திரை
கோயில் புக்கான்.

பொ :—முதலும் இறுதியும் தன்னாலும் அளந்து காண்டற்கரிய பெருமையுடைய திருமால் ஆகிய தானும், தன்பக்கத்தில் நின்ற பொன்னிறம் வாய்ந்த மான் தோலையுடைய உருத்திரனும் தழுவுவதுபோல அந்த இலக்குவனை இராமனும் தழுவிக் கொண்டு பின்பு சொல்லில் மாட்சிமை பெற்ற தாயாகிய சுமித்திரையின் மாளிகையில் புகுந்தான்.

கு :—ஆதியும் அந்தமுமில்லாதவன் திருமால் என்பது விளங்க, "ஆதியொடந்த மென்று தன்னாலும் அளப்பருந்தான்" என்றார். சங்கரநாராயண உருவத்தை நினைந்து 'தன்பாங்கர் நின்ற பொன் மானுரியான்' என்றார். "பிறைதங்கு சடையானை வலத்தே வைத்து" (பெரியதிரு-3-4-9) என்பதும், "பொன்திகழு மேனிப் புரிசடையம் புண்ணியனும், நின்றுலகம் தாய நெடுமாலும்,–என்றும், இருவரங்கத் தால் திரிவரேலும் ஒருவன், ஒருவனங்கத் தென்று முளன்" (பொய்கை-முதற்றிருவந்-98) என்பதும் காண்க. இலக்குவன் பொன் னிற முடையன் ஆதலின் அவனைத் தழுவியதற்குப் பொன்னார் மேனியனாகிய உருத்திரனைத் தழுவுவதை உவமை கூறினார். தணி வெய்திய இலக்குவனுக்குச் சீற்றம் பற்றி உருத்திரனை உவமை கூறினர் என்றல் பொருந்தாமை யறிக. மான்தோல் சிவபிரானுக்கு உடை யாதலை: "புள்ளியுழைமான் றோலொன்றுடுத்து" (11-ஆம்திருமுறை மூத்த திருப்பதிகம்-5) என்பதாலறியலாம். "புரவலன், ஆகமற்றவள் தன்னையு மாற்றியிச் சோகந்தீர்ப்பவள் என்று சுமித்திரை" (1722) எனச் சுமித்திரையின் சொல் மாண்பு முன்னும் விளக்கப்பட் டிருத்தல் காண்க. தன்சொல் கடவாது சினம் தணிந்தான் இலக் குவன் என்ற மகிழ்ச்சியால் அவனை இராமன் தழுவினான். (139)

சுமித்திரையின் துன்பம்

**1834.** கண்டாண் மகனும் மகனுந்தன
கண்கள் போல்வார்
தண்டா வனஞ்செல் வதற்கே சமைந்
தார்க டம்மைப்
புண்டாங்கு நெஞ்சத் தனளாய்ப்படி
மேற்பு ரண்டாள்
உண்டாய துன்பக் கடற்கெல்லை
யுணர்ந்தி லாதாள்.

கண்டாள், மகனும் மகனும் தன
கண்கள் போல்வார்,
தண்டா வனம் செல்வதற்கே சமைந்
தார்கள் தம்மை;
புண் தாங்கு நெஞ்சத்தனளாய்ப் படி
மேல் புரண்டாள்;
உண்டாய துன்பக் கடற்கு எல்லை
உணர்ந்திலாதாள்.

பொ:—(சுமித்திரை) தன்னுடைய கண்களைப் போல்பவராய இராமனும் இலக்குவனும் தண்டகவனம் செல்வதற்கு ஆயத்தமாய் இருப்பவர்களைக் கண்டு உண்டான துன்பக்கடலுக்கு எல்லை உணராதவளாய்ப் புண்ணைத் தாங்கிய நெஞ்சத்தை யுடையவளாய்த் தரைமேல் புரண்டாள்.

கு:—கண்டாள், உணர்ந்திலாதாள் முற்றெச்சம். கண்டு உணர்ந்திலாளாய் நெஞ்சத்தனளாய்ப் புரண்டாள் என்று இயையும். தன் மகனும் கோசலை மகனும் என்பது புலப்பட வேண்டி 'மகனும் மகனும்' என்றும், பிறந்த வயிறு வேருயினும் அன்பால் வேறுபாடிலள் என்பது புலப்படத் தனகண்கள் போல்வார் என்றும் கூறினர். தண்டா வனம், தண்டகவனம். இது விந்திய மலைக்கும் சைவல மலைக்கும் இடையிலுள்ள ஒரு காடு, தண்டகன் என்னும் சூரியகுல மன்னன் செய்த பிழை காரணமாகச் சுக்கிராச்சாரியால் சாபமிடப்பட்டு அவன் நாடு காடாயினது ஆதலின் அவன் பெயரால் தண்டகவனம் எனப் பெயர் உண்டாயது. தன் கண் போன்ற மக்கள் காடு புகுவதாலும் அவர்கள் காடு புகுந்தால் தன் கணவன் விண்ணுடு புகுவான் என்பதாலும் உண்டாய பெருந்துன்பத்தால் அவள் நெஞ்சம் புண்ணுயிற்று என்பார் 'புண்டாங்கு நெஞ்சம்' என்ருர். நீர்க் கடலினும் துன்பக்கடல் பெரிதாயிற்று என்பது தோன்றத் "துன்பக் கடற்கு எல்லை உணர்ந்திலாதாள்" என்ருர். படி-பூமி. (140)

## இராமன் ஆற்றுதல் 1835—1836

**1835.** சோர்வாளை யோடித் தொழுதேந்தினன்
றுன்ப மென்னும்
ஈர்வாளை வாங்கி மனந்தேற்றுதற்
கேற்ற செய்வான்

போர்வா ளரசர்க் கிறைபொய்த்தன
ணுக்க கில்லேன்
கார்வா னெடுங்கா னிறைகண்டிவண்
மீள்வ னென்ருன்.

சோர்வாளை ஓடித் தொழுது ஏந்தினன்,
துன்பம் என்னும்
ஈர்வாளை வாங்கி மனம் தேற்றுதற்கு
ஏற்ற செய்வான்,
'போர்வாள் அரசர்க்கு இறை பொய்த்தனன்
ஆக்க கில்லேன்
கார்வான் நெடுங்கான் இறை கண்டு இவண்
மீள்வன்' என்ருன்.

பொ :—இராமன் ஓடிச் சென்று, மண்ணில் புரண்டு சோர்வடைகின்ற சுமித்திரையைத் தொழுது கைகளால் ஏந்திக்கொண்டு, துன்பம் என்கின்ற நெஞ்சை ஈர்கின்ற வாளை வாங்கி அவள் மனத்தைத் தேற்றுதற்கு ஏற்ற செயல்களைச் செய்பவனுய்ப் 'போருக்குரிய வாளை யேந்திய அரசர்க்கு அரசனுகிய தயரதனைப் பொய் கூறியவனுக ஆக்க இயலாதவனுக இருக்கின்றேன்; கரிய மேகம் தவழும் நீண்ட காட்டினைச் சிறிது கண்டு இவ்விடத்திற்கே மீள்வேன்' என்று கூறினுன்.

கு :—தாய் தன் பிரிவு நினைந்து புரண்டு சோர்வதைக் கண்டு பொருத இராமன் அவளைத் தரையிலிருந்து ஏந்தி நிறுத்த வேண்டியவனுனன். துன்பம் இதயத்தைப் பிளப்பது ஆகலின் அதனை ஈர்வாளாக உருவகம் செய்தார். அவள் நெஞ்சம் புண்ணுறச் செய்தது இவ்வாளே என்பது புலப்படுத்தியவாறு. நெஞ்சில் பாய்ந்த வாளை வாங்க வேண்டி 'அரசர்க்கு இறை பொய்த்தனன் ஆக்க கில்லேன்' எனவும் மனம் தேற்றுதற்குக் "கார்வான் நெடுங்கா னிறை கண்டு இவண் மீள்வன்" எனவும், நிரல்நிரையாகக் கொள்க. அரசர்க்கரசனுகிய தன் கணவனைப் பொய்யன் ஆக்காது மெய்யன் ஆக்க வேண்டிப் போகின்ருன் இராமன், என்று எண்ணுங்கால் அவன் காடு புகுவதால் உளதாய துன்பம் நீங்குகின்றதும், காட்டில் நெடிது காலம் தங்காது சிறிது கண்டு மீள்வான் என்றமையால் பிரிவிற்கு ஆற்ருத நெஞ்சம் தேறுகின்றதும் இயல்பாதல் காண்க. பெரியோர் செய்த சிறு பிழையும் உலகத்தாரால் அறியப்பட்டு இகழ்ச்சிக்குரிய தாகும் என்பது தோன்றப் 'போர்வாளரசர்க்கிறை' எனச் சிறப்பித்

தான். செல்லுதற்கு இனிது என்பது புலப்படக் 'கார்வானெடுங்கான்' என்றும், விரைந்து மீள்வேன் என்பது புலப்பட 'இறைகண்டு இவண் மீள்வன்' என்றும் கூறினன். (141)

1836. கான்புக் கிடினுங் கடல்புக்
கிடினுங் கலிப்பேர்
வான்புக் கிடினு மெனக்கன்னவை
மாண யோத்தி
யான்புக்க தொக்கு மெனையார்நலி
கிற்கு மீட்டார்
ஊன்புக் குயிர்புக் குணர்புக்
குலையற்க வென்முன்.

கான் புக்கிடினும் கடல்புக்
கிடினும் கலிப் பேர்
வான் புக்கிடினும் எனக்கு அன்னவை,
மாண் அயோத்தி
யான் புக்கது ஒக்கும்; எனை யார்
நலிகிற்கும் ஈட்டார்?
ஊன் புக்கு, உயிர் புக்கு, உணர் புக்கு
உலையற்க என்றான்.

பொ:—"காட்டில் புகுந்தாலும் அன்றிக் கடலிடையில் புகுந்தாலும் அல்லது, ஒலிக்கிடமாய பெரிய விண்ணில் புகுந்தாலும் எனக்கு அவை யாவும் மாட்சிமையுடைய அயோத்தியில் யான் புகுந்ததை ஒத்து இன்பந்தரும்; எங்குச் சென்றாலும் என்னை வருத்தும் வலிமையுடைய வர்கள் யார் உளர்? ஆதலால் யான் கான் புகுகின்றேன் என்பதற்காக உடம்புள்ளும் உயிருள்ளும் உணர்வுள்ளும் பொருந்துமாறு வருந்த வேண்டாம்" என்றான்.

கு.—கடல் புகுதல் என்றது கடலிடைத் தீவில் புகுவதையும் வான் புகுதல் என்பது விண்ணுலகில் புகுவதையும் உணர்த்தின. கலி-ஒலி. ஒலி தோன்றுதற்கிடம் ஆதலாலும், ஏனை நான்கு பூதங்களையும் அடக்கி நிற்கும் பெருமையுடைமையானும் 'கலிப்பேர்வான்' எனச் சிறப்பித்தார். கான் புகுதலினும் கடல் புகுதலும், கடல் புகுதலினும் வான் புகுதலும், கடுமையான செயல் ஆதலின் அவற்றை அம்முறையே கூறினர். அயோத்தியில் பகையால் நலிவின்றி வாழ்தல் போலவே கானினும் வாழ்வேன்; அதற்குக் காரணம் எனை வருத்தும்

வலிமையுடையார் யாண்டும் இலர் என்பது விளக்கியவாறு. ஒருவர் மனத்துக் கொள்ளும் துன்பம் முன் உணர்வைத் தாக்கிப் பின் உயிரைத் தாக்கி அதற்குப் பின் உடம்பையும் தாக்கி அழிக்க வல்லது என்ற இயல்பு தோன்றக் கூறுகின்றவர், பருப்பொருளும் நுண்பொருளும் மிகு நுண்பொருளும் ஆகிய முறையில் வைத்து, 'ஊன், உயிர், உணர்வு' என்றார். புக்கு என்னும் செய்து என் எச்சங்கள் செய என் எச்சப் பொருளன. ஊன் புகுமாறு உயிர் புகுமாறு உணர்விற் புகுமாறு வருந்தற்க என்பது கருத்து. உலைவு-வருத்தம். எனை யார் நலிகிற்கு மீட்டார் என்றதால் பகையாயுள்ளோரையெல்லாம் நலியும் வலி எனக்குண்டு என்பதும் பெற வைத்தவாறு. இங்குக் கூறிய இராமன் மொழி எதிர்காலவுணர்வுடன் கூறியதாக அமைந்துள்ளமை காண்க. கான் புகுந்த இராமன், கடலிடையுள்ள இலங்கையில் புகுதலும், கானிலும் கடலிடையிலும் பகைவர் பலரை வெல்லுதலும், யாரினும் வலியன் என்றிருந்த இராவணனையும் வெல்லுதலும் பின்னிகழ்ச்சிகளாதல் காண்க. அயோத்தி என்ற பெயர்க் காரணம் பகைவரால் வெல்ல முடியாதது என்பது ஆகலின் அந்நிலை கானிலும் கடலிலும் வானிலும் நிகழ்தல் பற்றி "எனக் கன்னவை மாணயோத்தி" என்றான். (142)

## மரவுரி வருதல் 1837—1838

**1837.** தாயாற்று கிலாடனை யாற்றுகின்
றார்க டம்பால்
தீயாற்று கிலார்தனிச் சிந்தையி
னின்று செற்ற
நோயாற்று கில்லா ருயிர்போல
நுடங்கி டையார்
மாயாப் பழியாடர வற்கலை
யேந்தி வந்தார்.

தாய் ஆற்றுகிலாள் தனை ஆற்றுகின்றார்கள்தம்பால்,
தீ ஆற்றுகிலார், தனிச் சிந்தையின் நின்று செற்ற
நோய் ஆற்றுகில்லார், உயிர்போல நுடங்கு இடையார்,
மாயாப் பழியாள் தர வற்கலை ஏந்தி வந்தார்.

பொ :—ஆற்ற இயலாது வருந்தும் தாயை ஆற்றிக் கொண்டிருக்கும் இராம இலக்குவர் இருக்கும் இடத்திற்கு, தம் தலைவியின் சினத் தீயைத் தணிக்க இயலாதவரும், அவள் தனித் தன்மையுள்ள சிந்தையில் நின்று வெளிப்பட்ட பெருங் கோபத்தால் விளைந்த துன்பங்களைப்

பொறுக்க இயலாதவரும் ஆய பணிப்பெண்டிர், தம் உயிர் வருந்துமாறு போல வருந்தித் தள்ளாடும் இடையை யுடையராய் அழியாப் பழி தேடிக் கொண்ட அக் கைகேயி தர மரவுரியைக் கையில் ஏந்திக் கொண்டு வந்தார்.

கு :—ஆற்றுகின்றுர்கள் தம்பால் ஆற்ற இயலாதவர் வந்தார் என்ற நயம் காண்க. தம் தலைவியின் சினத் தீயைத் தணிக்க இயலாமை யாலாய வருத்தமும், அவள் சினத் தீயால் விளைந்த துன்ப நிகழ்ச்சி களைக் கண்டு பொருத வருத்தமும் உடையராயினர் பணிப் பெண்டிர் என்க. இருவகைத் துன்பத்தாலும் வருந்தும் உயிர்போல விருப்பமில்லா வற்கலையைத் தாங்கும் இடையும் வருந்திற்று என்பது கருத்து. 'தனிச் சிந்தை' என்றுர், எல்லோரும் இராமன் பிரிவிற்கு வருந்தா நிற்கக் கைகேயியின் சிந்தை வருந்தாமல் இருத்தலோடு அவனை விரையவும் செய்யும் கொடுமை நோக்கி. செற்றம்-பெருங் கோபம். இது காறும் வெளிப்படாது மறைந்திருந்ததாகலின், 'சிந்தையில் நின்று' என்றுர். 'வெளிப்பட்ட' என ஒருசொல் வருவிக்க. செற்றத்தால் விளைந்த நோய் என்க. வற்கலை ஏந்தி வந்த பணிப்பெண்டிர் உயி ரும் உடம்பும் வருந்திக்கொண்டே வந்தனர் என்க. எல்லோர்க்கும் உயிரனைய இராமனைக் காட்டிற்கு அனுப்பிய பழி என்றும் மறையா தாகலின் கைகேயியை 'மாயாப் பழியாள்' என்றுர். வற்கலை-மரவுரி. அவள் தருதலால் ஏந்திவந்தனரே அன்றி அப் பெண்டிர் விருப்பத் துடன் ஏந்தி வரவில்லை என்பது கருத்து. (143)

**1838.** கார்வான மொப்பான்றனைக் காண்டொறுங்
காண்டொ றும்போய்
நீராயுகு கண்ணினு நெஞ்சழி
இன்ற நீரார்
பேரா விடர்ப்பட்டய லாருறு
பீழை கண்டும்
இரா மனத்தாடர வந்தன
சீர மென்றுர்.

கார் வானம் ஒப்பான்தனைக் காண்தொறும்
காண்தொறும் போய்
நீராய் உகு கண்ணினும் நெஞ்சு
அழிகின்ற நீரார்

பேரா இடர்ப் பட்டு அயலார் உறு
பீழை கண்டும்
தீரா மனத்தாள் தர வந்தன
சீரம் என்றார்.

பொ:—கரிய மேகம் போன்ற வண்ணமுடைய இராமனைப் போய்க் காணுந்தோறும் காணுந்தோறும் நீராகச் சிந்துகின்ற தம் கண்களைக் காட்டிலும், தம் மனம் நைந்து அழிகின்ற தன்மையுடைய அப்பணிப் பெண்டிர், "தீராத துன்பமுற்று அயலவரும் அடைகின்ற வருத்தத்தைக் கண்டும் தன் கொள்கையில் பற்று விடாத வன்மனத்தவளாய கைகேயி தர வந்தன மரவுரி" என்று கூறினர்.

கு :—'போய்க் காண்டொறும்' என்றியைக்க. கார்வானம் நிறத்தாலும் பயனாலும் இராமனுக்கு உவமை. காணமல் வருந்திய வருத்தத்தினும் இராமன் வனப்பைக் காணுந்தோறும் இப் பேரழகுடையவனை இனிப் பார்க்க இயலாதே என்ற வருத்தம் மிகுதலின் கண்கள் நீர் சொரிந்தன. கண்களில் இடைவிடாது பெருகும் கண்ணீரைக் காணின் கண்களே நீராயுருகிப் பெருகுகின்றனவோ என்று எண்ண நேருமாகலின், 'நீராயுகு கண்' என்றார். நெஞ்சம் நீராய் உருகுதலோடு நில்லாது நைந்து இல்லாமல் போகும் நிலையை யுணர்த்த வேண்டிக் 'கண்ணினும் நெஞ்சழிகின்ற நீரார்' என்றார். அயலாரும் உறு பீழை என உம்மை வருவிக்க. உறவேதுமிலாத அயலாரும் இராமன் பிரிவால் பெருந்துயருறுவதைக் கண்டும் வளர்த்தெடுத்த தாயாகிய கைகேயி இரங்கித் தன்கொள்கையை விடாத வன்னெஞ்சினளாக இருக்கின்றனளே என்ற பொருளைத் தோற்றுவித்தலின் அது இழிவுசிறப்பும்மை. பீழை – துன்பம். தீர்தல் - பற்றுவிடுதல். அவள் தர நாங்கள் கொடு வந்தோம் என்னாது, "தீராமனத்தாள் தர வந்தன" என்றார், தங்கள் விருப்பமின்மையை யுணர்த்தவேண்டி. சீரம்-மரவுரி. (144)

## மரவுரியை இலக்குவன் பெறல்

1839. வாணித்தில வெண்ணகை பார்தர
வள்ள றம்பி
யாணர்த் திருநா டிழப்பித்தவ
ரீந்த வெல்லாம்
பூணப் பிறந்தானு நின்றானவை
போர்வி லோடும்
காணப் பிறந்தேனு நின்றேனவை
காட்டு கென்றான்.

வாள் நித்தில வெள் நகை ஆர்தர
வள்ளல் தம்பி
யாணர்த் திரு நாடு இழப்பித்தவர்
ஈந்த எல்லாம்
பூணப் பிறந்தானும் நின்றான் அவை
போர் விலோடும்
காணப் பிறந்தேனும் நின்றேன் அவை
காட்டுகென்றான்.

பொ:—இராமன் தம்பியாகிய இலக்குவன், ஒளி பொருந்திய முத்தை யொத்த வெள்ளிய பற்கள் தோன்றுமாறு சிரித்து, "புதுவருவாயினை யுடைய அழகிய கோசல நாட்டைப் பெற்று ஆளாது இழக்கச் செய்தவர் கொடுத்த எல்லாவற்றையும் பூண்டுகொள்ளப் பிறந்தவனும் இதோ நின்று கொண்டிருக்கின்றான்; போர் செய்தற்குரிய வில்லோடும் (போர் செய்து அந்நிலையை மாற்றாது) அவன் பூண்கின்ற மரவுரிகளைக் கண்டு நிற்பதற்குப் பிறந்த யானும் நின்று கொண்டிருக்கின்றேன்; அம் மரவுரிகளைக் கொடுமின் என்றான்.

கு:—மரவுரியைக் கண்டு இலக்குவன் சிரித்தமை தோன்ற 'வாணித்தில வெண்ணகை ஆர்தர' என்றார். வெண்ணகை ஆர்தர லாவது பெருகச் சிரித்தல். யாணர்-புதுவருவாய்; அழகுமாம். திருநாடு என்றது கோசலநாட்டை. தயரதன் உரிமையாக்கிய நாட் டைக் கைகேயியே இழக்கச் செய்தாள் ஆதலின் அவளை இழப்பித்த வர் என்றான். இழிவுதோன்றப் பெண்ணொருமையைப் பலர்பாலாகக் கூறினான். ஈந்த எல்லாம் என்றது மரவுரியின் இழிவைப் புலப்படுத்தி யது. போர்வில் இருந்தும் அது கொண்டு நிலையை மாற்ற வியலாது அண்ணன் ஆணைவழி நிற்க வேண்டிய தன் நிலைமை புலப்பட, 'அவை போர் விலோடும் காணப் பிறந்தேனும் நின் றேன்' என்றான். கொடு என்ற பொருளில் காட்டு என்ற சொல் வருதலுண்டு. (145)

## மரவுரி பெற்ற இலக்குவன் அன்னையை வணங்குதல்

1840. அன்னா னவர்தந்தன வாதரத்
தோடு மேந்தி
இன்னா விடர்தீர்ந்துட னேகென
வெம்பி ராட்டி

சொன்னு லதுவேதுணை யாமெனத்
தூய நங்கை
பொன்னு ரடிமேற் பணிந்தா
னவளும் புகன்றுள்.

அன்னுன் அவர் தந்தன ஆதரத்தோடும் ஏந்தி,
'இன்னு இடர் தீர்ந்து உடன் ஏகு' என எம்பிராட்டி
சொன்னுல், அதுவே துணை ஆம்; எனத் தூய நங்கை
பொன்னுர் அடிமேல் பணிந்தான்; அவளும் புகன்றுள்.

பொ—அந்த இலக்குவன் அப்பணிப் பெண்டிர் தந்த மரவுரிகளை அன்போடும் பெற்றுக்கொண்டு, 'இராமன் பிரிவுக்கு ஆற்ருது வருந்தும் கொடிய துன்பத்திலிருந்து நீங்கி, எம்பிராட்டி! என்னை 'இராமனுடன் செல்' என்று சொன்னுல் அச்சொல்லே எனக்குத் துணையாய் உதவவல்லது' என்று சொல்லி, அந்தத் தூய்மையுடைய சுமித்திரையின் பொன் போன்ற அருமையான திருவடிகளின்மேல் வணங்கினுன்; அவளும் (பின்வருமாறு) சொன்னுள்.

கு:—அவர் தந்தனவாகிய மரவுரிகளை என்க; வினையாலணையும் பெயர். ஆதரம் - அன்பு. இராமன் கருத்திற்கேற்றதாகலின் அதற்குப் பெருமை தர அன்புடன் வாங்கினுன். இதுகாறும் ஆற்றவும் ஆற்ருதிருந்த சுமித்திரையின் துன்ப மிகுதியையே, 'இன்னு இடர்' என்றுன். எம்பிராட்டி என்றது சுமித்திரையை, இராமனுடன் செல்லுதற்குத் தனக்கு விருப்பம் இருப்பினும் அன்னையின் ஆணையை இலக்குவன் எதிர் நோக்குகின்றுன்; அச் சொல்லே இராமனுடன் செல்லுதற்கேற்ற வல்லமையைத் தரவல்லது என்பது அவன் நம்பிக்கை. இராமனை வனம் புகுவித்த தூய்மையில்லாத எண்ணம் உடைய கைகேயியைப் போலாது, வனம் செல்லும் இராமனுக்குத் துணையாக இலக்குவனை அனுப்பும் நல்லமனம் உடையாள் ஆதலின், 'தூய நங்கை' எனச் சுமித்திரையைச் சிறப்பித்தார். பொன் போன்ற அழகும் சிறப்பும் உடைய அடியைப் 'பொன்னுரடி' என்றுர். அவள் புகன்ற சொல் வரும் செய்யுளிற் காண்க. (146)

### சுமித்திரை இலக்குவனுக்குச் சொல்லியது 1841—1842

**1841.** ஆகாத தன்று லுனக்கவ்வன
மிவ்வ யோத்தி
மாகாத லிராமனம் மன்னவன்
வைய மீந்தும்

போகா வுயிர்த்தாயர் நம்பூங்குழற்
சீதை யென்றே
ஏகா யினியிவ்வயி னிற்றலு
மேத மென்றாள்.

ஆகாதது அன்றால் உனக்கு அவ் வனம்
இவ் அயோத்தி;
மா காதல் இராமன் நம் மன்னவன்;
வையம் ஈந்தும்
போகா உயிர்த் தாயர் நம் பூங்குழல்
சீதை என்றே
ஏகாய்; இனி, இவ்வயின் நிற்றலும்
ஏதம் என்றாள்.

பொ:—உனக்கு அவ்வனம் இந்த அயோத்திநகரம் ஆகும்; பேரன்புடைய இராமனே நம் மன்னவன் எனவும், இவ்வுலகத்தைப் பரதனுக்குக் கொடுத்த பின்னரும் போகாத உயிரையுடைய தாயர் நம்முடைய பூச்சூடிய கூந்தலையுடைய சீதையே எனவும் கொண்டு செல்; இனி இவ்விடத்தில் நிற்பதும் குற்றமாகும் என்று கூறினாள்.

கு:—அயோத்தியில் பெறும் இன்பம், காட்டிலும் இராமனுடன் செல்வதால் கிடைக்கும் என்பது கருத்து. அயோத்தி என்ற பெயர்க் காரணம் ஆகிய பிறரால் வெல்லப்படாத நிலை, காட்டிலும் உனக்குக் கிடைக்கும் என்பதும் கருத்தாகக் கொள்க. "கான்புக்கிடினும்.........எனக்கு அன்னவை மாண் அயோத்தி" (1836) என இராமன் கூறியதும் நினைக்க. அயோத்தியிலுள்ள தாய் தந்தையரை விட்டுப் பிரிய நேர்கின்றதே என இலக்குவன் எண்ணலுங் கூடும் ஆதலின், இராமனே தந்தை என்றும் சீதையே தாய் என்றும் உட்கொண்டு செல்க என்றாள். உயிர்த் தாயர் என்று பன்மையாற் கூறியது, தன்னையும் கோசலையையும் நினைந்து. 'நற்றாதையு நீ' என இலக்குவன் முன் கூறியதை வலியுறுத்தியவாறு. அண்ணனையும் அண்ணன் மனைவியையும் தந்தையும் தாயும் ஆக எண்ணுதல் மரபு. நாட்டை இராமனுக்கின்றிப் பரதனுக்கீந்தவுடன் தாயர்க்கு உயிர் போகும் நிலை உண்டாயிற்று என்பது கருத்து. சிறிது நேரம் இங்கு நின்றாலும் பிறர்க்கு உரிய நாட்டில் நின்ற குற்றம் வரும் என்பாள், "இனி இவ்வயின் நிற்றலும் ஏதம்" என்றாள். (147)

1842. பின்னும் பகர்வாண் மகனேயிவன்
பின்செ றம்பி
என்னும் படியன் றடியாரினில்
ஏவல் செய்தி
மன்னுந் நகர்க்கே யிவன் வந்திடின்
வாவ தன்றேல்
முன்னம் முடியென்றனள் பான்முலை
சோர நின்றாள்.

பின்னும் பகர்வாள், 'மகனே! இவன்
பின் செல்; தம்பி
என்னும்படி அன்று; அடியாரினில்
ஏவல் செய்தி;
மன்னும் நகர்க்கே இவன் வந்திடின்
வா; அது அன்றேல்
முன்னம் முடி;' என்றனள் பால் முலை
சோர நின்றாள்.

பொ:—(மகன் மேல் உள்ள அன்பால்) நகிலில் பால் சோர நின்ற சுமித்திரை, பின்னும் சொல்லுவாளாய், "மகனே! இந்த இராமனுக்குப் பின் செல்; தம்பி என்று பிறர் எண்ணும்படியாக அன்று; அடியவரைப் போல ஏவல் செய்வாயாக; இவன் நிலைபேறுள்ள இவ்வயோத்தி நகர்க்கு வந்தால் உடன் வா; அஃதில்லையாயின் அவனுக்கு முன்னரே முடிக" என்றாள்.

கு:—'தம்பி என்னும்படியன்று' என்று மறுத்தது, தம்பி என்ற உரிமையை எண்ணின் பணி செய்ய இயலாது போகலாம் என்னும் கருத்தாலாகும். இட்சுவாகு முதலாக உள்ள மன்னர்களின் ஆளுகைக்குட்பட்டு நிலை பெற்றிருத்தலின் 'மன்னும் நகர்' என அயோத்தியைச் சிறப்பித்தார். இராமன் இறக்க நேர்ந்தால் என்பதைக் குறிப்பால் புலப்படுத்த 'அதன்றேல்' என்றாள். முடிதல்-இறத்தல். இராமன் இறக்க நேர்ந்தால் அவனுக்கு முன் நீ இறக்க என்பது கருத்து. "பொன்றா முன்னம் பொன்றுதி யென்றா ளுரைபொய்யா நின்றாலன்றோ நிற்பது வாய்மை நிலையம்மா" (ஆரணிய-10-31) என இக்கருத்தையே இலக்குவன் எடுத்துக் கூறலும் காண்க. (148)

இதன்பின் ஒரு பிரதியில்,

1842 (a) ஆய்தந்த மென்சீரை யணிந்தடி தாழ்ந்து நின்ற
சேயுந்து நிலை நோக்கினள் சேயரிக் கண்க டேம்ப
வேய்தந்த மென்றோளி தன்மென்முலை பாலு குப்பத்
தாய் நிந்தை யின்றிப் பலவூழி தழைத்தி யென்றாள்.

என்ற செய்யுளும், அதன் பின், 'சூழ்வினைப் படலம் முற்றும்' என்ற தொடரும், மேல் வருவனவற்றிற்கு நகர்நீங்கு படலம் என்ற தலைப்பும் காணப்படுகின்றன என்று 45-ல் உள்ளது.

## இராம இலக்குவர் விடைபெற்றுப் போதல்

**1843.** இருவருந் தொழுதன ரிரண்டு கன்றொரீஇ
★ வெருவரு மாவினிற் றாயும் விம்மினாள்
பொருவருங் குமரரும் போயி னார்புறம்
திருவரைத் துகிலொரீஇச் சீரை சாத்தியே.

இருவரும் தொழுதனர்; இரண்டு கன்று ஒரீஇ,
வெருவரும் ஆவினில் தாயும் விம்மினாள்;
பொரு அரும் குமரரும் போயினார் புறம்
திரு அரைத் துகில் ஒரீஇச் சீரை சாத்தியே.

பொ :—இராம இலக்குவராகிய இருவரும் சுமித்திரையைத் தொழுதார்கள்; இரண்டு கன்றுகளைப் பிரிந்து பிரிவுக்கு அஞ்சுகின்ற ஆவினைப் போலச் சுமித்திரையும் புலம்பினாள்; ஒப்பற்ற அவ்விரு குமாரரும் தம் திருவரையில் கட்டிய உயர்ந்த துகிலை நீக்கிவிட்டு மரவுரியைச் சாத்திக்கொண்டு புறத்தே போனார்கள்.

கு :—இரு மக்களைப் பிரியும் சுமித்திரைக்கு இரண்டு கன்றுகளைப் பிரியும் ஆ உவமையாயிற்று. "கற்று வின் மனம் போலக் கசிந்துருக வேண்டுவனே" என மணிவாசகரும் கன்றினைப் பிரிந்த ஆவின் மன நிலையை உருக்கத்திற்கு உவமை கூறியிருத்தல் காண்க. வெருவரல்-அஞ்சுதல்; பிரிவிற்கு அஞ்சி வருந்துதல். 'பொருவருங் குமரரும் என்றது சுட்டின்பொருளதாய்நின்றது. (149)

## இலக்குவனுக்கு இராமன் மொழிதல் 1844—1845

**1844.** தான்புனை சீரையைத் தம்பி சாத்திடத்
தேன்புனை தெரியலான் செய்கை நோக்கினான்

வான்புனை யிசையினய் மறுக்கி லாதுநீ
யான்புக லினையதோ ருறுதி கேளெனு.

தான் புனை சீரையைத் தம்பி சாத்திடத்,
தேன் புனை தெரியலான் செய்கை நோக்கினன் ;
வான் புனை இசையினய்! மறுக்கிலாது நீ
யான் புகல் இனையது ஓர் உறுதி கேள் எனு.

பொ :—தான் புனைந்தது போன்ற மரவுரியைத் தம்பி இலக்குவனும் சாத்திக் கொள்ள அவன் செய்கையைத் தேன் பொருந்திய மாலை யணிந்த இராமன் நோக்கி, "வானளாவும் புகழையுடைய தம்பி ! யான் சொல்லுகின்ற இந்த ஒருறுதிச் சொல்லை நீ மறுக்காமல் கேட்பாயாக" என்று.

கு :—குளகம். இலக்குவனும் சீரை புனைந்த செய்கையால் அவன் உடன்வரத் துணிந்துவிட்டான் என்பதை யுணர்ந்தான் இராமன் என்பார், 'செய்கை நோக்கினன்' என்றார். நோக்குதல்-கருதுதல். தான் கூறுவது மறுத்தற்குரியது என்பதை இராமன் உணர்ந்தே மறுக்கிலாது கேள் என்றான். சேய்மையிலுள்ள வானிலும் புனையும் புகழ் எனவே மண்ணிற் புகழும் அடங்கும். வான்-விண்ணுலகம். மண்ணினும் விண்ணினும் பரவிய புகழுடையோய் எனத் தம்பியைப் புகழ்ந்து தன் சொல்லைக் கேட்குமாறு தூண்டுகின்றான். 'யான் புகல் இனையதோர் உறுதி' என்பதும் கேட்கத்தக்கது என்ற கருத்தை வலியுறுத்துவதே ஆம். நோக்கினன், முற்றெச்சம். (150)

**1845.** அன்னைய ரனைவரு மாழி வேந்தனும்
முன்னைய ரல்லர்வெந் துயரின் மூழ்கினர்
என்னையும் பிரிந்தன ரிடரு ருவகை
உன்னைநீ யென்பொருட் டுதவு வாயென்றான்.

"அன்னையர் அனைவரும் ஆழி வேந்தனும்
முன்னையர் அல்லர்; வெம் துயரில் மூழ்கினர்;
என்னையும் பிரிந்தனர் இடர் உருவகை
உன்னை நீ என் பொருட்டு உதவுவாய்;" என்றான்

பொ :—"தாய்மார் அனைவரும், ஆணைச் சக்கரத்தை யுடைய வேந்தனும், முன்னை நிலையினர் அல்லர்; இப்பொழுது கொடிய துன்பத்தில் மூழ்கியுள்ளார்கள்; அத்துன்பத்தோடு என்னையும் பிரிந்து துன்புறுதபடி உன்னை என் பொருட்டாக உதவுவாயாக" என்றான்.

கு: —அன்னையர் அனைவரும் என்றது கோசலையையும், சுமித்திரையையும் ஏனை அறுபதினயிரரையும் ஆம். மகிழ்ச்சியுடன் இல்லை என்பான், "முன்னையர் அல்லர்" என்ருன். வெந்துயர்க்குக் காரணம் முடிபுனை விழா தடையுற்றது முதலியன. வெந்துயரைக் 'கடலாக்கி' மூழ்கினர் என்ருன். இது குறிப்புருவகம். என்னையும் பிரிந்தனர், என்ற உம்மை முடிபுனை விழாத் தடைபட்டது காரணமாக வந்த துன்பத்தைத் தழீஇயிற்று. என்னைப் பிரிந்த துயரை உன்னைக் கண்டேனும் தணிப்பர் ஆதலின், என்பொருட்டு உன்னைத் துணையாகத் தந்து உதவுவாயாக என்ருன். அவன் மருமை எண்ணி 'என் பொருட்டு உதவுவாய்' என்ருன். (151)

## இலக்குவன் மறுமொழி 1846—1850

**1846.** ஆண்டகை யம்மொழி
பகர வன்பனும்
தூண்டகு திரள்புயந்
துளங்கத் துண்ணெ
மீண்டதோ ருயிரிடை
விம்ம விம்முவான்
ஈண்டுனக் கடியனேன்
பிழைத்த தியாதென்ருன்.

ஆண்டகை அம்மொழி பகர, அன்பனும்,
தூண் தகு திரள் புயம் துளங்கத் துண் என,
மீண்டது ஓர் உயிர் இடை விம்ம விம்முவான்,
'ஈண்டு உனக்கு அடியனேன் பிழைத்தது யாது'? என்ருன்.

பொ :—ஆண்தன்மையிற் சிறந்த இராமன் அச்சொல்லைச் சொல்ல, அவன்பால் அயரா அன்பு கொண்ட இலக்குவனும், தூணின் தன்மை வாய்ந்த தன் திரண்ட தோள்கள் குலுங்கத் திடுக்கிட்டு, மரணத்தினின்றும் மீண்டதாகிய ஒப்பற்ற தன்னுயிர் மீண்டும் இடையில் துன்புறுதலால் தேம்புவானய், இப்பொழுது உனக்கு அடியேன் செய்த பிழை யாது? என்று கூறினன்.

கு :—தூண் எனத்தகும் புயம் என்க. திரட்சியும் நீட்சியும் பற்றித் தூண் தோளுக்கு உவமையாயிற்று. துளங்குதல்–குலுங்குதல். எதிர்பாராத ஒலி கேட்குங்கால் உண்டாகும் நடுக்கத்தை இவ்வாறு புலப்படுத்தினர். துண்ணெனல்-திடுக்கிடல்; அஞ்சுதல். இராமன் கான்புகுவான் என்பது கேட்டு உடல்விட்டுப்போனது போன்ற இலக்குவன்

உயிர், சுமித்திரை சொல் கேட்டு மீண்டதுபோன்று இன்புற்றது என்றும், இப்பொழுது இராமன் கூறிய சொல்லால் அவனுடன்செல்லல் கூடாது எனத் தோன்றலின் அம்மீண்ட உயிர் மீண்டும் இறப்பது போன்று வருந்திற்று என்றும், அவ்வுயிர் விம்முதலால் இலக்குவன் வாய் திறந்து விம்முகின்ருன் என்றும் விரித்துரைக்க. தான் விம்முதற்குமுன் தன்னுயிர் விம்மிற்று என அவ்வுயிரின் அன்பினை யுணர்த்தினர். விம்முவான் வினையாலணையும் பெயர். ஈண்டு, காலத்தை யுணர்த்திற்று. இதுகாறும் இவ்வாறு கூருத இராமன், இப்பொழுது தன்னைவிட்டு நகரில் தங்குமாறு கூறுதற்குரிய குற்றம் யாதும் செய்திலேன் என்பான், "பிழைத்ததியாது" என்று வினவினன். கூட்டொருவரையும் வேண்டாக் கொற்றவன் இராமன் ஆதலின் இலக்குவன் துணை வேண்டாது கானில் யாரையும் வென்று திரிய வல்லான் என்பது தோன்ற 'ஆண்டகை' என இராமனையும், இராமனே தனக்கு எல்லாம் என எண்ணி வாழும் இலக்குவன் அவனைப் பிரிந்திருக்க ஒல்லாத பேரன்பினன் என்பது தோன்ற, 'அன்பனும்' என இலக்குவனையும் குறிப்பிட்டார். (152)

**1847.** நீருள வெனினுள மீனு நீலமும்
பாருள வெனினுள யாவும் பார்ப்புறின்
நாருள தனுவுளாய் நானுஞ் சீதையும்
ஆருள ரெனினுள மருளு வாயென்ருன்.

'நீர் உள எனின் உள, மீனும் நீலமும்;
பார் உள எனின் உள, யாவும்; பார்ப்புறின்,
நார் உள தனு உளாய்! நானும் சீதையும்
ஆர் உளர் எனின் உளம்? அருளுவாய்' என்ருன்.

பொ :—'நீர்நிலையில் நீர் இருந்தால் மீனும் நீலக் கொடியும் உளவாம்; பூமி உளதாயின் எல்லாவுயிர்களும் உளவாம்; நாண் பொருந்திய வில்லை யேந்தியவனே! ஆராய்ந்து பார்க்குமிடத்து நானும் சீதையும் யார் இருந்தால் இருப்போம்? சொல்லியருளுக' என்ருன்.

கு :—குளத்தில் நீருள்ளவரை வாழ்ந்து அது அற்றதும் வாடி அழியும் இயல்புள்ளவை மீனும் நீர்ப்பூங் கொடிகளும் ஆதலாலும், எல்லாப் பொருளுக்கும் ஆதாரமாயுள்ள தரை இருந்தாலன்றி எவ்வுயிரும் இருத்தல் இயலாது ஆகலானும், இராமனைப் பிரிந்து வாழ இயலாத இலக்குவனுக்கும் சீதைக்கும் அவை உவமையாயின. நீரும் பாரும் இராமனுக்கும் மீனும் நீலமும், உயிர் வகைகளும் இலக்குவ

னுக்கும் சீதைக்கும் உவமை. "கடைஇய வாற்றிடை நீர் நீத்த வறுஞ்சுனே, அடையொடு வாடிய வணிமலர் தகைப்பன" (கலி-3) எனத் தலைவனைப் பிரிந்து வருந்தும் தலைவி நிலையை, நீர்நீத்த சுனையில் உள்ள மலர்கள் நினைவூட்டி அத்தலைவனைத் தடுக்கும் எனக் கூறப் பட்டிருத்தல் இங்கு நினைக்கத்தகும். நகரத்து மக்கள் யாரும் நீயிருந்தா லன்றி இருக்கமாட்டார் என்பதை விளக்க வந்தது இரண்டாமடி எனவும் கொள்ளலாம். சீதையையும் இங்குக் கூறியது, என்னிடம் கூறியதுபோல அவளிடமும் சொல்லி அவளைத் துன்பத்தில் ஆழ்த்தவேண்டாம் என்னும் குறிப்பினது. நார்-நாண். நாணும் வில்லும் ஒன்றைவிட்டு ஒன்று நீங்கி யிராது என்பதை யறிந்தவனே என்ற கருத்துப் புலப் பட "நாருள தனுவுளாய்" என்று விளித்தான்; யானும் நின்னைவிட் டுப் பிரியேன் என்பதை யறிந்தவனே என்பது குறிப்பு. நின் கையி லுள்ள வில்லிற்கும் நார் (நாண்) இருக்கும்போது நின்னுள்ளத்தில் நார் (அன்பு) இல்லாது மொழிகின்றாயே என்ற குறிப்பும் இருத்தல் காண்க. நீ யிருந்தாலன்றோ யானும் சீதையும் உளம் என்பான், 'ஆருளரெனின் உளம்?' என வினவுகின்றான். (153)

**1848.** பைந்தொடி யொருத்திசொற்
கொண்டு பார்மகள்
நைந்துயிர் நடுங்கவு
நடத்தி கானென
உய்ந்தன னிருந்தன
னுண்மை காவலன்
மைந்தனென் றினையசொல்
வழங்கி னையென.

'பைந்தொடி ஒருத்தி சொல் கொண்டு, பார்மகள்
நைந்து உயிர் நடுங்கவும் 'நடத்தி கான்' என,
உய்ந்தனன்; இருந்தனன்; உண்மை காவலன்
மைந்தன்; என்று இனைய சொல் வழங்கினாய்?' என.

பொ :—'பசுமையான வளையணிந்த ஒருத்தியின் சொல்லைக் கொண்டு, பூமியாகிய பெண் வருந்தி உயிர் நடுங்காநிற்கவும் அதை நோக்காது, காட்டிற்குச் செல்வாயாக' என்றுகூறிவிட்டு, உயிர் வாழ்ந் திருக்கின்ற மெய்ம்மையின் பாதுகாவலனாகிய தயரதன் மைந்தன் யான் என்ற எண்ணத்தால் இத்தன்மையான சொல்லைச் சொன்னாய் போலும்!' என்று.

கு :—பைம்பொனுலியன்ற தொடியைப் பைந்தொடி என்ருர். பார்மகள் ஒருத்தி நடுங்குவதைப் பாராது கைகேயி ஒருத்தியின் சொல்லைமட்டும் கொண்டு இராமனுக்குக் காடு கொடுத்தும் உயிர்வாழும் வன்கண்மை தயரதனுக்கு இருத்தலின், அவன் மகனுகிய எனக்கும் உன்னைப் பிரிந்து உயிர்வாழும் அவ்வியல்பு இருக்கும் என மரபுநிலை கருதிக் கூறினுய்போலும் என்பது கருத்து. மகனறிவு தந்தையறிவு என்னும் பழமொழியும் காண்க. 'உண்மை காவலன்' என்றது, குறிப்பு மொழி. "ஈந்துவைத் தில்லையென்ற வன்கட்புலந் தாங்கிய மன்னவன்" (1822) என முன்னர்க் கூறியதும் காண்க. வாய்மை காக்க வேண்டிக் கைகேயியின் சொல்லிற் குடன்பட்டான் என்று பிறர்கூறல் கண்டு, 'உண்மை காவலன்' என்ருன், அவர் கருத்துப் பொருந்தாமை யுணர்த்த. உன்னைக்கான் புகுத்தி உயிர்வாழும் மன்னவன் போல யான் நின்னைப் பிரிந்து உயிர்வாழ்ந்திரேன் என்பது குறிப்பு. (154)

**1849.** மாறினி யென்னைநீ வனங்கொள் வாயென
ஏறின வெகுளியை யாது முற்றுற
ஆறினை தவிர்கென வைய வாணையிற்
கூறிய மொழியினுங் கொடிய தாமென்ருன்.

'மாறு இனி என்னை? நீ வனம் கொள்வாய் என
ஏறின வெகுளியை, 'யாதும் முற்று உற
ஆறினை தவிர்க' என ஐய! ஆணையின்
கூறிய மொழியினும் கொடியது ஆம்' என்ருன்.

பொ :—ஐயனே! (என்னை இங்குத் தங்குக என்று கூறிய நின் சொல்லின் கொடுமைக்கு) ஒப்புமை இனி யாதுளது? நீ காட்டிற்குப் போகின்ருய் என்று சொல்லக் கேட்டவுடன் வளர்ந்த கோபத்தை, "முழுவதும் முற்றுப்பெறுமாறு தணிவெய்தி விடுக" என்று ஆணையுடன் கூறிய சொல்லைக் காட்டிலும், (என்னை 'இங்கே தங்குக' என்ற சொல்) கொடியது ஆகும் என்று கூறினுன்.

கு :—மாறு-ஒப்பு. "மாறின்மையின் மறம் வாடு மென்றிளையாரையு மெறியான்" (சிந்தாமணி-2261) என்புழி அது அப்பொருளது ஆதல் காண்க. அச் சொல்லின் கொடுமைக்கு ஒப்புமை இல்லை யென்பான் 'மாறு இனி என்னை?' என்று வினவிப் பின் உறழ்ச்சியால், 'மொழியினுங் கொடியதாம்' என்று விளக்கினுன். வனங்கொள்ளுதல்-வனவாசியாதல். நெருப்புப் பொறிபோல வெகுளி சிறிதிருப்பினும் பின் பெருந்தீமை விளைக்குமாகலின், அது சிறிது மின்றி ஒழிய என்பான், 'யாதும், முற்றுற' என்றும், கோபம் தணிந்தோம் என்ற எண்ணம்

இருப்பினும் பின்னும் அது கிளைத்தற்கு இடமாகலின் 'ஆறினை' என்றுெழியாது "தவிர்க" என்றும் கூறினன். தவிர்தல்-விடுதல். ஆணை-கட்டளை. 'கோபம் தணிக' என்ற சொல்லைக் கேட்டபோது, 'நின்னோடு உடன் வந்து பணிபுரியலாம் என்ற மகிழ்ச்சியேனும் இருந்தது; இப்பொழுது கூறிய சொல்லில் அம்மகிழ்ச்சிக்கும் இடமில்லை என்பான் 'கூறியமொழியினும் கொடியது' என்றான். (155)

1850. செய்துடைச் செல்வமோ
யாதுந் தீர்ந்தெமைக்
கைதுடைத் தேகவுங்
கடவையோ வையா
நெய்துடைத் தடையலர்
நேய மாதர்கண்
மைதுடைத் துறைபுகும்
வயங்கொள் வேலினாய்.

'செய்து உடைச் செல்வமோ யாதும் தீர்ந்து, எமைக்
கை துடைத்து ஏகவும் கடவையோ? ஐயா!
நெய் துடைத்து, அடையலர் நேய மாதர் கண்
மை துடைத்து, உறை புகும் வயம் கொள் வேலினாய்!"

பொ:—'ஐயா! நெய்பூசப்பெற்றுப் பகைவர்களுடைய காதல் மனைவியரின் கண்ணில் உள்ள மையைத் துடைத்துவிட்டு உறையில் வந்து புகுகின்ற, வெற்றி கொள்ளுதற்குரிய வேலை யுடையவனே! நின் முன்னோர்களால் ஈட்டப்பட்டதால் நினக்கு உரிமையுடைய செல்வம் எல்லாவற்றையும் துறந்து, அச்செல்வத்தைப் போலவே எம்மையும் கை துடைத்துத் துறந்து செல்லுதலும் செய்வையோ?'

கு:—வேலிற்கு நெய் பூசுவது துருவேறாமைக்கு. "கண்டிரள் நோன்காழ் திருத்தி நெய்யணிந்து" (புறநா-95) என்பதால் வேலிற்கு நெய் பூசும் வழக்கம் தெளியலாம். நெய், விடநெய் எனக்கொண்டு பகைவர் மார்பில் பட்டவுடன் மாய்வதற்காகப் பூசப்பட்டது எனவுங் கொள்ளலாம். நேயமாதர்-அன்பு மிகு கற்புடைமனைவியர். அவர் கண் மை துடைத்தலாவது, அவர் கணவரைக் கொல்லுவது; கணவரை யிழந்த கைம்மை மகளிர் கண்ணிற்கு மை தீட்டிப் புனையார் ஆதலின் அதை வேல் துடைத்ததாகக் கூறிக் கணவரைக் கொன்றமை பெற வைத்தார். மை துடைத்தல் கூறி அவர் கழிகல மகடூஉ ஆனமை புலப்படுத்தினர். பகைவராய்க் கொல்லற் குரியார் பிறரின்மையின் உறைபுகுதல் கூறினர். வயம்-வெற்றி; வலியும் ஆம்.

செய்தல்-ஈட்டல். "செய்க பொருளை" (குறள்-759) என்புழியும் அது அப்பொருளது ஆதல் காண்க. தீர்ந்து-துறந்து. "தீர்தலும் தீர்த்தலும் விடற்பொருட்டாகும்" (தொல்-சொல்-318) என்றது காண்க. கை துடைத்தல் என்றது, துறத்தலைக் குறிப்பாலுணர்த்திற்று. கையிலுள்ள நீர்ப்பற்றை நீக்கத் துணியில் துடைப்பது வழக்கம் ஆகலின், பற்று நீங்கியதை யுணர்த்துதற்கும் அந்நிகழ்ச்சியையே கூறினர். சீதையையுளப்படுத்தி 'எமை' என்றான். கடவையோ-செய்வாயோ? செல்வம் உணர்வில் பொருளாதலின் துறத்தல் கூடும்; யாங்கள் அதற்குரியேம் அல்லேம்; துடைக்கினும் போகேம் என்பது கருத்து. (156)

### இராமன் நிலை

**1851.** உரைத்தபின் னிராமனொன்
றுரைக்க நேர்ந்திலன்
வரைத்தடந் தோளினான்
வதன நோக்கினான்
விரைத்தடந் தாமரைக்
கண்ணின் மிக்கநீர்
நிரைத்திடை யிடைவிழ
நெடிது நிற்கின்றான்.

உரைத்த பின் இராமன் ஒன்று உரைக்க நேர்ந்திலன்;
வரைத் தடம் தோளினான் வதனம் நோக்கினான்;
விரைத் தடம் தாமரைக் கண்ணின் மிக்க நீர்
நிரைத்து, இடையிடை விழ நெடிது நிற்கின்றான்.

பொ :—இலக்குவன் அவ்வாறு சொன்னபின் இராமன், மேல் ஒன்றும் உரைக்க விரும்பாதவனாய், மலைபோன்ற பெரிய தோளினையுடைய இலக்குவன் முகக்குறிப்பை நோக்கினான்; முகக்குறிப்பால் ஆழ்ந்து அகன்ற அவன் அன்புள்ளத்தை யறிந்து கொண்டு, மணமிக்க பெரிய தாமரை மலர் போன்ற கண்ணில் மிக்கு ஒழுகிய நீர் வரிசை வரிசையாக இடையில் விழ நெடிது நேரம் அசையாது நிற்பானாயினான்.

கு :—முன்பு இராமன் கூறிய தணிமொழியால் இலக்குவன் எதிர் நின்று தெரிந்து செப்பும் மாற்றம் துறந்தது போல, இங்கு இலக்குவன் கூறிய பணிமொழியால் இராமன் மேல் ஒன்றும்

உரைக்க இயலாத நிலையை யடைந்தான் என்பது கருத்து. உள்ளக் குறிப்பைச் சொல்லால் உணர்வதினும் முகத்தால் உணர்வதே சீரிது ஆகலின் இராமன், இலக்குவன் வதனம் நோக்கினன் என்க. "அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சங் கடுத்தது காட்டும் முகம்" (குறள்-706) என்றது காண்க. வதன நோக்கியவன் நிலையைக்கூறி, இலக்குமணன் வதன நிலையைப் புலப்படுத்தியவாறு. நாடாள்வதை விடுத்துக் காடாள்கெனச் சிற்றன்னை செப்பிய பொழுது, அப்பொழுதலர்ந்த செந்தாமரையினை வென்ற முகமுடைய இராமனை, கண்ணீர் விட்டு நெடிது நிற்குமாறு செய்த இலக்குமணன் முகநிலையை நினைத்துக் காணுமாறு செய்துள்ள சிறப்புக் காண்க. கண்ணீர்த்துளி ஒன்றன் பின் ஒன்றாய் விழும் நிலையையே 'நிரைத்து விழ' என்றார். இடை முன்னது உறுப்பு; பின்னது இடப்பொருள் உணர்த்திற்று. (157)

## வசிட்டன் வந்து வருந்துதல் 1852—1856

1852. அவ்வயி னரசவை
நின்று மன்பினன்
எவ்வமி லிருந்தவ
முனிவ னெய்தினன்
செவ்விய குமரருஞ்
சென்னி தாழ்ந்தனர்
கவ்வையம் பெருங்கடல்
முனியுங் கால்வைத்தான்.

அவ்வயின் அரசு அவை நின்றும் அன்பினன்,
எவ்வம் இல் இருந்தவ முனிவன் எய்தினன்;
செவ்விய குமரரும் சென்னி தாழ்ந்தனர்;
கவ்வையம் பெருங்கடல் முனியும் கால் வைத்தான்.

பொ:—அவ்வாறு இராமன் நிற்கின்ற பொழுது அரச அவையிலிருந்து அன்புடையனாகிய, துன்பமறியாத இயல்புடைய பெருந்தவ முனிவனாகிய வசிட்டன் வந்தான்; வந்த வசிட்டனை, செம்மை நலமுடைய இராம இலக்குவரும் தலைதாழ்த்தி வணக்கம் செலுத்தினார்கள்; அவர்கள் நிலையைக் கண்ட, அவ் வசிட்டமுனிவனும், துன்பமாகிய பெரிய கடலில் கால் வைத்துவிட்டான்.

கு:—வயின், இங்குக் கால முணர்த்திற்று. இடம் எனலும் ஆம். அன்பினனாகிய முனிவன் என்க. எவ்வம்-துன்பம். தவத்தால் உடல்

நெடிது வருந்தினும் உளத்தால் அத்துன்பத்தை நினையாத இயல் புணர்த்த வேண்டி, 'எவ்வமில் இருந்தவ முனிவன்' என்ருர். 'இடும்பை, யாவது மறியா இயல்பினர்' (திருமுருகாற்-135, 136) என முனிவர் இயல்பு கூறியுள்ளமை நோக்குக. வசிட்டன் வந்தவுடன் தங்கள் துன்ப நிலையை மறைத்து அம்முனிவனை வரவேற்கும் செவ்விய நிலையினர் ஆயினர் என்பது தோன்றச் 'செவ்விய குமரரும்' என்ருர். கவ்வை-துன்பம். முனியும் என்புழி உம்மை உயர்வு சிறப்பு. துற வுள்ளத்தால் இன்பத்துன்பங்களை ஒப்ப நோக்கும் முனிவனும் இராம இலக்குவர் நிலைகண்டு துன்புறத் தொடங்கிவிட்டான் என்று பொருள் படுதல் காண்க. கடலில் கால் வைத்தான் எனவே இனி அதில் மூழ்குவான் என்பது இசையெச்சம். இராம இலக்குவர் பரி மாறிக்கொண்ட துன்பநிலை அவர் மறைப்பினும் மறையாது முனிவனை யும் துயர்க்கடலில் ஆழ்த்தியது என்க. (158)

1853. அன்னவர் முகத்திஞே டகத்தை நோக்கிஞன்
பொன்னரைச் சீரையின் பொலிவு நோக்கிஞன்
என்னினி யுணர்த்துவ தெடுத்த துன்பத்தால்
தன்னையு முணர்ந்தில னுணருந் தன்மையான்.

அன்னவர் முகத்திஞேடு அகத்தை நோக்கிஞன்;
பொன் அரைச் சீரையின் பொலிவும் நோக்கிஞன்;
என் இனி உணர்த்துவது? எடுத்த துன்பத்தால்,
தன்னையும் உணர்ந்திலன் உணரும் தன்மையான்.

பொ :—அந்த இராம இலக்குமணர் முகத்தைக் கண்டதோடு அவர் உள்ளத்தையும் உணர்ந்தான்; அழகிய அரையில் உடுத்த மரவுரியின் பொலிவையும் பார்த்தான்; அங்ஙனம் நோக்கிய, எல்லாவற் றையு முணரும் தன்மையுடைய வசிட்டன், உளத்துக் கொண்ட துன்பத் தால் தன்னையும் அறியாதவனுனன் என்ருல் அவர் துன்ப நிலையைப்பற்றி இனி யுணர்த்த வேண்டுவது என்னுளது?

கு :—அகத்தை யுணர்த்தும் சிறப்பு முகத்திற்கு இருத்தலின் 'முகத் திஞேடகத்தை' என உயர்பின்வழிவரும் ஒடுக் கொடுத்தார். அகத்தை நோக்குதலாவது குறிப்பால் அனுமானித்துணர்தல். பொன்-அழகு. அவர்கள் அழகிய இடையில் உடுத்த மரவுரியும் பொலிவு பெற்றதாகலின், 'சீரையின் பொலிவும் நோக்கிஞன்' என்ருர். எல்லா முணர்ந்த வசிட்டன் தன்னையும் மறந்து துன்புற்ற நிலை கொண்டு, அவர் துன்ப நிலை இத்தகையது என உணரலாமாதலின், என்னினி யுணர்த்துவது? என்ருர். மேலைச் செய்யுளில் கவ்வையம் பெருங்கட

லில் கால் வைத்த வசிட்டன் அக்கடலில் அழுந்தி விட்டமை தோன்ற, 'தன்னையு முணர்ந்திலன்' என்றார். (159)

**1854.** வாழ்வினை நுதலிய மங்க லத்துநாள்
தாழ்வினை யதுவரச் சீரை சாத்தினான்
சூழ்வினை நான்முகத் தொருவர்ச் சூழினும்
ஊழ்வினை யொருவரா லொழிக்கற் பாலதோ.

'வாழ்வினை நுதலிய மங்கலத்து நாள்
தாழ் வினை அது வரச் சீரை சாத்தினான்;
சூழ்வினை நான்முகத்து ஒருவர்ச் சூழினும்
ஊழ்வினை ஒருவரால் ஒழிக்கற்பாலதோ?'

பொ :—முடி புனைதல் ஆகிய வாழ்வைக் கருதி உறுதி செய்த மங்கலத்துக்குரிய நாளில் தாழ்தற்குக் காரணமாகிய தீவினை வருதலால் (பொன்னுடை புனைய வேண்டியவன்) மரவுரியைச் சாத்திக்கொண்டான்; ஆராய்தலையே தொழிலாகக் கொண்ட நான்கு முகங்களையுடைய ஒருவரை ஊழ்வினை சூழ்ந்து கொண்டாலும் அது அவரால் ஒழிக்கும் தன்மையதோ? அன்று.

கு:—வேற்றுப்பொருள்வைப்பணி. "ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று சூழினுந் தான் முந்துறும்" (குறள்-380) என்பதைத் தழுவிக் கூறியது இது. நுதலுதல்-கருதுதல். நான்கு முகமுடையராய் விதித்தற்குரிய அயனார்க்கும் ஊழ்வினையை ஒழிக்க இயலாது என்றால் ஒரு முகமுடைய இராமனுக்கு எங்ஙனம் அவ்வூழ்வினையை ஒழிக்க இயலும்? என்பது கருத்து. நான்முகத்து ஒருவர் என்றது உயர்த்தற்கண் பலர்பால் விகுதி பெற்றுவந்தது. ஒருவரால் என்பது, சுட்டுப் பொருளதாய் நின்றது. அவரால் என்பதே கருத்து. விதிக்கடவுளும் விதியை வெல்ல இயலாது என விதியின் வலிமையைப் புலப்படுத்தியவாறு. இராமன் சீரை சாத்தியதற்கும் ஊழ்வினையே காரணம் என்பது வசிட்டன் கருத்து. (160)

**1855.** வெவ்வினை யவடர விளைந்த தேயுமன்
றிவ்வினை யிவன்வயி னெய்தற் பாற்றுமன்
றெவ்வினை நிகழ்ந்ததோ வேவ ரெண்ணமோ
செவ்விதி னொருமுறை தெரியும் பின்னென்றான்.

'வெவ்வினை அவள் தர விளைந்ததேயும் அன்று;
இவ்வினை இவன்வயின் எய்தற்பாற்றும் அன்று;
எவ்வினை நிகழ்ந்ததோ? ஏவர் எண்ணமோ?
செவ்விதின் ஒருமுறை தெரியும் பின்' என்றான்.

பொ:—இராமன் மரவுரி தரித்து வனம்புகுதற்குரிய தீவினை அக்கைகேயி உண்டாக்க விளைந்ததும் அன்று; இத்தகைய தீவினை, நல்வினையே புரியும் இராமனிடத்தில் வருதற்கு உரியதும் அன்று; இந் நிகழ்ச்சி எந்த வினையால் நிகழ்ந்ததோ? எவர் எண்ணத்தால் நிகழ்ந்ததோ? பின் ஒரு முறையாக நன்கு தெரியும் என்றான்.

கு:—'செவ்வியான் கேடும் நினைக்கப்படும்' (குறள்-169) என்றவாறே செவ்வியானாகிய இராமன் கேட்டிற்குக் காரணம் யாது என வசிட்டனால் ஆராயப்படுகின்றது. கோவலன் கண்ணகியுடன் மதுரைக்குப் போகக் கண்ட மாடலன், "இம்மைச் செய்தது யானறி நல்வினை உம்மைப் பயன்கொல் ஒருதனியுழந்தித் திருத்தகு மாமணிக் கொழுந்துடன் போந்தது" (சிலப்-அடைக்கலக்-91-93) என ஆராய்ந்தமை இங்கு நினைக்கத்தகும். **(161)**

1856. விற்றடந் தாமரைச் செங்கண் வீரனை
உற்றடைந் தையநீ யொருவி யோங்கிய
கற்றடங் காணுதி யென்னிற் கண்ணகன்
மற்றடந் தானையான் வாழ்கி லானென்றான்.

வில் தடம் தாமரைச் செங்கண் வீரனை
உற்று அடைந்து, 'ஐய! நீ ஒருவி, ஓங்கிய
கல் தடம் காணுதி என்னில், கண் அகன்
மல் தடம் தானையான் வாழ்கிலான்;' என்றான்.

பொ:—வில்லை ஏந்தியவனும் பெரிய தாமரைமலர்போன்று சிவந்த கண்ணை யுடையவனுமாகிய இராமனை வசிட்டன் அணுகி, "ஐய! நீ நகரை நீங்கி மலைகளை யுடைய காட்டைக் காண்பாயாயின், இடப்பரப்பெல்லாம் நிறைந்துள்ள மற்போர்ப் பயிற்சியுள்ள பெரிய சேனையை யுடைய தயரதன் வாழ்ந்திருக்கமாட்டான்" என்று கூறினான்.

கு:—உற்று அடைந்து, மீமிசைச்சொல். ஒருவி – நகரை நீங்கி. ஓங்கிய கல் என்றது, மலையை. காண்டல் இங்கு அடைதலை யுணர்த்திற்று. சேனையின் பரப்புப் புலப்பட வேண்டிக் 'கண்ணகன்தானை' என்றார். மல்–மற்போர். மிகப் பெரிய சேனை யுடையவனாயினும்,

உயிர் அனைய நீ பிரியின் தயரதன் ஆவி பிரியும் என்பது கருத்து. (162)

## இராமன் மாற்றம்

**1857.** அன்னவன் பணிதலை யேந்தி யாற்றுதல்
என்னது கடனவ னிடரை நீக்குதல்
நின்னது கடனிது நெறியு மென்றனன்
பன்னகப் பாயலுட் பள்ளி நீங்கினான்.

'அன்னவன் பணி தலை ஏந்தி ஆற்றுதல்
என்னது கடன்; அவன் இடரை நீக்குதல்
நின்னது கடன்; இது நெறியும்' என்றனன்;
பன்னகப் பாயலுள் பள்ளி நீங்கினான்.

பொ :—பாம்பணைப் பள்ளி நீங்கி வந்த இராமன், 'தந்தையின் பணியைத் தலைமேற் கொண்டு செய்தல் என்னுடைய கடன் ஆகும். அவன் என் பிரிவால் அடையும் துன்பத்தை நீக்குதல் நின்னுடைய கடன் ஆகும்; இது, முறையும் ஆகும்' என்றான்.

கு :—பன்னகம்-பாம்பு. பள்ளி, உறக்கத்தை யுணர்த்திற்று; "மசரத மனையவர் வரமும் வாழ்வு மோர், நிசரத கணைகளால் நீறு செய்ய யாம், ......தசரதன் மதலையாய் வருதும் தாரணி" (பால-201) எனச் சொல்லிப் பிறந்தவன் பிறந்ததன் குறிக்கோளை நிறைவேற்றலே முறை என்பது புலப்பட ''பன்னகப் பாயலுள் பள்ளி நீங்கினான்" என்றார். மகன் கடன் தந்தை ஏவிய பணியைப் புரிதல்; குருவின் கடன் மன்னவன் மனக் கவலையை மாற்றுதல் என்பதே முறைமையாதலின் யான் காடு புகுதலே கடமையென்பதை நிறுவியவாறு. நெறியும் என்புழி உம்மை இறந்ததுதழீஇயது. (163)

## வசிட்டன் மறுமொழி

**1858.** வெவ்வரம் பயில்சுரம் விரவென் றுனலன்
தெவ்வரம் பனையசொற் றீட்டி னுடனக்
கவ்வரம் பொருதவே லரச னுய்கிலா
திவ்வரந் தருவனென் றேன்ற துண்டென்றான்.

'"வெவ் அரம் பயில் சுரம் விரவு" என்றான் அலன்;
தெவ்வர் அம்பு அனைய சொல் தீட்டினாள் தனக்கு
அவ் அரம் பொருத வேல் அரசன், ஆய்கிலாது
"இவ் வரம் தருவன்" என்று ஏன்றது உண்டு' என்றான்.

பொ :—'கொடிய அரம்போன்று கூரிய பரற்கற்கள் பொருந்திய காட்டிற்கு நீ போ' என்று அம்மன்னன் வாயால் கூறவில்லை; பகைவருடைய அம்புபோன்ற கொடிய சொல்லைக் கூறிய கைகேயிக்கு, அரத்தால் தீட்டப் பெற்ற வேல் தாங்கிய அத் தயரதமன்னன் ஆராயாமல் 'இவ்வரத்தைத் தருவேன்' என்று உடன்பட்டுக் கூறியது உண்டு என்று கூறினான்.

கு.—அரம்போன்ற கூரிய பரற்கற்களை உவமையாகுபெயரால் 'அரம்' என்றார். சுரம்-வெப்பமுள்ள காடு. விரவுதல்–அடைதல். சொல்லின் கொடுமை புலப்படத் தெவ்வர் அம்பினை உவமைகூறினர். தீட்டுதல், சொல்லுதலை உணர்த்திற்று. அரம் பொருதவேல் அவ்வரசன் என இயைக்க. கூரிய வேலிருந்தும் பெண்கொலை, பாவம் என்றஞ்சி விடுத்தான் என்பது புலப்படுத்த 'வேல்' கூறினர். ஆய்கிலாது என்றமையால் ஆய்ந்திருப்பின் உடன்படான் என்பது உணர்த்திய வாறு. 'அன்னவன்பணி தலையேந்தி யாற்றுதல் என்னது கடன்' என இராமன் கூறியதற்கு விடையாகத் தயரதன் தன் வாயால் வனம் போ என்று கூறவில்லை என்பது சொல்லி வசிட்டன் அவனைத் தடுக்க முயன்றான். அவள் கேட்கும் வரம் இன்னது என்று அறியாது உடன்பட்டமை, உண்மையில் உடன்பட்டுக் கூறியது ஆகாது என்பது கருத்து. (164)

## இராமன் மறுமொழி

1859. ஏன்றன னெந்தையிவ் வரங்க ளேவினாள்
ஈன்றவள் யானது சென்னி யேந்தினேன்
சான்றென நின்றநீ தடுத்தியோ வென்றான்
தோன்றிய நல்லறம் நிறுத்தத் தோன்றினான்.

'ஏன்றனன் எந்தை இவ்வரங்கள்; ஏவினாள்
ஈன்றவள்; யான் அது சென்னி ஏந்தினேன்;
சான்று என நின்ற நீ தடுத்தியோ ?' என்றான்;
தோன்றிய நல் அறம் நிறுத்தத் தோன்றினான்.

பொ :—உலக நன்மைக்காகத் தோன்றிய நல்ல தருமத்தை அழியாமல் நிலை நிறுத்துதற்கென்றே தோன்றிய இராமன், என் தந்தை

இவ்வரங்களைக் கொடுப்பதாக ஏற்றுக்கொண்டான்; என்னை ஈன்ற தாய் அவ்வரத்தின்படி காடு செல்லுமாறு என்னை ஏவினள்: யான் என் தாயின் சொல்லைத் தலைமேற் கொண்டேன்; இந்நிகழ்ச்சிகளையெல்லா முணர்ந்து சாட்சியாக நிற்கின்ற நீ என்னைத் தடுக்கின்றுயோ? என்ருன்.

கு :—தோன்றினுன், வினைப் பெயர். தோன்றினுன் என்ருன் என்று இயைக்க. என் தந்தை ஏற்றுக்கொண்டதை என் தாய் கூறினமையால் அவன் வாயால் சொல்லவில்லை எனப் போக்குக் கூறி நீக்குவது தக்கதன்று என்பது கருத்து. சான்ருக நிற்கின்றவர், போக உடன்படுத்துவதை விடுத்துத் தடுத்தல் தகுதியன்று என்பது கருத்து. நல்லறம் நிறுத்தத் தோன்றினவன் ஆதலின் அறத்தை நிறுத்த எண்ணி வனம் புக விரைகின்ருன் என்ற கருத்துக் காண்க. 'தேவசபையில் நிகழ்ந்தவற்றிற்குச் சான்றென நின்ற நீ என்ற உண்மைக் கருத்தும் புலப்படுதல் காண்க. (165)

## இராமன் புறப்பாடு

1860. என்றபின் முனிவனொன் றியம்ப நேர்ந்திலன்
நின்றன னெடுங்கணீர் நிலத்து நீத்துகக்
குன்றன தோளவன் றொழுது கொற்றவன்
பொன்றிணி நெடுமதில் வாயில் போயினுன்.

என்ற பின் முனிவன் ஒன்று இயம்ப நேர்ந்திலன்;
நின்றனன் நெடுங்கண் நீர் நிலத்து நீத்து உக;
குன்று அன தோளவன், தொழுது, கொற்றவன்
பொன் திணி நெடு மதில் வாயில் போயினுன்.

பொ :—என்று இராமன் கூறியபின், வசிட்டமுனிவன் ஒன்றும் சொல்ல விரும்பாதவனுய், நீண்ட கண்ணீர் நிலத்தில் வெள்ளமாகச் சிந்த நின்ருன்; குன்று போன்ற தோளையுடைய இராமன், நின்ற வசிட்டனை வணங்கிவிட்டு வெற்றியையுடைய வலிய பொன்னுல் செய்யப்பட்ட திண்மையான நீண்ட மதில் வாயில்வழியே போனுன்.

கு :—நீத்து-வெள்ளம்; நீந்துதற்குரியது என்ற காரணம் பற்றி வந்தது. குன்றன தோளவன் என்றது, இராமனுக்கு வனம் செல்வதில் உள்ள விருப்பத்தால் தோள் பூரித்தமை புலப்படுத்தவேண்டி. அரக்கரை மாய்க்கும் தகுதியுண்மை புலப்படுத்தியவாறும் ஆம். கொற்ற மதில், வன்மதில் என்க. (166)

### கவிக்கூற்று

1861. சுற்றிய சீரையன் றொடர்ந்த தம்பியன்
முற்றிய வுவகையன் முளரிப் போதினும்
குற்றமின் முகத்தினன் கொள்கை கண்டவர்
உற்றதை யொருவகை யுணர்த்து வாமரோ.

சுற்றிய சீரையன்; தொடர்ந்த தம்பியன்;
முற்றிய உவகையன்; முளரிப் போதினும்
குற்றம் இல் முகத்தினன்; கொள்கை கண்டவர்,
உற்றதை ஒருவகை உணர்த்துவாம்; அரோ.

பொ:—இடையில் சுற்றிக்கொண்ட மரவுரியை உடையவனும், பின்தொடர்ந்துவரும் தம்பியை உடையவனும், முதிர்ந்த மகிழ்ச்சியை யுடையவனும் தாமரைமலரினும் மலர்ச்சியுடைய குற்றம் இல்லாத முகத்தையுடையவனும் ஆகிய இராமனுடைய கருத்தைக் கண்டவர்கள், உற்ற துன்பத்தை ஒருவகையாகக் கூறுவோமாக.

கு:—சீரையன், தம்பியன், உவகையன், முகத்தினன் என்பன ஒரு பொருட் பல பெயர். முற்றுதல்-முதிர்தல். முளரி, தாமரை. போது இங்கு மலரையுணர்த்திற்று. பெற்றோர் ஏவிய பணி புரிய வாய்ப்புக் கிடைத்ததே என்ற எண்ணத்தால் இராமனுக்கு முற்றிய உவகையும், அதனல் முளரிப்போதினும் மலர்ந்த முகமும் வாய்த்தன. கண்டவர்-உணர்ந்தவர். முகத்தைக் கண்டு இராமன் அகத்தை உணர வேண்டியிருத்தலின் 'கண்டவர்' என்ருர். உற்ற துன்பத்தை என்க. அரோ, அசை. மரவுரி தரித்துக்கொண்டு தம்பி இலக்குவன் பின் தொடர மகிழ்ச்சியுடன் மலர்ந்த முகத்தோடு இராமன் செல்வதைக் கண்டவர்கள், அவன் கருத்தையுணர்ந்து தம் கருத்தழிந்தவாற்றைக் கூறுவோம் என்று நுதலிப் புகுகின்ருர் கவிஞர். (167)

### மக்கள் துயர்நிலை 1862—1869

1862. அந்தண ரருந்தவ ரவனி காவலர்
நந்தலி னகருளார் நாட்டு ளார்கடம்
சிந்தையென் புகல்வது தேவ ருள்ளமும்
வெந்தனர் மேல்வரு முறுதி வேண்டலர்.

அந்தணர், அருந்தவர், அவனி காவலர்,
நந்தல் இல் நகர் உளார், நாட்டுளார்கள் தம்
சிந்தை என் புகல்வது? தேவர் உள்ளமும்
வெந்தனர், மேல் வரும் உறுதி வேண்டலர்.

பொ :—இராமன் காடுபுகக் கண்ட தேவர்களும், அவன் காடுபுகுவதால் தமக்கு மேல் உண்டாக இருக்கும் நன்மையையும் விரும்பாதவர்களாய் மனம் வெந்தார்கள் என்றால், இனி அந்தணர் அரிய தவ முனிவர்கள் உலகம் காக்கும் மன்னர்கள் குறைவிலாத அயோத்தி நகரத்தில் உள்ள மக்கள், நாட்டில் உள்ள மக்கள் ஆகியோர்தம் மனநிலையைப் பற்றி என்ன சொல்வது?

கு :—அந்தணர், அருந்தவர், அரசர் என மேல் பிரித்துக் கூறலின், நகருளார் நாட்டுளார் என்பார், அவரை யொழிந்தாராகக் கொள்க. பகைவர் போரால் வலிமை குன்றாதது அயோத்தி என்பது தோன்ற, 'நந்தலில் நகர்' என்றார். நந்துதல்-குறைதல். அவன் காட்டை அடைவதால் தம் கருத்து முற்றும் என மகிழ்தற்குரிய தேவர்களே, இராமன் வனம்புகுவது கண்டு உள்ளம் வெந்தார்களாயின், அவன் நாட்டை ஆளாது போவதால் இயல்பாகவே வருந்த வேண்டிய மக்களின் சிந்தனைபற்றிக் கூறுவானேன் என்றது, தேவரினும் மக்கள் மிகுதியாக வருந்தினர் என்பதை யுணர்த்திற்று. வேண்டலர், முற்றெச்சம். (168)

1863. ஐயனைக் காண்டலு மணங்க னார்கடாம்
மொய்யிளந் தளிர்களான் முளரி மேல்விழும்
மையலின் மதுகரங் கடியு மாறெனக்
கைகளின் மதர்நெடுங் கண்க ளெற்றினார்.

ஐயனைக் காண்டலும் அணங்கு அனார்கள் தாம்,
மொய் இளந் தளிர்களால் முளரிமேல் விழும்
மையலின் மதுகரம் கடியும் ஆறு எனக்
கைகளின் மதர் நெடுங் கண்கள் எற்றினார்.

பொ :—இராமனைத் தவக்கோலத்துடன் கண்ட அளவில், தேவமகளிரை யொத்த அந்நகரத்துப் பெண்டிர்கள், தாமரைமலர்மேல் வீழ்ந்த, மதுமயக்கத்தையுடைய வண்டுகளை நெருங்கிய இளந்தளிர்களால் ஓட்டுவதுபோலக், கைகளால் மதர்த்த நீண்ட கண்கள் மேல் அடித்துக்கொண்டார்கள்.

கு :—மகுடஞ் சூடிவரலைக் காணவிருந்த பெண்டிர், சடைமுடி சூடி மரவுரியணிந்து இராமன் காடுபுகப் புறப்பட்டமை கண்டவுடன் உண்டாய வருத்தத்தால் கண்கள்மேல் கைகளால் அடித்துக் கொண்டனர் என்க. கண் செய்த பாவத்தால் இது காண நேர்ந்தது என்பது அவர்கள் கருத்து. முளரி முகத்திற்கும் வண்டுகள் கண்கட்கும் இளந்தளிர்கள் கைகட்கும் உவமை. கடிதல்-ஓட்டுதல். மதுவுண்ட மயக்கத்தால் இருப்பிடம் செல்ல மறந்து கிடந்த வண்டுகள் என்பது தோன்ற, 'மையலின் மதுகரம்' என்றார். எற்றுதல்-மோதுதல் பெண்டிர் மெல்லிய மனமுடைய ராதலின் துன்பம் பொருது ஆடவரினும் முந்திப் புலம்பினமை கூறினர். (169)

**1864.** தம்மையு முணர்ந்திலர் தணிப்பி லன்பினல்
அம்மையி னிருவினை யகற்றவோ வன்றேல்
விம்மிய பேருயிர் மீண்டி லாமைகொல்
செம்மறன் றாதையிற் சிலவர் முந்தினர்.

தம்மையும் உணர்ந்திலர், தணிப்பில் அன்பினல்
அம்மையின் இருவினை அகற்றவோ? அன்றேல்,
விம்மிய பேர் உயிர் மீண்டு இலாமை கொல்?
செம்மல் தன் தாதையில் சிலவர் முந்தினர்.

பொ :—சிலர், இராமன்பால் கொண்ட தணியாத அன்பால் தம்மையும் உணராமல் மயக்கம் உற்றாராய், இராமன் தந்தையாகிய தயரதனிலும் முந்தி இறந்தார்கள்; அவர்கள் அவ்வாறு இறந்தது, மறுமையில் தொடர்தற்குரிய இருவினை உடம்பை விட்டு அவர்களை நீக்கியதாலோ? அல்லது, இராமன் பிரிவுத் துயரால் வருந்தியதாய்ப் பேர்ந்த உயிர், பின் மீண்டு வாராமையாலோ? அறியேம்.

கு :—இராமன் பிரிவுத்துயர் பொருது சிலர் இறந்தார்கள்; இறந்தமைக்குக் காரணம் இருவினையோ? அல்லது மயங்கிப் பிரிந்த உயிர், பின் மீளாமல் அப்படியே நின்றுவிட்டமையோ? என்று ஐய வாய் பாட்டால் கூறுகின்றார். முன் கூறியதில் பின் கூறியது வலியுடைத்து ஆதலின், விம்மிப் பெயர்ந்த உயிர் மீளாமையால் இறந்தார்கள் என்பதே கருத்து. மகன் பிரிவாற்றாது தயரதன் இறப்பதற்குமுன் சிலர் இறந்தார்கள் என அவர் அன்பின் மிகுதி விளங்குதல் காண்க. அம்மை-மறுமை. ஒருவன் செய்த வினைக்கேற்றவாறே ஆயுளும் போகமும் மறுபிறப்பும் அமையும் என்பது நூற்கொள்கையாதலின் உடம்பிலிருந்து உயிரை அகற்றுதற்கும் வினையைக் காரணம் ஆக்கினர். அகற்றுதல், சேய்மைக்கண் செலுத்துதல். வினைப்பயனுகர்தற்

குரிய வாழ்நாள் இருப்பின் இறந்திரார் என்பது கருத்து. 'வாழு நாளுள வென்றபின் மாள்வரோ! ஊழிபேரினு முய்குவ ருய்வரே' (227) எனப் பின் கூறுதல் காண்க. விம்முதல்-துன்புறுதல். செம்மல் என்றது, இராமனை. "சாதுகை மாந்தரெல்லாம் தயரதன் றன்னை யொத்தார்" (1649) என முற்கூறியவர், இங்கு அம்மக்கள் அத்தயரத னிலும் மிக்கமை புலப்படுத்தியவாறு. 'முந்தினர்' என்றது, இறப்ப தில் முந்திக்கொண்டனர் என்றவாறு. (170)

**1865.** விழுந்தனர் சிலர்சிலர் விம்மி விம்மிமேல்
எழுந்தனர் சிலர்முகத் திழிகண் ணீரிடை
அழுந்தினர் சிலர்பதைத் தளக வல்லியின்
கொழுந்தெரி யுற்றெனத் துயரங் கூர்கின்றார்.

விழுந்தனர் சிலர்; சிலர் விம்மி விம்மி மேல்
எழுந்தனர்; சிலர் முகத்து இழி கண்ணீர் இடை
அழுந்தினர்; சிலர் பதைத்து அளக வல்லியின்
கொழுந்து எரி உற்றெனத் துயரம் கூர்கின்றார்.

பொ :—பிரிவுத்துயர் பொருது சிலர் விழுந்தனர்; விழுந்தவரில் சிலர் தேம்பித் தேம்பி அழுது பின் எழுந்தார்கள்; சிலர் எழாமல் முகத்தில் வழிகின்ற கண்ணீர்க்கு இடையில் அப்படியே அழுந்திக் கிடந்தார்கள்; சிலர் கூந்தலாகிய கொடியின் நுனியில் நெருப்புப் பற்றினாற்போலப் பதை பதைத்துத் துயரம் மிகுகின்றவராயினர்.

கு :—பின்னியவழிக் கொடிபோலுதலின் அளகத்தை வல்லியாக உருவகம் செய்தார். வல்லி-கொடி. 'அல்லியின் அளகக் கொழுந்து' என மாற்றி, 'அகவிதழ் சூடிய கூந்தலின் நுனியில் நெருப்புப் பற்றி னாற்போல' என உரைப்பினும் ஆம். அளகத்தில் உள்ள அகவிதழின் நுனி நெருப்பில் விழுந்தாற்போல வாடித் துன்புற்றார் எனலும் ஆம். பெண்டிர் கூந்தலில் தீப்பற்றுவது அவர்க்குப் பெருந் துன் பம் தரும் என்பதை, "கொழுங்கனல்......வாசமைக்குழல் பற்ற மயங் கினர்" (சுந்தர. 1207) என்று பின்னர்க் கூறுதலாலும் உணரலாம். கூர்-மிகுதி. கண்ணீரினை வெள்ளம் என்ற கருத்தால் அவர் அழுந்துதற்கு இடம் ஆக்கினர். (171)

**1866.** கரும்பன மொழியினர் கண்ப னிக்கிலர்
வரம்பறு துயரினன் மயங்கி யேகொலாம்
இரும்பன மனத்தின ரென்ன நின்றனர்
பெரும்பொரு ளிழந்தனர் போலும் பெற்றியார்.

கரும்பு அன மொழியினர், கண் பனிக்கிலர் ;
வரம்பு அறு துயரினுல் மயங்கியே கொல் ஆம்!
இரும்பு அன மனத்தினர் என்ன நின்றனர்;
பெரும் பொருள் இழந்தவர் போலும் பெற்றியார்.

போ :—இராமன் பிரிவால் பெரும் பொருளை இழந்தவரைப் போன்ற தன்மையையும் கரும்புபோன்ற இனிய சொல்லினையும் உடைய பெண்டிர், எல்லையில்லாத துயரத்தினுல் மதிமயங்கிப்போலும் கண்ணீர் விடாதவராய், இரும்பு போன்ற மனமுடையவர் இவர் எனப் பிறர் எண்ணுமாறு அசைவின்றிநின்ருர்கள்.

கு :—துன்பம் எல்லை கடந்தவழி மனமுருகுதலும் கண்ணீர் பெருகுதலும் நிகழா என்பது கருத்து. உருகாத மனத்திற்கு இரும்பை உவமைகூறுதலுண்டு. "இரும்புதருமனத்தேனை" (திருவாசகம்–திருவேசறவு. 1.) என்பது காண்க. துன்பத்தால் கண்ணீர் சொரிதலும் மனமுருகுதலும் உலக இயல்பாகவும் இப் பெண்டிர்பால் அவ்விரண்டும் நிகழாமைக்குக் காரணம் மதிமயக்கமேபோலும் என ஊகத்தால் கூறியவாறு. பெரும் பொருளை இழந்தார் மதிமயக்கம் உறுதலும் மரணம் அடைதலும் உண்டு. பெரும்பொருளாகிய திருமாலின் அமிசமான இராமனைப் பிரிந்த துயர்க்கு ஏற்ற உவமை கூறவேண்டிப் பெரும்பொருளை இழந்தவரைக் கூறினுர். பெற்றியராகிய மொழியினர் பனிக்கிலராய் மனத்தினர் என்ன நின்றனர் என்க. (172)

1867. நெக்கன வுடலுயிர் நிலையி னின்றில
இக்கண மிக்கண மென்னுந் தன்மையும்
புக்கன புறத்தன புண்ணிற் கண்மலர்
உக்கன நீர்வறந் துதிர வாரியே.

நெக்கன உடல்; உயிர் நிலையின் நின்றில ;
இக்கணம்! இக்கணம்! என்னும் தன்மையும்
புக்கன ; புறத்தன புண்ணில் கண் மலர்
உக்கன நீர் வறந்து உதிர வாரியே.

போ :—சிலர்க்கு உடல்கள் துன்பத்தால் நெகிழ்ந்து மெலிவுற்றன; அவர் உயிர்கள் முன்னைய நிலையில் நிற்கவில்லை; இந்தக் கணத்தில்போய் விடும்; இக்கணத்தில் போய்விடும் என்று சொல்லுதற்குரிய நிலையும் புகுந்துவிட்டன ; அவர் கண்ணுகிய மலர்கள், நீர் வறண்டு போக, உடம்பின் புறத்தில் உள்ள புண்ணைப்போலக் குருதிவெள்ளத்தைச் சொரிந்தன.

கு :—உடம்பு நெகிழ்ந்து உயிர் போகும் நிலை தோன்றக் கண்ணில் நீர்வறண்டு குருதி சோர மக்கள் துன்புற்றனர் என்க. இக்கணம் இக்கணம் என்ற அடுக்கு விரைவுகுறித்தது. புறத்தன புண்— உடம்பின் புறத்தனவாகிய புண்கள் என்க. குருதி சோர நின்றமையின் கண்கட்குப் புண்களை உவமை கூறினர். கண்மலர், உருவகம். கண்ணில் பெருகிய குருதியின் மிகுதியுணர்த்தவேண்டி, 'உதிரவாரி' என்றார். வறந்து, வறக்க எனச் செயவென் எச்சமாக்குக. (173)

**1868.** இருகையிற் கரிநிக ரெண்ணி றந்தவர்
பெருகையிற் பெயர்த்தனர் தலையைப் பேணலர்
ஒருகையிற் கொண்டன ருருட்டு கின்றனர்
சுரிகையிற் கண்மலர் சூன்று நீக்கினர்.

இருகையின் கரி நிகர் எண் இறந்தவர்,
பெரு கையில் பெயர்த்தனர், தலையைப் பேணலர்
ஒரு கையில் கொண்டனர் உருட்டுகின்றனர் ;
சுரிகையில் கண் மலர் சூன்று நீக்கினர்.

பொ :—இரண்டு கையினையுடைய யானை போன்ற எண் இலாத மைந்தர், உடைவாளால் தம் கண்களைத் தோண்டி எறிந்துவிட்டார்கள். தம் தலையையும் விரும்பாதவராய்த் தம் பெரிய கைவாளால் கொய்து ஒருகையில் தாங்கிக்கொண்டு தரையில் உருட்டுகின்றனர் பலர்.

கு :—இருகையிற்கரி என்பது இல்பொருளுவமை. 'இருகை வேழத்திராகவன்' என்பதும் காண்க. இராமன் வனம்புகுதலைக் காணும் பாவம் செய்த கண்கள் என்ற எண்ணத்தால் கண்களைச் சூன்று எடுத்தார்கள். இராமன் இல்லாத நாட்டில் உயிர் வாழவும் விரும்பாதவர் தலையைத் திருகிப் பெயர்த்து உருட்டுவாராயினர். எண்ணிறந்தவர் என்பது பின்னும் இயையும். "அடிக்கழுத்தி னெடுஞ்சிரத்தை அரிவராலோ அரிந்த சிரம் அணங்கின் கைக் கொடுப்பராலோ" (கலிங்கத்துப்பரணி–111) என்பது இங்கு நினைக்கத்தகும். பெயர்த்தனர், பேணலர், கொண்டனர் என்ற முற்றெச்சங்கள், 'உருட்டுகின்றனர்' என்ற வினையோடு முடியும். (174)

**1869.** சிந்தின வணிமணி சிதறி வீழ்ந்தன
பைந்துணர் மாலையிற் பரிந்த மேகலை
நந்தினர் நகையொளி விளக்க நங்கைமார்
சுந்தர வதனமு மதிக்குத் தோற்றவே.

சிந்தின அ∴ணி ; மணி சிதறி வீழ்ந்தன ;
பைந்துணர் மாலையில் பரிந்த மேகலை ;
நந்தினர் நகையொளி விளக்கம் நங்கைமார் ;
சுந்தர வதனமும் மதிக்குத் தோற்றவே.

பொ :—நங்கைமார்தம் அணிகலன்கள் எல்லாம் அவர்களால் வெறுக்கப்பெற்றுச் சிந்தப்பெற்றன; அவ்வணிகளில் பதித்த மணிகள் எல்லாம் சிதறி வீழ்ந்தன; பசுமையான பூங்கொத்துக்களால் இயன்ற மாலை அறுபட்டது போல, மேகலையும் அவர்களால் அறுபட்டன; அந் நங்கைமார் தம் அணிகல ஒளிவிளக்கம் இழந்ததோடு புன்சிரிப்பின் ஒளியும் விளக்கமும் குறையப் பெற்றனர்; அதனுல் அவர்கள் அழகிய முகங்களும் சந்திரனுக்குத் தோற்றன.

கு :—சிந்தின, பரிந்த என்பன செயப்பாட்டுவினைப் பொருளன. மாலையிற் பரிந்த மேகலை என்றமையால் மாலை பரிந்தமையும் உடன் கூறியவாருயிற்று. நந்துதல்-குறைதல். நகை-புன் சிரிப்பு. நகையும் ஒளிவிளக்கமும் குன்றினமையால் முகம் சந்திரனுக்குத் தோற்க லாயது. முன்னம் வென்ற முகம் இப்பொழுது தோற்றது என்க. (175)

## அரசன் தேவியர் அழுகை 1870—1875

1870. அறுபதி னுயிர ரரசன் றேவியர்
மறுவறு கற்பினர் மழைக்கண் ணீரினர்
சிறுவனைத் தொடர்ந்தனர் திறந்த வாயினர்
எறிதிரைக் கடலென விரங்கி யேங்கினுர்.

அறுபதினுயிரர், அரசன் தேவியர்,
மறு அறு கற்பினர், மழைக்கண் நீரினர்,
சிறுவனைத் தொடர்ந்தனர், திறந்த வாயினர்,
எறி திரைக் கடல் என இரங்கி ஏங்கினுர்.

பொ :—தயரதமன்னன் தேவியரும், குற்றம்அற்ற கற்பினையுடைய வரும் ஆகிய அறுபதினுயிரம் பெண்டிரும், மழை போன்று சொரியும் கண்ணீரையுடையராய்த் தம் சிறுவனுகிய இராமனைப் பின் தொடர்ந்து, திறந்த வாயையுடையராய், அலைவீசும் கடல்போல் மனம் இரங்கி அழுதார்கள்.

கு :—அறுபதினுயிரர், தேவியர், கற்பினர் என்பன ஒருபொருட் பல பெயராய்ப் பிரிவிலாது வந்தன. கற்பிற்கு மறுவாவது, பிறர் நெஞ்சு புகுதல். மழையைக் கண்ணீர்க்கு உவமையாக்குக. சிறுவன்,

மகன் என்னும் பொருளது. வாயினராய் ஏங்கினர் என்க. வாய் திறந்து அரற்றினர் என்பது கருத்து. அறுபதினுயிரர்க்கும் கடல், பரப்புடைமையாலும் ஒலியாலும் உவமையாயிற்று. அழுகையொலிக்கு உவமைகூறவேண்டி 'எறிதிரைக்கடல்' என்று அடையொடு கூறினர். தம்முயிர் போன்ற மகன் வனம்புகப் பொறுமல் இங்ஙனம் புலம்பினர் என்க. (176)

1871. கன்னிநன் மயில்களுங் குயிற்க ணங்களும்
அன்னமுஞ் சிறையிழந் தவனி சேர்ந்தன
என்னவீழ்ந் துழந்தன ரிராம னல்லது
மன்னுயிர்ப் புதல்வரை மற்றும் பெற்றிலார்.

கன்னி நல் மயில்களும், குயில் கணங்களும்,
அன்னமும் சிறை இழந்து அவனி சேர்ந்தன
என்ன, வீழ்ந்து உழந்தனர்; இராமன் அல்லது,
மன் உயிர்ப் புதல்வரை மற்றும் பெற்றிலார்.

பொ :—இராமனையன்றி வேறு தம் நிலைபேறுடைய உயிர் போன்ற புதல்வரைப் பெறுதவர்களாகிய அவ் அறுபதினுயிரரும், இளமையான நல்ல மயில்களும் குயிலின் கூட்டங்களும் அன்னப்பறவைகளும், தம்தம் சிறகுகளை இழந்து பூமியில் சேர்ந்தாற் போலத் தரையில் வீழ்ந்து வருந்தினர்.

கு :—கன்னி-இளமை. மயிலன்ன சாயலும் குயிலன்ன குரலும் அன்னம் அன்ன மென்னடையுமுடையார் அவர் ஆதலாலும், இராமன் பிரிவால் வலிமை யிழந்து தரையில் வீழ்ந்து வருந்துதலாலும் அப்பெண்டிர்க்கு, அம் முப்பறவைகளும் சிறகிழந்து வீழ்ந்த நிலையை உவமைகூறினர். சிறை-சிறகு; இராமனுக்கு உவமை. இராமனையல்லாது வேறு மக்கள் இல்லாமையால் அவன் பிரிவிற்குப் பெரிதும் வருந்தினர் என்பது கருத்து. பெற்றிலார், வினைப்பெயர். மேலைச் செய்யுளில் கூறியவர்களையே சிறப்புப்பற்றி வேறு உவமை கூறி, அவர் துன்பநிலையை விளக்கியவாறு. உழத்தல்-பெரிதும் வருந்தல். பெற்றிலார் உழந்தனர் என்க. (177)

1872. கிளையினு நரம்பினு நிரம்புங் கேழன
அளவிறந் துயிர்க்கவிட் டரற்றுந் தன்மையால்
தொளைபடு குழலினே டியாழ்க்குத் தோற்றன
இளையவ ரமுதினு மினிய சொற்களே.

கிளையினும் நரம்பினும் நிரம்பும் கேழன,
அளவு இறந்து உயிர்க்க விட்டு அரற்றும் தன்மையால்
தொளைபடு குழலினோடு யாழ்க்குத் தோற்றன ;
இளையவர் அமுதினும் இனிய சொற்களே.

பொ :—அந்த அறுபதினாயிரம் இளம் பெண்டிரின் அமுதினும் இனிய சொற்கள், புல்லாங்குழல் ஓசையினும் யாழ் நரம்பின் ஒலியினும் நிரம்பிய சுவைநல முடையவனவாய் அவ்விரண்டையும் வென்றவை, இப்பொழுது அளவு கடந்து பெருமூச்சுத் தோன்ற வாய்விட்டு அரற்றுகின்ற தன்மையால் அந்தத் துளையையுடைய குழலுக்கும் யாழ்க்கும் தோற்றனவாயின.

கு:—கிளை-மூங்கில்; ஆகுபெயராய்க் குழலை உணர்த்திற்று. நரம்பு, ஆகுபெயராய் யாழை யுணர்த்திற்று. கேழ்-சுவைச் சிறப்பு. தயரதன் மனைவியர் அறுபதினாயிரவரும் இளமையுடையவர் என்பது இதனால் அறிக. மேல் கன்னி நன்மயிலை உவமைகூறியதும் இக்கருத்தானேயாம். குழல் யாழ் என்பன சுட்டின் பொருளன. 'அக்குழலினோடு யாழ்' என்க. தோற்றற்கு ஏற்ற இயல்பினது என்பது புலப்படத் 'தொளை படு குழல்' என்று இகழ்ந்தவாறு. சொற்கள் முன் கேழன; இப்பொழுது அரற்றுந் தன்மையால் தோற்றன என்று இயைக்க. (178)

**1873.** புகலிடம் கொடுவனம் போலு மென்றுதம்
மகன்வயி னிரங்குறு மகளிர் வாய்களால்
அகன்மதி னெடுமனை யரத்த வாம்பல்கள்
பகலிடை மலர்ந்ததோர் பழனம் போன்றவே.

புகலிடம் கொடு வனம் போலும் என்று, தம்
மகன் வயின் இரங்குறும் மகளிர் வாய்களால்
அகல் மதில் நெடுமனை அரத்த ஆம்பல்கள்,
பகல் இடை மலர்ந்தது ஓர் பழனம் போன்றவே.

பொ :—இராமனுக்குப் புகலிடம் கொடிய காடுதான் போலும் என்று தம் மகனிடத்துள்ள அன்பினால் அழும் அறுபதினாயிரம் மகளிரின் வாய்களை யுடைமையால், அகலமான மதிலையுடைய நீண்ட மாளிகைகள், செவ்வாம்பல்கள் பகற்காலத்து மலரப்பெற்ற ஒரு கழனியை ஒத்து விளங்கின.

கு :—குணங்களால் நிறைந்த அண்ணலுக்கு வாய்த்த புகலிடம் காடு போலும் என்று எண்ணுங்கால், அத்தாய்மார்க்குத் துக்கம் மிக்கு

வாய் திறந்து அரற்ற நேர்ந்தது; செவ்வாம்பல் மலர் போன்ற அறு பதினுயிரம் வாய்களும் திறந்தழும்போது அம்மாளிகை, ஆம்பல் மலர்ந்த கழனிபோல் தோற்றமளித்தது என்க. அரத்த ஆம்பல்-செவ்வாம்பல். ஆம்பல் மலர்வது மாலேயில் ஆகலின், இல்பொருள் உவமையாகப் பக லிடை மலர்ந்த பழனத்தைக் கூறினர்; அவர்கள் அரற்றியது பகலில் என்பது நினைக்க. 'மனை, வாய்களால் பழனம் போன்றது' என்றது ஏது உவமை. (179)

**1874.** திடருடைக் குங்குமச் சேறுஞ் சாந்தமும்
இடையிடை வண்டலிட் டார மீர்த்தன
மிடைமுலைக் குவடொரீஇ மேக லைத்தடங்
கடலிடைப் புகுந்தகட் கலுழி யாறரோ.

திடர் உடைக் குங்குமச் சேறும், சாந்தமும்,
இடை இடை வண்டல் இட்டு ஆரம் ஈர்த்தன;
மிடை முலைக் குவடு ஒரீஇ, மேகலைத் தடம்
கடலிடைப் புகுந்த, கண் கலுழி ஆறு அரோ.

பொ :—அப் பெண்டிரின் கண்ணீர் ஆகிய ஆறுகள், மேடாகத் தோன்றுமாறு மிகுதியாக அப்பியுள்ள குங்குமச் சேறும் சந்தனமும் ஆகிய வண்டலை இடையிடையே இட்டுக்கொண்டு, முத்து மாலையை இழுத்துக்கொண்டு, நெருங்கியுள்ள முலையாகிய மலைச் சிகரத்தில் நின்று நீங்கி, மேகலை யணிந்த கடிதடமாகிய கடலில் புகுந்தன.

கு :—திடர்-மேடு; குங்குமக் குழம்பும் சந்தனக் குழம்பும் மிகுதியாக அப்பியுள்ளமை தோன்றத் 'திடருடைக் குங்குமச் சேறு' என்றார். 'திடருடை வண்டலிட்டு' என இயைப்பினும் ஆம். மலை அருவி வீழுங் கால் இடையிடையே சில பொருள்களை வண்டலாக ஒதுக்கியும், மலையி லுள்ள முத்துக்களை இழுத்துக்கொண்டும் மலையை விட்டு நீங்கித் தரையிடைப் பாய்ந்து கடலிடைச் சேரும் தன்மையது; அத்தன்மை கண்ணீர் ஆற்றிற்கும் உண்டு என்கிறார். குங்குமச் சேறும் சாந்தமும் ஆகிய வண்டல், முலையாகிய மலை, மேகலைத் தடம் ஆகிய கடல், கண் கலுழி ஆகிய ஆறு என்பன உருவகம். ஆரம் உருவகத்தினும் ஆர மாகவே அமைந்துவிட்டது. கலுழி-கலங்கல்; கண் கலங்கி விடுகின்ற நீரைக் கட்கலுழி என்றார். புகுந்த, அகரவீற்று முற்று. ஈர்த்தனவாய் ஒருவி என முற்றெச்சமாக்குக. (180)

1875. தண்டலைக் கோசலத் தலைவன் மாதரைக்
கண்டன னிரவியுங் கமல வாண்முகம்
விண்டலத் துறையுநல் வேந்தற் காயினும்
உண்டிட ருற்றபோ தென்னு ருதன.

தண்டலைக் கோசலத் தலைவன் மாதரைக்
கண்டனன் இரவியும், கமல வாள் முகம்;
விண் தலத்து உறையும் நல் வேந்தற்கு ஆயினும்
உண்டு இடர் உற்றபோது என் உருதன ?

பொ :—சோலை சூழ்ந்த கோசல நாட்டிற்குத் தலைவனாகிய தயரதன் மனைவியருடைய கமலம் போன்று ஒளியுள்ள முகத்தைச் சூரியனும் பார்த்துவிட்டான்; இதில் என்ன வியப்பு? விண்ணுலகத்தில் இருக்கும் நல்ல தேவேந்திரனுக்கே ஆயினும் துன்பம் என்பது உண்டு; அத்துன்பம் வந்தபோது வாராத இழிவுகள் என் உள ? எல்லா இழிவுகளும் உளவாம்.

கு :—தண்தலை-குளிர்ந்த இடத்தை யுடையது என்ற காரணத்தால் சோலைக்குப் பெயராயிற்று; அன்மொழித்தொகை. மாதர் என்றது இங்கு மனைவியர் என்ற பொருளில் வந்தது. மாதரை என்புழி, இரண்டனுருபை ஆருவதன் பொருளதாக்குக; உருபு மயக்கம். இதுவரையில் காணாத இரவியும் என இழிவு சிறப்பும்மையாகக் கொள்க. கற்புடைய அப் பெண்டிர், மனைவாயில் கடந்ததில்லை ஆதலின் சூரியன் அவர்களைக் காணும் வாய்ப்பே இல்லையாயது; இப்பொழுது, தம் புதல்வன் இராமனெடு வனம்புகப் புறம்போந்தார் ஆதலின், சூரியன் காணப்பெற்றான் என்க. இரவி பார்ப்பதற்கு இயைபுடைமை தோன்றக் 'கமல வாண்முகம்' என்றார். சூரியன் தன் மனைவியாகிய தாமரை மலரென மயங்குதற்குக் காரணமான முகத்தினர் என்றவாறு. வேந்தன்-இந்திரன். 'வேந்தன் மேய தீம்புனலுலகம்' (தொல்-பொருள்.) என்புழியும் அச் சொல் இப்பொருள்படுதல் காண்க. நன்மை புரியும் வேந்தன் என்பார், 'நல்வேந்தன்' என்றார். இனமில்லடை; செஞ்ஞாயிறு போல. துன்பம் வருங்கால் எல்லா இழிவுகளும் வருதல் இந்திரனுக்கும் உண்டு ஆதலின், தசரதனுக்கு இடருற்ற போது அவர் மனைவியரைச் சூரியன் காண நேர்வது இயல்பே என நிறுவுதலின் இது வேற்றுப்பொருள் வைப்பணி ஆம். வேண்டும் சொற்கள் இசையெச்சமாக வருவிக்கப்பட்டன. (181)

### பெண்டிர் மொய்த்தல்

**1876.** தாயருங் கிளைஞருஞ் சார்ந்து ளார்களும்
சேயரு மணியருஞ் சிறந்த மாதரும்
காயெரி யுற்றன ரனைய கௌவையர்
வாயிலு முன்றிலு மறைய மொய்த்தனர்.

தாயரும் கிளைஞரும் சார்ந்து உளார்களும்
சேயரும் அணியரும் சிறந்த மாதரும்,
காய் எரி உற்றனர் அனைய கௌவையர்,
வாயிலும் முன்றிலும் மறைய மொய்த்தனர்.

பொ :—மேல் கூறிய தாயரும், அவர் உறவினர்களும் அவ்வுறவினரைச் சார்ந்தவர்களும் சேய்மையிலிருந்து வந்தவர்களும் அண்மையில் உள்ளவர்களும் ஆகிய சிறந்த மாதர்களும், எரிகின்ற நெருப்பில் புகுந்தவரைப் போன்ற துன்பம் உடையவராய், மாளிகை வாயில்களும் முற்றங்களும் மறையுமாறு மொய்த்துக்கொண்டார்கள்.

கு :—தாயரும் சிறந்த மாதரும் கௌவையராய் மொய்த்தனர் என்க. சிறந்த மாதர் இன்னர் என விளக்கவேண்டிக் 'கிளைஞரும் சார்ந்துளார்களும் சேயரும் அணியரும்' எனக் கூறினர். கௌவை-துன்பம். அதன் மிகுதி தோன்றக் 'காயெரியுற்றனர் அனைய' என உவமை கூறினர். இம் மாதர் நெருக்கத்தால் வாயிலும் முற்றமும் தோன்றுவாயின இராமனைக் காண வேண்டி மொய்த்தனர் என்க. கௌவையர், முற்றெச்சம். (182)

### இராமன் சீதையிடம் செல்லல் 1877–1878

**1877.** இரைத்தன ரிரைத்தெழுந்
தேங்கி யெங்கணும்
திரைப் பெருங் கடலெனத்
தொடர்ந்து பின்செல
உரைப்பதை யுணர்கில
னொழிப்ப தோர்கிலன்
வரைப்புயத் தண்ணறன்
மனையை நோக்கினன்.

இரைத்தனர், இரைத்து எழுந்து ஏங்கி எங்கணும்
திரைப் பெருங்கடல் எனத் தொடர்ந்து பின் செல,
உரைப்பதை உணர்கிலன்; ஒழிப்பது ஓர்கிலன்;
வரைப் புயத்து அண்ணல், தன் மனையை நோக்கினன்.

பொ:—(வாயிலிலும் முன்றிலிலும்) மொய்த்துக்கொண்டிருந்த பெண்டிர் அனைவரும் இராமனைக் கண்டவுடன் ஆரவாரித்தனர்; அவ்வாறு ஆரவாரித்து எழுந்து அழுதுகொண்டு எல்லாவிடங்களில் இருந்தும் அலைகளையுடைய பெரிய கடல்போல இராமனைத் தொடர்ந்து பின் செல்லாநிற்க, அவர்க்கு யாது சொல்வது என்பதை யுணராதவனாய், அவர்களை நிறுத்தும்வகை அறியாதவனாய், மலை போன்ற தோள்களையுடைய இராமன், தன் மனையைநோக்கிச் சென்றான்.

கு:—பரப்புடைமையும் ஒலியும் பற்றி அப்பெண்டிர் கூட்டத்திற்குக் கடல் உவமை ஆயிற்று. ஒழிப்பது, தன்னுடன் வாராமல் நிறுத்துவது. மனை - வீடு. தன்பால் உள்ள அன்பால், தன்னைப் பின்பற்றி வருவோரை நிறுத்தவியலாத தடுமாற்றத்துடன் ஒன்றுங் கூறாது, தன் மனையை நோக்கிச் சென்றான் என்க. (183)

**1878.** நன்னெடு நளிர்முடி
சூட நன்மணிப்
பொன்னெடுந் தேரொடும்
பவனி போனவன்
துன்னெடுஞ் சீரையுஞ்
சுற்றி மீண்டுமப்
பொன்னெடுந் தெருவிடைப்
போதன் மேயினான்.

நல் நெடு நளிர் முடி சூட நல் மணிப்
பொன் நெடுந்தேரொடும் பவனி போனவன்,
துன் நெடுஞ்சீரையும் சுற்றி மீண்டும் அப்
பொன் நெடுந் தெருவிடைப் போதல் மேயினான்.

பொ:—நல்ல நீண்ட பெரிய முடியைச் சூடிக் கொள்ள, நல்ல மணிகள் பதித்த, பொன்னால் இயன்ற தேரோடும் உலாச் சென்ற இராமன், தைக்கப்பட்ட நீண்ட மரவுரியையும் அரையில் சுற்றிக்கொண்டு மீண்டும் அழகிய நீண்ட தெருவில் நடந்துபோதலைப் பொருந்தினான்.

கு :—பவனி-உலா. தேரொடும் போதலாவது, தேர்மீது இருந்து தேரும் தானும் போதல். மூன்றனுருபை, ஏழாவதாக்கித் தேரில் பவனி போனவன் எனலுமாம்; உருபு மயக்கம். கைகேயி அனுப்பியதுத் தைக் கப்பட்ட நெடிய சீரையாதலின், 'துன்னெடுஞ்சீரை' என்றார். முடி சூடா மையே அன்றிச் சீரையும் சுற்றி என்று பொருள்படுதலின் உம்மை இறந்தது தழீஇயது. இராமன், சிறிது நேரத்திற்குமுன் மணிமுடி சூடும் எண்ணத்தோடு பொன்னுடை முதலியன புனைந்து, அழகுடன் உலாப் போனவன், மரவுரி சுற்றிக்கொண்டு தெருவில் மீண்டு நடந்து செல்லலானனே ஈதென்னே துன்பம்! எனக் கவி இரங்கிக் கூறிய வாறு. (184)

### பொது மக்கள் சொல்லும் செயலும் 1879-1894

**1879.** அஞ்சன மேனியிவ் வழகற் கெய்திய
வஞ்சனை கண்டபின் வகிர்ந்து நீங்கலா
நெஞ்சினும் வலிதுயிர் நினைப்ப தென்சில
நஞ்சினும் வலிதுநந் நலமென் றார்சிலர்.

'அஞ்சன மேனி இவ் அழகற்கு எய்திய
வஞ்சனை கண்ட பின், வகிர்ந்து நீங்கலா,
நெஞ்சினும், வலிது உயிர்; நினைப்பது என் சில?
நஞ்சினும் வலிது நம் நலம்' என்றார் சிலர்.

பொ :—'மை போன்ற கரிய மேனியை யுடைய இவ்வழகு மிக்க இராமனுக்கு நேர்ந்த வஞ்சனையாலாய தீங்கினைக் கண்ட பின்னும் பிளந்து போகாத இதயத்தினும் உயிர் வலிதாக உள்ளது; வேறு சில நினைப்பது எதற்கு? நஞ்சினும் கொடியது நம் அன்பு' என்று கூறினர் சிலர்.

கு :—வஞ்சனையாலியன்ற தீங்கினை வஞ்சனை என ஆகுபெயரால் கூறினர். நாடு கொடுப்பதாகக் கூறிக் காடு கொடுத்தது வஞ்சனையா லாயதேயன்றே? 'கண்டபின்னும்' என இழிவுசிறப்பும்மை விரிக்க. இராமனுக்கு நேர்ந்த தீங்கினைக் கண்டும் நம் இதயமும் பிளக்கவில்லை; உயிரும் நீங்கவில்லை என்பது சிலர் கருத்து. வகிர்ந்து நீங்காத நெஞ்சு வலிது; அதனினும் நீங்காது வாழ்கின்ற உயிர் வலிது என்க. நெஞ்சு-மார்பு. நலம்-அன்பு. இராமன்பால் வைத்த தம் அன்பினை இகழ்ந்துகூறியது. 'நன்னலம் அவற்கே வைத்த நங்கையே" (சீவக சிந்-1336) என்புழியும் நலம் இப்பொருளதாதல் காண்க. (185)

**1880.** மண்கொடு வருமென வழியி ருந்தியாம்
எண்கொடு சுடர்வனத் தெய்தல் காணவோ
பெண்கொடு வினைசெயப் பெற்ற நாட்டினிற்
கண்கொடு பிறத்தலுங் கடையென் றார்சிலர்.

'மண்கொடு வரும் என வழி இருந்தது யாம்,
எண்கொடு சுடர் வனத்து எய்தல் காணவோ?
பெண் கொடுவினை செயப் பெற்ற நாட்டினில்
கண்கொடு பிறத்தலும் கடை' என்றார் சிலர்.

பொ:—'இராமன் முடிசூடிக்கொண்டு வருவான் என வழியில் யாம் எதிர்பார்த்திருந்தது, அவன் நம் எண்ணங்களைக் கவர்ந்துகொண்டு வெயிலொளி மிக்க காட்டிற்குப் போதலைக் காணுதற்காகத்தானே? (கொழுநனையும் மீறிப்) பெண் கொடிய செயலைச் செய்யப்பெற்ற நாட்டில் இத் திங்கினையெல்லாம் காணக் கண்கொண்டு பிறத்தலும் இழிவாகும்' என்றார் சிலர்.

கு:—மண்ணுலகத்தை ஆளும் உரிமை, முடிசூடுவதால் வருதலின் 'முடி சூடி வரும் என' என்பார், 'மண் கொடு வரும் என' என்றார்; இலக்கணை. எண்-எண்ணங்கள். தவச்சிந்தனையும் ஆம். வெயில் மிக்குக் காய்தலின், சுடர் வனம் என்றார். சூரியன் ஆட்சி நடத்தும் காடு என்க. எதிர்பார்த்த காட்சிக்கு முரணான காட்சி கிடைத்தலின் வருந்திக் கூறியவாறு. கணவன்வழி நிற்கவேண்டியநிலை மாறிக் கணவனைத் தன்வழிப்படுத்திய கைகேயியினை நினைந்து, 'பெண் கொடுவினை செயப்பெற்ற நாடு' என்றார். குருடராய்ப் பிறந்தார்க்கு இத்துன்பக் காட்சி காண நேராது ஆகலின் அவர் பிறப்பே சிறப்புடையதாகும் என்ற கருத்தால், 'கண்கொடு பிறத்தலும் கடை' என்றனர். கடை-இழிந்தது. (186)

**1881.** முழுவதே பிறந்துல குடைய மொய்ம்பினேன்
உழுவைசேர் கானகத் துறைவென் யானென
எழுவதே யெழுதல்கண் டிருப்பதே யிருந்
தழுவதே யழகிதிவ் வன்பென் றார்சிலர்.

"முழுவதே பிறந்து உலகு உடைய மொய்ம்பினேன்,
'உழுவை சேர் கானகத்து உறைவென் யான்' என
எழுவதே? எழுதல் கண்டு இருப்பதே? இருந்து
அழுவதே? அழகிது இவ் அன்பு!" என்றார் சிலர்.

பொ :—“ தயரதனுக்கு முதல் மகனாகப் பிறந்து உலகு முழுவதுமே தனக்கு உரிமையாக உடைய வலிமை மிக்க இராமன், ‘கடும் புலி வாழும் காட்டில் யான் தங்குவேன்’ என்று எழுவதோ ? அவன் அவ் வாறு எழுவதைக் கண்டும் நாம் உயிருடன் இருப்பதோ ? உயிருடன் இருந்து அவன் பிரிவிற்காக அழுவதோ ? இந்த நம் அன்பு அழகாக இருக்கின்றது ” என்றனர் சிலர்.

கு :—பிறப்புரிமையால்மட்டுமன்றிப் பரசுராமனை வென்ற சிறப் புரிமையானும் உலகு முழுவதும் உடையவன் என்பது தோன்ற இராமனை ‘மொய்ம்பினோன்’ என்றார். “மழுவினாற் பொருது போக்கிய சேவகன் சேவகஞ் செகுத்த சேவகற், காவதிவ் வுலகமீ தறனென்றாரரோ” (1475) என முன்னர்க் கூறியதும், வரும் செய்யுளில் கூறுவதும் காண்க. இராமனை வனம் புகாமல் செய்ய இயலுமேல் செய்வதோ அன்றி உயிரை விடுவதோ செய்யாமல் அவன் வனம் புகுவது கண் டும் உயிர்வாழ்வதும் அழுவதும் அன்பாகா என்றவாறு. ‘பிறந்து உலகு முழுவதே யுடைய’ என மாறுக. (187)

1882. வலங்கடிந் தேழைய ராய மன்னரை
நலங்கடிந் தறங்கெட நயக்க லீர்களும்
குலங்கடிந் தான்வலி கொண்ட கொண்டலை
நிலங்கடிந் தாளொடு நிகரென் றார்சிலர்.

வலம் கடிந்து ஏழையர் ஆய மன்னரை,
‘நலம் கடிந்து அறம் கெட நயக்கலீர்கள் ; நும்
குலம் கடிந்தான் வலி கொண்ட கொண்டலை
நிலம் கடிந்தாளொடு நிகர்’ என்றார் சிலர்.

பொ :—தம் வலிமை நீங்கி எளியராய்த் தோன்றும் மன்னரை நோக்கிச் சிலர், ‘உலக நன்மையை நீக்கிவிட்டு அறம் அழியுமாறு விரும்பாதீர்கள்; விரும்புவீரேல், நும் குலத்தை மூவெழு தலைமுறை யாக அழித்து வந்த பரசுராமனுடைய தவ வலிமையை, அவனை வென்று கொண்ட மேகவண்ணனாகிய இராமனை நாட்டைவிட்டு நீக்கிய கைகேயி யொடு ஒப்பாவீர்’ என்றார்கள்.

கு :—இராமன் வனம் புகுவதை விரும்பாத உள்ளத்தராயிருந்தும் அவனை நிறுத்தும் வலிமையின்றி எளியராய்க் காட்சியளிக்கின்ற மன்னர்களைப் பார்த்துச் சிலர் விளித்துக் கைகேயியின் செயலைத் தடுக் காமையால் அவளொடு ஒத்த கொடுமையுடையர் ஆவிர் எனக் கூறி இகழ்ந்தவாறு. வென்றார்க்குஉரியது அரசு என்ற முறையால் பரசுராமனை

வென்ற இராமனுக்கு நிலம் உரியதாக இருந்தும் அவனை நாட்டிலிருந்து நீக்கும் கைகேயியின் கொடுமையினும் அதை உடன்பட்டிருந்தநும் செயல் குறைந்ததன்று என்பது கருத்து. (188)

**1883.** திருவரை சுற்றிய சீரை யாடையன்
பொருவருந் துயரினன் றொடர்ந்து போகின்றான்
இருவரைப் பயந்தவ ளீன்ற கான்முளை
ஒருவனோ விவற்கிவ்வூ ருறவென் றார்சிலர்.

'திரு அரை சுற்றிய சீரை ஆடையன்,
பொருவு அருந் துயரினன், தொடர்ந்து போகின்றான்
இருவரைப் பயந்தவள் ஈன்ற கான்முளை
ஒருவனோ இவற்கு இவ்வூர் உறவு?' என்றார் சிலர்.

பொ :—'அழகிய அரையில் சுற்றி உடுத்திக்கொண்ட மரவுரியாகிய ஆடையை உடையவனும், உவமை சொல்ல இயலாத பெருந் துயரை உடையவனும் இராமனைப் பின் தொடர்ந்து போகின்றவனுமாகிய சுமித்திரை பெற்ற பிள்ளை இலக்குவன் ஒருவன்தானோ இவ்விராமனுக்கு இவ்வூரில் உறவு உள்ளவன்?' என்கின்றார் சிலர்.

கு :—இருவரைப்பயந்தவள்–இலக்குவன் சத்துருக்கன் என்ற இருவரைப் பெற்ற சுமித்திரை. கான்முளை-மகன். ஆடையன், துயரினன் என்பன முற்றெச்சங்கள். போகின்றான் என்பது வினைப்பெயர். போகின்றானாகிய கான்முளை என இருபெயரொட்டு ஆக்குக. பிறர் யாரும் இலர் என்க. "இராமன் பின்பு பிறந்தானு முளன் என்னப் பிரியாதான்" (குகப்-68) எனப் பின் கூறுதலும் காண்க. உறவு என்றற்கேற்ப இராமனைப் போல் சீரையுடுத்து அவன் நிலைக்கு வருந்திப் பின் தொடர்பவன் இலக்குவனே ஆவன். சுமித்திரை இருவரைப் பயந்தனள் ஆயினும் அவ்விருவரில் இராமனுக்கு ஒருவனே உறவானான் என்பது கருத்து. (189)

**1884.** முழுக்கலின் வலியநம் மூரி நெஞ்சினை
மழுக்களிற் பிளத்துமென் றோடு வார்வழி
ஒழுக்கிய கண்ணினிற் கலுழி யூற்றிடை
இழுக்கலில் வழுக்கிவீழ்ந் திடருற் றார்சிலர்.

'முழுக்கலின் வலிய நம் மூரி நெஞ்சினை
மழுக்களில் பிளத்தும்' என்று ஓடுவார், வழி
ஒழுக்கிய கண்ணினில் கலுழி ஊற்றிடை
இழுக்கலில் வழுக்கி வீழ்ந்து இடர் உற்றார் சிலர்.

பொ :—'பெரிய கல்லினும் வலிதாகிய நம் கடுமையான இதயத்தை மழுவாயுதங்களைக் கொண்டு பிளப்போம் என்று அம்மழுவாயுதங்களைத் தேடி ஓடுகின்றவர்கள், வழியில் ஒழுக்கிய கண்ணீர் ஆகிய ஊற்றை யுடைய சேற்றில் வழுக்கி வீழ்ந்து துன்புற்றார்கள் சிலர்.

கு :—வன்னெஞ்சிற்குக் கல்லினை உவமை கூறல் மரபு. 'நெஞ்சம் கல்லாம்' (திருவாசகம் திருச்சதகம்-25) என்றது காண்க. மூரி-வலிமை; கடுமையை யுணர்த்திற்று. வழியில் வீழ்ந்து என்க. தானாகப் பிளந்து போகாத நெஞ்சினைக் கோடரி கொண்டு பிளக்க எண்ணி அதைத் தேடி ஓடுபவர், வழியில் தம் கண்ணீரால் ஆகிய சேற்றில் வழுக்கி வீழ்ந்து துன்புற்றார்கள். கண்ணினிற் கலுழி-கண்ணீர். கண், நீரை இடையறாது பெருக்கலின் நிலம் சேறாயிற்று என்பதால் அவர் துன்பத்தின் பெருக்கை யுணர்த்தியவாறு. (190)

1885. பொன்னணி மணியணி மெய்யிற் போக்கினர்
மின்னென மின்னென விளங்கு மெய்விலைப்
பன்னிறத் துகிலினைப் பறித்து நீக்கினர்
சின்னநுண் டுகிலினைப் புனைகின் றார்சிலர்.

பொன் அணி, மணி அணி மெய்யில் போக்கினர்;
மின் என மின் என விளங்கும் மெய்விலைப்
பல் நிறத் துகிலினைப் பறித்து நீக்கினர்,
சின்ன நுண் துகிலினைப் புனைகின்றார் சிலர்.

பொ :—பொன்னால் செய்த அணிகலன்களையும் நவமணிகளால் இயன்ற அணிகலன்களையும் உடம்பிலிருந்து கழற்றி எறிந்தனராய் மின்னல்களைப் போல விளங்கும் தம் உடம்பில் உடுத்திருந்த விலை மிக்க பல வண்ணம் உடைய பட்டு ஆடைகளைப் பறித்து நீக்கி விட்டுச் சிறிய நுண்ணிய நூலாடைகளை யுடுக்கின்றார் சிலர்.

கு :—அணிகளையும் ஆடையையும் நீக்கினவர்கள் அணி வேறு அணியாது ஆடைமட்டும் வேறு அணிந்தது மானம் காக்க. பெண்டிர் மேனியொளிக்கு மின் உவமை. அடுக்கு பன்மை யுணர்த்தியது.

பறித்தல்–இழுத்தல். பட்டு ஆடையின் விலையுயர்வை எண்ணாது விரைந்து இழுத்துக் களைந்தனர். சின்னம்-அடையாளமுமாம். முடிபுனை விழாவிற்காகத் தம்மை ஆடையணிகலன்களால் அழகு செய்து கொண்டவர்கள், இராமன் முடி புனையாது காடு புகுவது கண்டு, அவ் வலங்காரங்களை அழிக்கின்றனர் என்க. மின்னென விளங்கும் பன்னிறத் துகில் என இயைத்தலும் ஆம். (191)

1886. நிறைமக வுடையவர் நெறிசெ லைம்பொறி
குறைமக குறையினுங் கொடுப்ப ராமுயிர்
முறைமகன் வனம்புக மொழியைக் காக்கின்ற
இறைமகன் றிருமன மிரும்பென் றூர்சிலர்.

"நிறை மக உடையவர், நெறி செல் ஐம்பொறி
குறை மக குறையினும் கொடுப்பர் ஆம் உயிர்;
முறை மகன் வனம் புக, மொழியைக் காக்கின்ற
இறைமகன் திரு மனம் இரும்பு" என்றூர் சிலர்.

பொ:—'பல மக்களை யுடையவரும் தத்தம் புலன்களின்மேல் நெறிப்பட்டுச் செல்கின்ற ஐம்பொறியில் குறைபாடுஉடைய ஒரு மகன் இறந்தாலும் அக்குறைமகனுக்காகத் தம் உயிரைக் கொடுப்பர்; இது உலகியற்கையாம்; முறைமைக்குச் சிறந்த மூத்த மகன் காடு புகத் தான் சொன்ன சொல்லைக் காத்து உயிர் வாழ்கின்ற தயரதன்மனம் இரும்பு' என்கின்றூர் சிலர்.

கு:—ஐம்பொறியில் குறைவிலாப் பல மக்களை யுடையார் ஆயினும் குறைபாடுடைய ஒரு மகன் இறந்தால் அக்குறைமகனுக்காகத் தம் உயிரைக் கொடுப்பதே இவ்வுலக இயற்கையாகவும், தயரதன் அதற்கு மாருகத் தன் முறைக்குரிய நலம் நிறைமகன் வனம் புகவும் இறவாது வாய்மையைக் காக்க எண்ணுகின்றான் ஆகலின், அவன் மனம் இரும்பு தான் என்றனர். மகனிடத்து அன்பிலன் என்க. ஐம்பொறி குறைமக வென்றது குருடும் செவிடும் முதலியவற்றை. இகழ்ச்சிக் குறிப்புத் தோன்றத் 'திருமனம்' என்றூர். (192)

1887. வாங்கிய மருங்குலை வருத்தும் கொங்கையர்
பூங்கொடி யொதுங்குவ போலொ துங்கினர்
ஏங்கிய குரலின ரிணைந்த காந்தளில்
தாங்கிய செங்கைதந் தலைகண் மேலுளார்.

வாங்கிய மருங்குலே வருத்தும் கொங்கையர்
பூங்கொடி ஒதுங்குவ போல் ஒதுங்கினர்,
ஏங்கிய குரலினர், இணைந்த காந்தளில்
தாங்கிய செங்கை தம் தலைகள் மேல் உளார்.

பொ:—வளைந்த இடையை வருத்தும் நகில்களையுடைய பெண்டிர், பூங்கொடி ஒதுங்கிச் செல்வதுபோல் மெல்லென நடந்துகொண்டு, அழுது ஏங்கிய குரலை யுடையவராய், இணைந்துள்ள இரண்டு காந்தள் மலர் போலத் தாங்கிய சிவந்த கைகளைத் தம் தலைகள் மேல் குவித்துக் கொண்டுள்ளார் ஆனர்.

கு:—ஒதுங்கினர், குரலினர், முற்றெச்சம். பூங்கொடி ஒதுங்குவ போல் என்றது இல்பொருள் உவமை. கண்ணாகிய குவளையும் வாயாகிய ஆம்பலும் முகமாகிய தாமரையும் உடையராய்க் கொடி போன்று மெலிந்திருத்தலின் பெண்டிர்க்குப் பூங்கொடி உவமையாயிற்று. இரு கையும் குவித்தற்கு உவமை யாதல் வேண்டி 'இணைந்த காந்தள்' கூறினர். தலை மேல் கை குவித்து வணங்கும் தம் துன்பங்கண்டேனும் இராமன் நிற்பான் என்ற கருத்தால் பெண்டிர் அங்ஙனம் செய்தனர். நின்னை யல்லால் துணையிலேம் என்ற குறிப்பும் அவர்க்குண்டு. (193)

1888. தலைக்குவட் டயன்மதி தவழு மாளிகை
நிலைக்குவட் டிடையிடை நின்ற நங்கைமார்
முலைக்குவட் டிழிகணீ ராலி மொய்த்துக
மலைக்குவட் டகவுறு மயிலின் மாழ்கினர்.

தலைக் குவட்டு அயல் மதி தவழும் மாளிகை
நிலைக் குவட்டு இடை இடை நின்ற நங்கைமார்,
முலைக் குவட்டு இழி கண் நீர் ஆலி மொய்த்து உக,
மலைக் குவட்டு அகவுறும் மயிலின், மாழ்கினர்.

பொ:—முகட்டுக்கு அண்மையில் சந்திரன் தவழுகின்ற மாளிகையின் மேல்நிலையில் இடையிடையே நின்ற பெண்டிர் தம் முலையாகிய மலைச் சிகரத்தில் இறங்குகின்ற கண்ணீர்த் துளிகள் நெருங்கி மொய்த்துப் பின் சிதற, மலையுச்சியில் நின்று அகவுகின்ற மயிலின் கூட்டம் போல் அழுது மனம் வருந்தினர்.

கு:—மாளிகையின் உயர்ச்சி தோன்ற மதி தவழ்தல் கூறினர். தலைக்குவடு, மீமிசைச் சொல். மாளிகையின் முகடு. மாளிகைக்கு மலை

யும், மகளிர்க்கு மயிலும் அவர் அழுகைக்கு அகவுதலும் உவமை. மாளிகையின் மேல் நிலையை, நிலக்குவடு என்றார். ஆலி-துளி. மாழ்குதல்–வருந்துதல். (194)

**1889.** மஞ்செென வகிற்புகை வழங்கு மாளிகை
எஞ்சலில் சாளரத் திரங்கு மின்சொலார்
அஞ்சனக் கண்ணினீ ரருவி சோர்தரப்
பஞ்சரத் திருந்தழுங் கிளியிற் பன்னினார்.

மஞ்சு என அகில் புகை வழங்கும் மாளிகை
எஞ்சல் இல் சாளரத்து இரங்கும் இன் சொலார்,
அஞ்சனக் கண்ணின் நீர் அருவி சோர்தரப்
பஞ்சரத்து இருந்து அழும் கிளியில், பன்னினார்.

பொ :—மேகம் என்னுமாறு அகிற்புகையை வெளிவிடுகின்ற மாளிகையின் குறைவில்லாத பலகணியின் அருகில் இருந்து பார்த்து மனம் இரங்குகின்ற இனிய சொல்லையுடைய பெண்டிர், மை தீட்டிய கண்ணில் இருந்து வரும் கண்ணீர் அருவி சோரக் கூட்டில் இருந்து அழுகின்ற கிளியைப் போலப் பல சொல்லிக் கொண்டு அழுதார்கள்.

கு :—மகளிர், கூந்தலை யுலர்த்த மூட்டிய அகிற்புகையின் மிகுதியால் மஞ்செென மருளுமாறு இருந்தது. வழங்கும் சாளரம் என்றியைப்பினும் ஆம். சாளரத்திற்குரிய தன்மையில் குறைவிலாமை தோன்ற, 'எஞ்சலில் சாளரம்' என்றார். பஞ்சரத்தின் அமைப்புச் சாளரத்தின் அமைப்புப் போன்றதாகலானும் இன்சொலால் கிளிக்கும் பெண்டிர்க்கும் ஒப்புமை யுண்மையானும் சாளரத்திரங்கும் இன்சொல்லார்க்குப் பஞ்சரத்திருந்தழும் கிளியை உவமை கூறினர். (195)

**1890.** நன்னெடுங் கண்களி னான்ற நீர்த்துளி
தன்னெடுந் தாரைக ளளத்தின் வீழ்தலால்
மன்னெடுங் குமரன்மாட் டழுங்கி மாடமும்
பொன்னெடுங் கண்குழித் தழுவ போன்றவே.

நல் நெடுங்கண்களின் நான்ற நீர்த் துளி
தன் நெடுந்தாரைகள் தளத்தின் வீழ்தலால்,
மன் நெடுங்குமரன்மாட்டு அழுங்கி, மாடமும்,
பொன் நெடுங்கண் குழித்து, அழுவ போன்றவே.

பொ :—(இராமன் மரவுரிதரித்துக் காடுசெல்வதை மேல் மாடத் திருந்து கண்ட மகளிரின்) நல்ல நீண்ட கண்களிலிருந்து வழிந்த நீர்த்துளியின் நீண்ட தாரைகள், மேல்மாடத்திருந்து தரை குழிய வீழ்தலால், மன்னன் ஆக இருந்த இராமனிடத்துள்ள அன்பால் வருந்தி மாடமும் அழகிய நீண்ட கண்ணைக் குழித்துக்கொண்டு அழுவதைப் போன்று காணப்படுகின்றன.

கு :—தளம் – மேல் தளம். இன் நீங்கற்பொருளில் வந்த ஐந்த னுருபு. அழுங்கால் கண்கள் மலர்ச்சியின்றிக் குழிந்து காணப்படும் இயல்பு தோன்றக் 'கண் குழித்தழுதல்' கூறினர். கண் உறுப்பும் இடமும் ஆகிய இருபொருள் உணர்த்திற்று. மாளிகையின் நின்று வீழும் கண்ணீர் தரையிடம் குழிபட வீழ்தல் கொள்க. இராமன் மன்னனு தற்குரிய நெடுமையும் பருவமும் உடைமை தோன்ற 'மன்னெடுங் கும ரன்' என்றார். அறிவில்லாமை தோன்ற 'மாடமும்' என இழிவு சிறப் பும்மை கொடுத்தார். மடந்தையரேயன்றி மாடமும் என இறந்தது தழீஇயிற்று எனலும் ஆம். தற்குறிப் பேற்ற அணி. பொன்-அழகு. "மங்குரேய் நகர் மகளிராமெனப் பொங்கு கண் புடைத் தழுவ போன் போன்றவே" (பள்ளிபடைப்-128) என்பது ஒப்புநோக்கத்தகும். (196)

**1891.** மக்களை மறந்தனர் மாதர் தாயரைப்
புக்கிட மறிந்திலர் புதல்வர் பூசலிட்
டுக்கன ருயங்கின ருருகிச் சோர்ந்தனர்
துக்கநின் றறிவினைச் சூறை யாடவே.

மக்களை மறந்தனர் மாதர், தாயரைப்
புக்கிடம் அறிந்திலர் புதல்வர்; பூசல் இட்டு
உக்கனர், உயங்கினர்; உருகிச் சோர்ந்தனர்;
துக்கம் நின்று அறிவினைச் சூறை ஆடவே.

பொ :—இராமன் வனம் புகுவதால் உளதாகிய துக்கம் நிலைபெற்று நின்று மக்கள் அறிவினைக் கொள்ளைகொண்டமையால், அந்நகரத்துப் பெண்டிர் தம் மக்களை மறந்தனர்; புதல்வர் தாயர் புகுந்த இடத்தை அறியாதவராய் அழுகை யாரவாரம் செய்து கண்ணீர் சிந்தி வருந்திச் சோர்ந்தனர்.

கு :—தாயரை, புக்க இடத்தை அறிந்திலர் என இரண்டிடத்தும் இரண்டனுருபு வந்ததாகவும் விரிக்கலாம். தாயர் புக்க இடத்தை என உருபு பிரித்துக் கூட்டப்பட்டது. பூசல்-அழுகை ஆரவாரம். 'கண்ணீர் உக்கனர்' என ஒருசொல் வருவிக்க. அறிந்திலர், உக்கனர், உயங்கினர்

என்பன முற்றெச்சங்கள். தாயை மகவு மறத்தலும் மகவைத் தாய் மறத்தலும் என்றும் நிகழாதன ஆதலின் நிகழ்தற்குக் காரணம் துக்கம் அறிவினைச் சூறையாடியதே என்பது கூறினர். சூறையாடல்-கொள்ளை யடித்தல். துக்கம் முதலிய உணர்ச்சிகள் அறிவை யழிக்கும் என்பதை, 'அறிவினை நிச்சநிரப்புக் கொன்றுங்கு' (குறள்-532) என வள்ளுவர் கூறியுள்ளமையாலும் உணரலாம். (197)

**1892.** காமரங் கனிந்தெனக் கனிந்த மென்மொழி
மாமடந் தையரெலா மறுகு சேர்தலால்
தேமரு நறுங்குழற் றிருவி னீங்கிய
தாமரை யொத்துள தவள மாடமே.

காமரம் கனிந்தெனக் கனிந்த மெல் மொழி
மா மடந்தையர் எலாம் மறுகு சேர்தலால்,
தேமரு நறுங்குழல் திருவின் நீங்கிய
தாமரை ஒத்துள தவள மாடமே.

பொ :—சீகாமரம் என்னும் பண்ணிசை பழுத்தது போலச் சுவை முதிர்ந்த மெல்லிய சொல்லினையுடைய திருமகள் போன்ற பெண்டிர் எல்லாம் மாளிகையில் தங்காது தெருவைச் சேர்ந்தமையால் அவ் வெண்மையான மாளிகைகள், கண்ணுக்கினிய நறுமணம் மிக்க கூந் தலையுடைய திருமகளை நீங்கிய தாமரை மலரை ஒத்து விளங்கு கின்றன.

கு :—சீகாமரம், முதல் குறைந்தது. கனிதல் சுவை முதிர்தல். மா-திருமகள். மறுகு-தெரு. தேம்-தேன்; இனிமை யுணர்த்திற்று. சூடிய மலர்களில் இருந்து வடிந்த தேன் எனலும் ஆம். திருவினை என இரண்டனுருபு விரிக்க. தாமரைமலர், தவளமாடத்திற்கும், திருமகள், மடந்தையர்க்கும் உவமை. 'திருப்புறக்கொடுத்த செம்பொற்றாமரை' (சீவகசிந். 560) என்பதும் இங்கு நோக்கத்தகும். சேர்தலால் மாடம் தாமரை யொத்தது என்றது ஏது உவமை. (198)

**1893.** மழைக்குலம் புரைகுழல்
விரிந்து மண்ணுறக்
குழைக்குல முகத்தியர்
குழாங்கொண் டேகினர்

இழைக்குலஞ் சிதறிட
வேவுண் டோய்வுறும்
உழைக்குல முழைப்பன
வொத்தோர் பாலெலாம்.

மழைக் குலம் புரை குழல் விரிந்து மண் உற,
குழைக் குல முகத்தியர் குழாம் கொண்டு ஏகினர்,
இழைக் குலம் சிதறிட, ஏ உண்டு ஓய்வு உறும்
உழைக் குலம் உழைப்பன ஒத்து, ஓர்பால் எலாம்.

பொ:—குழையை அணிந்த சிறந்த முகத்தையுடைய பெண்டிர், மேகக்கூட்டம் போன்ற தம் கரிய கூந்தல் அவிழ்ந்து தரையில் விழவும், தாம் அணிந்த அணிகல வகைகள் சிதறவும், அம்புபட்டு வலியடங்கிச் சோர்கின்ற மான்கூட்டம் வருந்துவதுபோன்று வருந்திக் கொண்டு ஒரு பகுதியில் எல்லாம் கூட்டம் கூடிக்கொண்டு சென்றார்கள்.

கு:—குலம் என்பது, கூட்டம், சிறப்பு, வகை என்ற பல பொருள் குறித்த ஒருபெயர்த் திரிசொல். இழைக்குலம்-அணிகலவகை. ஏ-அம்பு. ஓய்தல் - முன்னுள்ள வலிமை குறைதல். "ஓய்தல் ஆய்தல் நிழத்தல் சாஅய், ஆவயினான்கும் உள்ளதனுணுக்கம்" (தொல்-சொல்-330) என்பது காண்க. மகளிர் மானனையார் ஆதலின் அவர்கள் இராமன் பிரிவு கண்டு வருந்துதற்கு ஏவுண்டு ஓய்வுறும் மானை உவமை கூறினர். உழைத்தல்-வருந்துதல். 'வலையுள்பட்டு உழைக்கின்றேற்கு' (திவ். திருமாலை. 36) என்புழியும் அப்பொருளது ஆதல் காண்க. இராமன் காடு புகும் துக்க மிகுதியால் கூந்தல் அவிழ்ந்து தரையில் வீழ்தலையும் அணிகலன்கள் சிதறுதலையும் அறியார் ஆயினர் என்க. (199)

## நகரின் பொலிவழிவு 1894-1907

1894. கொடியடங் கினமனைக் குன்றங் கோமுர
சிடியடங் கினமுழக் கிழந்த பல்லியம்
படியடங் கலுநிமிர் பசுங்கண் மாரியால்
பொடியடங் கினமதிற் புறத்து வீதியே.

கொடி அடங்கின மனைக் குன்றம்; கோ முரசு
இடி அடங்கின; முழக்கு இழந்த பல் இயம்;
படி அடங்கலும் நிமிர் பசுங் கண் மாரியால்,
பொடி அடங்கின மதில் புறத்து வீதியே.

பொ :—மாளிகையாகிய குன்றங்களில் கட்டியிருந்த கொடிகள் எல்லாம் பறவாமல் அடங்கியிருந்தன; அரசனுடைய முரசுகள் இடி போன்று ஒலி செய்யாமல் அடங்கின; பல வாச்சியங்களும் முழங்குதல் இன்றி இருந்தன; நிலம் முழுவதும் பெருகுகின்ற பசுமையான கண்ணீர் மழையால் மதிற்புறத்தில் உள்ள தெருக்களில் உள்ள புழுதி அடங்கின.

கு: —முடிபுனை விழா நிகழாமையின் கொடிகள் அவிழ்க்கப்பட்டமையால் அடங்கின என்க. மனைக்குன்றம், உருவகம். அரசர்க்குரியவாகலின் 'கோ முரசு' என்றார். சிறந்த முரசு எனலும் ஆம். இடித்தல் இடிபோல முழங்குதல். படி-நிலம். நிமிர்தல் - பெருகுதல். கண்ணீரின் மிகுதி தோன்ற, 'கண்மாரி' என்றார். பொடி-புழுதி. முழக்குவார் எல்லாம் துன்பம் உழப்பவராக இருத்தலின் முரசம் முதலிய வாத்தியங்கள் அடங்கின என்க. (200)

**1895.** அட்டிலு மிழந்தன புகைய கிற்புகை
நெட்டிலு மிழந்தன நிறைந்த பால்கிளி
வட்டிலு மிழந்தன மகளிர் கான்மணித்
தொட்டிலு மிழந்தன மகவஞ் சோரவே.

அட்டிலும் இழந்தன புகை ; அகில் புகை
நெட்டிலும் இழந்தன ; நிறைந்த பால் கிளி
வட்டிலும் இழந்தன : மகளிர், கால் மணித்
தொட்டிலும் இழந்தன மகவும், சோரவே.

பொ:—(இராமன் வனம் புகுவது கண்டு) மகளிர் எல்லாம் சோர்ந்து கிடத்தலால், அடும் தொழில் நிகழாமல் மடைப்பள்ளியும் புகை இழந்தன; மேல் மாடங்களும் அகிற் புகையை இழந்தன; நிறைந்த பாலினைப் பெருது கிளிக்குரிய வட்டிலும் இழந்தன; கால்களையுடைய மணிகள் பதித்த தொட்டில்களும் மகவை இழந்தன.

கு :—மகளிர் சோகத்தால் விருந்தினர்க்கு அருத்தித் தாம் உண்ணும் எண்ணமும் இலராய் சோர்ந்து கிடத்தலின் அடுதொழில் நிகழவில்லை யென்பதை, 'அட்டிலும் இழந்தன புகை' என்பதால் விளக்கினர். இதனல் அறத்திறம் மறந்தமை பெற்றும். நெட்டில் - உயர்ந்த மேல் மாடம். அது அகிற்புகை இழந்தமை கூறியதால் அவர்கள் இன்பத்திறம் மறந்தமை பெறவைத்தார். கிளிப் பிள்ளையும் தம் பிள்ளையும் வளருமாறு வட்டிலில் பால் இடுதலும், தொட்டிலில் இடுதலும் செய்யாது சோர்ந்திருந்தனர் என்றமையால் பொருள் திறம் மறந்தமை பெற

வைத்தவாறு. "தம் பொருளென்ப தம்மக்கள்" (குறள்-63) என்பது நினைக்க. மகவும் என்புழி உம்மை, அசை. இராமனைப் பிரிய நேர்ந்தமை யால் பெண்டிர் அறம் பொருள் இன்பங்களை மறந்திருந்தமை புலப் படுத்தியவாறு. இழந்தன என்ற வினையே பன்முறை வரத் தொடுத் தமையால் சொற்பொருட்பின்வருநிலையணி. அட்டில்-சமையல் அறை. (201)

1896. ஒளிதுறந் தனமுக முயிர்து றந்தெனத்
துளிதுறந் தனமுகிற் றொகையுந் தூயவாம்
தளிதுறந் தனபலி தான யானையும்
களிதுறந் தனமலர்க் கள்ளுண் வண்டினே.

ஒளி துறந்தன முகம் உயிர் துறந்தெனத்
துளி துறந்தன முகில் தொகையும் ; தூயவாம்
தளி துறந்தன பலி ; தான யானையும்,
களி துறந்தன ; மலர்க் கள் உண் வண்டினே.

பொ :—மக்களின் முகங்கள் உயிர் நீங்கினாற் போல ஒளி இழந்தன; மேகக் கூட்டமும் நீர்த்துளி சொரிதலைத் துறந்துவிட்டன; தூய தன்மையவாகிய கோயில்கள் பூசை செய்வோர் இன்மையால் பூசையை இழந்தன; மலரில் உள்ள தேனையுண்ட வண்டுபோலக் களித்திருக்கும் மதயானைகளும் கவளம் பெருமையால் அக்களிப்பை யிழந்தன.

கு :—முகில் துளி துறந்தது, மன்னன் கோனிலை திரிந்தான் என்று கருதிப் போலும். 'கோனிலை திரிந்திடிற் கோணிலை திரியும், கோணிலை திரிந்திடில் மாரி வறங்கூரும்" (மணிமே. 7-8, 9) என்றது காண்க. தளி-கோயில். பூசை செய்வோர் இன்மையின் கோயில்கள் பூசையை இழந்தன. யானையின் மதக்களிப்புக்கு வண்டின் களிப்பு உவமை. பலி - பூசை. தானம் - மதம். (202)

1897. நிழல்பிரிந் தனகுடை நெடுங்க ணேழையர்
குழல்பிரிந் தனமலர் குமரர் தாளிணை
கழல்பிரிந் தனசினக் காமன் வாளியும்
அழல்பிரிந் தனதுணை பிரிந்த வன்றிலே.

நிழல் பிரிந்தன குடை ; நெடுங் கண் ஏழையர்
குழல் பிரிந்தன மலர் ; குமரர் தாள் இணை
கழல் பிரிந்தன ; சினக் காமன் வாளியும்
அழல் பிரிந்தன ; துணை பிரிந்த அன்றிலே.

பொ :—குடைகள் நிழல் செய்யும் தன்மையை நீங்கின; நீண்ட கண்ணையுடைய மகளிர் கூந்தலை மலர்கள் நீங்கின; மைந்தர்களின் இணைந்த கால்களைக் கழல்கள் நீங்கின; வெகுளியுடைய மன்மதன் மலர்க்கணையும் காதலர்களை வருத்தும் அழல் தன்மையை நீங்கின; பிரியாத அன்றிற்பறவைகளும் துணையைப் பிரிந்தன.

கு :—குடைகள் சுருக்கப்பட்டமையால் நிழல் பிரிந்தன ஆயின. கூந்தலில் சூடிய மலர்களை வெறுப்பினல் பறித்து எறிதலின் மலர்கள் குழல் பிரிந்தன ஆயின. மைந்தர்கள் தம் காலிற் கட்டிய வீரக்கழல் களை வெறுப்பினல் அவிழ்த்து எறிந்தமையால் தாளிணை கழல் பிரிந் தன ஆயின. காமுறுவோர் இன்றி எல்லாம் கவல்வோர் ஆயினமையின் காமன் வாளி அழலும் தன்மையை நீங்கின. காமன் அம்பு அழற்ருமை யால் பிரியாத அன்றிற்பறவைகளும் தம் துணைகளைத் துறந்தன ஆயின. மக்கள் காதல் உணர்ச்சியும் வீர வுணர்ச்சியும் அற்றிருந்தனர் என்பதைப் புலப்படுத்தியவாறு. (203)

**1898.** தாரொலி நீத்தன புரவி தண்ணுமை
வாரொலி நீத்தன மழையின் விம்முறும்
தேரொலி நீத்தன தெருவுந் தெண்டிரை
நீரொலி நீத்தன நீத்தம் போலவே.

தார் ஒலி நீத்தன புரவி; தண்ணுமை
வார் ஒலி நீத்தன மழையின் விம்முறும்;
தேர் ஒலி நீத்தன தெருவும்; தெண் திரை
நீர் ஒலி நீத்தன நீத்தம் போலவே.

பொ :—குதிரைகள் (பண்ணுதல் நீங்கினமையால்) கிண்கிணி ஒலியை நீங்கின; மத்தளங்கள் மேகம் போல முழங்கும் நீண்ட ஒலியை (எழுப்புவோர் இன்மையின்) நீங்கி நின்றன; தெளிவான அலைகளை யுடைய நீரின் ஒலி நீங்கப் பெற்றனவாய ஆறு போலத் தெருக்களும் தேர் செல்லுதலால் ஆகிய ஒலியை நீங்கி யிருந்தன.

கு :—தார்-கிண்கிணி மாலை; குதிரையின் கழுத்தில் கட்டுவது. வார்-நீட்சி. விம்முறும் வார் ஒலி என்க. நீத்தம் வெள்ளம்; ஆகு பெயராய் ஆற்றினை யுணர்த்திற்று. "ஆறுகிடந்தன்ன அகல் நெடுந் தெரு" (நெடுநல்-30) என்றதற்கேற்பத் தெருவுக்கு ஆறும்,தேரொலி நீங் கினமைக்கு நீரொலி நீங்கினமையும் உவமையாயின. (20

1899. முழவெழு மொலியில
முறையின் யாழ்நரம்
பெழவெழு மொலியில
விமைப்பில் கண்ணினர்
விழவெழு மொலியில
வேறு மொன்றில
அழவெழு மொலியல
தரச வீதியே.

முழவு எழும் ஒலி இல, முறையின் யாழ் நரம்பு
எழ எழும் ஒலி இல, இமைப்பில் கண்ணினர்
விழவு எழும் ஒலி இல, வேறும் ஒன்று இல,
அழ எழும் ஒலி அலது, அரச வீதியே.

போ:—அயோத்தி நகரத்து அரசவீதியில், மக்கள் அழுவதால் எழுகின்ற ஒலி இருந்ததே அன்றி, முழவு வாச்சியத்தில் எழும் ஒலிகளும், யாழ் நரம்பிலிருந்து முறையாக எழுப்ப எழுகின்ற யாழ் ஒலிகளும், இமையாத கண்ணையுடைய தேவர்க்குச் செய்யும் விழாவில் எழுகின்ற ஒலிகளும் இவற்றிற்கு வேருகிய எவ்வகை ஒலியும் இலவாயின.

கு :—முழவு ஒருவகை வாத்தியம். தண்ணுமை எனப்படும் மத்தளத்தின் வேருனது; தோற்கருவி. 'எழுவ எழும்' என்றது எழ எழும் என்று மருவிற்று. வார்தல், வடித்தல், உந்தல், உறழ்தல், உருட்டல், தெருட்டல், அள்ளல் பட்டடை என இசையோர் வகுத்த எட்டு வகையின் செவியால் ஓர்த்து எழுப்ப வேண்டியிருத்தலால் 'முறையின்' என்ருர். 'இமைப்பில் கண்ணினர் விழவு' என்றது. இந்திர விழாப் போன்றவற்றை. இதனுல் இசைக்கலை நிகழ்ச்சி யின்மை கூறினுர். (205)

1900. தெள்ளொலிச் சிலம்புகள்
சிலம்பு பொன்மணி
நள்ளொலித் திலநளிர்
கலையு மன்னவே
புள்ளொலித் திலபுனல்
பொழிலு மன்னவே
கள்ளொலித் திலமலர்
களிறு மன்னவே.

தெள்ளொலிச் சிலம்புகள் சிலம்பு பொன்மனை
நள் ஒலித்தில, நளிர் கலையும் அன்னவே;
புள் ஒலித்தில புனல், பொழிலும் அன்னவே;
கள் ஒலித்தில மலர், களிறும் அன்னவே.

பொ :—ஆடல் மகளிரின் தெளிவான ஒலியையுடைய சிலம்புகளின் ஒலி அழகிய வீடுகளின் நடுவிடங்களில் ஒலிக்கவில்லை; பெரிய மேகலை ஒலியும் அச்சிலம்பு போன்றே அங்கு ஒலிக்கவில்லை; நீர்நிலைகளில் பறவைகளும் ஒலி யெழுப்பவில்லை; சோலைகளிலும் அவ்வாறே அப் பறவைகள் ஒலியடங்கி இருந்தன; மலர்களில் வண்டுகள் ஒலி செய்யவில்லை; யானையின் மதநீரிலும் அவ்வாறே வண்டுகள் மொய்த்து ஒலி செய்யவில்லை.

கு :—சிலம்பு என்றது சிலம்பொலியை. நாடகக் கலைநிகழ்ச்சி நிகழவில்லை என்பதை முன் இரண்டடிகளில் விளக்கிப் பின்னிரண்டடிகளில் பறவைப் பாட்டொலியும் வண்டின் மெல்லோசையும், அந்நாடகத்தைச் சிறப்பிப்பன போல்வன ஆதலின் அவற்றின் இன்மையும் கூறினர். 'மனை நள்' என்றது, மகளிர் ஆடுதற்குரிய வீட்டின் நடுக் கூடத்தை. கள்-வண்டு; அது மலரில் தேனுண்ணுதல் போல யானையின் முகத்தில் ஒழுகும் மதநீரையும் விரும்பி யுண்ணும் இயல்பினது ஆதலின், 'களிறும் அன்னவே' என்றார். ஆறறிவு உடைய மக்களே யன்றி ஐயறிவுடைய பறவைகளும் நான்கறிவுடைய வண்டுகளும் இராமன் பிரிவுக்கு வருந்தின என்பதை இங்குப் புலப்படுத்தினர். (206)

1901. செய்ம்மறந் தனபுனல் சிவந்த வாய்ச்சியர்
கைம்மறந் தனபசுங் குழவி காந்தெரி
நெய்ம்மறந் தனநெறி யறிஞர் யாவரும்
மெய்ம்மறந் தனரொலி மறந்த வேதமே.

செய் மறந்தன புனல்; சிவந்த வாய்ச்சியர்
கை மறந்தன பசுங் குழவி; காந்து எரி
நெய் மறந்தன; நெறி அறிஞர் யாவரும்
மெய் மறந்தனர்; ஒலி மறந்த வேதமே.

பொ :—வயல்கள் (நீர்பாய்ச்சுவாரின்மையால்) நீரை மறந்தன; சிவந்த வாயையுடைய பெண்டிர் கைகள் பசுமையான குழந்தைகளை யெடுத்தலை மறந்துவிட்டன; கொழுந்துவிட்டெரியும் நெருப்புகள் (ஆகுதி செய்வார் இன்மையால்) நெய்யாகுதியை மறந்தன; மெய்

நெறியறிந்த ஞானியர் யாவரும் மெய்ப்பொருள் தியானத்தை மறந்தனர்; வேதம் ஓதுவார் இன்மையால், ஒலித்தலை இழந்தன.

கு :—நெடிது போழ்து தொடர்பு நீங்கினமையால் செய், புனலையும் மகளிர் கை, குழவியையும் எரி, நெய்யையும் அறிஞர், மெய்யையும் வேதம், ஒலியையும் மறக்கவும் இழக்கவும் நேர்ந்தது. மெய் - மெய்ப் பொருள். (207)

**1902.** ஆடின ரழுதன ரமுத வேழிசை
பாடின ரழுதனர் பரிந்த கோதையர்
ஊடின ரழுதன ருயிரி னன்பரைக்
கூடின ரழுதனர் குழாங் குழாங்கொடே.

ஆடினர் அழுதனர், அமுத ஏழ் இசை
பாடினர் அழுதனர், பரிந்த கோதையர்
ஊடினர் அழுதனர், உயிரின் அன்பரைக்
கூடினர் அழுதனர், குழாம் குழாம் கொடே.

பொ :—அரங்கில் ஆடிக் கொண்டிருந்தவர்களும் அழுதார்கள்; அமுதம் போன்ற ஏழிசைப் பாடலைப் பாடிக்கொண்டிருந்தவர்களும் அழுதார்கள்; அறுத்தெறிந்த மாலையை யுடையராய்க் கணவருடன் ஊடியிருந்தவர்களும் அழுதார்கள்; உயிர் போன்ற காதலரைக் கூடி மகிழ்ந்திருந்தவர்களும் கூட்டம் கூட்டமாகச் சேர்ந்து அழுதார்கள்.

கு :—குழாங் குழாங்கொடு என்பது, கடைநிலை விளக்காய் எல்லாவற்றோடும் இயையும். ஆடினரும் பாடினரும் ஊடினரும் கூடினரும் குழாம் குழாமாகச் சேர்ந்து அழுதனர் என்க. குழாம்-கூட்டம். (208)

**1903.** நீட்டில களிறுகைந் நீரின் வாய்புதல்
பூட்டில புரவிகள் புள்ளும் பார்ப்பினுக்
கீட்டில விரைபுனிற் றீன்ற கன்றையும்
ஊட்டில கறவைநைந் துருகிச் சோர்ந்தவே.

நீட்டில களிறு கைந் நீரின்; வாய் புதல்
பூட்டில புரவிகள்; புள்ளும் பார்ப்பினுக்கு
ஈட்டில இரை; புனிற்று ஈன்ற கன்றையும்
ஊட்டில கறவை; நைந்து உருகிச் சோர்ந்தவே.

பொ :—இராமன் பிரிவிற்கு வருந்திச் சோர்ந்தமையால் களிற்றி யானைகள் நீர் உண்ண நீர்நிலையில் கையை நீட்டவில்லை; குதிரைகள் புல் பையை வாயில் பூட்டிக்கொள்ளவில்லை; பறவைகளும் தம் குஞ்சுகளுக்கு இரை தேடிக்கொண்டுவரவில்லை; ஈன்று அணிமையுள்ள கன்றினையும் பசுக்கள் பால் ஊட்டவில்லை.

கு :—வாய், இடைநிலை விளக்காய் முன்னும் பின்னும் சென்று இயைந்தது. புதல்-புல். புல் நிறைந்த பையைக் குதிரையின் வாயில் பூட்டித் தின்னச் செய்வது வழக்கம். கறவை-பால் கறத்தற்குரிய பசு. புனிறு - ஈன்றணிமை. புனிற்றுக் கறவை என்றியைப்பினும் அமையும். இராமன் பிரிவை நினைந்து யானையும் குதிரையும் பறவையும் பசுவும் கன்றும் உணவு உண்ணவும் ஊட்டவும் மறந்து வருந்தின என்க. இராமன் பிரிவுக்கு வருந்தும் யானைப் பாகரும் குதிரைச் சேவகரும் பறவை வளர்ப்பாரும் பசுவைக் காப்பாரும், யானையைக் கூடத்தில் நின்று அவிழ்த்து விடாமையாலும் குதிரைக்குப் புல் பூட்டாமையானும் பறவைக்கு இரை போடாமையானும் தனித்துக் கட்டிய கன்றை அவிழ்த்து விட்டு ஊட்டச் செய்யாமையானும் அங்ஙனம் ஆயின எனலும் ஆம். (209)

1904. மாந்தர்தம் மொய்ம்பினின்
மகளிர் கொங்கையாம்
ஏந்திள நீர்களும்
வறுமை யெய்தின
சாந்தமம் மகிணர்தம்
முடியிற் றையலார்
கூந்தலும் வறுமைய
மலரின் கூலமே.

மாந்தர்தம் மொய்ம்பினில் மகளிர் கொங்கையாம்
ஏந்து இள நீர்களும் வறுமை எய்தின
சாந்தம்; அம்மகிணர்தம் முடியில், தையலார்
கூந்தலும் வறுமைய மலரின் கூலமே.

பொ :—மைந்தர்களுடைய தோள்களைப் போலவே மகளிருடைய நகில்களாகிய உயர்ந்த இளநீர்களும் சந்தனம் பூசப் பெறுமல் வறுமை அடைந்தன; அக்கொழுநர் முடிகள் மலர்சூடப் பெறுமல் வறுமை அடைந்தாற் போலவே அம்மங்கையருடைய கூந்தலும் மலரினத்தைப் பெறுமல் வறுமை அடைந்தன.

கு:—மைந்தரும் மகளிரும் சந்தனம் பூசுதலையும் மலர்மாலை சூடுதலையும் இழந்து இருந்தனர் என்பது கருத்து. மொய்ம்பு - தோள். மொய்ம்பினில், முடியில் என்புழி இல் ஒப்புப் பொருளன. சாந்தத்தால் மொய்ம்பும் கொங்கையும், மலரால் முடியும் கூந்தலும் வறுமை யெய்தின என்னுது, மைந்தர்வழி நிற்போர் மங்கையர் என்பது தோன்ற, மாந்தர் மொய்ம்பினில்; மகினார் தம் முடியில் ஏன உவமை கூறி, மைந்தர், தோளில் சாந்தம் பூசாமையாலும் முடியில் மலர் சூடாமையாலும் மகளிரும் கொங்கையில் சந்தனம் பூசாமலும் கூந்தலில் மலர் சூடாமலும் இருந்தனர் என்பது பெற வைத்தவாறு. கூலம்- கூட்டம்; இனம் கொங்கையாம் ஏந்திளநீர்கள் என்றது உருவகம். (210)

1905. ஓடை நல்லணி முனிந்தன
★ வுயர்களி றுச்சிச்
சூடை நல்லணி முனிந்தன
தொடர்மனை கொடியின்
ஆடை நல்லணி முனிந்தன
வம்பொன்செ யிஞ்சி
மேடை நல்லணி முனிந்தன
வெள்ளிடை பிறவும்.

ஓடை நல் அணி முனிந்தன
உயர் களிறு உச்சிச்
சூடை நல் அணி முனிந்தன
தொடர்மனை; கொடியின்
ஆடை நல் அணி முனிந்தன
அம்பொன் செய் இஞ்சி;
மேடை, நல் அணி முனிந்தன
வெள் இடை, பிறவும்.

பொ:—உயர்ந்த யானைகள் முகப்பட்டம் ஆகிய நல்ல அணியை அணியாமல் வெறுத்திருந்தன; தொடர்ந்த மனைகள் தூபியின் உச்சியில் சூடுதற்குரிய நல்ல அணியை அணியாது வெறுத்திருந்தன; அழகிய பொன்னல் செய்யப்பட்ட மதில்கள் கொடி ஆடையாகிய நல்ல அணியை வெறுத்திருந்தன; நகரிடையே யுள்ள செய்குன்றுகளும் வெற்றிடங்களும் பிறவிடங்களும் நல்ல அலங்காரங்களை வெறுத்திருந்தன.

கு :—ஓடை-யானையின் முகப்பட்டம். அணிவோர் இன்மையின் அணியாதிருந்த யானை முதலியவற்றை முனிந்தனவாகக் கற்பனை செய்கின்றார். உச்சிச்சூடை என்றது தூபியின் உச்சியை. கொடியின் ஆடை என்புழி இன் தவிர் வழி வந்த சாரியை. கொடிகளால் மதில்கள் அலங்கரிக்கப் பெறவில்லை என்க. சூடை - தலை. இஞ்சி - மதில். மேடை - செய்குன்று. (211)

**1906.** திக்கு நோக்கிய தீவினைப்
பயனெனச் சிந்தை
நெக்கு நோக்குவோர் நல்வினைப்
பயனென நேர்வோர்
பக்க நோக்கலென் பருவர
லின்பமென் றிரண்டும்
ஒக்க நோக்கிய யோகரு
மருந்துய ருழந்தார்.

'திக்கு நோக்கிய தீவினைப்
பயன்' எனச் சிந்தை
நெக்கு நோக்குவோர், 'நல்வினைப்
பயன்' என நேர்வோர்,
பக்கம் நோக்கல் என்? பருவரல்
இன்பம் என்று இரண்டும்
ஒக்க நோக்கிய யோகரும்
அருந்துயர் உழந்தார்.

பொ :—தாம் உள்ள திசையை நோக்கி வருகின்றன தீவினையின் பயன்கள் என்று அறிந்த உடன் சிந்தை நெகிழ்ந்து வருந்தி நோக்கு கின்றவர்களும், நல்வினைப் பயன்கள் தம்மை நோக்கி வருகின்றன என்று அறிந்தவுடன் உடன்பட்டு மகிழ்ந்து நோக்குகின்றவர்களும் ஆகிய இவ்வுலகத்தோர் இருக்கும் பக்கத்தைப் பார்த்து விட்டு, இவர்கள் இராமன் வனம் புகுவதால் பெரிதும் வருந்தினர் என்று கூறுவதில் என்ன சிறப்பு உண்டு? துன்பம் இன்பம் இரண்டையும் ஒப்பக்காணும் யோகியரும் நீக்குதற்கரிய துயரால் வருந்தினர்கள்.

கு :—நன்றாங்கால் நல்லவாக் காண்பவரும் அன்றாங்கால் அல்லல் படுபவரும் ஆகிய உலக மக்கள் இராமன் வனம் புகுவது அறிந்து வருந்துவது இயல்பு. ஆதலின், 'பக்கம் நோக்கல் என்?' என்றார். வேண்டுதல் வேண்டாமையின்றி இன்பத் துன்பங்களை ஒப்பக்காணும்

யோகியர் அந்நிகழ்ச்சிக்கு வருந்துதலே சிறப்பு என்பது தோன்ற, 'யோகரும்' என உயர்வுசிறப்பும்மை கொடுத்தார். யோகரும் அருந் துயர் உழந்தார் எனின், நோக்குவோர் நேர்வோர் பக்கம் நோக்கல் என்? என்று ஒருசொல் வருவித்து மாற்றி முடித்தலும் ஆம் 'திக்கு நோக்கிய நல்வினைப் பயன்' என்றும் இயைக்க. தீவினைப் பயனும் நல்வினைப் பயனும் வருதற்கு முன்னரே துன்பமும் இன்பமும் உறுகின்ற இயல்புடையோர், இராமனைப் பிரியும் தீவினைப் பயன் வந்தபின் வருந் துதல் சொல்ல வேண்டுமோ என்பது கருத்து. பருவரல் இன்பமென் றிரண்டும் ஒக்க நோக்கிய யோகியர் என்றது, செஞ்சாந்து பூசினும் செத்தினும் போழினும் நெஞ்சோர்ந் தோடா நிலைமை யுடையோர் என்பதைப் புலப்படுத்தியவாறு. 'கவ்வையம் பெருங்கடல் முனியும் கால் வைத்தான்' (1852) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். (212)

**1907.** ஓவி னல்லுயி ருயிர்ப்பினோ
டுடல்பதைத் துலைய
மேவு தொல்லழ கெழில்கெட
விம்மனோய் விம்மத்
தாவி லைம்பொறி மறுகுறத்
தயரத னென்ன
ஆவி நீக்கின்ற தொத்ததவ்
வயோத்திமா நகரம்.

ஓவு இல் நல் உயிர் உயிர்ப்பினோடு
உடல் பதைத்து உலைய,
மேவு தொல் அழகு எழில் கெட,
விம்மல் நோய் விம்மத்
தாவு இல் ஐம்பொறி மறுகுறத்
தயரதன் என்ன,
ஆவி நீக்கின்றது ஒத்தது அவ்
அயோத்தி மா நகரம்.

பொ:—நீங்காத நன்மையினை யுடைய உயிர்கள் எல்லாம் பெரு மூச்சோடு உடல் பதைத்து வருந்துதலாலும், இயல்பாகப் பொருந் திய பழைய அழகும் புனைவன பூசுவனவற்றால் வரும் செயற்கையழகும் கெடுதலாலும், துன்பநோயால் தேம்புதலாலும், வலியிழந்த ஐம்பொறி கள் கலங்குதலாலும், தயரதன்போலவே அந்த அயோத்திமாநகரமும் உயிர்விடுகின்றதை ஒத்துள்ளது.

கு :—கூனியையும் கைகேயியையும் நீக்க, 'ஓவில் நல்லுயிர்' என்ருர். "கைகேயியுங் கொடிய கூனியுமல்லால் கொடியார் பிறருளரோ? மேனியு மின்றி வெறு நீரே யாயினர்" (1794) என முன்னர்க் கூறியுள்ளமை காண்க. தன்பால் வாழும் மக்களையன்றி அயோத்திநகரம் வேறு இல்லாத ஒற்றுமைநயத்தால் மக்கள் படும் துன்பங்களாகிய உயிர்த்தல் உடல் பதைத்தல் முதலியவற்றை அயோத்திக்குரியவாகக் கூறினர். இயல்பாய் அமைந்ததைத் 'தொல்லழகு' என்றும் இடையில் செயற்கையால் எழுந்த அழகை 'எழில்' என்றும் வேறுபடுத்தி விளக்கியவாறு. விம்மல் முன்னது துன்பம்; பின்னது தேம்புதல். தா—வலி. உடலைவிட்டு உயிர் நீங்குங்கால் புலனைந்தும் பொறிகலங்கி அறிவழிதல் இயல்பு; ஆதலின் ஐம்பொறி மறுகுறல் கூறினர். மறுகுற-கலங்க. தயரதன் என்ன, என்ற உவமையால் உயிர்த்தல் உடல் பதைத்தல் முதலியன தயரதனுக்கும் உண்டு என்பது பெறப்படும். இராமன் தயரதனுக்கு உயிராதல் போன்றே மன்னுயிர்க்கெலாம் உயிராவான் ஆதலின் "தயரதன் என்ன அயோத்திமாநகரம் ஆவி நீக்கின்ற தொத்தது" என்ருர். "இயங்கு பல்லுயிர்க்கோருயிரென நின்ற விராமன்" என வருஞ் செய்யுளினும்' "இன்னுயிர் யார்க்கும் ஒன்ருய்ப் பொருவருதேரில் செல்லப் புறத்திடைக் கண்டார் போல்வார்" (1666) என முன்னும் கூறியுள்ளமை காண்க. இது ஏதுத்தற்குறிப்பேற்ற வணி.(213)

## இராமன் சீதையின் உறையுளை அடைதல்

**1908.** உயங்கி யந்நக ருலைவுற
வொருங்குழை சுற்ற
மயங்கி யேங்கினர் வயின்வயின்
வரம்பிலர் தொடர
இயங்கு பல்லுயிர்க் கோருயி
ரெனநின்ற விராமன்
தயங்கு பூண்முலைச் சானகி
யிருந்துழிச் சார்ந்தான்.

உயங்கி அந்நகர் உலைவு உற,
ஒருங்கு உழை சுற்ற,
மயங்கி ஏங்கினர் வயின் வயின்
வரம்பு இலர் தொடர,

இயங்கு பல் உயிர்க்கு ஓர் உயிர்
என நின்ற இராமன்
தயங்கு பூண் முலைச் சானகி
இருந்துழிச் சார்ந்தான்.

பொ :—அவ்வயோத்தி நகர மக்கள் வாடி வருந்தவும், பலர் ஒருங்கு சேர்ந்து தன் பக்கத்தே சுற்றி வரவும், இடங்கள் தோறும் மனம் மயங்கி அழுது கொண்டிருந்த அளவிலாத மக்கள் தன் பின் தொடர்ந்து வரவும், இயங்குகின்ற உயிர்கள் பலவற்றிற்கும் ஓர் உயிர் போன்ற இராமன், விளக்கமான அணிகளை அணிந்த மார்பினையுடைய சீதை இருந்த இடத்தை அடைந்தான்.

கு :—உயங்குதல்-வாடுதல். உழை சுற்றுதல்-இராமன் அருகில் சூழ்ந்து வருதல். வயின்வயின் ஏங்கினர் ஆகிய வரம்பிலர் என்க. ஏங்கினர்—வினைப் பெயர். உலைவுற, சுற்ற, தொடரச் சார்ந்தான் என்க. உலைவுறவும் சுற்றவும் தொடரவும் காரணம் கூறுவாராய், "இயங்குபல்லுயிர்க் கோருயிர் என நின்ற இராமன்" என்றார். சனகன் மகள் என்று பொருள்படும் பெயர் 'சானகி' என்பது. இதுபெயர்வழி வரும் பெயர் ; மகளை யுணர்த்திற்று. (214)

## இராமன் கோலத்தைக் கண்ட சீதையின் நிலை 1909—1910

**1909.** அழுது தாயரோ டருந்தவ
ரந்தண ரரசர்
புழுதியாடிய மெய்யினர்
புடைவந்து பொருமப்
பழுது சீரையி னுடையினன்
வரும்படி பாரா
எழுது பாவையன் னுண்மனத்
துணுக்கமொ டெழுந்தாள்.

அழுது, தாயரோடு அருந்தவர்,
அந்தணர், அரசர்,
புழுதி ஆடிய மெய்யினர்,
புடை வந்து பொருமப்
பழுது சீரையின் உடையினன்
வரும்படி பாரா,
எழுது பாவை அன்னாள் மனத்
துணுக்கமொடு எழுந்தாள்.

பொ.—தாயரோடு அரிய தவமுனிவர்களும் அந்தணர்களும் அரசர்களும் அழுதுகொண்டு புழுதி படிந்த உடம்பினையுடையராய்ப் பக்கத்தில் வந்து விம்மாநிற்க, இல்வாழ்வார்க்குப் பயன்படாத மரவுரியாகிய உடையை உடுத்தவனாய் இராமன் வரும் தன்மையைப் பார்த்து, எழுதிய சித்திரப்பாவை போன்ற சீதை உள நடுக்கத்தோடு எழுந்தாள்.

கு:—ஒருவினை ஒடுச் சொல் தாயரோடு என உயர்பின் வழிவந்தது. இராமனைப் பிரிய நேர்ந்தமைக்கு வருந்துவோரில் தாயர் சிறப்புடையராதல் காண்க. மெய்யினர் - முற்றெச்சம். பொருமுதல் - விம்மல்; தேம்புதல். இல்வாழ்வார்க்குப் பயன்படாமையின் 'பழுது சீரை' எனப் பட்டது. பழுது பயம் இன்றே (தொல்-சொல் - 324) என்பது காண்க. துணுக்கம் – நடுக்கம். அழுதுபொரும என்றியைப்பினும் ஆம். தாயர் என்றது தயரதன் மனைவியராகிய அறுபதினாயிரவரை. 1870 ஆம் செய்யுள் காண்க. (215)

## சீதை இராமனை நோக்கி வினவுதல் 1910-11

**1910.** எழுந்த நங்கையை மாமியர்
தழுவின ரேங்கிப்
பொழிந்த வுண்கணீர்ப் புதுப்புன
லாட்டினர் புலம்ப
அழிந்த சிந்தைய ளன்னமி
தின்னதென் றறியாள்
வழிந்த நீர்நெடுங் கண்ணினள்
வள்ளலை நோக்கி.

எழுந்த நங்கையை மாமியர்
தழுவினர், ஏங்கிப்
பொழிந்த உண்கணீர்ப் புதுப்புனல்
ஆட்டினர், புலம்ப,
அழிந்த சிந்தையள், அன்னம் இது
இன்னது என்று அறியாள்,
வழிந்த நீர் நெடுங் கண்ணினள்,
வள்ளலை நோக்கி.

பொ:—எழுந்த சீதையை மாமிமார் தழுவிக்கொண்டு அழுது பொழிந்த மையுண்ட கண்ணின் நீராகிய புதிய புனலால் திருமஞ்சனம் ஆட்டிப் புலம்பாநிற்க, அன்னம்போன்ற சீதை மனம் அழிந்தவளாய்

இம் மாமியர் இவ்வாறு அழுதற்குக் காரணம் இன்னது என்று அறியாதவளாய் - நீர் பெருகும் நெடிய கண்ணினளாய் இராமனை நோக்கி.

கு :—மேல் 'இயம்பினுள்' என்ற வினையோடு முடியும்; குளகம். தழுவினரேங்கி, முற்றெச்சம். கண்களிலிருந்து அப்பொழுது வழிந்த கண்ணீர் சீதை மேல் படப் புலம்பினர் என்பார், 'உண் கணீர்ப் புதுப்புனலாட்டினர் புலம்ப' என்ருர். இதுகாறும் அழுதறியாதவர்கள் இன்று அழுத கண்ணீர் ஆதலின் 'புதுப்புனல்' என்ருர் எனலுமாம். அன்னம், உவமையாகுபெயராய்ச் சீதையை யுணர்த்தியது. இது-இவ்வழுகைக்கு காரணம். சிந்தையள், அறியாள், கண்ணினள் என்ற முற்றெச்சங்கள், நோக்கி என்ற வினையெச்சவினைகொண்டன. (216)

**1911.** பொன்னை யுற்ற பொலன்கழ லோய்புகழ்
★ மன்னை யுற்ற துண்டோமற்றிவ் வன்றுயர்
என்னை யுற்ற தியம்பென் றியம்பினுள்
மின்னை யுற்ற நடுக்கத்து மேனியாள்.

'பொன்னை உற்ற பொலன் கழலோய்! புகழ்
மன்னை உற்றது உண்டோ? மற்று இவ் வன் துயர்
என்னை உற்றது? இயம்பு!' என்று இயம்பினுள்,
மின்னை உற்ற நடுக்கத்து மேனியாள்.

பொ :—பொன்னுல் இயன்ற அழகிய வீரக்கழலை உடையோய்! புகழ் மிக்க தயரத மன்னனுக்கு வந்த தீங்கு ஏதேனும் உண்டோ? இப்பெருந்துயர்மயமான மாமியர் என்னை அடைந்ததற்குக் காரணம் கூறுக என்று கேட்டாள்; மின்னலைப் போன்ற நடுக்கமுடைய மேனியை யுடையாளாகிய சீதை.

கு :—சீதை இராமன் பாதங்களை வணங்கிக் கேட்கின்ருள் ஆதலின் 'பொலன் கழலோய்' எனத் திருவடியைச் சிறப்பித்துக் கூறினுள். இவ் வன்றுயர் என்னையுற்றது என்றது, இத்துயர்மிக்க மாமியர் என்னைத் தழுவியழக் காரணம் என்னை? என வினவியவாறு. துயரின் மிகுதி தோன்ற 'வன்துயர்' என்ருர். துயர் ஆகுபெயராய்த் துயருறும் மாமியரை யுணர்த்திற்று. மற்று–அசைநிலை. இவ்வன்றுயர்க்குக் காரணமாக மன்னையுற்ற தீங்கு உண்டோ? என்ன நிகழ்ந்தது? எனப் பொருள் கூறலும் ஆம். மேனியாள் இயம்பினுள் என இயைக்க. (217)

## இராமன் விடை

1912. பொருவி லெம்பி புவிபுரப் பான்புகல்
இருவ ராணையு மேந்தினெ னின்றுபோய்க்
கருவி மாமழைக் கற்கடங் கண்டுநான்
வருவெ னீண்டு வருந்தலை நீயென்றான்.

'பொருவு இல் எம்பி புவி புரப்பான்; புகல்
இருவர் ஆணையும் ஏந்தினென், இன்று போய்க்
கருவி மாமழைக் கல் கடம் கண்டு நான்,
வருவென், ஈண்டு வருந்தலை நீ' என்றான்.

பொ :—" ஒப்பில்லாத என் தம்பி பரதன் இவ்வுலகை ஆள்வான்; நான், சிறந்தார் எனச் சொல்லப்படும் தாயும் தந்தையும் ஆகிய இருவர் ஆணையினையும் தலைமேல் ஏந்திக் கொண்டு இன்று சென்று மின்னல் இடி முதலிய தொகுதிகளையுடைய கரிய மேகம் தவழும் மலைகளையுடைய காட்டைக் கண்டு வருவேன்; இங்கு நீ வருந்தாதே" என்று கூறினான்.

கு :—பொருவு-ஒப்பு. நிறை குணத்தவன் நின்னினும் நல்லனால் (1698) எனக் கோசலை கூறியதும் நினைக்க. இருவர் என்றது தயரதன் கைகேயி ஆகிய இருவரை. ஆணை யொன்றாயினும் கூறியவர் இருவர் ஆதலின் முற்றும்மை கொடுத்தார். கருவி-தொகுதி. உலக நிகழ்ச்சிக்குக் கருவியாகிய மேகம் எனினும் ஆம். மேகம் தவழும் காடாகலின் வாழ்தற்கு இனிய இடம் எனச் சீதை கொள்ள வேண்டி, 'மாமழைக் கற்கடம்' என்றான். கல்-மலை. கடம்-காடு. போதல் இன்று என்பதைக் கூறி வருநாளைக் கூறிற்றிலன் அவள் பொருள் என்று கருதி, 'ஈண்டு வருந்தலை' எனவே, சீதை இங்கு இருக்க வேண்டும் என்பதும் வருந்தலாகாது என்பதும் இராமன் குறிப்பு என்பது புலப்படுத்திய வாறு. (218)

## சீதை வருத்தம்

1913. நாய கன்வன நண்ணலுற் றானென்றும்
மேய மண்ணிழந் தானென்றும் விம்மலள்
நீவ ருந்தலை நீங்குவென் யானென்ற
தீய வெஞ்சொல் செவிசுடத் தேம்புவாள்.

நாயகன் வனம் நண்ணல் உற்ருன் என்றும்,
மேய மண் இழந்தான் என்றும் விம்மலள் ;
'நீ வருந்தலை ; நீங்குவென் யான்;' என்ற
தீய வெம் சொல் செவி சுடத் தேம்புவாள்.

பொ :—தன் கொழுநன் காட்டிற்குப் போகின்ருன் என்பதற்காகவும், தான் பெற்ற அரசை இழந்து விட்டான் என்பதற்காகவும் சீதை அழவில்லை; 'யான் நீங்குவேன்; நீ வருந்தாதே' என்று கூறிய மிகக் கொடிய சொல் தன் காதுகளில் நுழைந்து சுடுவதால் தேம்பி அழுவாளானுள்.

கு :—கணவன் நாடு இழந்தமைக்கும் காடு புகுதற்கும் வருந்த வேண்டிய சீதை அதற்கு வருந்திலள் என அவள் செல்வத்துப் பற்றின்மையும் 'நீ வருந்தலை நீங்குவென் யான்' என்ற சொல்லுக்குத் தேம்புகின்ருள் என அவள் கணவன்பால் கொண்ட பற்றுண்மையும் புலப்படுத்தியவாறு. நாடு புரப்பினும் காடு புகினும் இராமன் உடன் இருத்தலையே செல்வமாகக் கருதுபவள் ஆதலின் தேம்புவாள் ஆயினள். கேள்வி யானும் பொருளானும் கொடிய சொல் என்பது தோன்ற, 'தீய வெஞ்சொல்' என ஈரடை கொடுத்தார். நீங்குவென் என்றமையால் இராமன் தனியே செல்லுதலும், நீ வருந்தலை என்றமையால் ஆற்றி இல்லிருத்தல் வேண்டும் என்பதும் பெறவைத்தமையால் தேம்பினுள் என்க. (219)

### கவிக்கூற்று

1914. துறந்து போமெனச்
சொற்றசொற் றேறுமோ
உறைந்த பாற்கடற்
சேக்கை யுடனெரீஇ
அறந்தி றம்புமென்
றையன யோத்தியில்
பிறந்த பின்பும்
பிரிவில ளாயினுள்.

துறந்து போம் எனச் சொற்ற சொல் தேறுமோ ?
உறைந்த பால் கடல் சேக்கை உடன் ஒரீஇ,
அறம் திறம்பும் என்று ஐயன் அயோத்தியில்
பிறந்த பின்பும் பிரிவு இலள் ஆயினுள்.

போ :—நாம் பூமியில் போய்ப் பிறவாவிடின் அறம் மாறுபடும் என்று கருதித் திருமால் தான் தங்கியிருந்த திருப்பாற்கடலில் பாம் பணைப்பள்ளியில் தன்னுடன் இருத்தலை நீங்கி அயோத்தியில் இராம னாகப் பிறந்த பின்பும் பிரியாதவளாய்ச் சீதையாகப் பிறந்து அவனுக்கு மனைவியானவள், துறந்து போவான் என்று கருதுமாறு கணவன் சொன்ன சொல்லை நல்ல சொல் என்று தெளிந்து ஆற்றி யிருப்பாளோ ? இராள் அன்றே !

கு :—'போவம்' என்பது போம் என விகாரப்பட்டது எனக் கொள் ளின் சிறக்கும். உறைந்த-தங்கியிருந்த. சேக்கை-ஆதிசேடனாகிய படுக்கை. உடனுறைஇ-ஒருங்கிருத்தலில் இருந்து நீங்கி. ஐயன் என் றது திருமாலை. அறம் திறம்புதலாவது, தருமநெறி குறைந்து பாவ மிகுதல். பாவம்புரிவோரை அழித்து அறம்புரிவோரைக் காக்க வேண் டியே இராமன் பூமியில் பிறந்தான் என்பது கருத்து. நீ வருந்தலை என்ற சொல்லை நம்பித் தெளிந்து ஆற்றி இருப்பளோ ? என்க. உயர்ந்த தெய்வநிலை நீங்கி மனிதனாகப் பிறப்பு மாறி வந்த பொழுதும் பிரிவிற்குத் தரியாது மனைவியாகப் பிறந்தவள் இன்று பிரிந்திருக்க இசையாள் என்பது கருத்து. (220)

## சீதை வினவுதல்

1915. அன்ன தன்மைய ளையனு மன்னையும்
சொன்ன செய்யத் துணிந்தது தூயதே
என்னை யென்னை யிருத்தியென் றாயென்றாள்
உன்ன வுன்ன வுயிருமி ழாநின்றாள் .

அன்ன தன்மையள் "ஐயனும் அன்னையும்
சொன்ன செய்யத் துணிந்தது தூயதே ;
என்னை என்னை ? 'இருத்தி' என்றாய்" என்றாள்
உன்ன உன்ன உயிர் உமிழா நின்றாள்.

போ :—இராமன் ஆற்றியிரு என்ற சொல்லைத் தெளிந்து ஆற்றி இருக்க இயலாத தன்மையுடைய சீதை, "தந்தையும் தாயும் சொன்ன படி செய்யத் துணிந்தது நல்லதே ஆகும்; ஆயின் என்னை ஏன் 'இங்கு இரு' என்றாய் ?" என்று வினவி இராமன் பிரிவை நினைக்க நினைக்க உயிர்விடுவது போன்ற வருத்தத்தை யடைந்தாள்.

கு :—ஐயன்-தந்தை. என்னை முன்னது இரண்டாம் வேற்றுமை விரி; பின்னது வினா. 'இருத்தி' என்றது, இராமன் கூறிய சொல்லை வாங்கிக் கூறியது. அடுக்கு, பன்மை யுணர்த்திற்று. உயிர் உமிழ்தல்—

உயிரை விடுதல். இராமனை உயிராகக் கொண்டவள் ஆதலின் அவன் பிரிவிற்கு உயிர் உமிழ்கின்றாள் ஆனாள். (221)

## இராமன் விடை

**1916.** வல்ல ரக்கரின் மால்வரை யூடெழும்
அல்ல ரக்கி னுருக்கழல் காட்டதர்க்
கல்ல ரக்குங் கடுமைய வல்லநின்
சில்ல ரக்குண்ட சேவடிப் போதென்றான்.

"வல் அரக்கரின் மால் வரை ஊடு எழும்,
அல் அரக்கின் உருக்கு அழல் காட்டு அதர்க்
கல் அரக்கும், கடுமைய அல்ல நின்
சில் அரக்கு உண்ட சேவடிப் போது" என்றான்.

பொ:—"வலிய அரக்கர் வாழ்கின்ற பெரிய மலையில் ஏறுதற்கும், இரவிலும் அரக்கினை உருக்கினாற் போன்று அழலுகின்ற காட்டு வழியில் உள்ள பரல் கற்கள் வருத்துதற்கு உரிய கடுமையுடையன அல்ல; நின்னுடைய குளிர்ந்த செம்பஞ்சுக் குழம்பு ஊட்டப் பெற்ற சிவந்த பாத தாமரைகள்" என்று கூறினான்.

கு:—அரக்கர் வாழ்வதற்குரிய மலையென்பார், 'அரக்கரின் மால் வரை' என்றார்; யானையது காடு என்றாற் போல. 'எழுதல்' இங்கு ஏறு தல் என்னும் பொருளது. எழும் கடுமைய அல்ல; அரக்கும் கடுமைய அல்ல; எனத் தனித்தனிக் கூட்டுக. அதர்–வழி; அது அழலுதற்கு அரக்கின் உருக்கு உவமை. செந்நிலப் பெருவழி ஆதலின் நிறத்தா னும் வெம்மையானும் அரக்கு உருக்கு உவமையாயிற்று. அரக்குதல்–வருத்துதல். சில் அரக்கு–குளிர்ந்த செம்பஞ்சுக் குழம்பு. அடியின் மென்மை புலப்படச் சேவடிப் போது என உருவகஞ் செய்தவாறு. போது இங்கு மலரை யுணர்த்தியது. (222)

## சீதையின் மாற்றம்

**1917.** பரிவி கந்த மனத்தொடு பற்றிலா
தொருவு கின்றனை யூழி யருக்கனும்
எரியு மென்பதி யாண்டைய தீண்டுநின்
பிரிவி னுஞ்சுடு மோபெருங் காடென்றாள்.

'பரிவு இகந்த மனத்தொடு பற்று இலாது
ஒருவுகின்றனை ; ஊழி அருக்கனும்
எரியும் என்பது யாண்டையது? ஈண்டு நின்
பிரிவினும் சுடுமோ பெருங்காடு?' என்றாள்.

பொ :—'என்பால் பற்று இல்லாமையால் இரக்கம் நீங்கிய மனத்தோடு என்னை விட்டு நீங்குகின்றாயே அன்றி, ஊழி இறுதியில் தோன்றும் சூரியனும் உன்னுடன் வரும் என்னைச் சுடும் என்பது எங்கே நிகழும்? அது நிற்க; நீ கூறும் பெரிய காடு இங்கு நின் பிரிவுத் துயரைக் காட்டிலும் சுடுமோ?' என்று கூறினாள்.

கு :—பரிவு-இரக்கம். மனைவி என்ற பற்று இல்லை ஆயினும், பெண் என்ற இரக்கம் இருப்பினும் என்னைப் பிரிய இயலாது என்பது கருத்து. பிரியாது உடனுறையும்போது பாலைவனத்துப் பரிதியேயல்ல; ஊழிக் காலத்துச் சூரியனும் சுடமாட்டான் என்பாள், ஊழி அருக்கனும் எரியும் என்பது யாண்டையது? என்றாள். பெருங் காட்டினும் நின் பிரிவே சுடும் என்க. 'பெருங்காடின்னா வென்றிராயின் இனியவோ பெரும தமியோர்க்கு மனையே" (குறுந்-124) என்பது இங்கு ஒப்புநோக்கத்தகும். பிரிவு சுடுவதாகக் கூறும் மரபினை 'பிரிவெனு மெரியுள் வீழ்ந்து' (சீவக-1527) என்பதால் அறியலாம். (223)

## இராமன் சிந்தனை

1918. அண்ண லன்னசொற் கேட்டன னன்றியும்
உண்ணி வந்த கருத்து முணர்ந்தனன்
கண்ணி னீர்க்கடல் கைவிட நேர்கிலன்
எண்ணு கின்றன னென்செயற் பாற்றென.

அண்ணல் அன்ன சொல் கேட்டனன் ; அன்றியும்
உள் நிவந்த கருத்தும் உணர்ந்தனன் ;
கண்ணின் நீர்க் கடல் கைவிட நேர்கிலன்,
எண்ணுகின்றனன், 'என் செயற்பாற்று ?' என.

பொ :—இராமன், சீதை கூறிய அச் சொல்லைக் கேட்டான்; கேட்டதோடு அன்றி அவள் உள்ளத்தில் மேற்பட்டுத் தோன்றும் கருத்தையும் உணர்ந்தான்; அவளைக் கண்ணீர்க் கடலில் கைவிட்டுச் செல்ல இசையாத நெஞ்சினனாய் 'என்ன செயத்தக்கது?' என்று எண்ணலானான்.

கு '—உள் நிவந்த கருத்து-உள்ளத்தே பிற கருத்தினும் மேற்பட்டுத் தோன்றும் கருத்து. அவள் சொல்லைக் கேட்டு அவள் கருத்தை உய்த்துணர்ந்தனன் என்க. அவள் கருத்தாவது இராமன் பிரியின் உயிர்தரியாமை. கண்ணீர்க் கடலில் கைவிடலாவது அவள் அழுது அழுது வருந்துமாறு விட்டுப் பிரிந்து போதல். 'ஒண்டொடி உழையமாகவும் இனைவோள் பிழையலள் மாதோ பிரிதும் நாமெனினே" (அகநா-5) என்பது இங்கு நோக்கத்தகும். அவள் மென்மையை நோக்குங்கால் உடன்வர உடன்படாமையும் அவள் கருத்தை நோக்குங்கால் உடன்படலும் ஆக மாறிமாறித் தோன்றுதலின் 'என் செயற்பாற்று?' என்று எண்ணுகின்றான் ஆனான். கேட்டனனாய், உணர்ந்தனனாய், நேர்கிலனாய் எண்ணுகின்றனன் என முற்றெச்சமாக்கி முடிக்க. முன்னர்ப் பாற்கடலில் கைவிட நேராது உடன்கொடுவந்து மண்ணிற் பிறந்து கூடினவன் இப்பொழுது கண்ணீர்க் கடலில் கைவிட நேர்கிலன் என்பது குறிப்பு. (224)

## சீதை சீரையுடுத்து வருதல்

**1919.** அனைய வேலை யகன்மனை யெய்தினள்
புனையுஞ் சிரந் துணிந்து புனைந்தனள்
நினைவின் வள்ளல்பின் வந்தய னின்றனள்
பனையி னீள்கரம் பற்றிய கையினாள்.

அனைய வேலை, அகல் மனை எய்தினள்,
புனையும் சீரம் துணிந்து புனைந்தனள்,
நினைவின், வள்ளல் பின் வந்து, அயல் நின்றனள்,
பனையின் நீள் கரம் பற்றிய கையினாள்.

பொ :—இராமன் எண்ணிக்கொண்டுள்ள அவ்வமயத்தில் சீதை, அகன்ற மாளிகையில் நுழைந்து, புனைதற்குரிய மரவுரியைத் துணிவுடனே புனைந்துகொண்டு மனோவேகத்தில் இராமன் பின்பக்கமாக வந்து பனை போன்று நீண்ட அவன் கையைத் தன் கையாற் பற்றிக்கொண்டு பக்கத்தில் நின்றாள்.

கு :—சீரம் - மரவுரி. அரண்மனைக்கு வரும் முனிவர்க்கு வழங்க வேண்டி மாளிகையில் மரவுரி இருப்பதுண்டு என்க. அவன் கண் முன் சீரை தரித்துவர அஞ்சிப் பின் வந்தாள் என்க. வள்ளல்-இராமன். பனை, கையின் பருமைக்கும் நீட்சிக்கும் உவமை. எய்தினளாய், புனைந்தனளாய், கையினளாய் நின்றனள் என முற்றெச்சங்களாக்கி முடிக்க. (225)

கவிக் கூற்று 1920—1921

**1920.** ஏழை தன்செயல் கண்டவர் யாவரும்
வீழு மண்ணிடை வீழ்ந்தனர் வீந்திலர்
வாழு நாளுள வென்றபின் மாள்வரோ
ஊழி பேரினு முய்குந ருய்வரே.

ஏழைதன் செயல் கண்டவர் யாவரும்
வீழும் மண் இடை வீழ்ந்தனர்; வீந்திலர்;
வாழும் நாள் உள என்ற பின் மாள்வரோ ?
ஊழி பேரினும் உய்குநர் உய்வரே !

பொ ;—சீதையின் அச்செயலைக் கண்டவர்கள் எல்லாம் வீழ்தற்குரிய மண்மேல் வீழ்ந்தார்கள்; ஆனால் இறந்திலர்; (ஏனெனின் ?) உடம்போடு கூடி வாழ்தற்குரிய ஆயுள் நாள் மேலும் உள ஆனபின் மாண்டு போவாரோ? மாளார்; ஊழி பெயரும் காலத்தும் உய்ந்திருக்க வேண்டிய ஆயுள் உடையவர்கள் உய்ந்திருப்பாரேயாவர்.

கு :—இராமன் முடிசூட அரசியாய் உயர்ந்த அணிகலன்களையும் ஆடைகளையும் அணிதற்குரிய சீதை, ஏழைப் பெண்போல் மரவுரி தரிக்கக் கண்டவர்கள், அவள் நிலைக்கு ஏலாத கோலத்தைக் காணப் பொறுதவராய் மயங்கித் தரையில் வீழ்ந்தனர் என்க. வீழ்ந்தவர்கள் மரணத்திற்குரிய துன்பங்கள் எல்லாம் உற்றனராயினும், இறவாமைக் குக் காரணம் பிறிதொன்றும் இல்லை; அவர்க்கு ஆயுள் நீடித்திருப்பதே என்க. ஊழி பேரினும் உய்குநர் உய்வரே என்ற பொதுப் பொருளால் மேலைச் சிறப்புப் பொருளை நிறுவுதலின் இது வேற்றுப்பொருள் வைப்பணி. விண் முதலான மேலிடங்களில் நின்று வீழ்பவர்கள் தரை யிடமாகவே வீழவேண்டியிருத்தலின் 'வீழும் மண்' என்று சிறப்பித் தார். சீதை சீரை தரித்த நிலையில் ஏழைப்பெண்டு போல் காணப் பட்டதைப் புலப்படுத்த அவளை 'ஏழை' என்றார். ஏழை-வறியவர். (226)

தாயர் முதலியோர் வருந்துதல்

**1921.** தாயர் தவ்வையர் தன்றுணைச் சேடியர்
ஆய மன்னிய வன்பின ரென்றிவர்
தீயின் மூழ்கின ரொத்தனர் செங்கணான்
தூய தையலை நோக்கினன் சொல்லுவான்.

தாயர், தவ்வையர், தன் துணைச் சேடியர்,
ஆயம், மன்னிய அன்பினர் என்று இவர்
தீயில் மூழ்கினர் ஒத்தனர்; செங்கணான்,
தூய தையலை நோக்கினன், சொல்லுவான்.

பொ :—சீதைக்குத் தாய் முறையில் உள்ள பெண்டிரும், தமக்கை முறையினரும், அவளுக்குத் துணைசெய்யும் பணிப் பெண்டிரும், விளையாட்டு ஆயமும் நிலை பெற்ற அன்பினை யுடையவரும் ஆகிய இவர்களெல்லாம் அவள் கோலத்தைக் கண்டு தீயில் மூழ்கினாரைப் போன்று துன்புற்றனர்; சினத்தால் சிவந்த கண்ணையுடைய இராமன், தூய அன்புடைய அச்சீதையை நோக்கிச் சொல்லு கின்றான்.

கு :—தவ்வை-தமக்கை. ஆயம்-விளையாட்டுத்தோழியர்; ஆயத்தார். இராமன் சீதையின் துணிவு கண்டு சினங்கொண்டமை தோன்றச் 'செங்கணான்' என அவனுக்குப் பெயர் கொடுத்தார். அவன் சினத்திற் கேற்ற குற்றம் ஏதும் இன்றித் தூய அன்புடையவள் சீதை என்பது தோன்ற, 'தூயதையலை' என்றார். (227)

## இராமன் சொல்

1922. முல்லை யுங்கடன் முத்து மெதிர்ப்பினும்
வெல்லும் வெண்ணகை யாய்விளை வுன்னுவா
யல்லை போத வமைந்தனை யாதலின்
எல்லை யற்ற விடர்தரு வாயென்றான்.

'முல்லையும் கடல் முத்தும் எதிர்ப்பினும்
வெல்லும் வெண் நகையாய்! விளைவு உன்னுவா
யல்லை; போத அமைந்தனை; ஆதலின்
எல்லை அற்ற இடர் தருவாய்' என்றான்.

பொ :—"முல்லையரும்பும் கடல் முத்தும் எதிர்த்தாலும் அவ்விரண்டையும் வெல்லத் தக்க வெண்மையான பற்களையுடையவளே! பின் விளையப் போவதை நினைக்கிலாது என்னுடன் வர அமைந்துவிட்டாய், ஆதலால் எனக்கு எல்லையில்லாத துன்பம் தரப்போகின்றாய்" என்று கூறினான்.

கு :—சீதை மரவுரி தரித்து, தன் கைப்பற்றிக் கொண்டு முறுவலுடன் நிற்பதைக் கண்டானாகலின், 'வெண்ணகையாய்'! என்று விளித்தான். காடு கடந்தும் கடல்கடந்தும் செல்லுதற்குரியள் என்ற குறிப்பு

'முல்லையும் கடல் முத்தும்' என்பதால் தோன்றுதல் காண்க. முல்லை அரும்புவது முல்லைநிலமாகிய காடாதல் தெளிக. காட்டில் விராதனுல் விளையும் துன்பத்தையும் கடல்சூழிலங்கையில் இராவணனுல் விளையும் துன்பத்தையும் வெல்லுதற்குரியள் என்ற குறிப்பும் காண்க. 'எல்லையற்ற இடர்தருவாய்' என்றது பின்னிகழ்ச்சிகள் எல்லாவற்றையும் உளத்துக் கொண்டு கூறிய சொல்லாகும். வெண்ணகையாய்! என விளித்து எல்லையற்ற இடர்தருவாய் என்றது, நீ என்னுடன் வரல் நினக்கு மகிழ்ச்சியையும் எனக்குப் பேரிடரையும் தருகின்றது என்பது கருத்து. இங்குக் கூறியாங்கு இராவணனுல் கவரப்பட்டுச் சீதை எல்லையற்ற துயர்க்குக் காரணமானமையும் அவனை வெல்ல இராமன் இன்னல் பல எய்தினமையும் பின்னர்க் காணலாம். (228)

## சீதையின் மாற்றம்

**1923.** கொற்ற வன்னது கூறலுங் கோகிலம்
செற்ற தன்ன குதலையள் சீறுவாள்
உற்று நின்ற துயரமி தொன்றுமே
எற்று றந்தபி னின்பங்கொலா மென்ருள்.

கொற்றவன் அது கூறலும், கோகிலம்
செற்றது அன்ன குதலையள் சீறுவாள்,
'உற்று நின்ற துயரம் இது ஒன்றுமே?
என் துறந்த பின் இன்பம் கொலாம்?'' என்ருள்.

பொ :—இராமன் அவ்வாறு சொல்லுதலும் குயிலை வென்றது போன்ற மழலைமொழி பேசும் சீதை, இராமனைச் சீறுபவளாய் நின்னை அடைந்துநின்ற துயரம் யான் உடன் வருதலாகிய இது ஒன்றுமே போலும்? என்னைத் துறந்த பின்னர் எல்லாம் இன்பமே ஆகும் போலும்?' என்று கூறினுள்.

கு :—இராமன் சொல்லிய சொல் கணவன் கூறும் சொல்லாக இன்றி அரசன் ஆணையால் கூறிய சொல்லாக இருந்தது என்பது தோன்ற, இராமனைக் 'கொற்றவன்' என்ருர். நாடாளாது காடு புகுவதே துன்பம் துய்க்கத்தானே! அத் துன்பத்தில் இதுவும் ஒன்ருக வைத்து எண்ணுது 'எல்லையற்ற இடர் தருவாய்' என்றது, மணற்சோற்றில் கல் பொறுக்குவதுபோன்றது என்பாள் 'எற்றுறந்தபின் இன்பங்கொலாம்' என்ருள். என்னைத் துறந்த பின்னும் துன்பங்கள் தொடரப்போகின்றன வாகலின் என்னை விலக்குவானேன்? என்பது கருத்து. (229)

## இராமன் புறப்படுதல்

1924. பிறிதொர் மாற்றம் பெருந்தகை பேசலன்
மறுகி வீழ்ந்தழ மைந்தரு மாதரும்
செறுவின் வீழ்ந்த நெடுங்தெருச் சென்றனன்
நெறிபெ ருமை யரிதினி னீங்குவான்.

பிறிது ஓர் மாற்றம் பெருந்தகை பேசலன்,
மறுகி வீழ்ந்தழ மைந்தரும் மாதரும்,
செறுவின் வீழ்ந்த நெடுந் தெருச் சென்றனன்,
நெறி பெருமை அரிதினில் நீங்குவான்.

பொ :—சீதை அவ்வாறு சொன்னவுடன் பிறிது ஒரு மறு மொழியையும் இராமன் பேசாதவனாய், மனம் கலங்கி மண்மிசை வீழ்ந்து மைந்தரும் மாதரும் அழுதலால் கண்ணீர் பெருகி வயல்போலக் குழிந்து கிடக்கும் நீண்ட தெரு வழியே தான் போதற்கு மக்கள் நெருக்கத்தால் வழி பெருமையால் அரிதினில் நீங்குவானாய்ச் சென்றான்.

கு :—மாற்றம்-மறுமொழி. மேலும் பேசின், சீதை பொருள் ஆதலின் பிறிதொரு மாற்றம் பெருந்தகை பேசவில்லை. சீதையின் மனநிலையறிந்து பிறிதொன்றும் பேசாது விட்டது இராமனுடைய பெருந்தன்மையாலாயது என்பது தோன்ற, இராமனைப் 'பெருந்தகை' என்றார். மறுகுதல்-மனங் கலங்குதல். மைந்தரும் மாதரும் அழுதலால் செறுவின் வீழ்ந்த தெரு என்க. செறு - வயல். வீழ்தல் என்றது இங்குக் குழிந்தமையை யுணர்த்திற்று. தெரு செறுப் போலக் குழிந்தமைக்குக் காரணம் மைந்தரும் மாதரும் அழுதமையேயாம் என்க. நீங்குவானாய்ச் சென்றனன் என முற்றெச்சமாக்கி முடிக்க. நீங்குவான் என்றது பிறவினைப் பொருளில் 'நீக்குவான்' என்று இருப்பின் சிறக்கும். வழியில் வீழ்ந்து கிடக்கின்ற மைந்தரையும் மாதரையும் அரிதினில் நீக்கிக்கொண்டு சென்றான் என்ற கருத்துத் தோன்றும். (230)

## மூவரும் போம் முறை

1925. சீரை சுற்றித் திருமகள் பின்செல
மூரி விற்கை யிளையவன் முன்செலக்
காரை யொத்தவன் போம்படி கண்டவவ்
வூரை யுற்ற துணர்த்தவு மொண்ணுமோ.

சீரை சுற்றித் திருமகள் பின் செல,
மூரி வில் கை இளையவன் முன் செலக்
காரை ஒத்தவன் போம்படி கண்ட அவ்
ஊரை உற்றது, உணர்த்தவும் ஒண்ணுமோ ?

பொ.:—மரவுரியை இடையில் சுற்றிக்கொண்டு சீதை பின்னே செல்லவும் அவளுக்கு முன்னே பெரிய வில்லேந்திய கையையுடைய இலக்குவன் செல்லாநிற்கவும் கரிய மேகத்தை ஒத்த இராமன் அவ் விருவர்க்கும் பின்னே போகும் தன்மையைக் கண்ட அந்த ஊரவர்க்கு நேர்ந்த துன்பத்தை உணர்த்தவும் இயலுமோ? (இயலாது).

கு:—இராமனுடன் போகவேண்டும் என்ற ஆர்வத்தால் சீரையை யுடுக்க வேண்டிய முறையில் உடுக்கவில்லை என்பது தோன்றச் 'சீரை சுற்றி' என்றார். பின் செல என்பதற்குப் பின்வர என இடவழுவமைதி யாகப் பொருள் கொண்டு முன் இலக்குவன் செல்லப் பின் சீதை வர, இராமன் இடையில் சென்றான் எனக் கொள்ளலுமாம். மூரிவில்-பெரிய வில்; வலிய வில்லுமாம். தண்டகவனத்து முனிவர்களாகிய பயிர் தழைக்கச் செல்லும் இராமனைக் காரை யொத்தவன் என்றது பொருத்தமாதல் காண்க. ஊர் ஆகுபெயராய் மக்களை யுணர்த்திற்று. ஒண்ணுமோ-கூடுமோ ? கூடாது என்பது கருத்து. (231)

### மக்கள் பின் தொடர்தல்

**1926.** ஆரும் பின்ன ரழுதவ லித்திலர்
சோருஞ் சிந்தையர் யாவருஞ் சூழ்ந்தனர்
வீரன் முன்வன மேவுதும் யாமெனுப்
போரொன் றொல்லொலி கைம்மிகப் போயினர்.

ஆரும் பின்னர் அழுது அவலித்திலர்;
சோரும் சிந்தையர் யாவரும் சூழ்ந்தனர்;
'வீரன் முன் வனம் மேவுதும் யாம்' எனுப்
போர் ஒன்று ஒல் ஒலி கைம்மிகப் போயினர்.

பொ:—அந்நகர மக்கள் யாரும் பிறகு அழுது துன்புறவில்லை, சோர்ந்த மனத்தை யுடைய எல்லோரும் 'இராமனுக்கு முன் நாம் காட்டை யடைவோம்' என்று எண்ணினவராய்ப் போரிலே விளையும் ஒல்லெனும் ஒலி மிகுமாறு விரைந்து சென்றார்கள்.

கு:—இராமன் காட்டிற்குப் போதல் தப்பாது என்று தெளிந்தபின் அழுது பயனில்லை; மேல் நிகழவேண்டுவதை எண்ணவேண்டும்

என்ற கருத்தினராதலின் ஆரும் அழுது அவலிக்கவில்லை என்க. பின்னர், இராமன் புறப்பட்ட பின்னர். இராமனுக்குப் பின் எனலுமாம். சோரும் சிந்தையர் ஆயினும் ஆர்வத்தால் வீரன் முன் வனம் மேவுதும் யாம் என்றனர் என்றது, இராமன் வருதற்குள் காட்டை நாடாக்கி விடலாம் என்ற கருத்தால் ஆகும். "உற்றுறைதும், யாரு முறையவே சின்னுளில், புற்றுடைய காடெல்லாம் நாடாகிப் போமென்பார்" (1802) என முன் கூறியதும் நோக்குக. கைம்மிகல்-அளவுகடத்தல். மேவுதல்-அடைதல்; விருப்பத்தோடு போதலை யுணர்த்த அச் சொல்லால் கூறினர்; விரும்புதல் என்றும் அச் சொல்லுக்குப் பொருள் உண்டு. (232)

## இராமன் தாயருக்குக் கூறல்

**1927.** தாதை வாயிற் குறுகினன் சார்தலும்
கோதை வில்லவன் றுயரைக் கும்பிடா
ஆதி மன்னனை யாற்றுமி னீரென்றான்
மாத ராரும் விழுந்து மயங்கினர்.

தாதை வாயில் குறுகினன் சார்தலும்
கோதை வில்லவன் தாயரைக் கும்பிடா,
'ஆதி மன்னனை ஆற்றுமின் நீர்' என்றான்;
மாதராரும் விழுந்து மயங்கினர்.

பொ :—தந்தையின் மாளிகைவாயிலை நெருங்கிச் சேர்ந்தவுடன் மாலையணிந்த வில்லையுடைய இராமன், தன்னுடன் தொடர்ந்துவரும் அறுபதினாயிரம் தாய்மாரையும் கும்பிட்டு, 'நீங்கள் நமக்கு எல்லாம் ஆதியாக இருக்கின்ற மன்னவனை ஆற்றுங்கள்' என்று கூறினான்; (அவன் குறிப்பை யுணர்ந்த) அத்தாய்மாரும் தரையில் விழுந்து மயங்கினார்கள்.

கு :—கோதை-மாலை. புதிய மன்னன் பரதன் ஆதல் தோன்றத் தயரதனை ஆதிமன்னன் என்றான் எனலும் ஆம். தன்னைப் பிரிவதால் தயரதன் பெருந்துயர் எய்துவான் ஆகலின் 'ஆற்றுமின்' என்றான். தன்னுடன் வாராது தடுக்க வேண்டி இங்ஙனம் கூறுகின்றான் என்ற குறிப்பை யுணர்ந்த அத் தாய்மார் விழுந்து மயங்கினார்கள் என்க. (233)

### தாய்மார் வாழ்த்துதல்

**1928.** ஏத்தி னார்தம் மகனை மருகியை
வாழ்த்தி னாரிளை யோனை வழுத்தினார்
காத்து நல்குமின் றெய்வதங் காளென்றார்
நாத்த ழும்ப வரற்றி நடுங்குவார்.

ஏத்தினார், தம் மகனை, மருகியை
வாழ்த்தினார்; இளையோனை வழுத்தினார்;
'காத்து நல்குமின் தெய்வதங்காள்!' என்றார்,
நாத் தழும்ப அரற்றி நடுங்குவார்.

போ:—நாக்குத் தழும்பேறுமாறு பல கூறி அரற்றி நடுங்குகின்ற தாய்மார்கள், தம் மகனாகிய இராமனையும் தம் மருகியையும் நீடு வாழ்க என வாழ்த்தினார்கள். இளையவனாகிய இலக்குவனையும் அவ்வாறே வாழ்த்தினார்கள்; "தெய்வதங்காள்! இம்மூவரையும் காத்தருளுங்கள்" என்று துதித்தார்கள்.

கு:—தெய்வதங்காள் காத்து நல்குமின் என்றாராய் ஏத்தினார் என்று இயைக்க. கணவன் மனைவியாக வுள்ள இருவரையும் ஒருங்கு சேர்த்து வாழ்த்துதலே முறையாகலின், "தம்மகனை மருகியை வாழ்த்தினார்" என்றார். வழுத்துதல், பாராட்டுதலும் ஆம். தம் வாழ்த்தின்படி அவர்களைக் காக்கின்ற ஆற்றல் தெய்வங்கட்கே யுண்டு ஆதலின், தெய்வதங்களை இறுதியில் ஏத்தினார்கள். ஏத்துதல்-துதித்தல். (234)

### இராமன் முதலியோர் தேர்மிசைப் போதல்

**1929.** அன்ன தாய ரரிதிற்
பிரிந்தபின்
முன்னர் நின்ற முனிவனைக்
கைதொழாத்
தன்ன தாருயிர்த் தம்பியுந்
தாமரைப்
பொன்னுந் தானுமோர் தேர்மிசைப்
போயினான்.

அன்ன தாயர் அரிதில் பிரிந்த பின்,
முன்னர் நின்ற முனிவனைக் கைதொழாத்
தன்னது ஆருயிர்த் தம்பியும், தாமரைப்
பொன்னும், தானும், ஓர் தேர்மிசைப் போயினன்.

பொ.—அத் தாய்மார்கள் அரிதாகப் பிரிந்த பிறகு தன்முன் நின்ற வசிட்ட முனிவனைக் கைதொழுது தன்னுடைய ஆருயிர் போன்ற தம்பி இலக்குவனும், தாமரை மலரில் இருக்கும் இலக்குமியின் அவதாரமாகிய சீதையும், தானும் ஒரு தேர் மேல் ஏறிப் போனான்.

கு:—பிரிய இயலாத நெஞ்சினராய்ப் பிரிந்தமை தோன்ற 'அரிதில் பிரிந்த பின்' என்றார். தொழா, செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம். தொன்மைநிலை எண்ணித் 'தாமரைப் பொன்' என்றார் சீதையை. தலைமைப்பொருட்கு வினை கொடுக்கவே தலைமையில் பொருளும் முடிவதோர் முறைமைபற்றி, 'போயினன்' என ஒருமையாற் கூறினர். 'தானுந் தேரும் பாகனும் வந்தென்னலனுண்டான்' என்புழிப்போல. (235)

இங்கே ஒரு பிரதியில் உள்ளதாக 45–ஆம் சுவடியில் காட்டப்பட்ட செய்யுள் வருமாறு:—

1929 (a) போயி னனகர் நீங்கிப் பொலிதரு
தூய பேரொளி யாகித் துலங்கருள்
ஆயு மூவரு மாகி யுயிர்த்தொகைக்
காயு மாகி யளித்தரு ளாதியான்.

நகர் நீங்கு படலம் முற்றிற்று.

—·———

# 5. தைலமாட்டு படலம்

இராமன் வனம் புக்கதனுல் இறந்த தசரதனுடலை, கேகயநாட்டிலிருந்து பரதன்வரும்வரை கெடாதிருத்தற்பொருட்டு எண்ணெயில் மூழ்குவித்த செய்தி பேசுதலின் இப்படலம் இப்பெயருடையதாயிற்று. தைலம் - எண்ணெய். ஆட்டுதல் - மூழ்குவித்தல்*. இப்பகுதிக்கு 5, 19, 22, 25, 29 என்னும் குறியீடுள்ள சுவடிகளில் இலம்பாட்டுப் படலம் என்று பெயர் காணப்படுகிறது. இப்படலப் பாடற்ருெகை 86. இந்த எண்பத்தாறுபாடல்களுள் முன் 47 செய்யுட்கள் சுமந்திரன்மீட்சிப் படலம் என்ற தலைப்பின்கீழும் பின் 39 செய்யுட்கள் தசரதன் மோட்சப் படலம் என்ற தலைப்பின்கீழும் காணப்படுவதாக 45ல் உள்ளது.

நகரமாந்தர் பலரும் தொடர்ந்து வரத் தேரின்மீது காடுநோக்கிச் சென்ற இராமன், அயோத்திக்கு இரண்டு யோசனை வழிக்கு அப்பால் ஒரு சோலையில் இறங்கி அங்குள்ள முனிவரோடு தங்கினுன். உடன் வந்த நகரமக்கள், அச் சோலையை அடுத்துள்ள ஆற்றங்கரை மணற்பரப்பு பாறைகள் முதலிய இடங்களில் தங்கி நெடுநேரம் உறங்காதிருந்து நள்ளிரவில் தங்களை மறந்து உறங்குவாராயினர். அந்நிலையில் இராமன், சுமந்திரனை அழைத்து, "இவ்வாறு தொடர்ந்து வரும் மக்களை நகரத்துக்கு மீண்டுசெல்லச் செய்தல் இயலாது; அவர்களை அழைத்துக்கொண்டு வனம் புகுதலும் கூடாது; அரவம் எழாதவாறு நீ தேரைத் திருப்பிக்கொண்டு நகர் நோக்கி மீண்டால் விழித்

---

*சென்னை, பள்ளிக்கூடப் பாடபுத்தக மொழியிலக்கியக் கழகத்தினரால் 1883–ஆம் ஆண்டு வெளியிடப்பட்ட அயோத்தியா காண்டப் பதிப்பில் இப்படலத் தலைப்புப் பற்றி எழுதப்பட்டுள்ள குறிப்பு அடியில் வருமாறு:—

"தசரத மகாராஜனை எண்ணெய்க் கடாரத்துள் அமிழ்த்தி வைத்த கதையைச் சொல்லுதலால் இப்படலத்துக்கு, தைல மாட்டுப் படலம் எனப் பெயர் இடப்பட்டது. இதை, தைலம் ஆட்டு என்றும், தைலம் மாட்டு என்றும் பிரிக்கலாமானதைப் பற்றி, இதனை முதலில் அச்சிட்ட திருவேங்கடாசலமுதலியாரும் தைலம் மாட்டுப் படலம் என்றிருப்பதே சரி என்று பிழைதிருத்தத்தில் காட்டியிருக்கின்றனர். நீர் ஆட்டினுர் என்பது உயிரோடிருப்பவர்க்கே யன்றி இறந்தவர்க்கு வழங்குவது தகுதியல்லவென்று அவர் நினைத்தார் போலும்: எமக்கோ தைலம் ஆட்டு என்றிருக்கலாமெனத் தோன்றுகிறது. ஏனெனில், விலங்கில் மாட்டினுன் தொழுவில் மாட்டினுன் என்னும் பிரயோகங்கள், கடினமான பொருளில் சேர்ப்பதற்கு வருகின்றனவேயன்றி நீரில் மாட்டினுன் என்று வாராமையானும்—இறந்த பெரியோர்களுடம்பைத் திருமஞ்சனமாட்டினுர்கள் என்று வழங்குவதினுலும், ஆட்டுதல் முழுகுவித்தல் என்பது கொண்டு அமிழ்த்தற்பொருளுக்கு இசையு மென்பதனுலென அறிக".

தெழுந்த மக்கள் தேர்ச்சுவடு நோக்கி நான் நகர் மீண்டேன் என்று மீள்வர்; இவ்வுதவி நீ செய்யவேண்டும்'' என்றனன். சுமந்திரன் இராமனைப் பிரிய மனமில்லாமல் தான்மட்டும் தேரொடு அயோத்தி மீண்டால் அங்கு நிகழும் தீயவிளைவுகளை யெண்ணி வருந்திநின்றனன். அதுகண்ட இராமன் அவனைப் பல நல்லுரைகளால் தேற்றி இயைவித்து அவனிடம் தந்தைக்கும், தாய்க்கும் வசிட்ட முனிவனுக்கும் செய்திகள், கூறினான். சீதையும் மாமியர்க்கும் தங்கையர்க்கும் செய்திகள் கூறினாள். அவ்வளவில் இராமனிடம் விடைபெற்றுச் சுமந்திரன் தேரொடு அயோத்திநோக்கி மீண்டு சென்றனன்; இராமனும் அப்பொழுதே புறப்பட்டுப் பொழுதுபுலருமுன் இரண்டுயோசனை தூரம் சென்றனன். ஐந்து நாழிகையளவில் அயோத்தியை அடைந்த சுமந்திரன் வசிட்டனை அணுகி இராமன் வனம்புக்க செய்தி கூறலும், முனிவன் சுமந்திரனோடு தசரதன் மாளிகையை அடைந்தான். தேர் வந்தமை அறிந்த அமைச்சரும் பிறரும் அரசமாளிகையை அடைந்து இராமனைக் காணாது வருந்துவாராயினர். இரதம் வந்ததென்று அறிந்த தசரதன், இராமன் வந்தானென்று தெளிந்து, கண் விழித்து, வசிட்ட முனிவனை நோக்கி 'இராமன் வந்தானோ' என்று வினவ, முனிவன் மறுமாற்றஞ் சொல்ல முடியாதவனாய் அப்பாற் போயினன். முனிவன் முகக்குறியால் இராமன் வரவில்லையென்று உணர்ந்த தசரதன் சுமந்திரனை நோக்கி, இராமன் நெடுந்தூரம் சென்றுவிட்டானோ? அணிமையில் உள்ளானோ? என்று கேட்க, சுமந்திரன், 'மனைவியொடும் தம்பியோடும் பெருங்கான் புகுந்தான்' என்ற அளவில் மன்னன் உயிர் பிரிந்தது. உயிர்த்தல் முதலியவை ஒடுங்கினமையால் தசரதன் இறந்தமையறிந்து, கோசலையும் சுமித்திரையும் மற்றைத் தேவியரும் வருந்திப் புலம்பிக் கதறி அழுதனர். சுமந்திரன் சென்று சொல்லத் தசரதன் இறந்தமை தெரிந்து வசிட்டன் அங்கு வந்து விதியின் விளைவை எண்ணித் துயருற்று நடுக்கடலுள் மரக்கலம் உடையப் பெற்ற மீகாமனைப் போலக் கலங்கி, 'பரதன் வந்த பின் அரசனுக்கு இறுதிக்கடன் செய்யத்தகும்' என்று கூறி அதுவரை அரசனுடல் கெடாமல் காக்கக் கருதி, அதனை எண்ணெய்க் கொப்பரையில் இட்டு, உடனே முடிக்க வேண்டிய அவசரமான பணியைச் செய்து முடிக்கும்படி பரதனை விரைந்து அழைத்துவருமாறு தூதுவரை அனுப்பினன். சோலையில் உறங்கிய நகரமக்கள் விழித்தெழுந்து இராமன் தங்கிய இடத்தே அவனைக் காணாது வருந்தி, மீண்ட தேர்த்தடம் நோக்கி, இராமன் அயோத்திக்குத் திரும்பினான் என்று மீண்டு நகர் புக்கு, இராமன் வனம் புக்கதும் தசரதன் வான்புக்கதும் அறிந்து, பெருந்துயரெய்தி, வசிட்ட முனிவன் உரையால் ஒருவாறு தேறிவைகுவாராயினர்: என்பது இப்படலத்தின் நுவல்பொருட் சுருக்கமாகும்.

வனம் நோக்கிப் புறப்பட்ட அன்றிரவு அயோத்திக்கு இரண்டு யோசனைக் கப்பாலுள்ள சோலையில் முனிவரிடையே தங்கிய இராமன்,

நள்ளிரவில் சுமந்திரனை அயோத்திக்குச் செல்லும்படி விடை கொடுத்தனுப்ப, 5 நாழிகைப் பொழுதளவில் சுமந்திரன் அயோத்தியையடைந்தான் என்பது கம்பர் கூற்று.

இராமன் குகனுல் கங்கையைக் கடந்து சித்திர கூடம் நோக்கிப் புறப்பட்டபோது, சுமந்திரனுக்கு அயோத்தி செல்லும்படி விடை கொடுக்க, அவன் குகனொடு சிருங்கிபேரபுரத்திற் சிலநாள் தங்கி, இராமன் சித்திரகூடம் சேர்ந்தமை தெரிந்த பின், அங்கிருந்து புறப்பட்டு அயோத்தி அடைந்தான் என்பது வான்மீகர் கூற்று.

பரதனை அழைத்துவருமாறு ஓலையொடு தூதுவரை வசிட்டன் போக்கினுன் என்பர் கம்பர். வான்மீகர், பரதனுக்கும் கேகய மன்னனுக்கும் கொடுக்கத்தக்க பரிசுப்பொருள்களுடன் சித்தார்த்தன், விஜயன், ஜயந்தன், அசோகன், நந்தனன் என்னும் தூதுவர் ஐவரையும் வசிட்டன் அனுப்பினுன் என்பர். இவை இவ்விருவர் கூற்றுள்ளும் அமைந்த வேறுபாடாகும்.

பழைய பதிப்புக்களில் 17-ஆம் பாடலாகவுள்ள 'தொகுத்தகலிடை' என்ற முதற்குறிப்புடைய பாடல் மிகைப் பாடலாயிருக்கலாமென்று கருதி, மூலத்தொடு சேக்காமல் உரையிறுதியில் காட்டப்பட்டது.

பழைய பதிப்புக்கள் சிலவற்றில் இல்லாததும் பல பழஞ் சுவடிகளில் காணப்படுவதுமான 'வந்த முனியும்' என்று தொடங்கும் பாடல் கம்பர் கவியின் அமைதியுடையதாயும் சந்தருப்பத்துக்கு ஏற்றதாயும் இருத்தலால் மூலத்துள் 74-ஆம் பாடலாகச் சேர்த்துக்கொள்ளலாயிற்று.

இப்படலத்தில் சுமந்திரனே சிறப்புடைய கதாபாத்திரமாகத் திகழ்பவன். சுமந்திரனை நோக்கி, இராமன் கூறும் அறவுரைகள் ஒப்புயர் வற்றவை; என்றும் யாவராலும் உறுதியாகக் கொள்ளத்தக்கவை.

---

# 5. தைலமாட்டு படலம்

## இராமனுடன் யாவரும் செல்லுதல்

1930. ஏவிய குரிசில்பின் யாவ ரேகிலார்
★ மாவிய ருனையம் மன்னை நீங்கலாத்
தேவிய ரொழிந்தனர் தெய்வ மாநகர்
ஓவிய மொழிந்தன வுயிரி லாமையால்.

ஏவிய குரிசில் பின் யாவர் ஏகிலார் ?
மா இயல் தானை அம் மன்னை நீங்கலாத்
தேவியர் ஒழிந்தனர்; தெய்வம் மா நகர்
ஓவியம் ஒழிந்தன, உயிர் இலாமையால்.

பொ :—(கான் புகுமாறு) ஏவப்பட்ட இராமன்பின் செல்லாதவர் எவர் ? பெருமை பொருந்திய படையினையுடைய அந்தத் தசரதனை விட்டுப் பிரியாத மனைவிமார் (பின்செல்லாது) தவிர்ந்தனர்; தெய்வத் தன்மைவாய்ந்த பெரிய அயோத்தி நகரத்தில் உள்ள சித்திரங்கள் உயிர் இல்லாமையால் (பின் செல்லாது) ஒழிந்தன.

கு:—மா – பெருமை. அம்மன்னன் என்றது தசரதனை. நீங்கலாத் தேவியர் ஒழிந்தனர் என்றுரேனும், உயிர் இலாமையால் ஓவியம் ஒழிந்தன, என்றதற்கு ஏற்ப நீங்கலாகாமையால் தேவியர் ஒழிந்தனர் என ஏது விரித்துரைக்க. (1)

## இராமன் தேர் செல்லுதல்

1931. கைகணீர் பரந்துகா ருெடரக் கண்ணுகும்
வெய்யநீர் வெள்ளத்து மெள்ளச் சேறலால்
உய்யவே ழுலகுமொன் ருன நீருழல்
தெய்வமீ னொத்ததச் செம்பொற் றேரரோ.

கைகள் நீர் பரந்து, கால் தொடரக் கண் உகும்
வெய்ய நீர் வெள்ளத்து மெள்ளச் சேறலால்,
உய்ய ஏழ் உலகும் ஒன்ருன நீர் உழல்
தெய்வ மீன் ஒத்தது அச் செம்பொன் தேர் அரோ.

பொ :—இராமன் ஏறிச் சென்ற அந்தச் சிறந்த பொன்னால் இயன்ற தேரானது, பக்கங்களிலெல்லாம் நீர் பரவிச் சக்கரத்தைத் தொடரும் படி, மக்களின் கண்களினின்று சிந்திய வெய்ய வெள்ள நீரின்கண் மெல்லச் செல்லுதலால் ஏழுலகும் உய்தி பெறும்படி ஊழி வெள்ளத் தின்கண் திரியும் தெய்வத் தன்மையுள்ள (திருமாலின் அமிசமான) மீனை ஒத்தது.

கு :—கை – பக்கம். கால் - தேர்ச்சக்கரம். இராமன் பிரிவால் துயருற்ற மக்கள் அழுத கண்ணீர், தேரோட நீராகிச் சுண்ணம் நிறைந்த தெருவெல்லாம் ஆறாகி யோடினமை முன் (நகர் நீங்கு படலத்து) 1795-ஆம் பாட்டில் பேசப்பட்டது. துக்கத்தில் உகும் கண் ணீர் வெப்பமுடைய தென்பது, 'பழங்கண் கொண்ட கலிழ்ந்துவீழ் அவிரறல் - வெய்ய வுகுதர' (19, 13-14) என்னும் அகநானூற் றடிகளால் அறியலாம். ஒன்றான நீர் என்றது ஊழி வெள்ளத்தினை. கண்ணீர் வெள்ளத்துச் செல்லும் இராமன் தேர்க்கு ஊழி வெள்ளத் துழலும் திருமாலாகிய மீன் உவமை. அத்தேர் என்றது, நகர்நீங்குபடலத்திறுதி யில், 'தன்னதாருயிர்த் தம்பியும் தாமரைப் பொன்னுந்தானும் ஓர் தேர்மிசைப் போயினான்' என்ற பாட்டிற் கூறிய தேரைச் சுட்டி நின் றது. முன்னொருகாலத்துச் சோமுகன் என்னும் அசுரன் வேதங்களைக் கைப்பற்றிக் கடலுள் மறைந்தபோது திருமால் மீனுருவெடுத்துச் சென்று அவ்வசுரனைக் கொன்று வேதங்களை மீட்டுத் தந்த வரலாறு இப்பாடலின் பின்னிரண்டடிகளில் பயின்றது. தேர், வெய்ய நீர் வெள்ளத்து மெள்ளச் சேறலால், ஒன்றான நீருழல் தெய்வமீ னொத்தது என இயையும். (2)

## சூரியன் அத்தமித்தல் 1932—1933

**1932.** மீன்புகல் பெறவெயி லொதுங்க மேதியோ
டான்புகக் கதிரவ னத்தம் புக்கனன்
'கான்புகக் காண்கிலே னென்று கல்லதர்
தான்புக முடுகின னென்னுந் தன்மையான்.

மீன் புகல் பெற, வெயில் ஒதுங்க, மேதியோடு
ஆன் புகக் கதிரவன் அத்தம் புக்கனன்,
'கான் புகக் காண்கிலேன்' என்று கல் அதர்
தான் புக முடுகினன் என்னும் தன்மையான்.

பொ :—சூரியன், இராமன் காட்டிற் புகுதலைக் கண்டு 'பொறுத்திருக் கும் ஆற்றலுடையேனல்லேன்' என்று மலைகள் செறிந்த (காட்டு)

வழியில் புக விரைந்தனன் என்று சொல்லத் தக்க தன்மையை உடைய வனுய், விண்மீன்கள் தோன்ற, வெயில் மறைய, எருமையொடு பசுக்களும் நகரில் புகத் தானும் அத்தவரையை அடைந்தான்.

கு :—புகல் பெற-புகுதலைப் பெற; அதாவது தோன்ற என்றவாறு. கல்லதர்-மலைவழி. முடுகுதல்-விரைதல். கதிரவன், தன்மையான் (ஆகி), மீன் புகல்பெற, வெயில் ஒதுங்க, மேதியொடு ஆன்புக, அத்தம் புக்கனன் என இயையும். மாலைக்காலத்து விண்மீன் தோன்றுதலும் சூரியனொளி நீங்குதலும் எருமையும் பசுவும் நகருட்புகுதலும் இயல்பு. இயல்பால் நிகழ்ந்த சூரியாத்தமனத்தை, இராமன் கான் புகுதலைக் காணப் பொருனுய்ச் சூரியன் தானும் மலைநெறியிலே செல்ல விரைந்தா னென்று சொல்லும்படி அத்தமித்தான் என்று தற்குறிப்பேற்றம் என் னும் அணியமையக் கூறினர். இங்கே இராமன் திருமண நாளில் நிகழ்ந்த சூரியோதயத்தை, 'செஞ்சுடர் இருள் கீறித் தினகரன் ஒரு தேர்மேல் மஞ்சனை யணிகோலம் காணிய என வந்தான்' (பால-1265) என ஆசிரியர் முன்கூறியதும் நோக்கத்தகும். (3)

**1933.** பகுத்தவான் மதிகொடு பதுமத் தண்ணலே
வகுத்தவா ணுதலியர் வதன ராசிபோல்
உகுத்தகண் ணீரின வொளியு நீங்கின
முகிழ்த்தழ கிழந்தன முளரி யீட்டமே.

பகுத்த வான் மதிகொடு பதுமத்து அண்ணலே
வகுத்த வாள் நுதலியர் வதன ராசிபோல்,
உகுத்த கண்ணீரின, ஒளியும் நீங்கின,
முகிழ்த்து அழகு இழந்தன, முளரி ஈட்டமே.

பொ :—பகுக்கப்பட்ட வெள்ளிய சந்திரனைக் கொண்டு தாமரை மலரில் வீற்றிருக்கின்ற பெரியோனுன பிரமனே படைத்த ஒள்ளிய நெற்றியையுடைய மகளிரின் முகங்களைப் போல, (சூரியன் அத்தமித் தலும்) தாமரை மலரின் கூட்டம், சிந்திய கண்ணீரை யுடையவாயின; ஒளியும் நீங்கின; குவிந்து அழகிழந்தனவாயின.

கு :—முளரியீட்டம், வதனராசி போல் கண்ணீரின; ஒளியும் நீங் கின; அழகு இழந்தன என இயையும். பகுத்தவான் மதி என்றது எட்டாநாட் பிறையினை; கண்ணீரின என்பது சிலேடை. மகளிர் முகங் கள் கண்களினின்று பெருகும் நீரையுடையவாயின எனவும், தாமரை மலர்கள் (கள் நீரின-) தேனுகிய நீரை யுடையவாயின எனவும் பொருள் படும். உகுத்தல் – சிந்துதல். வதனராசி – முகங்களின் தொகுதி. முளரி–

தாமரை. ஈட்டம் - தொகுதி. முன் சக்கரவர்த்தி இராமனுக்கு முடிசூட்ட நிச்சயித்த பின், வழிநாட் காலைப் போதில் தேன் பெருக்கெடுத்து அழகொடு மலர்ந்த தாமரை மலர்க்கு, "தேவதேவர் பிடித்த போர்வில் இறுத்த சேவகர் சேணிலம் காவல் மாமுடி சூடுபேரெழில் காணலாம் எனும் ஆசை கூர் பாவைமார் முகமென்ன முன்ன மலர்ந்த பங்கய ராசியே" (1645) என்று இராமன் முடிசூட்டுவிழாக் காணும் விழைவால் மலர்ந்த மகளிர் முகத்தை உவமை கூறியவர், முடி சூடுதல் தவிர்ந்த வழிநாள் மாலையிற் குவிந்து பொலிவிழந்த தாமரைமலர்க்கும் இராமன் முடி சூடல் தவிர்ந்தது அறிந்து பொலிவிழந்த மகளிர் முகத்தையே உவமையாக்கிக் கூறியதும் நோக்கத்தகும். (4)

## இரவின் தோற்றம் 1934—1935

**1934.** அந்தியில் வெயிலொளி யவிய வானகம்
நந்தலில் கேகயன் பயந்த நங்கைதன்
மந்தரை யுரையெனுங் கடுவின் மட்கிய
சிந்தையி லிருண்டது செம்மை நீங்கியே.

**அந்தியில் வெயில் ஒளி அவிய வானகம்,**
**நந்தல் இல் கேகயன் பயந்த நங்கைதன்**
**மந்தரை உரை எனும் கடுவின் மட்கிய**
**சிந்தையில் இருண்டது செம்மை நீங்கியே.**

பொ :—மாலைக் காலத்தில் கதிரவனொளி அவிதலால், ஆகாயம், கூனியின் உரையாகிய நஞ்சினுல் ஒளி மழுங்கிய, கேடில்லாத, கேகயத்தரசன் பெற்ற நங்கையாகிய கைகேயியின் மனம் போலச் செம்மை நீங்கி இருண்டது.

கு :—வானகம், அந்தியில் வெயிலொளி அவிய மந்தரை யுரையெனும் கடுவின் மட்கிய கேகயன் பயந்த நங்கைதன் சிந்தையில் செம்மை நீங்கி இருண்டது என இயையும். இரவு வருதலால் செக்கர் நீங்கி இருள் பரவிய வானகத்துக்கு, மந்தரையுரையால் செம்மை நீங்கி இருண்ட கைகேயியின் மனம் உவமை. அவிதல்-கெடுதல். நங்கை தன் சிந்தை கடுவின் மட்கிய சிந்தை என்க. நந்தல் - கேடு. கடு - நஞ்சு. மட்குதல்-மழுங்குதல். மந்தரையின் உரை கேட்குமுன் கைகேயி செம்மை சான்ற வுளத்தினள் என்பது, 'தேவி தூய சிந்தையும் திரிந்தது' என்று (1572) ஆசிரியர் முன்னே கூறினமையாலும் விளங்கும். சிந்தை—மனம். (5)

1935. பரந்துமீ னரும்பிய பசலை வானகம்
அரந்தையின் முனிவர னறைந்த சாபத்தால்
நிரந்தர மிமைப்பிலா நெடுங்க ணீண்டிய
புரந்தர னுருவெனப் பொலிந்த தெங்குமே.

பரந்து மீன் அரும்பிய பசலை வானகம்,
அரந்தை இல் முனிவரன் அறைந்த சாபத்தால்
நிரந்தரம் இமைப்பு இலா நெடுங்கண் ஈண்டிய
புரந்தரன் உரு எனப் பொலிந்தது எங்குமே.

பொ :—நட்சத்திரங்கள் பரவித் தோன்றப் பெற்ற பசுமை நிறம் வாய்ந்த ஆகாயம், துன்பம் இல்லாத முனிவரில் உயர்ந்தோனான கௌதமன் சினந்து சொல்லிய சாபமொழியால் எப்பொழுதும் இமைத்தல் இல்லாத பெரிய கண்கள் நிறைந்த இந்திரனுடைய வுருவம்போல எங்கும் விளங்கியது.

கு :—அரந்தை - துன்பம். முனிவரன் - முனிவரில் உயர்ந்தோன்; கௌதமன். நிரந்தரம் - எப்பொழுதும். ஈண்டுதல் - நிறைதல். புரந்தரன் - இந்திரன். நட்சத்திரங்கள் பரவித் தோன்றிய இருண்ட வானுக்கு நிறைந்த (ஆயிரம்) கண்களையுடைய கரிய இந்திரன் உரு உவமம். (6)

## இராமன் முனிவரொடு தங்குதல்

1936. திருநகர்க் கோசனை யிரண்டு சென்றொரு
விரைசெறி சோலையை விரைவி னெய்தினான்
இரதநின் றிழிந்துபி னிராம னின்றுணை
உரைசெறி முனிவரோ டுறையுங் காலையே.

திரு நகர்க்கு ஓசனை இரண்டு சென்று, ஒரு
விரை செறி சோலையை விரைவின் எய்தினான்,
இரதம் நின்று இழிந்து, பின் இராமன் இன் துணை
உரை செறி முனிவரோடு உறையும் காலையே.

பொ :—இராமன், சிறந்த நகரமாகிய அயோத்தியினின்று இரண்டு யோசனை தூரம் சென்று நறுமணம் நிறைந்த ஒரு சோலையை விரைந்தடைந்து தேரினின்று இறங்கி, அப்பால் இனிய துணைவராகிய புகழ் நிறைந்த முனிவர்களுடன் தங்கியிருந்தபொழுது.

கு :—இராமன், சென்று, எய்தி, இழிந்து, உறையுங்காலை: என இயைக்க. இச் செய்யுளும் பின்வரும் செய்யுளும் ஒரு தொடர். திருநகர்க்கு-திருநகரினின்று; உருபு மயக்கம். ஓசனை - யோசனை. உரை - புகழ். செறிதல் - மிகுதல். (7)

## இராமனைத் தொடர்ந்து வந்தோர் செயல் 1937-1938

**1937.** வட்டமோ ரோசனை வளைவிற் றுய்நடு
எட்டனை யிடவுமோ ரிடமிலா வகை
புட்டகு சோலையின் புறத்துப் போர்த்தென
விட்டது குரிசிலை விடாத சேனையே.

வட்டம் ஓர் ஓசனை வளைவிற்றுய் நடு
எள் தனை இடவும் ஓர் இடம் இலா வகை
புள் தகு சோலையின் புறத்துப் போர்த் தென
விட்டது; குரிசிலை விடாத சேனையே.

பொ :—இராமனை விடாது தொடர்ந்து சென்ற மக்கட் கூட்டம், ஒரு யோசனை தூரம் வளைவினையுடையதாய், இடையே எள் இடவும் இடமில்லாதபடி, புட்களால் மேம்பட்ட (இராமன் தங்கிய) சோலையின் வெளியே சூழ்ந்தாற் போலத் தங்கிற்று.

கு :—சேனை போர்த்தென விட்டது என்க. புள்தகு சோலை - புட்களால் தகுதியுடைய சோலை. போர்த்தல் - சூழ்தல். விடுதல் - தங்குதல்; 'காவினுள் நயந்து விட்டார்களே' (1905) என்பது சீவக சிந்தாமணி. விடாத சேனை விட்டது எனச் சொல்லளவில் முரண்பட அமைத்த நயம் நோக்கத்தகும். (8)

**1938.** குயின்றன குலமணி
நதியின் கூலத்தில்
பயின்றுயர் வாலுகப்
பரப்பிற் பைம்புலில்
வயின்றொறும் வயின்றொறும்
வைகி னாரொன்றும்
அயின்றிலர் துயின்றில
ரழுது விம்மினார்.

குயின்றன குலம் மணி நதியின் கூலத்தில்,
பயின்று உயர் வாலுகப் பரப்பில், பைம்புலில்,
வயின்றொறும் வயின்றொறும் வைகினர்; ஒன்றும்
அயின்றிலர்; துயின்றிலர்; அழுது விம்மினர்.

போ :—இராமனைப் பின்பற்றி வந்த மக்கள், சிறந்த இரத்தினங்கள் பதித்தாற்போல விளங்கும் ஆற்றின் கரைகளிலும், பொருந்தி உயர்ந்த மணற்பரப்பிலும், பசிய புல் வளர்ந்த இடங்களிலும் இடந்தொறும் இடந்தொறும் ஒன்றும் உண்ணாராய் உறங்காதாராய் அழுது பொருமித் தங்கினர்கள்.

கு :—குயிலுதல் - பதித்தல். குலம் மணி-சிறந்த மணி. இங்கே நதியென்றது தமசை என்று வான்மீகத்தால் அறியக்கிடக்கிறது. கூலம்-கரை. பயிலுதல்-பொருந்துதல். வாலுகம்-மணல். வைகுதல்-தங்குதல். அயிலுதல்-உண்ணல். (9)

## இராமனைத் தொடர்ந்து வந்த மக்கள் துயிலுதல் 1939-1945

**1939.** வாவிவிரி தாமரையின் மாமலரின் வாசக்
★ காவிவிரி நாண்மலர் முகிழ்த்தனைய கண்ணர்
ஆவிவிரி பானுரையி னுடையணை யாக
நாவிவிரி கூழையிள நவ்வியர் துயின்றார்.

வாவி விரி தாமரையின் மா மலரின் வாசக்
காவி விரி நாள் மலர் முகிழ்த்தனைய கண்ணர்,
ஆவி விரி பால் நுரையின் ஆடை அணை ஆக
நாவி விரி கூழை இள நவ்வியர் துயின்றார்.

போ :—நீர் நிலையில் மலர்ந்த தாமரைப் பூவில் கருங்குவளையின் மலர்கின்ற நறுமணமுள்ள அப்பொழுதைப்பூக் குவிந்தாலனைய கண்களை யுடையவர்களும் கத்தூரி மணம் மிக்க கூந்தலை யுடைய இளமான் போன்றவர்களுமான மகளிர், நறும்புகையூட்டப்பட்ட பரவிய பால்நுரை போன்ற ஆடையே படுக்கையாக உறங்கினர்கள்.

கு :—மகளிர் முகத்துக்குத் தாமரை மலரும் கண்களுக்குக் கருங்குவளை மலரும் உவமையாகும். இங்கே மகளிர் உறங்கும் நிலையில் அவர் கண்கள் குவிந்து நின்றதனை தாமரை மலரில் மலர்ந்திருந்த கருங்குவளை மலர்கள் குவிந்து நின்றமை போலும் என்றது இல் பொருளுவமையணி தழுவிய கூற்று. வாவி - நீர்நிலை. காவி - கருங்குவளை. நாள் மலர்-அப்பொழுதைப்பூ. முகிழ்த்தல் - குவிதல். ஆவிவிரி பால்நுரையின் ஆடை என்பதற்கு, புகையும், பரவிய பால் நுரையும் போன்ற ஆடை

என்று பொருள் கூறலுமாம். ஆவியும் பால் நுரையும், நிறமும் மென்மையுமாகிய தன்மையால் உவமமாயின. முன்பு பஞ்சணையில் துயின்றோர் அன்று உடுத்த உடையே அணையாகக் கொண்டு மெல்லிய தம் உடலில் தரை உறுத்தலையும் அறியாது துயின்றனர் என்றவாறு. கூழை - கூந்தல். நவ்வி-மான். (10)

**1940.** பெரும்பகல் வருந்தினர்
பிறங்குமுலை தெங்கின்
குரும்பைகள் பொருஞ்செவிலி
மங்கையர் குறங்கில்
அரும்பனைய கொங்கையயி
லம்பனைய வுண்கண்
கரும்பனைய செஞ்சொ னவில்
கன்னியர் துயின்றார்.

பெரும் பகல் வருந்தினர்,
பிறங்கும் முலை தெங்கின்
குரும்பைகள் பொரும் செவிலி
மங்கையர் குறங்கில்,
அரும்பு அனைய கொங்கை அயில்
அம்பு அனைய உண் கண்
கரும்பு அனைய செஞ்சொல் நவில்
கன்னியர் துயின்றார்.

பொ :—(கோங்கின்) அரும்பு போலும் தனங்களையும் கூரிய அம்பு போலும் மையுண்ட கண்களையும் உடையவரும், கருப்பஞ்சாறு போலும் இனிய மொழியினைப் பேசுபவருமான பெண்கள், நெடும் பொழுது (இராமனைத் தொடர்ந்து வந்தமையால்) வருந்தினவர்களாய், தெங்கின் குரும்பையினை ஒத்த பெருத்த தனங்களை யுடைய செவிலித் தாயர் களின் தொடையில் உறங்கினார்கள்.

கு :—பகல் - பொழுது. பிறங்குதல் - பெருத்தல். பொருதல்-ஒத்தல். குறங்கு-தொடை. அயில்-கூர்மை. நவிலுதல்-சொல்லுதல். (11)

**1941.** பூவகனி றைந்தபுளி னத்திரள்க டோறும்
மாவகிரி னுண்கணர் மடப்பிடியின் வைகச்
சேவகம மைந்தசிறு கட்கரிக ளென்னத்
தூவகலில் குந்தமற மைந்தர்க டுயின்றார்.

பூ அகம் நிறைந்த புளினத் திரள்கள் தோறும்
மா வகிரின் உண் க(ண்)ணர் மடப்பிடியின் வைகச்
சேவகம் அமைந்த சிறு கண் கரிகள் என்னத்
தூ அகல் இல் குந்த மற மைந்தர்கள் துயின்றார்.

பொ :—பூக்கள் நிறைந்த மணற்குன்றுதோறும், மாவடுவின் பிளவையொத்த மை தீட்டிய கண்களையுடைய மகளிர், பெண்ணானை போலத் தங்க, ஊன் நீங்காத எறிபடையினையுடைய வீரராகிய ஆடவர்கள், சிறிய கண்ணையுடைய களிற்றியானைகள் உறங்கினாற் போல உறங்கினார்கள்.

கு :—சேவகம் - உறக்கம்; சிறுகண் யானையினினஞ் சேர்ந்து சேவகம் கொள' (சீவக சிந்தாமணி-1897) என்பதனுள் சேவகம் என்பதற்கு நச்சினார்க்கினியர் உறக்கம் என்று பொருள் கொண்டமையும் இங்கு நோக்கத்தகும். தூ - ஊன். அகல் இல் - அகலாத. குந்தம்-குத்துக்கோலுமாம். (12)

**1942.** தகவுமிகு தவமுமிவை தழுவவுயர் கொழுநர்
முகமுமவ ரருளுநுகர் கிலர்கடுயர் முடுக
அகவுமிள மயில்களுயி ரலசியன வனையார்
மகவுமுலை வருடவிள மகளிர்க டுயின்றார்.

தகவும் மிகு தவமும் இவை தழுவ, உயர் கொழுநர்
முகமும் அவர் அருளும் நுகர்கிலர்கள், துயர் முடுக,
அகவும் இள மயில்கள் உயிர் அலசியன அனையார்,
மகவு முலை வருட இள மகளிர்கள் துயின்றார்.

பொ :—இளம் பெண்கள், (இராமன் வனம் புகுதலால் விளைந்த) துன்பம் மிக, நடுவுநிலையும் இல்லற வொழுக்கமும் தழுவுதலால் உயர்ந்த கணவருடைய நோக்கமும், அவர் அருளும் நுகராதவராய்க் குழந்தைகள் பசித்துப் பால்வேண்டித் தனத்தைப்பற்றவும் (அவற்றை ஊட்டாது) அகவும் இளமயில்கள் உயிர் சோர்ந்தவற்றைப் போன்றவர்களாகி உறங்கினார்கள்.

கு :—இளமகளிர், துயர்முடுக, கொழுநர் முகமும் அவர் அருளும் நுகர்கிலர்கள், மகவு முலை வருட மயில்கள் உயிரலசியனவனையார் துயின்றார் என முடிக்க. தகவு - நடுநிலை (திருக்குறள்-114). தவம் - இல்லறம் (சீவக சிந்தாமணி-77). முகம் காதல் நோக்கினைச் சுட்டி நின்றது. முடுகுதல் - மிகுதல், அகவுதல்-ஆடுதல். அலசுதல்-சோர்தல் (சிலப்பதிகாரம்-16, 197 அரும்பதவுரை). மகவு-குழந்தை. (13)

**1943.** மாகமணி வேதிகையின் மாதவிசெய் பந்தர்க்
கேகய நெடுங்குல மெனச்சிலர் கிடந்தார்
பூகவன மூடுபடு கர்ப்புளின முன்றில்
தோகையிள வன்னநிரை யிற்சிலர் துயின்றார்.

மாகம் மணி வேதிகையில் மாதவி செய் பந்தர்க்
கேகய நெடுங்குலம் எனச் சிலர் கிடந்தார்;
பூக வனம் மூடு படுகர்ப் புளின முன்றில்
தோகை இள அன்ன நிரையில் சிலர் துயின்றார்.

பொ :—மகளிருள் ஒரு சிலர், மாதவிக் கொடி பின்னிப் படர்ந்து செய்த பந்தலில் மேகந் தவழும் அழகிய திண்ணையில் நீண்ட மயிலின் கூட்டம் போலக் கிடந்தனர்; வேறு சிலர், கமுக வனம் கவிந்து போர்த்த நீர்நிலையினை யுடைய மணற்றிடர்களின் முன்னே தோகைகளை யுடைய இளைய அன்னங்களின் வரிசைபோல உறங்கினார்கள்.

கு :—மாகம் - மேகம். மணி - அழகு. வேதிகை - திண்ணை. இவ் வேதிகை, தமசா நதிக்கரையில் மாதவிக் கொடி பந்தல் போலப் பின்னிப் படர்ந்த சூழலில் அமைந்தது. பூகம்-கமுகு. மூடுதல்-கவிந்து மறைத்தல். படுகர்-நீர்நிலை. (14)

**1944.** சம்பகந றும்பொழில்க
ளிற்றருண வஞ்சிக்
கொம்பழுதொ சிந்தனவெ
னச்சிலர்கு ழைந்தார்
வம்பளவு கொங்கையொடு
வாலுகம்வ ளர்க்கும்
அம்பவள வல்லிகளெ
னச்சிலர சைந்தார்.

சம்பக நறும் பொழில்களில் தருண வஞ்சிக்
கொம்பு அழுது ஒசிந்தன எனச் சிலர் குழைந்தார்;
வம்பு அளவு கொங்கையொடு வாலுகம் வளர்க்கும்
அம் பவள வல்லிகள் எனச் சிலர் அசைந்தார்.

பொ :—சிலர் நல்ல சண்பகச் சோலைகளிலே இளைய வஞ்சிக் கொம்புகள் அழுது துவண்டன என்னும்படி குழைந்தார்கள்; மற்றும் சிலர், கச்சணிந்த தனங்களோடு மணற்பரப்பு வளர்க்கின்ற அழகிய பவளக்கொடிகள் போலச் சோர்ந்துகிடந்தார்கள்.

கு:—சம்பகம் - சண்பகம். தருணம் - இளமை. வஞ்சிக் கொம்பும் பவளக் கொடியும் மகளிர்க்கு உவமை. ஒசிதல் - துவளல். வம்பு - கச்சு. அளவுதல் - கூடுதல். வாலுகம் - மணல். 12 என்னும் குறியீடுள்ள சுவடியில் காணப்படும், 'வாலுக வளாகத்து' என்னும் பாடங் கொண்டு, வாலுக வளாகத்துச் சிலர் அம் பவளவல்லிகளென அசைந்தார் என்று கூட்டி, மணற்பரப்பில் சில மகளிர் பவளக்கொடிபோலச் சோர்ந்(துகிடந்)தனர் என்று பொருளுரைத்தலும் அமையும். (15)

**1945.** குங்குமம லைக்குளிர்ப னிக்குழுமி யென்னத்
துங்கமுலை யிற்றுகளு றச்சிலர் து யின்றார்
அங்கையணை யிற்பொலிவ ழுங்கமுக மெல்லாம்
பங்கயமு கிழ்த்தனவெ னச்சிலர்ப டிந்தார்.

குங்கும மலைக் குளிர் பனிக் குழுமி என்னத்
துங்க முலையில் துகள் உறச் சிலர் துயின்றார்;
அங்கை அணையில் பொலிவு அழுங்க முகமெல்லாம்
பங்கயம் முகிழ்த்தன எனச் சிலர் படிந்தார்.

பொ :—மேலும் சிலர், குங்குமமலையிலே குளிர்ந்த பனி படிந்தாற்போலப் பூரித்த தனங்களில் பொடிபடிய உறங்கினர்; மற்றும் சிலர், தங்கள் முகமெல்லாம் குவிந்த தாமரை மலர்போலப் பொலிவு கெடத் தம்முடைய அழகிய கையாகிய தலையணையில் உறங்கினார்கள்.

கு :—குங்குமம் அப்பப்பெற்றுப் பூரித்த தனங்களுக்குக் குங்குமமலையும் அத்தனங்களிற் படிந்த வெண்புழுதிக்குக் குங்குமமலையிற் படிந்த பனியும் உவமை. மகளிர் மகிழ்ச்சியொடு விளங்கிய காலையில் மலர்ந்து பொலிவு பெற்ற அவர் முகத்துக்குப் பொலிவொடு மலர்ந்த தாமரை மலர் உவமமாகும்; மகளிர் துயருற்றுச் சோர்ந்து பொலிவிழந்த நிலையிலும் அவர் முகத்துக்கு இரவுவரக் குவிந்து பொலிவிழந்த தாமரை மலர் உவமமாயிற்று. குழுமுதல் - நிறைதல், துங்கம் - உயர்வு. துகள் - தூசி. அழுங்குதல் - கெடுதல். (16)

இச்செய்யுளின் பின் பல சுவடிகளில்,

1945 (a) தொடுத்தகலி டைச்சிலர் துவண்டனர் துயின்றார்
அடுத்தவடை யிற்சில ரழிந்தன ரயர்ந்தார்
உடுத்ததுகில் சுற்றெருத லைச்சிலரு றைந்தார்
படுத்ததளி ரிற்சிலர்ப சைந்தனர சந்தார்.

என்று ஒரு பாடல் காணப்படுகிறது. அது, நடையால் வேறுபட்டுக் காணப்படுதலால் மிகைப்பாடலாயிருக்கலாம் என்று கொண்டு மூலத்தோடு சேர்க்காமல் இங்கே காட்டப்பட்டது.

## இராமன் சுமந்திரன்பால் தேரைத் திருப்பிக்கொண்டு செல்லுமாறு வேண்டல் 1946-1947

**1946.** ஏனையரு மின்னண
முறங்கின ருறங்கா
மானவனு மந்திரி
சுமந்திரனை வாவென்
றூனமில்பெ ருங்குண
மொருங்குடைய வுன்னால்
மேனிகழ்வ துண்டவுரை
கேளெனவி ளம்பும்.

ஏனையரும் இன்னணம்
உறங்கினர்; உறங்கா
மானவனும், மந்திரி
சுமந்திரனை 'வா' என்று,
" ஊனம் இல் பெருங்குணம்
ஒருங்குடைய உன்னால்
மேல் நிகழ்வது உண்டு; அ(வ்)வுரை
கேள் " என விளம்பும்.

பொ :—மற்றவர்களும் இவ்வாறு உறங்கினராக, உறங்காதவனான இராமனும், அமைச்சன் சுமந்திரனை 'வருக' என்று தன்பால் அழைத்து, 'குறைவற்ற உயர்குணங்களெல்லாம் ஒருங்கமைந்த உன்னால் பின் நடக்கவேண்டியவை உண்டு; அதுபற்றி யான் கூறுவனவற்றைக் கேள்' என்று கூறுவானாயினன்.

கு :—இதுவும் பின்வரும் செய்யுளும் ஒரு தொடர். இன்னணம் - இப்படி. ஊனம் - குறை. (17)

**1947.** பூண்டபே ரன்பி னுரைப்
★ போக்குவ தரிது போக்கா
தீண்டுநின் றேகல் பொல்லா
தெந்தைநீ யிரத மின்னே
தூண்டினை மீள்வ தாக்கிற்
சுவடுதேர்ந் தென்னை யங்கே
மீண்டன னென்ன மீள்வ
ரிதுநின்னை வேண்டிற் றென்றான்.

'பூண்ட பேரன்பினுரைப்
போக்குவது அரிது; போக்காது
ஈண்டு நின்று ஏகல் பொல்லாது;
எந்தை! நீ இரதம் இன்னே
தூண்டினை மீள்வது ஆக்கின்,
சுவடு தேர்ந்து என்னை அங்கே
மீண்டனன் என்ன மீள்வர்;
இதுநின்னை வேண்டிற்று' என்ருன்.

பொ :—'எனது தந்தை போல்பவனே! பேரன்புபூண்டவர்களாகிய இம்மக்களை (நகர் நோக்கித்) திரும்பிப் போகச் செய்வது இயலாது; அவர்களைத் திரும்பிப் போகச் செய்யாமல் நான் இங்குநின்றும் வனம் புகுதல் தீங்காகும்; ஆதலால் நீ இப்பொழுதே தேரைத் திரும்புவதாக்கிச் செலுத்தினையாயின் தேர் திரும்பிச் சென்ற தடத்தை அறிந்து, யான் அயோத்தி நோக்கி மீண்டேன் என்று எண்ணி, இவர்கள் திரும்புவார்கள்; இவ்வாறு தேரை அயோத்திநோக்கித் திருப்பிச்செலுத்துவதே யான் நின்னை வேண்டியது' என்று கூறினன்.

கு :—தூண்டுதல் - செலுத்துதல். மானவன், என்ருன் என முன் பாட்டிலிருந்து எழுவாய் வருவித்துரைக்க. (18)

### சுமந்திரன் கூறுதல் 1948-1954

**1948.** செவ்விய குரிசில் கூறத்
தேர்வலான் செப்பு வானவ்
வெவ்விய தாயிற் றீய
விதியினின் மேலென் போலாம்
இவ்வயி னின்னை நீக்கி
யின்னுயிர் தீர்ந்தின் றேகி
அவ்வயி னனைய காண்டற்
கமைதலா லளிய னென்ருன்.

"செவ்விய குரிசில் கூறத்
தேர்வலான் செப்புவான், "அவ்
வெவ்விய தாயில் தீய
விதியினில் மேலென் போலாம்,

இவ்வயின் நின்னை நீக்கி,
இன் உயிர் தீர்ந்தின்று ஏகி,
அவ்வயின் அனைய காண்டற்கு
அமைதலால் அளியன்" என்றான்.

பொ :—நல்லோனான இராமன் சொல்லத் தேர் செலுத்துதலில் வல்லவனான சுமந்திரன் கூறுவானாயினன்—"இரங்கத்தக்கவனான யான், உன்னை இவ்விடத்துநின்றும் போக்கி, இனிய உயிரை விடாது சென்று, அங்கே (அயோத்தியில்) அந்த விளைவுகளைக் காண்பதற்கு அமைந்தமையால், அந்தக் கொடிய தாயான கைகேயியினும், கொடிய ஊழினும் (கொடுமையால்) பெரியேனாவேன் போலும்" என்றான்.

கு :—செவ்விய குரிசில் கூறத் தேர்வலான் செப்புவான், அளியன், நின்னை இவ்வயின் நீக்கி, ஏகி, அவ்வயின் அனையகாண்டற்கு அமைதலால், தாயில் விதியில் மேலென்போலாம் என்றான் என இயையும். செவ்விய குரிசில் என்றது இராமனை. தேர்வலான் - சுமந்திரன். தீர்ந்தின்று - தீராது; விடாமல். உன்னை இவ்விடத்தே விட்டு என் உயிர்விடாது அயோத்தி செல்லுதலாலும் அங்கே தசரதன் இறப்பும் மற்றையோர் துன்பமும் கண்டு பொறுத்திருக்க நேர்தலாலும் யான் கைகேயியினும் விதியினும் கொடுமையால் மேம்பட்டவன் ஆயினேன் என்றவாறு. "என்னிற் கேகயன் நங்கையே கடைமுறை நல்லள்போலுமால்" என்று பின்னே கூறுதலும் இங்கு நோக்கத்தகும். (19)

1949. தேவியு மிளவலுந் தொடரச் செல்வனைப்
★ பூவியல் கானகம் புகவுய்த் தேனென்கோ
கோவினை யுடன்கொடு குறுகி னேனென்கோ
யாவது கூறுகே னிரும்பி னெஞ்சினேன்.

தேவியும் இளவலும் தொடரச் செல்வனைப்
பூ இயல் கானகம் புக உய்த்தேன் என்கோ?
கோவினை உடன் கொடு குறுகினேன் என்கோ?
யாவது கூறுகேன்? இரும்பின் நெஞ்சினேன்.

பொ :—"இரும்புபோலும் (வலிய) மனமுடையேனான யான், பிராட்டியும் இளையவனும் தொடர்ந்து செல்ல இராமனைப் பூக்கள் பரவிய காட்டிலே புகச் செலுத்தினேன் என்று சொல்லுவேனோ? 'இராமனை என் உடன் அழைத்துக்கொண்டு வந்தேன்' என்று சொல்லுவேனோ? யாது கூறுவேன்?"

கு :—இளவல் - இளையான். கோ என்றது இராமனை. யாவது - யாது. (20)

**1950.** தாருடை மலரினு
மொதுங்கத் தக்கிலா
வாருடை முலையொடு
மதுகை மைந்தரைப்
பாரிடைச் செலுத்தினேன்
பழைய நண்பினேன்
தேரிடை வந்தனென்
றீதி லேனென்கோ.

"தார் உடை மலரினும் ஒதுங்கத் தக்கிலா
வார் உடை முலையொடு மதுகை மைந்தரைப்
பாரிடைச் செலுத்தினேன்; பழைய நண்பினேன்,
தேரிடை வந்தனென், தீதிலேன்" என்கோ?

பொ:—"பழமையான நட்பினையுடைய நான், வரிசையாகப் பரப்பப் பட்ட பூவின்கண்ணும் நடக்ககிலாதவளாகிய கச்சணிந்த தனங்களை யுடைய சீதையுடன், ஆற்றல்படைத்த மைந்தர்களாகிய இராமலக்கு வரை நிலத்தில் நடந்து செல்லவிட்டுத் தீங்கற்றவனாய்த் தேரிலே வந்தேன் என்று சொல்லுவேனோ?"

கு:—பழைய நண்பினேன், மைந்தரைப் பாரிடைச் செலுத்தி னேன், தீதிலேன், தேரிடைவந்தனென் என்கோ என இயையும். தார் - ஒழுங்கு. ஒதுங்குதல் - நடத்தல், வார் - கச்சு. மதுகை - வலி. இது, நண்புடைமையொடு பொருந்தாத செயலையும் அவரவர் தகுதியொடு பொருந்தாத செயலையும் செய்ய நேர்ந்தமைபற்றிச் சுமந்திரன் வருந்திக் கூறியது. முதலடியால் சீதையின் அடிகளின் மென்மைத் தன்மை கூறியவாறு. "முன்னே முன்னே மொய்ம்மலர் தூவி முறைசாரப், பொன்னே சூழும் பூவினைதுங்கிப் பொலிகின்றாள்" (பால-593.) என ஆசிரியர் முன்னே கூறியதும், "அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர், அடிக்கு நெருஞ்சிப் பழம்" (1120) என்னும் திருக்குறளும் நோக்கத்தகும். (21)

**1951.** வன்புலக் கன்மன மதியில் வஞ்சனேன்
என்புலப் புறவுடைந் திரங்கு மன்னன்பால்
உன்புலக் குரியசொ லுணர்த்தச் செல்கெனோ
தென்புலக் கோமகன் றூதிற் செல்கெனோ.

வன் புலக் கல் மன மதியில் வஞ்சனேன்,
என்பு உலப்பு உற உடைந்து இரங்கும் மன்னன்பால்
உன் புலக்கு உரிய சொல் உணர்த்தச் செல்கெனோ?
தென் புலக் கோமகன் தூதில் செல்கெனோ?

பொ:—கொடிய பொறிகளையும் கல்போலும் வலியமனத்தினையும் உடைய வஞ்சகனாகிய யான், என்பு அழியும்படி கெட்டு இரங்குகின்ற தசரத சக்கரவர்த்திபக்கல் நீ கூறிய அறிவொடு கூடிய சொல்லை அறிவிக்கும் வண்ணம் செல்வேனோ? எமனுடைய தூதனைப்போற் செல்வேனோ?

கு:—புலம் என்றது கண் முதலிய ஐந்தனையும். உலப்புற - அழிய. புலம் - அறிவு. புலத்துக்கு என்பது அத்துச்சாரியை கெட்டுப் புலக்கு என நின்றது. தென்புலம் - தெற்கு. தென்புலக் கோமகன் – இயமன். முதலடியுள் கன்மனம் என்பதனோடு, 'இரும்பு போல் வலிய நெஞ்சம்', 'மரங்கள்போல் வலிய நெஞ்ச வஞ்சனேன்' (திருமாலை-17,27) என்னும் அருளிச் செயல்களும் நோக்கத்தகும். (22)

1952. நாற்றிசை மாந்தரு
நகர மாக்களும்
தேற்றினர் கொணர்வரென்
சிறுவன் றன்னையென்
ரூற்றின வரசனை
யைய வெய்யவென்
கூற்றுறழ் சொல்லினாற்
கொலைசெய் வேன்கொலோ.

"'நால் திசை மாந்தரும் நகர மாக்களும்
தேற்றினர் கொணர்வர் என் சிறுவன்தன்னை' என்று
ஆற்றின அரசனை, ஐய! வெய்ய என்
கூற்று உறழ் சொல்லினால் கொலைசெய்வேன் கொலோ?"

பொ:—"வியக்கத் தக்கவனே! 'நாலுதிசைகளிலும் உள்ள நாடுகளிலிருந்து வந்த மக்களும், அயோத்தி நகரத்து வாழும் மக்களும் என் மகனைத் தேற்றி அழைத்துக்கொண்டுவருவார்கள்' என்று துன்பத்தைப் பொறுத்திருந்த அரசனை, கூற்றுவனிலும் கடியனவும் கொடியனவும் ஆன என் சொற்களால் கொலைசெய்வேனோ?"

கு :—நாற்றிசை மாந்தரும் நகர மாக்களும் என் சிறுவன் தன்னைத் தேற்றினர்-கொணர்வர் என்பது தசரதன் உட்கோள். தேற்றுதலாவது வனம்புகாது நகர்க்கு மீளுவது முறையற்றதாகாது என்று தெளிவித்தல். ஆற்றுதல் - பொறுத்தல்; “ஆற்றுவாராற்றல் பசியாற்றல்” (திருக்குறள்-225) என்பதனுள் ஆற்றுதல் பொறுத்தல் என்னும் பொருளிற் பயின்றமை காணலாம். (23)

**1953.** அங்கிமேல் வேள்விசெய்
தரிதிற் பெற்றநின்
சிங்கவே றகன்றதென்
றுணர்த்தச் செல்கெனோ
எங்கள்கோ மகற்கினி
யென்னிற் கேகயன்
நங்கையே கடைமுறை
நல்லள் போலுமால்.

“‘அங்கி மேல் வேள்வி செய்து, அரிதில் பெற்ற, நின்
சிங்க ஏறு, அகன்றது’ என்று உணர்த்தச் செல்கெனோ ?
எங்கள் கோமகற்கு இனி என்னில், கேகயன்
நங்கையே கடைமுறை நல்லள்போலும் ஆல்’’.

பொ :—எங்கள் அரசன்பால் (ஓமகுண்டத்துள்ள) நெருப்பின்கண் மகப்பேற்றினையளிக்கும் வேள்வியைச் செய்து அருமையாகப் பெற்ற நின் மகனாகிய சிங்கவேறு உன்னைவிட்டு நீங்கிவிட்டது என்று தெரிவிக்கச் செல்லுவேனோ? (அவ்வாறு தெரிவிக்கும்படி செல்ல நேர்ந்த பின்) எங்கள் அரசனுக்கு என்னைக்காட்டிலும் கேகயன்மகளே முடிவாக நல்லவளாவள்போலும்.

கு :—அங்கி - நெருப்பு. அரிதிற்பெற்ற - பெருப்பேருகப்பெற்ற. இராமனுக்குச் சிங்கவேறு பீடு நடையால் உவமம். சுமந்திரன் உரை தயரதன் முடிவுக்குக் காரணமாதலால், ‘என்னில் கேகயன் நங்கையே கடைமுறை நல்லள்போலும்’ என்றனன். (24)

**1954.** முடிவுற வின்னன மொழிந்து பின்னரும்
அடியுறத் தழுவின னழுங்கு பேரரா
இடியுறத் துவளுவ தென்னு மின்னலன்
படியுறப் புரண்டனன் பலவும் பன்னினன்.

முடிவு உற இன்னன மொழிந்த பின்னரும்
அடி உறத் தழுவினன், அழுங்கு பேர் அரா,
இடி உறத் துவளுவது என்னும் இன்னலன்,
படி உறப் புரண்டனன், பலவும் பன்னினுன்.

பொ :—இவைபோல்வனவான மாற்றங்களைக் கடைபோகச் சொல்லிப் பின்னும் இராமனுடைய அடிகளை இறுகப் பற்றிக்கொண்டு, (பசியால்) வருந்திய பெரிய பாம்பானது, இடி தாக்குதலால் துடித்தாற் போலும் துன்பத்தையுடையனுய்த் தரையிலே கிடந்து புரண்டு பலவற்றையும் கூறினுன்.

கு :—அடியுறத் தழுவியதும் படியுறப் புரண்டதும் தான் மொழிந்தவற்ருல் இராமன் நகர்க்குத் திரும்பும் குறிப்பு வெளிப்படாமையால் என்க. இராமன் முடிசூடும் விழாவைக் காண விரும்பி நின்ற நிலையில் அது தவிர்ந்ததுமன்றி அவன் வனம்புக நேர்ந்தமையால் வருந்தித் தரையில் விழுந்து புரளும் சுமந்திரனுக்கு, இரை வேட்டெழுந்து அது கிட்டும் நிலையில் இழந்ததுமன்றி, இடியால் தாக்கப்பட்டுத் துடிக்கும் பேரரவு உவமமாயிற்று. தழுவினன், இன்னலன், புரண்டனன் என்பவை எச்சப்பொருள்பட நின்றன. துவளுதல்-துடித்தல்; ‘பெரு நீரறச் சிறுமீன் துவண்டாங்கு’ (6. 26) என்பது திருவாசகம். (25)

## சுமந்திரனை எடுத்துத் தழுவி இராமன் கூறுதல் 1955-1967

**1955.** தடக்கையா லெடுத்தவற்
றழுவிக் கண்ணநீர்
துடைத்துவே றிருத்திமற்
றினைய சொல்லினுன்
அடக்குமைம் பொறியொடு
கரணத் தப்புறம்
கடக்கும்வா லுணர்வினுக்
கணுகுங் காட்சியான்.

தடக் கையால் எடுத்து அவற்றழுவிக் கண்ண நீர்
துடைத்து, வேறு இருத்தி, மற்று இனைய சொல்லினுன்;
அடக்கும் ஐம்பொறியொடு கரணத்து அப்புறம்,
கடக்கும் வால் உணர்வினுக்கு அணுகும் காட்சியான்.

போ :—அடக்கிய ஐம்பொறிகளோடு மனத்துக்கும் அப்பால் கடந்துநின்ற, மெய்யுணர்வுக்குக் கிட்டும் தோற்றமுடைய (இறைவனமிசமான) இராமன், அச்சுமந்திரனைத் தன் கைகளால் தூக்கித் தழுவி, அவன் கண்ணீரைத் துடைத்துத் தனியே இருக்கும்படிசெய்து, மேலும் இவைபோல்வனவற்றைச் சொன்னான்.

கு :—அவற்றழுவி என்றது (முன்பாட்டிற் கூறியபடி அடியுறத் தழுவிப் படியுறப் புரண்ட சுமந்திரனாகிய) அவனைத்தழுவி என்றவாறு. கண்ண நீர் - கண்ணிலுள்ள நீர்—கண்ணீர் ; 'மழைக்கண்ண நீர்' (52) என்பது திருவிருத்தம். வேறு - தனிமை. "சீவகசாமி வேறு இருந்தாற்கு" (1872) என்பது சீவக சிந்தாமணி. இராமன் சொல்லியவை பின் வருங்கவிகளாற் பேசப்படும். அடக்கும் ஐம்பொறியொடு கரணத்தப்புறம் கடக்கும் காட்சியான், வாலறிவனுக்கு உணரும் காட்சியான் என்றுகொண்டு அதற்கு இசைய உரை கூறுவாரும் உளர். (26)

**1956.** பிறத்தலொன் றுற்றபின்
பெறுவ யாவையும்
திறத்துளி யுணர்வதோர்
செம்மை யுள்ளத்தாய்
புறத்துறு பெரும்பழி
பொதுவின் றெய்தவும்
அறத்திற மறத்தியோ
வவல முண்டெனா.

பிறத்தல் ஒன்றுற்றபின் பெறுவ யாவையும் ;
திறத்துளி உணர்வது ஓர் செம்மை உள்ளத்தாய் !
புறத்து உறு பெரும் பழி பொதுவின்று எய்தவும்,
அறத்திறம் மறத்தியோ ? அவலம் உண்டு எனா.

போ :—எல்லாவற்றையும் முறையால் உணரும் நன்மனமுடையவனே ! பிறவியென்னும் ஒன்றைப் பொருந்தியபின் (இன்பமும் துன்பமும் ஆகிய) எல்லாம் அடையப்படுவனவே. (அப்படியிருக்கவும், யான் வனம்புகுதலால்) துன்பம் உண்டென்று எண்ணி, புறத்தே (யான் வனம்புகாமையால் தந்தைசொற் கடந்த) மிகப் பெரிய பழி சிறப்பாக என்னை வந்தடையும்படி ('தந்தைசொல் மிக்க மந்திரமில்லை,' 'தாயிற்சிறந்தொரு கோயிலுமில்லை' என்று யான் மேற்கொள்ள வேண்டிய) அறத்தின் கூறுபாட்டை நீ மறக்கலாமோ ?

கு.—திறம் - முறை. திறத்துளி - முறையால்; திறத்துளி என்பதனுள் உளி என்பது மூன்ருவதன் பொருள்படுவதோர் இடைச்சொல். 'இயல்புளிக் கோலோச்சும்' (545) என்னும் திருக்குறட் பகுதியும் அதற்குப் பரிமேலழகர் எழுதிய வுரையும் இங்கே நோக்கத் தகும். செம்மை நடுநிலையுமாம். திறத்துளி உணர்வதோர் செம்மை உள்ளத்தாய்! பிறத்தல் ஒன்று உற்றபின் யாவையும் பெறுவ எனவும் அவலம் உண்டு என அறத்திறம் மறத்தியோ எனவும் இயையும். புறத்து - அயலே. அறத்திறம் – அறநெறியின் கூறுபாடு. அறத்தின் தன்மை எனினும் ஆம். அவலம் - துன்பம். சோகமும் ஆம். (27)

1957. முன்புநின் றிசைநிறீஇ முடிவு முற்றிய
பின்புநின் றுறுதியைப் பயக்கும் பேரறம்
இன்பம்வந் துறுமெனி லியைவ தாயிடைத்
துன்பம்வந் துறுமெனிற் றுறக்க லாகுமோ.

முன்பு நின்று இசை நிறீஇ முடிவு முற்றிய
பின்பும் நின்று உறுதியைப் பயக்கும் பேர் அறம்;
இன்பம் வந்து உறும் எனில் இயைவது, ஆயிடைத்
துன்பம் வந்து உறும் எனில் துறக்கல், ஆகுமோ.

பொ:—சிறந்த அறமானது, மக்கள் அடையவேண்டிய பொருள்களுள் முன் எண்ணத்தக்கதாய் நின்று, (தன்னைச் செய்தவனுக்கு) இவ்வுலகிலே புகழினை நிலைபெறுவித்து, (தன்னைச் செய்தவன்) இறந்த பின்பும் அவனை விடாது தொடர்ந்துநின்று நன்மையைத்தரும்; அவ்வறத்தால் இன்பம் வந்து பொருந்துமானல் அதற்கு இயைதலும், அப்பொழுதே துன்பம் வந்து கூடுமானல் அதனைக் கைவிடுதலும் பொருந்துமோ? பொருந்தாது.

கு:—முன்பாட்டில் சுமந்திரனை நோக்கி, 'அறத்தினை மறத்தியோ அவலம் உண்டெனு' என்று கூறிய இராமன், துன்பம் உண்டென்று அறத்தினைக் கைவிடுதல் ஒண்ணது என்று வலியுறுத்திக் கூறியவாறு. இசை - புகழ். நிறீஇ – நிறுவி. முடிவுமுற்றுதல் - முடிவடைதல் - சாதல். உறுதி–நன்மை. அறம் இசை நிறீஇ உறுதியைப் பயக்கும் என இயைக்க. இயைவதும் துறக்கலும் ஆகுமோ என உம்மை விரிக்க. இச்செய்யுளின் பின் இரண்டடிகள், "நன்ருங்கால் நல்லவாக் காண்பவர் அன்ருங்கால் - அல்லற்படுவதெவன்?'' (379) என்னும் திருக்குறளைத் தழுவி யமைந்தமை காண்க. (28)

1958. நிறப்பெரும் படைக்கல நிறத்தின் நேருற
மறப்பயன் விளக்குறும் வன்மை யன்றரோ
இறப்பினுந் திருவெலா மிழப்ப வெய்தினும்
துறப்பில ரறமெனல் சூர ராவதே.

நிறப் பெரும் படைக்கலம் நிறத்தின் நேர் உற,
மறப் பயன் விளக்குறும் வன்மை அன்று; அரோ
இறப்பினும், திரு எலாம் இழப்ப எய்தினும்,
துறப்பிலர் அறம் எனல் சூரர் ஆவதே.

பொ :—ஒளியமைந்த பெரிய (வேல் முதலிய) ஆயுதங்கள் மார்பில் நேராகவந்து பாயவும் வீரத்தின் பயனை வெற்றியை விளக்கும் வன்மையால் சூரராதல் இல்லை; உயிர் இழந்தாலும், செல்வம் எல்லாவற்றையும் இழக்க நேர்ந்தாலும், அறவொழுக்கத்தைக் கைவிடாதவர் என்று பிறர் பாராட்ட நிற்றலால் சூரராதல் உண்டு.

கு :—நிறம் - முன்னது ஒளி; பின்னது மார்பு. படைக்கலம் - ஆயுதம். மறப்பயன் - வெற்றி. வன்மையால் சூரராதல் அன்று; இறப்பினும் இழப்ப எய்தினும் அறம் துறப்பிலர் எனலால் சூரராவது உண்டு என இயையும். வன்மையால் எனலால் என மூன்றனுருபு விரிக்க. வன்மையால் சூரராவது அன்று என்றதற்கியைய எனலால் சூரராவது உண்டு என உண்டு என்னும் ஒருசொல் பெய்துரைக்க. அரோ அசை. அறம் துறப்பிலர் என்க. அறம் என்றது அறவொழுக்கத்தினை. (29)

1959. கான்புறஞ் சேறலி லருமை காண்டலால்
வான்பிறங் கியபுகழ் மன்னர் தொல்குலம்
யான்பிறந் தறத்தினின் றிழுக்கிற் றென்பவோ
ஊன்றிறந் துயிர்குடித் துழலும் வேலினய்.

கான் புறம் சேறலில் அருமை காண்டலால்,
வான் பிறங்கிய புகழ் மன்னர் தொல் குலம்,
யான் பிறந்து அறத்தினின்று இழுக்கிற்று என்ப; ஓ
ஊன் திறந்து உயிர் குடித்து உழலும் வேலினய்!

பொ :—உடலைப் பிளந்து உயிரைக் குடித்துத் திரியும் வேற்படையுடையாய்! யான் வனத்துள் புகுதலால் துன்பம் விளைதலை நோக்குதலால், மேலுலகத்திலும் விளங்கிய புகழையுடைய அரசர் தோன்றிய

பழைய சூரியகுலமானது, யான் பிறத்தலால் அறநெறி யொழுகுதலி னின்று தவறிற்று என்று உலகத்தார் பழி கூறுவர்; (அது) கொடிது.

கு:—ஊன் என்றது இங்கே அவ்வூனுல் அமைந்த உடலினை உணர்த்திநின்றது. வேலினய் என்று விளித்தது சுமந்திரனை. திறத்தல் - பிளத்தல். கான்புறம் - காட்டில். புறம் ஏழனுருபு. கான் புறஞ்சேறலில் அருமை காண்டலாவது காட்டிற்புகுதலால் விளையும் துன்பத்தை நோக்கிக் கான்புகாது ஒழிகை. தசரதன், ககுத்தன் முதலி யோர் இந்திரன்பகைவரை வென்று அவனுக்கு அரசு நிலைக்கவைத்தவ ராதலின் அவர் புகழ் வான் பிறங்கிய புகழாயிற்று. இறுதி நின்ற ஓ இரக்கப்பொருளில் வந்தது. (30)

1960. வினைக்கரு மெய்ம்மையன் வனத்து விட்டனன்
மனைக்கரும் புதல்வனை யென்றல் மன்னவன்
தனக்கருந் தவமது தலைக்கொண் டேகுதல்
எனக்கருந் தவமிதற் கிரங்க லெந்தைநீ.

"'வினைக்கு அரு மெய்ம்மையன் வனத்து விட்டனன்
மனைக்கு அரும் புதல்வனை' என்றல், மன்னவன்
தனக்கு அருந்தவம்; அது தலைக்கொண்டு ஏகுதல்
எனக்கு அருந்தவம்; இதற்கு இரங்கல் எந்தை! நீ."

பொ:—எங்கள் தந்தை போல்பவனே! 'செயற்கு அரிய வாய்மை யாகிய விரதத்தை மேற்கொண்ட சக்கரவர்த்தி, தன் மனைக்கு அருமந்த புதல்வனாகிய இராமனைக் காட்டிற் செலுத்தினான்' என்று உலகினர் சொல்லுதல் அவனுக்குப் பெறலருந்தவமாகும்; அரசன் கட்டளையைத் தலைமேல் தாங்கி வனம் செல்லுதல் எனக்குப் பெறலருந்தவமாகும்; இதற்கு நீ வருந்தாதொழிக".

கு:—எந்தை என்றது இராமன் சுமந்திரனை நோக்கிக் கூறிய விளிக்கூற்று. (31)

1961. முந்தினை முனிவனைக் குறுகி முற்றுமென்
வந்தனை முதலிய மாற்றங் கூறினை
எந்தையை யவனொடு மெய்தி யீண்டெனை
சிந்தனை யுணர்த்துதி யென்று செப்புவான்.

"முந்திஜன முனிவஜனக் குறுகி, முற்றும் என்
வந்தஜன முதலிய மாற்றம் கூறிஜன,
எந்தையை அவனெடும் எய்தி, ஈண்டு என
சிந்தஜன உணர்த்துதி" என்று செப்புவான்.

போ :—"விரைந்து (வசிட்ட) முனிவஜனயடைந்து, என் வணக்கம் முதலாகிய உரைகஜள முழுதும் கூறி, அம் முனிவனேடு என் தந்தையை யடைந்து, இங்கே என் நிஜனவைச் சொல்லுக" என்று (மேலும்) கூறுவானுயினன்.

கு :—முந்துதல் - விரைதல். முனிவன் என்றது இங்கே வசிட்டஜன. என் வந்தஜன முதலிய மாற்றம் முற்றும் கூறிஜன என இயைக்க. அவன் என்றது வசிட்ட முனிவஜனச் சுட்டிநின்றது. சிந்தஜன-நிஜனவு. கூறிஜன-கூறி; முற்றெச்சம். (32)

**1962.** முனிவஜன யெம்பியை
முறையி னின்றரும்
புனிதவே தியர்க்குமே
லுறைபுத் தேளிர்க்கும்
இனியன விழைத்தியென்
றியம்பி யெற்பிரி
தனிமையுந் தீர்த்தியென்
றுரைத்தி தன்மையால்.

"முனிவஜன எம்பியை 'முறையில் நின்று அரும்
புனித வேதியர்க்கும் மேல் உறை புத்தேளிர்க்கும்
இனியன இழைத்தி' என்று இயம்பி, 'எற்பிரி
தனிமையும் தீர்த்தி' என்று உரைத்தி" தன்மையால்.

போ :—'அரிய தூய மறையவர்க்கும் வானில் உறை தேவர்கட்கும் அவரவர்க்குரிய முறையொடு பொருந்தி, நல்லனவற்றைச் செய்க' என்று என் தம்பி (யாகிய பரதனு)க்குச் சொல்லி, அவன் என்ஜனப் பிரிந்து தனித்து அடையும் துன்பத்தையும் முறையால் போக்குதி என்று வசிட்ட முனிவனிடம் கூறுக.

கு :—முனிவஜன - முனிவனிடம்; உருபுமயக்கம். வேதியர்க்கும் புத்தேளிர்க்கும் (அவரவர்க்குரிய) முறையினின்று இனியன இழைத்தி என்று எம்பியை இயம்பி என்க. எம்பியை இயம்பி, தீர்த்தி என்று முனிவஜன உரைத்தி என இயையும். இனியன-நல்லவை. தன்மை-முறை. (33)

1963. வெவ்விய தன்னையால் விளைந்த தீண்டொரு
கவ்வையென் றிறையுந்தன் கருத்தி னோக்கலன்
எவ்வரு ளென்வயின் வைத்த தின்சொலால்
அவ்வரு ளவன்வயி னருளு கென்றியால்.

'வெவ்வியது அன்னையால் விளைந்தது ஈண்டு ஒரு
கவ்வை' என்று, இறையும் தன் கருத்தின் நோக்கலன்,
'எவ் அருள் என் வயின் வைத்தது, இன்சொலால்
அவ் அருள், அவன் வயின் அருளுக' என்றியால்.

பொ :—' "தாயால் இங்கே கொடியதொரு துன்பம் விளைந்ததென்று சிறிதும் தன் மனத்தில் நினையாமல், என்பால் இனிய சொல்லொடு எப்படிப்பட்ட அருளைச் செய்தானோ அப்படிப்பட்ட அருளை அப்பரதனிடம் புரிக'' என்று வசிட்ட முனிவனிடம் கூறுக'.

கு :—அன்னையால் ஈண்டு வெவ்வியது ஒரு கவ்வை விளைந்தது என்று தன் கருத்தின் இறையும் நோக்கலன் என இயையும். நோக்கலன்-நோக்காமல்; முற்றெச்சம், (34)

1964. வேண்டினெ னிவ்வர மென்று மேலவன்
ஈண்டரு ளெம்பிபா னிறுவி யேகினை
பூண்டமா தவனொடுங் கோயில் புக்கினி
தாண்டகை வேந்தனை யவல மாற்றிப்பின்.

" 'வேண்டினென் இவ் வரம்' என்று மேலவன்
ஈண்டு அருள் எம்பிபால் நிறுவி, ஏகினை,
பூண்ட மாதவனொடும் கோயில் புக்கு, இனிது
ஆண்டகை வேந்தனை அவலம் ஆற்றிப் பின்".

பொ: —இந்த வரத்தை யான் வேண்டினேன் என்று முனிவனிடம் கூறி, மேலோனாகிய அம் முனிவனுடைய நிறைந்த அருளை என் தம்பியாகிய பரதனிடம் நிலைக்கச் செய்து சென்று, மேற்கொண்ட பெரிய தவத்தினையுடைய அம் முனிவனோடு அரசன் மாளிகையிற் புக்கு, ஆண்மைத்தன்மையுடைய அரசனை இனிதாக அவலம் நீங்கச்செய்து, அதன்பின்.

கு :—இவ்வரம் வேண்டினன் என்று இயையும். மேலவன் மாதவன் என்றது வசிட்ட முனிவனை. ஈண்டுதல் - நிறைதல். ஏகினை - ஏகி; முற்றெச்சம். ஆண்டகை வேந்தன் என்றது தசரதசக்கரவர்த்தியை.

அவலம்-துன்பம். வேந்தனுக்குத் துன்பம் இராமன்பிரிதலால் விளைந்தது. ஆற்றுதல்-தணிவித்தல். (35)

**1965.** ஏழிரண் டாண்டுநீத் தீண்ட வந்துனைத்
தாழ்குவன் றிருவடி தளர லீண்டெனச்
சூழிவெங் கடகளிற் றரசற் சொல்லிப்பின்
வாழிமா தவன்சொலான் மனந்தெருட்டுவாய்.

" 'ஏழிரண்டு ஆண்டும் நீத்து, ஈண்ட வந்து, உனைத்
தாழ்குவன் திருவடி, தளரல் ஈண்டு' எனச்
சூழி வெம் கட களிற்று அரசற் சொல்லிப் பின்,
வாழி மாதவன் சொலால் மனம் தெருட்டுவாய்".

பொ :—'பதினான்காண்டுகளையும் கழித்து விரையவந்து உன்னை அடித்தலத்தில் விழுந்து வணங்குவேன்; நீ இங்கே சோர்வடையற்க' என்று முகபடாம் அணிந்த கொடிய மதப் பெருக்குள்ள களிற்றி யானையை யுடைய அரசன்பாற் கூறிப் பின் பெரிய தவத்தினனான வசிட்டன் சொல்லால் அரசன் மனத்தைத் தெளிவிப்பாயாக.

கு :—ஈண்ட - விரைவாக. உனைத் திருவடி தாழ்குவன் என இயையும். சூழி-முகபடாம். கடகளிற்றரசன் என்றது தசரதனை. வாழி அசைநிலை. தெருட்டுதல் - கலக்கம் நீக்கித் தெளிவித்தல். (36)

**1966.** முறைமையா லெற்பயந்
தெடுத்த மூவர்க்கும்
குறைவிலா வென்னெடு
வணக்கங் கூறிப்பின்
இறைமகன் றுயர்துடைத்
திருத்தி மாடென்றான்
மறைகளை மறைந்துபோய்
வனத்து வைகுவான்.

'முறைமையால் எற் பயந்தெடுத்த மூவர்க்கும்
குறைவு இலா என் நெடு வணக்கம் கூறிப் பின்
இறை மகன் துயர் துடைத்து இருத்தி மாடு' என்றான்,
மறைகளை மறைந்து போய் வனத்து வைகுவான்.

பொ :—வேதங்களும் தொடராமல் மறைந்துசென்று வனத்தே தங்கிய இராமன், 'என்னைப் பெற்று வளர்த்த அன்னைமார் மூவருக்கும் குறைவில்லாத என்னுடைய பெரிய வணக்கத்தை முறையாலே சொல்லிப் பின் அரசன் துயரத்தைப் போக்கி அவன் பக்கத்தே இருப்பாயாக' என்ருன்.

கு :—பயந்து-பெற்று. எடுத்தல் - வளர்த்தல். நெடு வணக்கம் என்றது எட்டுறுப்பும் நிலந்தோய விழுந்து வணங்கும் வணக்கத்தை. இறைமகன்-என்றது தயரதனை. (37)

**1967.** ஆள்வினை யாணையிற்
றிறம்ப லன்றெனுத்
தாண்முதல் வணங்கிய
தனித்திண் டேர்வலான்
ஊழ்வினை வரும் துயர்
நிலையென் றுன்னுவான்
வாழ்வினை நோக்கியை
வணங்கி நோக்கினுன்.

'ஆள்வினை ஆணையில் திறம்பல் அன்று' எனுத்
தாள் முதல் வணங்கிய தனித் திண் தேர்வலான்,
'ஊழ்வினை வரும் துயர் நிலை' என்று உன்னுவான்
வாழ்வினை நோக்கியை வணங்கி நோக்கினுன்.

பொ :—அடியோர் பணி தலைவர் கட்டளையொடு மாறுபடுதல் அன்று என்று எண்ணி, இராமன் அடியின்கண் வணங்கிய சிறந்த வலிய தேர்த்தொழில் வல்லனுன சுமந்திரன், துன்பநிலையானது ஊழால் வரும் என்று நினைந்து, உயிர்களின் நல் வாழ்வையே கருதும் சீதாபிராட்டியை வணங்கி, நோக்கினுன்.

கு :—ஆள் வினை - அடியார் பணி. திறம்புதல் – மாறுபடுதல். ஊழ்வினையால் துயர்நிலை வரும் என்க. சுமந்திரன் இராமனை வணங்கியது இராமன் கூறியவாறு தான் நடக்க இசைந்ததனைப் புலப்படுத்தும் குறிப்பாய் அமைந்தது. சீதாபிராட்டியை வணங்கி நோக்கியது அவர் அயோத்தியிலுள்ளார்க்குச் சொல்லும் செய்தியைக் கேட்கும் கருத்துடையனுகி என்க. (38)

## சீதை சொல்லல்

1968. அன்னவள் கூறுவா
ளரசர்க் கத்தையர்க்
கென்னுடை வணக்கமுன்
னியம்பி யானுடைப்
பொன்னிறப் பூவையுங்
கிளியும் போற்றுகென்
றுன்னுமென் றங்கையர்க்
குணர்த்து வாயென்றுள்.

அன்னவள் கூறுவாள், "அரசர்க்கு அத்தையர்க்கு என்னுடை வணக்கம் முன் இயம்பி, 'யான் உடைப் பொன் நிறப் பூவையும் கிளியும் போற்றுக' என்று உன்னும் என் தங்கையர்க்கு உணர்த்துவாய்" என்றுள்.

பொ :—அந்தச் சீதை, சுமந்திரனை நோக்கிக் கூறுவாளாய், 'அரசருக்கும் மாமியர்க்கும் என் வணக்கத்தை முன்னே தெரிவித்து, 'என்னுடைய அழகிய நிறம் வாய்ந்த நாகணவாய்ப் புள்ளினையும் கிளியையும் பாதுகாக்க' என்று என்னை நினையும் என்னுடைய தங்கைமார்களுக்குத் தெரிவிப்பாயாக' என்றுள்.

கு :—அரசர் என்பது ஒருவரைக் கூறும் பன்மைச் சொல்லாய்த் தசரதசக்கரவர்த்தியை உணர்த்திநின்றது. பொன் நிறம் - அழகிய நிறம். இச்செய்யுளின் பின் னிரண்டடிகளோடு, "எள்ளரிய தேர்தரு சுமந்திரனிசைப்பாய், வள்ளன் மொழி வாசகமெனத் துயர் மறந்தாள், கிள்ளையொடு பூவைகள் கிளத்தல் கிள என்னும், பிள்ளையுரையின்றிற முணர்த்துதி" (சுந்தர-551) என ஆசிரியர் பின்னே கூறுவதும் நோக்கத்தகும். (39)

## சுமந்திரன் துயரடைதல்

1969. தேர்வலா னவ்வுரை
கேட்டுத் தீங்குறின்
யார்வலா ருயிர்துறப்
பெளிதன் றேயெனுப்

போர்வலான் றடுக்கவும்
பொருமி விம்மினான்
சோர்விலா ளறிகிலாத்
துயர்க்குச் சோர்கின்றான்.

தேர் வல்(ல்)லான் அவ்வுரை கேட்டுத் தீங்கு உறின்
யார் வல்(ல்)லார்? உயிர் துறப்பு எளிதன்றே! எனப்
போர் வல்(ல்)லான் தடுக்கவும் பொருமி விம்மினான்;
சோர்வு இல்(ல்)லாள் அறிகிலாத் துயர்க்குச் சோர்கின்றான்.

பொ:—தேர்த் தொழில் வல்லானான சுமந்திரன், சீதை சொல்லிய அவ்வுரைகளைக் கேட்டு, பிழையற்றவளான அவள் (தங்களுக்கு நேர்ந்த) துயர் நிலையை அறியாமைக்கு வருந்தி, "(ஊழால்) தீங்கு விளையின் (அதனைத் தடுக்க) வல்லார் ஒருவருமில்லை; நல்லோர் துயர் உறல் காணாது உயிரை விட்டிடலாம் எனின் வரையறுத்தநாள் உலந்தவழியல்லது, உயிர் துறத்தல் எளிதன்று" என்று எண்ணி, போரில் வல்லவனான இராமன், ('வருந்தல் ஒண்ணாது' என்று ஆறுதல் கூறித்) தடுக்கவும் துன்புற்றுத் தேம்பி அழுவானாய்.

கு:—இதுவும் பின்வரும் செய்யுளும் ஒரு தொடர். தேர்வலான், அவ்வுரை கேட்டு, சோர்விலாள் அறிகிலாத் துயர்க்குச் சோர்கின்றான், என, விம்மினான்: என இயையும். (40)

சுமந்திரன் இலக்குவனைச் செய்தி கூறுக எனல்

1970. ஆறினன் போற்சிறி தவல மவ்வழி
வேறிலா வன்பினான் விடைதந் தீகென
ஏறுசே வகற்றொழு திளைய மைந்தனைக்
கூறுவ தியாதென வினைய கூறினான்.

ஆறினன் போல் சிறிது அவலம் அவ்வழி,
வேறு இலா அன்பினான், 'விடை தந்தீக' என,
ஏறு சேவகற் றொழுது இளைய மைந்தனைக்
'கூறுவது யாது?' என, இனைய கூறினான்.

பொ:—வேறுபடாத அன்பினையுடைய அச் சுமந்திரன், இராமனால் ஆறுதல் கூறப்பட்ட அப்பொழுது துன்பம் சிறிது ஆறியவனாய், ஏறு சேவகனான இராமனைத் தொழுது, 'விடை தருக' என்று, இளைய

மைந்தனாகிய இலக்குவனை நோக்கி, 'நீ கூறும் செய்தி யாது?' என்று வினவ, அவன் இவற்றைக் கூறினான்.

கு :—போல் அசை; 'பொன் போல் புரிசை' (222) என்னும் திருக் கோவையார்ப் பாசுரத்துள் போல் அசையாகப் பயின்றமை காண்க. ஏறுசேவகன் - மேலும் மேலும் வளரும் வீரமுடையான்; 'மாறில் போரரக்கன் மதிள் நீறெழச் செற்றுகந்த ஏறு சேவகன்' (திருவாய் மொழி. 6, 1, 10) என்பது அருளிச்செயல். இனைய என்பது பின் வரும் பாடல்களில் இலக்குவன் கூறுவனவற்றைச் சுட்டிநின்றது. (41)

## இலக்குவன் கூறுதல் 1971—1973

**1971.** உரைசெய்தெங் கோமகற்
குறுதி யாக்கிய
தரைகெழு செல்வத்தைத்
தவிர மற்றொரு
விரைசெறி குழலிமாட்
டளித்த மெய்யனை
அரைசனென் றின்னமொன்
றறையற் பாலதோ.

உரைசெய்து எம் கோமகற்கு உறுதியாக்கிய
தரை கெழு செல்வத்தைத் தவிர, மற்றொரு
விரை செறி குழலிமாட்டு அளித்த மெய்யனை
அரைசன் என்று இன்னம் ஒன்று அறையற்பாலதோ?

பொ :—எங்கள் அரசனாகிய இராமனுக்குத் (தருவதாகச்) சொல்லி உறுதிப்படுத்திய நிலமாகிய மிக்க செல்வத்தை (அவன்) நீங்க, வேறொரு நறுமணம் நிறைந்த கூந்தலையுடைய பெண்ணினிடம் கொடுத்த வாய்மையாளனை இன்னம் அரசன் என்று கொண்டு ஒரு செய்தி சொல்லற்பாற்றோ?.

கு :—கோமகன் – அரசன்; 'கோமகன் கொற்றம் குறைவின்றோங்கி' (சிலப்பதிகாரம்-30, 6) என்பதனுள் கோமகன் என்பது அரசன் என்னும் பொருளிற் பயின்றமை காண்க. எம் கோமகன் - எம்மரசன்; இராமன். அரைசன் என்பது அரசன் என்பதன் போலி. (42)

1972. கானகம் பற்றிநற் புதல்வன் காயுணப்
போனகம் பற்றிய பொய்யின் மன்னற்கிங்
கியானகம் பற்றிய துயரொ டின்னும்போய்
வானகம் பற்றிலா வலிமை கூறென்றான்.

'கானகம் பற்றி நல் புதல்வன் காய் உணப்
போனகம் பற்றிய பொய் இல் மன்னற்கு இங்கு,
யான் அகம் பற்றிய துயரொடு இன்னும் போய்
வானகம் பற்றிலா வலிமை கூறு' என்றான்.

பொ :—"நன்மகனாகிய இராமன் காட்டை உறையிடமாகக் கொண்டு காயை உண்ண, தான் உயர்ந்த வுணவை விரும்பியுண்ட வாய்மை யாளனான அரசனிடம், மனத்தில் மூண்ட துன்பத்தால் இன்னும் சென்று வானுலகத்தை அடையாத என் வன்மையைக் கூறுவா யாக" என்றான்.

கு :—நற்புதல்வன் - நன்மகன்; 'எல்லா வுயிர்கட்கும் நன்மகன்' (1615) என்றார் முன்னும். போனகம் சிறந்த அறுசுவை யுண்டி. அது உண்பன தின்பன பருகுவன நக்குவன என நால் வகைப்படும், 'உண்டி நாலு விதத்திலாறு சுவைத்திறத்தினில்' (இளை யான்குடிமாறநாயனார்-4) என்பது பெரிய புராணம்; அறுசுவை நால் வகைப் போனகம்' (28-242) என்பது மணிமேகலை. இலக்குவனுக்குத் துயர் இராமன் முடிசூடுதல் தவிர்ந்து வனம்புகுந்தமையால் விளைந் தது. துயரொடு என்பதில் ஒடு காரணப் பொருளில் பயின்றது. மன்னற்கு......கூறு என்றது, என் மனத்தே மூண்ட துயரால் யான் இன்னும் இறவாதிருக்கும் வன்மையை அரசன் பால் தெரிவிப்பாயாக என்றவாறு. (43)

1973. மின்னுடன் பிறந்தவாட்
பரத வேந்தற்கென்
மன்னுடன் பிறந்திலேன்
மண்கொண் டாள்கின்ற
தன்னுடன் பிறந்திலேன்
தம்பி முன்னலேன்
என்னுடன் பிறந்தயான்
வலிய னென்றியால்.

மின்னுடன் பிறந்த வாள் பரதவேந்தற்கு, ‘ என்
மன்னுடன் பிறந்திலேன், மண் கொண்டு ஆள்கின்ற
தன்னுடன் பிறந்திலேன், தம்பி முன் அலேன்,
என்னுடன் பிறந்த யான் வலியன் என்றி’ ஆல்.

பொ :—ஒளியொடு தோன்றிய வாளை யுடைய பரதனுகிய அரசனுக்கு, ‘ நான் என் அரசனுகிய இராமனுடன் பிறக்கவில்லை; நிலத்தைப் பெற்று ஆட்சிபுரிகின்ற தன்னுடனும் பிறக்கவில்லை; சத்துருக்கனுக்கு அண்ணனும் ஆகேன்; (ஆதலால்) என்னெடு பிறந்த யான் சுகமேயுள்ளேன் ’ என்று சொல்லுக.

கு :—பரதவேந்தற்கு, மன்னுடன் பிறந்திலேன், தன்னுடன் பிறந்திலேன், தம்பி முன் அலேன், என்னுடன் பிறந்த யான் வலியன் என்றி என இயையும். இராமன் முதலிய நால்வரும் ஒரு தந்தையின் மக்களாதலின் உடன்பிறந்தவராயினும், இலக்குவன் இராமன் முடிசூடுதற்குத் தடையாயினவற்றை நீக்கி, அவனுக்கு முடிசூட்டத் தன்னல் இயலாமையின், என் மன்னுடன் பிறந்திலேன் என்ருன்; பரதனுக்கு நாடாளும் உரிமை கிட்டியது குறித்துத் தான் மகிழாமையால், ‘மண் கொண்டாள்கின்ற தன்னுடன் பிறந்திலேன்’ என்ருன். சத்துருக்கனும் தானும் ஒரு தந்தைக்கு ஒரு தாய்வயிற்றுதித்த உடன்பிறந்தாராயினும், சத்துருக்கன் தன் வெறுப்புக்கிலக்கான பரதனைப் பின்பற்றி நடத்தலால் ‘தம்பி முன் அலேன்’ என்ருன். (44)

## சுமந்திரன் திரும்பிச் செல்லுதல் 1974-1975

**1974.** ஆரிய னிளவலை நோக்கி யையநீ
சிரிய வல்லன செப்ப லென்றபின்
பாரிடை வணங்கினன் பதைக்கு நெஞ்சினன்
தேரிடை வித்தகன் சேறன் மேயினுன்.

ஆரியன் இளவலை நோக்கி, ‘ஐய! நீ
சீரிய அல்லன செப்பல்’ என்ற பின்
பாரிடை வணங்கினன் பதைக்கும் நெஞ்சினன்
தேரிடை வித்தகன் சேறல் மேயினுன்.

பொ :—உயர்ந்தோனுன இராமன் இலக்குவனைப் பார்த்து, ‘ஐய! நீ நல்லன அல்லாதவற்றைச் சொல்லாதே’ என்று தடுத்து அடக்கியபின், தேர்த்தொழிலில் தேர்ந்தவனுன சுமந்திரன் நிலத்தில்படிய அவரை வணங்கி நடுங்கும் மனமுடையனுகிச் செல்லத் தொடங்கினுன்.

கு :—பதைத்தல் - நடுங்குதல். தேர் என்பது தேர்த் தொழிலை உணர்த்திநின்றது. வித்தகன் – அறிஞன். சேறல் - செல்லுதல். (45)

**1975.** கூட்டினன் றேர்ப்பொறி
கூட்டிக் கோண்முறை
பூட்டினன் புரவியப்
புரவி போநெறி
காட்டினன் காட்டித்தன்
கல்வி மாட்சியால்
ஓட்டின னொருவரு
முணர்வு ருமலே.

கூட்டினன் தேர்ப் பொறி, கூட்டிக் கோள் முறை
பூட்டினன் புரவி, அப் புரவி போம் நெறி
காட்டினன், காட்டித் தன் கல்வி மாட்சியால்
ஓட்டினன் ஒருவரும் உணர்வுருமலே.

பொ :—(சுமந்திரன்,) தேரின் உறுப்புக்களை இணைத்தான்; இணைத்து, அத்தேரில் அனுபவ முறையால் குதிரைகளைப் பூட்டினுன்; அக்குதிரைகளுக்குச் செல்லவேண்டிய நெறியை(க் குறிப்பால்) அறிவித்தான்; அறிவித்துத் தன்னுடைய சிறந்த தேர்த் தொழிற் பயிற்சியால், தேர் செல்லுதலை ஒருவரும் அறியாதவாறு (ஓசை எழாமல்) ஓட்டினுன்.

கு :—தேர்ப்பொறி என்றது தேரின் உறுப்புக்களை. கோள்முறை – அனுபவ முறையால். கோள் - அனுபவம்; (திருவாய்மொழி 9-6-7). புரவிக்கு என உருபுவிரிக்க. (46)

45, 52 என்னும் குறியீடுள்ள அச்சுப் புத்தகங்களில், இச்செய்யுளின் பின்,

1975 (a) 'ஒருதிறத் துயிரெலாம் புரந்து மற்றவண்
இருதிறத் துளவினை யியற்று மெம்பிரான்
தருதிறத் தேவலைத் தாங்கித் தாழ்விலாப்
பொருதிறற் சுமந்திரன் போய பின்னரே'

என ஒரு மிகைப்பாட்டுக் காணப்படுகிறது.

## இராமன் வனத்துட்போதல்

1976. தையறன் கற்புந்தன் றகவுந் தம்பியும்
மையறு கருணையு முணர்வும் வாய்மையும்
செய்யதன் வில்லுமே சேம மாகக்கொண்
டையனும் போயினு னல்லி னுப்பணே.

தையல்தன் கற்பும் தன் தகவும் தம்பியும்
மை அறு கருணையும் உணர்வும் வாய்மையும்
செய்ய தன் வில்லுமே சேமம் ஆகக் கொண்டு
ஐயனும் போயினுன் அல்லின் நாப்பணே.

பொ :—சீதையின் கற்பும் தன் நடுநிலையும் இலக்குவனும் குற்ற மற்ற கருணையும் அறிவும் மெய்ம்மையும் தன்னுடைய நல்ல வில்லும் தனக்குப் பாதுகாப்பாகக் கொண்டு இராமனும் நள்ளிரவில் சென்ருன்.

கு:—தையல் என்றது சீதையை. மை அறு என்னும் அடையினை உணர்வுக்கும் வாய்மைக்கும் கூட்டினும் அமையும். ஐயன் என்றது இராமனை.

சில சுவடிகளில் இச்செய்யுளின் பின் சுமந்திரன்மீட்சிப்படலம் முற்றும் என்று வரையப்பட்டுளது. (47)

## மதித்தோற்றம் 1977—1978

1977. பொய்வினைக் குதவும் வாழ்க்கை
★ யரக்கரைப் பொருந்தி யன்னுர்
செய்வினைக் குதவு நட்பாற்
செல்பவர்த் தடுப்ப தேய்க்கும்.
மைவிளக் கியதே யன்ன
வயங்கிரு ளுரக்க வானம்
கைவிளக் கெடுத்த தென்ன
வந்தது கடவுட் டிங்கள்.

பொய் வினைக்கு உதவும் வாழ்க்கை
அரக்கரைப் பொருந்தி, அன்னுர்
செய் வினைக்கு உதவும் நட்பால்
செல்பவர்த் தடுப்பது ஏய்க்கும்.

மை விளக்கியதே அன்ன
வயங்கு இருள் துரக்க, வானம்
கைவிளக்கு எடுத்தது என்ன
வந்தது கடவுள் திங்கள்.

பொ :—வஞ்சகச் செயல்களுக்குப் பயன்படும் வாழ்வையுடைய அரக்கரோடு பொருந்தி, அவர் செய்யும் தீய செயல்களுக்குத் துணையாகும் நட்புரிமையால், (அவ்வரக்கரை யொழிக்கச்) செல்பவரான இராமன் முதலியோரைத் தடுப்பதுபோல விளங்கும், மையை மாசுநீக்கித் துலக்கியதுபோன்ற தோற்றம் உடைய இருளை ஓட்ட, வானுலகம் கைவிளக்கு எடுத்ததுபோலத் தெய்வத்தன்மையுள்ள திங்கள் உதித்தது.

கு :—பொய் - வஞ்சம். தடுப்பதேய்க்கும் இருள், மை விளக்கியதே யன்ன இருள், வயங்கு இருள் என இயையும். இருள் அரக்கரொடு நட்புற்று அவரை ஒழிக்கச் செல்வாரைச் செல்லவொட்டாது தடுப்பது போல் மிக, வானுலகம், தனக்குப் பகைவராகிய அரக்கரை ஒழிக்கச் செல்வார்க்கு இருள் நீங்கி வழி தெரியும்படி கைவிளக்கெடுத்ததுபோலத் திங்கள் தோன்றியது என்றவாறு, 'வயங்கிருடுரக்க வானம் கைவிளக் கெடுத்ததென்ன வந்தது கடவுட்டிங்கள்' என்பதனுடன், 'ஏறனுற் கிருளை நீங்கக் கைவிளக்கேந்தியாங்கு வீறுயர்மதியம் தோன்ற' (1542) என்னும் சீவக சிந்தாமணிச் செய்யுட் பகுதியும் நோக்கத்தகும். (48)

இச்செய்யுள், சில பிரதிகளில் தயரதன் மோட்சப்படலம் என்ற தலைப்பின்கீழ் வரையப்பட்டுளது.

**1978.** மருமத்துத் தன்னை யூன்று
மறக்கொடும் பாவந் தீர்க்கும்
உருமொத்த சிலையி னோரை
யொருப்படுத் துதவி நின்ற
கருமத்தின் விளைவை யெண்ணிக்
களிப்பொடு காண வந்த
தருமத்தின் வதன மென்னப்
பொலிந்தது தனிவெண் டிங்கள்.

மருமத்துத் தன்னை ஊன்றும்
மறக் கொடும் பாவம் தீர்க்கும்
உரும் ஒத்த சிலையினோரை
ஒருப்படுத்து, உதவி நின்ற

கருமத்தின் விளைவை எண்ணிக்
களிப்பொடு காண வந்த
தருமத்தின் வதனம் என்னப்
பொலிந்தது தனி வெண் திங்கள்.

பொ :—தன்னை உயிர்நிலையிலே குத்தித் தாக்கும் வலிய கொடிய தீவினையைப் போக்கும் இடிபோன்ற முழக்கினையுடைய வில் வீரர்களான இராமலக்குவரை வனஞ் செல்லுதற்கு இசைவித்துத் தனக்கு உதவிய நல்வினைப் பயனை நினைந்து மகிழ்ச்சியோடு அவரைப் பார்த்தற்கு வந்த அறக்கடவுளின் முகம்போல, ஒப்பற்ற வெண்மை நிறமுள்ள திங்கள் விளங்கியது.

கு :—மருமம் - உயிர்நிலை; மார்பும் ஆம். ஊன்றுதல் – (வேல் முதலிய படைக்கலத்தால்) குத்துதல். இரவில் விளங்கித் தோன்றும் இயல்புடைய சந்திரனை, தீவினையை ஒழித்து நல்வினையினை நாட்டும் முயற்சியில், தீவினையை வளர்க்கும் அரக்கரை அழிக்கவல்ல இராமன் முதலியவர்கள் அரக்கர் வாழும் வனத்துள் புக, அவரைக் காணவந்த அறக்கடவுளின் முகம் போலப் பொலிந்தது என்று தற்குறிப்பேற்றம் என்னும் அணியொடு உவமையும் தழுவியமையைக் கூறியவாறு. (49)

### மலர்கள் குவிதல்

1979. காம்புயர் கானஞ் செல்லுங்
கரியவன் வறுமை நோக்கித்
தேம்பின குவிந்த போலுஞ்
செங்கழு நீருஞ் சேரைப்
பாம்பின தலைய வாகிப்
பரிந்தன குவிந்து சாய்ந்த
ஆம்பலு மென்ற போது
நின்றபோ தலர்வ துண்டோ.

காம்பு உயர் கானம் செல்லும்
கரியவன் வறுமை நோக்கித்
தேம்பின குவிந்த போலும்
செங்கழுநீரும், சேரைப்
பாம்பின தலைய ஆகிப்
பரிந்தன குவிந்து சாய்ந்த
ஆம்பலும் என்ற போது
நின்றபோது அலர்வது உண்டோ?

பொ :—மூங்கில் ஓங்கிய காட்டினுள் செல்லும் கரியவனாகிய இராமனுடைய எளிமையைக் கண்டு, செங்கழுநீர்மலர்களும் வருந்தியனவாய்க் குவிந்தன ; இரவில் மலரும் ஆம்பல்மலர்களும் சாரைப் பாம்பின் தலைபோலும் தோற்றத்தையுடையவாய் வருந்திக் குவிந்து சாய்ந்தன என்றால் மற்றைப் பூக்கள் மலருமோ ?

கு :—காம்பு - மூங்கில். வறுமை - எளிமை. 'சேவகன் தனியே பாரிற் செல்கின்றவறுமையை நோக்கினன்' (யுத்த. முதற் போர். 216) என்பர் பின்னும். தேம்புதல் - வருந்துதல். போலும் - அசை. செங்கழுநீர் பகலில் மலர்ந்து இரவிற் குவியும் பூ. இரவில் குவியுமியல்புள்ள செங்கழுநீரை இராமன் எளிமை நோக்கிக் குவிந்தன என்று ஒரு காரணம் கற்பித்தது தற்குறிப்பேற்றம் என்னும் அணிதழுவிய கூற்று. சேரைப் பாம்பு - சாரைப் பாம்பு. இரவில் மலரும் இயல்புடைய ஆம்பலும் வருந்திக் குவிந்து சாய்ந்தன என்றது இராமன் வனம் புகுதலால் ஓரறிவுடைய உயிர்களும் துயருற்றமை கூறியவாறு. மதிகண்டு மலரும் இயல்புடைய ஆம்பலும் குவிந்தது எனவே, மதி கண்டு குவியும் மலர்கள் மலர்தல் உண்டோத என்றவாறு. (50)

## இராமன் முதலியோர் வழி நடத்தல்

1980. அஞ்சனக் குன்ற மன்ன
வழகனு மழகன் றன்னை
எஞ்சலில் பொன்போர்த் தன்ன
விளவலு மிந்து வென்பான்
வெஞ்சிலைப் புருவத் தாடன்
மெல்லடிக் கேற்ப வெண்ணூற்
பஞ்சிடை படுத்தா லன்ன
வெண்ணிலாப் பரப்பப் போனார்.

அஞ்சனக் குன்றம் அன்ன
அழகனும், அழகன்றன்னை
எஞ்சல் இல் பொன் போர்த்தன்ன
இளவலும், இந்து என்பான்,
வெம் சிலைப் புருவத்தாள் தன்
மெல் அடிக்கு ஏற்ப வெள் நூல்
பஞ்சு இடை படுத்தால் அன்ன
வெள் நிலாப் பரப்பப் போனார்.

போ :—சந்திரன் என்று சொல்லப்படும் பணியாளன், விரும்பத் தக்க வில்லையொத்த புருவத்தையுடைய சீதையின் மென்மைத் தன்மை வாய்ந்த அடிகளுக்கு (வனத்திடை வருந்தாது நடத்தற்கு) ஏற்றவாறு வெள்ளிய நூலாடையைத் தரையில் விரித்தாற்போல வெள்ளிய நிலாவை அவ்வனப்பரப்பு முழுதும் பரவச்செய்ய, அஞ்சனமலைபோலும் இராமனும் அவ்விராமனை மாற்றுயர்ந்த பொன்னால் மூடினாலன்ன தோற்றமுடைய இலக்குவனும் சென்றனர்.

கு :—அழகனும், இளவலும் போனார் என இயையும். அஞ்சனக் குன்றமன்ன அழகன் என்றது இராமனை. 'தென்னழுந்தையில் மன்னி நின்ற அஞ்சனக் குன்றந்தன்னை' (7-6-5.) என்பது பெரிய திருமொழி. எஞ்சல் இல் பொன் - மாற்றுக் குறையாத பொன். இராமனைப் பொன்னிறமுள்ள போர்வையால் போர்த்தாலன்ன தோற்ற முடையவன் இலக்குவன் என்றவாறு. மகளிர் புருவத்துக்கு வில் உவமை. வெஞ்சிலைப் புருவத்தாள் என்றது சீதையை. திங்கள் தோன்றினமையால் எங்கும் நிலவு பரவியது, சீதையின் மென்மைத் தன்மைவாய்ந்த அடிகள் கடுவனத்திடை நடத்தலாற்ரு என்று சந்திரன், அவ்வனப் பரப்பெங்கும் மெத்தென்ற வெள்ளிய நூலாடையை விரித்தாற்போலிருந்தது என்றவாறு. பஞ்சு – ஆடை; 'பஞ்சாரகலல் குற்பாவையர்' (மந்திர. 54) என்பது சூளாமணி. (51)

### சீதை வருந்தாது வழி நடந்தமை

1981. சிறுநிலை மருங்கிற் கொங்கை
யேந்திய செல்வ மென்னும்
நெறியிருங் கூந்த னங்கை
சிறடி நீர்க்கொப் பூழின்
நறியன தொடர்ந்து சென்று
நடந்தன நவையு ணிங்கும்
உறுவலி யன்பி னூங்கொன்
றுண்டென வுணர்வ துண்டோ.

சிறு நிலை மருங்கின் கொங்கை
ஏந்திய செல்வம் என்னும்
நெறி இருங் கூந்தல் நங்கை
சீறடி நீர்க் கொப்பூழின்

நறியன தொடர்ந்து சென்று
நடந்தன; நவையுள் நீங்கும்
உறுவலி அன்பினூங்கு ஒன்று
உண்டு என உணர்வது உண்டோ?

பொ:—வறுமையுற்ற (இளைத்த) இடையினையும், அவ்விடை தாங்கிய நிறைந்த செல்வமாகிய தனங்களையும், நெறிந்த பெரிய கூந்தலினையும் உடைய சீதையின், நீரில் எழும் குமிழியினும் மெல்லியன வான சிறிய அடிகள், (கொடிய கானத்து) இராமனைத் தொடர்ந்து சென்று நடக்கவல்லன ஆயின; அன்பின்மேலும் குற்றம் தீர்ந்தவலிமை ஒன்று உண்டென அறிவது உண்டோ? (இல்லை.)

கு:—சிறுநிலை – வறுமை. ஒன்றோடொன்று மாறுபட்ட வறுமையும் செல்வமும் நங்கையாகிய ஓரிடத்தே உளவெனத் தோன்றத் தொடுத்த நயம் நோக்கத்தகும். நங்கை சீறடி, நீர்க்கொப்பூழின் நறியன சீறடி எனவும், அன்பினூங்கு நவையுள் நீங்கும் உறுவலி ஒன்று உண்டென வுணர்வது உண்டோ எனவும் இயையும். மெல்லிய அடிகள் கொடிய காட்டினுள் நடக்க வல்லனவாயின என்னும் சிறப்புப் பொருளை அன்பினூங்கு உறுவலி உணர்வதுண்டோ என்ற பொதுப் பொருளால் நிலையிட்டமையால் இது வேற்றுப்பொருள் வைப்பு என்னும் அணிதழுவியதாயிற்று. (52)

## இரவிடை இராமன் முதலியோர் இரண்டுயோசனை வழி கடந்தமை

1982. பரிதிவா னவனுங் கீழ்பாற்
பருவரை பற்ரு முன்னம்
திருவினா யகனுந் தென்பா
லோசனை யிரண்டு சென்ருன்
அருவிபாய் கண்ணும் புண்ணு
யழிகின்ற மனமுந் தானும்
துரிதமான் றேரிற் சென்ருன்
செய்தது சொல்ல லுற்ரும்.

பரிதி வானவனும் கீழ்பால் பருவரை பற்ரு முன்னம்
திருவின் நாயகனும் தென்பால் ஓசனை இரண்டு சென்ருன்;
அருவி பாய் கண்ணும் புண்ணுய் அழிகின்ற மனமும் தானும்
துரித மான் தேரில் சென்ருன் செய்தது சொல்லலுற்ரும்.

போ :—சூரியன் கீழ்த்திசையிலுள்ள பெரிய உதயகிரியைச் சேரு முன், இராமனும் தெற்கே இரண்டு யோசனை கடந்தான். அருவி போல நீரைப் பெருக்குகின்ற கண்களும் புண்பட்டு உலைகின்ற மனமும் தானுமாக விரைந்த நடையையுடைய குதிரைகள் பூட்டிய தேரில் அயோத்திநோக்கிச் சென்ற சுமந்திரன் செய்ததனைச் சொல்லுவோம்.

கு :—பரிதிவானவன் - சூரியன். திருவின் நாயகன் - இராமன். துரிதம் - விரைவு. மான் - குதிரை. (53)

சுமந்திரன் செய்தி சொல்லக்கேட்ட வசிட்டன் சொல்லும் செயலும் 1983—1984

**1983.** கடிகையோ ரிரண்டு மூன்றிற்
கடிமதி லயோத்தி கண்டான்
அடியிணை தொழுதா னாதி
முனிவனை யவனு முற்ற
படியெலாங் கேட்டு நெஞ்சிற்
பருவர லுழந்தான் முன்னே
முடிவெலா முணர்ந்தா னந்தோ
முடிந்தனன் மன்ன னென்றான்.

கடிகை ஓர் இரண்டு மூன்றில்
கடி மதில் அயோத்தி கண்டான்,
அடியிணை தொழுதான், ஆதி
முனிவனை; அவனும் உற்ற
படி எலாம் கேட்டு, நெஞ்சில்
பருவரல் உழந்தான்; முன்னே
முடிவு எலாம் உணர்ந்தான் அந்தோ
முடிந்தனன் மன்னன் என்றான்.

போ :—(தேரில் சென்ற சுமந்திரன்,) ஐந்து நாழிகைப் பொழுதில் காவலமைந்த மதிலையுடைய அயோத்திநகரை அடைந்து, பழை யோனான வசிட்டமுனிவனை வணங்கினான்; முன்னே முடிவனைத்தும் தெரிந்த அம்முனிவனும், எல்லாவற்றையும் நிகழ்ந்தபடியே சுமந்திரன் சொல்லக் கேட்டு, உள்ளம் வருந்தி, 'ஐயோ! அரசன் இறந்துபட்டான்' என்று கூறினவனாய்.

கு :—இதுவும் பின்வரும் செய்யுளும் ஒரு தொடர். 'தேரில் சென்றான்' என்னும் எழுவாய் முன் செய்யுளிலிருந்து வருவித்துரைக்க

லாயிற்று. (தேரில் சென்றான்), கண்டான், தொழுதான் என்க. 'கடிகை ஓர் இரண்டு மூன்றில்' என்பதற்கு ஆறு நாழிகைப் பொழுதில் என்றும் பொருள் கூறலாம். இவ்வாறு இரு பொருள்பட அமைத்துச் செல்வது இவர் இயல்பு. "இரண்டு மூன்று நாள் விண்ணவர்க்காக்கிய முனிவன் வேள்வி" (பால. 459) என்றார் முன்னும். சுமந்திரன் மூன்றுநாள் மாலை அயோத்தியை அடைந்தான் என்று வான்மீகம் (அயோத்தியா காண்டம் ஸர்க்கம் 57, சுலோகம் 5.) கூறுகிறது. ஆதிமுனிவன் என்றது வசிட்டமுனிவனை. உற்றபடி எல்லாம் என்றது இராமன் வனத்திற்புக்கது முதலியவற்றை. முடிவு - இன்னது இன்னவாறு முடியும் என்ற துணிவு; அதனை முன்னே அறிதலாவது தன் ஞானக்கண்ணால் அது நிகழுமுன்னே அறிதல். அந்தோ என்பது இரக்கம் புலப்பட நின்றது. துணிவுபற்றி முடிந்தான் என இறந்தகாலத்தாற் கூறினர். (54)

**1984.** நின்றுயர் பழியை யஞ்சி
நேர்ந்திலன் றடுக்க வள்ளல்
ஒன்றுநா னுரைத்த நோக்கான்
றருமத்துக் குறுதி பார்ப்பான்
வென்றவ ருளரோ மேலை
விதியினை யென்று விம்மாப்
பொன்றிணி மன்னன் கோயிற்
சுமந்திர னோடும் புக்கான்.

"நின்று உயர் பழியை அஞ்சி
நேர்ந்திலன் தடுக்க வள்ளல்;
ஒன்றும் நான் உரைத்த நோக்கான்
தருமத்துக்கு உறுதி பார்ப்பான்;
வென்றவர் உளரோ மேலை
விதியினை ?" என்று விம்மாப்
பொன் திணி மன்னன் கோயில்
சுமந்திரனோடும் புக்கான்.

பொ:—(ஆதிமுனிவன்) பெருங்கொடையாளியான தசரதன், '(தான் இராமன் வனம் புகாது தடுத்தால் வாய்மை தவறிய குற்றம் தன்பால்) நிலைத்தோங்கிய பழியாய் விளைதலை அஞ்சித் தடுக்க முற்படவில்லை; அறம் நிலைபெறுதலையே நோக்குபவனான இராமன், யான் (அவன் வனம்புகலாகாது என்று) கூறிய ஒன்றையும் கருதவில்லை; தொன்று

தொட்டு வருகின்ற ஊழை வென்றவர் இல்லை' என்று துன்புற்றுப் பொன் செறிந்த தசரதன் மாளிகையில் சுமந்திரனோடும் புகுந்தான்.

கு :—ஆதிமுனிவன், புக்கான் என இயையும். வள்ளல் என்றது தசரதனை; 'தள்ளரும் பெரும் புகழ்த் தயரதப் பெயர் வள்ளல்' (பால-173) என்றார் முன்னும். தருமத்துக்கு உறுதிபார்ப்பானாதலின் நான் உரைத்த ஒன்றும் நோக்கான் என்றார். தருமத்துக் குறுதிபார்ப் பான் என்பது ஏதுவையுட்கொண்டு நின்ற பெயர். (55)

### சுமந்திரன் தேர்வரவு கண்ட உழையர் நிலை

**1985.** தேர்கொண்டு வள்ளல் வந்தா
னென்றுதஞ் சிந்தை யுந்த
ஊர்கொண்ட திங்க ளென்ன
மன்னனை யுழையர் சுற்றிக்
கார்கொண்ட மேனி யானைக்
கண்டிலர் கண்ணில் வற்றா
நீர்கொண்ட நெடுந்தேர்ப் பாக
னிலைகண்டே நிலையிற் றீர்ந்தார்.

'தேர் கொண்டு வள்ளல் வந்தான்'
என்று தம் சிந்தை உந்த
ஊர் கொண்ட திங்கள் என்ன
மன்னனை உழையர் சுற்றிக்
கார் கொண்ட மேனியானைக்
கண்டிலர்; கண்ணில் வற்றா
நீர் கொண்ட நெடுந் தேர்ப்பாகன்
நிலை கண்டே நிலையில் தீர்ந்தார்.

பொ :—(சுமந்திரன் தேரைக்கண்டு) இராமன் தேரை ஊர்தியாகக் கொண்டு மீண்டு வந்தான் என்று (மகிழ்ந்து அவனைக் காணுமாறு) தம் மனம் செலுத்த, அமைச்சர் முதலியோர், பரிவேடம் சந்திரனைச் சூழ்ந்தாற்போல அரசனைச் சூழ்ந்து, அங்கே கரியநிறமுடைய இராமனைக் காணாராய்க் கண்களில் வற்றாத நீர்ப்பெருக்கினையுடைய பெரிய தேர்ப்பாகனான சுமந்திரனுடைய அவலநிலைகண்டு நிலை யழிந்தார்.

கு :—வள்ளல் என்றதும் கார்கொண்ட மேனியான் என்றதும் இராமனை. ஊர் - பரிவேடம். உழையர் - அரசனை அடுத்திருக்கும் அமைச்சர் முதலியோர். நிலையில் தீர்தலாவது இராமன் வந்தா னென்று மகிழ்ந்த நிலையினின்று தவிர்தல். தீர்தல் - கெடுதல். (56)

தசரதன் இராமன் வந்தானோ? எனல்

1986. இரதம்வந் துற்ற தென்றாங்
கியாவரு மியம்ப லோடும்
வரதன்வந் துற்றா னென்ன
மன்னனு மயக்கந் தீர்ந்தான்
புரைதபு கமல நாட்டம்
பொருக்கென விழித்து நோக்கி
விரதமா தவனைக் கண்டான்
வீரன்வந் தானோ வென்றான்.

'இரதம் வந்துற்றது' என்று ஆங்கு
யாவரும் இயம்பலோடும்,
'வரதன் வந்துற்றான்' என்ன
மன்னனும் மயக்கம் தீர்ந்தான்;
புரை தபு கமல நாட்டம்
பொருக்கென விழித்து நோக்கி,
விரத மாதவனைக் கண்டான்,
'வீரன் வந்தானோ' என்றான்,

போ :—(இராமன் ஏறிச்சென்ற) 'தேர்வந்து விட்டது' என்று எல்லா ரும் கூறிய அளவில், தசரதனும் இராமன் வந்துவிட்டான் என்று மயக்கம் நீங்கியவனாய்க் குற்றமற்ற தாமரை மலர்போன்ற கண்களை விரைய விழித்துப் பார்த்து, விரதத்தை மேற்கொண்ட பெரிய தவத்தின னை வசிட்டனைக் கண்டு, 'இராமன் வந்தானோ?' என்று வினவினான்.

கு :—வரதன், வீரன் என்பவை இராமனைச் சுட்டி நின்றன. (57)

தசரதன் தளர்தலும் வசிட்டன் அகலலும்

1987. இல்லையென் றுரைக்க லாற்றா
னேங்கினன் முனிவ னின்றான்
நல்லவன் முகமே நம்பி
நடந்தன னென்னு மாற்றம்

சொல்லலு மரசன் சோர்ந்தான்
றுயருறு முனிவ னுனிவ்
அல்லல் காண்கில்லே னென்று
வாங்குநின் றகலப் போனான்.

'இல்லை' என்று உரைக்க லாற்றான்,
ஏங்கினன் முனிவன் நின்றான்;
நல்லவன் முகமே நம்பி
நடந்தனன் என்னும் மாற்றம்
சொல்லலும், அரசன் சோர்ந்தான்;
துயர் உறும் முனிவன், 'நான் இவ்
அல்லல் காண்கில்லேன்' என்று
ஆங்கு நின்று அகலப் போனான்.

பொ:—முனிவன், (வீரன் வந்தானோ? என்ற தசரதன் வினாவுக்கு) 'வீரன் வரவில்லை' என்று மறுமொழி கூறாது நின்றான்; தூயவனாகிய அம்முனிவன் முகமே இராமன் வனம் புக்கனன் என்னும் மறுமொழியினைச் சொல்லுதலும், தசரதன் ஓய்வுற்றான்; அதைக்கண்டு துன்புற்ற அம்முனிவன், இந்தத் துன்பத்தை கண்டு, 'யான் பொறுத்திருக்குமாற்றல் இல்லேன்' என்று அவ்விடம் விட்டு விலகிச்சென்றான்.

கு:—முனிவன், நல்லவன் என்பவை வசிட்டனைச் சுட்டின. (58)

இராமன் வனம்புக்கதறிந்து தசரதன் வான்புக்கது 1988-1989

1988. நாயகன் பின்னுந் தன்றேர்ப்
பாகனை நோக்கி நம்பி
சேயனோ வணிய னோவென்
றுரைத்தலுந் தேர்வ லானும்
வேயுயர் கானந் தானுந்
தம்பியு மிதிலைப் பொன்னும்
போயின னென்று னென்ற
போழ்தத்தே யாவி போனான்.

நாயகன் பின்னும் தன் தேர்ப் பாகனை நோக்கி, 'நம்பி
சேயனோ? அணியனோ?' என்று உரைத்தலும், தேர்வலானும்,
'வேய் உயர் கானம் தானும் தம்பியும் மிதிலைப் பொன்னும்
போயினன்' என்றான்; என்ற போழ்தத்தே ஆவி போனான்.

பொ :—தசரதன் மறுபடியும் தன்னுடைய தேர்ப்பாகனை நோக்கி, 'இராமன் அணிமையில் உள்ளானோ? நெடுந்தூரத்தில் உள்ளானோ?' என்று வினவலும், சுமந்திரனும், மூங்கில்கள் வளர்ந்துள்ள பெருங் காட்டில், தானும் தம்பியும் சீதையும் (ஆகப்) போயினன் என்றான்; அவ்வாறு சொன்ன அளவிலே தசரதன் உயிர் நீங்கினான்.

கு:—நாயகன் என்றது தசரதனை. தேர்ப்பாகன் தேர்வலான் என்றது சுமந்திரனை. தானும் தம்பியும் மிதிலைப்பொன்னும் போயினான் என்பது 'தானுந் தேரும் பாகனும் வந்தென் நலனுண்டான்' என்பதுபோல ஒருமை முடிபேற்றது. (59)

**1989.** இந்திரன் முதல்வ ராய
கடவுளர் யாரு மீண்டிச்
சந்திர னனைய தாங்கோர்
மானத்திற் றலையிற் றாங்கி
வந்தன னெந்தை தந்தை
யெனமனங் களித்து வள்ளல்
உந்தியா னுலகி னும்பர்
மீள்கிலா வுலகத் துய்த்தார்.

இந்திரன் முதல்வராய
கடவுளர் யாரும் ஈண்டிச்
சந்திரன் அனையது ஆங்கு ஓர்
மானத்தில் தலையில் தாங்கி,
'வந்தனன் எந்தை தந்தை'
என மனம் களித்து, வள்ளல்
உந்தியான் உலகின் உம்பர்
மீள்கிலா உலகத்து உய்த்தார்.

பொ :—இந்திரனைத் தலைவராகக்கொண்ட தேவர்கள் யாவரும் கூடி, 'எங்கள் தந்தைக்குத் தந்தை வந்தான்' என்று மனம் உவந்து, அவனைச் சந்திரனையொத்த ஒரு விமானத்தில் தங்கள் தலையிற் சுமந்து, திருமாலின் உந்திக் கமலத்து வீற்றிருக்கும் பிரமனுடைய சத்தியலோகத்தின் மேல் உள்ள, அடைந்தவர் மீண்டும் பிறவிக்கண் வருதல் இல்லாத வீட்டுலகத்திற் சேர்த்தார்கள்.

கு :—மானம் - விமானம்; முதற்குறை. ஒளியுடைமையாலும் விண்மிசைச் சேறலானும் விமானத்துக்குச் சந்திரன் உவமை.

இராமன் தேவர்குறை தீர்க்கவந்தவனுதலின் அவனைத் தேவர் கூற்றில் எந்தை என்ருர். எந்தை தந்தை என்றது தசரதனை. எல்லாவுலகங் களையும் துயர் தீர்த்துக் காப்பவனுதலின் வள்ளல் என்ருர். உந்தியான்–திருமாலின் உந்திக் கமலத்தில் உள்ளவனுன பிரமன். (60)

இச்செய்யுள், தேவர் தசரதனை வீட்டுலகிலே சேர்த்தமை பேசு கிறது. தசரதன் வீடுற்றமை வான்மீகத்திற் பேசப்படவில்லை. வீட் டுலகு சென்றவர் மீட்டும் வருவதில்லை என்பது நூற்றுணிபு. யுத்த காண்டத்திலே தசரதன் மீண்டும் வந்தமை பேசப்படுகிறது. மேலும் வீட்டுலகு செல்வோரை அழைத்துச் செல்வோர் ஆதிவாகிகர்கள் என்று அர்ச்சிராதி கதி கூறும். தசரதன் ஆதிவாகிகர்களால் அழைத்துச் செல்லப்படவில்லை. இந்திரன் முதலிய தேவர்கள் தசரத னைச் சொர்க்கலோகத்துக்கு அழைத்துச் சென்றனர் என்று கொள்ள இப்பாட்டின் சொல்லமைதி இடம் தரவில்லை. இப்பாட்டு இல்லாமலே இதன் முன் பின் பாடல்கள் இசைந்து பொருளமைதி யுடையவாயு முள்ளன. ஆதலால் இச்செய்யுள் இடைச்செருகற் பாடலாயிருக்குமோ என்று ஐயம் எழுகிறது. ஆயினும், எல்லாச் சுவடிகளிலும் இப் பாடல் காணப்படுதலால் மூலத்தொடு சேர்த்து அச்சிடப்பட்டது.

45, 52 என்னும் குறியீடுள்ள பிரதியில் இதன் பின் உளதாகக் காணப்படும் மிகைச்செய்யுள் வருமாறு:—

1989 (a) துந்துமி முழங்கத் தேவர் தூய்மலர் பொழிந்து வாழ்த்திச்
சந்திர வதனத் தேயும் அரம்பையர் தழுவத் தங்கள்
முந்து தொல் குலத்து ளோரும் முக்கணுன் கணமும் சூழ
அந்தரத்து அரசன் சென்ருன் ஆனதேர்ப் பாகன் சொல்லால்.

## கோசலை வருந்திப் புலம்புதல் 1990-1997

**1990.** உயிர்ப்பிலன் றுடிப்பு மில்ல
னென்றுணர்ந் துருவந் தீண்டி
அயிர்த்தன ளேக்கி மன்னற்
காருயி ரின்மை தேறி
மயிற்குல மனைய நங்கை
கோசலை மறுகி வீழ்ந்தாள்
வெயிற்சுடு கோடை தன்னி
லென்பிலா வுயிரின் வேவாள்.

உயிர்ப்பு இலன், துடிப்பும் இல்லன்,
என்று உணர்ந்து, உருவம் தீண்டி,
அயிர்த்தனள் நோக்கி, மன்னற்கு
ஆர் உயிர் இன்மை தேறி,
மயில் குலம் அனைய நங்கை
கோசலை மறுகி வீழ்ந்தாள் ;
வெயில் சுடு கோடைதன்னில்
என்பு இ(ல்)லா உயிரின் வேவாள்.

பொ :—சிறந்த மயில்போலும் சாயலையுடைய பெண்டிருள் உயர்ந்தவளான கோசலை, தசரதன் நிலை கண்டு, அவன் உயிருடையனோ அல்லனோ என்று ஐயப்பட்டு, அவன் உடலைத் தொட்டு நோக்கி, 'மூச்சுக்காற்று இல்லை; நாடி துடித்தலும் இல்லை' என்று தெரிந்து, அவனுடலில் உயிரில்லாமை தெளிந்து, வெயில் சுடுகின்ற முதுவேனிற் காலத்தில் என்பில்லாத உடலையுடைய உயிர்போல வேகின்றவளாய், மனங்கலங்கி விழுந்தாள்.

கு :—மயில் சாயலால் மகளிர்க்கு உவமை. உயிர்ப்பு - மூச்சுக் காற்று. துடிப்பு-நாடிகளின் நடை. உருவம் தீண்டி உயிர் இன்மை தெளிதலாவது மூக்கிற் கைவைத்து மூச்சுக்காற்று இல்லாமை அறிதலும் நெஞ்சிற் கைவைத்து இதயத்துடிப்பு இன்மையறிதலும் கையில் விரலால் அழுத்தி நாடி துடியாமை அறிதலும் ஆம். குல மயில் அனைய நங்கை கோசலை, அயிர்த்தனள், உருவம் தீண்டி நோக்கி, உயிர்ப்பிலன் துடிப்புமில்லன், என்று அறிந்து, மன்னற்கு ஆருயிரின்மைதேறி, கோடைதன்னில் என்பிலா உயிரின் வேவாள் மறுகி வீழ்ந்தாள் என இயையும். என்பு இல்லா உயிர் - புழு. வெயிற்சுடு கோடைதன்னில் என்பிலா உயிரின் வேவாள் என்பது, 'என்பிலதனை வெயில்போலக் காயும்' (77) என்னும் திருக்குறளடியினைத் தழுவியமைந்தது. சுமந்திரனால் இராமன் முதலிய மூவரும் வனம்புக்கதறிந்த தசரதன் உயிர்பிரிந்த நிலையில், கோசலையும் சுமித்திரையும் இராமன் பிரிவால் சோகித்து உணர்வழிந்து உறங்கிவிட்டார்கள் என்றும், காலையில் துயிலெடைமங்கலம் பாடுவோர் தசரதன் மாளிகையடைந்து வீணை முதலிய இசைக் கருவிகளுடன் பாடியும் அவன் துயிலெழாமையால் கலக்கமுற, அதனை அறிந்த அந்தப்புரமகளிர் அரசன் பள்ளியறையிற் புக்கு அரசன் நிலைகண்டு கதறியழுதனர் என்றும், அவ்வழுகையொலியால் கோசலையும் சுமித்திரையும் கண் விழித்து மிகவும் வருந்தினர் என்றும் வான்மீகம் கூறும் (கல்பாதிப் பதிப்பு - சருக்கம், 64, 65 பார்க்க.) (61)

1991. இருந்தவந் தணனோ டெல்லா
மீன்றவன் றன்னை யீனப்
பெருந்தவஞ் செய்த நங்கை
கணவனிற் பிரிந்து தெய்வ
மருந்திழந் தவரின் விம்மி
மணிபிரி யரவின் மாழ்கி
அருந்துணை பிரிந்த வன்றிற்
பெடையென வரற்ற லுற்றாள்.

இருந்த அந்தணனோடு எல்லாம்
ஈன்றவன்றன்னை ஈனப்
பெருந் தவம் செய்த நங்கை,
கணவனில் பிரிந்து, தெய்வ
மருந்து இழந்தவரின் விம்மி,
மணி பிரி அரவின் மாழ்கி,
அருந்துணை பிரிந்த அன்றில்
பெடை என அரற்றலுற்றாள்.

பொ :—உந்திக்கமலத்தில் தங்கிய பிரமனோடு மற்றும் எல்லா வற்றையும் பெற்றவனாகிய திருமாலை (மகனாக)ப் பெறப் பெரிய தவத் தைச் செய்த கோசலை, நாயகனைப் பிரிந்து, தெய்வத்தன்மையுள்ள அமுதத்தைப் பெற்று இழந்தவரைப் போல வருந்தி, இரத்தினத்தை இழந்த பாம்புபோல மயங்கி, அரிய துணையாகிய சேவலைப் பிரிந்த அன்றிற்பெடைபோல அழுவாளாயினள்.

கு :—(உந்திக் கமலத்தில்) இருந்த அந்தணன் என்க. 'மலர் இருந்த அந்தணனும்' (குகப்படலம் 32) என்பர் பின்னும். 'இருந்த அந்தணனோடெல்லாம் ஈன்றவன்றன்னை யீனப் பெருந்தவம் செய்த நங்கை' என்பதனோடு, 'மூவுலகு மீன்றானை முன் ஈன்றானைப் பெற்று... ......பெரியாள்' (குகப்படலம் 65) என்று ஆசிரியர்தாமே பின் கூறு வதும் நோக்கத்தகும். உடலினின்று பிரிந்தவுயிரை மீட்டுத் தருத லின், 'தெய்வமருந்து' என்றார். மருந்து – அமுதம். 'வீயுமுயிர் மீளும் மருந்து' (சுந்தர-558) என்பர் பின்னும். மாழ்குதல் – மயங்கு தல். 'மணிபிரி அரவின் மாழ்கி' என்பது, 'நன்மணியிழந்த நாகர் நல்லிளம் படியர்', 'அருமணி யிழந்தொர் நாக மலமருகின்றதொத் தான்' (சீவகசிந்தாமணி-1098, 1508), 'அருமணியிழந்த நாகம்போன் றதும்' (சிலப்பதிகாரம் 13.58), 'நன்மணி யிழந்த நாகம்போன்றவள்' 'நன்மணியிழந்தநாகம்போன்று' (மணிமேகலை - 7. 131, 25. 195) என்னும் பழந்தமிழ் நூற்றொடர்களை நினைப்பூட்டுகிறது. நாயகனைப்

பிரிந்து வருந்தும் நிலையில் கோசலைக்கு உவமையாக மணி பிரி அரவு கூறப்பட்டது; 'இழந்த மணி புற்றரவு எதிர்ந்ததெனலானுள்' (சுந்தா - 554) எனப் பின்னர் இராமனுடைய ஆழிபெற்று மகிழ்ந்த நிலையில் சீதாபிராட்டிக்கு உவமை கூறப்பட்டதும் காண்க. (62)

1992. தானே தானே தஞ்ச
★ மிலாதான் றகவில்லான்
போனுன் போனு னெங்களை
நீத்திப் பொழுதென்னு
வானீர் சுண்டி மண்ணற
வற்றி மறுகுற்ற
மீனே யென்ன மெய்தடு
மாறி விழுகின்ருள்.

'தானே தானே தஞ்சம் இலாதான் தகவு இல்லான்
போனுன் போனுன் எங்களை நீத்து இப்பொழுது' என்னு,
வான் நீர் சுண்டி, மண் அற வற்றி, மறுகுற்ற
மீனே என்ன, மெய் தடுமாறி விழுகின்ருள்.

பொ:—(நங்கை) தாழ்வில்லாதவனை அரசன், எங்களிடம் கருணையற்றவனுய் எங்களைக் கைவிட்டு, இப்பொழுது தானே தனியாகப் போயினுன் போயினுன் என்று, மழைநீர் குன்றி மண்ணிலுள்ள (தான் வாழுமிடமான) நீர்நிலையும் முழுதும் வற்றுதலால் துடிக்கின்ற மீன் போல உடல் நிலை கெட்டு விழுகின்றவளாயினள்.

கு:—தானே தானே போனுன் என்க. தானேதானே என்பவற்றுள் முன்னது நோய் முதலிய காரணத்தானன்றி என்பதுபட நின்றது; பின்னது தனியாக என்பதுபட நின்றது. தஞ்சம் - தாழ்வு; (பிங்கலந்தை). தகவு - அருள்; (சூடாமணி நிகண்டு). போனுன் போனுன் என்பது அவலம்பற்றி வந்த அடுக்கு. சுண்டி, வற்றி என்பவை ஏதுப் பொருளிற் பயின்றன. வான்நீர் - மழைநீர். சுண்டுதல் - குறைதல். மண் என்றது ஆகுபெயராய் நிலத்தில் உள்ள குளம் ஏரி முதலியவற்றிலுள்ள நீரை உணர்த்திநின்றது. மீன் செழித்து வாழ்தற்குத் தரையிலுள்ள நீரோடு மழைநீரும் வேண்டுமென்பது, 'விசும்பிற் றுளிவீழி னல்லால்மற் றுங்கே பசும்புற் றலைகாண் பரிது', 'நெடுங்கடலுந் தன்னீர்மை குன்றும் தடிந் தெழிலி தானல்கா தாகிவிடின்' என்னும் திருக்குறள்களாலும் தன்னீர்மை குன்றும் என்பதற்கு, "நீர்வாழுயிர்கள் பிறவாமையும் மணி முதலாயின படாமையுமாம்" என்ற பரிமேலழகர் விளக்கவுரையாலும் புலனுகும். மீன் உயிர்

தாங்கியிருத்தற்கு, அது தங்கும் தரை நீரும், அது செழித்துப் பல்கி வாழ்தற்கு மழைநீரும் இன்றியமையாதவை. அவ்விரண்டு நீரும் வற்றிய நிலையில் மீன் இறந்துபடுதல் சொல்லவேண்டா. மீன் போல் பவளான கோசலையும் தன் உயிர் தாங்கியிருத்தற்குக் காரணமாய்த் தரைநீர் போல்பவனான தசரதனையும் தானும் தன் கிளையும் செழித்துப் பல்கி வாழ்தற்குக் காரணமாய் வானீர் போல்பவனான இராமனையும் பிரிந்தமையால் மிகவும் கலங்கி வருந்துவாளாயினள் என்றவாறு. 'தகைவில்லான்' என்ற பாடம் கொண்டு எவருக்கும் எத்தீமையும் வர வொட்டாது தகையவல்ல வில்லையுடையான் என்று பொருள் கூறலும் அமையும். தகைதல் – தடுத்தல். நங்கை விழுகின்றாள் என எழுவாய் முன்பாட்டிலிருந்து வருவித்துரைக்க. (63)

**1993.** ஒன்றா நன்னாட் டுய்க்குவ
ரிந்நாட் டுயிர்காப்பார்
அன்றே மக்கட் பெற்றுயிர்
வாழ்வார்க் கவமுண்டே
இன்றே வந்தீண் டஞ்ச
லெனாதெம் மகனென்பான்
கொன்றா னன்றோ தந்தையை
யென்றாள் குலைகின்றாள்.

'ஒன்றா நல் நாட்டு உய்க்குவர்
இந்நாட்டு உயிர் காப்பார்
அன்றே! மக்கள் பெற்று உயிர்
வாழ்வார்க்கு அவம் உண்டே?
இன்றே வந்து ஈண்டு 'அஞ்சல்'
எனாது எம் மகன் என்பான்
கொன்றான் நன்றோ தந்தையை ?'
என்றாள் குலைகின்றாள்.

பொ :—தசரதன் நிலைகண்டு நிலைதடுமாறுகின்ற கோசலை, பெற்றோரை (வாழ்நாள்முடிவில்) இணையில்லாத நல்ல உலகத்திலே சேர்விப்பவரும், வாழுநாளில் இவ்வுலகத்தில் உயிரைப் பேணுபவர்களும் அல்லவா மக்களாவர்; அம் மக்களைப் பெற்று உயிர்வாழ்பவர்க்குக் கேடு உண்டோ? (இல்லை); அவ்வாறிருந்தும், எங்கள் மகனென்று சொல்லப் படுகின்ற இராமன், இப்பொழுதே இங்கு வந்து (நான் உன்னைப் பிரியேன்) 'அஞ்ச வேண்டா' என்று சொல்லாமல், தந்தையைக் கொலை செய்தானே! இது நல்லதாகுமோ? என்று கூறுவாளாயினள்.

கு :—ஒன்ரு நல் நாடு - இணையில்லாத நல்ல உலகு; ‘ஒன்ரு வுயர்ந்த புகழ்’ (233) என்னும் திருக்குறட் பகுதிக்குப் பரிமேலழகர் வரைந்த உரை இங்கு நோக்கத்தகும். நன்ருடு இந்நாடு என்பவற்றுள் நாடு உலகம் என்னும் பொருளில் பயின்றது; ‘புலத்தலிற் புத்தேள் நாடு உண்டோ’ (1323) என்னும் திருக்குறளில் நாடு உலகு என்னும் பொருளிற் பயின்றமை காணலாம். மக்கள் என்பது மீட்டும் கூட்டப் பட்டது. அவம் - கேடு. ‘அவஞ் செய்வார் ஆசையுட்பட்டு’ (226) என்பது திருக்குறள். இனி ஒன்ரு என்பதற்கு ஒரு வார்த்தையாகச் சொல்லின் எனவும், ஒருதலையாக எனவும் பொருள் கூறலும் ஆம். (64)

**1994.** நோயும் மின்றி நோன்கதிர்
வாள்வே லிவையின்றி
மாயுஞ் செல்வ மக்களி
ஞலோ மறமன்னன்
காயும் புள்ளிக் கர்க்கட
நாகங் கனிவாழை
வேயும் போன்ரு னென்று
மயங்கா விழுகின்ருள்.

நோயும் இன்றி, நோன் கதிர் வாள் வேல் இவை இன்றி,
மாயும் செல்வ மக்களிஞலோ மற மன்னன்;
‘காயும் புள்ளிக் கர்க்கடம் நாகம் கனி வாழை
வேயும் போன்ருன்’ என்று மயங்கா விழுகின்ருள்.

பொ:—(கோசலை) வலிமைவாய்ந்த தசரதமன்னன், “நோயால் இன்றியும், வலிய, ஒளி பொருந்திய வாளும் வேலுமாகிய படைக் கலங்களால் இன்றியும், செல்வ மக்களிஞலோ மாய்வான்? இஃதென்ன விளைவு? (இவ்வாறு மாய்தலால் இம்மன்னன்), வருத்து கின்ற புள்ளிகளையுடைய நண்டும், பாம்பும், கனிகளொடு கூடிய வாழையும் மூங்கிலும் (ஆகிய தம் கருவாலே தாம் மாயும் இவற்றைப்) போன்ருன்” என்று மயங்கி விழுவாளாயினள்.

கு :—கோசலை என்னும் எழுவாய் வருவித்துரைக்கலாயிற்று. உலகத்து மக்கள் பெரும்பாலும் மூப்பாலும் நோயாலும் இறந்து படுவது இயல்பு. வீரமன்னர் பெரும்பாலும் போரில் பகைவர் வேலாலும் வாளாலும் தாக்கப்பட்டு இறந்துபடுவர்; இவ்வாறு

இறத்தல் அரசர்க்குப் பெருமை தருவது. இவ்விரண்டு வகையாலு மின்றித் தசரதன் தன் அருமை மைந்தரால் இறந்துபட்டது என்ன பொருந்தாமை என்றவாறு. நோயாலும் இன்றி என ஆல் உருபும் வாள் வேல் இவற்றாலும் இன்றி என ஆல் உருபும் உம்மையும் விரிக்க. நோன்மை - வலிமை. கதிர் - ஒளி. மன்னன், நோயும் இன்றி, வாள் வேல் இவையின்றி, செல்வமக்களினலோ மாயும் என இயையும். கர்க்கடம் - நண்டு. நாகம் - பாம்பு. கர்க்கடம், நாகம், வாழை, மூங்கில் என்பவை தம் கருவாலே தாம் சாதல், 'புத்தன்தாய் நண்டிப்பி வாழை புனமூங்கில், கத்தும் விரியன் கடுஞ்சிலந்தி— இத்தனையும், வேலாலும் வாளாலும் இன்றியே தாம் கொண்ட சூலாலே தம் உயிர்க்குச் சோர்வு" (நீலகேசி யுரை மேற்கோள்), "நண்டு சிப்பி வேய் கதலி நாசமுறுங் காலத்துக் கொண்ட கரு அளிக்குங் கொள்கை போல்" (நல்வழி - 36) என்னும் பாடல்களாலும் புலனாகும்.
(65)

## கைகேயியை நோக்கிக் கூறுதல்

1995. வடித்தாழ் கூந்தற் கேகயன்
மாதே மதியாலே
பிடித்தாய் வையம் பெற்றனை
பேரா வரமின்னே
முடித்தா யன்றே மந்திர
மென்றாண் முகில்வாய்மின்
துடித்தா லென்ன மன்னவன்
மார்பிற் றுவள்கின்றாள்.

'வடித் தாழ் கூந்தல் கேகயன்
மாதே! மதியாலே
பிடித்தாய் வையம், பெற்றனை
பேரா வரம், இன்னே
முடித்தாயன்றே மந்திரம்'
என்றாள்; முகில்வாய் மின்
துடித்தால் என்ன மன்னவன்
மார்பில் துவள்கின்றாள்.

பொ: —மேகத்தில் மின் துடித்தாற்போலத் தசரதன் மார்பில் துடிக்கின்றவளான கோசலை (கைகேயியை நோக்கி) நீண்டு தாழ்ந்த கூந்தலையுடைய கேகயன் மகளே! உன் அறிவால் பிறழாத வரம்பெற்று, (அதனால்) உலகையும் கைப்பற்றி, இப்பொழுதே உன் சூழ்ச்சியை நிறைவேற்றிக்கொண்டாயல்லவா! என்று (இடித்துக்) கூறுவாளாயினள்.

கு: —துவள்கின்றாள், மாதே! மதியால் வரம்பெற்று வையம் பிடித்து மந்திரம் முடித்தாயன்றே என்றாள் என இயையும். தசரதன் மார்புக்கு முகிலும் அம்மார்பில் துவளும் கோசலைக்கு முகிலில் துடிக்கும் மின்னலும் உவமை. துவளுதல் - துடித்தல்; 'இடியுறத்துவளுவதென்னு மின்னலன்' (1954) என்பதும் காண்க. வடி - நீட்சி. எதுகை நோக்கி வடித்தாழ் கூந்தல் எனத் தகரம் விரிந்துநின்றது. பிடித்தாய் பெற்றனை என்பவை எச்சப்பொருளிற் பயின்றன. பேர்தல் - பிறழ்தல்; 'பெரியன கெண்டைக்குலம் இவையோ வந்து பேர்கின்றவே' (திருவிருத்தம் – 11) என்பது அருளிச்செயல். மந்திரம் - சூழ்ச்சி. வடித்தாழ்.........முடித்தாயன்றே மந்திரம் என்பது கோசலை குறிப்பால் கைகேயியை இடித்துக் கூறுங் கூற்றாய் அமைந்தது. (66)

### இறந்த தசரதனை நோக்கிக் கூறியது 1996–1997

**1996.** அருந்தே ரானைச் சம்பர
னைப்பண் டமர்வென்றாய்
இருந்தார் வானோர் நின்னரு
ளாலே யினிதன்னார்
விருந்தா கின்றா யென்றனள்
வேழத் தரசொன்றைப்
பெருந்தா ளன்பிற் சூழ்பிடி
யென்னப் பிரிவுற்றாள்.

'அருந்தேரானைச் சம்பரனைப்
பண்டு அமர் வென்றாய்!
இருந்தார் வானோர் நின்
அருளாலே இனிது, அன்னார்

விருந்து ஆகின்றாய்! என்றனள் ;
வேழத்து அரசு ஒன்றைப்
பெருந்தாள் அன்பின் சூழ் பிடி
என்னப் பிரிவுற்றாள்.

போ:—தயரதன் இறந்தமையால் அவனிற் பிரிந்தவளான கோசலை, அரசயானை ஒன்றின் பெரிய காலை அன்பினால் சூழும் பிடிபோல நின்று (தசரதனை நோக்கி) 'பிறரால் வெல்லுதற்கரிய தேராளியாகிய சம்பரனை முற்காலத்துப் போரில் வென்றவனே! தேவர்கள் உன் கருணையால் சுகமாக நெடிது வாழ்ந்தனர்; நீ இன்று அவர்கள் விருந்தினனாகின்றாய்' என்று கூறினள்.

கு :—தசரதனுக்கு அரச வேழமும் அவனைச் சூழ்வருகின்ற கோசலைக்கு அரச வேழத்தைச் சூழ்வருகின்ற பிடியும் உவமை. தாழ்தல் - தழைத்தல். சூழ்தல் - சுற்றிவருதல். பகைவரால் வெல்ல முடியாத தேராதலின் அருந்தேர் என்றார். இருத்தல் - நெடிது வாழ்தல். (67)

1997. வேள்விச் செல்வங் துய்த்திகொன்
மெய்ம்மைத் துணையின்மை
சூழ்விற் செல்வங் துய்த்திகொ
றோலா மனுநூலின்
வாழ்விற் செல்வங் துய்த்திகொன்
மன்னென் றனள்வானோர்
கேள்விச் செல்வங் துய்க்க
வயிற்றோர் கிளை தந்தாள்.

'வேள்விச் செல்வம் துய்த்திகொல்!
மெய்ம்மைத் துணையின்மை
சூழ்விற் செல்வம் துய்த்தி கொல்?
தோலா மனு நூலின்
வாழ்விற் செல்வம் துய்த்தி கொல்!
மன்' என்றனள், வானோர்,
கேள்விச் செல்வம் துய்க்க
வயிற்று ஓர் கிளை தந்தாள்.

போ :தேவர்கள் செவிச்செல்வத்தினை நுகரும்படி தன் வயிற்றி விருந்து ஒரு புதல்வனைத் தந்தவளாகிய கோசலை, அரசே! நீ செய்த

